# இரசவாத சிந்தாமணி

(இரு பாகங்களும் சேர்ந்தது)



அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி

திருக்கோயில் சித்த மருத்துவநூல்

ளியீட்டுக் குழு

1975

வெளியீட்டுத் தொடர் எண் 12.

# இரசவாத சிந்தாமணி

**(இரு பாகங்களும் சேர்ந்தது)**


ஆசிரியர்:

**ஹக்கீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர்கள்**







அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினருக்காக

கௌரவத் தலைவர்

**டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,**

அவர்களால் பதிப்பிக்கப்பெற்று

தமிழ்நாடு அரசுக்கு நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

கி.பி. 1975. விலை ரூ. 15

முதற் பதிப்பு : 1901.

இரண்டாம் பதிப்பு : 1975.








அச்சிட்டோர் :
ஏல் அச்சகம்,
14, செல்லப்ப முதலி தெரு,
சென்னை—600012.

# சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு

## உறுப்பினர்கள்

1. டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பு அலுவலர்,
சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையம்,
சென்னை-600010. — தலைவர்

2. டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இயக்குநர்,
இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600029. — செயலர், உறுப்பினர்

3. டாக்டர் சி. எஸ். உத்தமராயன், எச். பி. ஐ. எம்.,
முன்னாள் இயக்குநர்,
இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600005. — உறுப்பினர்

4. டாக்டர் எம். சண்முகவேலு, எச். பி. ஐ. எம்.,
முன்னாள் மருத்துவப் பேராசிரியர்,
இராமநாதபுரம், — ,,

5. டாக்டர் கே. இராதாகிருஷ்ணன், எல். ஐ. எம்.,
மருத்துவ அலுவலர்,
ஊராட்சி ஒன்றிய மருந்தகம்,
காவேரிப்பாக்கம், வட ஆற்காடு. — ,,

6. டாக்டர் எ. சிறில் ஹென்றி, எல். ஐ எம் ,
ஓய்வுபெற்ற மருத்துவ அலுவலர்,
நகராட்சி மருந்தகம், திருச்சி. — ,,

7. டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர்,
தமிழக அரசு இந்திய மருத்துவ மத்தியக் கழகம்,
சென்னை-600005. — ,,

8. டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம். பி.,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்தியக் கழகம்,
சென்னை-600012, — ,,

9. பண்டிட் பெ. முத்துக்கருப்பப் பிள்ளை, ஆர். ஐ. எம். பி.,
தலைவர்,
சித்த மருத்துவ சங்கம், மதுரை. — ,,

10. டாக்டர் டி. வி. கல்யாணசுந்தரம், ஆர். ஐ. எம். பி.,
தலைவர்,
சென்டிரல் சித்தா மெடிக்கல் கவுன்சில்,
சென்னை-600012. உறுப்பினர்

11. டாக்டர் என். சேது ரகுநாதன்,
தமிழ்ப் பேராசிரியர், விருதுநகர். ,,

12. திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை,
முன்னாள் செயலர்,
சரசுவதி மகால் நூலகம், தஞ்சை. ,,

## சிறப்பு அழைப்பினர்கள்

1. டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி.ஏ., ஜி.சி. ஐ.எம்.,
முதல்வர்,
அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

2. டாக்டர் மு. வே. ரமணன், எல். ஐ. எம்.,
பேராசிரியர், மேல் பட்டப்படிப்பு,
அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

3. டாக்டர் டி. வி. சுப்பாரெட்டி,
கௌரவ இயக்குநர்,
இந்திய மருத்துவ வரலாற்று ஆராய்ச்சி நிலையம்,
ஐதராபாத்.

4. டாக்டர் டி. வி. இரத்தினவேலு சுப்பிரமணியம், பி.எஸ்.ஸி.,
எம்.டி., எம். ஆர். சி. பி. (லண்டன்),
சென்னை-600010.




மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

மாண்புமிகு

பேராசிரியர் க. அன்பழகன், எம். ஏ.,

அவர்கள் அளித்த

## அணிந்துரை

முன்தோன்றிய—மூவா முதன்மொழியாம் தமிழுடனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த—சித்த மருத்துவத்தின் தன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்துவிடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலும் சித்த மருத்துவம் இன்றும் பலரால் — வழிவழியாகவும் கற்றறிந்தும் — கையாளப்பட்டு வரினும் அதன் சிறப்பும் புகழும் நிலைபெறுவதற்கு நாம் ஆற்றவேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும் — இத் துறை வல்லுநர்களின் முயற்சியாலும் — மருத்துவ முறைகளுள் சித்த மருத்துவம் இடம் பெற்று வளருகிறது. எனினும், அதன் தனிச்சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொள்ளுமாறு ஆய்வுகள் மூலம் நிலை நிறுத்தப்பட்டாக வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொண்டு செயல்படவேண்டும். அந்த நிலை உருவாவதற்கு — ஓலைச்சுவடிகளாகவும் — ஒரு காலத்தில் அச்சேறியும் இன்று கிடைத்தற்கரிதாகவும் உள்ள நூற்றுக் கணக்கான சித்த மருத்துவ நூல்கள் — உடனடியாகப் பதிப்பிக்கப்படவேண்டும். இவை வெளி வந்தால்தான் இன்று சித்த மருத்துவம் பயிலும் மாணவரும், இளம் மருத்து

வரும், அவற்றைப் பயின்று பயன் பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்புநோக்கி உண்மை தெளியவும், மருந்துகளின் தரத்தை உறுதிப்படுத்தவும், அரிய மூலப் பொருள்கள் கிடைக்காதவிடத்து மாற்று மூலப் பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பன் மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும்; பரவலாக எங்கும் எளிதில் கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகளுக்கு ஈடு கொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்த மருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டும் என்னும் எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவல் குழுவினரும்—அதன் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும்—இதற்காக இரண்டு இலட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன் வந்ததுடன், சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம். அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல் படுத்தலாயினர்.

இக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் ஆர்வத்துடன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும் — பலவேறு வகையிலும் அவர்களுக்குத் துணை நிற்போர் ஆற்றும் பணியும் — இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களின் இயக்குவித்திடும் திறனும் எனது பாராட்டுக் குரியனவாகும்.

பழநி திருக்கோயில் அறங்காவலர்க் குழுவினருக்கும்—அக் குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியவாகும்.

இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந்தெடுக்கப் பெற்று வெளியிடப்படும் நூல் வரிசையில் **இரசவாத சிந்தாமணி**–இரண்டு பாகங்களும் ஆகும். இன்று கிடைக்காத பதிப்பாக உள்ள இந்த மருத்துவக் களஞ்சியம் மிகுந்த பயன் தரவல்லதாம்.

இந் நூலின் ஆசிரியர் — சித்த மருத்துவ வல்லுநர் ஹக்கீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர்கள் — இளமை முதலே — தமது முன்னேர்தம் மருத்துவக் கலையைப் பொன்னேபோல் போற்றிப் பயின்று, தொடர்ந்து பல ஆண்டுகள் பாடுபட்டுப் பயன்படுத்தித் தேர்ந்து தெளிந்து — உலகோர்க்குப் பயன்படவேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் அரிய சித்த மருத்துவ நூல்கள் பலவற்றை இயற்றி வெளியிட்டுள்ளார். இச் செயல்களின் பெருமை அவரையே சாரும்.

மறைபொருளாய்ப் பேணப்பட்டு அதனுலேயே உருவழிந்து மறைந்து போவதற்கு ஆளாகிவிட்ட சித்த மருத்துவ உண்மைகள் — இருட்டறையிலிருந்து வெளிக் கொணரப்பட்டு ஒளி காண்பதற்கு வழி கண்ட வல்லுநரில் அவர் தலை சிறந்தவர் என்பது மிகையாகாது.

தெளிவுடனும், துணிவுடனும், அறிவுடனும், ஆற்ற லுடனும், நெறியுடனும், பொறுப்புடனும் எளிய இனிய தமிழில் — இத்தனை நூல்களை இயற்றியமைக்கு, சித்த மருத்துவ உலகம் — ஹக்கீம் அப்துல்லா அவர்களுக்கு எந்நாளும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்.

அவர் இயற்றிய இரசவாத சிந்தாமணி முதற் பாகத்தின் முகவுரையே சித்த மருத்துவத்தின் அக்கால நிலைமையை விளக்கமாகவும், நம்மவர் கடமையை எடுத்துக் காட்டுவ தாகவும் அமைந்துள்ளதைக் காண்க.

"மிகக் கொடிய நோய்களையும் அறத் தீர்க்கும் பற்பம் செந்தூரமாகிய முறைகள் நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பதுபோல மற்ற மருத்துவத்தில் இல்லையென நமது மருத்துவ நூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்துவர்கள் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்கின்றூர்கள். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறப் புள்ளவர்களான சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது,

"அறுவை செய்தல் முதலிய இரண மருத்துவத்தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்காலச் சாந்தியாகச் செய்வதிலும் ஆங்கில வைத்தியமே மிகவும் சிறந்தது. ஆனல், நாள்பட்ட நோய்களையும் பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய் நோய், பாண்டு,

மந்தாக்கினி, மேகம், தாது இழப்பு முதலிய கடின நோய்களையும் அறத் தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரமமாகச் செய்யப்பட்ட பற்ப செந்தூரங்களே மிக மேன்மை பெற்றவை'' என்பதே.

இந்த அபிப்பிராயமானது மிகவும் சரியானதெனவும், உத்தமமானதெனவும், அதிகம் வாய்மையானதெனவும், சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமனத்தோடு ஏற்றுக் கொள்வார்கள்.

இக் கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறையில் செயல் படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்கவேண்டும் என்பதே எனது பேரவா.

இந்த உயர்ந்த நோக்கத்துக்கு உறுதுணையாகுமாறு — மருந்து செய் முறைகளை — அரிய நூல் வடிவத்தில் வழங்கிச் சென்ற — ஹக்கீம் பா. மு. அப்துல்லா சாயபு அவர்களின் தொண்டு

'செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்'

என்னும் குறள் கூறும் பெரியருக்குச் சிறந்த ஓர் எடுத்துக் காட்டு ஆகும்.

இந்த நூல்களின் வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோரை ஊக்கப்படுத்துவதற்குத் துணை செய்வதாகும் என நம்புகிறேன். அவர் தம் முயற்சி வளர வாழ்த்துகிறேன்.

க. அன்பழகன்

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை



உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ்மொழி; அது போல் தமிழ் மருத்துவமுறையும் அத்தகைத்தே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால், இம்மருத்துவத்திற்குச் சித்த மருத்துவமென்று பெயர் அமையலாயிற்று. அச்சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும், மருந்து சரக்குகளின் குணம் முதலானவைகளையும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும் பற்பல ஏடுகளில் பதிவு செய்தும் உலகோர்க்கு உதவி செய்து தம் மருத்துவமுறைகளைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின்–நிலநடுக்கம், கடற்கோள் போன்ற–சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படையெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக எஞ்சியவைகளில், சில மேலை நாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன வெனக்கூறப்படுகின்றது. இன்னும், எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம் மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயிலாகவும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படை உண்மை, தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலை பெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக்காலத்தில் சித்த, ஆயுள்வேத, யூனானி மருத்துவ ஏடுகள் எல்லாம் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் அரியணை ஏறின. மருத்துவப் புலவர்களின் அனுபவங்கள் ஏடுகளில் ஏறி ஏமமுற்றன. மருத்துவம் செய்முறையும், பிணி தீர்வும் அவர் ஏற்படுத்திய தன்வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவு கொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்து வரலாயிற்று.

மிக அண்மையில், வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சிச் சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பானகல் அரசர், 1924-இல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்துப் பல கிராம மருத்துவமனைகளையும் அமைத்து இயங்கச் செய்து சித்த

மருத்துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றினர். அக்காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத்திட்டப்படி கற்பிக்கப் போதிய பாடப் புத்தகங்களும் முதல் (மூல) நூல்களும் இல்லாக்குறையை ஓர்ந்து பாடப் புத்தக ஆக்கக்குழுவை அரசு அமைத்தது. அந்நாள் சித்த மருத்துவத்துறைத் தலைமை ஆசிரியராய் இருந்த பண்டிட் வைத்திய ரத்னம், மருத்துவச் சிரோன்மணி காலஞ்சென்ற திரு. க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும் நூலைத் தன் சொந்த முயற்சியால் இயற்றி அரசினர்க்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசுவழி வெளியிட்ட நஞ்சு நூல், பாலவாகடம் என்ற நூல்களைப் பார்வையிட்டும் உதவினர். அக்குழுவினர் நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவச் சுவடிகளையும் அச்சிட்ட நூல்களையும் சேகரித்து, ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தினர்.

மேற்படி பள்ளி, கல்லூரியாக மிளிர்ந்தபோது, அந்நாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950-இல் சித்த மருத்துவம், மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), தாது சீவ வகுப்பு என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்து வந்த கல்லூரி விரிவுரையாளர்களைக் கொண்டு எழுதுவித்து அரசுவழி வெளியிடப் பெற்றன.

அக் கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர்ப் பாளையங் கோட்டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூடப் பாடநூல்களும் துணைநூல்களும் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்து வருவதாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச்சுவடிகளையும் கையேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாடநூல்கள் வெளியிடவும் ஆகிய பணிகள் செய்ய (Pharmacopiea Committee 1966, G. O. MS. 2163, Dt. 23–8–60), ஒரு குழுவும், சித்த மருத்துவக் கல்வி, மற்றும் பாடநூற் குழு என்று (G. O. MS. No. 1060, Health, Dt., 12–6–66) ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதிகளை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருத்துவம் என்ற நூல்கள் வெளிவந்தன.

மீண்டும், விரைவில் பயன்காண வேண்டி 1973ஆம் ஆண்டு அக்கோடபர் திங்கள் 15ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்துச் சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு என்னும் ஒரு குழுவைத் (G. O. MS. No. 2571 of 23–10–73) தோற்றுவித்தார்கள். அக் குழுவின் பணிகளாவன: சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச்சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி முதலியவைகளை எடுத்து அச்சியற்றி வெளியிடல்; ஒருமுறை அச்சில் வெளிவந்து விற்பனைக்குக் கிடைக்கப்பெறாத நூல்களை மீண்டும் வெளியிடல், இதுவரை அச்சிடப்பெறாத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக் குழுவினர் இதுவரை 400 சுவடிகளையும் 100 கையெழுத்துப் பிரதிகளையும், 230 அச்சான பழைய நூல்களையும் சேகரித்துள்ளனர்.

இக்குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செயலாற்ற இந்திய மருத்துவத் துறை இயக்குநர் அலுவகத்தில் ஒரு தனி அலுவலரையும் அவர்க்கு உதவியாளர்களையும் நியமித்துள்ளனர். அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்து அச்சியற்றத் தக்க வகையில் செய்து வருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியிலிருந்து சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்கென்று ஒதுக்கப் பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக் கொண்டு மேற்படி நூல்களை, நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகு விரைவில் வெளியிட மேற்படி சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழுவிலுள்ள உறுப்பினர் சிலருடன் அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களையும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியையும் கொண்டு, அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக் குழு ஏற்படுத்தப்பட்டது. அக்குழு முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில் அனுபோக வைத்திய நவநீதம் பத்துப் பாகங்களும் திறவுகோலும், இரசவாத சிந்தாமணி இரண்டு பாகங்களும், வெளியிடப்படுகின்றன. மேற்படி இரசவாத சிந்தாமணி என்னும் உரைநடை நூலின் ஆசிரியர் ஹக்கீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு ஆவர். இவர் சென்னை, ஜார்ஜ் டவுன். அப்பு மேஸ்திரி தெருவில், 12ஆம் எண்ணுள்ள வீட்டில் வாழ்ந்தார். இவர் தஞ்சை மன்னர் சரபோஜி தன்வந்திரி மகாலை அலங்கரித்த மருத்துவர் ஒருவரின் வழித்தோன்றல் ஆவார். இவர்

பரம்பரை மருத்துவர். சித்த, யூனானி ஆகிய இருமுறைகளிலும் கைபாகம், செய்பாகம், நோய்த் தீர்வு முதலிய எல்லாக் கலைகளிலும் மிக்கத் தேர்ச்சி பெற்றவர். இவர் தனக்குச் சொந்தமாக மருத்துவமனையும், மருந்து செய்சாலையும், அச்சகமும் நடத்தி வந்தார்.

இவர் கடவுள் நம்பிக்கை, பிறர்நலம் பேணல், கொடை, பரிவு ஆகிய நற்பண்புகள் நிறைந்தவர். இவர் சர். உஸ்மான் சாயபு அவர்களின் நெருங்கிய உறவினராவார்.

இவர் ஐம்பதுக்கும் மேற்பட்ட மருத்துவ நூல்களை உரை நடையில் இயற்றி வெளியிட்டதுடன், தேரையர் யமகம், தேரையர் கரிசல், அகத்தியர் இலக்க சௌமிய சாகரம் போன்ற முதல் (மூல) நூல்களையும் வெளியிட்டுள்ளார். இவருக்குப் பின் இவரது நூல்களை மறுமுறை பதிப்பித்து வெளியிடுவோரின்மையால் அவை கிட்டுவது அரிதாயிற்று.

ஆகவே, இவரது அனுபோக வைத்திய நவநீதம் பத்து பாகங்கள் திறவுகோலுடனும், இரசவாத சிந்தாமணி இரண்டு பாகங்களையும் முன் பதிப்பிலிருந்த தமிழ் இலக்கங்களை நீக்கி ஆங்கில இலக்கங்களாக மாற்றி, பழைய எடுத்தலளவைக்குச் சரியான மெட்ரிக் எடையை இணைத்துப் பிழைகளைத் திருத்தம் செய்து வெளியிடப்படுகின்றன. இந்த இரண்டு நூல்களின் பெருமை அவைகளைக் கற்று மருந்துழை செல்வார்க்கு மிக நன்றாக விளங்கும். அவ்வந் நூல்களின் பழைய முகவுரைகள் வாயிலாக அவற்றின் மேன்மை தெரியவரும்.

மேற்கண்ட அரிய நூல்களின் வெளியீட்டுப் பணிக்குப் பெருந்தொகை தேவைப்படுவதால், இப்பெரும் பணியை விரைவில் செயல்படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் உயர்திரு. க. அன்பழகன் எம். ஏ., அவர்கள் பேரார்வங்கொண்டு மேற்படி பணி முட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார். மேலும், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர்க் குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படி திருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு இலட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்தமையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடித் தந்தமையும், காலஞ்சென்ற திரு. டாக்டர் ஜி. டி. நாயுடு அவர்களைக் கொண்டு காலஞ்சென்ற திரு. டி. வி. சாம்பசிவம் பிள்ளையவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதி

யின் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல்களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமையும் அமைச்சர் பெருமகனுர் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழுமனத்துடன் ஆற்றி வரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப் பெருமிதமடையலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத்தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்கள், தமக்குள்ள பற்பல அறப்பணிகட்கிடையேயும் இக் குழுவின் கூட்டங்களில் பங்குகொண்டு, நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறைகளையும் ஆலோசனைகளையும் வழங்கி வெளியீட்டுப்பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குத்தடையின்றி நூல்கள் வெளிவர. மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங்காவலர்க் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்த மருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்றுவிக்க உடன்பட்டமைக்கும் சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலகமொன்றை நிறுவக் கட்டடம் கட்டித்தர முயன்று வருகின்றமைக்கும் இக்குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து ஒத்துழைத்து வரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியாகிய உயர்திரு. வி. எஸ். கோதண்டபாணி, பி. எஸ்ஸி., அவர்களுக்கும் இப்பணிகள் நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்து வரும் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் குழுத் தலைவர், உயர்திரு. கே. எஸ். நரசிம்மன் ஐ.ஏ.எஸ், அவர்களுக்கும் இக்குழுவினரின் உளங்கனிந்த நன்றி உரித்தாகும்.

இக் குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும் பிற வசதிகளும் தம் அலுவகத்தின் ஒரு பகுதியில் கொடுத்து, பணி இடையீடின்றி நடைபெற வேண்டிய ஆலோசனைகளும் ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத்துறை இயக்குநர், டாக்டர். பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அடக்க விலையில் அச்சடிக்கும் தாள்கள் சேஷசாயி பேப்பர் மில்சாரிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ்க் காவலர் உயர்திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக்குழு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளது,

மற்றும், இந்நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், அச்சுப்படிகளைத் திருத்தம் செய்தும் இக்குழுவுக்குத் துணை புரிந்துவரும் தனி அலுவலர், டாக்டர். வி. விசுவநாதன், எல்.ஐ.எம்., அவர்களையும் அன்னாருக்குத் துணைபுரிந்துவரும் புலவர்கள், மு. சௌரிராசன், வி. செ. விநாயகம், வை. முரு. முத்துக்குமாரசாமி, ஆகியவர்களையும் இக்குழு மனமுவந்து பாராட்டுகிறது.

மேற்கண்ட பணிக்குத் தேவையான நூல்களைக் கொடுத்து உவிய சித்த மருத்துவர்கள் திரு. ப. சிற்சபை, திரு. மு. சௌரிராசன் ஆகிய இருவருக்கும் இக்குழுவின் சார்பில்நன்றி கூறப்படுகிறது.

அச்சுக்கலையில் மிகவும் பட்டறிவு வாய்ந்த திரு. புலவர் நா. மு. மாணிக்கம் அவர்கள் அச்சுக் கோப்புகளின் திருத்தங்களைச் செய்து உதவியமையை இக் குழு பாராட்டுகிறது.

ஒவ்வொரு நூலையும் குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சியற்றிய அந்தந்த அச்சகத்தாரின் சேவைக்கு இக்குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சான்றோர் மிகுந்த இவ்வுலகு, இந்நூல்களில் காணும் குற்றங் கண்டு முனியாது நல்லாதரவு தந்து எம்மை ஊக்குவிக்குமென்ற துணிவுடன் இந் நூல்களை வெளியிடுகின்றனம்.

**டாக்டர் இரா. தியாகராசன்**, எல்.ஐ.எம்.
தலைவர்,
**அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்**
**சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்குழு**

இந்திய மருத்துவத் துறை
இயக்குநர் அலுவலகம்,
சென்னை-600029.

முதற் பாகத்தின்

# முதற்பதிப்பு முகவுரை



என்னரிய நம் நாட்டு மருத்துவர்களே! பண்டிதர்களே! இரசவாதிகளே!

இந்த அரிய நூலை அச்சிட்டு வெளிப்படுத்த யான் வலியுறுத்த பட்டதன் காரணம் இன்னதெனப் பின்வரும் செய்திகளால் எங்கும் ஒளிவீசத்தக்க தங்கம்போலும் உள்ளங்கை நெல்லிக்கனி போலும் ஐயமின்றி விளங்கும்.

கடவுளின் அருளாலும் பெரியோர்களின் வாழ்த்துகளாலும் பற்பல பண்டித சிரோன்மணிகளின் பேருதவியாலும் எளியேனுல் இயற்றப்பட்டவைகளும், வெளிப்படுத்தப்பட்டவைகளுமான யூனுனி மருத்துவ தாருட்டிய விர்த்தி போதினி, பிரமேக நிவாரண போதினி, சிராவக நிவாரண போதினி, வைத்திய சிந்தாமணி, சரபேந்திர மேகநிவாரண போதினி, தேரையர் எதுகை யமகவெண்பா என்னும் இராச மருத்துவமகுடம், யூனுனி சிரரோக நிவாரணபோதினி, யூனுனி நயனரோக நிவாரண போதினி முதலிய நூல்களை யாவரும் அங்கிகரித்து, அவற்றில் சொல்லப்பட்டிருக்கும் பல விதிகளையும், முறைகளையும், மருத்துவ முறைகளை நடைமுறையிற் கொண்டும், பயன்படுத்தியும் நமது இராச மருத்துவசாலையில் விற்கப்படும் பற்பல மருந்துகளைக் கையாண்டும் அளவிறந்த பயனடைந்து இன்புற்று வருவதைப் பற்பல கடிதங்கள் மூலமாகவும் பிறவற்றுலும் எமக்கறிவித்து, எம்மைப் பலவிதத்தாலும் ஆதரித்துவரும் நாட்டுப்பற்று மிக்க பல சான்றேர்களின் கோரிக்கையாவது :

இப் புவியின்கண் இறைவனுல் படைக்கப்பட்ட பல்லாயிரம் உயிர்களுள்ளும் மானிடராய்ப் பிறப்பதரிது. அதனினும், கூன், குருடு, செவிடு, பேடு முதலியன நீங்கிப் பிறத்தல் அரிது; அதனினும், தாய்நாட்டுப்பற்று, உயிர்க் கருணை, ஒப்புரவறிதல் முதலியவைகளை உடையோரென்னும் புகழ் படைத்தல் அரிது. இவ்விதம், மானிடப் பிறவி அடையப்பெற்ற நாம், நாளை வீணுகப் போக்காது இம்மை மறுமையில் அடைவதற்குரிய பேறுகளை எய்துவதற்கு இன்றியமையாத் துணைக்கருவியாயுள்ள இவ்வுடலா னது, பேறு, இளமை, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்ற

இவ்வாறு வகை மாற்றங்களுக்கும் இலக்கியமாய் இருக்கின்றது. இவற்றுள் பேறு, இளமை, இன்பம் என முதற்கண் கூறிய மூன்றையும் அடைவதற்குப் பெருந்தடையாயுள்ளவை பிணி, மூப்பு, சாக்காடு என பின்னர்க் கூறிய மூன்றுமே ஆகும். இம்மூன்றனுள் முதன்மையாயுள்ளது பிணியொன்றே ஆகும். அவ்வாருன பிணிகளைப் போக்கி, உடல் நன்னிலையை அடைவதற்குச் சாதனமானது சித்தர் ஞானமாகிய மருத்துவ நூலுணர்ச்சியேயாகும்.

இந்த மருத்துவத்தில் முழுமையான பாண்டித்துவத்தை படைய; நோய் தோன்றுதல், நோய் இயல்பு முதலியவைகளையும் நோய்களை அறத் தீர்க்கும் நானுவித மருந்துகளையும் தெரிந்து கொள்ளவேண்டும். மருந்துகளை வரிசையாகவும், முறையாகவும் செய்துமுடிக்கபருப்பொருள், பிராணப்பொருள் தத்துவமென்னும் இரசவாத நூலைத் தெரிந்து கொள்ளவேண்டும். நோய்களின் உற்பத்தி, காரணம், இயல்பு முதலியவைகளை வகைவிவரமாய்த் தெரிந்திருந்தும், அவற்றைப் போக்கும் மருந்துகளைத் தெரிந்து கொள்ளாதிருந்தால் ஒருபோதும் ஒழுங்கான முழுமையுற்ற மருத்துவராகார்கள். முழுமையுற்ற மருத்துவராகாவிட்டால், நோய்களை முற்றும் நீக்கவும் முடியாது. நோய்களை அற நீக்கா விட்டால், உடல் நன்னிலையில் இராது. உடல் நன்னிலையில் இல்லாவிட்டால், இம்மை மறுமைக்குரிய பேறுகளை அடைய முடியாது. ஆகையால் இரசவாதமென்னும் பருப்பொருள், உயிர்ப்பொருள் தத்துவ நூலானது மருத்துவத்திற்குத் தலையாய உறுப்பென்பது கூருதேயமையும். தற்காலத்தில் பல நோய்களுக்கு முறைகளைக் கூறும் நூல்களைச் சில நாட்டுப்பற்றுள்ள பண்டித சிரோன்மணிகள் தமிழ் முதலிய மொழிகளில் வெளிப்படுத்தி இருக்கின்ருர்கள்.

(1) ஆனுல், மேற்சொல்லப்பட்ட மருத்துவ பருப்பொருள், பிராணப்பொருள் தத்துவ நூலென்னும் இரசவாத நூலானது தொடக்கம் முதல் இறுதிவரை முறையாகச் சொல்லப்பட்ட நூல் ஒன்றுமே இது வரையில் தமிழ் உரைநடையில் வெளிப்படுத்தப் படாதிருப்பதுமிகவும் இறங்கத்தக்க செய்தியாகும்.

(2) இதனுல், நமது முன்னேர்களால் வெளிப்படுத்தப் பட்டிருக்கும் உண்மை நூல்கள் இவை என்றும், பெரியோர்கள் பெயரைக் கெடுக்கத் தான்தோன்றித் தம்பிரான்களாய்த் தலை யெடுத்திருக்கும் புண்ணியவான்களால் வெளிப்படுத்தப் பட்டிருக்கும் போலிநூற்கள் இவையென்றும் கண்டுகொள்ளக் கூடாமலிருக்கிறது.

(3) அவ்விதம் நாம் ஒருவேளை பெரியோர்கள் செய்த உண்மைநூல் இவையென்றே கண்டு கொள்ளினும், இவை எல்லாம் செய்யுட்களாகவே இருக்கின்றன. மேலும் இனி பின் சொல்லப்படுவதுபோல அவைகளிலுள்ள புதைபொருள்களைக் கண்டு கொள்வது நம் போன்ற சிற்றறிவினர்களுக்குக் குதிரைக் கொம்பாய் இருக்கிறது.

(4) இன்னம் முடிவாய் அந்த நூல்களின் உண்மையை அறியாமலே அனேகர், தங்கம் முதலியவைகளைச் செய்து செங்கல் பாளங்களாக வார்த்து வீடெங்கும் பரப்பித் தங்கமயமாக்கிவிட வேண்டுமென்னும் பேராசைப் பித்தம் தலைக்கேறித் தத்தம் அருமையான வாழ்நாளை எல்லாம் வீணாளாக்கியும், தத்தமக்கு உரிமையான கைப்பொருளையெல்லாம் போக்கிக்கொண்டு, சிறுமைப்பட்டுக் கெட்டுழன்று, சுழன்று, மருண்டு, வெருண்டு மன முடைந்து வெறுங்கையினராய்ப் பரதவித்து இரந்து திரிகின்றார்கள். இத்தகையினர்களை இன்றும் காணலாம்.

மேலும் பல காரணங்களால், உண்மையானதும் கைவந்ததுமான பொருள் தத்துவ நூல் என்னும் இரசவாத முறைகளை தொடக்கம் முதல் இறுதி வரையில் வரிசை முறையாய்க் கூறும் நூலொன்று எளிய தமிழ் உரைநடையில் எளியேனால் வெளி படுத்தப்பட வேண்டுமென்பதேயாகும்.

ஆனால் அடியேன் அவ்வளவு பெரிய காரியத்தை நிருவகிக்க அவ்வளவு சக்தி, பயிற்சி முதலியவைகள் அமையப் பெற்றவனாயிராவிட்டாலும், நம்மைப் பலவிதத்தாலும் ஊக்கப்படுத்தி ஆதரித்துவரும் நாட்டுப்பற்றுள்ள அறிஞர்களின் நன்னோக்கம் பிறர்க்குதவும் தன்மை, உயிர்களின்மீது உள்ள அருள்தன்மை முதலியவைகளை அவலமாக்க வசமற்றவனாய், அவர்கள் பேருதவிக்குக் கைம்மாறாக இத்தகைய நூல் ஒன்று அன்னோருக்குச் செய்தளிப்பின் இது தவறாது அன்னோருக்கும் மற்றோருக்கும் பெரும் பயனைப் பயக்கும் என்னும் திடம் எம்மனத்தைக் கவர்ந்தெழுந்தமையான், எவ்விதத்திலும் அவர்கள் கோரிக்கையை நிறைவேற்ற வேண்டுமென உறுதி எடுத்துக்கொண்டு, சென்ற சில வருடங்களாய் விடாமுயற்சியுடன் குறிப்புரையாகவும் செய்யுட்கள் வடிவமாகவுமுள்ள பல நூல்களையும், அரபி, பார்சி, தமிழ், வட மொழி முதலிய மொழிகளிலுள்ள பல நூல்களையும், ஆராய்ச்சி செய்து வந்ததில், "ஜாமி உல் பஹ்றைனே இக்ஸீர்" என்னும் பார்சி மொழியிலுள்ள நூலொன்றே மேற்கண்ட பெருமக்களின்

கருத்திற்கிசைந்ததாகவும், எல்லாவிதத்திலும் மேலானதாகவும், அநுபவ மிக்கதாகவும் நம்பத்தக்கதாகவும், பயன்தருவதாகவும் காணப்பட்டது. ஏனெனின்,

(1) தமிழர்கள் இந்துக்கள் நெடுங்காலத்துக்கு முன் இரசவாதத் தொழிலில், அதாவது பொருள் தத்துவ நூலில் மிக வல்லவர்களென்பதும், அக் கலையைச் சார்ந்த பல நூல்களை எழுதி இருக்கின்றார்களென்பதும் உலகறிந்த செய்தியாகும்.

முகம்மதியர்களே எல்லாவிதத்திலும் பாடுபட்டு இடைவிடா முயற்சி, ஊக்கம் முதலியவற்றால் இந் நூலைச் செம்மையுற செய்து, நுட்பமான உண்மைகளையும் கண்டுபிடித்து, மிகவும் புகழடைந்து இதை முழுமையான நிலையிலாக்கி; உலகெங்கும் பரவச் செய்தவர்களில் முதன்மையானவர்களென்பதும், இந்த நூலில் ஒப்பற்றவர்களென்பதும், ஐரோப்பிய அமெரிக்க மருத்துவர்களாலும், இன்றும் மறுக்கப்படாத கருத்தாகும். இன்னும், இம் முறைகள் சார்பாக இவர்களால் வெளிப்படுத்தப்பட்ட நூல்களோ ஏராளமானவை; அவை, பல மொழிகளிலும் மொழி பெயர்க்கபட்டுப் பல நாட்டினராலும் இன்றும் கையாளப்பட்டு வருவதும் உலகத்தில் பட்டப்பகலைப்போல் வெட்டவெளிச்சமான செய்தியேயாகும்.

ஆகையால், முக்கியமானவும் தலையாயதுமான மேற்கண்ட இருவகைப் பாகங்களும் அடங்கிய இந்நூலானது எல்லாவற்றைக் காட்டிலும் மிக மேலானதென்பதை நாம் எடுத்துக்காட்டாமலே நமது நண்பர்களறிந்து கொள்ளக்கூடும். ஏனெனில், தமிழ் முறைகள் மாத்திரம் அடங்கிய நூலாயிருந்தால், அதில் யூனானி முறைகளில்லாக் குறைசொல்ல ஏதுவுண்டு. அவ்விதமே யூனானி முறைகள் மாத்திரம் அடங்கிய நூலாயிருந்தால், அதில் தமிழ் முறைகளில்லாக் குறை சொல்ல நேரிடும். ஆகையால், இவ்விரண்டு வகை முறைகளும் ஒன்றாய் அடங்கியிருக்கும் இந்நூலில் அவ்விதக் குறை சொல்ல ஏதுவில்லாதிருப்பதே உயர்ந்ததென்பதற்குக் காரணமாகும்.

ஆகையினாற்றான், இதன் முதல் நூலிற்கு "ஜாமி உல் பஹரைனே இக்ஸிர்" = இரசவாத இருசமுத்திரச் சங்கம், எனப் பெயரிடப்பட்டிருக்கிறது.

(2) இந்நூலானது, மாமன்னனாகிய டில்லி நகரத்தை அரசாண்ட அக்பர்ஷா, தஞ்சை நகரத்தை அரசாண்ட மாமன்னனாகிய சரபோஜி மன்னர் ஆகியோர், தத்தம் அரசவையி

லிருந்த இரசவாத நூல்களில் வல்லவர்களான தமிழ், யூனானி மருத்துவ வல்லுநர்களைக் கொண்டு எழுதுவித்த நூல்களி லிருந்தும் தெளிந்து தெரிந்தெடுக்கப்பட்ட முறைகளடங்கிய நூலேயாகும்.

மேற்கண்ட இரு அரசர்களும் நாட்டுப்பற்றுள்ள அறிஞர்கள் பலருள்ளும் மிகச் சிறந்தவர்களாவர். மேலும் அவ்விருவரும் மேற் கண்ட தங்கள் கோரிக்கையை முற்றும் நிறைவேற்ற பல பண்டித சிரோன்மணிகளுக்கு அவரவர் திறமைக்கேற்ப பாராட்டியும், பரிசுகள் வழங்கியும் நிலக்கொடை முதலியன அளித்தும் வந்த மையால், எட்டுத் திக்குகளிலிருந்தும் பல இடங்களிலிருந்தும் மருத்துவ வல்லோர் பலர் அம் மன்னர்களின் அவையில் ஒருங்கே திரண்டு கூடியிருந்தார்கள் என்பது உலகறிந்த உண்மை. ஆகை யால், இவ்வெற்றி வாய்ந்த அம்மன்னர்களின் அவைகளில், முற்றுங்கற்றுணர்ந்த அறிஞர்களால் ஏற்படுத்தப்பட்ட இந் நூல் நிச்சயமானதாகவும், நம்பத்தக்கதாகவும் இருக்குமென்பதில் எவ்வித ஐயமும்முண்டாக ஏதுவிராது.

(3) இந்த நூலிலுள்ள அனேகமுறைகள் பல முறைகளிலும் எமது மூதாதைகளாலும், எம்மாலும் பல்லாண்டாய்ப் வழிவழி யாகக் கையாண்டு கைவந்தவையாகையாலும், இந்நூலில் எமது முன்னோர்களுக்கும் எமக்கும் பலகால் முயன்ற தன் காரணமாய்ப் பெற்ற பட்டறிவின் ஆற்றலாலும் வேறு அனேக புதிய முறை களும் சேர்க்கப்பட்டிருப்பதாலும், இது பயிற்சியால் கண்டவை என்பதிலும் எவ்வித ஐயமும் தடையுமில்லை.

மேலும் இம்முறைகளெல்லாம் வழிவழியாய் மிக்க இரகசிய மாய் பழக்கப்பட்டு வந்தவை. இவற்றுள் சென்ற 30 ஆண்டு களாக எமக்கே உரிய உரிமையோடும் மிக்க துன்பம் உற்றும் சேகரிக்கப்பட்டவை அனேகம்.

(4) இந் நூலில் இரசவாதத் தொழிலுக்கு இன்றியமையாத எல்லா முறைகளையும் தொடக்கம் முதல் இறுதிவரையிலும் முறை யாகவும், ஒவ்வொரு முறையையும் பல வகையாகவும் சொல்லப் பட்டிருக்கின்றன. ஆகையால், இந்த நூலையே தொடக்க ஆதாரமாகக் கொண்டு தொடங்கும் புதுமாணுக்கர்களுக்கும், இக்கலையில் தேர்ச்சியடைந்து வெற்றி பெற்ற முதுமாணுக்கர் களுக்கும் பயன்படுவதாகும். இப்போது வெளியிடப்பட்டிருக்கும் இவ்வகை நூல்களெல்லாம் அரைகுறையாகவே இருக்கின்றபடி யால் மேற்கண்ட இருவகையார்களுக்கும் பயன்படுவது அருமையே ஆகும்.

(5) ஒரு நூலாசிரியர் செய்த ஒரு நூலைப் பார்த்தால், அதற்கு உறுதுணையாகத் தம்முடைய மற்றொரு நூலைப் பார்க்கச் சொல்வர். அந்த நூலைப் பார்த்தால் அதற்குத் துணையாக மற்றொரு நூலைப் பார்க்கச்சொல்வர். இவ்விதம் நூலுக்கு மற்றொரு நூலை மூலமாக அல்லது ஏதுவாகக் காண்பிக்கப் பட்டிருக்கின்றது. இப்படி முற் காலத்து ஒரு நூலாசிரியரின் எல்லாக் கோவைகளும் இக்காலத்தில் ஒருவரிடம் ஒரே காலத்தில் சேர்வது சாதாரமானதன்று. இந்த நூலிலோ அவ்விதத் துன்பம் எதுவும் இல்லை.

(6) மேலே கண்டிருக்கிறபடி தற்காலத்தில் அச்சிடப்பட்டு வெளியாகித் திரிந்துலவும் இந்த நூலுக்கு இணையான நூல்களுள் அனேகம் அகத்தியர், போகர் முதலிய பெரியோர்களால் செய்யப் பட்ட மூல நூற்களெனவும் உண்மையான நூற்களெனவும் கருதப்படினும், அனேகர் தங்கள் தங்களுக்குக் கிடைத்த அரைகுறையான நூல்களுடன் தங்களுக்கு விருப்பமானபடி சில பாகங்களைப்பாடி அதிற்சேர்த்து முழுமையாக்கி அச்சிடப் பட்டவைகள். சில நூல்கள் தொடக்கம் முதல் இறுதிவரை புதுமையாகப் பாடப்பட்டுத் தங்களுக்கு விருப்பமான முனிவர் களின் பேரிட்டு அச்சிடப்பட்டவைகள். இதன் உண்மை வெளி யிலுள்ள பலருக்குத் தெரியாவிட்டாலும் உள்ளூரிலுள்ள பல பண்டித சிரோன்மணிகளுக்கும், மற்றவர்களுக்கும், "கைப் புண்ணிற்குக் கண்ணுடியா"? என்பதுபோல வெட்டவெளிச்சமாய் தெரிந்த செய்தியே ஆகும். மிகவும் குறைந்ததொகைப் புத்தகங் கள் உண்மையானவைகளுமுண்டு. இன்னம் அச்சிடப்படாமல் ஏட்டில் எழுதப்பட்டிருக்கும் பல நூல்களுமுண்டு. இந்த நூல்களி லெல்லாம் இரசவாதம் சம்பந்தமான முறைகள் செய்யுள் வடி வாகவும் மிகவும் மறைவாகவும், கரவாகவும், பூதமொழியாகவும், தேவ மொழியாகவும், நாட்டு மொழியாகவும், வழங்கும் மொழி யாகவும், மாந்திரீக மொழியாகவும், இலவண மொழியாகவும், எழுத்து மொழியாகவும், இலக்க மொழியாகவும், நூல் மொழி யாகவும், பாக மொழியாகவும், குருமுறை மொழியாகவும், யோக மொழியாகவும், குழூஉக்குறியாகவும், இன்ன அனேகவிதக் குறிப்பாகவே பாடப்பட்டிருக்கின்றன.

சித்த மருத்துவ முறைப்படி பெரும்பாலும் எல்லா மருந்து களையும் செய்து முடிக்க உதவியாகும் முப்புச் சுண்ணம் என்னும் ஒரு வகைமருந்தைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.

முப்பு என்னும் சொல்லானது ஒரு சொல்லா? அல்லது பல சொற்கள் சேர்ந்த கூட்டுச் சொல்லால் உண்டானதா?

அல்லது வேறு மொழிச் சொல்லானது மருவி இச்சொல்லானதா? எனப்பெருத்த ஐயம் ஏற்படுகிறது. இதைப்பற்றிப் பலரிடம் விசாரித்தும் ஏதும் பயன் கிட்டவில்லை.

முப்பு அல்லது முப்பூ என்ற சொற்களின் முறையே முதலீற்று நெடில்குறுகி முப்பு என மருவிற்ரு? அப்படியாயின் அதன் பொருள் யாது?

மூவுப்பு அல்லது மூன்றுப்பு என்பது முப்புவென மருவிய சொல்லாயிருக்கலாமென்பது சிலர் கருத்தாகும். இக்கருத்திற கிசையவே முப்பு என்பது நீருப்பு, வாயுவுப்பு, தீயுப்பு என்னும் மூவகையுப்பால் செய்யப்படுகிறதென்கின்ருர்கள். பூநீர், நவாச் சாரம், வெடியுப்பு என்ற மூன்று வகையுப்பின் தொடர்பாகச் செய்யப்படுவது முப்பு எனப்படுகிறதென்பது பெரும்பாலார் கருத்துகள்.

வேறு சிலர் பூநீர் என்னும் ஒன்றிலேயே மேற்கண்ட நீருப்பு என்னும் மூன்று வகையுப்புகளுமிருக்கின்றன. ஆகையால், மேற் படி பூநீரைப்பாகப்படுத்தி அவற்றைப் பிரித்துப் பின்பு மூன்றைச் சேர்த்துச் செய்வதே முப்பு என்கிருர்கள்.

இவ்விதப் பல கருத்துகளுள் எது உண்மையானதென்பது விளங்காமலிருக்கிறது. ஆனுல் வேறு சிலர் கருத்தாவது மேற் கண்ட கருத்துகளெல்லாம் சரியானதே. ஆனுல் அக்கருத்தை விளங்கிக் கொள்வது நம்மவர்க்கு இயலாமையே என்கிருர்கள். இது எப்படியாயினும் முப்பு என்பது பூநீர்ச் தொடர்பான ஒரு வகை ஏற்பாடு என்பது புலனுகின்றது.

இன்னும் நாம் பின் சொல்லியிருப்பதுபோலப் பூநீர், பூநீறு என்னும் சொற்களில் எது சரியானதென விளங்கத் தேடவெண்டி யதாயிருக்கிறது.

பூநீர் என்பது பூசாரம், அதாவது சுவையற்ற பொருள் (நிரசவஸ்து) என்று பொருள்படும்.

பூநீறு என்பது வழலை, நிலவீரம் அல்லது ஒருவகை உப்பெனப் பொருள்படுகிறது. இன்னம் வழலையென்பது சவுக்காரம் அல்லது வழலையுப்பு எனவும் பொருள்படுகிறது

இவ்விதமே பூநீறு அல்லது பூநீர் என்னும் ஒரு பொருளுக்கும் பலவகை கருத்து வேறுபாடுகள் உண்டு. மூடிவாய்ச் சொன்ஞல், முப்பு என்பது பொதுவாய் மேற்சொன்னதுபோல் பூநீரில் அல்லது பூநீர் சார்பானதாய்ச் செய்யப்படுகிற ஒருவகை உப்புச் சுண்ணம். இதனை முடிக்கும் வகைகளை முன் சொன்னதுபோல ஒவ்வொரு

நூலிலும் ஒவ்வொரு வகையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அவை எல்லாவற்றையும் இங்கெழுதுவதானல் இந்நூல் இடம் தராது. ஆயினும், ஒருவாறு சுருக்கிச் சொல்லவேண்டியது இன்றி யமையாததாகையால், அதற்கு ஒவ்வொரு நூலும் குறிப்பாய்ச் சொல்லியிருக்கும் பற்பல மொழிகள் அல்லது இடுகுறிகள் பின் வரும் வகையாகும்.

(1) பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்றும்,

(2) மண், நீர், நெருப்பு, காற்று, வெளியென்றும்,

(3) பிரம்மா, விட்டுணு, உருத்திரன், மயேச்சுரன், சதாசிவன் என்றும்,

(4) சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்கிரகம் என்றும்,

(5) அ, இ, உ, எ, ஒ என்றும்,

(6) ந, ம, சி, வ, ய என்றும்,

(7) ஐயும், கிலியும், சவ்வும், றீயும், ஸ்ரீயும் என்றும்,

(8) கோட்டை, மதில், மலே, வச்சிரம், அண்டம் என்றும்,

(9) கம்பியுப்பு, பாறையுப்பு, கல்லுப்பு, இந்துப்பு, வளேயலுப்பு என்றும்,

இன்னம் பற்பல மொழிகளாகவும், இடுகுறிகளாகவும், ஒவ்வொரு நூலிலும் இந்த முப்புவையோ அல்லது அது சார்பான பாகத்தையோ முடிக்கச் சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னும் மேற்கண்ட ஐந்துவகைப் பிரிவுகளில், இரண்டு பழுதில்லேயாம். அதற்கு எடுத்துக்காட்டாக மேற்கண்ட வகை களில் எழுத்துமொழி அல்லது ஐந்தெழுத்து அல்லது மூல மந்திரம் என்னும் ந - ம - சி - வ - ய என்ற வகையையெடுத்து விளக்குவோம்.

மேற்கண்ட வகையில் பழுதில்லாத இரண்டெழுத்தாவன - நகாரமும், சிகாரமுமாகும். அதாவது நசி யாம். இவற்றிற்கின மானவை முறையே அகாரமெனவும் உகாரமெனவும் சொல்வார் கள். இந்த அ, உ என்னும் இரண்டனுள் அகாரம் சிவமாம். உகாரம் சத்தியாம்.

இன்னும் அகாரம் நாதமாம், உகாரம் விந்தாம் ; இவ்விதமே அகாரம் அண்டமாம், உகாரம் பிண்டமாம்; இப்படியே அகாரம் உயிராம், உகாரம் உடலாம் ; இங்ஙனமே அகாரம் வானமாம், உகாரம் பூமியாம். இக்காரணங்களாலேயே உடலேச் சத்தி யென்றும் உயிரைச் சிவமென்றும் சொல்கின்ருர்கள்.

அ-உ-என்னும் இரண்டையும் வானமென்றும் சொல்வார்கள். எப்படியெனில், நாதமும் விந்துவும் சேர்ந்தால் எவ்விதம் கருத்தரிக்குமோ, அவ்விதமே தமிழில் எட்டு என்னும் எண் இலக்கக் குறிப்பாகிய 'அ' வுடன் இரண்டென்னும் எண் குறிப்பாகிய 'உ' வைச் சேர்த்தால் பத்தென்னும் எண்குறிப்பாகிய 'ய' வாகிறது. இந்த 'ய' என்னும் எண்ணே யகார உயிர்மெய்யெழுத்துமாகிறது. இந்த யகாரமானது ந-ம-சி-வ-ய என்ற வகையில் ஆகாய அம்சமாயிருப்பதே காரணமாகும்.

ஐந்து மூலப்பொருள்களாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்தையும் பெண், ஆண், என இருவகைகளாகவும் அடக்கிச் சொல்வார்கள். அதன் விவரமாவது ஆகாயம், வாயு, தேயு என்ற மூன்றும் ஆணும். பிருதிவி, அப்பு என்ற இரண்டும் பெண்ணும். ஆகையால், ஆண் பெண் என்னும் அ, உ சேர்ந்து ஒ என்னும் பிண்டம் உண்டானதாம்.

இவ்விதம், அ - உ - ஒ என்னும் மூன்றும் 'ஓ' என்பதில் ஒன்றுயொடுக்கமாலிருப்பதையே பிரணவமென்று சொல்வதுமுண்டு. ஆகையினுற்ருன் ஐந்தில் இரண்டு பழுதில்லையென்றும் சொல்வார்கள் பெரியோர். மேலும்,

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து பூதங்களும் பிருதிவி, ஆகாயம் என்ற இரண்டில் அடங்கி நிற்பதைத்தான் ஐந்தில் இரண்டு பழுதில்லையென்பார்கள். இதையே ஆண் பெண் என்றும்; ஆகாயம்; பூமி என்றும்; அண்டம், பிண்டமென்றும் அ உ என்றும் சொல்கின்ருர்கள். இதன் விவரத்தை *அகத்தியர் ஞானகாவியத்தில் காண்க.

இன்னும் பூமியானது தாஞென்றும் வயிற்றிலொன்றுமாகிய இரண்டும், ஆகாயமாகிய ஒன்றும் ஆகக் கூடிய மூன்றையும் ஐந்தில் மூன்று பழுதில்லையென்றும் சொல்வார்கள் என்பதே.

இன்னும் ஐந்து பூதங்களுள் ஒவ்வொன்றிலும் ஐந்து உள் பூதங்கள் தனித்தனியே அமைந்து நிற்கின்றன.

ஆகையால், ஆகாயத்தில் மண், ஆகாயத்தில் நீர், ஆகாயத்தில் நெருப்பு ஆகாயத்தில் ஆகாயமாம்.

இவற்றுள் ஆகாயத்தினுள் அடக்கமாயிருக்கின்ற மேற்கண்ட ஐந்தினுடன், சூரியன், சந்திரன், தீ என்னும் மூன்றும் அதிகமாய் அடங்கியிருப்பதால் $(5+3) = 8$ — இந்த எட்டையும் அஷ்ட

* அகத்தியர் ஞானகாவியம் என அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கும் நூல்கள், சட்டமுனி ஞானகாவியம், தட்சிணு மூர்த்தி ஞானகாவியம், என்னும் நூல்களாம். அகத்தியர் ஞானகாவியம் நாம் ஆராய்ச்சி செய்தவரையில், 350 – பாடல்கள் மாத்திரம் கிடைத்திருக்கின்றன. அது முற்றும் முழுமையாய்க் கிடைக்கவில்லை.

சரக்கென்றும் (எட்டு), அஷ்ட லவணமென்றும், அஷ்ட எழுத்து என்றும். அகாரமென்றும் சொல்வார்கள். இதன் விவரம், 'ந' வென்பது கோட்டையாம் ; 'ம' என்பது மதிலாம் ; 'சி' என்பது மலையாம்; 'வ' என்பது வச்சிரமாம்; 'ய' என்பது அண்டமாம் ; 'றீ' என்பது விந்தாம் ; 'உ' என்பது நாதமாம் ; இதைப்பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் இராம தேவர், 30-ல் பார்வையிடவும்.

மேற்கண்ட செய்திகளை எளிதில் தெரிந்து கொள்ளும் படியாக இதனடியில் அட்டவணை குறிப்பாகவும் எழுதுவோம்.

| | | | | |
|---|---|---|---|---|
| பிருதிவி | அப்பு | தேயு | வாயு | ஆகாயம் |
| மண் | நீர் | நெருப்பு | காற்று | வெளி |
| பிரம்மா | விஷ்ணு | உருத்திரன் | மயேஸ்வரன் | சதாசிவம் |
| சிருஷ்டி | ஸ்திதி | சம்ஹாரம் | திரோபவம் | அநுக்கிரகம் |
| *ஐயும் | கிலியும் | சவ்வும் | றீயும் | ஶ்ரீயும் |
| கோட்டை | மதில் | மலை | வச்சிரம் | அண்டம் |
| கம்பியுப்பு | பாரை யுப்பு | கல்லுப்பு | இந்துப்பு | வளையலுப்பு |
| அ | இ | உ | எ | ஒ |
| ந | ம | சி | வ | ய |

| | |
|---|---|
| பெண் | ஆண் |
| உ | அ |
| பூமி | ஆகாயம் |
| தானென்றும் வயிற்றிலொன்றும் | இதில் மண், நீர், நெருப்பு, காற்று, வெளி, சூரியன், சந்திரன், அக்கினி என்னும் எட்டும் அடங்கியிருக்கின்றன. இது அ - மாம். |

அ = உ = ஒ
இது ஓங்காரப் பிண்டம்
இதில் மூன்றும் ஒடுக்கம்

* இவ்வைந்தும் சத்தி பீஜமெனத் தெரிந்திருக்கவேண்டும்.

மேற்கண்ட வகைகளை மேலும் அனேகவிதமாய் அர்த்தம் செய்வார்கள். இங்குச் சொல்லவந்ததெல்லாம் சித்தர்களால் பாடப்பட்டிருக்கும் நூல் முழுவதும் ஏதேனும் ஒருவகையாய்க் கரவாக, அல்லது மறைவாக, அல்லது குழூஉக்குறியாகச் சன்னல் பின்னலாயிருப்பதாலும், அவற்றிற்கு விளக்கவுரை செய்பவர்கள் தம்தம் புத்திக்கெட்டியவாறு சொல்கின்றபடியாலும், அவற்றின் உண்மையான பொருள் பாடியவர்களுக்கு இலகுவேயொழிய சிற்றறிவுள்ள நம்மவர்க்கு ஆழ்ந்த கடலைக் கைக்கொண்டு நீந்திக் கரையேறுவது போலவாம் என்பதே. அந்த நூல்களின் கருத்தையறியாமலே நாமொரு வழியே சென்று வழி தெரியாமல் மயங்கி மருண்டு முடிவில் நூல் பொய்யென நூலின் தலைமேல் பழியைச் சுமத்திவிடுகின்றோம். இவ்வகை நூல்களின் கருத்தைச் சாதாரணமாய் எல்லோரும் அறியக் கூடாதென்னும் கருத்தமைந்த ஒரு பாட்டும் முன்னோர்களுள் ஒருவரால் சொல்லப் பட்டிருப்பதையும் இங்கெழுதுவோம்.

அம்மானிருந்தது மாத்தாள் பிறந்தது
மம்மானுக்காத்தா ளவள்பாரியானதுஞ்
செம்மைரவியோடு சேர்ந்து கலந்தது
நம்மாலுரைசெய்ய நாமறியோமே.

என ஆன்றோர் உரைத்திருப்பதையும் காண்க.

இவ்விதம் ஒன்றையே பலவுருவமாகச் சொல்லியிருக்கின்ற படியால் அக் குழூஉக்குறிகளில் உழன்று சுழன்று பண்பட்டவர் களுக்குப் பயன்படுமேயொழிய நம்மனோர்க்குப் பயன்படாது என்பது யாவருக்கும் வெள்ளிடையாகவும் தெளிவாகவும் புலப்படும்.

ஆகையால் இந்த இரசவாத சிந்தாமணியானது, அவ்வித மறைவு, கரவு, குழூஉக்குறி முதலியவைகளில்லாமல் உரை நடையில் தெளிவாய் யாவரும் தெரிந்துக் கொள்ளும்படி எளிய நடையிலும் எழுதப்பட்டிருக்கிறது.

(7) இதன் முதனூலிலுள்ள முறைகளின் கைபாகம் செய் பாகம் முதலியவைகளுள் ஆங்காங்குக் குறிப்பாகவும் குழூஉக்குறி யாகவும் குறைவாகவும் பிழையாகவும் இருந்தனவற்றைப் புது மாணுக்கர் முதலிய யாவரும் எளிதில் தெரிந்து கொள்ளும் படியாக முறையே விரித்தும், விளக்கியும் நிறைத்தும், திருத்தியும் எழுதப்பட்டிருக்கின்றன.

(8) இதில் சொல்லப்பட்டிருக்கும் ஒவ்வொரு முறையும் மிகவும் அரியதாகும். மேலும், ஒவ்வொரு முறையும் பல வகையாகச் சொல்லப்பட்டிருப்பதால், அவரவர்களுக்கு விருப்பமானபடி ஆற்றலுக்கும் காலத்துக்கும் ஏற்றவாறு தத்தம் தேவைக்குத் தக்கபடியாகவும் செய்து கொள்ளக்கூடும்.

(9) இதில் சொல்லப்பட்டிருக்கும் ஒவ்வொரு முறையின் செய்பாகம், எரிப்புப்பாகம், புடப்பாகம், வறுப்புப்பாகம் முதலிய எல்லாப் பாகங்களும் தெற்றெனத் தெரியும்படியாய் வகை விபரமாய்ச் சொல்லப்பட்டிருப்பதுபோல வேறெந்த நூலிலும் சொல்லப்படவில்லை.

(10) இதில் ஒவ்வொரு பண்டத்தைப் பற்றியும் இரசவாதம் சார்பாகச் செய்யப்படும் முறைகளையெல்லாம் தெள்ளத் தெளிவாகச் சொல்லப்பட்டிருப்பது போல மற்றெந்த நூல்களிலும் சொல்லப்படவில்லை. ஆகையால், இந்த நூலில் விருப்பமுள்ளவர்களுக்கும், மருத்துவத்தில் முழுமையான புலமையை அடைய விருப்பமுள்ளவர்களுக்கும் இந்த ஒரு நூலே போதுமானது. மற்ற நூல்களைப் பார்வையிடப் பெரும்பாலும் தேவையே இராது. ஏனெனில், ஒவ்வொன்றின் பிறப்பு, இயல்பு, அதனுற் செய்யப்படும் இரசவாதம் தொடர்பான :முறைகளெல்லாம் சொல்லப்பட்டிருப்பதே காரணம், ஆகையால், இதுவரையில் தமிழில் வெளிப்படுத்தப்பட்டிருக்கும் நூல்களில் இதற்குச் சமானமானது ஒன்றுமில்லையென்பதே.

மேலும் பலகாரணங்களால் இந்த நூலே எல்லாவற்றைக் காட்டிலும் மேன்மையானதென்றும் தலையாயது என்றும் கல்வியின் அருமையும் பெருமையும் தெரிந்த அறிஞர்களுக்கு நன்கு விளங்காமற் போகாது.

ஆனால், இவ்வருமையான பாகங்கள் செய்து முடிப்பது எல்லோருக்கும் ஆகக்கூடியதன்று. தொன்று தொட்டுப் பயின்று வரும் அறிஞர்கள் பல சில தடவைகள் ஒரு பாகத்தையே அது முற்றும் சரியாய் வருகிறவரையில் விடாமுயற்சியுடன் மடக்கி மடக்கிச் செய்து முடித்தால்தான் கொடுமையான நோய்களையும் தீர்க்க பயனுடையதாகி உலகத்திற்குப் பெரும் பயனாக விளங்கும்.

இந்தத் தொழிலில் தேறவேண்டுமாயின் ஒரு பொருளை எடுத்தால் அதன் பிறப்பு, அதன் வைப்பு, அதன் இயல்பு. பல பூத பண்டமாயின் அதிலுள்ள ஒவ்வொரு பண்டத்தையும் பிரித்தல், வெள்ளையாக்கல், பதங்கித்தல், நீராக்கல் செயநீராக்கல், திராவக

மிறக்கல், சட்டுப்படுத்தல், பற்பம் செய்தல், செந்தூரமாக்கல், முதலிய பாகங்களைக் கற்றுத் தெரிந்து முடிவில் மற்ற சிறப்பான வேலைக்கு முயற்சி செய்யவேண்டியது; எடுத்த எடுப்பிலேயே ஒரே தாண்டாய் மேலேயேற முயற்சி செய்தால், கீழே விழுந்து கைகாலொடிந்து, தாழவேண்டியதுதான். இது யாவருக்கும் இயல்பானதேயொழிய இயல்பல்லாததன்று. ஆகையால், இத் தொழிலுக்கு விடாமுயற்சி, கைப்பழக்கம் முதலியவை முக்கிய மாக வேண்டும். அவ்விதம் விடாமுயற்சி, கைப்பழக்கம் முதலியவைகளில்லையாயின், இதில் ஈடுபடுவதில் அவ்வளவாய்ப் பயன்படுமென்று கூற ஏதுவில்லை.

இந்த அரிய நூலை உலகத்திற்குப் பயன்படும்படி செய்வது இலேசான காரியமன்று. இதற்காக உடலுழைப்பு பணச்செலவு முதலியவை வெகுவாய் வேண்டும். ஆயினும் நம்மைப் பலவிதத் தாலும் சிறப்பித்து வரும் நாட்டுப்பற்றுள்ள சான்றோர்களின் கருத்தை நிறைவேற்றுவதுடன், அரிய முறைகளைத் தக்க விதமாய் வெளிப்படுத்தினால் சிறப்புச் செய்து ஆதரிப்பதற்கு நாட்டுப் பற்றுடையோர் அநேகர் தயாராயிருக்கின்றார்களென்றே உற்சாக முண்டாகி இப்பெருங் காரியத்தில் ஈடுபட்டேன்.

இந்தத் தொழிலுக்கு அவசியமான எல்லா கருத்துக்களையும் புதுமாணுக்கர், முது மாணுக்கர் என்னும் இருதரத்தாருக்கும் உபயோகமாகும்படி எனது சிற்றறிவிற் கெட்டின வரையில் ஆங்காங்கு விரிக்கவேண்டியவைகளை விரித்தும். ஐயத்துக்கு ஏது வான முறைகளில் அவ்விதமுண்டாகாதபடி தெளிவாயெழுதியும் விளக்கியிருக்கின்றேன்.

இவ்வரிய நூல் மருத்துவம் செய்யும் ஒவ்வொருவர் கையிலும், பாண்ட தத்துவ சோதனைப் பிரியமுள்ள இரசவாதிகளிடத்திலும் சதா இருக்க வேண்டியதாதலின், இம் முதற்பாகத்தை அதிக குறைந்த விலைக்கு அச்சிட்டு வெளிப்படுத்தலானேன். இதுபோல் அருமையான இரசவாத நூல் வேறொன்றில்லையென்பது திண்ணம்.

இந்நூலில் சொல்லப்பட்டிருக்கும் ஒவ்வொரு முறையும் பக்குவமும் மிகவும் சிறப்பானவை. இதில் காரசாரப் பயன் பாடு, மூலிகைப் பயன்பாடு என்ற இருவகை முறைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்நூலிற் சொல்லியிருக்கிறபடி பாகங்களைச் செய்துமுடித்தால், கொடிய நோய்களைப் போக்கி அதனால் பெரும் புண்ணியமும் புகழும், பெயரும், பொருளும் பெறஏதுவாகும்.

இந்நூலில் சொல்லப்பட்ட பற்பல முறைகளின் செய் பாகத்தில் ஒரு தடவை சொன்னதையே மடக்கி மடக்கிச் சொல்ல நேரிட்டிருக்கிறது. இது கற்போர்க்கும், இதை எழுதின அடியே னுக்கும் ஒருவகையில் துன்பமாயிருந்திடினும், அப்பாகத்தைச் செய்வோர்களுக்குப் பலவகையிலும் இலாபகாமாகவேயிருக்கும். ஏனெனில், ஊறவைத்தல், அரைத்தல், காய வைத்தல், ஆற வைத்தல், புடம் போடுதல் ஆகிய பாகங்களில் ஒவ்வொரு முறை யிலும் பல மாறுதல்களிருக்கின்றபடியால், அவற்றுளொன்றில் கொஞ்சந்தவறினும், அம்மருந்து முழுமையாய் நிறைவேறுது. ஒருவேளை பூரணமாய் முடிந்தாலும், அதன் குணம் முற்றும் காண் பிக்கப்படமாட்டாது. மேலும் மருந்துகளைச் செய்ய முயற்சி செய்யும் ஒவ்வொருவரும் ஒருவரைப் போலவே சமமாய் நுண்ணறிவு உடையவர்களாயிருப்பார்களென நினைத்தல் கூடாது என்பதே.

ஆகையால், நண்பர்களே, "கூறியது கூறல்" என்னும் குற்றத்திலும், மற்றவகையிலும், அடியேனையுட்படுத்தாமல் தயவுடன் மன்னிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

தமிழ் அறிஞர் பெருமக்களையும், சித்த மருத்துவ வல்லுநர் களையும், மற்ற நண்பர்களையும் மிகவும் வினயமாய்க் கேட்டுக் கொள்ளும் விண்ணப்பமாவது, இவ்வரிய நூலைப் பல ஏட்டுப் பிரதிகளிலிருந்து, வேறு பலவகையாகவும் ஒழுங்குபடுத்த வேண்டியிருந்தபடியாலும், இது முதல் தடவையான படியாலும், மனித இயல்பான தவறுதல்களாலும், மற்ற வகையாலும் நேரிட்ட பிழை முதலியவைகளை மன்னித்து, அவரவர்களுக்குத் தெரிந்தவைகளை உயிர்க்கருணையோடு அடியேனுக்குத் தெரி வித்தால், அவை பொருந்தக் கூடியனவாயின் அடுத்த பதிப்பில், அவற்றையும் சேர்த்து வெளிப்படுத்தப்படுமென்பதேயாம்.

இந்நூலில் சொல்லப்பட்ட பல பாகங்களுக்கும் பல விவரங் களுக்கும், ஸப்ஆ, ஸப்ஈன், நஜபேஜாபிரி, வஜுர்று ஜஸஹப், தக்தஸிப், ரஸாயிலேஜல்த், ஹஜரேபத்தி, மீஜானே கீமியான், அஷ் ஆரேகாலித் என சிறந்த யூனனி இரசவாத நூல்களி லிருந்தும், நாயனர் ஞானவெட்டி 1500. நாயனர் நவரத்தின சிந்தாமணி 800 * மேற்படி பஞ்சரத்தினம் 50, மேற்படி ஐந்நூற்றின் சுருக்கம் 300, அகத்தியர் ஞானகாவியம், இராம தேவர் நிகண்டு 30, நாயனர் சுருக்கம் 100, மேற்படி 50, மேற்படி 30, மேற்படி 14, மேற்படி 10,* வேதாந்த கலைக்கியான

---

* இந்நூல்களகள் முற்றும் சீராய்க் கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கிறது.

கண்டக சூத்திரம் என்னும் அரிய தமிழ் இரசவாத நூல்களி லிருந்தும் சேகரிப்பதற்குச் சில இரசவாத பண்டிதர்களின் உதவியும் இன்றியமையாததாய் இருந்தது. ஆகையால், அந்த நூலாசிரியர்களுக்கும் அப்பண்டிதர்களுக்கும் உலகம் எப்போதும் நன்றியுள்ளதாயிருக்குமென்பதில் ஐயமில்லை.

மேற்கண்ட தமிழ் நூல்களில் ஆங்காங்கு நேர்ந்த சில சந்தேகங்களை நீக்கியும். பொருள் தெரியாதவைகளுக்கு உரை சொல்லிக் கொடுத்தவரும், உயிர்க்கருணையும், பிறர்க்குதவும். பண்பும் உடையவருமான திருமிகு பூதானந்தமூர்த்தியென்னும் துரைசாமிச் சாமியாருக்கு மனமுவந்த மிக்க நன்றியுள்ளவனு யிருக்கின்றேன். அவ்விதமே உலகத்தாரும் இருப்பார்களாக,

இந்தப் பாகத்தையும், இனி அச்சிடப்படும் பாகங்களையும் தொடக்கமுதல் இறுதிவரை கவனித்துப் படித்து, அறிந்து அவற் றில் சொல்லப்பட்டிருப்பதுபோலச் செய்து முடித்துக் கொள்பவர் களுக்கு, இந்நூலின் முதல் நூலாசிரியர்களும் பெரியோர்களுமான மகான்களெல்லாம், உற்ற சமயத்தில் ஊன்றுகோல் போல் நின்று உதவி செய்வதற் கொப்பாகுமென்பதில் ஐயமேயில்லை.

ஆனதுபற்றி, நோயற்ற வாழ்வு, ஆயுள் விருத்தி, பிறர்க்கு உதவுதல், புண்ணியம், உயிர் இரக்கம் முதலிய இம்மை மறுமைக் குரிய பலவிருத்திகளை விரும்பும் ஒவ்வொருவரும் இதனையும் இதற்கு அடுத்த பாகங்களையும் அசட்டை செய்யாமல் மனமுவந்து முழுமனத்தோடு ஏற்று ஆதரித்து, முறைப்படி தெளிந்து செய்து கொள்வதனல் இம்மைக்குரிய பலன்களை இனிது பெற்று இன்புற்றுத் திடகாத்திர .உடலுடையவர்களாய் இன்பத்தோடு வாழ்வார்களாக.

**ஆமீன் யாறப்பல் ஆலமீன்.**



இரண்டாம் பாகத்தின்

# முதற்பதிப்பு முகவுரை



ஐயா, இரசவாத பண்டிதர்களே! மருத்துவப் பெருமக்களே! இவற்றுடன் தொடர்ச்சியாக எழுதவேண்டியவை இன்னும் அனேகம் இருக்கின்றன; அவையாவன:

(1) **கட்டுவகைகள்:**—மருத்துவம், இரசவாதம் என்ற இரு வகைகளுக்கும் பயன்படும் பொருள்களின் கட்டுகள். இவை ஒவ்வொன்றிலும் பற்பல வகைகளுண்டு. அவற்றையும் இங்குக் குறிப்பாக எழுதுவோம். இரசம், இலிங்கம், தாளகம், கந்தகம், பாடாணம், கௌரிப் பாடாணம் என்ற இவைகளின் கட்டுகளும், நாகம், வங்கம், தாமிரம் ஆகியவைகளின் கட்டுவகைகளும்;

(2) **வெட்டைகள்:**—பற்பம், செந்தூரம் முதலியவைகளாகச் செய்ய உலோகங்களை வெட்டையாக்க வேண்டியது அவசியமாகையால், தாமிரவெட்டை, தங்கவெட்டை, வெள்ளி வெட்டை, வெள்வங்க வெட்டை, கருவங்க வெட்டை, நாக வெட்டை, இரசவெட்டை, அயவெட்டை முதலியவைகளும்;

(3) **களங்குகள்:**—வெள்ளிக் களங்கு, தாமிரக் களங்கு, அயக் களங்கு, வெள்வங்கக் களங்கு, கருவங்கக் களங்கு, நாகக் களங்கு, இலிங்கக் களங்கு, இரசக் களங்கு, பாடாணக் களங்கு, கந்தகக் களங்கு முதலியவைகளும்;

(4) **சரக்குகளைப் பக்குவப்படுத்தல்:**—செந்தூரம், பற்பம் முதலியவைகள் செய்ய முக்கியப் பொருள்களுடன் சேர்க்கப்படும் சில வஸ்துகளைப் பக்குவப்படுத்தல் அவசியமாகையால் அவ்வகை முறைகளும்;

(5) **பற்பங்கள்:**—மருத்துவம், வாதம் என்ற இருமுறைகளுக்கும் பயன்படும் எல்லாவகைச் சரக்குகளின் பற்ப முறைகளும்;

(6) **செந்தூரங்கள்:**—மேற்கண்ட இருவகைகளுக்கும் பயன்படும் எல்லாவகைச் சரக்குகளின் செந்தூர முறைகளும்;

(7) சுண்ணங்கள் :— மேற்கண்ட இரு வகைக்கும் உரிய அனேகவகைச் சுண்ண முறைகளும்;

(8) குருமுறைகள் :— மேற்கண்ட இருவகைகளுக்கும் உரிய அனேகவகைக் குரு முறைகளும் ;

(9) மெழுகுகள் :—வாதம், மருத்துவம் என்ற இருவகைகளுக்குமான, இலிங்கமெழுகு, வீரமெழுகு, சாரமெழுகு, இரசமெழுகு, கந்தகமெழுகு, கௌரிமெழுகு, தாளகமெழுகு, மனோசிலை மெழுகு, வெண்கார மெழுகு, தாமிர மெழுகு, வெள்ளி மெழுகு, அயமெழுகு, ஆகிய பற்பல முறைகளும்;

(10) செம்பெடுத்தல் :—சில உலோகங்கள், சரக்குகள், மூலிகைகள், முதலியவைகளிலிருந்து செம்பைப் பிரித்தல் அல்லது செம்பல்லாதவைகளை செம்பாக்குதல். அயச் செம்பு, தொட்டிச் செம்பு, பித்தளைச் செம்பு, துருசு செம்பு, ஐங்கால் பச்சைச்செம்பு, வங்கச் செம்பு, கந்தகச் செம்பு, தங்கச் செம்பு முதலிய பற்பல பாகங்களும்.

(11) வங்கமெடுத்தல் :—சில உலோகங்களிலிருந்து அல்லது சில சரக்குகளிலிருந்து ஈயத்தைப் பிரிக்கலாம். தாளக ஈயம், பாடாண ஈயம், மிருதார்சிங்கி ஈயம், அய ஈயம், அயச்சவளை முதலிய பற்பல முறைகளும், இரசமணி, கருப்பூரமணி, அயமணி முதலிய முறைகளும் ;

(12) வாதவெள்ளி :—வேதை வெள்ளி (Chemical Silver) செய்யும் பலவகை முறைகளும்;

(13) வாதப்பொன் :—(அ) வேதைப் பொன் (Chemical Gold) செய்யும் பலவகைமுறைகளும்;

(ஆ) இயற்கைப் பொன்னின் தேர்வுக்கு விதிகளும், மாற்றுணி விவரங்களும்.

(14) மேற்படி இருவகைகளுக்குமாகும் நவக்கிரகக்கூட்டு, ஏழுகிரகக்கூட்டு, பஞ்சபூதக் கூட்டு, திரிமூர்த்திக் கூட்டு, கணிதக் கூட்டு முதலிய பல முறைகளும்;

(15) வைப்பு முறைகள் :—அதாவது தாழ்ந்த பொருள்களால் உயர்ந்த பொருள்களைச் செய்தல்; அல்லது செயற்கைப் பொருளால் இயற்கைபோல் செய்தல், கஸ்தூரி வைப்பு, குங்குமப்பூ வைப்பு, அம்பர் வைப்பு, முதலிய பற்புல வகைகளும்;

(16) (அ) வண்ணமேற்றல் :—குறைந்த மாற்றுள்ளவைகளை உயர்ந்த மாற்ருகச் செய்தல். இதற்கு அப்ஜாமாற்று (மேனிலை மாற்று) ஏற்றல் எனப்பெயர். இம் முறைகளுள் அனேக வகைகளும்;

(ஆ) வெள்ளையாக இருப்பதை மஞ்சள் நிறமாக்குதல் முதலிய சில முறைகளும்;

(17) இரசவாதத் தொழிலுக்குப் பயன்படும் பல எண்ணெய்கள், அல்லது தைலங்கள், கந்தக எண்ணெய், தாளக எண்ணெய், பூநாக எண்ணெய், துருசு எண்ணெய், அண்ட எண்ணெய் முதலிய பல பாகங்களும்;

(18) சில உலோகங்களின் சம்பந்தமாக அவையல்லாத வேறு உலோகங்களைச் செய்தல் முதலிய பல முறைகளும்;

(19) வெட்டையாக இருக்கிற உலோகங்களை நைப்பாக்கும் பல முறைகளும்;

(20) வயிரமூசை, வயிரக்கவசம், திராவகக் குப்பி, திராவகப் பாண்டம் முதலியவைகளைத் தயாரிக்கும் முறைகளும்;

(21) பல வகைகளிலும் பயன்படும் நானுவித அற்புத முறைகளும் ஆகிய பல வகைகளுமே.

இத்தகைய பல கருத்துகளடங்கிய மூன்ரும் பாகங்கள் முதலிய பிரிவுகள் ஒன்றன்பின் ஒன்ருய் அச்சிடப்பட்டு வருகின்றன. எல்லாப் பாகங்களையும் ஒன்ருய்ச் சேர்த்து ஏன் அச்சிடவில்லையெனச் சிலர் கருதலாம். அதன் காரணம் பின் வருவனவாம்.

இரசவாத சம்மந்தமான எல்லா முறைகளையும் ஆரம்ப முதல், முடிவுவரையில் யாவரும் எளிதில் தெரிந்து கொள்ளும்படி வகை வகையாகவும், விவரம் விவரமாகவும், பிரித்து, மிகவும் தெளிவாகவும், யாவரும் எளிதில் அறியும் விதமாகவும் எழுதினபடியால் இந்நூல் கருதியதினும் அதிகம் விரிவெய்தியது.

நமது நூல்களைக் கைக்கொண்டு நம்மைப் பல விதத்திலும் பாராட்டி மேன்மைப்படுத்தி ஆதரித்து வரும் நாட்டுப்பற்றுள்ள உள்ளூர், வெளியூர் மருத்துவப் பெருமக்கள், நண்பர்கள் முதலாயினோர்களும் இந்நூல் எப்பொழுது வெளிவரும் என்னும் பேரவாவினுல் எம்மை இராப்பகலாய் வருத்தி வந்ததால், அவர்கள் தாகம் சற்றுத் தணியும் விதமுமாம்.

இந்நூல் ஏகமாய் அச்சிடப்பட்டால், அதற்குத்தக்க பெரு விலையும் ஏற்படுத்தப்படுமாகையால் ஏழைகள் முதலாயினோர் ஏக காலத்தில் வாங்குவது கடினமாய் இருக்கும். பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டால் விலையும் குறைந்து போகும். மேற்கண்ட எல்லோரும் பல தடவைகளாகவும், எளிதாகவும் வாங்க உதவியாகவும் இருக்கும்.

இன்னம், பல காரணங்களால் இப்போது அச்சிட்டவரையில் இரண்டாம் பாகமென வெளிப்படுத்தப்பட்டது.

இப்பொழுது அச்சிடப்பட்டு வரும் மூன்றும் பாகமானது கடவுளின் அருளால் வெகுவிரைவில் வெளியிடப்படும். ஆகையால், அவை வரையறை எண் படிகளாய் அச்சிடப்படுகின்றபடியாலும், தேவையுள்ளவர்கள் உடனே எமக்குத் தெரிவித்தால், அவர்கள் பெயரைப் பதிவு செய்து அச்சிட்டவுடன் வி.பி.பி.-ல் அவர்களுக்கு அனுப்பப்படும். இப்பாகங்களும் சற்றேறக்குறைய இதன் முதற் பாகம், இவ்விரண்டாம் பாகம் என்ற ஒவ்வொரு பாகத்தைப் போலவே இருக்கும்.

இங்ஙனம்,

ஹக்கீம் பா. மு. அப்துல்லா சாயபு,

சென்னை.

# பொருளடக்கம்

| பாகம் | | | பக்கம் |
|---|---|---|---|
| | கறியுப்பு | ... | 40 |
| | கறியுப்புக் கட்டு | ... | 42–45 |
| | கறியுப்புச் செயநீர் | ... | 203 |
| | கறியுப்புத் தூய்மை | ... | 41 |
| | காடித்தீ நீர்ப் பக்குவம் | ... | 102 |
| | காடிநீர் | ... | 28–29 |
| | காடிநீர்ப் பக்குவம் | ... | 96 |
| | காடியைக் காரமேற்றல் | ... | 156 |
| | காரசார நீர் | ... | 113–114 |
| | காரதாரச் சாரநீர் | ... | 115 |
| | கிணற்றுப் பக்குவம் | ... | 95 |
| | குதிரையின் மலத்தில் பக்குவப்படுத்துதல் | ... | 95 |
| | குருவெடிச் செயநீர் | ... | 194 |
| 2. | கட்டு வகைத் திராவகம் | ... | 282–283 |
| | கந்தகக் கட்டு | ... | 245 |
| | கந்தக மெழுகு | ... | 246 |
| | கந்தகத் தூய்மை (வேறு) | ... | 468–470 |
| | கருவங்கம் | ... | 462 |
| | கருவங்கத் தூய்மை | ... | 463–465 |
| | கல்லுப்புத் திராவகம் | ... | 243 |
| | கறியுப்புத் திராவகம் | ... | 244 |
| | கறுத்த மட்டத்தின் தூய்மை | ... | 471 |
| | கார சாரத் திராவகம் | ... | 243 |
| | காளகண்ட சங்கத் திராவகம் | ... | 265 |
| | காளி சங்கத் திராவகம் | ... | 263 |
| | குடவன் வாதக் குரு | ... | 369 |
| | குப்பியை வைத்துத் தொளையிடுதல் | ... | 290 |
| 1. | சந்திரப் புடமிடுதல் (தீட்சை) | ... | 25 |
| | சரக்குகளை நீராக்கும் வகை | ... | 95 |
| | சவுக்கார நீர் | ... | 135–137 |
| | சவுக்கார வைப்பு | ... | 135–136 |
| | சாரநீர் | ... | 109 |
| | சார சூதச் செயநீர் | ... | 229 |
| | சாரப் பதங்கம் | ... | 106 |
| | சாரமேற்றல் | ... | 24 |
| | சாரவெப்பநீர் | ... | 107–108 |
| | சாரவீர பூரச் செயநீர் | ... | 230 |
| | சாரச் செயநீர் | ... | 72 |

பிஸ்மில்லா ஹிர்றகுமா நிர்றகீம்.

# இரசவாத சிந்தாமணி



கடவுள் வணக்கம்

அல்கம்து லில்லாஹி, றப்பில் ஆலமீன்
அஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலாஸய்யிதில்
முர்ஸலீன், வ ஆலிஹி, வ அஸ்காபுஹி
அஜம ஈன்.

## இரசவாதம் இன்னதென்பதும் அதன் தலையாய கருத்து இன்னதென்பதும்

இரசவாதத்திற்குப் பற்பல மொழிகளிலும் பற்பல வழக்குகளிலும் வழங்கப்படும் பற்பல பெயர்கள் மற்றும் பிற பெயர்களையும், அவற்றின் அர்த்தம் முதலியவைகளையும் முன்னர் தெரிந்து கொள்வதனுல், இரசவாதம் இன்னதென்பதையும் அதன் பயன் முதலியவைகளையும் ஒருவாறு தெளிந்து அறியக்கூடும்; ஆகையால், அவற்றைச் சிறிதளவு விவரிக்கின்ருேம்.

இரசவாதத்திற்கு யூனனி மொழியில் (1) கெமிஸ்ட்ரி என்றும், (2) அல்கெமியென்றும், (3) அரபு மொழியில் ஸன் அதே இக்ஸீர் என்றும், (4) கீமியாயி என்றும், (5) பார்ஸி மொழியில் கீமியா என்றும், (6) தமிழில் இரசவாதம் என்றும், (7) வாதம் என்றும், (8) வேதையென்றும், (9) பௌதிகவாதம் என்றும், (10) இரசாயனம் என்றும் சொல்லப்படும்.

(1) கெமிஸ்ட்ரி என்னும் சொல்லுக்கு மூலமானது அல்கெமியாம். கெமிஸ்ட்ரி என்பதைப்பற்றிச் சற்று விபரமாய்த் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கின்றபடியால், மற்ற சொற்களைப்பற்றி விவரித்தபின், அதைப்பற்றிப் பின்னர்ப் பார்ப்போம்

(2) செயற்கையாய் அல்லது, மாறுபாடற்றதாய்ப் பொன் முதலியவைகளைச் செய்யும் முறைகளைக் கூறும் நூலுக்கு அல்கெமி யெனப் பெயர்.

(அ) இந்தச் சொல்லின் மூலமானது பலவித ஐயத்திற் கேதுவாயிருக்கிறது. இஃது எகிப்து தேசத்திற்குப் பழமையான பெயரான கெமியா என்னும் சொல்லிலிருந்து வந்ததென்பது சிலர் கருத்து. ஏனெனில், இந்த நூலானது ஆதியிலுண்டானது அந்தத் தேசத்தில்தான் என்பதே காரணம்.

(ஆ) இரகசியம் அல்லது, மறைவு என்னும் அர்த்தமுள்ள 'கிமியா' என்னும் அரபுச் சொல்லிலிருந்து இஃது உண்டான தென்பது சிலர் கருத்து.

(இ) நெருப்பு எனப் பொருள்படும் 'கீம்' என்னும் கெல்டிக் மொழியிலிருந்து உண்டானதென்பது வேறு சிலர் கருத்து.

இன்னும், இதைப்பற்றிய பற்பல வேறுபாட்டுக் கருத்துகளிருப் பினும், அவற்றுள் முக்கியமானவை மேற்கண்ட (அ), (ஆ), (இ) என்னும் மூன்று வகைகளே ஆம். மேலும் மேற்கண்ட மூவகைத் தலையாய கருத்துகளால் முதன்மையான மூன்று செய்திகளை நாம் அறிந்துகொள்ள ஏதுவுண்டு.

**முதலாவது:** பொன் முதலியவைகளைச் செயற்கையாய் அல்லது, மாறுபாடற்றதாய்ச் செய்யும் வகைகளைக் கூறும் நூலானது, முன்னர் தொடுத்திருந்ததாகவும், இந்த நூலானது இந்தியாவைத் தவிர மற்ற நாடுகளிலும் இருந்ததாகவும் ஏற்படுகிறது.

**இரண்டாவது:** இந்த நூலானது அதிக இரகசியமானதும், மறைவானதும் ஆகும் என்பதும் ஏற்படுகிறது.

**மூன்றாவது:** இம் முறைகளில் முதன்மையாய்க் கவனிக்கத் தக்கது நெருப்பேயாம். நெருப்பின் அளவானது நிறுத்த முறை யாய்ச் சீர்ப்படுத்தப்படாமல், அது மிகினுங் குறையினும் எல்லா முறைகளும் தவறிப்போம் என்பதும் ஏற்படுகிறது.

(3) இல்மே ஸன் அதே இக்ஸீர்—இதன் பதப்பொருளாவது சாராம்சத் தொழிலைப் போதிக்கும் நூல் என்பதே. அதாவது, பொருள்களின் சாரங்களுள் ஒன்றை மற்றொன்றோடு கலந்து இவையன்றி வேறொன்றாய் மாறுபடும் முறைகளைக் கூறும் நூலென்பதே. ஆனால் வேறு சிலர் கருத்தாவது, மேற்கண்ட

விதமாய்ப் பொருள்களின் சாரங்களை ஒன்றை மற்ருென்ருேடு சேர்த்து, மாற்றமடையச் செய்து, தாழ்ந்த தாதுக்களை உயர்ந்த தாதுக்களான பொன் முதலியவைகளாக மாற்றும் முறைகளைப் போதிக்கும் நூலென்பதாம்.

(4) கீமியா என்பது, ஒரு பதார்த்தத்தின் சாரமானது, மற்ருெரு பதார்த்தத்தின் சாரத்தோடு சேர்வதால் உண்டாகும் மாறுபாட்டைத் தெரிந்து கொள்ளுதலாம். இதுதான் உண்மை யானதும், பல பண்டிதர்களாலும் நிச்சயிக்கப்பட்டதுமான பொருளாகும். ஆனல், இந்த நூலின்மூலமாய் ஒரு பதார்த்த சாரத்தின் குணமானது மாறுபடுத்தப்பட்டுத் தன் இயல்பான தொழிலைக் கடந்து, மற்ருென்றின் குணம், நிறம் முதலியவைகளை அடைந்துவிடுவதற்குப் பெயரென்பது சிலர் கருத்து.

(5) கீமியா என்பதற்குப் பார்சி மொழியில், உத்தி தந்திரம், அனுமானம், சித்து, வித்தையெனப் பொருளாம் எனவே, உத்தி முதலியவைகளால் ஒரு பொருளை (பதார்த்தத்தை) மற்ருென்ருய் மாற்றிக் காட்டும் வித்தையென்பதாம்.

(6) (அ) இரசவாதம் என்பது, இரும்பு முதலிய தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகங்களான பொன் முதலியவை களாய் மாற்றும் முறைகளைச் சொல்லும் நூலுக்குப் பெயர். இது பொதுவாய் வழங்கப்படும் கருத்தேயொழிய,அதன் பதப்பொருள் அல்லது, அதன் உண்மையான அருத்தமல்லவென்பது பலர் கருத்து.

(ஆ) இரசவாதம் என்பது பாதரசம் என்னும் பொருளின் மூலமாய்ச் செய்யப்படும் வித்தை, வேடிக்கை, விநோதம், மாரணம் முதலியவைகளுக்குப் பெயர்.

(இ) இரசவாதம் என்பது (இரசம் = பாதரசம்; வாதம் = வாதித்தல்) பாதரசம் என்னும் பொருளால் மற்றஉலோகங்களை வாதித்தலுக்குப் பெயர்.

உபரசங்களான லிங்கம், இரசகற்பூரம் முதலியவைகளாலும் மற்ற உலோகங்களை வாதிக்கக்கூடுமே ; இரசத்தை மாத்திரம் ஏன் எடுத்துக்கொள்ளவேண்டும் என்பது சிலர் மறுப்பாகும். அதற்குப் பதிலாவது : உபரசங்களால் மற்ற உலோகங்களையும் வாதிக்கக் கூடுமென்பது உண்மையே. ஆனல், பாதரசமானது பெரும்பாலும் உபரசங்களுக்கு மூலமாகவும், முதன்மையானதாகவும் மற்றவை களைக் காட்டிலும் அஃது அதிகமாய்ப் பயன்படுத்தப்படுகின்றபடி

யாலும், மற்றவைகளைப் பார்க்கிலும் இதில் அநேக மேன்மையான குணங்களிருக்கின்றபடியாலும், மிகுதி பற்றியும், சிறப்புப் பற்றியும் இரசவாதம் என வழங்கப்படுகிறதென்பது சிலர் கருத்து.

(7) வாதம் என்பது, இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கும் வித்தை. இது சாதாரணமாய் வழங்கப்படும் வழக்கேயொழிய மற்றபடியன்று. அல்லது, இரசவாதத்தின் மாறுபாடாயிருக்கலாம். வாதம் என்பது மாறுபட்ட கருத்தின் முடிவு. அதாவது, ஒன்றைப்பற்றி விவரிக்கும் நூலென அருத்தமாம்.

(8) வேதை= வேதித்தல்; அதாவது பேதித்தல், ஒன்றை மற்றொன்றாக மாற்றுதலாம்.

(9) பௌதிகவாதம் என்பது மண் (பிருதிவி) முதலிய பூதங்களை விவரிக்கும் நூலாம். இதைப்பற்றிச் சற்று விவரமாய்த் தெளிந்து கொள்ளவேண்டி இருக்கின்றபடியால் பின்வருமாறு தெளிந்து அறியப்படும்.

நம்மைச் சுற்றிலுமிருக்கும் இயற்கைப் பொருள்களில் நாள் தோறும் மெதுவாய் அல்லது, துரிதமாயுண்டாகும் வேறுபாடுகள் இயற்கையான ஏருவகைச் செய்கைகளின் முடிவுகளாம். இதற்கே பௌதிகசந்தி அல்லது, இரசவாத சந்தியெனப் பெயர்.

**எடுத்துக்காட்டு** :—(1) ஓர் இரும்புத் துண்டைக் காற்றில் அல்லது, வெளியில் சிலநாள் போட்டு வைத்தால், அது துருப் பிடித்துவிடுகிறது. அதாவது, அதன் நிறம் மாறி, தன் கடினத் தன்மையை இழந்து இலேசாய் விடுகிறது.

(எ. கா.) :—(2) மரத்திலிருந்தொரு இலையுதிர்ந்து கீழே விழுந்தால், சில நாள்களில் அஃது உலர்ந்து மக்கிப் பொடியாய் விடுகிறது.

(எ. கா.) :—(3) பாலைச் சில நாள்கள் வைத்திருந்தால் அது புளித்துவிடுகிறது. அதாவது, பாலிலுள்ள மதுரமானது புளிப்பாகி தயிராகவும், மோராகவும் மாறிவிடுகிறது.

மேற்கண்ட பொருள்களில், அவைகளின் பழைய குணங்களுக்கு முற்றும் மாறுபட்ட புதியதான தொடர்புகள் உண்டாகி விடுவது நமக்கு அனுபவமாய்த் தெரிந்த செய்தியே.

ஆகையால், மேற்கண்ட பொருள்கள் என்னென்ன பூத குணங்களால் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அவை மாறுபட்ட காரணங்களென்ன? மேற்கண்ட வேறுபாடுகளை எவ்விதந்

தவிர்க்கக்கூடும்? இவ்வாறு அவற்றின் சம்பந்தமான பல கருத்துகளையும் ஆராய்ந்து நிச்சயிப்பதற்கே பௌதிகவாதம், இரசவாதம், இரசாயனம், பௌதிகசந்தி, இரசவித்தை, கெமிஸ்ட்ரி (Chemistry) எனப் பல பெயர்களுண்டு.

இரசவாதமென்பது, உண்மையில் பொருள்களின் தோற்றப் பொருத்தத்தை அல்லது, பொருள்களின் பொருத்தத்தை நமக்குக் கற்பிக்கும் நூலாம். ஆகையால், இரசவாதி ஒரு பொருளை எடுத்தால், அது தாதுப் பொருளாயினும் சரியே; தாவரப் பொருளாயினும் சரியே; உயிர்ப் பொருளாயினும் சரியே. அந்தப் பொருள் எதனால் உண்டாக்கப்பட்டிருக்கிறது? அஃது ஒருவிதப் பொருளினால் உண்டானதா? பலவிதமான பொருள்களின் சேர்க்கையினால் உண்டானதா எனவிளக்கந் தேடுகிறான். இதற்காக அவனைச் சுற்றிலுமிருக்கிற பொருள்களில் இயற்கையாய் என்னென்ன மாறுதல்களுண்டாகின்றன என்பதை அதிகக் கவனமுடன் ஆராய்ந்து வருவதுடன் கொஞ்சமாகவாவது, அதிகமாகவாவது இயற்கை ஏற்பாடுகளை மாற்றி, புதிதான ஏற்பாடுகளைச் சிந்தித்து அமைத்து, அவ்விதம் மாற்றப்பட்ட புதிதான முடிவுகளால் நிச்சயமாய் என்னென்ன நேரிடுகின்றனவென ஆய்வுசெய்ய வேண்டும். இவ்விதம் புதிதாய் ஏற்படுத்தப்பட்ட முடிவுகளுக்கே ஆய்வு அல்லது, சோதனை எனப் பெயர். எவ்வளவாய் யோசித்து, முறைகளை ஏற்படுத்தி, சோதனைகளைச் செய்து, அதனாலுண்டாகும் முடிவுகளைத் தீர்க்கமாய் வாதிக்கின்றோமோ, அவ்வளவாய் அதன் மர்மங்களைத் தெரிந்து கொள்ளக்கூடும். ஆகையால், ஆழ்ந்து ஊன்றிச் சிந்தித்தால் இரசவாதமென்பது அனுபவ நூல் அல்லது, சோதனை நூல் என்றே சொல்லவேண்டும்.

மேற்கண்ட முறைகளை ஏற்படுத்த புத்தியும், அவைகளைச் செய்து முடிக்கக் கைப்பழக்கமும், அவற்றால் உண்டாகும் முடிவுகளை வாதிக்க புத்தித் தெளிவும் வேண்டும். இதன் கருத்தாவது, இத்தொழிலுக்கு அறிவுக் கூர்மையும் கைப்பழக்கச் சிறப்பும் இன்றியமையாதன என்பதேயாகும்.

மேற்கண்ட செய்திகளையெல்லாம் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து, இரசவாதமென்பது, பொருள்களின் சாரங்களை வாதிக்கும் நூல் என்பதாம். (இரசம்=சாரம்; வாதம் = வாதித்தல்). ஆகையால், பொருள்களின் சாரங்களை (தத்துவங்களை) ஒன்றை மற்றொன்றோடு கலந்தும், ஒன்றை மற்றொன்றாக மாறுபடுத்தியும், தாழ்ந்ததை உயர்ந்ததாகவும், சிற்சில குணங்களுள்ளவற்றைப் பற்பல குணங்களுள்ளனவாகவும் செய்யும் வகைகளைச் சொல்லும் நூலாம்.

இன்னம் இதை விளக்கிச் சொல்லுமிடத்துப் பொருள்களில் இன்னின்னவை கலப்புள்ளவைகளென்றும், இன்னின்னவை தனியானவைகளென்றும், கலப்புள்ளவைகளாயின், அவற்றைப் பிரிக்கும் வகைகளையும், தனியானவைகளையும், கலப்புள்ளவைகளையும், வேறு வடிவமாக மாற்றும் வகைகளையும், தாழ்ந்தவைகளை உயர்ந்தவைகளாகச் செய்யும் வகைகளையும், செயற்கைப் பொருளால் இயற்கைப் பொருளைப்போல் ஆக்கும் வகையையும், சில குணங்களுள்ளவைகளைப் பல குணங்களுள்ளவைகளாகச் செய்யும் முறைகளையும், இன்ன பல அரிய கருத்துகளையும் போதிக்கும் நூலாம் இஃது, இயற்கை இரசவாதம், வைத்திய இரசவாதம் என இரு வகையாம். ஆகையால், வைத்திய இரசவாதத்தில் மேற்கண்டவைகள்தான் சாதாரணமாய்ச் சரக்குகளின் தூய்மை முறைகள், செயநீர்கள், திராவகங்கள், வைப்புகள், கட்டுகள், களங்குகள், பற்பங்கள், செந்தூரங்கள் முதலிய பலவகைகளாகச் சொல்லப்படுகின்றன. ஆகையால், மேற்கண்ட முறைகளைச் சொல்லும் நூலே இரசவாதம் என்பது விளங்கும்.

இன்னும், இப் பாகங்களைச் செய்து முடிக்க அதிகப் புத்தி நுட்பமும், பலநாள் அனுபவமும், விடாமுயற்சியும், பலவித ஆராய்ச்சிகளும் இன்றியமையாதனவென்பதும் முன் சொல்லப்பட்ட செய்திகளால் நன்கு விளங்கும்.

இதுவரையில் நாம் இரசவாதம் இன்னதென்பதைத் தெரிந்து கொண்டோம். இனி அதன் முதன்மையான கருத்தின்னதென்பதைத் தெரிந்துகொள்வோமாக.

மனிதர்கள் அடையவேண்டிய இகபர போகபாக்கியங்கட்கு இன்றியமையாக் கருவியாயுள்ளது இவ்வுடலேயாம். இத்தகைய உடல் திடமுள்ளதாயும் பிணியற்றதாயும், இருக்கச் செய்தற்கரிய சாதனங்களை நன்கு விளக்குவதும், அச்சாதனங்களில்லாமையால் உண்டான பிணிகளைப் போக்குவதும் ஆயுள்மறை சாரமாகிய மருத்துவ நூலாம். ஆழ்ந்து சிந்தித்தால், இகத்தைக் காட்டிலும் பரமே மேலானது. இவ்வுடலானது திடமாக இராவிட்டால் பரத்தையடைய, யோகம் முதலிய கிரியைகளைச் செய்ய ஏதுவில்லாமற் போகும். ஆகையால், பரத்தையடையவும் மருத்துவமே முதன்மையானது என்பது விளங்கும். வைத்தியத்தில் முழுமையான மருத்துவப் புலமையை அடைய நோய்களின் உற்பத்தி, காரணம், லட்சணம் முதலியவைகளையும், அவற்றைப் போக்கும் மருந்து முதலியவைகளையும் தெரிந்துகொள்ள வேண்டும். நோய்களின் தோற்ற முறைகள் நன்றாகத் தெரிந்திருந்தும் அதைப்

போக்கும் மருந்துகள் தெரியாதிருந்தால் ஒருபோதும் முறையான—முழுமையான மருத்துவனுகான். மருந்தானது கனபொருள், நீர்ப்பொருள், காற்றுப்பொருள் என்னும், இவற்றைத் தனியாய் அல்லது, பலவாய்ப் பயன்படுத்துவதேயாம். இதற்காக இப் பொருள்களுள் ஒவ்வொன்றின் தத்துவத் தோற்றங்களையும் தெரிந்து, பலவித ஆய்வுகளாலும் நிச்சயித்து, அனுபவ சித்தமாக இருக்கவேண்டும். அப்படித் தெரிந்துகொள்ளாத வரையில் மருந்துகளைத் தெரிந்துகொள்ளக்கூடாது. அவ்விதம் மருந்துகளைத் தெரிந்துகொள்ளாவிட்டால் முழு மருத்துவனுகக் கூடாது. முழு மருத்துவம் தெரியாவிட்டால், நோய்களை நீக்கித் திடகாத்திரமாக்க இயலாது. திடகாத்திரமில்லாவிட்டால், இகபர போகபாக்கியங்களுக்கும் ஏதுவில்லை. ஆகையால், இரசவாதமென்பது வைத்தியத் தொழிலுக்கு முதன்மையானது என்பது நன்கு விளங்கும். இன்னும் வைத்தியத்தில் முழுத் தேர்ச்சியடைய விரும்பும் ஒவ்வொருவரும் இரசவாத நூலில் பழகித் தேறவேண்டுமென்பது வெள்ளிடைமலையேபோலத் தெள்ளிதாய் விளங்கும். இது காரணமாகவே "வாதிமகன் வைத்தியனென்றும், வாதங்கெட்டு* வைத்தியம்" என்னும் பழமொழிகள் வழங்குகின்றன.

இன்னம், நமது முன்னேர்களான இருடிகளும் முனிவர்களும் இந்தத் தொழிலுக்காகப் பற்பல நூல்கள் உண்டாக்கியிருக்கின்ருர்கள். அவர்களெல்லாம் இக்காலத்திலுள்ள புத்திமான்களைப் பார்க்கிலும் அநேக கோடிப் பங்கு மேலான புத்தியையும், உயிர்களிடம் காருண்யத்தையும், பரோபகாரத்தையும், இவைகளுக்கெல்லாம் மேலாக, தெய்வ பக்தியையும் உடையவர்கள். அம்மகான்கள் பரந்த நோக்கமாகவே மானிடர்களாகிய நாம், அந்த சாத்திரங்களின் மூலமாக மருந்துகளை முடித்துச் சாப்பிட்டு நோய்களினின்று நீங்கித் திடகாத்திரமுள்ளவர்களாகவும், ஒரு வேளை நோய்களுண்டாயினும், அதை அறவே நீக்கிக்கொள்ளவும் மேற்கண்ட பலநூல்களை வெளிப்படுத்தியிருக்கின்ருர்கள். அப்படி இன்றிப் (நாம் சாதாரணமாய் எண்ணுவதுபோல) பொன் முதலியவைகளைச் செய்து வீட்டிலுள்ள சட்டி பானைகளிலெல்லாம் நிறைத்து வைத்துக் குபேர சம்பத்தையடைந்து முழுச்சோம்பேறிகளாய்ப் போகும்படி தூண்டிவிடக் கருத்துக்கொண்டவர்களல்லர். மேலும், நமது கையிலுள்ள பொருள்களையெல்லாம் பேராசைகொண்டு வீணே இரைத்து, பயனில்லாச் செலவு செய்து நாம் ஏமாந்துபோக வேண்டுமென்னும் கருத்துகொண்டவர்களுமல்லர். உயிர்களின்பால் கருணையும் தெய்வ பக்தியுமுடைய இம்மகான்கள் இவ்விதம் தூண்டிவிட எள்ளளவேனும் கருத்துக் கொள்வார்களா

* வாதங்கிட்ட என்பது 'வாதங்கெட்டு' என்று உலகில் மருவி வழங்குவதை நோக்குக.

வெனப் அறிவாளிகள் சற்று நிதானித்து யோசிக்கவேண்டும். அவர்களுடைய கருத்தெல்லாம் நாம் திடகாத்திரமுள்ளவர்களாய். அல்லது, பிணிகளிலிருந்து நீக்கம் பெற்றவர்களாயிருந்து இகபர போகபாக்கியங்களை நாம் பெறவேண்டுமென்னும் நன்னோக்கமும் உயிர்களின்பால்கொண்ட கருணையுமேயாம். அதற்காக வேண்டிய அருமையானதாகவும் மேலானதாகவும் மருந்துகளை முடிக்க வேண்டுமென்பதுவேயாம். ஆனால், மேற்கண்ட மகான்களின் நோக்கத்திற்கு விரோதமாய் நாம் செய்வதனால்தான் மேற்கண்ட விதமாய்ப் பற்பலவித நட்டமும் பற்பலவித அவமானமும் நேரிடுகின்றன. அஃதெவ்விதமெனில்,

(1) இயற்கை இரசவாதம் என்பது, பொருள்களின் லட்சணங்களை நிச்சயித்தறியும் வகைகளைச் சொல்லும் நூலென்பது நமக்குத் தெரிந்த செய்தி. இன்னும், மருத்துவ இரசவாதமென்பது செயநீர், திராவகம், பற்பம், செந்தூரம் முதலியவைகளைச் செய்யும் வகைகளைச் சொல்லும் நூலிற்கும் வழங்கப்படுகிறதும் தெரிந்த செய்தியே. முன்னது, ஆரம்பமாய்க் கற்கத் தக்கது. பின்னது, முடிவாய்க் கற்கத்தக்கது. நாம் இதனைப் பின்காணும் வகையில் விவரித்து விளக்குவோம்.

பொருள்களின் தத்துவங்களை அல்லது, இலட்சணங்களைச் சொல்லும் நூலானது; ஒரு மொழியின் இலக்கியம், இலக்கணத்தைப்போன்றதாம். பற்பம், செந்தூரம் முதலியவைகளைச் செய்யும் முறையைச் சொல்லும் நூலானது; இலக்கிய இலக்கணம் நிறைந்துள்ள காவியத்தைப் போலாம். ஒருவன் ஒரு மொழியைக் கற்றுக் கொள்ள வேண்டுமாயின் ஆரம்பத்தில் அம்மொழியின், எழுத்துகளைக் கற்றுக்கொள்ளவேண்டும். இதற்காகக் கல்வி பயிற்றுவதில் வல்லவரான ஓர் ஆசிரியர் வேண்டும். அவர் பிள்ளையின் வயதிற்கும் சாமர்த்தியத்திற்கும் தக்கவிதமாய் தனித்தனி எழுத்துகளாய்ச் சொல்லிக்கொடுத்து, ஏவ்வொன்றையும். எழுதுவித்து எவ்விதமாய்க் கற்றுக்கொடுக்க வேண்டுமோ அவ்விதமாய்ப் பயிற்றுவித்து வருவார். இப்படி முறையாகச் செய்து வருவதால் நாளடைவில் வித்தையும் விருத்தியாகும். வாசகம் முதலியவை தெரிந்த பின், இலக்கிய நூல், இலக்கண நூல், முதலியவைகளை ஆரம்பித்து மாணுக்கரின் புத்தி கூர்மைக்குத் தக்கவிதமாய்ப்பலவிதங்களாலும் கற்பிக்க, மாணுக்கனும் ஆசிரியர் சொற்படி நடந்து கண்ணுங் கருத்துமாய்க் கற்றுவந்தால், அவ்விருவகைக் கலைகளிலும் வல்லவனுவானென்பதில் சந்தேகமில்லை. பின்பு, காவியத்தை எடுத்துக் கொண்டால் அதிலுள்ள இலக்கிய நயம், இலக்கணச் சிறப்பு முதலியவைகளின் அருமையையும் பெருமையையும் மாணுக்கன்

அறிந்துகொள்ளக்கூடும். அப்படி இல்லாமல்,முறையாய்க் கற்காத மாணுக்கனுக்கு ஆரம்பத்தில் மேற்கண்ட காவியத்தையெடுத்துக் கரைத்துக் குடிப்பாட்டினுலும் ஏதேனும் பயன் உண்டாகுமோ? ஒருபோதும் உண்டாகாது. அறிவினுல் ஆகவேண்டிய காரியத்திற்கே இவ்விதமானுல், அறிவு, அனுபவம் என்ற இரண்டு விதங்களாலும் ஆகவேண்டிய இரசவாதம், முறையின்றியும் அவ்வித்தையில் வல்லவர்களான ஆசிரியர் உதவி இல்லாமலும் எவ்விதம் இலகுவாய்ச் சித்திக்கக் கூடும்? மேற்கண்ட விதமாய் முறையாய்ச் செய்யாமலும் தகுந்த ஆசிரியரில்லாமலும், மனம்போன வழியெல்லாம் சென்று, கண்டவர்களின் பேச்சை நம்பிச் செய்வதனுல்தான் பெரும்பாலோர்கள் சித்தி (வெற்றி) அடையாமல் போகின்ருர்கள்.

(2) நம் முன்னேர்களெல்லாம் பரந்த நோக்கத்துடனும் உயிர்கள்பால் கருணையுடனும் மேன்மையான மருந்துகளை முடிப்பது உண்டு, திடகாத்திரமாயிருந்து, கடவுளை வழிபாடு செய்து நல் வழியிற்செல்லும்படியாக மேற்படி நூல்களை வெளியிட்டிருக்க, நாம் அவர்கள் கருத்துக்கு மாருக, தன்னல நோக்கத்துடன் உலகத்திலுள்ளவர்களைக் காட்டிலும் நாமே மேன்மையானவராக இருக்க வேண்டுமென்னும் பேராசைவெறி தலைக்கேறி, தட்டுண்டு, தடுமாறி, செம்மையான நெறி, செம்மையற்ற நெறி இன்னின்னதெனத் தெரியாமல் முடிவிற் படுகுழியில் வீழ நேரிடுகின்றது. கடவுளானவர் நமது மனநோக்கத்தை நன்ருயறிகின்றபடியால்' அவர் உதவியின்றி நமது பேராசையெல்லாம் வீணுசையாய் முடிகின்றது. நாம் பிறர் நலத்தில் கருத்துடைமையும், உயிர்களின் பால் கருணையும் முதலிய நன்னேக்கத்துடன் நன்மையாகவும் முறையாகவும் முயற்சி செய்வோமானுல் கடவுள் திருவருளுமுண்டாகி, நமது கோரிக்கையும் நிறைவேற ஏதுவாகும்.

(3) **கல்வியறிவு**: இரசவாதம் என்னும் நூல் இரகசியமானது அல்லது, மறைவானது என முன் சொல்லப்பட்டிருக்கிறது; மேலும், இது சார்பாக வெளியிடப்பட்டிருக்கின்ற நூல்கள் எல்லாம் பலவித 'மறைசொற்களாகவும் பலவித வழக்காகவும் சொல்லப் பட்டிருக்கின்றன. இந்த நுணுக்கங்களை எல்லாம் ஐயமறத் தெரிந்து கொள்ளத்தக்க கல்வியறிவு முற்றும் இன்றியமையாதது; அப்படி இல்லாவிட்டால் ஆழ்ந்து அகன்ற சமுத்திரத்தைக் கையின் உதவியைக்கொண்டு நீந்திக் கரையேற முயல்வதுபோலாகும்.

(4) **விடாமுயற்சி** : எக்காரியத்தையும் முழுமையாகச் செய்துமுடிக்க விடாமுயற்சி இன்றியமையாதது; என்பது, உண்மையேயாயினும் இவ்விஷயத்தில் மிகவும் முதன்மையானதும்

ஆகும். ஹுார்முஜ என்னும் இரசவாத பண்டிதர் இந்தத் தொழிலில் ஒப்பற்றவர்; அனேக இரசவாத நூல்கள் எழுதியிருக்கின்ருர். உலகத்தில் வழங்கும் நூல்களில் பல இவருடையனவாகவே இருக்கும். இத்தனை வல்லமைசாலியாகிய இப்பண்டித சிரோன் மணி, தன் நூலில் சொல்கின்ருர். "நான் ஒரு தடவை சாதாரண ஒரு பாகத்தைப் பதின்மூன்று தடவைகள் செய்தும், அது நிறை வேருமல், பதினன்காம் தடவை வெற்றியடைந்தேன்" என்பதே அது. இத் தொழிலில் வல்லவரான இம் மகானுக்கே இவ்விதம் நேரிட்டதென்ருல் கெடுவாதிகளான மற்றவர்களின் நிலைமையைச் சொல்லவும் வேண்டுமோ! மேற்படி கல்வியறிவு முதலியவை களுடன் விடாமுயற்சியும் வேண்டுமென்பது விளங்கும்.

(5) எந்த செய்முறையிலும் கைபாகம், செய்பாகம் முதலிய பாகங்கள் சிறப்புடையனவென்பது தெரிந்ததே. ஆனல், இத் தொழிலில் கைபாகம் சிறப்பாய் வேண்டியிருக்கின்றது. (அ) சரக்கு களின் உயர்வு, தாழ்வு, (ஆ) எடைப்பாகம், (இ) சேர்மானம், (ஈ) அரைப்பு, (உ) காயவைத்தல், (ஊ) புடம், (எரிப்பு) முதலிய பல பாகங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். இவற்றுள் ஏதேனும் ஒன்றில் தவறினுலும் முற்றுங்கெட்டுப்போகும். சிறு வயதுமுதல் பழகிச் சமைத்துவரும் பெண்கள் சமையலில் தப்பிவிடுவதைப் பல தடவை நடைமுறையில் பார்க்கவில்லையா? சமையலானது அரிசி, நீர் என்னும் இரண்டு பண்டங்களால் செய்யப்படுகிற தென்பது உலகறிந்த செய்தியாயினும், அரிசிக்குற்றம், நீர்க் குற்றம், அதனைக் களையுஞ் செயல், எரிப்பு வேறுபாடு ஆய்வு முதலிய பல பாகங்களுலொன்றில் தவறினல் சாதங்கெட்டுப் போவதை எத்தனைத் தடவை நாம் பார்த்திருக்கின்ருேம். சாதாரண செயல்களுக்கே இப்படியானல் மேன்மையான இப் பாகங்களில் தவறு ஏற்படுவதால் என்ன நேரிடுமென்பதைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? ஆகையால்,சோதனை நூலாகிய இந்த இரசவாதத் தொழிலுக்குக் கைபாகம் முதலியவை முதன்மை யானவை என்பதும் விளங்கும். இப்பாகங்களை வகைப்படுத்தி விபரமாய்ச் செய்யத்தெரியாமல் முறைகளின்மீது வீண்பழியைச் சுமத்தித் தாங்கள் நேர்மையாளர்களைப்போலச் சத்தியஞ் செய்து சுத்தித் திரிகின்ருர்கள்.

(6) **பொருள்:** இத்தொழிலில் தேர்ச்சியடைவதற்காகப் பல தடவைகள் ஆராய்ச்சி செய்யவும், தொழிலுக்கு வேண்டிய பொருள்கள் வாங்கவும், தொழிலுக்கு வேண்டிய கருவிகளைத் தயாரிக்கவும் இவைபோன்ற பல விடயங்களுக்கும் மற்றத் தொழில்களைப் பார்க்கிலும் அதிகம் பொருள் தேவை. ஆனல்,

பேராசையால் கையிலொன்றுமில்லாத ஏழைகளும் இத் தொழிலை வரன்முறையின்றி ஆரம்பித்துத் தாங்கள் எடுத்த காரியத்தை முற்றும் சாதிக்க ஆற்றலற்றவர்களாய் இரண்டு வழியாலும் கெட்டலைந்து முற்றும் ஏழைகளாய் விடுகின்றூர்கள்.

(7) **ஆராய்ச்சி :** பெரியோர்களின் நூலில் இன்ன செந்தூரத்தை வெள்ளியிற் கொடுத்தால் 108 மாற்றுகும். தாமிரத்தில் கொடுத்தால் 108 மாற்றுகுமென எழுதப்பட்டிருப்பதெல்லாம் அம் மருந்துகளின் பெருமையையும் சிறப்பையும் பற்றிக் கவி சாதுரிய அலங்காரமாய்ச் சொல்லப்பட்டவைகளே யொழிய உண்மையாய்க் கொஞ்சமுங் குறையாமல் அப்படியே ஆகிவிடு மென்னுங் கருத்தன்று. நாம் நமது குழந்தைகளோடு தங்கமே, இரத்தினமே எனச் செல்ல வார்த்தைகளாடுவதால், அவை உண்மையான தங்கமாகுமா? அதை உருக்கிச் சாய்த்து அடித்துக் கம்பி நீட்டலாமா? அவ்விதம் ஒருபோதும் ஆகாது; ஆனல், அக் குழந்தையின் குணமானது பொன்னின் குணத்தை ஒத்திருக்கலாம். அவ்விதமே அம்மருந்தால் கொஞ்சமும் குறையாமல் 108 மாற்றுக ஆகாவிட்டாலும், தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாக மாற்றுங் குணம் அம் மருந்திற்கு உண்டென்பது உண்மையே. அவ்விதம் ஆராயவேண்டியது ஏதுக்கெனில், அந்த மருந்தானது, பக்குவப்படியும் முறைப்படியும் முடிந்திருக்கிறதா வென நிச்சயித்தறியவும், தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாய் மாற்றுங் குணமுடைய மருந்து நோயுள்ள உடலை நோயற்ற உடலாக மாற்றுங் குணமுடையதாம் என்று வற்புறுத்தவும் சொல்லப்பட்டிருப்பதே காரணமாம். அப்படி இன்றி, நாம் பொன் செய்து மலையாய்க் குவித்துவிட வேண்டுமென்பது அவர்கள் கருத்தன்று. நாம் அவர்கள் கருத்தையறியாமலே, உயிர்களின்பால் கொண்ட கருணை முதலிய நற்கருத்துக் கொள்ளாமல், அவர்களுக்கு முற்றும் மாறுபட்டு, பேராசையுடன் தொடங்குவதால்தான், கடவுள் அருள் துணையின்றி நமது ஆசையெல்லாம் வீணசையாய் முடிகின்றது. நாம் உண்மையான மனத்தோடு இந்தக் கருத்தை ஆழ்ந்து ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்க்குமிடத்து, இவ்வித மருந்துகளால் பொன் செய்து பொருள்மாத்திரம் சம்பாதிப்பதைப் பார்க்கிலும், அவற்றை நோயாளிகளுக்குப் பயன்படுத்தி 100 பங்கு அதிகம் பொருள், புண்ணியம், கீர்த்தி, பெருமை, மகிமை முதலியவைகளை அடையக்கூடுமென்பது நன்கு விளங்கும்.

இன்ன பல விஷயங்களாலும் முன் சொன்னபடி முன்னேர்களின் நோக்கத்திற்கு எதிராகவும், உயிர்களின்பால் கருணை, பிறருக்குச் செய்யும் உதவி என்னும் இவற்றிற்கு மாறுகவும்

கேவலமான பேராசையாலும், கல்வி, அறிவு, தக்க நூல்பயிற்சி, விடாமுயற்சி, அனுபவம், தக்க ஆசிரியர் உதவி முதலியவைகள் இல்லாமையாலும் மோசக்காரர்கள் வலையில் நாம் சற்று முன்பின் யோசியாமல் சிக்கிக்கொள்வதாலும், நாம் ஏமாந்து நிற்க ஏதுவாகிறதென்பது நன்கு விளங்கும்.

மேற்கண்ட பெயர்களினாலும், அவற்றின் அருத்தங்களினாலும் காரணப் பொருள்களாலும் இரசவாதம் இன்னதென்பதையும் அதன் முதன்மையான கருத்து இன்னதென்பதையும், அந்த வித்தையில் நாம் எவ்விதம் வெற்றி பெறலாமென்பதையும் தெரிந்துகொண்டோம்.

## பொருள்களின் வகைகள்

சித்த யூனானி இரசவாதிகள் பண்டங்களைப் பிராண பொருள் (வஸ்து), தூல பொருள், சைதன்ய பொருள் என மூவகையாய்ப் பிரித்திருக்கின்றார்கள். அவற்றுள் பிராண பொருள்களாவன :

பாதரசம், நவாச்சாரம் என்ற இவைகளும், இவைகளின் தொடர்புள்ளவைகளுமாம். ஆனால், முதன்மையான பிராண பொருள் (வஸ்து), பாதரசமென்றும், இரண்டாவது பாடாண மென்றும் மூன்றாவது நவாச்சாரமென்றும் வேறு சில பண்டிதர்கள் அபிப்பிராயப்படுகின்றார்கள். இதனால், பாடாணமும் பிராண பொருள் என ஏற்படுகிறது.

இப்பிராண பொருள்களுக்கு நான்கு இயற்கைக் குணங்கள் அவசியமாம். (1) பதங்கமேறுதல்: இதுவே இவற்றின் தூய்மை யாம். (2) சுண்ணமாதல், (3) நீர் வடிவம் வேறுபடுதல்; அதாவது கெட்டித் தன்மையை யொழித்து நீர்த் தன்மையையடைந்து, பின்னர் எப்போதும் நீராகவே இருக்கலாம். (4) நீர்த்தன்மைக்கு மாறுபட்ட தன்மையையடைதல். அதாவது கட்டுப்படுதலாம்.

இந் நான்கு இயற்கைக் குணங்களையும் தூலப் பொருள்களும் அடையவேண்டியது இன்றியமையாததாகும்.

தூல பொருள்களாவன: உரத்த அடியைத்தாங்கும் குண முள்ளபொருள்கள் தூலப் பொருள் எனச் சொல்லப்படுகின்றன. அவையாவன: தங்கம், வெள்ளி, கருவங்கம், வெள்வங்கம், இரும்பு, செம்பு, நாகம் என்ற ஏழாம்.

சைதன்ய பொருள்கள் அநேகமுள. சுருக்கமாய் அவற்றுள் சிலவற்றை மாத்திரம் இங்குக் கூறுவாம். அவையாவன : இருவகை தாளகங்கள், இருவகை கெந்தகங்கள், இருவகை படிக்காரங்கள் என்ற ஆறுவகைகளும் நம்பத்தக்க முக்கியமான சைதன்ய வத்துக்களாம். இந்தச் சைதன்யப் பொருள்களானவை முதன்மையான உயிர்ப் பொருளான பாதரசத்தைக் கட்டுகின்றன. அதை நெருப்பிற்கு எதிர்த்து நிற்கச் செய்கின்றன. முடிவாய் அதைப் பற்பமாக்குகின்றன. இன்னும், இவை இதர உயிர்ப் பொருள்களையும் நெருப்பிற்கு எதிர்த்து நிற்கும்படி செய்கின்றன, இவைகளுக்கு உயிர்ப் பொருள்களை வர்ணிக்கும்* குணமுமுண்டு.

இந்தச் சைதன்யப் பொருள்களானவை பருப் (தூலப்) பொருள்களையும் பற்பமாக்குகின்றன. தூலப் பொருள்களை வருணிக்குங் குணமும் இவற்றிற்குண்டு.

இன்னும், இப்பொருள்கள் உயிர்ப் பொருள்களுடன் அல்லது, (பருப்) தூலப் பொருள்களுடன் சேர்க்கப்படும்போது தாமதற்குள் மறைந்துபோய், அதற்கு நிறத்தையும், முழுத் தத்துவத்தையும் தருகின்றன.

இந்தக் கலப்புப் (சைதன்யப்) பொருள்களில் முதன்மை யானது கெந்தகமாம். அதற்கடுத்தது தாளகமாம். அதற்கடுத்தது மஞ்சள் நிறச் சீனமாம். அதற்கடுத்தது வெண்ணிறச் சீனமாம்.

## நவக்கிரகத் (கோள்) தொடர்பான பொருள்கள்

சித்த பூஞனி இரசவாத பண்டிதர்கள் எல்லாப் பொருள் களையும் அவ்வவற்றின் கிரகசம்பந்தத்தை ஒழுங்காய்ப் பிரித்து, அவற்றுளொன்ருேடொன்று சேர்க்கப்படும் விதிகளையும் ஏற் படுத்தியிருக்கின்ருர்கள். ஆஞல், இது மிகவும் விரிவான நன்முறை யாயினும் இங்கு இன்றியமையாததும் முக்கியமுமானதுமான சிலவற்றை மாத்திரம் சுருக்கமாய் எழுதுவோம்.

**சனி** :—இதன் இயல்பான குணம் அதிகக் குளிர்ச்சியும் அதிக வறட்சியுமாம். இதன் பூதகுணம் (மண்) பிருதிவியாம். இது சில ரிடத்தில் ஆணுகவும் சிலரிடத்தில் அலியாகவும் காணப்படுகிறது. இது வாத †மறைசொல்லில் கருவங்கமாம்; இது அதிகக் கொடியது.

**குரு** :—இதன் இயல்பான குணம் சாந்தமான கடுங் குளிர்ச்சி யாம். இதன் பூதகுணம் (வெளி) வாயுவாம்; இது ஆணும். இது வாதமறை சொல்லில் வெள்வங்கமாம். இது மகா நன்மையானது.

---

* வர்ணிக்கும் = நிறம் கொடுக்கும்.

† மறை சொல் = இரகசியமான சொல் (பரிபாஷை).

**செவ்வாய் :**—இது அதிகச் சூடும் அதிக வறட்சியுமாம். இஃது தேயு. இஃது ஆணும். இஃது இரும்பு; இது சிறிதளவு நலமற்றது.

**சூரியன் :**—இது சாந்தமான சூடும் வறட்சியுமாம்; இதன் பூத குணம் வாயு தொடர்பான (தீ) தேயுவாம். இஃது ஆண்; இது தங்கம்; இது பார்வைக்கு நன்மையானது. இயற்கையில் நன்மையற்றது.

**சுக்கிரன் :**—இது சாந்தமான குளிர்ச்சியும் கொழுமையுமாம். இது அப்புத் தொடர்பான வாயுவாம். இது பெண் சாயலானது. இது தாமிரம்; இது சிறிதளவு நலமுடையது.

**புதன் :**—இது சாந்தமான குளிர்ச்சியும் வறட்சியுமானது. ஆனால், இவற்றுள் வறட்சி அதிகரித்திருக்கின்றதெனவும், இது வேறெந்த கிரகத்துடன் சேர்கிறதோ அந்தக் கிரகத்தின் குணத்தை இது பெற்றுக்கொள்கிறதெனவும் சொல்லப்படுகிறது. இதன் பூதகுணம் அப்புத் தொடர்பான (மண்) பிருதிவியாம். இஃது ஆண் சாயலானதாம். இது ரசமாம். இஃது, இயற்கையில் நன்மையானதாம்.

**சந்திரன் :**—இஃது அதிகக் குளிர்ச்சியும் கொழுமையுமாம். இஃது (நீர்) அப்பு, இது பெண், இது வெள்ளியாம், இது தோற்றத்துக்கு நன்மையானது. இயற்கையில் நன்மையற்றது.

**இராகு :**—குளிர்ச்சியும் கொழுமையுமாம். இஃது அப்பின் குணமுடையதாம். இது பெண் ; இது தாளகமாம். இது மகா கொடியதாகும்.

**கேது :**—இது சூடும் வறட்சியுமாம்; இது தேயுவின் குணமுடையது. இஃது ஆணும்; இது நாகம், இது மகா கொடியது.

**குறிப்பு :**—மேற்கண்ட ராகு, கேது என்ற இரண்டு கிரகங்களும் ஏழு கிரகங்களுள் சேர்க்கப்பட்டவைகளாயினும் நவக்கிரகாலங்காரப்படி இங்கு எழுதப்பட்டது.

யூனானி மருத்துவர்கள் பூதம் நான்கெனச் சொல்லுகின்றார்கள். ஏனெனில், முந்தினதாகிய (வெளி) ஆகாயத்திற்கு உருவமில்லாதபடியாலும், அது மற்றெந்த பூதத்தோடு சேர்கிறதோ அதன் குணமேயன்றி அதற்கு வேறு சொந்தக் குணமில்லையாதலாலும் அதைப் பூதமன்றென வொழித்துப் பூதம் நான்கென்றே சொல்கின்றார்கள். ஆகையால், மேலே அவ்விதமே எழுதப்பட்டிருக்கின்றது.

மேற்கண்ட கருத்துகளை இலகுவாய்த் தெரிந்துகொள்ளும் பொருட்டு, இங்கு அட்டவணை வடிவமாகவும் எழுதுவோம்.

| கிரகங்கள் (கோள்கள்) | இயல்பான குணங்கள் | சாதி | பூதத்துவம் | உலோகங்க்ள் | தொழில் |
|---|---|---|---|---|---|
| சனி | அதிகக் குளிர்ச்சியும் அதிக வறட்சியும் | சிலரிடத்தில் ஆண் சிலரிடத்தில் அலி | பிருதிவி (மண்) | கருவங்கம் | மிகவும் நலமற்றது. |
| குரு | சமரசமான சூடும் குளிர்ச்சியும் | ஆண் | வாயு (வளி) | வெள்வங்கம் | மிக நலமுடையது. |
| செவ்வாய் | அதிகச் சூடும் அதிக வறட்சியும் | ஆண் | தேயு (தீ) | இரும்பு | சிறிதளவு நலமற்றது. |
| சூரியன் | சமரசமான சூடும் வறட்சியும் | ஆண் | வாயு தொடர்பான தேயு | தங்கம் | பார்வையில் நலமுடையது ; இயற்கையில் நலமற்றது. |
| சுக்கிரன் | சமரசமான குளிர்ச்சியும் கொழுமையும் | பெண் சாயல் | அப்பு தொடர்பான வாயு | தாமிரம் | சிறிதளவு நலமுடையது |
| புதன் | *சமரசமான குளிர்ச்சியும் வறட்சியும் | ஆண் சாயல் | அப்பு தொடர்பான பிருதிவி | இரசம் | இயற்கையில் நலமுடையது. |
| சந்திரன் | குளிர்ச்சியும் கொழுமையும் | பெண் | அப்பு | வெள்ளி | பார்வையில் நலமுடையது ; இயற்கையில் நலமற்றது. |
| இராகு | குளிர்ச்சியும் கொழுமையுமாம் | பெண் | அப்பு (நீர்) | † தாளகம் | மகா கொடியதாம். |
| கேது | சூடும் வறட்சியுமாம் | ஆண் | தேயு | நாகம் | மிகக் கொடியது. |

* ஆனால் இதில் வறட்சி அதிகரித்திருக்கிறது. இது எந்தக் கிரகத்துடன் சேர்கிறதோ அதன் தன்மையையே பெற்றுககொள்ளும் தன்மையுடையதாம்.

† இது சைதன்னிய பொருள்.

இந்த ஒன்பதில், சூரியன் சந்திரன் என்ற இரண்டும் பெரிய கோள்களென்றும், சனி, குரு, செவ்வாய், சுக்கிரன், புதன் என்ற இவை ஐந்தும் பலமான கிரகங்களென்றும், இராகு, கேது என்னும் இரண்டும் மிகக் கொடிய கோள்களென்றும் இரசவாத மருத்துவர் களால் சொல்லப்படுகின்றது.

இன்னும் இந்த மருத்துவர்களின் தீர்மானம் பின் வருமாறு: இரண்டு நல்லவர்களின் கூட்டுத் தீதாம். இரண்டு தீயவர்களின் கூட்டு நன்மையாம். இன்னும், நல்லவரும் தீயவரும் சேர்வது ஆரம்பத்தில் தீதாயினும் முடிவில் பொதுவாய் நன்மையாம். இவ்விதமே இரண்டு நல்லவர்கள் சேர்வது ஆரம்பத்தில் நன்மை யாயினும் முடிவில் சாதாரணமாய்த் தீமையாகும். இவற்றைச் சில எடுத்துக்காட்டுகளால் விளக்கிக் காட்டுவோம்.

(அ) சந்திரனும், குருவும் நல்ல கிரகங்களாம்; இவ்விரண் டையும் சேர்த்தால் ஆரம்பத்தில் நன்மையாகவும் முடிவில் தீமையாகவும் முடியும்.

அதாவது, (அ) சந்திரனுகிய வெள்ளியையும், குருவாகிய வெள்வங்கத்தையும் சேர்த்துருக்கினுல், இவ்விரண்டும் எளிதாய் உருகிச் சேர்ந்து கட்டியாய் விடுகின்றன. ஆகையால், இவை ஆரம்பத்தில் நன்மையாகக் காணப்படினும் முடிவில் தீதாய்க் காணப்படும்; ஏனெனில் இவை ஒன்றோடொன்று சம்பந்தப்பட்ட தனுல் வெள்ளியுமல்லாமல், வங்கமுமல்லாமல் இரண்டுங்கெட்டு விட்டன. இவ்விரண்டையும் சேர்ப்பது ஆரம்பத்தில் இலகுவாய் இருந்தாலும் இதனுல் பயன் உண்டாவது மிகவும் கடினமே.

சனியும், செவ்வாயும் நன்மையற்ற கோள்கள். இவ்விரண்டை யும் சேர்த்தால் ஆரம்பத்தில் தீமையாகவும் முடிவில் நன்மை யாகவும் இருக்கும்.

சனியாகிய கருவங்கம், செவ்வாயாகிய இரும்பு என்னும் இரண்டும் நன்மையற்றவைகள். இவ்விரண்டையும் சேர்த்தால் ஆரம்பத்தில் தீமையாயிருப்பினும் முடிவில் நன்மையுண்டாம்.

இராகுவாகிய தாளகம், புதனுகிய பாதரசம் என்ற இரண்டையும் சேர்த்தால் ஆரம்பத்தில் தீமையாயினும் முடிவில் நன்மையாம்.

கேதுவாகிய நாகம், சூரியனுகிய தங்கம் என்னும் இரண்டும் தீமையானவை. இவ்விரண்டையும் சேர்த்தால் ஆரம்பத்தில் தீமையாயிருப்பினும் முடிவில் நன்மையாம்.

சனியாகிய கருவங்கம், செவ்வாயாகிய அயம் என்னும் இரண்டுஞ் சேர்ந்த தீயவற்றின்கூட்டு, கேதுவாகிய நாகம், சூரியனாகிய தங்கம் என்னும் இரண்டும் சேர்ந்த தீயவற்றின்கூட்டு என்னும் ஆகிய இருவகை தீயமயமான சேர்மானங்களையும் ஒன்றாய்ச் சேர்த்தால் முடிவில் நன்மையாம்.

முடிவாய்ச் சொல்லில் ஆரம்பத்தில் தீமையானது முடிவில் நன்மையாக இருக்கும். இங்கு நன்மை என்பது இலேசிற்கும் தீமை என்பது துன்பத்திற்கும் பெயராம்,

சித்த ஆயுள்வேத இரசவாத மருத்துவர்கள் கருத்தாவது :— தேவதை, மனிதன், பறவை, முதலிய ஐவகை யோனிப் பிறப்புகள், புல், பூண்டு, கல் கரடு முதலிய எல்லாவற்றிற்கும் ஐந்து மூலப்பொருள்களின் தொகுப்பு இருப்பதுபோலவே இரசவாதத் தொழிலுக்கும் ஐந்து பொருள்கள் இன்றியமையாதனவாம்.

## உலோக பஞ்சபூதம்

தங்கமானது (மண்) பிருதிவியின் கூறும்; காரீயமானது (நீர்) அப்புவின் கூறும்; தாம்பிரமானது (நெருப்பு) தேயுவின் கூறும்; இரும்பானது (காற்று) வாயுவின் கூறும்; நாகமானது (வெளி) ஆகாசத்தின் கூறும்.

மருந்துகளுக்கு ஆகும் சரக்குகளையெல்லாம் சுருக்கமாய் மூன்று வகையாகப் பிரித்துக் கொள்ளப்படும்.

(1) கார வகைகள், இந்த வகையில் சேர்ந்தது சவுட்டுப்பு, அதாவது பூநீறு, மாவுப்பு முதலிய வகைகளாம். இதற்கு ஆங்கிலத்தில் (Alkalis) ஆல்கலிஸ் என்று பெயர்.

(2) சார வகைகள் இந்த வகையில் சேர்ந்தவை சுண்ணும்பு, படிக்காரம் முதலியவைகளாம்.

(3) உலோகங்கள் இந்த வகையில் சேர்ந்தவை, தங்கம், வெள்ளி, இரும்பு, தாமிரம், நாகம் முதலியவைகளாம்.

இவற்றுள் முதன்மையானது பூநீறேயாம். இந்த சொல்லானது பூநீரா? அல்லது பூநீறு? என்பதில் சந்தேகமுண்டு. ஏனெனில், பூநீர் என்பது பூமியின் குணம் அல்லது, பூமியின் தன்மை. அதாவது பூசாரம் என்று பொருளாகுமாகையால் பூநீரென்பதே சரியான தெ‌ன சிலரும்; பூசாரச் சுண்ணமெனக் குறிப்பிட்டு பூநீறு என்பதே சரியான சொல் எனச் சிலருஞ் சொல்கின்றார்கள். இவ்விரு சாரார்

2

கட்சியிலும் .பூநீர் என்பதே சரியானதென்பது பெரும்பாலோர் கருத்து. ஆனுல், இந்த உப்பைப் பக்குவப்படுத்தாதற்கு முன் பூநீர் என்பதும், இதைப் பக்குவப்படுத்திச் சுண்ணம் செய்த பின்பு பூநீறு என்பதே சரியானதாய்க் காணப்படுகிறது. ஏனெனில், இதன் பயன்பாடானது பற்பங்கள், செந்தூரங்கள், உலோக மாரணங்கள் முதலிய எல்லாவித முறைகவிலும் பயன்படுகின் றன. இதன் யோக முறைகள் ஒவ்வொருவராலும் அவரவர்கள் செய்முறையின்படி ஒவ்வொருவிதமாய்ச் சொல்லப்படினும், இங்கு பயிற்சியிலுள்ள சில முறைகளை விபரமாய் எழுதுவாம்.

பூநீர் என்பதைப் பக்குவப்படுத்துதலுக்கு புடமிடுதல் அல்லது, தூய்மை செய்தலென்றும் அவ்விதம் தூய்மை செய்ததற்கு அல்லது தூய்மைசெய்யப்பட்ட அந்தப் பொருளுடன் வேறு சில சரக்குகளைச் சேர்த்துச் செய்யப்பட்ட பாகத்திற்குக் கீழ்க்காணும் விதம் அநேகப் பெயர்களுண்டு. அந்த பெயர்களையும் ஒவ்வொரு வரும் ஒவ்வொருவிதம் சொல்கின்ருர்கள். ஆயினும், அவற்றுள் முக்கியமானவைகளை மாத்திரம் இங்கு எழுதுவோம்.

## பாகப்படுத்தின பூநீரின் பெயர்

(அ) 1. வழலை, இது ஒரு பெயராம்.

(ஆ) 1. அண்டம், 2. பிண்டம் இவை, இரண்டு பெயர்களாம்.

(இ) 1. இடைகலை, 2. பிங்கலை, 3. சுழிமுனை, இவை மூன்று பெயர்களாம்.

(ஈ) 1. அம்பு, 2. எரி, 3. பரிதி, 4. மதி, 5. வில் இவை ஐந்து பெயர்களாம்.

(உ) 1. அரிதாரம், 2. இடி, 3. இரண்ய கருப்பம், 4. இறையம், 5. கோசம், 6. கௌரி, 7. தனித்தியம் 8. அண்டம், 9. மேகம், (10) வாயு இவை பத்துப் பெயர்களாம்.

(ஊ) 1. அமுரி, 2. உரி, 3. உவர், 4. உவர்மண், 5. கடுக்காய், 6. சிகை, 7. சுண்ணம், 8. தசைநஞ்சு, 9. முக்குணஜல், 10. நஞ்சு, 11. நாதம், 12. பாடாணம், 13. பூமிநாதம், 14. வயிரம், 15. விந்து, 16. வெள்ளைக்கல் இவை பதினறு பெயர்களாம்.

(எ) 1. அடி, 2. அமாவாசை, 3. அரக்கி, 4. ஊனுப்பு 5. ஐம்பத்தொன்று, 6. கணபதி, 7. சும்பி, 8. கருநெல்லி, 9. கிரகம், 10. குயவன், 11. கொள்ளி, 12. நடு, 13. ஒன்பது மூலி,

14. நீருப்பு, 15. பிரதமை, 16. பூநீர், 17. மிதுனம், 18. முடி, 19. மேடம், 20. உப்பு, 21. வண்ணான், 22. குறும்பன், 23. விஷம், 24. வெடியுப்பு, 25. வெண்சாரை என்ற இவை இருபத்தைந்து பெயர்களாம்,

(ஏ) 1. அனுமி, 2. எழுபிறப்பு, 3. ஐவர், 4. ஓசை, 5. கண்மணி, 6. கதிர், 7. கமலம், 8. காமி, 9. குடிபோம்வீடு, 10. கூற்றன், 11. சாரி, 12. சிங்கி, 13. சுடர், 14. சுட்டல், 15. தான்தோன்றி, 16. கற்பூரம், 17. நாயகம், 18. நிலப்பூடு, 19. நீரன்னம், 20. பச்சை, 21. படிகம், 22. பண்ணை, 23. பரமன், 24. பீடையுப்பு, 25. கொழுப்பு, 26. பொட்டல் 27. மடையன், 28. மணற்பொடி, 29. மலம், 30. மவுனம், 31. மாசி, 32. முயல், 33. லிங்கம், 34. விஷ்ணு, 35. வெடி, 36. வெளி என்ற இவை முப்பத்தாறு பெயர்களாம்.

(ஐ) 1. நெருப்புக்கட்டி, 2. நெருப்பு, 3. இரும்பு, 4. அவுரி, 5. இந்திரகோபம், 6. இரசம், 7. இராசவர்க்கம், 8. உரம், 9. உருளை; 10. ஏகசவுக்காரம், 11. ஏமம், 12. ஒளி, 13. கடலிற்பாசி, 14. கண்டங்கத்திரி, 15. கண்ணாடி, 16. கந்தம், 17. கரடு, 18. கரந்தை, 19. கரும்பூனை, 20. கருவி, 21. களிச்சுண்ணம், 22. கனல், 23. கனல்மேலுப்பு, 24. கன்னி, 25. கன்மம், 26. காரீயம், 27. காவி, 28. குங்குமம், 29. குரு, 30. குருத்து 31. கொக்கு, 32. கொச்சி, 33. கொடி, 34. கொன்றை, 35. கோதை, 36. கோமயம், 37. கோரோசனை, 38. சங்கமம், 39. சங்கு, 40. சந்நியாசிமண்டை, 41. சமாதி, 42. சரபீசம், 43. சர்ப்பம், 44. சாளக்கிராமம் 45. சிங்கு, 46. சுக்கான், 47. சுத்தம், 48. சூக்மம், 49. சூலம், 50. சொறி, 51. சோடசம், 52. சோதி, 53. சோமநாதம், 54. தலைப்பிள்ளை, 55. தாது, 56. திருமேனி, 57. துத்தி, 58. துருசு, 59. தூலம், 60. தேர்க்கால், 61. தொட்டி, 62. நண்டோடு, 63. நந்தி, 64. நாகம், 65. நிலவுப்பு, 66. பஞ்சமித்திரம், 67. படலம், 68. பரம், 69. பரி, 70. பாலைநிலம், 71. புத்தான், 72. புரியட்டம், 73. புனுகு, 74. பூரம், 75. பூர்ணம், 76. பொன்னூமத்தைவித்து, 77. மகரம், 78. மதனப்பூண்டு, 79. மதி, 80. மந்திரம், 81. மலைருது, 82. மின், 83. மீனம், 84. முட்டை, 85. மூத்தான், 86. யானைக்கல், 87. சூரியன் 88. வங்கு, 89. வலியான், 90. வள்ளி, 91. வாசி, 92. வியாக்கிரம், 93. மரம், 94. வெண்கண்டர், 95. வெண்காரம், 96. வெள்ளையாவரை என்ற இவை தொண்ணூற்றாறு பெயர்களாம்.

பாகப்படுத்தப்பட்ட இந்த பூநீருக்கு 125 மறு பெயர்களு முண்டு. இவையெல்லாம் கூடிய தொகை 319 பெயர்களென ஒரு திட்டமாய்ச் சொல்லலாம்: அதன் விபரம். 1 – 2 – 3 – 5 – 10– 16 – 25 – 36 – 96 – 125 என்ற இந்தப் பத்து இனங்களையும் ஒன்ருய்க் கூட்டினுல் கூடினமொத்தம் 319 ஆகும். ஆகையால், பெரும்பாலோர் ஒருவாருக 319 பெயர்கள் என குறிப்பாய்ச் சொன்னுலும் சிலர் ஆயிரம் பெயர்களுண்டென்றும் கூறுகின் ருர்கள். இன்னம், இந்தப் பாகத்தைத்தான் முப்பு அல்லது, முப்பூ என்று சொல்லுகிருர்கள். முப்பு = பழைய உப்பு, ஆதியுப்பு எனவும் அல்லது, மூவகை உப்பு எனவும்; முப்பூ = மூவகைப்பூ எனவும் பொருள்படும். முப்பூவென்பதைப்பற்றி மாந்திரீக நூல் வல்லுநர்கள், ஞானநூல் வல்லுநர்கள் முதலிய ஒவ்வொருவகை வல்லுநர்களும் தங்கள் தங்கள் நூல்களின் மறைமொழி சார்பாக ஒவ்வொருவகையாய் உருவக அலங்காரமாகச் சொல்லியிருக்கின் ருர்கள். மேலும், வேறு சிலர் நாட்டுமொழியாகவும், சிலர் எண் மொழியாகவும், சிலர் எழுத்து மொழியாகவும் சொல்லியிருக்கின் ருர்களாகையால், அவற்றையெல்லாம் நாம் தெரிந்துகொள்ளவுங் கூடாது. அதனுல், இங்கு அவ்வளவாய்ப் பயனும் உண்டாகா தாகையால் அவ்வகை மறைமொழி, உருவக அலங்காரங்கள் முதலியவைகளை யொழித்து யாவரும் இலகுவாய்த் தெரிந்து கொள்ளும் வகைகளையும், எப்போதும் பயன்படும் முறைகளையும் பலரால் பல தடவைகள் அனுபவமான வகைகளையும் எழுதுவோம்.

இவ்விதம் இந்தப் பூநீருக்கு அல்லது, இதன் பக்குவ முறை களுக்குத் தக்கவிதமாய்ப் பற்பல பெயர்களிடப்பட்டிருக்கின்றன. நன்ருய்ச் சிந்தித்தால் பொருள் ஒன்றேயாயினும் அதன் வயது, குணம், முதலியவைகளுக்கேற்ருற்போல் அப்போதைக்கப்போது பெயரிடப்படுவது போலாயிருக்கிறது, எப்படியெனில், நீர்வடிவ மான தாது(இந்திரியம்) இரத்தம் (சோணிதம்) என்னும் இரண்டும் தனித்திருக்கும்போது மேற்கண்டபடி தனித்தனிப் பெயருண்டா யிற்று. பின்னர், இவ்விரண்டும் சேர்ந்தவுடன் வேறு தன்மையு முண்டாகி கருவெனவும், பின்னர்ப் பிண்டமெனவும், பின்னர்த் தாதுக்களான இரத்தம், தசை, மூளை, தோல், நரம்பு முதலியவை களெனவும், பின்னர்ச் சிசுவெனவும், பின்னர் சிறுவரெனவும், பின்னர் வயதிற்குத் தக்கபடி பேதை, பெதும்பை, மங்கை மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்ணெனவும், பின்னர், உடல் அழகுக்குத் தக்கபடி மீனுட்சி, விசாலாட்சி முதலிய பெயர்களும் பின்னர்க் கல்யாணமில்லாதபோது கன்னியென்றும்,

கல்யாணமான பின்பு சுமங்கலியென்றும், பிள்ளையுண்டானபோது கருப்பவதியென்றும், பிள்ளை பெற்றபின் தாயென்றும், பிள்ளைக் குப் பிள்ளையுண்டானால் பாட்டியென்றும் இவ்விதம் இத்தனை மாறுதல்களைப் பெற்றுப் பற்பல பெயர்களையடைவது போலவே யாம்.

பூநீர் என்னும் ஒரு பொருளிலேயே மேற்கண்ட பற்பல பெயர்களிடப்பட்ட பலபல பொருள்களைப் பிரித்துக் காண்பிக்கும் முறை தெரிந்தவர்கள் அநேகரிருக்கின்றார்கள். அம் முறைகளை எல்லாம் இங்கெழுதிப் படிப்பதால் மாத்திரம் தெரிந்துகொள்ளக் கூடாது. மேலும், கைப்பழக்கமும் பயிற்சி முதிர்வும் முக்கியமான வையாகையால், தொட்டுக் காட்டவேண்டியது இன்றியமை யாதது. மேலும், இம் முறைகளை ஒவ்வொருவரும் தங்களுக்குப் பயிற்சியான ஒவ்வொரு வகையாய்ச் சொல்கின்றார்கள். ஆகையால், ,இந்த வழியில் தலையிட்டுக் கொள்ளாமல் சாதாரண மானவைகளும் எல்லாவித மருந்துகளுக்கும் பயன்படக்கூடி யனவுமான சுருக்கமான முறைகளை இங்கெழுதுவோம்.

## பூநீர் எடுக்கும் விதம்

தை, மாசி,. பங்குனி, சித்திரையாகிய மாதங்களில் தசமியில் (அமாவாசை கழிந்த பத்தாம் நாள்) எடுக்க ஆரம்பிக்கவேண்டும். அன்று முதல் ஒரு வாரம் எடுக்கலாம். இரவில் மூன்று மணி முதல் சூரியோதயம் வரையில் எடுக்கலாம். உடல் தூய்மை ஆடைத் தூய்மை எல்லாவற்றிகும் மேலாக மனத்தூய்மையோடு, பேராசையை ஒழித்துப் பிறர்க்கு உதவுவதாகிய நல்லெண்ணத் துடன் இருக்கவேண்டும். பூநீருள்ள பூமியானது செம்மண் பூமியானல் சிறப்புடையது. இந்தப் பூக்கள் அன்று பூத்திருப்பது நட்சத்திரங்களைப் போலப் பளபளவென்று ஒளி வீசிக்கொண்டிருக் கும். அவ்விதப் பூக்களாகப் பொறுக்கி, பீங்கான் பாத்திரத்தில் சேகரித்துப் பொழுதுவிடிந்தவுடன், செத்தை குப்பை முதலிய வைகளைப் பொறுக்கி நீக்கித் தூய்மைசெய்து வாயகன்ற குப்பியில் போட்டு வாய்க்கு மூடிபோடவேண்டியது. இவ்விதமே நாள் தோறும் சேகரித்துத் தனக்கு வேண்டிய அளவு எடுத்து, இனிப் பின் சொல்லப்படும் முறைப்படி செய்யவேண்டும். இந்தப் பூக்களை நீர்வடிவமாகச் செய்தும் பயன்படுத்தலாம். இவ்விதஞ் செய்வது முந்தின முறையைப் பார்க்கிலும் சிறப்பானதேயாம்.

## பூநீரை நீராக்குதல்

மேற்கண்டபடி எடுத்த பூநீரை அன்றுடம் உடனே ஒரு கண்ணுடிக் குப்பியில் போட்டு வாய்க்கு மூடியிட்டுச் சூரியோதயம் முதல் வெய்யிலில் வைத்து வர, அஃது உருகிநிற்கும். அந்தக் குப்பியை அடிக்கடி நன்ருய்க் குலுக்கியும் வரவேண்டும். பூவெல்லாம் பாக்கியில்லாமற் கரைந்துவிட்டால் அதை மெல்லிய துணியால் வடித்து வேறு குப்பியில் வார்த்துக் கொள்ளவேண்டும். மறுநாள் எடுக்கும் பூவையும் இவ்விதமே அன்றே செய்துகொள்ள வேண்டும்.

**குறிப்பு:** இந்தப் பூவானது குப்பியில் முக்காற் பாகந்தான் இருக்கவேண்டும். அதற்கதிகமிருந்தால் குப்பி வெடிக்க ஏதுவா கும். இன்னம், குப்பியை வெய்யிலில் வைத்திருக்கும்போது கவனமாய் இருக்கவேண்டும். அதனுல், குப்பிகள் சில சமயம் வெடித்துப் போவதுமுண்டு. ஆகையால், அந்த குப்பிகளை அகன்ற பீங்கான்களில் வைப்பதனுல் ஒருவேளை அந்தக் குப்பி உடைந் தாலும் அதிலுள்ள சரக்குச் சேதமாகாமலிருக்குமென்பதாம்.

## அமுரி

இதனைச் சிலர் பனிநீர் என்றும், சிலர் கடல்நீர் என்றும், சிலர் சிறுநீர் என்றும், சிலர் காடியென்றும், சொல்கின்றுர்கள். முடிவாய்ப் பார்த்தால் இந்நான்கின் முறைகளுமிருக்கின்றன. இதில் இன்னதுதான் சிறந்தது என்றும், இன்னதுதான் தாழ்ந்த தென்றும் சொல்வது கூடாமையாம். ஏனெனில், இவற்றுள் ஒவ் வொன்றும் அதனதன் குணத்தில் மேலானதாகக் காணப்படுகிறது என்பதே காரணமாம்.

## பனிநீர் சேகரிக்கும் விதம்

கேழ்வரகுப் பயிரில் பனிக்காலங்களில் இரவில் சுத்தமான மெல்லிய சல்லாக்களை விரித்து வைத்துக் காலையில் அவற்றை எடுத்துப் பீங்கான் பாத்திரத்திற் பிழிந்து ஒருநாள் வைத்து மறுநாள் வேறு பாத்திரத்தில் வடித்து மூடியிட்டு வைத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் தேவையான நீர் சேர்த்துக் கீழ்க் காணும் விதம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

நெற்பயிர், புல், மரம், செடி முதலியவைகளின் மீதினின்றும் சேகரித்துக்கொள்ளலாம்.

அழுகின பொருள்கள், சதுப்புநிலம், கள்ளி முதலியவைகளின் மீது, அல்லது அதற்கு அண்மையிலுள்ள பொருள்களின் மீதுள்ள பனிநீர் ஆகாது.

ஆதியில் தமிழ், உருது, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் உள்ள மருத்துவ நூல்களில் நீரானது ஒரே மூலப்பொருளெனச் சொல்லப் பட்டிருந்தது; ஆனால், நூல் பெருக்கினால், நீரானது பல மூலப் பொருள்களைச் சேர்ந்த பொருள் என்று இப்போது நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. எல்லாவிதப் பொருள்களிலும் நீர் இருக்கிறது. ஆகாயத்தில் நீர், காற்று வடிவமாகவும், மேக வடிவமாகவும் இருக்கின்றது. காற்றைப்போலவே நீர் கண்ணுக்குத் தோற்றாது. அது தளமாகிக் கண்ணுக்குத் தோற்றுவதைத்தான் பனி பெய்கிற தெனச் சொல்லுகின்றோம். அதிகக் குளிர்ச்சிமிகுந்த நாடுகளில் நீர் உறைந்து கட்டியாயிருப்பதைப் பனிக்கட்டியென்பது வழக்கம். நீரில் அதிக குற்றங்களிருக்கின்றன. ஆனால், அஃது இருக்கும் இடங்களுக்குத் தக்கவிதமாய் அதிலுள்ள குற்றங்களும் அதிக மாகவும் குறைவாகவும் மாறுபட்டுக் காணப்படும். நீரில் கிருமி கள், சேறு, சுண்ணும்பு, பாசி, காரங்கள், சாரங்கள் முதலிய குற்றங்கள் எவ்வளவாக இருக்கின்றனவோ, அவ்வளவாய்ப் பனி நீரில் கிடையா. ஆகையாற்றான், பூநீர் முதலியவைகளின் தூய்மைக்காகப் பனிநீர் அதிகமாய் உபயோகப்படுத்தப்படுகிறது. இன்னம், இதிலுள்ள குற்றங்களை நீக்கி தூய்மை செய்வதற்காகவும் அதன் குணத்தை விருத்தி செய்வதற்காகவும், பனிநீரும் பக்குவப் படுத்தப்படுகிறது. பனிநீர்ப் பக்குவம் பின் வருகிறவிதமாம்.

## பனிநீர்ப் பக்குவம்

முன் சொன்னபடி சேகரிக்கப்பட்ட பனிநீர் 8 படி. நன்றாய் வெந்த கற்சுண்ணும்பு 1 படி. கற்சுண்ணத்தை வாய்குறுகின ஒரு குப்பியிலிட்டு மேற்படி பனிநீரில் சுமார், $\frac{1}{4}$ அல்லது $\frac{1}{2}$ படி குப்பியில் ஊற்றி. உடனே அதன் வாயை மூடிவைக்கவேண்டும் சுண்ணும்பில் நீர் விழுந்து பாத்திரத்தின் வாய் மூடப்பட்டவுடன் ஒருவித ஒலி உண்டாகும்; அந்த ஒலி முற்றும் அடங்குகிறவரையில் நிதானித் துப் பின்பு, மற்ற பனிநீரையும் அதில் ஊற்றி, ஒரு மூங்கில் தடியால் நன்றாய்க் கலக்கிப் பாத்திரத்தின் வாயை மூடி வைக்க வேண்டும். மறுநாள் காலையிலும் முன் செய்ததுபோலவே மூங்கில் தடியால் நன்றாய்க் கலக்கி மூடிவைக்க வேண்டும். இவ்வண்ணமே மூன்றும் நாளும் செய்து வைத்து, நாலாம் நாள் நீர் கலங்காமல் மேலுக்குமேலாய்த் தெளிவையிறுத்துக் குப்பிகளில் நிறைத்து

மூடியிட்டு வைத்துக்கொள்ளவேண்டும். இவ்விதம் தேவையான நீரைச் சேகரித்துப் பின்வருகிறபடி சாரமேற்றி வைத்துக் கொள்ளவும் வேண்டும்.

## சார மேற்றல்

முன் சித்தப்படுத்தின பனிநீரை வாயகன்று அரையடி உயர முள்ள பீங்கான் பாத்திரங்களில் ததும்பும்படியாக நிறையவிட்டு பௌர்ணமியில் இரா முழுவதும் சந்திரனொளி படும்படியாக வைத்துக் காலையிற் பார்த்தால், நீரின்மீது பாலேடுபோல் ஒரு வகைப் பொருள் படர்ந்திருக்கும். அதைப் பனையோலைத் துண்டால் மெதுவாய் நீக்கிவிடவேண்டும். பின்பு, அதை மண், தூசு முதலியவைகள் விழாதபடி கவனமாய்ப் பகலில் மூடிவைக்க வேண்டும். மறுநாள் இரவுமுழுவதும் சந்திரனொளிக்கெதிரில் வைத்து. அந்தக் காலையிலும் அதன்மேல் படர்ந்து நிற்கும் மாசை எடுத்து நீக்கவேண்டும். இவ்விதம் தொடர்ச்சியாய் ஐந்து நாள்கள் செய்யவேண்டும். இக் காலத்திற்குள் மேற்கண்டபடி மாசு படராதிருந்தால், தூய்மையாகிவிட்டதென நிதானித்துக் கொள்ளவேண்டும். அப்படி இல்லாவிட்டால், மறு பௌர்ணமி முதல் ஆரம்பித்து முன்போல ஐந்து நாள்கள் செய்யவேண்டும். இவ்விதம் அந்த நீரின்மீது ஏடுபடராமல் தூய்மையாகும் வரையில் செய்யவேண்டும். இது சில சமயங்களில் 4 அல்லது, 5 தடவைகளில் தூய்மையாகிவிடும். சில சமயம் 20 அல்லது, 25 தடவைகள் செய்வதுமுண்டு. இது, செய்யப்படும் காலத்தையும், செய்பவர்களின் ஆற்றலையும் பொறுத்தது. இதில் மழைநீர், வேறு நீர், மண், தூசி முதலியவைகள் விழாதபடி கவனமாய் இருக்கவேண்டும். அப்படியேதேனும் விழுந்தால், அதன் குணம் மாறுபடும். இவ்விதம் தூய்மை செய்யப்பட்ட நீருக்கே அமுரி யெனச் சொல்லப்படுகிறது. இன்னம், இதனையே சிலர் தூய்மை யான நீர் தூய்மையான கங்கை என்கிறார்கள்.

**அறிக்கை** :— தூய்மையான நீர் அல்லது தூய கங்கை யென்பது, பனிநீரும் அன்று; கடல் நீருமன்று; சிறுநீருமன்று; காடியுமன்று என்பதேமகான்களின் கருத்து. தூய கங்கையைப் பிரிப்பதுசுலபமானகாரியமன்று. அறிவாளிகள் அம்முறை தெரிந்த மகான்களையடுத்து அவர்களுக்குத் தொண்டுசெய்து வருவதால், அவர்களின் உள்ளங் கனிந்து அம்முறையை அருள்புரியவேண்டும். அப்படி இல்லாதவரையில் ஒருபோதும் அது நிறைவேறாது. அந்தத் தூய கங்கையைச். சந்திரப் புடமிடுதல், சூரியப் புடமிடுதல், தீயிற் புடமிடுதல் என்ற மூவகையாய்ப் பிரிப்பார்கள்.

## சந்திரப் புடமிடுதல் (தீட்சை)

மேற்சொல்லப்பட்ட தாது விந்து என்ற இரண்டையும் சேர்த்துச் சந்திரனொளியில், அதாவது நிலாவில் பாகப்படுத்தி வரும்போது ஒருவகைக் கங்கையுண்டாம். இதுவே தூயகங்கை யாகும். பல நூல்களும் தூயகங்கையென முறையிடுவதும் இதுவேயாம். இதுவே பெரியோர்களின் கருத்துமாகும். இதன் உண்மையை அறிவாளிகள் தெரிந்துகொள்வார்கள்.

## சூரியப் புடமிடுதல் (தீட்சை)

மேற் சொல்லப்பட்ட தாது, விந்து இரண்டையும் சேர்த்துச் சூரியனொளியில், அதாவது வெய்யிலில் பாகம் செய்து வரும்போது ஒருவகைக் கங்கையுண்டாகும். இதற்கும் தூய கங்கையென்றே பெயராம். இந்தப் பாகமும் தெரிந்த மகான்கள் உள்ளங் கனிந்தருளத் தெள்ளிதாய் விளங்கும்.

## தீயிற் புடமிடுதல் (தீட்சை)

மேற்கண்ட தாது, விந்து என்னும் இரண்டையும் நெருப்பின்மூலமாய்ப் பாகப்படுத்தும்போதும் ஐவகை நிறங்களும் தோன்றிப் பின்பவையொழிந்து, தூய படிகம் போன்ற ஒரு வகைக் கங்கை பிரிவதுண்டு. அதற்கும் தூயகங்கை என்றே பெயர். ஆனல், இந்த முறையை அருகிலிருந்து கண்குத்திப் பாம்பைப்போல உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாலும் ஒரு போதும் தெரிந்துகொள்ள முடியாது. இதில் மிக ஆற்றலோடு கூடிய கைப்புரட்டுண்டு; ஆகையால், தெரிந்தவர்கள் உள்ளங் கனிந்து முழுமனத்துடன் கற்பிக்கவேண்டும். அப்படியின்றேல் அதிலொரு சிறிதும் அறிந்துகொள்வதருமையேயாகும்.

இன்னம், இவ்விதம் சந்திரன், சூரியன், தீயென்னும் மூன்று வித உப்பையும் நீராக்கிச் சேர்த்துக் கங்கை முடிப்பதுமுண்டு. இவ்விதம் முடித்த கங்கையைத்தான் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் எனச் சொல்வதுமுண்டு.

மேற்கண்ட கங்கைகளை முடித்து வைத்திருந்தால் ஒளிவீசக் கூடிய உப்புக் கம்பிகளுண்டாகும். இந்த உப்பைத்தான் நீர் என்றும், இந்த நீரைத்தான் உப்பு என்றும் சொல்வார்கள்.

இன்னம், இந்த நீரானது நீர்வடிவமாயிருக்கும்போது தாது என்றும், இஃது உரைந்தபோது உப்பென்றும், இந்த உப்பே முன் நீர்வடிவமாக இருந்தபடியால் இதனையே விந்துவென்றும்

சொல்வார்கள். இவ்விதம் ஓர் உப்பே உடலாகவும் அந்த உப்பே உயிராகவும் இருக்கிறது. முன்சொன்னபடி மூன்று வகைக் கங்கைகளையும் சேர்த்துண்டான உப்பைப் பக்குவப்படுத்துவதைத்தான் பத்துப்புடம்; அல்லது, பத்துத் தோற்றம் எனச் சிலர் சொல்கின்றார்கள். இதன் கருத்தை அறிவாளிகளை அடுத்தடங்கி அடிபணிந்தவர்கள் உள்ளம் கனிந்தருளப்பெற்றுக் கொள்ளவேண்டும்.

இஃது இங்ஙனமிருக்க, வேறு சிலர் பலவகை நீர்களைப் பிரித்து அதினின்றும் தூயகங்கையெனப் பிரித்துச் சொல்வதுமுண்டு. அங்ஙனம் உருப்படுவது அருமை, மேற்கண்ட கருத்தை அறியாமல் தான் பற்பல நூல்களின் கருத்துகளை மாறுபட பொருள்படுத்திச் சுட்டுக்கெட்டு ஏழ்மை நிலையை அடைந்து விடுகின்றார்கள் என்பது சிலர் கருத்து.

மேற்கண்டபடி சூரியபுடம், நிலாப்புடம், தீப்புடம் என்ற மூவகையாக இருக்கின்றபடியாலும், தூரொன்று பிரிப்புகோடி ஆகையாலும், ஒவ்வொருவரும் தாம்தாம் கொண்ட கருத்தையே மேன்மையாகக் கருதி நிலைநிறுத்திப் பிறர் கருத்தை ஏற்காமல் மறுத்து வாதாடி நிற்பார்கள். இவ்வகை வீண் வாதங்களாலுண்டாகும் பயன் ஏதுமேயில்லை. ஆனால், அவ்வித வீண்வாதங்களை ஒழித்து, அறிவாளிகளை அடுத்து அனுபவம் நிறைவேறப் பெற்றால் எவ்வித நிறைவேறுதலும் உண்டாம் என்பதே பெரும்பாலோர்களின் கருத்து.

நாம் இங்கு இவ்விதம் சொல்லவந்ததெல்லாம் ஒரு நூலை எழுதும்போது ஆங்காங்கு நேரிடும் பற்பல கருத்துகளையும் மாறுபட்ட உண்மைகளையும் எடுத்துக் காட்டுவதால், அறிவாளிகள் அக்கருத்துகளைச் சீர்தூக்கி, தத்தம் அறிவிற்கெட்டியவரையில் அதனதன் உண்மையை அறிந்துகொள்ளக் கூடுமென்பதே அடியேன் கருத்தாகும்.

பனிநீரைத் தூய்மைசெய்யும் வகையையும் அதைச் சார மேற்றும் வகையையும் முன் சொன்னோம். அதற்கடுத்தது கடல் நீர் முதலியவைகளின் தூய்மைமுறை முதலியவைகளைச் சொல்வாம்.

## கடல் நீர்

இந்த நீரில் அநேகவிதப் பொருள்கள் கலந்திருக்கின்றன. முக்கியமாய்க் காந்த மண்சத்து, சவட்டுப்புச் சத்து, சுண்ணும்புச் சத்து என்ற இவை கலந்த உப்புகளும், கடற்பாசியுப்பு

(Iodine), உவருப்பு (Bromine) என்ற பொருள்களும் இருக்கின்றன. கடல்நீரில் தங்கமிருக்கிறதாகச் சில நூல் வல்லோர் கண்டிருக்கின்றார்களாம். ஏழாயிரம் காலன் கடல் நீரில் ஒரு வராகன் எடை (11 கிராம்) தங்கம் எடுத்திருக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதை இங்கு சொன்னதன் கருத்தாவது, கடல்நீரில் ஏதோ ஒரு சிறப்பான குணமிருப்பதாற்றான் பூநீர் பாகத்தில் சேர்க்கப்படுகிறது என்பதற்கேயாம். அமுரி என்பது சிறுநீர்; சமுத்திரமானது அகத்தியர் சிறுநீரெனப்படுவதால், அதற்குத்தான் அமுரியெனப்படுகிறதென்பது சிலர் கருத்து. அஃது எப்படியாயினுமாகுக. கடல்நீர்த் தொடர்பான பூநீர்ப் பாகம் சொல்லப்பட்டும் செய்யப்பட்டும் இருப்பதே நமக்கு வேண்டிய சான்றுகளாம்.

**குறிப்பு:—** கடல்நீரில் இரசச்சத்தும் உண்டென்பது மகான்கள் கண்டறிந்த உண்மை.

## கடல்நீர்த் தூய்மை

இதை ஒரு பாத்திரத்தில் ஊற்றி அசையாமல் 3 அல்லது, 4 நாள்கள் வைத்து, அடுத்தநாள் கலங்காமல் மெதுவாக இறுத்து உரத்த துணியால் வடிகட்டிக்கொள்வதே சமுத்திர நீரைத் தூய்மை செய்தலாம். ஆனால், சிலர் இவ்விதம் தூய்மை செய்ய பட்ட சமுத்திர நீரைச் சந்திரனொளியில் வைத்து முன் சொல்லியிருக்கிறபடி சாரமேற்றித் தூய்மைசெய்தும் பயன்படுத்துகின்றார்கள்.

கடல் நீருக்குப் பெருநீர், முந்நீர், ஊழிநீர் எனப் பல பெயர்களுமுண்டு.

## சிறுநீர்

சிறுநீர் என்பது இன்னதென்பது எல்லோருக்கும் தெரிந்த செய்தியே. ஆனால், அதிலுள்ள பொருள்களைத்தெரிந்து கொள்வது முக்கியம். சிறுநீரில் (மூத்திரம்) அநேகவகை பொருள்களடங்கி இருப்பினும் இரசவாதப் ஆராய்ச்சியால் கண்டு நிச்சயிக்கப் பட்டவைகளுள் முக்கியமானவைகளாவன :

கோழை (குளிர்ச்சி) 3 பங்கும், அமுரிப்புளிப்பு 4 பங்கும், அமுரியுப்பு 5 பங்கும், கிரியாதியுப்பு 6 பங்கும், வருணகாரி பொருள்கள் 7 பங்கும், பரியுப்பு 8 பங்கும், கந்தகப் புளிப்பு

9 பங்கும், கறியுப்புச் சுமார் 10 பங்கும், காந்தச் சத்து 11 பங்கும், தீமுறுகற்சத்து $11\frac{3}{4}$ பங்கும், சுண்ணும்பு 12 பங்கும், சவுட்டுப்புச் சத்து 13 பங்கும் அடங்கியிருக்கின்றன என்பதே.

சிறுநீரில் இயல்பாகவே மேற்கண்ட பல பொருள்களிருப்பதால், அதைப் பூநீர் தொடர்பான முறைகளுடன் சேர்த்துப் பாகப்படுத்திப் பல சரக்குகளின் கட்டு, பற்பம், செந்தூரம், முதலியவைகள் செய்யப்படுகின்றன. ஆனுல், மேற்கண்ட பொருள்கள் ஆட்களின் வயதிற்கும், அவர்களின் ஆகாரத்திற்கும் அவரவர்களின் உடலின் இயல்புக்குத் தக்கபடி வேறுபடும். ஆகையால், அந்தந்த முறைக்கு ஏற்றவிதமாகவும், பொருந்தும்படியும் ஒன்று அல்லது, பல மூலிகைகளை அல்லது, சரக்குகளை அருந்துவதற்குப் பழகி, அவர்களின் சிறுநீரினுல் அந்தந்தப் பாகங்களைச் செய்து முடிப்பதுமுண்டு. பெரும்பான்மை இப்பூநீர் பாகங்களுக்காக உலக இயல்பில் உள்பட்டவர்கள் பலவகையான உணவு வகைகளை உண்பவர்கள் முதலாயினேரின் சிறுநீராகாது. இதற்காகவே முக்கியமாய்ப் பாலன்னம்கொள்ளும் சிறுவர்களின் அல்லது, ஏழெட்டு வயதிற்குட்பட்ட சிறுவர்களின் நீரே சிறந்ததாம்.

## சிறுநீர்த் தூய்மை

சிறுநீரின் தூய்மையானது பலவகையாம். அவற்றுள் முக்கியமானதும் சிறந்ததும் பின்வருகிறவிதமாம்.

மேற்கண்ட வகைப்படி சேகரித்த சிறுநீரை வாலையிலிட்டு மெதுவாக எரித்துத் தீய்ந்துபோகாமல் பதமாகத் திராவகமாய் இறக்கிக்கொள்வதேயாம்.

## காடி நீர்

காடியென்பது புளித்த நீராகாரத்திற்குப் பொதுவாய்ச் சொல்லப்படுகிறது. ஆனுல், அநேகவிதக் காடிகளுண்டு. எல்லா விதப் பண்டங்களிலும் காடி செய்யக்கூடும். ஆனுல், இங்கு வேண்டிய முறை பின்வருகிறவிதமாம்.

ஒரு படி பச்சையரிசியை ஆற்றுநீர் விட்டு 6 அல்லது, 7 தடவைகள் களைந்து தூயதாக்கிச் சமையல் பாத்திரத்திலிட்டு அதில், ஆற்றுநீர் அரிசியின்மேல் நாலங்குலம் நிற்கும்படி ஊற்றி, அடுப்பேற்றிப் பாகப்படிப் பொங்கிப் பக்குவமாய்ச் சமைத்துச் சூட்டுடன் இருபதுபடி நீரிற்போட்டு மூன்று நாள் வெய்யிலில்

மூடிவைத்து, நாலாம் நாள் எடுத்து நன்ருய்ப் பிசைந்து, அந்த நீரை வடிகட்டிக்கொள்ளவேண்டும். பின்னர், இந்த நீர் கொள்ளும் படியான நான்கு பெரும்பானைகளைத் தயாரித்துத் தூய்மை செய்து வைத்துக்கொள்ளவும். முன் தயாரித்த நீரை முன் கூறிய பாண்டங்களிலொன்றில் ஊற்றி, வாய்க்கு வேடுகட்டி வெய்யி லில் வைக்கவேண்டும். மறுநாள் மறுபாண்டத்தில் ஊற்றி, வாய்க்கு வேடுகட்டி முன்போலவே வெய்யிலில் வைக்கவேண்டும். முன்னாள் நீரை வார்த்து வைத்திருந்த பாண்டத்தை வெய்யிலில் ஈரம்வற்ற உலர்த்தவேண்டும். மூன்ரும் நாள் மூன்ரும் பாண்டத் தில் வார்த்து முன்போலவே வாய்க்கு வேடுகட்டி வெய்யிலில் வைத்து, நீரிருந்த பாண்டத்தையும் வெய்யிலில் உலரவைக்க வேண்டும். நான்காம் நாள் மேற்கண்டபடியே செய்யவேண்டும். ஐந்தாம் நாள் முன்னுலர்த்திய முதற் பாண்டத்தில் ஊற்றி வெய்யிலில் முன்போல் வைக்கவேண்டும். இவ்விதமே ஒவ்வொரு பாண்டமாக மாற்றி மாற்றி ஊற்றியூற்றி வெய்யிலில் வைத்து வரவேண்டும். அப்போதைக்கப்போது அந்தந்தப் பண்டங்களையும் வெய்யிலில் வைத்துக் கொஞ்சமும் ஈரமில்லாமல் உலர்த்தி வர வேண்டும். இவ்விதம் 40 நாள்கள் செய்து கண்ணுடிக் குப்பிகளில் அடைத்து மூடியிட்டு, ஆறு மாதம் வைத்திருந்து பின்பெடுத்து உபயோகிக்க வேண்டும். இதில் ஆரம்பத்தில் கொஞ்சம் கற் சுண்ணம் சேர்ப்பதனுல், புழு முதலியவை உண்டாகா. இவ்விதம் தேவையான அளவு சித்தப்படுத்தி பூநீர் தூய்மைசெய்தல் முதலிய பாகங்களில் பயன்படுத்தவேண்டும்.

## வேறு முறை

வெண்மையான அரிசி 2 படி, இதனைத் தவிடு முதலியவை இல்லாமல் தூய்மைப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும். முள்ளங்கி இலை 1 வீசை (1400 கிராம்) இவ்விரண்டையும் சேர்த்து உரலில் நன்ருயிடித்து, 24 அல்லது 30 படி நீர் கொள்ளும்படியான ஒரு பெரிய மண்பாண்டத்தில் இட்டு, அதில் 12 படி நீர்விட்டு பாண்டத்தின் வாயை ஒரு *சாணக்கியால் மூடி, சுண்ணும்பு நீரில் பாலைவிட்டுக் குழைத்து, வாய்ப்பகுதியை துணியால் கட்டி, செந்தூர அடுப்பில் அதாவது, பெரிய அடுப்பின்மேல் வைத்துக் கீழே தீ போடவேண்டும். இந்தத் தீயானது அதிகமாகவும் இருக்க லாகாது. அல்லது தீயைக் கொஞ்சநேரம் நிறுத்தவும் கூடாது. விளக்கின் சுடர்போல சிறு தீயால் இரவு பகல் ஓயாமல் ஏழு நாள்கள் எரித்து எட்டாம் நாள் தீயை நிறுத்தி, மறுநாள் பிரித்துப் பாண்டத்திலுள்ள நீரை மாத்திரம் இறுத்து உரத்த

* மண்ணுல் செய்த தட்டு.

துணியில் வடிகட்டிக் குப்பிகளில் நிறைத்து, மூடியிட்டு வைத்து நான்கு அல்லது, ஆறு மாதங்களுக்குப் பின் பயன்படுத்தலாம். முன்னே கூறிய பாண்டத்தில் முன்போலவே நீர் மாத்திரம் விட்டு முன்போல வாய்ப்புறத்தை துணியால் மூடி முன்போலவே எரித்து நீரை இறுத்துக் கொள்ளலாம். இதுவும் காடியாகவே இருக்கும். இவ்விதம் அந்தப் பாண்டத்தில் ஒருமுறை இட்ட பொருள்களிலிருந்தே ஓர் ஆண்டு வரையில் முன்சொன்னபடி காடிநீர் எடுத்துக் கொண்டிருக்கலாம்.

**குறிப்பு:**—இவ்விதம் தயாரித்த காடியை முதன்முதல் கூறிய முறையில் சொல்லியிருப்பதுபோல் நான்கு மண்பாண்டங்கள் தயாரித்து அங்குச் சொல்லியிருப்பதுபோலவே நாள்தோறும் மாற்றி மாற்றி வெய்யிலில் வைத்துப் பக்குவம் செய்து கொள்ளலாம்.

வெய்யிலில் வைத்துப் பக்குவம் செய்யப்படும்; இந்தக் காடியைச் சூரியபக்குவக் காடியெனச் சொல்லப்படும். இந்தக் காடி பெரும்பான்மை சூரிய பக்குவங்களில் பயன்படுத்தப்படு கிறது. தீ மூலமாய்த் தயாரிக்கப்படும் காடி, (தீ) அக்கினிபாகக் காடியெனச் சொல்லப்படும். இக்காடி பெரும்பாலும் தீ பக்குவங் களில் பயன்படுத்தப்படுகிறது. மூன்ருவதான தீ, சூரியன் என்ற இருவகையாலும் செய்யப்படும் காடி தீ, சூரிய பக்குவ மெனப்படும். இந்தக் காடி பெரும்பான்மை தீ, சூரிய பக்குவங் களில் பயன்படுத்தப்படுகிறது.

நாம் இது வரையில் பூநீரெடுக்கும் முறை, அதை நீராக்கும் முறை, பனிநீர், கடல்நீர், சிறுநீர், காடி முதலியவைகளைப் பக்குவப் படுத்தும் முறைகளைத் தெரிந்துகொண்டோம். இனி, பூநீரைத் தூய்மை செய்யும் முறைகளைச் சொல்வோம்.

## பூநீர்த் தூய்மை

பூநீரின் தூய்மையானது பலரால் பலவிதமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும் தம்தம் முறையையே மேலானது எனவும் ஒப்பற்றது எனவும் நிலைநிறுத்திப் பேசுகின்ருர்கள். அவ்விதம் நிறுநிறுத்தி நிற்பவர்களோடு நாம் வீணய் எதிர்த்து நிற்பதால் பயனேதுமில்லை. 'மண் பூனையானுலும் எலி பிடித்தால் போதும்' என்பதுபோல் எந்த முறையாயினும் அனுபவ வாயிலாய் மருந்துகளுக்குப் பயன்படவேண்டியது முக்கியமாதலால் அவ் வகை முறைகளை மாத்திரம் இங்கு எழுதுவாம்.

பூநீரில் உப்பு, நீர், சுண்ணும்பு என்ற மூன்று வகைப் பொருள்களிருக்கின்றன. முன்சொன்ன பனிநீரின் உதவியால், சூரியன் சந்திரன் அல்லது, தீ ஆகிய இவற்றில் பக்குவப்படுத்திப் பிரிப்பதுமுண்டு. இவ்விதம் பிரித்து வருகையில் அநேக வகை மூலப்பொருள்களும், அனேக வகை நீரும் வெளிப்படும். இந்த மூலப்பொருள்களுக்கும் இந்த நீர்வகைகளுக்கும் தனித்தனிப் பெயருமுண்டு. இந்த முறைகளை இங்கு எழுதுவதால் பயனேது மில்லை. இந்த முறையில் பற்பலவிதமான அந்தந்த நேரத்திற் கேற்ற கைப்பாகங்களிருக்கின்றமையாலும் பழக்கத்தின் முதிர்ச்சியாலும், கைப்பழக்கம் புத்திக் கூர்மை முதலிய திறமைகள் இன்றியாதனவாதலாலும், பலதடவைகள் தொட்டுக் காட்டினுல் மாத்திரம் தெரிந்து கொள்ளக்கூடும். இதை இங்குக் குறிப்பாய் எழுதிய காரணம் அறிவாளிகள் முறை தெரிந்தவர்களை அடுத்துப் பழக்கத்தில் அறிந்து கொள்வார்கள் என்ற கருத்தேயொழிய வேறன்று. இனி, சாதாரணமானதும் யாவரும் எளிதில் தெரிந்து கொள்ள கூடியதுமான சில முறைகளை இங்கு எழுதுவாம்.

முன்சொன்னபடி சேகரித்துத் தூள்செய்யப்பட்ட பூநீர் அல்லது, பூநீரின் நீர் 5 படி, பாகப்படுத்தின பனிநீர் 5 படி, இவை இரண்டையும் வாயகன்ற பெரிய குப்பியில் விட்டு, மூங்கில் தடியால் அல்லது, மரத் துடுப்பால் நன்ருய்க் கலக்கவேண்டும். கையால் கலக்கலாகாது; கைவெந்துபோக ஏதுவாகும். பின்பு, குப்பியைமூடி வைக்கவேண்டும். மறுநாள் 3 அல்லது, 4 தடவைகள் கலக்கவேண்டும். இவ்விதம் நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் கலக்கி, 3 நாட்கள் கடந்து நான்காம் நாள் தெளிவைக் கலங்காமல் இறுத்துக் கொள்ளவேண்டும். அல்லது, திரிவைத்துத் தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் இறுத்த தெளிவை இரும்புச் சட்டியில் அல்லது தண்டவாளச் சட்டியில் ஊற்றி, அடுப்பேற்றிச் சட்டியின் வாயை மூடிவைத்துக் கருவேலன் விறகால் அடுப்பெரிக்க வேண்டும். இந்த மூடியானது கூடையைப் போன்று உயர்ந்து குவிந்ததாகவும், இலேசானதாகவும் ஆவி வெளியே செல்லாதவாறு இருக்கவேண்டும். அடுப்பில் அதிகத் தீ எரியலாகாது. தீ அளவாயிருக்கவேண்டும். நீர் கொதிக்கும்போது எண்ணெய்க் கசடுகள் வெளிப்படும். அவை எல்லாவற்றையும் எடுத்துவிடவேண்டும். இவ்விதம் தேவையானபோது மூடியைத் திறந்து கசடுகளை எடுத்துவிட்டு உடனே மூடிவிடவேண்டும். தேவையான நேரங்கள் தவிர மற்ற நேரங்களில் திறந்து வைக்கலாகாது. நீர் சுண்டிக் குழம்பு பதமாய் வரும் தருணத்தில் இறக்கி, குளிர வைத்துப் பீங்கான் தட்டுகளில் ஊற்றிப் பகலில் வெய்யிலில் வைத்தெடுத்து, இரவில் பனியில் வைக்கவேண்டும். இவ்விதம்

பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து எல்லாம் உப்பான பின் எடுத்து, அளந்து, கண்ட அளவு நீர் மீண்டும் சேர்த்து முன்போலக் குப்பியில் விட்டு முன்னைப்போலவே நாள்தோறும் கலக்கி, 3 நாள்கள் கழித்து நான்காம் நாள் தெளி விறுத்து முன்போலவே காய்ச்சி, முன்போலவே வெய்யிலிலும் பனியிலும் வைத்து உலர்த்தி உப்பாக்கவேண்டும்.

இவ்விதம் பத்து தடவைகள் முறையாகச் செய்யப்பட்ட உப்பைத்தான் தூய்மையான பூநீர் எனச் சொல்லப்படுகிறது.

மேற்கண்ட விதமாகவே கடல் நீர், சிறுநீர், காடிநீர் என்ற இவற்றில் முன் சொன்ன முறைப்படி செய்துகொள்ளலாம். இவற்றுள் காடியிற் செய்வது அதிகச்சிறப்பானதெனச் சொல்லப் படுகிறது. இன்னம், தேங்காய் இளநீரிலும் பூநீரைத் தூய்மை செய்துகொள்வதுமுண்டு.

இந்தப் பூநீருடன் சேர்க்கப்படும் வெடியுப்பு, நவச்சாரம் என்ற இவற்றையும் தூய்மைசெய்து கொள்ளவேண்டியது அல்லது, கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டியது இன்றியமையாத தாகையால் அவற்றுள் சிலவற்றையும் இங்கு எழுதுவாம்.

## வெடியுப்பு

வெடியுப்பானது முக்கியமான வேறொருவகை உப்பு. இது பொதுவாகப் பிறவிச் சரக்கு. இது வழக்கமாய் இந்தியாவின் வெப்பமான பகுதிகளில் பூமியின்மீது பூத்துக் காணப்படுகிறது. அதை எடுத்து நீரில் கரைத்துத் தெளிவிறுத்துக் காய்ச்சி வெடியுப் பாகச் செய்யப்படுகிறது. தட்பவெப்பம் சமமான பகுதிகளில் உயிர்வகைப் பொருள்களையும் சுண்ணும்புள்ள பொருள்களையும் போராகக் குவித்து, அவற்றை அடிக்கடி நனைத்து வருவதால் அவற்றில் உப்புப் பூக்கும். அதைக் காலத்துக்குக் காலம் எடுத்துக் கரைத்துத் தெளிவிறுத்துக் காய்ச்சி வெடியுப்பாகச் செய்கிறார்கள். ஐரோப்பிய நாட்டில் இதைத் தயாரிக்கிறார்கள். வீணாகிப்போகும் பூண்டுகள், உயிர்வகைப் பொருள்கள், சுண்ணும்புள்ள பொருள்கள் பலவகை மண்கள் என்ற இவைகளைப் பள்ளத்தில் இட்டு, சிறுநீர்விட்டுக் கலந்து காற்றுப்பட வைத்தால், பலவகை உப்புக ளுண்டாகின்றன. இவைகளிலிருந்து வெடியுப்பைச் சேகரிக்கின் றனர். கலப்பற்ற வெடியுப்பானது, வெள்ளையாகவும், கண்ணாடி போன்றும், குளிர்ச்சியாகவும், கசப்பாகவும் இருக்கும். இது விறுவிறுப்புள்ள சுவையுடையது. எளிதிற் பொடியாகும். இதற்கு வாசனையில்லை. வடிவம் காற்றில் மாறாது. இது இதன்

எடையில் மூன்றரைப் பங்கு நீரில் கரையும். இதில் 100-க்கு 48 பங்கு உயிர்வளி (Oxigen) இருக்கிறது. உயிர்வளியிலிருந்து கணத்தில் பிரியும் இயல்பையும் கணத்தில் நெருப்புப் பற்றும் இயல்பையும் இஃது உடையது. ஆகையால்தான், இது பல மருந்து முறைகளில் முக்கியமானதாகச் சேர்க்கப்படுகிறது.

பூநீருக்கு (தாது) நாதம் என்றும் வெடியுப்பிற்கு (இரத்தம்) விந்து என்றும் இரசவாத மறைமொழியில் சொல்லப்படுகிறது. ஆனல், பூநீரைப் பக்குவப்படுத்திப் பிரித்து வருகையில் ஒருவகை உப்பு உண்டாகிறது. அதற்குத்தான் வெடியுப்பு அல்லது (இரத்தம்) விந்து என்று பெயரென்றும் கடைகளில் வெடியுப்பென விற்கப்படுவதெல்லாம் வாண மருந்திற்குப் பயன்படுமேயொழிய முன் கூறிய மருந்துகளுக்கு உதவாதென்றும் சிலர் மறுக்கிருர்கள். அவ்வகை மறுப்புகளில் தலையிடாமல் நமக்கு முக்கியமான பொதுவான வழியிற் சொல்லுவோம். அந்த முறைகளைத் தெரிந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் அவர்களை அடுத்துத் தெரிந்துகொள்ளட்டும். வெடியுப்பிற்கு இணங்கன், பூமி கூர்வை, பூநாகம், கருவுப்பு, சுண்ணராஜன் எனப் பல பெயர்களுமுண்டு.

கடையில் விற்கும் வெடியுப்பு, 1 படி இதனை நன்ருய்ப் பொடித்துக்கொள்ளவும். ஆற்று நீர் 4 படி, இவை இரண்டையும் கலந்து கலக்கி 4 நாள் வைத்துத் தெளிவிறுத்து இரும்புச் சட்டியில் ஊற்றி, அடுப்பேற்றிச் சிறுதீயாய் எரித்துப் பொங்காமல் கவனத்துடன் காய்ச்சிக் குழம்பு பதத்தில் கொஞ்சம் எலுமிச்சம்பழச் சாற்றையும், கொஞ்சம் மோரையுங் கலந்து புரையிட வேண்டும். அதாவது, அதைக் குழம்பு பதத்தில்இறக்கி வைத்து இளஞ்சூடாய் இருக்கும்போது முன்னே கூறிய நீரை ஊற்றி மூடி வைப்பதேயாம். மறுநாள் வெய்யிலில் வைத்து உப்பாக்கிக் கொள்ளவும். மறுபடியும் இந்த உப்பை அளந்து முன் கணக்குப்படி நீர் சேர்த்துத் தெளிவிறுத்து முன்னைப் போலவே காய்ச்சிக் கொள்ளவும். இவ்விதம் ஐந்து முறைகள் செய்தால் வெடியுப்பானது நல்ல கம்பிகளாயிருக்கும். இவ்வாறு செய்து எடுத்துப் பின்காணும் வகையில் தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். மேற்கண்ட வகையில் காய்ச்சிக் கம்பி செய்வது வாணக்காரர்களுக்குப் பயிற்சியுண்டு. ஆகையால், ஒரு முறை அவர்களை வைத்துக்கொண்டு செய்தால் இப் பக்குவத்தைத் தெளிவாய்த் தெரிந்துகொள்ளலாம்.

இன்னம் ஆற்று நீருக்குப் பதிலாக வாழைக்கட்டை நீரை முன் அளவுப்படி சேர்த்துச் செய்வது அதிகம் சிறந்ததாயிருக்கும்.

## 2. வெடியுப்புத் தூய்மை.

முன்கண்டபடி தயாரித்த கம்பிகளைக் கல்வத்தில் அல்லது அம்மியில் பொடித்து அளந்து அதற்கு நான்கு பங்கு பக்குவப் படுத்தின பனிநீர் விட்டுக் கலக்கி, பூநீரைச் செய்ததுபோலவே இதையும் மூன்று நாள்கள் செய்து நான்காம் நாள் இதன் தெளி வையும் இறுத்து அந்த முறைப்படியே இதையும் காய்ச்சிப் பதத்தி லிறக்கிப் பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உலர்த்தி உப்பாக்கிக் கொள்ளவேண்டும். மறுபடியும் இந்த உப்பையே முன்போலச் செய்யவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் ஐந்து முறைகள் செய்வது தூய்மையாம்.

## 3. மேற்படி வேறு

முன் தயாரித்த வெடியுப்பு 1 பங்கு பக்குவப்படுத்திய பனிநீர் 2 பங்கு. இவை இரண்டையும் கலந்து மேற்கண்ட முறைப்படி செய்துகொள்வதும் உண்டு.

## 4. மேற்படி வேறு

கம்பி வெடியுப்பு 1 வீசை (1400 கிராம்) இதனைப் பொடித்து, 10 படி கடல் நீரிற் போட்டுக் கரைத்து, ஒரு நாள் வைத்து மறுநாள் தெளிவிறுத்துப் பத்துப் பங்குகளாகப் பகிர்ந்து வைத்துக் கொள்ளவேண்டும். இந்தத் தெளிவின் ஒரு பங்கை எடுத்து இரும்புச் சட்டியில் விட்டு அடுப்பேற்றிக் காய்ச்சிக் குழம்புப்பதமாய் வரும்போது அதில் மறு பங்கைவிட்டுக் காய்ச்சி, இதுவும் குழம்புப் பதமாய் வரும்போது மறு பங்கைச் சேர்த்துக் காய்ச்சவும். இவ்விதம் பத்துப் பங்கையும் ஒன்றன்பின் ஒன்ருய்க் குழம்பு பதத்தில் சேர்த்துச் சேர்த்துக் காய்ச்சி எல்லாப் பங்கு களும் முடிந்தபின் அதைக் குழம்புப் பதத்தில் இறக்கி ஆறினபின் பீங்கான் பாத்திரத்தில் இட்டு உலர்த்தி, உப்பாக்கிக்கொள்ள வும். இது முதல் புடமாம். இவ்விதம் பக்குவம் செய்த உப்பின் அளவிற்குப் பத்துப் பங்கு கடல்நீர் சேர்த்துக் கரைத்து ஒரு நாள் வைத்து மறுநாள் தெளிவிறுத்து அதைப் பத்துப் பங்காகப் பகிர்ந்து எடுத்து முன்போல ஒன்றன்பின் ஒன்ருய்க் குழம்பு பதத்திற் சேர்த்துக் காய்ச்சி முடிவில் குழம்பு பதத்தில் இறக்கி, முன்போல உலர்த்திக் கொள்ளவும். இஃது இரண்டாம் புடமாம். இவ்விதமே மேலும் எட்டுத் தடவைகள் செய்து, கூடிய பத்துப் புடங்களும் முடிந்தால், பூநீருடன் சேர்ப்பதற்கும் மற்ற செயநீர் முறைகளில் சேர்ப்பதற்கும் மிகவும் பயன்படக்கூடியது என்று யஹயாஜோஜி என்னும் இரசவாத பண்டிதர் மிக வலியுறுத்திச் சொல்கின்ருர்.

## 5. மேற்படி வேறு

வெடியுப்பைக் கம்பிகளாய் எடுத்து அதன்மேல் பட்டு நூலை நெருக்கமாய்ச் சுற்றிக் கரிநெருப்பில் காய்ச்சி முள்ளங்கிக் கிழங்குச் சாறு, பூண்டுச் சாறு, பிரண்டைச் சாறு, சதகுப்பைக் கீரைச் சாறு, பசுமாட்டுச் சிறுநீர், கழுதைச் சிறுநீர் என்னும் இவற்றுளொன்றில் ஊறவைக்கவேண்டும். ஆறினபின்னர், எடுத்து முன்போலவே கரிநெருப்பில் காய்ச்சி முன் ஊறவைத்த அதே சிறுநீரில் ஊற வைக்கவேண்டும். இவ்விதம் 99 தடவைகள் செய்வதால் வெடியுப்புத் தூய்மையாம். வெடியுப்பை நெருப்பில் காய்ச்சும்போது மிகக் கவனமுடன் காய்ச்சவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் முறுகி உதிர்ந்து போகும்.

## 6. மேற்படி வேறு

கம்பி வெடியுப்பு 10 பலம் (350 கிராம்). இதனை மெல்லிய தூளாகச் செய்துகொள்ளவும். கோது, கொட்டை முதலியன நீக்கித் தூய்மை செய்யப்பட்ட புளி 10 பலம் (350 கிராம்). இவை இரண்டையும் சேர்த்து உரலில் இட்டு இரும்பு உலக்கையால் வெண்ணெய்போல் இடித்து சிறு வில்லைகளாகச் செய்து; அடுப்பில் இரும்புச் சட்டியை ஏற்றி, அதில் நான்கு நான்கு வில்லைகளாய் வைக்க, அவை ஒரு வித சீறலுடன் எரிந்து சாம்பலாகி விடும். இவ்விதம் எல்லா வில்லைகளையும் வைத்தெரித்து நன்முய்ப் பக்குவமாகச் சாம்பலாக்கிக் கொள்ளவேண்டும். இதற்கு வெடியுப்புச் சுண்ணம் எனவும் பெயர் உண்டு. இதைப் போன்ற மற்ற பாகங்களைச் சுண்ணம் செய்யும் முறையில் பார்வையிடத் தெரியவரும்.

## 7. வெடியுப்புக் கட்டு

முன் சொன்னபடி தயாரித்த கம்பி வெடியுப்பு 1 வீசை (1400 கிராம்). இதனை இடித்துத் தூள்செய்து கொள்ளவேண்டும். வாழை மரத்தின் அடித் தண்டை இடித்துப் பிழிந்த சாறு 4 படி இவை இரண்டையும் ஒரு குப்பியில் இட்டுக்கரைத்து 2 நாள் வைத்துத் தெளிவிறுத்துத் தெளிவைக் காய்ச்சிக் குழம்பாகும் பக்குவத்தில் இறக்கிச் சற்று ஆற வைத்து 1 அல்லது $1\frac{1}{2}$ பலம் எலுமிச்சம் பழச்சாற்ருல் பிரையிடவேண்டும். அதாவது முன் குழம்பில் எலுமிச்சம் பழச்சாற்றை விட்டு மூடி அசையாமல் அப்படியே வைத்துவிடவேண்டும். மறுநாள் எடுத்தால் உப்புக் கட்டியிருக்கும். இந்த உப்பைப் பொடித்து இது கண்ட எடைக்கு மேற்சொன்ன அளவுப்படி முன்சொன்ன சாற்றைச் சேர்த்துக் கரைத்து இரண்டு நாள் வைத்துத் தெளிவிறுத்து, காய்ச்சிக்

குழம்பு பதத்தில் முன்போலவே எலுமிச்சம் பழச்சாறைப் பிரையிட்டு உப்பை எடுத்து முன்போலவே பக்குவப்படுத்த வேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் மேற்கண்டபடி 21 தடவைகள் காய்ச்சிச் செய்வதால் வெடியுப்பானது கட்டுப் பட்டுப் போகும். நெருப்பிலிட்டால் புகைந்தோடாது.

## 8. மேற்படி வேறு

ஆற்றிலுள்ள கும்பிடு கிளிஞ்சல்களை உயிரோடு எடுத்து ஒவ்வொன்றின் வாயிலும் அதன் வாயைத் திறந்து நான்கு நான்கு குன்றிமணி எடை பொரித்துத் தூள் செய்த வெண்காரத்தை இட்டு, ஓர் அகன்ற பீங்கானில் வரிசையாய் அடுக்கி, அந்தத் தட்டை ஒரு பக்கம் சாய்த்து வைத்து 2 சாமம், அல்லது ஓர் இரவு கழிந்த பின்னர் எடுக்க பீங்கானில் நீர் வடிந்து சேர்ந்து நிற்கும். இந்த நீருக்குக் கிளிஞ்சல் செயநீர் என்று சொல்லப்படும். இதை ஒரு கண்ணாடிக் குப்பியில் பத்திரப் படுத்தவும். கிளிஞ்சல்களிலிருந்து நீரெல்லாம் வெளிப்பட்ட பின், கிளிஞ்சல்களை எறிந்துவிடவும்.

கம்பி வெடியுப்புத் தேவையான அளவு; இதனை நன்றாய்த் தூய்மைசெய்யப்பட்ட ஓர் இரும்புச் சட்டியில் இட்டு, அடுப்பேற் றிச் சிறு தீயில் எரித்து, உப்பானது நன்றாய் உருகியவுடன் மேற் சொன்ன செயநீரைத் துளித் துளியாய்க் கை ஓயாமல் சொட்டி வரவேண்டும். இவ்விதம் உப்பானது கட்டியாகும் வரையில் செய்யவேண்டும். மிதமாய்ச் சொட்டி வந்தால் சற்றேறக்குறைய 4 சாமத்திற்குள்ளாகும். இவ்விதம் செய்வதால் வெடியுப்பானது நன்றாயுருகிக் கட்டிப்போம்,

## 9. மேற்படி வேறு

வெள்ளாட்டுக் கால்களைக் கொண்டு வந்து அவற்றின்மேல் உள்ள தோலையுரித்து நீக்கித் துண்டித்து, வெங்காயம், பச்சை மிளகாய், பச்சைக் கொத்துமல்லிக்கீரை, உப்பு முதலியவற்றைச் சேர்த்து வேக வைத்து நன்றாய் வெந்த பின், அவற்றிலுள்ள இறைச்சி, மூளை முதலியவைகளை விருப்பமானால் பயன்படுத்திக் கொள்ளலாம். விருப்பமில்லாவிட்டால் அவற்றை நீக்கிவிட்டு, மூளை, எலும்புகளை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்வாறு 4 அல்லது 5 நாட்களில் தேவையான அளவு மூளை, எலும்புகளைச் சேகரிக்கவேண்டும். கூடுமானால் இவற்றை ஒரு நாளிலேயே தயாரித்துக் கொள்ளலாம். ஆனால் சிறிதளவும் ஈரமில்லாமல் நன்றாய் வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவேண்டும்.

பின்னர், சுண்ணும்பு, 1 படி காரமான உவர் மண் 2 படி, இவை இரண்டையும் வாய் குறுகிய மண் பாண்டத்தில் இட்டு, அதில் 6 படி நீர்விட்டுக் கலக்கி, அதில் முன்னே சேகரித்த மூளை, எலும்புகளையும் வைத்து, அடுப்பேற்றி 4 சாமம் (12 மணி நேரம்) எரித்து ஆறின பின்பு எடுத்துக்கொள்ளவேண்டும். மறுபடியும் முன்போலவே கற்சுண்ணம், காரமான உவர் மண் என்னும் இவற்றைக் கலந்து முன் அளவு நீர் ஊற்றி முன்னே பக்குவப்படுத்திய எலும்புகளை அதில் வைத்து, 4 சாமம் (12 மணி நேரம்) எரித்து எடுத்துக்கொள்ளவேண்டும். மூன்றும் தடவையும் அவ்விதமே செய்து நன்ருய்க் கழுவித் தூய்மைப்படுத்தி வெய்யி லில் உலர்த்தவேண்டும். பின்பு கல்லுரலில் முன் பக்குவப்படுத்திய எலும்புகளை இட்டு இரும்பு உலக்கையால் இடித்துத் தூளாக்க வேண்டும். எளிதில் இது தூளாகாதாகையால் சிறிதளவு துன்பத் தோடு செய்யவேண்டி இருக்கும். துன்பத்திற்கு அஞ்சிப் பின் வாங்கினுல் முயற்சி வெற்றியடையாது. நைய இடித்துத் தூள் செய்து தெள்ளி நுண்மையான தூளையெல்லாம் வேருகவும், சற்றுப் பருமனுன தூளையெல்லாம் வேருகவும் பிரித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு படி கொள்ளும்படியான பானையில் மூன்று அங்குலம் மணல் நிறைத்து, அதன்மேல் காரமான உவர் மண் மூன்று அங்குலம் பரப்பி, அதன்மேல் முன் தயாரித்த எலும்பின் பருமனுன தூளை அரை அங்குலம் கனம் பரப்பி, அதன்மேல் எலும்பின் நுண்மையான தூளைப் பரப்பி, அதன்மேல் ஏழாங் காய்ச்சல் வெடியுப்பைக் கம்பி கம்பியாய் வரிசையாய் அடுக்காகவும் நெருக்கமாகவும் பரப்பி, அதன்மேல் எலும்பின் நுண்ணிய தூளையும், அதன்மேல் எலும்பின் பருமனுன தூளையும், அதன்மேல் காரமான உவர் மண்ணையும், அதன்மேல் மணலையும் இட்டு நன்ருய் அழுத்திப் பானையின் வாயை மூடாமலே அடுப்பேற்றி முதல் சாமம் மெதுவாக விளக்கின் சுடர்போலச் சிறு தீயாய் எரித்தும், இரண்டாம் சாமம் ஒரு விறகு அதிகப்படுத்தி எரித்தும், மூன்றும் சாமம் இன்னெரு விறகு அதிகப்படுத்தி எரிக்க வேண்டும். இவ்விதம் மொத்தம் மூன்று சாமம் (12 மணி நேரம்) எரித்த பின் அடுப்புடன் ஒரு நாள் ஆறவிட்டு, நன்ருய் ஆறிக் குளிர்ந்த பின்னர் இறக்கி எடுத்துக்கொள்ளவேண்டும். நன்ருய்க் கட்டுப்பட்டு இறுகியிருக்கும்.

## 10. மேற்படி வேறு

நாயின் மலத்தை நன்ருய் உலர்த்தி இடித்துத் தூள் செய்து ஒரு சிறு கலயத்தில் ஓர் ஆழாக்கு தூளைக் கொட்டி நன்ருய்

அழுத்தி அதன்மேல் ஏழாங் காய்ச்சல் வெடியுப்புக் கம்பிகளை வைத்து, அவற்றின்மேல் முன்கூறிய தூள் ஓர் ஆழாக்கிட்டு நன்ருயழுத்தி கலயத்தின் வாயை மூடாமல் பூமியின்மேல் வைத்துக் கலயத்தைச் சுற்றிலும் நான்கு அங்குலம் (சுமார் 10 செ.மீ.) இடம் விட்டுக் கலயத்தைச் சுற்றிலும் எருமுட்டையை அடுக்கவேண்டும். தீயின் சூடானது கலயத்தில் தாவி அதிலுள்ள பொருளுக்குச் சூடேறி அது பக்குவப்படத்தக்கதாயிருக்க வேண்டும். இவ்விதம் பக்குவமாய்ப் புடமிட்டால், புகைந்தடங்கி, ஆறியபின் எடுக்க அது வைத்ததுபோலவே கம்பியாய்க் கட்டுப் பட்டிருக்கும். தீ அதிகமாளுல் கலயத்திலுள்ள உப்பானது உருகி இறுகிவிடும். தீயானது குறைந்துவிட்டாலும், கட்டுப்படாமல் இருக்கும். ஆகையால், இதன் புடத்திட்டம் 4 அல்லது 5 தடவைகள் செய்து சரியான முறையை மனத்தில் திடப்படுத்திக் கொள்ளல் வேண்டும்.

## 11. மேற்படி வேறு

வசம்பின் இலையை அரைத்து, வெடியுப்புக் கம்பிகளின்மீது ஓர் அங்குலக் கனம் கவசம் செய்து வெய்யிலில் நன்ருய் உலர்த்தி 3 சீலமண் செய்து மிகவும் இலகு புடமாய் இடவேண்டும். இவ்விதம் மூன்று புடமிட்டு, சிறிதளவு எடுத்து நெருப்பில் இட்டுப்பார்க்க புகையாமலிருந்தால் பக்குவமென எடுத்துக் கொள்ளவேண்டும். புகைந்தால் மீண்டும் மூன்று புடம்போடக் கட்டுப்பட்டுப் போகும்.

இதைப் புடமிடுவதற்கு அதிகக் கவனம்வேண்டும். தீ மிகினும் குறையினும் பாகங்கெட்டுவிடும். தீ அதிகமாளுல் சரக்குப் புகைந்தோடிப் போகும் அல்லது எடை குறைந்துபோகும். ஆகையால் ஒவ்வொரு புடத்திலும் சரக்கை நிறுத்து உறுதிப் படுத்திக்கொண்டு சரியான அளவுப்படி செய்யின் திண்ணமாய் முடியும்.

## 12. மேற்படி வேறு

கறுப்புப் பூப் பூக்கும், மணத்தக்காளிச் சாறைச் சிறுகச் சிறுக ஊற்றித் தேவையான கம்பி வெடியுப்பை 2 சாம நேரம் அரைத்து வில்லைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி அகலில் இட்டு, மேலகல் மூடி, சீலமண் செய்து நன்ருய் உலர்த்தி, வெடி யுப்பானது உருகி நிற்கும்படியான அளவு தீயில் புடம்போட வேண்டும். புடம் இந்த அளவுப்படி இட்டால் ஒரே புடத்தில் உருகிக் கட்டுப்பட்டுப்போகும். இதற்கும் புடத்திட்டம் பயிற்சி முதிர்ச்சியால் தெரியவரும்.

இந்த முறையானது தாமிரத்தை வெட்டை செய்யவும் பயன்படுத்தலாம்.

## 13. மேற்படி வேறு

ஏழாங் காய்ச்சல் வெடியுப்பு ஒரு பலம் (35 கிராம்). கம்பியின் மீது வெள்ளலரிப் பாலை ஒலைக்கனம் பூசி வெய்யிலில் உலர்த்தவும். இரண்டாம் நாளும் முன் செய்ததுபோல முற்கூறிய பாலை முன் கூறிய அளவே பூசி வெய்யிலில் உலர்த்தவும். மூன்றும் நாளும் அவ்விதமே முற்கூறிய பாலை அந்த அளவே பூசி உலர்த்திக்கொள்ள வேண்டும்.

அரசம் பழுப்பை உலர்த்தி எரித்தெடுத்த சாம்பல் 3 ஆழாக்கு இந்தச் சாம்பலில் அரைப் பாகம் ஒரு மண் கிண்ணத்தில் நிறைத்து அதன்மேல் முன் தயாரித்த வெடியுப்புக் கம்பியை வைத்து, அதன்மேல் மற்ற அரைப் பாகச் சாம்பலையும் இட்டு, நன்ருய் அழுத்திக் கிண்ணத்தின்மேல் அதற்குச் சரியான வேெருரு மண் கிண்ணம் மூடி, மூன்று சீலைமண் செய்து பத்து எருமுட்டை யில் புடமிட்டு ஆறியபின் எடுக்க, கட்டுப்பட்டுப்போகும்.

## 14. மேற்படி வேறு

கம்பி வெடியுப்பு 1 வீசை(1400 கிராம்). இதனைப் பொடித்துக் சொள்ளவேண்டும். வாலிப வயதுடையவரின் தலைமயிர் 10 பலம் (350 கிராம்). இதனைச் சிகைக்காய் நீரில் ஊறவைத்து வெந்நீர் விட்டுக் கழுவி, எண்ணெய்க் கசடு முதலியவற்றை நீக்கித் தூய்மை செய்து உலர்த்தி, சன்னமாய்க் கத்தரித்துக்கொள்ள வேண்டும். முற்கூறிய உப்பை இரும்புச் சட்டியில் இட்டு அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாய் எரித்து உருகியவுடன் மேற்கூறிய தலைமயிரில் ஒரு சிட்டிகை எடுத்துப் போடக் குப்பென்று தீப்பற்றி எரியும். அஃது எரிந்தடங்கிய பின், மறு சிட்டிகை மயிர் போடவேண்டும். அஃதும் எரிந்து அடங்கினபின், மறு சிட்டிகைப் போடவேண்டும். இவ்விதம் சிட்டிகைச் சிட்டிகையாய் ஒவ்வொரு தடவையும் எரிந்தடங்கியபின் போட்டு, எல்லா மயிர்ப்பொடியும் தீர்ந்தபின் இறக்கி எடுத்துக்கொள்ளவும். இவ்விதம் தயாரித்துச் செய்யப் பட்ட வெடியுப்பானது செயநீர், திராவகம் முதலிய வகைகளில் சிறந்ததென மன்னுப் பண்டிதர் சொல்லுகின்ருர்.

## 15. மேற்படி வேறு

கம்பி வெடியுப்பு 1 பலம் (35 கிராம்). வீரம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) மேற்கண்ட முறையில் சொன்னபடி தூய்மைசெய்யப் பட்ட தலைமயிர் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்). பின்னுள்ள இரண்டையும்

கல்வத்திலிட்டு, தாய்ப்பாலைச் சிறுகச் சிறுக ஊற்றி, இவை இரண்டையும் கலந்து வெண்ணெய்போல் ஆகிற வரையில் அரைத்து வெடியுப்புக் கம்பிக்கு, அதிகங் குறைவில்லாமல் சம மாகப் பூசி வெய்யிலில் வைத்து உலர்த்திக் கொள்க.

பத்துப்பலம் (350 கிராம்) படிக்காரத்தைப் பொரித்து நுண்மையாகப் பொடித்து அரைப் பாகத்தை ஓர் அகலில் சம மாகப் பரப்பி அழுத்தி, அதன்மேல் முன் தயாரித்த கம்பியை வைத்து அதன்மேல் மறு பாதித் தூளையும் இட்டு, நன்ருய் அழுத்தி மேலகல் மூடி மூன்று சீலைமண் செய்து உலர்த்தி, விரல் கனத்தில் திரியிட்டு, சிற்ருமணக் கெண்ணெய்விட்டு விளக்கேற்றி அதன்மேல் முன் அகலை வைத்து 4 சாமம் (12 மணி நேரம்) எரித்து நன்ருய் ஆறினபின் எடுத்துக் கம்பி மீதுள்ள கவசத்தை நீக்கி விடவும்.

இரண்டாம் தடவையும் முன் அளவுப்படி வீரம், தலைமயிர் என்னும் இரண்டையும் முன் சொன்னபடியே அரைத்து முன் மாதிரியே கவசம் செய்து, முன்போலவே படிக்காரத் தூளிற்குள் வைத்து மூடி, முன்மாதிரியே விளக்கேற்றி 4 சாமம் எரிக்கவும்.

மூன்ரும் தடவையும் முன் மாதிரிசெய்து முன்னைப்போலவே எரித்தெடுத்துக் கொள்ளவும்.

பின்பு கொஞ்சம் எடுத்து நெருப்பிலிட்டால், புகையாமல் இருந்தால் பக்குவமாயிற்று' என்பதாம். இல்லாவிட்டால் நான்காம் தடவையும் முன்போலவே செய்துகொள்ளக் கட்டி விடும். படிக்காரத்தூள் கம்பியின் கீழே ஓர் அங்குலம் (2 செ.மீ.), மேலே ஓர் அங்குலம் இருக்கவேண்டும். இந்த அளவிற்கதிகமா யினும் ஓர் பாதகமில்லை. ஆனல், அங்குல கனத்திற்குக் குறைந் திருக்கலாகாது. இஃது எரிப்பு அதிகமானல் சுண்ணமாகிவிடுவது முண்டு. அப்பொழுதும் மருத்துவத்துக்கு உதவும்.

## 16. கறியுப்பு

கறியுப்பானது உணவுக்கு வேண்டிய பொருள்களில் முக்கியமானவற்றுள் ஒன்று என்பது எல்லாருக்கும் தெரிந்த செய்தியே. இந்த உப்பானது பெரும்பான்மை கடல் நீரிலிருந்து எடுக்கப்படுகிறது. கடலுக்கு அருகிலுள்ள உப்பளங்களில் பாத்திகள் கட்டி, கடல் நீரை அவற்றில் பாய்ச்ச, அந்த நீரானது சூரிய வெம்மையால் சுண்டி உப்பாக மாறுபடுகிறது. மற்றும், சிறுபான்மை சில செடிகளிலிருந்தும் கல்லுப்பிலிருந்தும் சேகரிக்கப் படுகிறது. கடல் நீரைச் சுண்ட வைத்து எடுப்பதுமுண்டு. இந்த

உப்பில் குற்றங்கள் அதிகமுண்டு. இதைக் கரைத்துத் தெளிவிறுத்துக் காய்ச்சிக் கொள்வதால் தூய்மையாகிவிடும். இந்த உப்பில் சவுட்டுப்புச் சத்தும், காற்று வடிவமான ஒருவகைப் பொருளும் இருக்கின்றன. இந்த உப்பானது, இதன் எடையின் மூன்று பங்கிற் கொஞ்சங் குறைந்த எடையில் கரைந்துபோகும். இதை நெருப்பில் வைத்து எரித்தால் படபடென வெடிக்கும். இதைப் பழுக்கக் காய்ச்சினல் உருகியோடிப் போகும். பூநீர் தொடர்பான பக்குவங்கள், மற்ற வகைகளைத் தயாரிப்பதற்குப் பயன்படும். காரவகை என்னும் இவ்வகை முறைகள் ஆகிய இவற்றுள் ஏராளமாகப் பயன்படுத்தப்படுகிறது. காற்று வடிவமான ஒரு வகைப் பொருளையும் உப்புத் திராவகச்சத்தையும் அடைய, இஃது அதிகமாய்ப் பயன்படுத்தப்படுகிறது. ஆகையால், இதன் பக்குவ முறைகளையும் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது ஆகையால், அவற்றுள் சிலவற்றையும் இங்கு எழுதுவோம்.

## 17. கரியுப்புத் தூய்மை.

பெருங் கட்டியான கறியுப்பு 1 படி பாகப்படுத்திய பனிநீர் 4 படி, இரண்டையும் சேர்த்துக் கரைத்து இரும்புச் சட்டியில் விட்டு ஒரு நாள் வைத்து மறுநாள் தெளிவிறுத்துக் காய்ச்சிக் குழம்பு பதத்தில் இறக்கி வெய்யிலில் வைத்து உப்பாக்கவேண்டும். பின்பு, இந்த உப்பை எடுத்து அதற்கு நான்கு பங்கு மேற்கூறிய பக்குவம் செய்த பனிநீரில் கரைத்து ஒரு நாள் வைத்து மறுநாள் தெளிவிறுத்து முன்போலக் காய்ச்சி வெய்யிலில் உப்பாக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் எட்டுத் தடவைகள் செய்துகொள்ளவேண்டும். இவ்வாறு பத்து முறைகளும் செய்து முடித்தால் உப்பிலுள்ள குற்றங்கள் நீங்கிப்போகும்

## 18. மேற்படி வேறு

கறியுப்பு 1 படி; கடல்நீர் 4 படி. இவை இரண்டையுங் கலந்து கரைத்து ஒரு நாள் வைத்து மறுநாள் தெளிவிறுத்து, அந்தத் தெளிவை நான்கு பாகங்களாக்கிக் கொள்ளவேண்டும். இரும்புச் சட்டியில் ஒரு பாகத்தை விட்டு, அடுப்பேற்றிக் காய்ச்சிக் குழம்பு பதமாய் வரும்போது மறுபங்குத் தெளிவை விட்டுக் காய்ச்ச வேண்டும், இதுவுங் குழம்பு பதமாய் வரும்போது மூன்றும் பங்கையும் அதனுடன் சேர்த்துக் காய்ச்சி அதுவுங் குழம்பு பதமாய் வரும் நேரத்தில் நான்காம் பங்கையும் அதில் சேர்த்துக் காய்ச்சி, அதுவுங் குழம்பு பதமாய் ஆனதும் இறக்கிப் பீங்கான் பாத்திரத்திலிட்டு வெய்யிலில் வைத்து உப்பாக்கிக்கொள்ளவேண்டும்.

பின்பு உப்பின் அளவிற்கு நான்கு பங்கு கடல்நீர் சேர்த்துத் தெளிவிறுத்து முன்போலவே செய்துகொள்ள வேண்டும். இவ்வாறு மீண்டும் மீண்டும் பத்து முறைகள் செய்து, எடுத்த உப்பானது அதிகக் காரத் தன்மையுள்ளதாகவும், அதிக காற்றுச் சத்துள்ளதாகவும் இருக்கும். இது செயநீர் முறைகளுக்கும் திராவக முறைகளுக்கும் அதிகம் சிறந்ததாயிருக்கும்.

## 19. கறியுப்புக் கட்டு

நாட்டு நில ஆவாரையை உரலில் இட்டு மையைப் போல் இடித்து ஒரு பாண்டத்தில் இட்டு, அதனுடன் கொஞ்சம் தூய்மை செய்த பூநீரைச் சேர்த்துப் பிசைந்து வைத்து, 3 மணி நேரஞ் சென்று பன்னுடையில் வைத்து அல்லது சாறு பிழியும் இயந்திரத்தில் வைத்துச் சாறு பிழிந்துகொள்ளவும். தூய்மை செய்யப்பட்ட கறியுப்பு தேவையான அளவு, இதனைக் கல்வத்திலிட்டு முன் கூறிய சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு மைபோல் அரைத்துப் பின், எடுத்துக் கொஞ்சம் முன்னைப்போல் சாறுவிட்டுக் குழப்பி அபிரகத் தகட்டின்மீது வைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து, 8 சாமம் (24 மணி நேரம்) சென்று எடுக்கவும். இஃது அப்போது கசிவாகவே இருக்கும். பின்பு அதைப் பனியில் வைத்துவரக் காய்ந்த மணலைப் போலக் கட்டியாகவே இருக்கும். பின்பு, இதனைத் தண்ணீரில் எத்தனை நாள்கள் வைத்தாலும் கரையாமல் அப்படியே இருக்கும். பனியில் வைக்க கசிவு முதலியவை நீங்கி யிறுகிக் கெட்டியாகும். ஆனல், இந்த நாட்டு நில ஆவாரை அகப்படுவது சில நாடுகளிற் கடினம். மேலும், இங்கு காலா காங்களில்தான் மிகவும் அரிதாகக் கிடைக்கிறது.

## 20. மேற்படி வேறு

பத்துப் பலம் (350 கிராம்) கறியுப்பை ஒரு கலயத்தில் அரைப்பாகம் இருக்கும்படி இட்டு, குப்பைமேனிச் செடியின் இலைகளை நீக்கிய மலாரை ஒன்ருகச் சேர்த்துக் கற்றையாகக் கட்டி, கலயத்தின் வாய்க்குச் சரியாக இருக்கும்படி திணித்து வைக்கவேண்டும். இந்தக் கற்றையின் அடிப்பாகம் உப்பில் சிறிது அழுந்தியு மிருக்கவேண்டும். இக் கற்றையானது சுமார் ஒன்றரைச் சாண் நீளம் இருக்கவேண்டும். இவ்வாறு தயாரித்துக் கொண்டு கலயத்தை உலையில் வைத்து இரட்டைத் துருத்தியால் தொடக்கத்தில் மெதுவாக ஊதிச் சிறிதுசிறிதாக தீயை அதிகப்படுத்தி வரவேண்டும். கலயத்திலுள்ள குப்பைமேனிக் கற்றையை அடிக்கடி அழுத்திக் கொண்டும் வரவேண்டும். இவ்வாறு செய்து வரும்போது, குப்பைமேனிக் கற்றையானது எரிந்து சாம்பலாகி

உப்புடன் சேர்ந்து, உப்பானது உருகி மணிபோலாகிவிடும். குப்பைமேனிக் கற்றையெல்லாம் எரிந்து, உப்பானது நீர்போல் நன்ருயுருகிய பின்னர், கலயத்தை எடுத்து, ஆறவைத்துக் கலயத்தை உடைத்து உப்புக் கட்டியை உடைத்து எடுத்துக் கொள்ளவேண்டும். இந்த உப்பில் கொஞ்சம் எடுத்து நெருப்பின் மீது வைத்துப் பார்க்க, சடசடப்பில்லாமலும் உருகுந் தன்மையு முண்டாகிவிட்டால் உப்புக் கட்டுப்பட்டதென அறிந்துகொள்ள வேண்டும். அப்படி இல்லாவிட்டால் முன்போலவே மற்ருெரு தடவை செய்யவேண்டும். பின்பு முன்போலச் சோதனை செய்ய, முன்கண்ட தன்மைகள் இருந்தால் நன்மையாம். இல்லாவிட்டால் மூன்ருந் தடவையும் முன்போலச் செய்ய, திண்ணமாகக் கட்டிப் போகும். இதன் செய்பாகம் தெரியாமல் பலர் ஏமாந்து போகின் ருர்கள். கைமுறைப்படி செய்யின் தவருமல் கட்டுப்படுகிறது. கரியில் வைத்தும் உருக்கலாம்.

## 21. மேற்படி வேறு

தூய்மை செய்யப்பட்ட கறியுப்புத் தேவையான அளவு எடுத்துக்கொண்டு, இதனை ஒரு பீங்கான் பாண்டத்தில்போட்டு. அது முழுகும்படி பப்பாய்க் காய்ப் பாலைவிட்டு வெய்யிலில் வைக்கவேண்டும். மறு நாளும் உப்பெல்லாம் முழுகும்படி பப்பாய்க் காய்ப் பாலை விட்டு வெய்யிலில் வைக்கவேண்டும், மூன்ரும் நாளும் முன்செய்தபடியே பப்பாய்க் காய்ப் பாலைவிட்டு, வெய்யிலில் வைக்கவேண்டும். நாலாம் நாள் பீங்கானிலுள்ள வற்றை எல்லாம் ஒரு மண் கலயத்தில் வழித்துப் போட்டு உலையில் வைத்து தொடக்கத்தில் சிறிது சிறிதாய் அதிகப்படுத்தி ஊதிவர, உப்பானது உருகி மணிபோலாகும்.

## 22. மேற்படி வேறு

தூய்மையான கறியுப்பு 15 வராகன் எடை (52½ கிராம்) வெண்காரம் 7 வராகன் எடை (24½ கிராம்) இவை இரண்டையும் கல்வத்திலிட்டு, காரமான காடி ஊற்றி, 2 சாமம் (8 மணி நேரம்) அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து நன்ருய் உலர்ந்தபின் ஆடுதின்னுப் பாளை இலையை அரைத்த விழுது 10 பலம் (350 கிராம்). இந்த விழுதைக்கொண்டு முன்சொன்ன வில்லைக்குமேல் சமமாகக் கவசம்செய்து அதன்மேல் 5 சீலைமண் செய்து அரைப் பாகம் உலர்ந்தபின் இந்தக் கவசத்தைப்போல ஏழு எடை எருமுட்டையில் புடமிடவும். புடம் ஆறிய பின்னர், எடுத்து முன்போல காரமான காடி ஊற்றி 2 சாம நேரம் அரைத்து முன்

போலவே வில்லை செய்து உலர்த்தி முன்போலவே ஆடுதின்னுப் பாளை இலை அரைத்த விழுதில் வைத்து முன்போலப் புடமிடவும். மூன்றும் முறையும் மேற்கண்டபடியே புடமிட்டு ஆறின பின்னர் எடுத்துக்கொள்ளவும். உப்புக் கட்டுப்படும். இந்தப் பாகத்தைச் சிலர் வெண்காரக் கட்டு என்கிறார்கள். காற்று அடர்த்தியான இடத்தில் போட்டால் முன்னெடை எருமுட்டையே போதுமானது. காற்றுள்ள இடத்தில் தீ சிதறுண்டு போகுமாகையால் எருமுட்டை அதிகம் செல்லும். தீ அதிகம், குறைவு என்பதை அனுபவத்தாலும் தெரிந்துகொள்ளலாம்.

## 23. மேற்படி வேறு

ஒரு தோண்டியின் அடியில் 15 அல்லது 20 சிறிய துளைகளிட்டு, அதில் இரும்புக் கம்பிகளைத் தொங்கவிட்டு, தோண்டியில் முக்காற் பாகம், சிறு துண்டுகளாய்த் துண்டிக்கப்பட்ட நாகப்பட்டையை நிறைத்துத் தோண்டியின் அடியில் துவாரங்கள் அடங்கும்படியாகச் சிறு கலயத்தைப் பொருத்திச் சீலைமண் செய்து தோண்டி வாய்க்கு மூடியிட்டுச் சீலை மண் செய்து, தோண்டியைச் சுற்றிலும் 6 அங்குலம் இடம் இருக்கும்படியாகவும் தோண்டி மறையும்படியாகவும் ஒரு குழி தோண்டி, அக்குழியின் மத்தியில் கீழ்க் கலயம் கொள்ளும்படியான சிறு குழியொன்று தோண்டி, அதில் கலயம் இருக்கும்படியாகப் பார்த்து, அக்கலயம் மறையும்படி மண்ணால் மூடித் தோண்டியைச் சுற்றிலும் அது மறையும்படி எருமுட்டை அடுக்கி நெருப்பிட்டு எரித்து ஆறினபின் எடுக்க, கீழ்க் கலயத்தில் தைலம் இறங்கி இருக்கும். இத் தைலத்திற்கு நாகப்பட்டைக் குழித்தைல மெனப் பெயர்.

தூய்மை செய்த கறியுப்புத் தேவையான அளவு கல்வத்தில் இட்டு, முன் தயாரித்த தைலத்தைச் சிறுகச் சிறுக ஊற்றி, 2 சாம நேரம் அரைத்து வில்லைசெய்து நிழலாடவைத்து, வில்லையின்மீது கால் அங்குலம் இருக்கும்படி தூய்மைசெய்த தலைமயிரைச் சுற்றி, அகலில் வைத்து, மேலகல் மூடி, ஏழு சீலைமண் செய்து, இதுகண்ட 8 எடை எருமுட்டையில் புடமிட்டு ஆறினபின் எடுக்கவும். இது வண்டலைப்போல கறுப்பாயிருக்கும். தீ அதிகமானால் செந்தூரம் ஆகிவிடும். இதைத் தனியாகவும் பயன்படுத்தலாம். மற்ற முறைகளுடனும் சேர்க்கலாம்.

## 24. மேற்படி வேறு

தகரை இலைச் சாறு, கல்யாண முறுக்கு இலைச்சாறு இவை வகைக்குச் சமமாகச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

13 வராகன் எடை (45½ கிராம்) தூய்மைசெய்த கறியுப்பைக் கல்வத்திலிட்டு, முன்கூறிய கலவையைச் சிறுகச் சிறுக ஊற்றி, 1½ நாள் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து அகலில் வைத்து வில்லை மறையும்படி முன் கலந்த சாற்றையும் விட்டு, மேலகல் மூடி, 5 சீலைமண் செய்து 25 பலம் (875 கிராம்) எருமுட்டையில் புடமிட்டு ஆறினபின் எடுத்துச் சோதனைக்குச் சரியாயிருந்தால் நன்மையாம். இல்லாவிட்டால் முன்போல மற்றொரு புடமிட்டு எடுத்துக்கொள்ளவும்.

## 25. மேற்படி வேறு

தூய்மையான கறியுப்பு ஆழாக்கு. அதை பச்சைக் குங்குமப்பூ அரை ஆழாக்கு, உப்பைக் கல்வத்தில் இட்டு, முன்கூறிய பூவைச் சிறுகச் சிறுக இட்டு, 1 சாமம் கைவிடாமல் அரைத்தெடுத்து, ஒரு சிறு கலயத்தில் வைத்து, அதில் ஒரு பலம் (35 கிராம்) வெந்தயக் கீரைச் சாற்றை ஊற்றி வாய்க்கு மூடியிட்டு, 5 சீலைமண் வலுவாய்ச் செய்து வெய்யிலில் உலர்த்தி, 30 அல்லது 35 பலம் எருமுட்டையில் புடமிட்டு ஆறவிட்டு எடுக்க உப்புக் கட்டுப்படும். ஆய்வுக்குச் சரியாக இல்லாவிட்டால் மறுபடியும் ஒரு தடவை அல்லது இரண்டு தடவை செய்யவும். இது மருத்துவத்திற்கும் உலோக மாரணத்திற்கும் பயன்படும். இது செலவுள்ள முறை ஆயினும் அதற்குத் தக்கபடி பற்பல சிறந்த குணங்களுமுண்டு.

**குறிப்பு** ;—நாம் இதில் எழுதும் முறைகளில் இங்குச் சொல்லப் படாத அனேக இரகசியங்களும் இருக்கின்றன. இந்த நூல் முடிந்தவுடன் கடவுள் கிருபையால் இரசவாத சிந்தாமணித் திறவுகோல் என்னும் ஒன்று எழுதப்படும். அதில் அம்முறைகளை மருத்துவத்திலும் மற்ற முறைகளிலும் பயன்படுத்தும் சிறப்பான ஆராய்ச்சிகளை விளக்கமாய் எழுதுவாம். (ஒரு பலத்துக்கு 35 கிராம் என்று கணக்கிடுக.)

## 26. மேற்படி வேறு

தூய்மைசெய்த உப்பு 2 பலம் (70 கிராம்), இதனைக் கல்வத்தில் இட்டு சிறு செருப்படைச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு, 2 சாமநேரம் அரைத்து வில்லைசெய்து வெய்யிலில் உலர்த்தி, அகலிலிட்டு மேலகல் மூடி, 5 சீலைமண் செய்து, 30 பலம் (1050 கிராம்) எருமுட்டையில் புடமிட்டு, ஆறினபின்பு வில்லையை எடுத்து முன்போல சாற்றைவிட்டு முன்போல அரைத்து முன்னைப் போலப் புடமிடவும். இவ்வாறு மறுபடியும் 5 தடவைகள் கூடிய

ஏழு தடவைகள் புடமிட்டு முடிந்தால் ஒருவிதக் கட்டாகும். சூலைவாயு, பக்கசூலை முதலிய பல வாய்வுச் சார்பான நோய்கள், 5 அல்லது 6 வேளை, வேளைக்கு 5 குன்றிமணி எடை உப்பைத் தேனில் குழைத்து உட்கொள்ளத் தீரும்.

## நவச்சாரம்

இலவணவாயு (உப்புவாயு) நீர் (ஜல) வாயு என்னும் இரண்டையும் ஒன்றேடொன்று நேராய்ப் பொருந்தச்செய்வது முடியாதாம். ஆனுல், இவை இரண்டையும் நேர்மாருகப் பலவகைகளில் ஒன்றேடொன்றைப் பொருந்தச் செய்யலாம். இவ்விதச் சேர்க்கையைத்தான் முக்கியமான நவச்சாரக் காற்று (நவச்சார வாயு) எனச் சொல்லப்படுகிறது.

எலும்புகள், தந்தம், மீன், சவ்வுப்பைகள், கொம்புகள், தோல்கள், இறகுகள், பட்டு மற்றும் பலவகை உயிர்வகைகளின் கனப்பொருள்கள் என்னும் இவற்றின் மக்கின துண்டுகளுள் இலவணவாயு (உப்பு வளி உள்ளவைகள் தீயில் அவை சாம்பலாய் எரிக்கப்படும்போது பலவகைக் கூட்டான துர்நாற்றத்தைக் கொடுக்கின்றன. அக்கூட்டத்தில் நவச்சார வாயுவானது அதிகமாகவாவது குறைவாகவாவது எப்போதும் கலந்திருக்கும்.

மெற்கண்ட பொருள்களை வாலையிலிட்டு எரித்து முன் காலங்களில் கழிவாக நவச்சார வாயு அடையப்பட்டது. ஆனுல், தற்காலத்தில் சீமையில் வாயுவை (Gas) உண்டாக்குவதற்காகச் நிலக்கரியை வாலையிலிட்டு, எரித்து ஆவிநீர் இறக்கும்போது சேகரிக்கப்படும் கழிவுகளிலிருந்து வழக்கமாய்ச் சேகரிக்கப்படுகிறது. ஏனெனில், நிலக்கரியிலெல்லாம் சிறிது இலவணவாயுவு (உப்பும்) கலந்திருக்கிறது. அந்த வாயுவானது அதிகத் தீயால் நவச்சார வாயுக் கொடுக்கிறது என்பதே. உயிர்வகைப் பொருள்கள் அழுகிக் கெட்டுப்போகும்போதெல்லாம் அவற்ருல் உண்டாகும் பலகை வாயுக்களில் நவச்சார வாயுவும் கலக்கப்பட்டிருக்கிறது. இஃது நாற்றம் கொண்ட சிறுநீரில் அதிகமாய் இருக்கிறது. இன்னும் இது ஒருவகை கடல் பறவையின் அழுகிய மலத்திலும் சிறப்பாய்க் காணப்படுகிறது. ஆகாயத்திலும் நவச்சார வாயுவின் தொடர்பான அடையாளங்கள் காணப்படுகின்றன. அவை மழை மூலமாகவும் பனி மூலமாகவும் தரைக்குக் கொண்டுவரப் படுகின்றன.

இரும்புத் துருப்பிடிப்பதிலும், ஈரமாய் இருக்கும்போது செந்தூரமாகும் ஒவ்வொரு பக்குவத்திலும் சிறிதளவு நவச்சார வாயு உண்டாகிறது. இந்த வாயுவிற்கு நிறமில்லை, அதிக நெடி கொண்டது. சில உப்பைச் சுண்ணும்புடன் சேர்த்து எரித்து நவச்சார உப்புச் செய்யப்படுகிறது.

நவச்சாரத்துக்கு வாசனை இராது. காரம், எரிச்சல், கசப்பு, சிறுநீர் வெகுட்டு முதலிய குணங்களுள்ளன. இது நீரிலும், சாராயத்திலும் கரைந்துபோகும். இதில் பல குற்றங்களிருக்கின்றமையால், இதைத் தூய்மைசெய்து மருந்துசெய் முறைகளில் பயன்படுத்தவேண்டும்.

இந்தியாவில் பலவகை சிறுநீர் வகைகளைக் காய்ச்சி அவற்றிலிருந்தும் செய்யப்படுகிறது. இது நாட்டு நவச்சாரம் எனப்படும்.

நவச்சாரத்துக்கு நீர்க்கூர்மை, மேகநாதன், செயநீர்க் கர்த்தன், நீர்க்குரு, கங்கைக் குணியெனப் பல பெயர்களுள்ளன. மேலும், 'குணநீராம் செயநீரே சாரத்தாலே' எனவும் சொல்லப் பட்டிருக்கின்றன.

## 27. நவாச்சாரத் தூய்மை

முன் பாகப்படுத்தின பனிநீரைக் கொதிக்க வைத்து அதில் தேவையான சாரத்தைக் கரைத்துச் சூட்டுடன் வடிகட்டிப் பீங்கான் பாத்திரத்தில்விட்டு, வெய்யிலில் வைத்து உப்பாக்கிக் கொள்ளலாம்.

## 28. மேற்படி வேறு

முன் பாகப்படுத்தின *2* படி பனி நீரில் ஒரு வீசை *(1400* கிராம்) நவாச்சாரத்தைக் கரைத்துத் தெளிவிறுத்து வெய்யிலில் வைத்து உப்பாக்கிக்கொள்ளவும், இவ்விதம் மூன்றுதடவைகள் செய்யின் தூய்மையாம். இதுவே பற்பம், செந்தூரம் முறைகளில் சிறந்ததாம்.

## 29. நவாச்சாரக் கட்டு

கட்டின வெடியுப்பு *10* பலம் *(350* கிராம்), கோது கொட்டை முதலியவை நீக்கப்பட்ட பழைய புளி *10* பலம், இவை இரண்டையும் ஒன்ருய்ச் சேர்த்து உரலில் இட்டு, இரும்பு உலக்கையால் மைபோல இடித்துச் சிறு வில்லைகளாகச் செய்து உலர்த்தி,

அகலமாகிய ஓட்டை அடுப்பில் வைத்து, மேற்கண்ட வில்லைகளை அதிலிட்டு சிறு தீயாக எரித்துவர, மேற்படி ஓட்டில் உள்ள வில்லை கள் தீப்பற்றி வெந்து புகைந்துவிடும். ஆறிய பின்னர் எடுக்கக் கடுங்காரச் சுண்ணமாம். இதற்கு வெடியுப்பு சுண்ணம் எனப் பெயர்.

ஒரு பலம் (35 கிராம்) உள்ளதும் நீண்டு சமமானதுமான நவாச்சாரக் கட்டி, நெல்லிகாய்க்கெந்தகம், வீரம், மனோசிலை, இவை வகைக்கு $3\frac{1}{4}$ வராகன் எடை எடுத்துக்கொண்டு இவை மூன்றையும் கல்வத்திலிட்டுப் பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக ஊற்றி, முன்னே கூறிய நவாச்சாரக் கட்டிகு எங்கும் சமமாயிருக்கும்படி கவசம்செய்து வெய்யிலில் உலர்த்திக்கொள்ளவேண்டும்.

ஓர் ஓட்டில் கிளிஞ்சல் சுண்ணும்பை இரண்டங்குலம் உயரம் பரப்பி, அதன்மேல் திருகுக் கள்ளிச் சாம்பல் இரண்டங்குலம் உயரம் பரப்பி, அதன்மேல் முன்னே கூறப்பட்ட வெடியுப்புச் சுண்ணம் இரண்டங்குலம் உயரம் பரப்பி, அதன்மேல் முன் தயாரித்து வைத்த நவாச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேல் வெடியுப்புச் சுண்ணம், திருகுக்கள்ளிச் சாம்பல், கிளிஞ்சல் சுண்ணும்பு என்னும் மூன்றையும் முறையே ஒன்றன்பின்னொன்றாய் அழுத்தி யழுத்தி இரண்டிரண்டு அங்குலம் பரப்பி, அடுப்பின்மீது ஏற்றி முதல் சாமம் *சிறு தீயாய் எரித்தும், இரண்டாம் சாமம் †மட்டமான தீயாய் எரித்தும் ஆறவிட்டு எடுக்கத் தந்தம்போல் கட்டுப்படும். ஆய்வுக்கு ஒத்திராவிட்டால் மறுபடியும் முன்போல் செய்துகொள்ளலாம்.

## 30. மேற்படி வேறு

நஞ்சு முரிச்சான் இலையை அரைத்த விழுது 12 பலம் (420 கிராம்) இதற்குள் 1 பலம் (35 கிராம்) சாரக்கட்டியை வைத்து ஒரு மண் சீலைத் துண்டில் முடிந்துகொள்ளவேண்டும். ஒரு வீசை (1400 கிராம்) இலுப்பை எண்ணெயை ஆழமான மண் குண்டுச் சட்டியில் ஊற்றி அடுப்பேற்றி எண்ணெய் காய்ந்தவுடன் முன் முடிச்சை அதில் துவைத்து எடுத்து நன்றாய் ஆறவைக்கவேண்டும். பின்பு, எண்ணெய் நன்றாய்க் கொதிக்கும்போது முன் முடிச்சை முன்போல் துவைத்து எடுக்கவேண்டும். இவ்விதம் முடிச்சை ஆற வைத்து, ஆறவைத்து எண்ணெய் கொதிக்கும்போது 5 தடவைகள்

* ஒரு சுடர் கொண்டெரியும் தீ (தீபாக்கினி).

† இரண்டு விரல்கள் கனமுள்ள இரண்டு விறகுகளால் எரிப்பது (கமலாக்கினி)

தோய்த்து ஆறவைத்தெடுக்க நவாச்சாரம் கட்டுப்படும். இதைத் தோய்க்கும்போது எண்ணெய் பொங்குமாகையால் சட்டியானது ஆழமாயிருப்பதுடன் சட்டியில் அரைப்பாகந்தான் எண்ணெய் நிற்க வேண்டும்.

இவ்விதம் செய்த நவாச்சாரத்தை, 29ஆம் பாகத்திற் சொன்னபடி செய்துகொண்டால் மிகவும் சிறப்பானதாயிருக்கும். இதைப் பின் காணும் வகையாகவும் செய்துகொள்ளலாம்.

## 31. மேற்படி வேறு

முக்கால் ஆழாக்கு அளவுள்ளதும் அடியில்லாததுமான மண் அல்லது, இரும்பு ஆழாக்கு 1, இதைச் சமமான ஒரு பலகையின் மீது நிறுத்தி வைத்து மேற்சொன்ன வெடியுப்புச் சுண்ணத்தில் கொஞ்சம் நஞ்சுமுறிச்சான் இலைச்சாற்றை அல்லது, நீரைத் தெளித்துக் கொஞ்சம் இளகும்படி செய்து முன் நட்டு வைத்திருக்கிற ஆழாக்கில் அரைப்பாகம் நிறைத்தழுத்தி, முன் சொன்னபடி நஞ்சு முறிச்சான் இலைப் பக்குவப்படி கட்டின நவாச்சாரக்கட்டி 1 பலம் (35 கிராம்), மேடு பள்ளம் முதலியவை இல்லாமற் சமமாகப் பார்த்து முன் ஆழாக்கில் வைத்து அதன் மேலும் முன்னே கூறிய பக்குவப்படி செய்த வெடியுப்புச் சுண்ணத்தைப் போட்டமுத்தி, இந்த ஆழாக்கைச் சமமான ஒரு ஓட்டின் மீது வைத்து ஒரு சாமம் ஒரு சுடர்த் தீயாகவும், 3 சாமம் பெருந் தீயாகவும் எரிக்க வேண்டும். எரிக்கும்போது, 5 நாழிகைக்கொரு தடவை முன்குறிப்பிட்ட ஆழாக்கைக் கீழ்மேலாகத் திருப்பித் திருப்பி வைத்து வரவும் வேண்டும். இவ்விதமே இரண்டாந் தடவையும் செய்ய நல்ல கட்டாகும். இரண்டாந் தடவையில் புதிதான வெடியுப்புச் சுண்ணம் சேர்த்துக்கொள்ளவும். முதல் தடவை செய்த வெடியுப்புச் சுண்ணத்தை நீக்கிவிடவும்.

## 32. மேற்படி வேறு

ஏழு பலம் (245 கிராம்) கம்பி வெடியுப்பை இரும்புச் சட்டியில் இட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து வெடியுப்பு உருகியவுடன், முன் பாகத்திற் சொன்னபடி தூய்மை செய்யப்பட்ட தலைமயிர் ஒரு சிட்டிகை போடப் பற்றி எரியும், பின்பு கத்தியால் கீழ்மேலாகப் புரட்டிக் கொடுக்கவேண்டும். மறுபடியும் முன்போல ஒரு சிட்டிகை போடவேண்டும். அஃது எரிந்து அடங்கியவுடன் கத்தியால் கீழ்மேலாகப் புரட்டிவிட வேண்டும். வெடியுப்பில் போடும் மயிரானது பற்றி எரிந்து வாங்கப்படாமல் போட்டது போட்டதுப்போலிருக்கும் வரையில் மேற்கண்டபடி செய்து, மயிரைப் போடுவதை நிறுத்திவிடவேண்டும். பின்பு, முடிவில்

கால்மணி நேரம் அடுப்பை எரித்துச் சட்டியிலுள்ளதைக் கீழ்மேலாக நன்ருய்ப் புரட்டிவிட்டுக் கீழிறக்கி ஆறினபின்பு எடுத்து வைத்துக் கொள்ளவேண்டும். இதற்காகச் சுமார் $3\frac{1}{2}$ அல்லது, 4 பலம் (123 அல்லது 140 கிராம்) மயிர் செல்லும்; ஆயினும், எப்போதும் சிறிது அதிகமாகவே சேகரித்துக் கொள்வது நல்லது. அல்லது, முன் சொல்லியிருக்கிற மயிர் சேர்ந்த வெடியுப்பையும் பயன்படுத்தலாம்.

ஒன்று அல்லது, ஒன்றரைப் பலம் (52 கிராம்) நவாச்சாரக் கட்டியை எல்லாப் பக்கமும் சமபாகமாகச் சீவிக்கொள்ளவேண்டும். பின்பு $\frac{3}{4}$ வராகன் எடை (8·25 கிராம்) மயில்துத்தத்தை முட்டை வெண்கருவால் நன்ருயரைத்துக் கட்டியின்மீது கவசம் செய்து வெய்யிலில் வைத்து உலர்த்தவேண்டும். பின்பு $1\frac{1}{2}$ வராகன் எடை ($16\frac{1}{2}$ கிராம்) மனேசிலையை வெள்ளைக்கருவை விட்டு அரைத்து முன் தயாரித்த கட்டியின்மீது முன்போல் கவசம்செய்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். அதன்பின்பு, 3 வராகன் எடை ($10\frac{1}{2}$ கிராம்) படிக்காரத்தை முட்டை வெள்ளைக்கருவை அரைத்து முன் கட்டியின்மீது கவசம்செய்து வெய்யிலில் நன்ருய் உலர்த்திக் கொள்ளவேண்டும். இதன் பின்பு 5 பலம் (175 கிராம்) முன் தயாரித்த வெடியுப்பை முட்டை வெள்ளைக்கரு விட்டரைத்து முன் கட்டிக்குக் கவசம் செய்து வெய்யிலில் நன்ருய் உலர வைத்து, இக்கவசம் கொள்ளும்படியான ஒரு கலயத்திற்குள் வைத்து வாய்க்கு மூடியிட்டு 5 சீலைமண் செய்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவேண்டும்.

ஒன்றரைப்படி பானையொன்றில், அரைப்படி ஆற்று மணல் நிறைத்து, அதன்மேல் முன் தயாரித்து வைத்த கலயத்தை வைத்து, அதன்மேல் பானை நிறைய மணல்கொட்டி அடுப்பேற்றி 4 சாமம் (12 மணி நேரம்) சிறிது சிறிதாகத் தீயை அதிகரித்துக் கலயத்திலுள்ள பொருள்கள் எரிந்து போகும்படியாக எரித்து ஆறவிட்டு எடுக்க, நவாச்சாரமானது எடை குறையாமல் கட்டிப்போம். இக் கட்டானது பலவிதமாய்ப் பயன்படுத்தப் படுகின்றபடியால் இதன் சிறப்பான முறையும் இதன்திறவு கோலில் எழுதப்படும்.

## 33. மேற்படி வேறு

நன்ருய் வெந்த கற்சுண்ணும்பு 4 படி இதனை ஒருதட்டிற் கொட்டிக் காற்றுப்பட வைத்திருந்தால், சுண்ணும்பு நீருகி மலர்ந்துபோகும். பின்னர், அதிலுள்ள கற்களையெல்லாம் பொறுக்கி நீக்கிவிட்டு மலர்ந்த சுண்ணப் பொடியை மாத்திரம் வைத்துக்கொள்ளவேண்டும்.

நவாச்சாரக் கட்டி 1 பலம் (35 கிராம்). இது நான்கு பக்கமும் சமமாய் இருக்கவேண்டும். இக்கட்டியை ஒரு பீங்கான் தட்டில் வைத்துக்கொண்டு, ஒரு எலுமிச்சம்பழத்தை இரண்டாக அறுத்து ஒரு பாதியை மேற்சொன்ன நவாச்சாரக் கட்டியின்மீது கொஞ்சந் தேய்த்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். அந்தப் பக்கத்தைத் திருப்பி மறுபக்கத்தில் முன்போல எலுமிச்சம்பழத் துண்டைத் தேய்த்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். இவ்விதம் ஒவ்வொரு பக்கமாக நான்கு பக்கங்களிலும் அந்தத் துண்டைத் தேய்த்துக் கொஞ்சம் இளகும்படி செய்து உடனே காயவைக்கவேண்டும். இவ்விதம் அந்தத் துண்டிலுள்ள சாற்றையெல்லாம் செலுத்தவும். பின்பு $\frac{1}{4}$ வராகன் எடை (2·75 கிராம்) தரமான மனோசிலையை முன் தயாரித்த எலுமிச்சம்பழத்தின் மறு பாதியின் சாற்றை ஊற்றி அரைத்து, நவாச்சாரக் கட்டியின்மீது நான்கு பக்கங்களும் தடவி வெய்யிலில் உலர்த்திக்கொள்ளவேண்டும். இரண்டரை பலம் (87 கிராம்), கட்டின வெடியுப்பைத் தூள்செய்து இரண்டு பங்காகச் செய்து ஒரு பங்கை, சதுரமான ஒரு துண்டுத் துணியில் பரப்பி, அதன்மேல் முன் தயாரித்த நவாச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேல் மறுபங்கு வெடியுப்புத் தூளைப்போட்டு, நவாச்சாரக் கட்டியானது மத்தியில் இருக்கும்படியாகப் பொட்டலம் கட்டிக்கொள்ளவேண்டும்.

பின்னர், ஒரு பானையில் முன் தயாரித்து வைத்த கற்சுண்ணப் பொடியில் அரைப்பங்கைப் போட்டு நன்முய் விரலால் அழுத்தி அதன்மேல் முன் பொட்டலத்தை வைத்து அதன்மேல் மற்ற பாதி சுண்ணப்பொடியையும் போட்டழுத்தி விடவேண்டும். சுண்ணமானது பானையின் வாய்மட்டம் இருக்கவேண்டும். பின்பு, பானையின் வாய்க்குச் சாணக்கி மூடிச் (மண் தட்டு) சுண்ணும்பையும் மண்ணையும் சேர்த்தரைத்து சேலைத் துண்டிற் தடவி, மூன்று சீலைமண் செய்து, அடுப்பேற்றி, 4 சாமம் சிறுகச் சிறுகத் தீயை அதிகப்படுத்தி முடிவில் பெருந்தீயாய் எரித்து, ஆறவிட்டு எடுத்துக் கட்டியின்மீதுள்ள கவசம் முதலியவைகளை கத்தியால் சீவி, நீக்கி, கட்டியின்மீது மனோசிலையின் மஞ்சள் நாற்றம் இருக்குமாகயால் அதையும் நீக்கிவிடவேண்டும். இது வெண்மையாகவும் வைத்த எடை சரியாகவும் இருக்கும். இதன் மேலான நடை முறைப் பயன்கள் திறவுகோலிற் சொல்லப்படும்.

## 34. மேற்படி வேறு

இரண்டு படி கொள்ளும்படியான ஒரு தோண்டியில் அரைப் பாகம் யானை லத்திகளை (மலம்) நிறைத்து, அதன்மேல் 5 பலம் (175 கிராம்) நவாச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேலும்

யானை லத்திகளைப் போட்டு நிறைக்கவேண்டும். ஆனால், தோண்டியில் $\frac{7}{8}$ பாகம் நிறைந்திருக்கவேண்டும். தோண்டியின் அரைக்கால் பாகம் வெறுமையாய் இருக்கவேண்டும். பின்பு, அதன்மேல் யானையின் சிறுநீரைத் தோண்டி நிறையவிட்டு, காலை முதல் மாலை வரையில் வெய்யிலில் வைத்து எடுத்துப் பத்திரப்படுத்தவேண்டும். மறுநாளும் இவ்விதமே காலை முதல் மாலை வரையில் வெய்யிலில் வைத்தெடுத்து வைக்கவேண்டும். மூன்றும் நாளும் அவ்விதமே செய்து நான்காம் நாள் தோண்டி வாய்க்கு அகல்மூடி, 5 சீலைமண் செய்து, 50 எருமுட்டையில் புடமிட்டு ஆறிய பின்னெடுக்க, நவாச்சாரமானது இறுகிக் கட்டிப்போகும். அப்படி இல்லாவிட்டால் மறுபடியும் ஒருமுறை அல்லது, இரண்டுமுறை முன் போலச் செய்யக் கட்டும். இதன் மேலான நடைமுறைப் பயிற்சியும் திறவுகோலில் எழுதப்படும்.

குறிப்பு:—மேற்கண்ட முறைப்படியே பாடாணத்தையும் கட்டிக்கொள்ளலாம்.

## 35. மேற்படி வேறு

நவாச்சாரக் கட்டி 1 பலம் (35 கிராம்), கட்டின வெடியுப்பு, காரமான அப்பளாக்காரம் வகைக்கு 2 பலம் இவை இரண்டையும் நுண்ணிய தூளாகச் செய்துகொள்க. ஒன்றரைப் படி கொள்ளும்படியான ஒரு பானையில் முக்கால் படி) ஆற்று மணலைக் கொட்டி அதன்மேல் ஒரு பெரிய ஓலைச் சுருளை வைத்து அதில் அரைப்பாகம் முன்கூறிய தூளில் அரைப்பாகம் போட்டு விரலால் நன்றாய் அழுத்தி நவாச்சாரக் கட்டியை வைத்து அதன்மேல் முக்கால் படி ஆற்று மணலைக்கொட்டி, பானை வாய்க்குச் சாணக்கி மூடி, 3 மண்சீலை செய்து அடுப்பேற்றி, 2 சாமம் எரித்து, ஆறின பின் கட்டியை எடுத்து, அதன்மேல் ஒட்டிக்கொண்டிருக்கும் கவசத்தைச் சீவியெடுத்துக்கொள்ளவும். அவசியமானால், மறுபடியும் ஒன்றிரண்டு தடவைகள் செய்ய நல்ல கட்டாகும். இதன் சிறந்த நடைமுறைப் பயிற்சியைத் திறவுகோலில் பார்வை இடவும்.

## 36. மேற்படி வேறு

ஒரு புதுச்சட்டியில், 1 படி, காட்டுச் சிறுகீரைச் சாற்றை விட்டு, அதில், 1 பலம் (35 கிராம்) நவாச்சாரக் கட்டியைப் போட்டு அடுப்பேற்றி, சாறு சுண்ட எரித்து எடுத்துக்கொள்க,

பின்பு, ஒரு சிறு பானையில் அரைப்படி கற்சுண்ணத் தூளைக் கொட்டிச் சமமாக அழுத்தி அதன்மேல் ஓர் ஓலைச் சுருளை வைத்து, அதன் மேல் முன் தயாரித்து வைத்துள்ள நவாச்சாரக் கட்டியை அதன் மேல் ஒட்டிக்கொண்டிருக்கும் கீரைச் சாற்றின் திப்பியைக் கவசத்துடன் வைத்து, அதன் மேலும் அரைப்படி சுண்ணப்பொடியைப் போட்டழுத்தி அடுப்பேற்றி, 2 சாமம் எரித்து ஆறின பின் எடுத்துக்கொள்ளவும். எரிப்பு மிதமாயிருந்தால் கட்டியாயிருக்கும். எரிப்பு அதிகமானுல் தூளாகிச் சுண்ணமாய்விடும்.

## 37. மேற்படி வேறு

தூய்மைசெய்த இரண்டு பலம் (70 கிராம்) கிருட்டிண அப்பிரேகத்தைக் கலவத்திலிட்டு, மனிதனின் சிறுநீரைச் சிறுகச்சிறுக ஊற்றி இரண்டு சாமமரைத்து வில்லை தட்டி வெய்யிலில் உலர்த்தி எடுக்க வேண்டும். ஏழாங்காய்ச்சல் வெடியுப்பு 10 பலம் (350 கிராம்). இதனைப் பொடித்துக்கொள்ள வேண்டும், முன்னுலர்த்தப்பட்ட அப்பிரேகத்தையும் கலந்து இரண்டு பங்காகச் செய்து வைத்துக் கொள்ளவேண்டும். பின்பு முக்காற்படி கொள்ளும்படியான ஒரு சிறு தோண்டியில் அரைவாசிக் கிளிஞ்சில் சுண்ணப் பொடியை நிறைத்து விரலால் நன்ருயழுத்திக் கெட்டிப்படுத்தி அதன்மேல் பனையோலைத் துண்டுகளைப் பரப்பி, அதன்மேல் முன் தயாரித்து வைத்திருக்கிற வெடி அப்பிரேகத்தின் ஒரு பங்கைப் பரப்பி அதன்மேல் ஒரே கட்டியான இரண்டு பலம் (70 கிராம்) நவாச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேல் மறு பங்கு வெடி அப்பிரேகப் பங்கைப் போட்டு, அதன்மேல் கிளிஞ்சில் சுண்ணப் பொடியைத் தோண்டி நிறைய நிறைத்துக் கையால் நன்ருய் அழுத்திக் கெட்டிப்படுத்தி, தோண்டி வாய்க்கு மூடியிட்டுப் பலமாய் ஏழு சீலைமண் செய்துலர்த்தி அடுப்பேற்றி, சிறுகச் சிறுகத் தீயை அதிகரித்து, 4 சாமம் எரித்து ஒரு நாள் ஆறவிட்டெடுக்கக் கட்டிப்போகும். தேவையானுல் இரண்டாந் தடவையும் செய்து கொள்ளலாம். இது பக்குவமாய்க் கைப்பாகப்படி செய்து முடித்தால், இதைக் கரியில் வைத்துருக்கலாம். இன்னம் கட்டின வெடியுப்பைச் சேர்த்தால் மேலான குணமுண்டாகும்.

## 38. மேற்படி வேறு

தேவையான அளவு நவாச்சாரத்தைக் கட்டியாய் எடுத்து, அதன்மேல் நான்கு பக்கமும் வாலிப வயதையுடைய மனிதன் தலைமயிரைப் புளியிலைக்கனம் சுற்றி ஓட்டில் வறுக்கவேண்டும். வறுத்து மயிர் எரிந்து போனவுடன் எடுத்தாறவைத்து, அதன்

மேல் முன்னைப்போலவே மயிரைச் சுற்றி வறுக்கவேண்டும். பின்பாறவைக்கவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் 7 அல்லது 8 தடவைகள் செய்து, ஆய்வுக்கு ஒத்திருந்தால் நன்மையாம். இல்லாவிட்டால் ஆய்வுக்குக் கைக்கூடும் வரையில் செய்ய வேண்டும். வறுப்பதைப் பார்க்கிலும் கரி நெருப்பிற்போட்டுச் சுட்டுக்கொள்ளலாம். இது இத்தனை தடவையில்தான் கட்டுப்படு மெனத் திட்டமாய்ச் சொல்ல முடியாது. மேலும், கைப்பாகப் பழக்கம் அதிகம் வேண்டும். கருத்துடன் திருப்பித் திருப்பிச் செய்யின் பழக்கம் வழி காண்பிக்கும்.

## 39. மேற்படி வேறு

இரண்டு பலம் (70 கிராம்) எடையுள்ள நவாச்சாரக் கட்டி யின்மீது கறுப்புநிறக் கோழி மலத்தை ஒரு புளியிலைக்கனம் கவசம் செய்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். அன்றுமுழுவதும் கட்டியைப் புரட்டிப் புரட்டி வைத்து வரவும் வேண்டும். மறு நாள் அக்கட்டியின்மிது முன் கோழி மலத்தை முன் அளவு கவசம் செய்து முன்போலவே வெய்யிலில் உலர்த்தவேண்டும். இவ்விதம் நாள்தோறும் கவசம் செய்து அன்றுடம் ஈரமில்லாமல் நன்றாய் உலர்த்திவிடவேண்டும். காயாமல் ஈரமாயிருந்தால் எத்தனை நாட்சென்று காய்ந்தாலும் நாளைக் கணக்கிடாமல் காய்ந்த பின்பே மறுகவசம் ஏற்றவேண்டும். பன்னிரண்டு தடவைகள் ஒன்றன்பின்னொன்றாய் நன்றாயுலர்ந்தபின் கவசம் செய்துகொள்ள வேண்டும்.

கட்டின வெடியுப்பு 2 பலம் (70 கிராம்), தூய்மைசெய்யப் பட்ட பூநீர் 2 பலம் (70 கிராம்). இவ்விரண்டையும் கல்வத்தி லிட்டுப் பொடித்துக் குப்பைமேனியிலைச் சாற்றைச் சிறுகச்சிறுக ஊற்றி, 2 சாமம் அரைத்து முன் தயாரித்துவைத்த நவாச்சாரக் கட்டியின்மீது உலரவுலரக் கவசம் செய்து முடிவாய் ஈரமில்லாமல் நன்றாய் உலரவைத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, ஒரு பானையில் அரைப்படி கறுப்பு நிறமான மணல் பரப்பி, அதன் மேலும் அரைப்படி மேற்படி மணல் கொட்ட வேண்டும். மணலானது, பானை வாய்வரையில் நிறைந்திருக்க வேண்டும். பானையின் வாயைச் சாணக்கியால் மூடி, 5 அல்லது 7 சீலைமண் வலிமையாகச் செய்து அடுப்பேற்றி, சிறிது சிறிதாய்த் தீயை அதிகப்படுத்தி, 2 சாமம் எரித்து அடுப்புடன் ஆறவிட்டு மறுநாள் பிரித்துக் கவசம் நீக்கி, எடுத்துக்கொள்ளவும். தேவை யானல் இன்னொரு தடவையும் செய்துகொள்ளலாம்.

**குறிப்பு**:—தூயப் பூநீர் இல்லாவிட்டால் பின்காணும் அண்ட பற்பத்தைச் சேர்த்துக்கொள்க. அஃது இது. அவயம் வைத்த கோழி முட்டை ஓடுகளை அப்பளாக்கார நீரில் வேகவைத்து உள் சவ்வைப்போக்கித் தூய்மைசெய்து வெய்யிலில் உலர்த்திக் கலவத்திலிட்டுப்பொடித்துக்கோவைப் பூச்சாற்றைவிட்டரைத்து 2 சாமம் அரைத்து வில்லை செய்து காயவைத்து அகலில் வைத்து மேலகல் மூடி, சீலைமண் செய்து புடமிடப் பற்பமாம். இதுவே அண்டபற்பம். இதனைத் தூய பூநீருக்குப் பதிலாகச் சேர்த்துக் கொள்ளலாம். தனியாகவும் பயன்படுத்தலாம். முன் சொல்லப் பட்ட வெடியுப்புக் கட்டை இதிற் சேர்த்துக் கொள்ளலாம்.

## 40. மேற்படி வேறு

இரண்டு பலம் (70 கிராம்) எடையுள்ள நவாச்சாரக் கட்டி 1. கட்டின வெடியுப்பு 4 பலம் (140 கிராம்). நல்ல தண்ணீரிலுள்ள கிளிஞ்சல்கள் 4 பலம் (140 கிராம்). இவை இரண்டையும் தனித் தனித்தூள் செய்து வைத்துக் கொள்ளவேண்டும். கோவை இலையை உலர்த்தி இடித்துத் தூள்செய்த சூரணம் 10 பலம் (350 கிராம்), அல்லது 15 பலம் (425 கிராம்). ஒரு கலயத்தில் அரைப்பங்கு கிளிஞ்சில் தூளை இட்டுப் பரப்பி, அதன்மேல் அரைப் பங்கு வெடியுப்புத் தூளைப் பரப்பி, அதன்மேல் நவாச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேல் மறு அரைப்பங்கு வெடியுப்புத் தூளையும் அதன்மேல் மறு அரைப் பங்கு கிளிஞ்சில் தூளையும் முறையே இட்டு அழுத்தி அதன்மேல் கோவை இலைச் சூரணத் தைப் போட்டழுத்தி வைக்கவேண்டும். கலயத்தின் வாய்மட்டம் வரையில் நிறைந்திருக்க வேண்டும். கலயத்தின் வாய்க்கு மூடியிட்டு, 5 அல்லது 7 சீலைமண் செய்து உலர்த்தி அடுப்பேற்றி ஒரே வகையான விறகால், ஆரம்பத்தில் சிறு தீயாக எரித்துச் சிறுகச் சிறுகத் தீயை அதிகப்படுத்தவேண்டும். கலயத்தின் மூடியின்மீது கொஞ்சம் நெற்களைப் போட்டு வைக்கவேண்டும். அந்த நெல்லானது கருகிவிட்டால் பதமென தெரிந்து தீயை நிறுத்திவிட வேண்டும். நவாச்சாரங் கட்டுப்பட்டுப்போகும். தேவையானல் மறுமுறையும் செய்யவேண்டும்.

## 41. மேற்படி வேறு

ஒரு பலம் (35 கிராம்) எடையுள்ள நவாச்சாரக் கட்டி 1, கட்டின வெடியுப்பு, படிக்காரம் இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்). இவற்றைத் தனித்தனி நுண்ணிய தூளாகச் செய்து கொள்க. மருதோன்றியிலை 2 பலம் (70 கிராம்). முன்னர்,

மருதோன்றியிலையை அரைத்து இரண்டு பங்காக்கி, ஒரு பங்கை ஓர் இரும்புக் கரண்டியின் மத்தியில் தளமாகத்தடவி, அதன்மேல் அரைப்பலம் (17½ கிராம்) வெடியுப்புத் தூளைப் பரப்பி, அதன்மேல் அரைப்பலம் (17½ கிராம்) படிக்காரத் தூளைப் பரப்பி, அதன்மேல் நவாச்சாரக் கட்டியை வைத்து அதன்மேல் மறு அரைப்பலம் (17½ கிராம்) படிக்காரத் தூளைப்போட்டு அதன்மேல் மறு அரைப்பலம் வெடியுப்புத் தூளையும் போட வேண்டும். அதன்மேல் மறுபங்கு மருதோன்றி இலையை அரைத்த விழுதையும் வைத்துப் பொதிந்து, சர உலையில் வைத்து ஊத ஆரம்பித்துச் சிறுகச் சிறுகத் தீயை அதிகப்படுத்தி வெடியுப்பு எரிந்துபோகும் பக்குவத்தில் எடுத்து ஆறவைத்துக் கட்டியின் மீதுள்ள கவசம் முதலியவைகளைக் கத்தியால் சுரண்டி நீக்கிவிட வேண்டும். வெண்மையாய்க் கட்டுப்பட்டுப்போகும். தேவையானல், இன்னொரு தடவையும் செய்துகொள்ளவும். இதைக் கைப் பழக்கமாய்ச் செய்யவேண்டும். இல்லாவிடின் வெற்றி கிட்டாது.

## 42. மேற்படி வேறு

ஐந்து பலம் (175 கிராம்) வெடியுப்பை இரும்புச் சட்டியிலிட்டு உருக்கித் தூய்மைசெய்த மயிரைச் சிறுகச் சிறுகத் தூவிவர வேண்டும். தூவிய மயிரானது குப்பெனப் பற்றி எரியும். இவ்விதம், தூவி வரும்போது மயிரானது குப்பெனப் பற்றி எரியாமல் போட்ட மயிரானது கருகினல் பக்குவப்பட்டுவிட்ட தென்று கீழிறக்கி ஆற வைத்தால் வெடியுப்பு இளகலாய்விடும்.

பின்பு, ஒன்றரைப் பலம் (52½ கிராம்) எடையுள்ள நவாச் சாரக் கட்டி 1. ஒரு வராகன் எடை மனேசிலையை எலுமிச்சம் பழச்சாற்றை ஊற்றி மைபோல அரைத்து அந்தக் கட்டியின்மீது சமமாகக் கவசம் செய்து நெருப்பில் வாட்டி உலர்த்திக்கொள்ள வேண்டும்.

முன் தயாரித்து வைத்த வெடியுப்பு இளகலாயிருந்தால் தனியாய் அரைத்துக் கொள்ளவேண்டும். அப்படி இளகலாக இல்லாவிட்டால் எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு அரைத்துக் கொள்ளவேண்டும். இதிற் கொஞ்சமெடுத்து முன் தயாரித்து வைத்திருக்கும் நவாச்சாரக் கட்டியின்மீது கவசம் செய்து நெருப்பில் வாட்டி உலர்த்தவேண்டும். இவ்விதம் அரைத்திருக்கிற வெடியுப்பையெல்லாம் சிறுகச்சிறுகக் கவசம் செய்து வாட்டி நன்ருயுலர்த்தி வெடிப்பில்லாமல் தயாரித்துக் கொள்ளவும். கட்டியின்மீது வெடியுப்புக் கவசம் சுமார் ஓர் அங்குலம் இருக்க

வேண்டும். பின்பு அக்கட்டியை ஒரு மண் கிண்ணத்திற்குள் வைத்து மறு கிண்ணம் மூடி வாய்க்கு ஏழு சீலைமண் செய்து உலர்த்தி இரண்டு படி கொள்ளும்படியான ஒரு பாண்டத்தில் அரைப்படி மணல்கொட்டி அதன்மேல் தயாரித்து வைத்ததை வைத்து, மேலும் ஒருபடி மணல்கொட்டி, சிறு தீயாக ஆரம்பித்துச் சிறிது சிறிதாக அதிகரித்துப் பெருந் தீயாக, 4 சாமம் (12 மணி நேரம்) எரித்து ஆறவிட்டு எடுத்து, கட்டியின்மீதுள்ள கவசம் முதலியவைகளை நீக்கி வைத்துக்கொள்க. அவசியமானால் மறு முறையும் இவ்விதமே செய்துகொள்ளவேண்டும்.

நாம் இதுவரையில், செயநீர்; திராவகம் முதலியவைகளில் பயன்படும் சரக்குகளில் முதன்மையான சரக்குகளான பூநீர், வெடியுப்பு, கறியுப்பு, நவாச்சாரம் என்னும் இவற்றின் தூய்மை, கட்டு, முதலியவைகளைத் தெரிந்துகொண்டோமாயினும் மேற் கண்ட முறைகளைச் சொல்லுமுன் அவற்றுள் உதவிச் சரக்குகளான சிலவற்றின் பக்குவ முறைகளையும் சொல்லவேண்டியதும் முக்கிய மாகையால் அவற்றுள் சிலவற்றையும் இங்கு முன்னர்க் கூறுவாம்.

## வீரம்

இது வெள்ளை நிறமானதாயும், எவ்வித வாசனையும் இல்லாத தாயும், ஒருவித காரமுள்ளதாயும் இருக்கும். இது சிறிய பளிங்குக் கற்களைப்போலாவது, அல்லது பெரிய படிகக் கல்லைப்போலாவது இருக்கும். இதை நெருப்பிலிட்டால் வெகு இலகுவாய் உருகும். 295° (டிகிரிக்கு) எரித்தால் பொங்கிப் புகையாய்ப் பறந்துவிடும். இதைப் பதங்கித்தல் (பிளவுபடுத்தினால்) அரைப் பிரகாசமான, அல்லது, வெள்ளையான பளபளப்புள்ள பொடியாகும். வீரமானது நீரிலும், சாராயத்திலும், * ஈதரிலும் தாராளமாய்க் கரையும். நீரோடு எவ்விதத் தடையுமின்றிக் கலந்துபோகும். இன்னம் கறியுப்பு, நவாச்சாரம் என்னும், இவற்றுளொன்றோடு சேர்க்கப் பட்டால் அதிசீக்கிரம் கரையும் தன்மையுடையதும், இரசம் தொடர்பான கன பொருள்களில் நீரில் கரையத்தக்கதான இதுவே மகா முக்கியமானதுமாம்; ஆகையால், இது செயநீர் களிலும் திராவகங்களிலும் அதிகமாகச் சேர்க்கப்படுகிறது. இந்தக் கட்டியின்மீது கொஞ்சம் சுண்ணும்பைத் தடவினால் சிவந்து காணப்படும். வீரப்பொடியைச் சுண்ணும்பு நீருடன் கலந்தால் மஞ்சள் நிறமான வண்டல் அடியில் படிந்து, பின்னர் அது சிவந்து போகும். இது பலமான பூதநாசகாரி என்பர். அதாவது, இதை உட்கொண்டால் உடலிலுள்ள தாதுக்கள் அழுகிப்போகாமல்

* காற்றோடு தொடர்புடைய கண்ணிக்குப் புலனாகாத ஓர் ஆற்றல்.

இருக்க செய்கிற மருந்து. இதை மருந்துகளோடு சேர்த்தால், சரக்குகள் மடிந்து, மக்கித் தம் குணங்கள் கெட்டுப்போகாமல் காக்கும் குணமுள்ள மருந்து என்பதே. வீரமானது வைப்புச் சரக்கு. இதன் வைப்புப் பல நூல்களிலும் பற்பல வகைகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆயினும், அவற்றுள் முதன்மையான இரண்டொரு முறைகளையும் இங்கு எழுதுவதால் அதன் தோற்றம், அதன் தொடர்பான சரக்குகள் முதலியவைகளைத் தெரிந்துகொள்ள ஏதுவாகும் என்பதே கருத்தாகும்.

## 43. வீரவைப்பு

தூய்மைசெய்த வெடியுப்பு, நவாச்சாரம், கறியுப்பு, படிக்காரம் துருசு, அன்னபேதி இவை வகைக்கு 3 பலம் (105 கிராம்). தூய்மைசெய்யப்பட்ட ரசம் 18 பலம் (630 கிராம்). இவற்றைக் கல்வத்தில் இட்டுக் கெந்தகத் திராவகம்விட்டு, 8 சாமம் அரைத்துக் குப்பிக்கேற்றி, பக்குவமாக எரித்துக்கொள்வதேயாம். இந்த வீரத்துடன் மேற்கண்ட சரக்குகளில் ஒவ்வொரு பலம் (35 கிராம்) தடவைக்குத் தடவைச் சேர்த்து முன்சொன்ன முறைப்படி மீண்டும் மீண்டும் எறித்தெடுத்த வீரமே திராவகம் முதலியவைகளுக்கு மேன்மையானது. இப்பொழுது கடையில் விற்கப்படுவதெல்லாம் பின்காணும் விதமாய்ச் செய்யப்படுவதே ஆகையால், அவ்வளவாய்ச் சிறந்த குணத்தைத் தரமாட்டா என உறுதிப்படுத்தி வைக்கவேண்டியது.

ஆனல், இம் முறைகள் பலவாருய்ச் சொல்லப்பட்டிருப்பினும் முன் சொன்னபடி பூநீரைத் தனியாய்ப் பக்குவம் செய்துவரும் போது ஒருவித உப்புண்டாகிறது. அதற்கே வீரமெனப் பெயர். கடையில் விற்பதும் மற்ற முறைப்படி செய்யப்படுவதும் வீரமன்று எனச் சொல்வதும் சிலர் துணிபு.

ஆங்கில முறை :—இரண்டு பவுண்டு இரசத்தை, $21\frac{1}{2}$ அவுன்ஸ் கெந்தகத் திராவகத்துடன் சேர்த்து, இரசபற்பம் ஆகிறவரையில் எரித்துக் காய்ச்சி நன்ருய்க் குளிர ஆறினபின்பு, $1\frac{1}{2}$ பவுன் கறியுப்பைச்சேர்த்து பீங்கான் கல்வத்தில் பொடித்துப், பதங்கப் பாண்டத்தில் (மூசை) இட்டு முறைப்படி செய்து சிறுகச் சிறுகத் தீயை அதிகரித்துப் பதமாயின பின்னர், ஆறவிட்டு எடுத்துக் கொள்வதேயாம்.

வீரத்துக்கு சவ்வீரம், சரக்குச்சுண்ணம், வெள்ளைச் செந்தூரம், வகாரத்தின் தலை எனப் பல பெயர்களுமுண்டு. மேல்நாட்டில் செய்யப்பட்டு வருவதால் பறங்கிப்பாடாணம் என ஒரு பெயரும் உண்டு.

## 44. வீரத்தூய்மை

தேவையான அளவு வீரத்தைப் பொடித்து முன் பக்குவப் படுத்திய பனிநீரைவிட்டு, கல் மூடியுள்ள ஒரு கண்ணுடிக் குப்பியி லிட்டு, குப்பிவாய்க்கு மூடியிட்டு வெய்யிலில் நன்ருய்ச் சூடேறும் படி வைத்து அடிக்கடி குலுக்கி வரவேண்டும். இவ்விதம், இரண்டு நாள் செய்து இரவில் பனியில் வைத்துவர உப்புக்கட்டும். அவ்விதம் கட்டிய உப்பைச் சேகரித்து எடுத்ததே தூய்மையான வீரமாம்.

## 45. மேற்படி வேறு

வீரக்கட்டி 1 பலம் (35 கிராம்), சீனக்காரம் 3 பலம் (105 கிராம்) இரும்பு சட்டியில் சீனக்காரத்தை உருக்கி நீரானவுடன் வீரக் கட்டியை இட்டு, இரும்பு கத்தியால் புரட்டிக்கொண்டு வரவேண்டும். கட்டியானது கீழே அழுந்திவிடாமல் அவ்வப்போது கொஞ்சம் தூக்கிக்கொடுத்து வரவும்வேண்டும். இப்படிச் செய்து சீனமெல்லாம் வறண்டபின் எடுத்து வைத்து ஆறினபின் கட்டியின்மீதுள்ள சீனத்தைக் கத்தியினுல் மெதுவாய்ச் சுரண்டி, $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்) கற்பூரத்தைத் தூள்செய்து கட்டியின் கீழ்மேல் இட்டு அழுத்திவிட்டு ஆறினபின் எடுத்துக்கொள்வதே வீரத் தூய்மையாம்.

## 46. வீரக்கட்டு

மேற்சொன்ன பாகப்படி, 11 தடவைகள் மீண்டும் மீண்டும் செய்துகொண்டால், வீரமானது அரைப்பாகம் கட்டுப்படும். முழுக்கட்டாக்க வேண்டுமானுல் மேற்சொன்னபடியே, 21 தடவைகள் திரும்பத் திரும்பச் செய்து கொள்ளவேண்டும். சில சமயம் 16 அல்லது, 17 தடவைகளிலும் கட்டிப்பேர்வதுமுண்டு. ஆகையால், ஒவ்வொரு தடவையும் சோதனைசெய்து வரவேண்டும். மேலும், இதை நெருப்பிலிட்டால் ஊசிப்புகையாய் இருக்குமே யொழிய புகையடங்கிய கட்டாகாது.

## 47. மேற்படி வேறு

ஆறு பலம் (210 கிராம்) கருவங்கத்தை இரும்புக் கரண்டியில் உருக்கி மண் தரையிற் சாய்க்கவேண்டும். ஆறினபின்பு எடுத்து முன்போலவே இரும்புக் கரண்டியிலிட்டு உருக்கி முன்போலவே மண் தரையில் சாய்க்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் உருக்கியுருக்கிச் சாய்க்க ஒருவகையாகத் தூய்மையாகும். இவ்விதம்

தூய்மை செய்யப்பட்ட கருவங்கம் 4 பலம் (140 பலம்). *கடல் நுரை 4 பலம், கடல் நுரையை நுண்மையாகப் பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும். முன்கூறிய வங்கத்தை மூசையில் இட்டு உருக்கி, உருகியவுடன் கடல்நுரைத் தூளைச் சிறுகச் சிறுகச் கவளம் கொடுத்துக் கிளறிவரவேண்டும். இவ்விதம் செய்து தூளெல்லாம் தீர்ந்தபின், மூசையை ஓட்டால் மூடி நன்ருய் ஊதி, அப்படியே ஓர் அகன்ற பாண்டத்தில் வைத்து ஓர் இரவு காற்றில் வைக்க பூத்து மலர்ந்துபோகும். இதைத் தூள்செய்து வைத்துக் கொள்க.

ஒன்றேகால் வராகன் எடை நெல்லிக்காய் கெந்தகத்தை, குறுக்கத்தியின் அல்லது, பிரமதண்டின் இலையையும், பூவையும் இடித்துப் பிழிந்த சாற்றைவிட்டு அரைத்துக், கால்பலம் ($8\frac{3}{4}$ கிராம்) எடையுள்ள வீரக்கட்டியின்மீது கவசம்செய்து காற்றில் உலரவைத்து, அதன்மேல் முன்கூறிய இலையையும் பூவையும் அரைத்த விழுதில் அரைப்பலம் ($17\frac{1}{2}$ கிராம்) எடுத்து முன் தயாரித்து வைத்த வீரக்கட்டிக்குக் கவசம் செய்யவேண்டும்.

முன் தயாரித்த கருவங்க பற்பத்தை இரண்டு பாகமாகச் செய்து, ஒரு பாகத்தை அகன்ற ஒரு இரும்புக் கரண்டியின் மத்தி யில் வைத்து அழுத்தி வீரக் கவசத்தை வைத்து அதன்மேல் மறு பங்குக் கருவங்க பற்பத்தை இட்டு அழுத்தி, நெருப்புத் தணலில் வைக்கச் சூடேறிக் கவசம் வெடிக்கும். உடனே எடுத்து ஆற வைக்கவேண்டும். பின்பு பற்பத்தைக் கொட்டி இலைக் கவசத்தை மாத்திரம் பிரித்து நீக்கி, வேறே முன்சொன்ன இலையையும் பூவை யும் அரைத்த விழுதால் முன்போல் கவசம் செய்து முன்கூறிய பற்பத்தையே கரண்டியில் இட்டு முன்போலத் தணலில் வைக்கச் சூடேறிக் கவசம் வெடித்தவுடன் ஆறவைத்து முன்போலவே இலைக் கவசத்தை மாத்திரம் நீக்கிவிடவேண்டும். மூன்ரும் தடவையும் முன் இலையையும் பூவையும் அரைத்துக் கவசம்செய்து முன்போலச் செய்து எடுக்க ஒருவகைக் கட்டாகும். ஆயினும், உலோக மாரணத்திற்கும் இது பயன்படுமாம். இவ்விதம் செய் தால் ஒருமுறை பக்குவப்படும். இவ்வாறு ஏழு முறை செய்தால் முழுக் கட்டாம். அப்போது சிறப்பாய்ப் பயன்படுமென்பதில் ஐயமில்லை. இதன் சிறப்பான விவரங்களைத் திறவுகோலில் எழுதுவோம்.

---

* கடல்நுரை என்பது தட்டையாய்ப் பாளம் பாளமாகப் விற்கப்படுகிறதன்று. இதை வர்ணக்காரர்கள் வண்டி தேய்க்க உபயோகப்படுத்துவார்கள். மருந்துக்கு வேண்டியது புற்றுப் புற்ருக இருக்கும். பெருங் கட்டிகளாகவு மிருக்கும்.

குறிப்பு :—ஒரு தடவை செய்த வங்க பற்பமே பல தடவைகளுக்கும் உபயோகமாகும். ஒரு தடவையிலேயே தேவையான முன் இலையையும், பூவையும் அரைத்து வேண்டியபோது அப்போதைக்கப்போது தேவையான அளவு எடுத்துக் கவசம் செய்துகொள்ளலாம். அடிக்கடி அரைக்கவேண்டுமென்பதும் தேவையற்றதே.

## 48. மேற்படி வேறு

திறமான சாம்பிராணி, சூவன் என்னும், எரிக்கும் கற்பூரம் ஆகிய இவை வகைக்குப் 10 பலம் (350 கிராம்) இவை இரண்டையும் அம்மியில் வைத்து அரைத்துக் களிம்புபோல் ஆன பின்னர், 50 பங்காகச் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். இரண்டங்குலம் சதுரமான சேலைத் துண்டில் ஒரு பங்கைத் தடவி, அதன் மத்தியில் ஒரு பலம் (35 கிராம்) கட்டி வீரத்தை வைத்துக் களிம்பு பூசப்பெற்ற துணியின் இரு பக்கங்களையும் சேர்த்து முறுக்கிவிட்டு, அதைக் குறட்டில் பிடித்து விளக்கில் கொளுத்திக் கட்டியின்மீதுள்ள கவசமெல்லாம் எரிந்த பின்பு ஆற வைத்துக் கத்தியால் கட்டியின்மீதுள்ள சிட்டத்தைச் சுரண்டி எடுக்க வேண்டும். இரண்டாந் தடவை முன்சொன்ன களிம்பில் இரண்டாம் பங்கை வேறு துணித் துண்டில் தடவி முன்னுல் கட்டிக்குக் கவசம் செய்தது போலவே செய்து முன்போலக் கொளுத்தி ஆற வைத்து ஆறின பின்பு, சிட்டத்தை நீக்கி முன்போலக் களிம்பு தடவி முன்போலவே செய்ய வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 50 தடவைகள் செய்யின் வீரம் கட்டுப்படும்.

## 49. மேற்படி வேறு

அத்தி மரத்தின் விரல் பருமனுன பச்சைக் கிளைகளைச் சிறு கரணைகளாகத் துண்டித்துச், கொஞ்சம் சிதைத்து ஒரு தோண்டியில் இட்டு, முன் சொன்னபடி குழித்தைலமிறக்க, சிவந்த நீர் இறங்கும். இதனை ஒரு கண்ணுடிக் குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும்.

அரைப்பலம் ($17\frac{1}{2}$ கிராம்) வீரத்தைக் கலவத்திலிட்டு முன்னிறக்கின அத்தித் தைலத்தைச் சிறுகச்சிறுக ஊற்றி ஒரு சாமமரைத்து வில்லை செய்து வெய்யிலில் உலர்த்தி மெல்லிய ஓட்டில் வைத்து, மூன்று கற்களால் அடுப்புக்கூட்டி அதன்மேல் வைத்து ஒரு நூல் கனம் திரி போட்டு ஆமணக்கெண்ணெய் ஊற்றி விளக்கேற்றி, கால் மணி நேரம் சென்றவுடன் வில்லையை மறுபக்கம் திருப்பி வைத்து மறு கால் மணி நேரம் சென்றவுடன் வில்லையை

எடுத்துக்கொள்ள வேண்டும். இரண்டாந்தடவை வில்லையைக் கலவத்திலிட்டுப் பொடித்து முன் சொன்ன தைலம் விட்டு முன் போலவே ஒரு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி முன்போலவே ஓட்டில் வைத்து விளக்கேற்றிக் கால்மணி நேரம் சென்றவுடன் மறுபக்கந் திருப்பி வைத்துக் கால்மணி நேரம் சென்றவுடன் எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் 11 தடவைகள் செய்யின் அரைக்கட்டாகும். 21 தடவை செய்யின் முழுக்கட்டாம். அரைப்பு முதலியவைகளில் இது குறையுமாகையால் 4 அல்லது 5 பாகங்கள் ஒரே தடவைகளிற் செய்யின் பெரிய மருந்துசெய் முறைகளுக்கு ஏற்ற நன்மையாய் அமையும். இது முழுக்கட்டானால் உலோகமாரணங்களுக்கும் உபயோகமாம். இதன் விளக்கத்தைத் திறவுகோலிற் பார்வையிடவும்.

## 50. மேற்படி வேறு

கட்டின வீரம் *செயரசம் இவை வகை ஒன்றுக்கு $3\frac{1}{4}$ வராகன் எடை, இவை இரண்டையும் கல்வத்திலிட்டு தேள் கொடுக்கிலைச் சாற்றைச் சிறுகச்சிறுக ஊற்றி இரண்டு சாமம் கைவிடாமல் அரைத்து வில்லை தட்டியுலர்த்தி சிறு அகலில் வைத்து மேலகல் மூடி 5 சீலைமண் செய்து, 10 பலம் (350 கிராம்) எருமுட்டையில் புடமிட்டு ஆறவிட்டு எடுத்து, அதை கலவத்திலிட்டு முன் கூறிய சாற்றைவிட்டு முன்போல அரைத்து முன்போல வில்லை செய்து காய வைத்து சீலைமண் செய்து 15 பலம் (525 கிராம்) எருமுட்டையில் புடமிட்டெடுத்து மூன்றுந்தடவையும் முன் போலச் செய்து 20 பலம் (700 கிராம்) எருமுட்டையில் புடமிடவும். கைபாகம் தவறினல் வெற்றி கிட்டாது; எடை சரியாக இருக்கும். உலோகமாரணத்திற்கு உதவும். இதன் சிறந்த முறை திறவுகோலில் எழுதப்படும்.

## இரச கர்ப்பூரம்

இதுவும் வைப்புச் சரக்கே. இதில் முதன்மையானது இரசமேயாம். இதன் வைப்பு முறைகளில் ஒன்று அல்லது, இரண்டு முறைகளைப்பற்றி இங்கு எழுதுவதால் அதினுள்ள சரக்குகளையும் அது செய்யப்படும் விதத்தையும் நாம் தெரிந்துகொள்வதற்கு ஏதுவாகும்.

## 51. இரசகற்பூர வைப்பு

கந்தகம் 16 வராகன் எடை (56 கிராம்), இரசம் 80 வராகன் எடை (280 கிராம்), கறியுப்பு அரைப்படி, இதைப் பொடித்துக் கொள்ளவும். செங்கற்பொடி மாவு செல்லத்தக்க அளவு.

* இதன் முறை பின் எழுதப்படும்.

**செய்முறை :**—கந்தகத்தை ஒரு மண்டபத்தில் இட்டு உருக்கி, அது உருகினவுடன் இரசத்தைச் சேர்த்து ஒரு கத்தியால் துழாவிக் கொண்டிருக்க, இரண்டு சரக்கும் சேர்ந்து கறுத்துப்போகும். நன்ருய்க் கறுத்துப் போனவுடன் கீழிறக்கி ஆறினபின் எடுத்துப் பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும். பின்பு இரண்டு சிறு மண் பானைகளை வாய்பொருந்தும்படியாகத் தேய்த்து தயாரித்து ஒரு பானையில் அரைப் பாகம் வரையில் செங்கற்பொடி மாவை யிட்டுப் பரப்பி சமமாய் அழுத்தி அதன்மேல் உப்புப் பொடியைப் பரப்பி, அதன்மேல் முன் தயாரித்து வைத்த கறுப்புப் பொடியைப் பரப்பி அந்தப் பானையின் மீது முன் தயாரித்து வைத்த மறு பானையை மூடி சந்தில்லாமல் 7 சீலைமண் வலுவாய்ச் செய்து காய வைத்து அடுப்பேற்றிப் பெருந் தீயாக 4 சாமம் எரித்து ஆறவிட்டு மேல் பானையை மெதுவாய் எடுத்தால் அதில் கட்டிக் கட்டியாயும் வெண்மை நிறமுள்ளனவாயும் பிளவுபட்டிருக்கும். இதுவே பூரம் எனச் சொல்லப்படுகிறது.

## 52. மேற்படி வேறு

மேற்சொல்லியிருக்கிறபடி கந்தகத்தையும் இரசத்தையும் வறுத்தெடுத்துக்கொள்ள வேண்டும். பின்பு முன்போலவே இரண்டு பானைகளைத் தயாரித்துக்கொண்டு ஒரு பானையில் அரைப் பாகம் மஞ்சள் பொடியை இட்டு அதன்மேல் கறியுப்புத் தூளைக் கொட்டி முன்போலவே செய்துகொள்ளவும். மேற் சொல்லப் பட்டிருக்கிற முறையும் இந்த முறையும் ஒன்றேயாயினும் முன்னதில் செங்கற்பொடி மாவையும் பின்னதில் மஞ்சட் பொடியையும் சேர்ப்பதே வேறுபாடாம்.

## 53. பூரத் தூய்மை

சோடா நீர் (Soda water) குப்பியின் முழுவதும் கழுத்து வரையில் ஒரு சீலைமண் செய்து வெய்யிலில் உலர்த்த வேண்டும். இது நன்ருயுலர்ந்த பின்பு அதன்மேல் மறுசீலைமண் செய்ய வேண்டும். இவ்விதம், ஒரு சீலைமண் உலர்ந்த பின் மற்றொரு சீலைமண்ணுல் ஏழு சீலைமண் செய்து தயாரித்து, அதற்குள் முன் வெடித்துப் பக்குவப்பட்ட பூரத்தைப் பொடித்துப் போட்டு வைத்துக் கொள்ளவும். பொடியானது கண்ணுடிக் குப்பியில் அரைப்பாகம் தான் இருக்க வேண்டும். அதற்கதிகங்கூடாது. கண்ணுடிக் குப்பியின் வாய்க்குப் பலப்பக்கல் மூடியிட்டுக் கொள்ளவும் வேண்டும்.

பின்பு, அகன்று பள்ளமாயிருக்கிற ஒரு சட்டியில் கால் பாகம் வரையில் மணலைக் கொட்டி, முன் தயாரித்து வைத்த கண்ணாடிக் குப்பியை அடி மணலிற் பதியும்படி வைத்து கண்ணாடிக் குப்பியின் கழுத்தளவு மணலைக் கொட்டி, மறு சட்டி மூடி சந்தில்லாமல், 3 அல்லது 4 சிலைமண் செய்து காயவைத்து அடுப்பேற்றி, 2 சாமமெரித்து நெருப்பைத் தணித்து, 2 சாமம் குளிர வைத்து மறுபடி. 2 சாமம் எரித்து, 2 சாமம் குளிர ஆற வைக்க வேண்டும். இரண்டு சாமம் எரித்தும் இரண்டு சாமம் ஆற வைத்தும் இவ்விதம் மாற்றி மாற்றி தினம் நான்கு நான்கு சாமமாக மூன்று நாள் எரித்தும் ஆற வைத்தும் எடுக்க கண்ணாடிக் குப்பியின் மேற்புறத்தில் பக்குவப்பட்டு நிற்கும். அதைக் கவனமாய் எடுத்துக்கொள்ள வேண்டும். இதுவே இரகர்ப்பூரம் அல்லது, தூய்மையான பூரமெனச் சொல்லப்படுகிறது. ஆனால், இப்போது வழக்கமாய் வழங்கப்படுவது பூரமெனினும் இரசகர்ப்பூரமெனினும் ஒன்றென்பதேயாம்.

## 54. பூரக்கட்டு

ஒரு பலமுள்ள பூரக் கட்டி 1 (35 கிராம்), நெல்லிக்காய்க் கெந்தகம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) கெந்தகத்தை தாய்ப்பாலைச் சிறுகச் சிறுக விட்டு, 1 சாமம் அரைத்துப் பூரக்கட்டிக்குக் கவசம் செய்து, கரிநெருப்பில் திருப்பித் திருப்பி வாட்டி ஈரங்காய்ந்த பின்பு ஓர் ஓட்டில் வைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்துப் புரட்டிப் புரட்டி வறுத்து மேற்கவசம் தீய்ந்தபின்பு எடுத்து ஆறவிட்டு மேற்கவசத்தைப் பிரித்து நீக்கி அந்தக் கட்டியை ஒரு பீங்கான் பாத்திரத்தில் இட்டு, அதில் கத்தரி இலைச்சாற்றை அக் கட்டியானது முழுகிநிற்கும்படி விடவேண்டியது. அல்லது, அக் கட்டியை ஒரு கத்தரிக் காய்க்குள் செலுத்தி சூடேறும்படியாய் இலகு புடம்போட வேண்டியது. பின்பு முன்போலக் கெந்தகத்தைக் கவசம்செய்து வாட்டி வறுத்தெடுத்து முன்போலவே ஊறப் போடவேண்டியது. அல்லது, புடம் போடவேண்டியது. இவ்விதம் மீண்டும் மீண்டும் 3 அல்லது 5 அல்லது 7 தடவைகள் செய்யின் முழுக் கட்டாகும். இதனால், எல்லாவித வாயுக்களும் தீரும் இன்னும் இதில், $\frac{1}{2}$ வராகன் எடையைப் ($1\frac{3}{4}$ கிராம்) பொடித்துக் கால்சேர் (70 கிராம்) இறைச்சியுடன் சேர்த்துச் சமைத்துக் கோதுமை ரொட்டியில் சேர்த்துச் சாப்பிட அனேக நோய்கள் தீரும். வாய் பிடிக்காது. மேலும், இது செயநீர் பாகங்களில் அதிகமாக பயன்படுத்தப்படுகிறது.

## 55. மேற்படி வேறு

பால் சாம்பிராணி, தீப கற்பூரம் இவை வகைக்கு 10 பலம் (350 கிராம்) இவை இரண்டையும் தொடக்கத்தில் தனித்

தனியே பொடித்துப் பின்பு, இரண்டையும் சேர்த்து அரைக்கக் களிம்பு போலாகும். இதனை நூறு பங்காகப் பகிர்ந்துகொள்ள வேண்டும். மூன்று விரல் கனச் சதுரமான ஒரு துணித் துண்டில் முன் தயாரித்த களிம்பில் ஒரு பங்கைத் தடவி ஒரு பலமுள்ள (35 கிராம்) பூரக்கட்டியை அதன் மத்தியில் வைத்து துண்டைச் சுற்றி இரு முனைகளையும் அழுத்தித் திரித்துக் குரட்டில் பிடித்துக்கொண்டு விளக்கில் கொளுத்திக் கவசம் எரிந்த பின்பு, ஆறவிட்டுக் கவசத்தைப் பிரித்து மறுபடியும் முன் களிம்பில் ஒரு பங்கைத் துணித் துண்டில் தடவி முன்கூறிய கட்டிக்குக் கவசம் செய்து முன்போலக் கொளுத்தி ஆறவிட்டுக் கவசத்தை நீக்கவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் நூறு பங்குக் களிம்பையும் நூறு தடவைகள் கவசம் செய்து கொளுத்தி எடுக்கப் பூரமானது முழுக் கட்டாகும். செயநீர் முதலியவைகளில் சேர்ப்பதற்கும் செந்தூரிப்பதற்கும் சிறப்பானது. மேலும் பற்பலவித மேக நோய்கள், பிரமேகங்கள் முதலியவை தீரும். இலேசாய்ச் செய்து கொள்வதானல் 3 அல்லது 5 அல்லது 7 தடவைகள் கொளுத்திக்கொண்டால் போதுமானதாகும்.

## 56. மேற்படி வேறு

ஒரு பலம் (35 கிராம்), எடையுள்ள பூரக்கட்டி, தாளகம் $2\frac{1}{4}$ வராகன் எடை ($15\frac{3}{4}$ கிராம்), தாளகத்தைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக ஊற்றி, 1 சாமம் அரைத்து மேற்படி கட்டிக்குக் கவசம் செய்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். நன்ருய் உலர்ந்த பின்பு, ஒரு பலம் (35 கிராம்) வால் மிளகைப் பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு, 1 சாமம் அரைத்து முன் தயாரித்த கட்டிக்குக் கவசம் செய்து வெய்யிலில் வைத்து நன்ருய் உலர்ந்த பின்பு, 3 சீலேமண் செய்துலர்த்தி 20 பலம் (700 கிராம்) எருமுட்டையில் புடமிட்டு ஆறவிட்டு எடுத்து, மேற்கவசத்தை நீக்கி முன்போலவே தாளகம், வால் மிளகு முதலியவைகளை அரைத்துக் கவசம் செய்து புடமிட்டு ஆறவிட்டு எடுக்கவும். இவ்விதம் மீண்டும் மீண்டும் 7, 11 அல்லது 12 தடவைகள் செய்ய வேண்டும். புடம் போடுவதில் தீயை நிதானித்துக் குறைத்துக் கொள்ளவேண்டும். அல்லது அதிகப்படுத்திக்கொள்ளவேண்டும். பத்துப் பங்கு வெள்ளியை உருக்கி ஒரு பங்கு முன் பூரக்கட்டைக் கொடுத்தால் வெள்ளியில் நிறம் ஏறினல் கட்டாகிவிட்டதெனப் புடத்தை நிறுத்திவிடவேண்டும். அப்படி ஆகாதவரையில் புடத்தைப்போட்டே தீரவேண்டும். கைப்பாகமாகச் செய்யின் நேர்த்தியான முறையாகும். மாத்திரைகள் செய்யவும், மற்ற மருந்துகளில் சேர்க்கவும் இது மிகச் சிறப்பானது.

## 57. மேற்படி வேறு

ஒரு பலமுள்ள (35 கிராம்) 1 பூரக்கட்டி. வெள்வங்கம், வீரம், வெடியுப்பு இவை மூன்றும் வகைக்கு 6½ வராகன் எடை (22·75 கிராம்).

செய்முறை :—வெள்வங்கத்தை அரத்தால் ராவிக் கல்வத்திலிட்டு, முன்னர் வீரத்தைச் சேர்த்து அரைத்துப் பின்பு, வெடியுப்பைச் சேர்த்து ஒரு சாமம் அரைத்துக் கல்வத்தில் ஒரு பக்கத்தில் சேர்த்து, அந்தப் பக்கத்தைக் கொஞ்சம் உயர்த்திச் சற்று குளிர்ச்சியான இடத்தில் வைத்து மறுநாளெடுத்தால் செயநீர் வடிந்து நிற்கும். இவ்விதம் 2 அல்லது 3 நாட்கள் செய்தால் மருந்தெல்லாம் செயநீராகிவிடும். இவ்விதம் சேகரிக்கப்பட்ட செயநீரை ஒரு பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

ஒரு சிறிய அடுப்பின்மீது அப்பிரேகத் தகட்டை வைத்து, அதன்மேல் பூரக்கட்டியை வைத்து, சிற்றுமணக்கெண்ணெயை அல்லது நெய்யை விட்டு, ஒரு நூற் கனத்திரிபோட்டு விளக்கேற்றி அடுப்பில் வைத்துப் பூரக்கட்டி சூடுகண்டவுடன், ஒரு சிறு மூங்கிற் குச்சியின் நுனியில் மெல்லிய சல்லாத் துண்டைச் சுற்றி மேற்படி செயநீரில் தோய்த்து, பூரக்கட்டியின்மீது தடவி வரவேண்டும். தடவின பக்கம் காய்ந்தவுடன் மறுபக்கத்தைத் திருப்பி அந்தப் பக்கத்தில் தடவவேண்டும். இவ்விதம் எல்லாப் பக்கங்களிலும் செயநீரைத் தடவிச் சுருக்கிடவேண்டும். இவ்விதம் இன்னொரு முறை அல்லது இரண்டுமுறை செய்து முடிவாய் எருக்கம் பூவை அரைத்த விழுது 15 பலம் (525 கிராம்) எடுத்துருட்டி, அதற்குள் முன் தயாரித்த கட்டியை வைத்து மூன்று சீலமண் செய்து, இந்தக் கவசத்தின் 6 பங்கு எடையுள்ள எருமுட்டையில் புடமிட்டு ஆறவிட்டெடுத்துக் கட்டியின் மீதுள்ள கவசம் முதலியவைகளைச் சுரண்டி வைத்துக்கொள்ளவும். இது மருத்துவத்திற்கும் உதவக் கூடியது. மேலும், இது செயநீரில் சேர்க்க உபயோகப்படுவதுமன்றி, இது தங்கச்செந்தூரம், இலிங்கச் செந்தூரம் முதலிய பல பாகங்களைச் செய்யவும் பயன்படுமாம். இதன் சிறந்த முறைகளைத் திறவுகோலில் சொல்வோம்.

## 58. மேற்படி வேறு

இரசகர்ப்பூரம் 1 பலம் (35 கிராம்). இதனைக் கல்வத்திலிட்டுப் பொடித்துச் சங்கங்குப்பிச் சாற்றைச் சிறுகச் சிறுக ஊற்றிக் கைவிடாமல் 1½ சாமம் (4½ மணி) நேரம் அரைத்து, கனம், நீளம், பருமன் முதலியவற்றில் பேரீச்சங் கொட்டை அளவுசெய்து

வெய்யிலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும். பின்பு, சங்கக்குப்பி இலையை இடித்து ஒரு சிறு அகலில் விரல் கனம் பரப்பி அதன்மேல் முன் தயாரித்த பூரத்தை வைத்து அவற்றின் மேலும் ஒரு விரல் கனம் முன்கூறிய இலையை வைத்து மேலகல் மூடி மூன்று சீலைமண் செய்து மூன் பலமுள்ள (105 கிராம்) நான்கு அல்லது ஐந்து எரு முட்டைகளில் புடமிடவும். இவ்விதம் மேலும் இரண்டு தடவைகள் செய்து கொள்ளக் கட்டும். சோதனைக்கு ஒத்திருந்தால் நன்மையாம். இல்லாவிட்டால் முன்போலவே மேலும் ஒன்றிரண்டு தடவைகள் செய்துகொள்ளவும். இதைச் சுண்ணம் செய்தால் அநேக நோய்களுக்குப் பயன்படுவதுமட்டுமன்றி உலோக மாரணத்திற்குமாகும். இதன் சிறப்பான முறைகள் இதன் திறவுகோலில் சொல்லப்படும்.

**விண்ணப்பம்:** —நாம் இதுவரையில் பூநீர், வெடியுப்பு, கறியுப்பு நவாச்சாரம், வீரம், பூரம் என்னும் இவைகளின் பாகம், தூய்மை முறை முதலியவைகளை ஒருவாறு இங்குச் சொன்னோம். இனி முப்பு என்னும் முறைகளைச் சொல்லும்முன் சில செய்திகளைச் சொல்லவேண்டியது இன்றியமையாததாய் உள்ளது. நாம் முன் சொல்லியிருக்கிறதுபோல முப்பு முறையானது ஒவ்வொரு நூலிலும் ஒவ்வொருவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நூல்களில் பயிற்சியுடைய ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகவே பொருள் செய்கின்றார்கள். ஒரு பண்டிதர் சொல்வதை மற்றொரு பண்டிதர் மறுத்து, அம் முறை விரிவானதென்றும் அது சரியானதன்று என்றும் கூறித் தன் முறையே சுருக்கமானதென்றும் மறுக்க முடியாததென்றும் சொல்கின்றார். நூல்நெறிதான் அவ்விதம் குழப்பமாய் இருக்கிறதென்று இதில் நன்கு பயின்றுணர்ந்த மகான்களை அடுத்து அவர்களுக்குப் பணத்தாலும் குணத்தாலும் வழிபட்டு தொண்டு புரிந்தாலோ, தத்தம் முறைகளை ஒப்பற்றன வென்றும் அவையே சரியானவை என்றும் மற்றவை எல்லாம் எதற்கும் பயன்படாதன என்றும் வாதாடி நிலைநிறுத்துகிறார்கள். அதனுள் நுழைந்தாராய்ந்து பார்த்தால் முடிவாகிய காரியமொன்றேதான். முப்புவினால் உலகமே வசியமாகிவிடுமென்றும், கவனக் குளிகை, பரிசவேதை, கணவேதை, காயகற்பம் முதலிய அநேக அதிசயங்கள் எல்லாம் உண்டாகுமென ஏட்டில் எழுதியிருப்பதும் கேள்விப்படுவது மேயொழிய மற்றப்படி பயிற்சியின் மூலமாய்க் கையாள்பவர்கள் இன்னாரென நமக்குத் தெரியவில்லை. மன சக்தி முதலிய பழக்கங்களால் எண்ண முடியாத செயல்கள் நடந்தேறி வருவதை இன்றும் நாம் பார்த்து வருவதால், பெரியோர்கள் அவ்வித ஆற்றலினால் பற்பல வியப்புக்குரிய அசாதாரணமான

செயல்களைச் செய்திருக்கலாம். அதற்கு எவ்வித மறுப்பும் இல்லை. அவ்வித ஆற்றலுடையவர்கள் மண்ணைத் தொட்டாலும் பொன்னு வதில் தடையில்லை. ஒரு நோயைப் பார்த்து, அது தீர்ந்துபோக வேண்டுமெனச் சொல்லும்முன் அது பறந்து போகுமென்பதில் சந்தேகமில்லை. ஆனால், இவ்வித ஆற்றலுடைய மகான்களெல்லாம் மருந்து முதலியவைகளை ஒருசாக்குப்போக்காக வைத்துக்கொண்டு செய்ததாயிருக்கவேண்டும். ஆனால், முப்பு என்னும் பாகத்தால் மேற்கண்ட அற்புதக் காரணங்கள் செய்யப்படாவிட்டாலும், சரக்குகளைக் கட்டவும், அவை பற்பம், செந்தூரம் முதலிய பல வித முறைகள் செய்யவும் பயன்படுகின்றதென்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இம் முறைகளால் செய்யப்பட்ட பற்பம், செந்தூரம் முதலியவை மற்றவிதமாய்ச் செய்யப்படும் முறைகளைக் காட்டிலும் அநேக மடங்குகள் மேலானவை என்பதும் உறுதி. கடையில் விற்கப்படும் சாதாரணமான 3 காசு சவுக்காரத்தால் பற்பலவிதப் பற்பங்கள் முதலியவை செய்யப்படுகின்றனவென்றால் அதற்கு எத்தனையோ மடங்கு மேலான பூநீர் முதலியவைகளால் செய்யப்படும் முப்பு முதலியவற்றின் உதவியால் ஆன பற்பங்கள் முதலியவை எவ்வளவு மேலானவைகளாய் இருக்கவேண்டு மென்பதை அறிவாளிகளே சிந்திக்கவேண்டும். இம் முதல் நூலில் இம் முறைகள் பல எழுதப்பட்டிருந்தாலும், அவற்றுள் அடியேன் பயிற்சி முதிர்வுக்கும் கேள்வி அறிவுக்கும் ஒத்திருக்கும் சிலவற்றை மாத்திரம் இங்கு எழுதுவேன். ஆகையால், அறிவாளிகள் அதன் கைபாக முறைப்படி செய்து பிறர்க்கு உதவுபவர்களாயும் உலகத் துக்கே உதவி செய்பவர்களாகவும் இருப்பார்களென்னும் உயிர் களிடம்கொண்ட கருணையோடு நான் இங்கு எழுத மனமுவந்தேன். இதில் பண்பட்ட மகான்கள் இதன் சிறப்பை அறியாமல் இரார்க ளென்பது திண்ணம். நாம் உட்கொள்ளும் உணவுப் பொருள் களுக்கு உப்பு, காரம் என்பவை எவ்விதம் இன்றியமையாதனவோ அவ்விதமே முப்பு என்னும் உப்புக் காரம் மருந்துகளுக்கு இன்றி யமையாதன என்று தெரிந்து கொள்ளவேண்டும். உப்பில்லாப் பண்டம் சப்பென்றிருப்பதுபோல முப்பில்லா மருந்து குப்பையைப் போலாகும் என்பது சிலர் துணிபு. இந்த முப்பு என்னும் மருந்தா னது, எல்லாச் சரக்குகளின் குணங்களையும் மேம்படுத்தும் சக்தியை உடைத்தாயிருப்பதே அதன் சிறப்பாகும். இன்னம் நெருப்பிற்கு ஓடும் சரக்குகளை அவ்விதம் ஓடாமல் இருக்கும்படியும், கடினமான பொருள்களை அதிசீக்கிரம் பற்பமாகச் செய்யும் தன்மையே அதன் சிறப்பாகும். ஆனால், இம் முறைகளைச் செய்ய உடல் துன்பம், ஊக்கம், விடா முயற்சி முதலியவை இன்றியமையாதன வாம். அப்படி இல்லாவிட்டால் அதைச் செய்வது கடினம்.

ஆகையால் இம்முறைகளைச்செய்ய விரும்பும் அறிஞர்கள் மேற் கண்ட லட்சணங்களோடுத் துணியவேண்டும். மேலும், இடம், பொருள், ஏவல் என்பவைகளும் முக்கியம். அத்தன்மையில், உழைக்க முடியாதவர்கள் இச் செயலில் நுழைந்து இடையில் விட்டுவிடுவதைக்காட்டிலும் முற்றும் ஈடுபடாமலே இருந்து விடுவது மிகமிக நன்மை பயக்கும்.

## 59. முப்புச் சுண்ணம்

பனி, வெய்யில் என்னும் இரண்டும் சமமான காலத்திலும், இடத்திலும் இப்பாகத்தைச் செய்யத் தொடங்கவேண்டும். ஏனெனில், சிற்சில இடங்களிலும் சிற்சில காலங்களிலும் பனி அளவு கடந்ததாய் இருக்கும். சிற்சில இடங்களிலும் சிற்சில காலங்களிலும் பனியே இல்லாதிருக்கும். இவ்விதமே சிற்சில இடங்களிலும் சிற்சில நாடுகளிலும் வெய்யில் மிகுதியாகவாவது குறைவாகவாவது இருக்கும். ஆகையால் பெரும்பான்மை இதனை இந்த நாட்டில் தை மாதத்தில் ஆரம்பிக்கலாம். முன் சொல்லி யிருக்கிறபடி சேகரித்துத் தூய்மைசெய்த அல்லது பாகப்படுத்திய பனிநீர் 10 படி, இதனைப் பெரிய கண்ணுடிக் குப்பிகளில் அல்லது பெரிய பீங்கான் பாத்திரங்களில் நிறைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

1. (அ) முன் சொல்லியிருக்கிறபடி பாகப்படுத்திய பூநீர் 1 படி. இதனை ஓர் அடிகனத்த மண் பாண்டத்தில் இட்டு அதில், $1\frac{1}{2}$ படி முன் கூறிய பனிநீர்விட்டு நன்ருய்க் கரைத்துக் கலக்கிக் காலையில் 7 மணிக்கு வெய்யிலில் வைத்துவிட வேண்டும்.

(ஆ) பாகப்படுத்திய வெடியுப்பு $\frac{1}{2}$ படி. இதை ஓர் அடி கனத்த மண் பாண்டத்தில் இட்டு, அதில் 1 படி முன்கூறிய பனி நீரைவிட்டு நன்ருய்க் கரைத்துக் கலக்கி அதையும் காலையில் 7 மணிக்கு வெய்யிலில் வைத்துவிடவேண்டும்.

(இ) பாகப்படுத்திய கறியுப்பு $\frac{1}{2}$ படி. இதை ஓர் அடி கனத்த மண் பாண்டத்தில் இட்டு, அதில் 1 படி முன்கூறிய பனிநீரைவிட்டு நன்ருய்க் கரைத்துக் கலக்கி அதையும் காலையில் 7 மணிக்கு வெய்யிலில் வைத்துவிட வேண்டும்.

இவ்விதம் இம்மூன்று பாண்டங்களையும் தனித்தனியாக வைத்து மாலை 4 மணிக்கு ஒவ்வொரு பாண்டத்திலும் உள்ள தெளிவை யிறுத்து 7 மடிப்பாக மடித்த சல்லாத் துண்டில் தனித் தனியாக வடிகட்டிக்கொள்ளவேண்டும். அந்தந்தப் பாத்திரத்தி

லுள்ள வண்டல் முதலியவற்றை நீக்கிக் கழுவித் தூய்மைசெய்து கொள்ளவேண்டும்; பின்பு, பூநீர்த் தெளிவைப் பூநீர் கரைத்த பாண்டத்திலும், வெடியுப்புத் தெளிவை வெடியுப்பைக் கரைத்த பாண்டத்திலும், கறியுப்புத் தெளிவைக் கறியுப்பைக் கரைத்த பாண்டத்திலும் விட்டு முறையே அந்தந்தப் அந்தந்தப் பாண்டங் களை தனித்தனியே அடுப்பிலேற்றிக் காய்ச்சி $\frac{3}{4}$ பாகம் சுண்டி, $\frac{1}{4}$ பாகம் மீதியிருக்கும் போது இறக்கி ஆற வைத்து, ஒவ்வொரு பாண்டத்தின் வாயையும் ஒவ்வொரு சாணக்கியால் மூடி, இரவில் பனியில் வைத்துக் காலையில் எடுத்தால் ஒவ்வொரு பாண்டத் திலும் பூநீருப்பு, வெடியுப்பு, கறியுப்பு முறையே அந்தந்தப் பாத்திரத்தில் கட்டியிருக்கும். உப்புக் கட்டியானது போகச் சிறிதளவு நீரும் எஞ்சி நிற்கும்.

2. (அ) இரண்டாம் நாள் பூநீருப்புள்ள பாண்டத்தில் அதிலுள்ள நீரை நீக்காமலே அதனோடு முன்கூறிய பனிநீரை முன்னளவே அதாவது, $1\frac{1}{2}$ படி நீரை விட்டுக் கரைத்து நன்முய்க் கலக்கி முன்னர் செய்ததுபோலவே காலை 7 மணிக்கு வெய்யிலில் வைக்கவேண்டும்.

(ஆ) இவ்விதம் வெடியுப்புள்ள பாத்திரத்தில் அதிலுள்ள நீரை நீக்காமலே அதனுடன் முன்கூறிய பனிநீரை முன்னளவே அதாவது, 1 படி பனிநீரை ஊற்றிக் கரைத்து நன்முய்க் கலக்கி காலை 7 மணிக்கு வெய்யிலில் வைக்கவேண்டும்.

(இ) இவ்விதமே கறியுப்புள்ள பாண்டத்தில் அதிலுள்ள நீரை நீக்காமலே அதனுடன் முற்கூறிய பனிநீரை முன்னளவே, அதாவது 1 படி பனிநீரை ஊற்றிக் கரைத்து நன்முய்க் கலக்கி 7 மணிக்கு வெய்யிலில் வைக்கவேண்டும்.

பின்பு, மாலை 4 மணிக்கு ஒவ்வொரு பாண்டத்திலுமுள்ள தெளிவைத் தனித்தனியாக யிறுத்து ஒரு சல்லாத் துண்டை ஏழு மடிப்பாக மடித்து, அதில் வடிகட்டி, பாண்டத்திலுள்ள வண்டல் முதலியவைகளைக் கழுவித் தூய்மைப்படுத்தி முன்னிறுத்த தெளிவு களில் பூநீர்த் தெளிவைப் பூநீர் கரைத்த பாண்டத்திலும் வெடி யுப்புத் தெளிவை, வெடியுப்பைக் கரைத்த பாண்டத்திலும், கறியுப்புத் தெளிவைக் கறியுப்பைக் கரைத்த பாண்டத்திலும் விட்டு, முறையே ஒவ்வொரு பாண்டத்தையும் தனித்தனியாய்க் காய்ச்சி முக்கால் பாகஞ் சுண்டியவுடன் இறக்கி ஆறவிட்டு, பாண்டத்தின் வாயை சாணகியால் மூடி இரவில் பனியில் வைக்க வேண்டும். காலையில் பார்த்தால் அந்தந்தப் பாண்டங்களில் முறையே அந்தந்த உப்புகளின் கட்டியும் சிறிதளவு நீரும் நிற்கும்.

3. (அ) மூன்றும் நாள் பூநீருப்புள்ள பாண்டத்தில் உப்புடன் உப்பாகாமல் எஞ்சி நிற்கும் நீரை நீக்காமலே அவற்றுடன் முன்போலவே $1\frac{1}{2}$ படி முன்சொன்ன பனிநீரை விட்டுக் கரைத்து நன்ருய்க் கலக்கிக் காலையில் 7 மணிக்கு வெய்யிலில் வைக்கவேண்டும்.

(ஆ) இவ்விதம் வெடியுப்புள்ள பாண்டத்தில் உப்புடன் உப்பாகாமல் எஞ்சி நிற்கும் நீரை நீக்காமலே அதனுடன் முன்போலவே 1 படி முன்கூறிய பனிநீரை விட்டுக் கரைத்து நன்ருய்க் கலக்கிக் காலையில் 7 மணிக்கு வெய்யிலில் வைக்கவும்.

(இ) இவ்விதமே கறியுப்புள்ள பாண்டத்தில் அதிலுள்ள உப்புடன் உப்பாகாமல் எஞ்சி நிற்கும் நீருடன் முன்போலவே 1 படி முன்சொன்ன பனிநீரை விட்டுக் கரைத்து நன்ருய்க் கலக்கிக் காலையில் 7 மணிக்கு வெய்யிலில் வைக்கவும்.

பின்பு மாலை 4 மணிக்கு முன்போலவே தனித் தனியாய்த் தெளிவிறுத்து 7 மடிப்புள்ள சல்லாத் துண்டில் தனித்தனியாக வடிகட்டி, அதனதன் பாண்டத்திலேயே தனித்தனியாய்க் காய்ச்சி முக்காற் பாகம் சுண்டியவுடன் இறக்கி ஆறவைத்து மூடி அந்தந்தப் பாத்திரத்தைத் தனித்தனியே பனியில் வைக்கவேண்டும்.

4. இவ்விதம் பூநீர், வெடியுப்பு, கறியுப்பு ஆகிய மூன்றையும் தனித்தனியாகக் கலக்கித் தெளிவிறுத்துப் பகலில் வெய்யிலில் வைத்து, மாலையில் தெளிவிறுத்து அந்தந்தப் பாண்டத்திலேயே காய்ச்சியும், இரவில் பனியில் வைத்தும் பத்துத் தடவைகள் மீண்டும் மீண்டும் செய்துகொள்ளவேண்டும்.

5. மேற்சொன்னபடி தயாரிக்கப்பட்ட பூநீர், வெடியுப்பு, கறியுப்பு ஆகிய மூன்று வகைகளிலும் தனித்தனியாக வகைக்கு ஒவ்வொரு பலம் (35 கிராம்) வீதம் எடுத்து வெவ்வேருக தனித் தனி தட்டையான பீங்கான்களில் இட்டு முன் தயாரித்து வைத்த $1\frac{1}{2}$ படி பனிநீரில் 2 பலம் (70 கிராம்) சீனத்தைக் கரைத்து வெய்யிலில் வைத்து 1 படி தெளிவிறுத்துக்கொள்ள வேண்டும். இதற்குச் சீன நீர் என்று பெயர். பின்பு முன் தயாரித்த மூன்று உப்புகளிலும் சிறிது சிறிதாக சீன நீரைத் தெளித்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். தெளித்த நீர் உலர்ந்தவுடன் மறுபடியும் அதன்மேல் சிறிது சீன நீர் தெளித்து உலர்த்தவேண்டும். இவ்விதம் இந்த ஒரு படி நீரையும் பத்து நாட்களுக்குள் முன்கூறிய மூன்று உப்புகளிலும் தனித்தனியாகத் தெளித்துப் பத்து நாட்களுக்குள் செலுத்தித் தனித்தனியாக உலர்த்திக் கொள்ளவேண்டும்.

6. இதன் பின்பு, 7 அல்லது 8 வயதுள்ள சிறுவர்களின் சிறுநீர் 1 படி சேகரித்து, ஒரு கண்ணாடிக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும். இந்த சிறுநீரையும் மூன்று பீங்கான்களிலும் இருக்கிற உப்பில் தனித்தனியாகத் தெளித்து வெய்யிலில் வைத்து உலர்த்தி மறுபடியும் தெளித்து உலர்த்திவரவேண்டும். இவ்விதம் இந்த ஒரு படி சிறுநீரையும் முன்கூறிய மூன்று உப்புகளிலும் தனித்தனியாகத் தெளித்து வெய்யிலில் வைத்து 10 நாட்களுக்குள் செலுத்தி உலர்த்திக் கொள்ளவேண்டும்.

7. கழுதையின் சிறுநீர் 1 படி. இந்தச் சிறுநீரையும் முன் போலவே முன்கூறிய மூன்று உப்புகளிலும் தனித்தனியாகத் தெளித்து வெய்யிலில் வைத்துலர்த்தி 10 நாட்களுக்குள் செலுத்தி விடவேண்டும்.

8. பின்பு நவாச்சாரச் செயநீர் 1படி. இந்தச் செயநீரையும் முன்போலவே முன்கண்ட மூன்று உப்புகளிலும் தனித்தனியாகத் தெளித்து வெய்யிலில் வைத்துலர்த்தி 10 நாட்களுக்குள் செலுத்தி விடவேண்டும். இங்குச் சாரச் செயநீரென்பது கட்டியான சாரத்தை அல்லது பச்சை நவாச்சாரத்தைத் தனியாய் நீராக்கிக் கொள்வதேயாம். இம் முறைகளில் பல, பின்னர்ச் சொல்லப் படுமாயினும் இங்கு பயன்படும்படி ஒரு முறையையும் சொல்வோம். அது பின்வருகிற விதமாம்.

### சாரச் செயநீர்

முக்கால் வீசை (1050 கிராம்) நவாச்சாரத்தை நுண்மையாய்த் தூள்செய்துகொள்ளவேண்டும். பின்பு, வாழை மரத்தின் பச்சைப் பட்டைகளை ஒவ்வொரு சாண் நீளமுள்ளவைகளாய்த் துண்டித்து வாயகன்ற பீங்கான் தட்டுகளில் சுற்றிலும் கொஞ்சம் சாய்த்து வைத்து மேற்படி பட்டைத் துண்டுகளின் மேற்புறத்தில் முன்தயாரித்த நவாச்சாரப் பொடியைப் பொதிந்து இரவில் நல்ல பனியில் வைத்துக் காலையில் எடுத்தால், பீங்கான் தட்டுகளில் நீர் இறங்கித் தங்கி நிற்கும். இதுவே சாரச் செயநீராம். இவ்விதம் நாள்தோறும் சேகரித்து ஒரு படி எடுத்துக்கொள்ளவேண்டும்.

9. மேற்கண்டச் நவச்சாரச் செயநீரை மேற்சொன்னபடி செலுத்தி உலர்த்திய மூன்று வகை உப்புகளையும் ஒன்றாய்ச் சேர்த்து நன்றாய்க் கலந்து ஒரு பீங்கான் தட்டில் இட்டு இரண்டொரு நாள் வெய்யிலில் வைத்துலர்த்திப் பின்காணும் சிப்பிச் செயநீர் ஒரு படியை முன்போலவே இவ்வுப்புக் கூட்டில் கொஞ்சம்

தெளித்து வெய்யிலில் வைத்துலர்த்தி, மறுபடியும் தெளித்து வெய்யிலில் வைக்கவேண்டும். இவ்விதம் ஒரு படி சிப்பிச் செய நீரைப் பத்து நாட்களுக்குட் செலுத்தி உலர்த்திப் பத்திரப்படுத்த வேண்டும்.

## சிப்பிச் செயநீர்

ஆற்றுச் சிப்பிகள் இரண்டு கூடைகள். மேலே, (6) ஆவதில் சொல்லப்பட்டிருக்கும் வெடியுப்புச் சுண்ணத்தில் கொஞ்சம் எடுத்துச் சிப்பியின் வாயில் இடவேண்டும். இவ்விதம் எல்லாச் சிப்பிகளிலும் வைத்துச் சிப்பிகளை அகன்ற பீங்கானில் வைத்துக் காலையில் எடுத்தால் பீங்கானில் நீர் இறங்கி யிருக்கும். இதுவே சிப்பிச் செயநீராம். இவ்விதம் ஒரு படி சேகரித்து மேற்சொன்னபடி செய்துகொள்ளவேண்டும்.

## செந்நீர்

மேலே, (6) ஆவதில் சொல்லப்பட்டிருக்கும் வெடியுப்புச் சுண்ணம் 3 பங்கு, நவாச்சாரம் 1 பங்கு. இவை இரண்டையும் சேர்த்து, 1 சாம நேரம் அரைத்து முன்சொன்ன வாழைப் பட்டை களில் வைத்து அரைப்படி செயநீர் சேர்த்துக்கொள்ளவேண்டும். பின்பு, 55வது முறைப்படி கட்டிய இரசகர்ப்பூரம், துப்பாக்கி மருந்தில் கட்டிய வீரம், திறமான கருநாபி, குருவண்டு அல்லது எரிவண்டு ஆகிய இவை வகைக்கு 40 குன்றிமணி எடை எடுத்து, இந் நான்கையும் கல்வத்திலிட்டு மைபோலப் பொடித்து முன் தயாரித்த வெடிசாரச் செயநீரில் இட்டு ஓர் இரவு பகல் வைத்து, மறுநாள் அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து இரண்டு கொதி வந்தவுடன் இறக்கிஅசையாமல் வைத்து மறுநாள் தெளிவிறுத்து இரண்டு பங்காக்கி இரண்டு கண்ணுடிக் குப்பிகளில் வைத்துக் கொள்ளவும். இதுசிவந்த நிறமாயிருக்குமாகையால் இதனைச் செந்நீர் என்பர்.

இந்தச் செந்நீரானது இந்த நூலில் சொல்லப்பட்ட முப்புச் சுண்ண வகைகளிலெல்லாம் சேர்க்கப்படுமென அறியவேண்டும்.

**குறிப்பு** :— குருவண்டு என்பது, எவ்வகைப் பிராணியுமன்று. பூநீரைப் பாகப்படுத்தும்போது உண்டாகும் ஒருவகை உப்பிற்கே அந்தப் பெயர் சூட்டப்பட்டிருக்கிறதென்பது சிலர் கருத்து. துவரஞ்செடி, கள்ளி மரம் முதலியவற்றில் தங்கி வாழும் ஒருவகை வண்டிற்குக் குருவண்டென வழங்கப்படுகிறது என்பது சிலர் கருத்து. மருந்துகளில் காரமேற்றுவதற்கு இக்குருவண்டு சேர்க்கப் படுகிறபடியால் மருந்தாகப் பயன்படுத்தும் உயிர் வகைகளில்

எரிவண்டு என்பதே அதிகக்காரமுடையதாகையால், குருவண் டென்பது எரிவண்டென்பதே பலர் கருத்து. இதற்குக் குருவண்டு, எரிவண்டு, புள்ளிவண்டு, பொன்வண்டு எனப் பல பெயர்களுண்டு. இந்த வண்டுகளுள் ஒவ்வொரு நாட்டிற்கும் இனத்துக்கும் தக்க வாறு அநேக வகைகளுண்டு. இதற்கு இந்துஸ்தானியில் "தேலி" என்றும் "தேலிமக்கி" என்றும் பெயர். அதன் பொருள் எண்ணெய் வண்டு என்பதே. இதன் முட்டைகளை நீக்கும்போது எண்ணெய் போன்ற ஒருவித திரவம் வடிவதே இந்த பெயருக்கு முக்கியக் காரணமாகும். இதன் வகைகளில் ஒன்றிற்கு (ஸுராரிஹ்) என அரபு மொழியில் சொல்லப்படுகிறது. இவ்விதம் பல நாட்டைச் சேர்ந்தவராலும் இதற்குப் பற்பல பெயர்கள் இடப்பட்டிருக் கின்றன. இதில் 11 வகைகளுண்டெனச் சில நூல் வல்லோர் கூறுகின்றார்கள். இவற்றுள் ஆண் வண்டானது, பெண் வண்டைக் காட்டிலும் சிறிதாயிருக்கும். இது பெரும்பாலும் வெப்ப நாடு களில் அதிகமாய்க் காணப்படும். மற்ற நாடுகளில் உள்ளவற்றைக் காட்டிலும், வெப்ப நாட்டில் உள்ள வண்டுகளே அதிக காரமான வைகளாகவும் அதிக பலமானவைகளுமாம். இந்த வண்டுகளுள்ள இடத்தில் மிகுதியானநிணநாற்றமாய், ஊடுருவிச் செல்லத்தக்க வெறுப்பைத் தரும் நாற்றம் இருக்குமாகையால் அவைகளுள்ள இடத்தை இலகுவாய்த் தெரிந்துகொள்ளக்கூடும். சில சமயங்கவில் இவ்வண்டுகள் உள்ள இடத்தில் நாற்றத்தால் மனிதர்கள் நடமாடக்கூடாமற்போகும். இவை பெரும்பாலும் அதிகாலை நேரங்களில் பிடிக்கப்படும். மற்ற நேரங்களில் அகப்படா. வேடர் முதலியோர் உடல், முகம், கை முதலிய எல்லாப் பாகங் களையும் மூடிக்கொண்டு அவ்வண்டுகள் இருக்கும் கிளைகளைக் குலுக்கிக் காடியில் விழச்செய்வார்கள். காடியில் விழுந்தவுடனே அவை மாண்டுபோகும். காற்றுப் புகாமல் மூடியிட்ட கண்ணாடிக் குப்பியில் கொஞ்சம் கற்பூரத்தைச் சேர்த்து வைத்திருந்தால் அவை கெட்டுப்போகாமல் இருக்கும் அப்படிச் செய்யாவிட்டால் விரைவில் கெட்டுப்போகும். நாம் மேற்கண்டபடி பத்திரப் படுத்தினல் அவற்றின் உருவம், நிறம், எரிச்சலுடன் கூடிய உறைப்பு என்னும் இவை மாருமல் இருக்கும். மேலும் அதற்கு இயல்பாகவே உள்ள தீய நாற்றம்கூடிய மணம் சற்றேறக்குறைய மாருமலே இருக்கும். இதன் உடல் அடையாளங்கள் பின்வரும் வகையிலிருக்கும்.

இவ்வண்டிற்கு இரண்டு அழகான இறக்கை மூடிகளுண்டு. இவை நீண்டிருப்பதோடு வளையத் தகுந்தவைகளாகவும் பொன் பசுமை நிறமுடையனவாகவும் இருக்கும். இவை கறுப்பு நிற

முள்ள இரண்டு சில்லி இறக்கைகளால் மூடிக்கொண்டிருக்கும். இவ்வண்டின் தலையானது பெருத்து, இதயத்தைப்போன்ற உருவமுடையதாக இருக்கும். இதன் தலையிலும் மார்பிலும் இரேகையோடுகூடிய மடிப்புகள் உண்டு. இத்திரைவு தலையைக் காட்டிலும் சிறிதாயிருக்கும். இதனைச் சதுர வடிவத் தோற்றம் மெனச் சொல்லலாம். பெரும்பான்மை இதன் மார்பிலும் சிறு பான்மை இதன் உடலின் மற்ற பாகங்களிலும் நரை நிறமுள்ள மயிர்கள் உண்டு. இதன் தும்பிக்கையானது கருநிறமுடையதாய் நீண்டு அரத்தைப்போல அல்லது சில்லிவேரைப்போலிருக்கும். வாயின் மேற்பக்கமானது இணைக்கப்பட்ட இரண்டு தொடு உணர் உறுப்புகளைத் தாங்கிக்கொண்டிருக்கும். இவை இரண்டு தொடு உணர் உறுப்புகளின் இணைக்கப்பட்ட கோடியானது வட்ட வடிவமாயிருக்கும். இதன் கால்கள் நான்கு முதல் ஆறு நூல் நீளமுள்ளவைகளும் மிருதுவானவைகளுமாம். இதன் முன்னிணை சோடிக் கால்களில் ஐந்து கணுக்களும், பின்னிணை சோடிக் கால்களில் நான்கு கணுக்களுமுண்டு. எல்லாக் கால்களும் கரு ஊதா நிறமுள்ளவைகளாயிருக்கும். முன்னிணைக் கால்களிலும் அதன் மூட்டுகளிலும் ஒரு நடு எலும்புண்டு. முன்னிணைக் கால்களின் கடைசி மூட்டில் ஒரு சோடி நகங்கள் அல்லது கொடுக்குகளுண்டு இவற்றுள் ஒவ்வொன்றும் விரிக்கப்பட்டிருக்கும். பெண் வண்டின் மலத்துளை அருகில் வாலைச் சார்ந்த பொருத்துகளுண்டு. இவை சற்றேறக்குறைய தொடு உணர் உறுப்புகள் ஒத்தவை எனலாம்.

10. பின்பு, முன்சேர்த்த மூன்றுவகை உப்பையும் கல்வத்திலிட்டு, முன் தயாரித்து வைத்த ஒரு கண்ணாடிக் குப்பியிலுள்ள செந்நீர் முழுவதையும் சிறுகச் சிறுக ஊற்றி நன்ருய் அரைத்து வில்லை செய்து சித்திரைக் கத்திரி வெய்யிலில் மூன்று நாள் உலர வைத்து, நன்ருய் உலர்ந்த பின்பு, சிறு அகலில் வைத்து மேலகல் மூடி அரைத்த மண்ணைத் துணித் துண்டில் தடவி வாய்ப் பகுதியைக் கட்டி மூடவேண்டும். இவ்விதம், 3 சீலைமண் செய்து வெய்யிலில் உலர்த்தி 2 பலம் (70 கிராம்) எடையுள்ள 15 எருமுட்டைகளில் புடமிட்டு, ஒரு நாள் ஆற வைத்து மறுநாள் எடுத்துக்கொள்ளவும்.

**குறிப்பு :**—இவ்விதம் புடம்போட்டதில் ஒரு தடவை சரக்கின் எடை அதிகம் குறைந்தும், மற்ெருரு முறையில் வைத்த எடை சரியாக இருந்தும். எடை அளவு மாறுபட்டால் அதற்குக் காரணம் தீ அதிகப்படுவதும் திட்டமாயிருப்பதுமேயாம். ஆகையால் புடமிடும்போது தொடக்கத்தில் மணல் மறைவில் புடம் வைத்துக்கொள்வதே உத்தமம்.

11. இந்த மருந்தின் சமனெடை உருண்டையான எரிக்கும் (தீப) கற்பூரம், இந்த மருந்தின் பாதி எடை முன்கூறிய முறைப்படி கட்டிய வீரம், புனுகு 40 குன்றிமணி எடை. இவை நான்கையும் கல்வத்திலிட்டுப் பொடித்து அரைத்து மறு கண்ணுடிக் குப்பியிலுள்ள செந்நீர் முழுவதையும் சிறுகச் சிறுக ஊற்றிச் செலுத்தி அரைத்து வில்லைசெய்து சித்திரைக் கத்திரி வெய்யிலில் மூன்று நாள் உலர வைத்து சிறு அகலில் வைத்து மேலகல் மூடி அரைத்த மண்சீலை மூன்று செய்துலர்த்தி, 2 பலம் (70 கிராம்) உள்ள 30 எருமுட்டையில் புடமிட்டு ஒரு நாள் ஆறவிட்டு எடுத்து, தாம் தாம் வழிபடும் கடவுளைத் துதித்து, ஏழை முதலியவர்களுக்கு உணவளிப்பு முதலியவைகளும் செய்து கண்ணுடிக் குப்பியில் பத்திரப்படுத்தவும்.

இது கடுங்காரச் சுண்ணமாகையால், இதைத் தனியாய் உண்ணுவதற்குப் பயன்படுத்தக் கூடாது. இஃது எந்த மருந்துடன் சேர்க்கப்படுகிறதோ அந்த மருந்தின் குணத்தை அதிகப்படுத்தி நிலைநிறுத்தும் தன்மையுடையது. ஆகையால், இச் சுண்ணத்தில் குறைந்த அளவை, எல்லாவித பற்பங்கள், செந்தூரங்கள், கட்டுகள், இளகங்கள், தைலங்கள் முதலியவைகளில் சேர்க்க அவற்றின் குணம் மேம்படும். இன்னம் அறிவாளிகள் இந்தச் சுண்ணத்தின்மூலமாய்ப் பலவகையான பாகங்களைத் தெரிந்து செய்துகொள்வார்கள். இப்பாகத்தைச் செய்து முடிக்க அதிக துன்பத்தை மேற்கொள்வது இன்றியமையாதது ஆயினும், இதனுலுண்டாகும் சிறந்த பயன் அதிகமே. இச் சுண்ணத்தின் போக்கை அறிந்துசெய்தால் நெருப்பிற்கோடும் சரக்குகளெல்லாம் நெருப்பிற்கோடாமல் எதிர்த்து வெற்றியடைந்து நிற்கும். அதிகத் தீ தேவையான கடினச் சரக்குகளெல்லாம் சொற்பத் தீயில் மாண்டு பற்பம், சுண்ணம் முதலியவைகளாகிவிடும். சிவக்காத செந்தூரங்களெல்லாம் நன்ருய்ச் சிவந்துபோகும். இவ்விதம் இதை அநேகவிதமாய் பயன்படுத்திக் கொள்ளலாமாகையால், அம்முறைகளை அனுபவமானவர்கள் மூலம் தெரிந்து கொள்ளலாம். இவ்விதமானதைத்தான் **குருச் சுண்ணமென்றும்** சொல்லப்படுகிறது.

## 60. முப்புச்சுண்ணம் வேறு

1. (அ) பாகப்படுத்திய பூநீர் 1 படி. இதனை ஒரு பீங்கான் பாத்திரத்தில் இட்டு, ஒரு படி பாகப்படுத்திய கடல்நீரை விட்டுக் கரைத்து, ஒருநாள் வைத்து மறுநாள் காலையில் தெளிவிறுத்து, தெளிவை மூன்று பங்காகச் செய்து, ஒரு பங்கைத்

தண்டவாளச் சட்டியில் இட்டு, சட்டியின்மேல் துணியால் வேடுகட்டி, அடுப்பில் மெதுவாக எரித்து அந்த நீர் சுண்டிக் குழம்பானவுடன் மறுபங்குத் தெளிவு நீரையும் அதனுடன் சேர்த்து, சட்டிக்கு வேடுகட்டி முன்போலவே எரித்துக் குழம்புப் பதமானவுடன் இன்னொரு பங்குத் தெளிவையும் சேர்த்து சுண்டக் காய்ச்சி இறக்கிக் கொஞ்சம் ஆறவைத்துப் பீங்கான் பாத்திரங் களில் போட்டுப் பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கிக் கொள்ளவேண்டும்.

2. பின்பு, இந்த உப்பைப் பொடித்து அளந்து, அந்த அளவே பாகப்படுத்திய கடல்நீரைவிட்டுக் கரைத்து முன்போலவே தெளிவிறுத்து மூன்று பங்காக்கி முன்னர்த் தயாரித்த ஒரு பங்கைத் தண்டவாளச் சட்டியில் இட்டுத் துணி வேடுகட்டி, அது குழம்பாய்ச் சுண்டியவுடன், அதனுடன் மறுபங்குத் தெளிவையும் சேர்த்து, அதுவும் குழம்புப் பதமாய்ச் சுண்டிய வுடன், அதனுடன் மறுபங்குத் தெளிவையும் சேர்த்துச் சுண்டக் காய்ச்சி இறக்கி ஆறவைத்து முன்போலவே பீங்கான் பாத்திரங்களில் இட்டு முன்போலவே பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கிக்கொள்ளவேண்டும்,

3. இவ்விதம் இந்தப் பூநீர் உப்பைப் பொடித்துக் கடல் நீர்விட்டுக் கரைத்துத் தெளிவிறுத்து அந்தத் தெளிவை மூன்று பங்காக்கி, ஒவ்வொரு பங்கையும் ஒன்றன்பின் ஒன்ருய்ச் சேர்த் துக் காய்ச்சிப் பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கி மீண்டும் மீண்டும் 10 தடவைகள் செய்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

4. பாகப்படுத்தின வெடியுப்பு 1 படி. இந்த உப்பையும் மேலே பூநீர்ப் பாகத்தில் சொல்லியிருக்கிறதுபோலவே பாகப் படுத்தின 1 படி கடல்நீரைவிட்டுக் கரைத்து, ஒருநாள் வைத்து மறுநாள் தெளிவிறுத்து மூன்று பங்காக்கி, ஒரு பங்கைத் தண்ட வாளச் சட்டியில்விட்டு, சட்டி வாய்க்கு வேடுகட்டிக் காய்ச்சிக் குழம்புப்பதத்தில் மறுபங்குத் தெளிவையும் அதனுடன் சேர்த்துக் காய்ச்சிச் குழம்புப் பதமானவுடன் மூன்ருவது பங்குத் தெளிவை யும் அதனுடன் சேர்த்து முன்போலவே காய்ச்சிச் சுண்டினவுடன் இறக்கிச் சற்று ஆறவைத்துப் பீங்கான் பாத்திரங்களில் இட்டு, பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கி எடுத்து முன்போலவே இந்த உப்பைப் பொடித்து அளந்து, கண்ட அளவு பாகப்படுத்தின கடல்நீரைவிட்டுக் கரைத்துத் தெளிவிறுத்து முன்போலவே மீண்டும் மீண்டும் 10 தடவைகள் செய்து உப்பாக்கிக் கொள்ளவேண்டும்.

5. பாகப்படுத்தின கறியுப்பு 1 படி. இதனையும் மேற்கண்ட இரண்டு பாகங்களில் சொன்னபடியே பாகப்படுத்தின ஒரு படி கடல் நீரில் கரைத்து, ஒருநாள் வைத்துத் தெளிவிறுத்து மூன்று பங்காக்கி, முன்னர் ஒரு பங்கைத் தண்டவாளச் சட்டியில் இட்டு, சட்டி வாய்க்கு வேடுகட்டிக் காய்ச்சிக் குழம்புப் பதமானவுடன் மறுபங்குத் தெளிவையும் அதனுடன் சேர்த்துக் காய்ச்சிக் குழம்புப் பதமானவுடன் மூன்றாவது பங்குத் தெளிவையும் அதனுடன் சேர்த்துச் சுண்டக் காய்ச்சி இறக்கிச் சற்று ஆறவைத்துப் பீங்கான் பாத்திரங்களில் இட்டு, பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கி, இந்த உப்பைப் பொடித்து அளந்து, அந்த அளவே பாகப்படுத்தின கடல்நீரில் கரைத்து, முன்போலவே மீண்டும் மீண்டும் 10 தடவைகள் செய்து உப்பெடுத்துக் கொள்ள வேண்டும்.

6. மேற்சொன்ன முறைப்படி 10 தடவைகள் புடமிடப் பட்ட பூநீர் உப்பு, வெடியுப்பு, கறியுப்பு என்னும் மூன்றுவகை உப்புகளையும் சம அளவாக எடுத்து ஒரு பீங்கான் பாத்திரத்தில் இட்டு, மூன்று உப்புகளையும் ஒன்றாய்க் கலந்து, அந்த அளவு பாகப்படுத்திய கடல்நீரைவிட்டுக் கரைத்து மூன்று நாள் வைத்து நான்காம் நாள் தெளிவிறுத்து, அந்தத் தெளிவை மூன்று பங்காக்கி ஒரு பங்கைத் தண்டவாளச் சட்டியில்விட்டு அடுப் பேற்றிச் சட்டி வாய்க்கு வேடுகட்டி மெதுவாய்த் தீ எரித்துக் குழம்புப் பதமாய்ச் சுண்டினவுடன் மறுபங்குத் தெளிவையும் அதனுடன்விட்டு முன்போலவே காய்ச்சிக் குழம்புப் பதமாய்ச் சுண்டினவுடன், மூன்றாவது பங்குத் தெளிவையும் அதனுடன் சேர்த்து முன்போலவே எரித்துச் சுண்டக் காய்ச்சிக் கீழிறக்கிச் சற்று ஆறவைத்து பீங்கான் பாத்திரங்களில் இட்டுப் பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கி, அதைப் பொடித்து அளந்து, அந்த அளவே பாகப்படுத்தின கடல்நீரை விட்டுக் கரைத்து, மூன்று நாள் வைத்து நான்காம் நாள் தெளி விறுத்து முன்போலவே மூன்று பங்காக்கி, ஒரு பங்குத் தெளிவை முன் போலவே சட்டியிலிட்டுக் காய்ச்சிக் குழம்புப் பதத்தில் மறு பங்குத் தெளிவையும் சேர்த்துக் காய்ச்சிக் குழம்புப் பதமான வுடன் மூன்றாவது பங்குத் தெளிவையும் சேர்த்துச் சுண்டக் காய்ச்சி இறக்கி ஆறவைத்துப் பீங்கான் பாத்திரங்களில் இட்டுப் பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கி, முன்போலவே, 10 தடவைகள் மீண்டும் மீண்டும் செய்துகொள்ள வேண்டும்.

7. இவ்விதம், 10 தடவைகள் புடமிடப்பட்ட உப்பு ஒரு பங்கு, கட்டியான நவாச்சாரம் ஒரு பங்கு இவை இரண்டையும்

சேர்த்துக் கல்வத்திற் பொடித்துப் பாகப்படுத்தின கடல்நீரைச் சிறுகச் சிறுகவிட்டு, 2 சாம (6 மணி) நேரம் அரைத்து வில்லை தட்டி நன்றாய் உலர வைத்து இலகுபுடமாய்ப் போடவேண்டும். மறுபடியும் இதை முன்போலவே கடல்நீரைவிட்டு, 1 சாம நேரம் அரைத்து வில்லை தட்டி முன்போலவே இலகுபுடம்போட்டு, எடுத்துப் பத்திரப்படுத்தவேண்டும்.

8. புடம்போட்டெடுத்த உப்பைப் பொடித்து ஒரு கண்ணாடிக் குப்பியில் அல்லது தேவையான குப்பிகளில் அரைப்பாகம் வரையில் போட்டு குப்பியின் வாய்க்கு மூடியிட்டு, 7 சுண்ணாம்பு சீலைசெய்து குளிர்ச்சியான இடத்தில் இரண்டுமுழக் குழிதோண்டி அல்லது *செயநீர்க் குழியில் 40 நாள் வைத்தெடுக்க குப்பியில் உப்பெல்லாம் நீராகியிருக்கும்.

9. மேற்கண்டபடியான நீரையெல்லாம் ஒரு பீங்கான் பாத்திரத்தில் சேர்த்துவிட்டு பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கி ஒரு குப்பியில் பத்திரப்படுத்தவும்.

10. இந்த உப்பில் மூன்று பலம் (105 கிராம்) எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து 59ஆவது பாகத்தில் சொல்லப்பட்ட செந்நீரை ஊற்றி அரைத்து, அங்குச் சொல்லப்பட்டிருப்பது போலவே இரண்டு புடமிடக் கடுங்காரச் சுண்ணமாகும்.

முன் பாகத்திற் சொல்லியிருப்பதுபோலவே எல்லாவித பற்பம், செந்தூரம், இளகம், தைலம் முதலியவைகளில் இச் சுண்ணத்தைச் சேர்ப்பதால் அதிக குணமும் வீரியமும் உண்டாகும். இன்னும் இதை பிற முறைகளோடு சேர்த்து அறிவாளிகள் அனேக பாகங்களைச் செய்துகொள்வார்கள்.

## 61. முப்புச் சுண்ணம் வேறு

(1) பாகப்படுத்தின பூநீர் 5 படி, நன்றாய் வெந்ததும் கல்கரடு முதலியவை நீக்கப்பட்டதுமான கற்சுண்ணாம்பு 3 படி, பாகப் படுத்தின கறியுப்பு 1 படி. இவை எல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து ஒரு பெரிய குப்பியில் இட்டுக்கொள்ளவேண்டும். தூய்மை செய்யப்பட்ட கடல்நீர் 18 படி. இந்த நீரில் 2 அல்லது 3 படி நீரை முன் தயாரித்த குப்பியில் ஊற்றி உடனே குப்பியின் வாயை மூடிவிடவேண்டும். அரைமணி நேரம் சென்று சுண்ணாம்புக் கொதிப்பு அடங்கியவுடன் மீதி நீரையும்விட்டு, மூங்கில் கோலால் நன்றாய்க் கலக்கி மூடிவைக்க வேண்டும். நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் கலக்கியும் வரவேண்டும். இவ்விதம், 3 நாள் சென்ற

* இந்தக் குழி செய்யும்விதம் செயநீர்ப் பாகத்தில் சொல்லப்படும்.

பின் நான்காம் நாள் திரி வைத்துத் தெளிவை இறுத்து, தண்ட வாளச் சட்டியில்விட்டு, சட்டி வாய்க்கு வேடுகட்டி மேலும், மூங்கிற் கூடையால் மூடி, அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்துக் குழம்புப் பதமானவுடன் கீழிறக்கி ஆற வைத்துப் பீங்கான் பாத்திரங்களில் இட்டுப் பகலில் வெய்யிலிலும், இரவில் பனியிலும் வைத்து உலர்த்தி உப்பாக்கிக் கொள்ளவேண்டும்.

(2) மேற்சொன்ன உப்பைப் பொடித்து அளந்து; முன்போலக் குப்பியில் இட்டு, கண்ட அளவிற்கு இரண்டு பங்குத் தூய்மை செய்த கடல்நீரைவிட்டு நன்ருய்க் கலக்கி முன்செய்ததுபோலவே மூன்றுநாள் நாள்தோறும் கலக்கிக் கலக்கி வந்து, 4ஆம் தெளி விறுத்து முன்போலவே காய்ச்சி முன்போலவே வெய்யிலிலும் பனியிலும் வைத்து உப்பாக்கிக்கொள்ளவும். இவ்விதம் மீண்டும் மீண்டும் பத்துத் தடவைகள் செய்து உப்பெடுத்துக்கொள்ள வேண்டும்.

(3) முன்சொன்னபடி பத்துத் தடவைகள் செய்து எடுத்த உப்பு 16 பலம் (560 கிராம்). இதனை ஒரு தட்டையான பீங்கா னில் இட்டு, வெய்யிலில் வைத்து 59ஆவதில் சொல்லியிருக்கிற வெடியுப்புச் சுண்ணச் செயநீர் $\frac{1}{4}$ படி, இதனை நாள்தோறும் மேற் கூறிய உப்பில் கொஞ்சங் கொஞ்சமாகத் தெளித்து உலர்த்த வேண்டும். அன்ருடம் தெளிக்கும் செயநீர் அன்றே காய்ந்து போகவேண்டும். ஈரம் இருக்கலாகாது, இவ்விதம் அந்தக் கால் படி செயநீரையும் அந்த உப்பில் செலுத்திச் சுவர வைத்துவிட வேண்டும். எத்தனைநாள் சென்ருலும் பாதகமில்லை.

(4) பின்னர் 59ஆவதில் சொல்லியிருக்கிற நவாச்சாரச் செய நீர் $\frac{1}{4}$ படி, இந்தக் கால்படி செயநீரையும் முன் செய்ததுபோலவே சிறுகச் சிறுக மேற்கூறிய உப்பில் தெளித்து உலரவைத்து எடுத்துக் கொள்ளவேண்டும். அதிக ஈரம் தட்டாமல் கொஞ்சம் ஈரப்பசை உண்டாகும்படி இருக்கவேண்டும். இவ்விதம் பக்குவமாய்த் தெளித்து உலர்த்திக்கொள்ள வேண்டும்.

(5) மேற்கண்டபடி தயாரித்து வைத்த உப்பைக் கல்வத்தில் இட்டு, நன்ருய்ப் பொடித்துக்கொள்ளவேண்டும். பின்பு கட்டி யான நவாச்சாரம், வீரம், பூரம், வெடியுப்பு, சீனக்காரம், சூடன் (கற்பூரம்) வெள்ளைப் பாடாணம், துருசு ஆகிய இவை எட்டும் வகைக்கு 1 பலம் (35 கிராம்), இவற்றைக் கல்வத்தில் இட்டு, ஒன்று அல்லது இரண்டு சாம நேரம் அரைத்து மைபோலானபின் முன் தயாரித்து வைத்துள்ள உப்புடன் சேர்த்து நன்ருய்க் கலந்து கொள்ளவேண்டும்.

இரண்டு பீங்கான்களை, ஒன்றோடொன்று இடைவெளி இல்லாமல் பொருந்துபடியாகத் தயாரித்து ஒன்றன் மேல் ஒன்று இருக்கும்படி வைத்துக் கீழ்க்கோப்பையில் முன்னே கூறிய மருந்து களை இட்டு மேல் கோப்பையை மூடி, உளுந்துமாவினால், 7 சீலை செய்து ஈரப்பசையுள்ள இடத்தில் இரண்டு முழக்குழி வெட்டி அதற்குள் அல்லது, செயநீர்க் குழியில் வைத்து 40 நாள் சென்ற பின் எடுக்க செயநீராயிருக்கும். இந்தச் செயநீரைப் பீங்கான் பாண்டத்தில் ஊற்றி வெய்யிலில் வைத்து உலர்த்தி உப்பாக்கிக் கொள்ளவேண்டும்.

(6) மேற்கூறிய உப்பில் 3 பலம் (105) கிராம் எடுத்து, இதனைக் கல்வத்திலிட்டு 59 ஆவதில் சொல்லப்பட்டிருக்கிற செயநீர் விட்டரைத்து அங்குச்சொல்லி இருப்பதுபோல இரண்டு புடமிடச்சுண்ணமாகும்.

இச் சுண்ணத்தை பற்பங்கள், செந்தூரங்கள், இளகங்கள் தைலங்கள் முதலியவற்றில் சேர்க்க, அவற்றின் குணம் மேன்மை யானதாய் இருக்கும். இன்னும், அறிஞர்கள் இதன் மூலமாய் அனேக வகைச் சார்பு முறைகளோடு சேர்த்துப் பற்பங்கள், செந்தூரங்கள், உலோக மாரணங்கள் முதலியவைகளையும் செய்வார்கள்.

## 62. முப்புச்சுண்ணம் வேறு

பாகப்படுத்திய பூநீர் $\frac{3}{4}$ படி. பாகப்படுத்திய வெடியுப்பு $2\frac{1}{2}$ படி (இதனைத் தூள் செய்துகொள்ளவேண்டும்.) படிக்காரம் 2 பலம் (70 கிராம்) இதையும் பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

**செய்முறை** :—(1) வெடியுப்பைத் தண்டவாளச் சட்டியில் இட்டு அடுப்பேற்றி மெதுவாய் எரிக்க, உப்பானது உருகி நீர் போலாகும். அப்போது பூநீரைச் சேர்த்து, இரும்புக் கரண்டியால் நன்றாய்க் கிளறிவிட்டு, இரண்டும் கலந்தவுடன் படிக்காரத் தூளைத் தூவி இடைவிடாமல் கிளறிக்கொண்டு வர, சட்டியி லுள்ள உப்பானது உரைந்துபோகும். அப்படியே சட்டியைக் கீழிறக்கி ஆறவைத்தால் உப்பானது இறுகிக் கல்லைப் போலாகி விடும். இதை உளியினால் சிறிது சிறிதாகச் சேதமில்லாமல் வெட்டியெடுத்து, கல்லுரலில் இரும்புலக்கையால் இடித்துத் தூள்செய்து ஒரு பீங்கான் தட்டில் வைத்துக் கீழ்க்காணும் முறைப்படி செய்யவேண்டும்.

(2) கட்டின கறியுப்பின் *தனி செயநீர் $1\frac{1}{2}$ படி. இதனைச் சிறுகச்சிறுக முன்னே தயாரித்து வைத்திருக்கும் பீங்கானிலுள்ள உப்பில் தெளித்துப் பகலில் வெய்யிலில் உலர்த்தவேண்டும். இவ்வாறு அந்த, $1\frac{1}{2}$ படி செயநீரையும், 10 நாளைக்குள் செலுத்தி விடவேண்டும்.

(3) பின்பு, பின் சொல்லப்படும் முறைப்படி கட்டுண்ட தனி நவாச்சார செயநீர் $1\frac{1}{2}$ படி. இந்தச் செயநீரையும் முன் செய்தது போலவே முன் பக்குவப்படுத்திய உப்பில் சிறுகச் சிறுகத் தெளித்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். இவ்விதம் அந்தச் செய நீர் சென்றபின் இரண்டு மூன்றுநாள் தனியாய் வெய்யிலில் உலர்த்தவேண்டும்.

## நவாச்சாரக் கட்டு

13 பலம் (455 கிராம்) நவாச்சாரத்தைப் பொடித்து மெல்லிய சல்லாத் துணியில் சல்லித்துக் கொள்ளவேண்டும். இரும்புச்சட்டியை வெண்மையாகும்படி தேய்த்துக்கழுவி அடுப் பேற்றி அதில், 13 பலம் தூய்மைசெய்த ஆலிவ் எண்ணெய் (Olive oil) விட்டுச் சூடுகண்டவுன் முன்னே தயாரித்து வைத்துள்ள நவாச்சாரப் பொடியை இட்டுப் புகையாமல் புரட்டிப் புரட்டி வறுக்கவேண்டும். அதில் விட்ட முற்கூறிய ஆலிவ் எண்ணெ யெல்லாம் வற்றியவுடன் கீழிறக்கி, நவாச்சாரத்தூளை நெருப்பி லிட்டு புகையாமலிருந்தால் பதமாம், புகைந்தால் அதை மறு படியும் அடுப்பேற்றி, முன் ஆலிவ் எண்ணெய், 5 அல்லது 6 பலம் ஊற்றி முன்போல் வறுக்கவேண்டும். இவ்வாறு, நெருப்பிலிட்டால் புகையாமலிருக்கும்வரையில் செல்லத்தக்க அளவு முற்கூறிய எண்ணெய் விட்டு வறுத்தெடுத்துக் குளிர ஆறவைத்து, செல்லத் தக்க அளவு காடியைவிட்டுப் பிசைந்து வெய்யிலில் வைத்து உலர்த்தவேண்டும். பின்பு சிறு உருண்டைகளாகச் செய்து விளக் கெரிபோல அடுப்பெரித்து ஓட்டில் அந்த உருண்டைகளை இளம் வறுப்பாய் வறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். பின்பு, இதனுடன் பக்குவப்படுத்திய படிக்காரத்தூள் 2 பலத்தைச்சேர்த்து, †காடித் திராவகம்விட்டுப் பிசைந்து, வெய்யிலில், 40 நாள் உலர்த்திப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். இவ்விதம் பாகம் செய்யப் பட்ட நவாச்சார செயநீரானது எல்லாவகைக் கட்டுகளிலும் உபயோகப்படுவதுமன்றி இரசத்தைக் கட்டுவதில் இது முதன்மை யானது. கட்டின நவாச்சாரத்தைத் தனியாய் செயநீர் செய்யும் முறைபற்றிப் பின்னெழுதுவோம்.

---

* கட்டின தனியுப்பை செயநீர் செய்யும் வகை பின்னர் எழுதப்படும்.

† காடி திராவகமுறை, நவாச்சாரப் பதங்க முறை என்னும் இவை பின்னெழுதப்படும்.

## ஜய்த்தூன் (ஆலிவ்) எண்ணெய்

ஜய்த்தூன் (ஆலிவ்) எண்ணெயானது, ஷாம் நாடு, மக்கரிப் நாடு, பிரான்சுநாடு. இத்தாலிநாடு, ஸ்பேயின்நாடு, கிரேக்கநாடு முதலிய நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு ஏராளமாய்க் கொண்டு வரப்படுகின்றது, இதற்கு ஆங்கிலத்தில் (Olive oil) ஆலீவ் ஆயில் என்றும், (Salad oil) ஸலாத் ஆயில் என்றும், (Sweet oil) ஸ்வீட் ஆயில் என்றும் பல பெயர்கள் உண்டு. இதற்குத் தமிழில் தனியான பெயரேதுமில்லை. ஆனால், இது மேல் நாட்டிலிருந்து (அதாவது இந்தியாவை அல்லாத பிற மேல் நாட்டிலிருந்து) கொண்டுவரப்படுகின்றபடியால் "சீமையெண்ணெய்" என ஒரு பெயர்மாத்திரம் வழங்குகிறது. இது எல்லா ஆங்கில மருந்து கடைகளிலும், யூனனி மருந்து கடைகளிலும் கிடைக்கிறது. இந்த எண்ணெயானது எடுக்கப்படும் விதத்திற்கும் இது அனுப்பப் படும் நாட்டிற்கும் தக்கபடி இது பலவகைப்படும். இந்த மரத்தின் செம்பழங்களை இயந்திரத்தில் வைத்துப் பிழிந்தெடுப்பதற்குத் தூய்மையான ஜய்த்தூன் எண்ணெயென்றும், இந்தப் பழங்களை நீரில் வேக வைத்து நீரின்மேல் மட்டத்தின் மிதப்பதைச் சேகரித்த எண்ணெய்க்கு அல்லது, இந்தப் பழங்களை ஓட்டில் சற்று வறுத்து வதக்கிப் பிழிந்த எண்ணெய்க்கு ஊற்றிய ஜய்த்தூன் எண்ணெய் என்றும் பெயர். முன்சொன்ன எண்ணெயானது மருந்து களுக்குப் பயன்படும். பின் சொன்னவை விளக்கேற்ற உதவும் இன்னம், இது (மக்ஷூஷ்) கலப்பானது என்றும், (கய்ரே மக் ஷூஷ்) கலப்பற்றது என்றும் இருவகைப்படும். இந்த எண்ணெ யுடன் கசகசா முதலிய பல எண்ணெய்களைச் சேர்த்தும் விற்கப் படுகிறது. இதைக்கண்டுபிடிப்பது கடினம் ஆயினும், கலப்பில்லாத சுத்த எண்ணெயை உடலின்மீது தடவினல், அது உடலின்மீது சீக்கிரம் பரவும். மற்ற எண்ணெய்களைப் போல பிரிந்துபோகாமல் எங்கும் பரவிக் கலந்திருககும். கலப்பான எண்ணெய்க்கு இந்தக் குணங்களிரா. இன்னம், முதல்தரப் புது எண்ணெயானது தெளி வாயும், சிறிதளவு இனிப்பாயும், வாசனையற்றதாயுமிருக்கும். நாள்பட்டுவிட்டால் தடித்துப் பிசுப்பிசுப்பாயும் தரத்துக்குத் தக்க படி மஞ்சள் நிறமாகவாவது, வெளிறிய நிறமாகவாவது பசுமைத் தன்மையுடையதாகவாவது இருக்கும். இந்த எண்ணெயானது எவ்வளவாய் நாட்பட்டதோ அவ்வளவாய் இரசவாதமுறைக்குச் சிறப்பானது என்றும், இதன் வலிமை ஆயிரம் ஆண்டுகள் இருக்குமென்றும் இரசவாத பண்டிதர்களுள் சிலர் கருது கின்றனர். ஆகையால் மேற்கண்ட பாகத்திற்குக் குறைந்தபட்சம் ஏழு வருடத்திற்கு மேற்பட்ட எண்ணெயாயிருக்கவேண்டும். அவ்விதம் அகப்படாவிட்டால், 1 வீசை (1400 கிராம்) புது

எண்ணெயுடன், 1 வீசை நீர் சேர்த்துக் காய்ச்சி நீரெல்லாம் சுண்டினவுடன், இன்னெரு வீசை நீர் அந்த எண்ணெயில் விட்டுக் காய்ச்சி அந்த நீரும் சுண்டினவுடன் மூன்ருந்தடவையும் 1 வீசை நீர்விடவேண்டும். இவ்விதம் ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் நீர்விட்டுக் காய்ச்சி எண்ணெயானது அரை வீசையானவுடன் இறக்கிப் பத்திரப்படுத்தவேண்டும். இதுவே இதன் தூய்மையு மாகும். கலப்பில்லாத எண்ணெயைப் பனிக்கட்டியில் வைத்தால் நெய்யைப்போல உறைந்து போகும்; கலப்புள்ள எண்ணெயானது அவ்வாறு சீக்கிரம் உறையாது. கலப்புள்ள எண்ணெயைக் கண்ணுடிக் குப்பியில் விட்டுக் குலுக்கினுல் தெளிவாகும்; கலப்பற்றது தெளிவாகாமல் தடிப்பாகவே இருக்கும். இந்த எண்ணெயைக் காற்றுப்படவைத்தால் சீக்கிரம் தடிப்பாகும்; கலப்புள்ளது அவ்விதமாகாது.

(4) பின்பு வாய்பொருந்தும்படியான இரண்டு பீங்கான் பாத்திரங்களைக் தயார்ப்படுத்தி, ஒன்றில் மேற்கண்ட உப்பை இட்டு, மேலே மற்றெருரு பீங்கானை மூடி இடைவெளி இல்லாமல் வாய்க்குச் சுண்ணும்புச்சீலை செய்து ஈரமான இடத்தில் ஆல்லது, செயநீர்க்குழியில் 40 நாள் வைத்தெடுக்க சரக்கெல்லாம் நீராகி இருக்கும். அந்த நீரை கண்ணுடிக் குப்பியில் இறுத்துக் கொள்ள வேண்டும். நீராகாமல் ஏதேனும் எஞ்சி இருக்குமானுல் முன் போலவே மேலுள்ள பீங்கான்மூடியை முன்போலச் சுண்ணச்சீலை செய்து முன்போல செயநீர்க் குழியில் 20 அல்லது 40 நாள் வைக்க செயநீராகிவிடும். இந்த நீரை அகன்ற பீங்கான்களில் விட்டு வெய்யிலில் வைத்து உலர்த்தி உப்பாக்கிக் கண்ணுடிக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும்.

(5) முன் தயாரித்து வைத்துள்ள உப்பில், 3 பலம் எடுத்துக் கல்வத்திலிட்டு, 59வது முறையில் சொல்லப்பட்டிருக்கிற செயநீர் விட்டரைத்து, அங்குச் சொல்லியிருக்கிறபடியே காய வைத்தும் அகலில் வைத்துச் சீலைசெய்து காய வைத்தும் ஒரு சாண் சதுரக் குழி தோண்டி அதற்குள் கருநிறமான ஆற்றுமணல் அரைப்பாகம் கொட்டி, அதன்மேல் முன் கவசத்தை வைத்து மேலும், குழிநிறைய முன்கூறிய மணலைக்கொட்டி, அதன்மேல் 2 பலமுள்ள, 10 விராட்டியை அடுக்கிப் புடமிடவேண்டும். ஆறினபின் எடுத்து முன் செயநீர்விட்டு முன்போலவே அரைத்து வில்லைசெய்து காய வைத்து அகலில் வைத்து முன்போலவே சீலைமண் செய்து காயவைத்துக் குழியில் அரைப்பாகம் கருமணல் நிறைத்துக் கவசம் வைத்து மேலும் மணலைக்கொட்டி அதன்மேல் 2 பலமுள்ள 15 விராட்டியில் புடமிட்டு எடுக்கவேண்டும்.

இவ்விதம் ஒவ்வொரு முறையும் ஐந்தைந்தாக முன்கூறிய எடையுள்ள விராட்டிகளை அதிகப்படுத்தி மணல்மறைவில் 5 புடமிட்டு எடுக்கவேண்டும். பின்பு, முன்போலவே அரைத்துத் தயார்ப்படுத்தி, 2 பலமுள்ள 15 விராட்டிகளில் வெளிப்புடம் ஒன்றிடவேண்டும். இதன் பின்பு, முன்போலவே அரைத்துத் தயார்ப்படுத்தி 20 விராட்டிகளில் வெளிப்புடம் ஒன்றும் இடவேண்டும். இதற்குச் செயநீர் ஒரு படி செல்லுமாகையால், 59 இல் சொல்லப்பட்டிருப்பதுபோலவே செல்லத்தக்க அளவு தயாரித்துக்கொள்ளவேண்டும். இன்னம், செயநீரில் துப்பாக்கி மருந்தால் கட்டப்பட்ட வீரம் சேர்க்கப்படுமெனச் சொல்லப் பட்டிருப்பதால் அம்முறை பின்வருகிற விதமாம்.

## வீரக்கட்டு

இரண்டு பலமுள்ள (70 கிராம்) 1 வீரக்கட்டி. இது நான்கு பக்கமும் மேடு பள்ளமின்றிச் சமமாய் இருக்கவேண்டும். பின் காணும் முறைப்படி தயாரித்த துப்பாக்கி மருந்து 200 பலம் (7000 கிராம்). மேல்நாட்டு மருந்தானல் மேன்மையாய் இருக்கும். இந்த மருந்தானது எவ்வளவு உயர்ந்ததாயிருக்கிறதோ, வீரமும் அவ்வளவு ீநர்த்தியாகவும் சிறப்பான குணமுள்ளதாகவும் இருக்கும். மேலும், மருந்து வீணாகாமலும் அழிவுக்குக் காரணமாகாமலும் அதிகக் கவனமுடன் செய்தால் இம்மருந்தால் அனேக நோய்கள் தீர்வதுமன்றி வேறு பற்பல முறைகளுக்கும் பயன்படும்.

**செய்முறை :**—காற்றில்லாமல் வெளியான இடத்தில் ஒரு கெசத்திற்கு ஒரு குழியாகப் பத்துக் குழிகள் செய்யவேண்டும். இந்தக் குழி ஒவ்வொன்றும் மூன்று அங்குலம் ஆழமும் மூன்று அங்குலம் சதுரமும் உள்ளதாக இருக்கவேண்டும். அந்தக் குழியில் அரைப்பலம் ($17\frac{1}{2}$ கிராம்) மேற்கூறிய துப்பாக்கி மருந்தைப் பரப்பி, அதன்மேல் முன் வீரக்கட்டியை வைத்து, அக்கட்டியின் மேலும் கட்டியைச் சுற்றிலும் ஒன்றரைப் பலம் ($52\frac{1}{2}$ கிராம்) மேற்படி மருந்தைப் போடவேண்டும். இந்த மருந்தினல் கட்டியானது மறைந்து போவதுமன்றி, கட்டியின் நாலாப் பக்கமும் மருந்தானது ஏற்றக் குறைச்சலின்றிச் சமமாயிருக்கவேண்டும். பின்பு, ஒரு நீண்ட கோலின் நுனியில் தடிப்பான ஒரு சாம்பிராணி வர்த்தியைக் கட்டிக் கொளுத்திக்கொண்டு எட்ட நின்றுகொண்டு முன் தயாரித்து வைத்திருக்கிற மருந்தில் வைத்தால், அது உடனே குப்பெனப்பற்றி எரிந்துவிடும். சற்று நேரம் தாமதித்துக் குழியில்

துப்பாக்கி மருந்தானது எஞ்சி நின்றுவிடாமல் எல்லாம் எரிந்து விட்டதாவெனத் திட்டமாய்ச் சோதனைசெய்து, வீரக்கட்டியானது முற்றும் குளிர ஆறினபின் எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, அதற்கடுத்த குழியில் முன்போலவே அரைப்பலம் ($17\frac{1}{2}$ கிராம்), துப்பாக்கி மருந்தை அடியில், வைத்து அதன்மேல் முன்கூறிய வீரக்கட்டியை வைத்து அதன்மேல் ஒன்றரைப் பலம் ($52\frac{1}{2}$ கிராம்) முன்கூறிய மருந்தை முன்போல் சமபாகம் இட்டு, மறைத்து முன்போலவே எட்ட நின்றுகொண்டு, முன்போல் கொளுத்திச் சற்றுத் தாமதித்து, துப்பாக்கி மருந்து எல்லாம் எஞ்சியில்லாமல், பற்றி எரிந்ததாவென சோதனைசெய்து, வீரக்கட்டியானது குளிர ஆறினபின்பு எடுத்துக்கொள்ள வேண்டும்.

இவ்விதம் மீண்டும் மீண்டும் நூறு தடவைகள் செய்து எடுத்துக்கொள்ளவேண்டும். இப் பக்குவத்தைத் தொடர்ச்சியாய் ஒரே நாளில் செய்யவேண்டும் என்னும் கட்டாயமில்லை. நாள் தோறும் இயன்ற வரையில் 10 அல்லது 15 தடவைகள் செய்து கொள்ளலாம். ஆனால், எவ்விதமும் நூறு தடவைகள் மீண்டும் மீண்டும் செய்யவேண்டியதே முக்கியமாகும்.

இதன் பின்பு வாயகன்ற ஒரு மண் பாண்டத்தில், 8 படி நான்கு நான்காய் வெட்டப்பட்ட சேராங்கொட்டையை இட்டு, அதன்மேல் முன் தயாரித்து வைத்த வீரக்கட்டியை வைத்து அதன் மேலும், 8 படி நான்கு நான்காய் வெட்டப்பட்ட சேராங்கொட்டையை வைக்கவேண்டும். இவ்வாறு, வைக்கப்பட்ட சேராங் கொட்டையானது முன்கூறிய பாண்டத்தின் வாய் மட்டத்திற்கு ஒத்திருக்கவேண்டும். பின்பு, அந்தப் பாண்டத்தின் வாயில் சேராங்கொட்டையின்மீது ஒரு படி வெண்ணெயை உருண்டை யாக உருட்டி வைத்து அடுப்பின் மீதேற்றி ஆரம்பத்தில் சிறு தீயாக எரித்து, 1 சாமம் சென்றவுடன் பாண்டத்திலுள்ள வித்து களையும் கொளுத்திவிட வேண்டும். இதை வீட்டில் அல்லது, ஆள் நடமாடும் இடத்தில் வைத்து எரிக்கலாகாது. இதை எரிக்கும்போது மிகுதியான புகையும் ஒருவித நாற்றமும் உண்டாகும். அதை நுக ரும் சில உடற்கூறுள்ளவர்களுக்கு வீக்கம் முதலிய பல துன்பங்கள் ஏற்படக்கூடும். மேலும், இது பற்றி எரியும்போது பெருஞ் சுவாலை யோடு எரியுமாகையால் அந்த இடத்தில் மேல்கூரை முதலிய கட்டடங்களிருக்கலாகாது. அப்படி இருக்குமானல் மரணத்துக்கு ஏதுவாகும். இதை ஊருக்கு வெளியில் வெட்ட வெளியான இடத்தில் வைத்தெரிப்பதே நன்மையானதும் அழிவற்றதுமான

செயலாகும். அப்படி வெளியில் எரிப்பவர்களும் பலமுள்ள நல்ல உடற்கட்டுடையவர்களாகவும், பயிற்சிமிக்கவர்களாகவும், மேற்படி கொட்டைப் புகையால் துன்பம் நேராத இயல்புடையவர்களாகவும் இருக்கவேண்டும். மேலும், இவர்கள் இதை எரிக்கும் முன் தயிர்ச்சாதம், வெங்காயம் முதலிய குளிர்ச்சிமிக்க உணவு வகைகளை வயிறு நிறைய உண்ட பின்னர்த் தொடங்கவேண்டும். பாண்டத்திலுள்ள கொட்டையானது பற்றி எரிய தொடங்கினல் அருகில் ஆளிருப்பதும் தேவையற்றதே. ஏனெனில், அது நன்ருய்ப் பற்றி எரிய ஆரம்பித்துவிட்டால் முழுவதும் பற்றி எரிந்தே அடங்குமன்றி, வேறுவிதக் காரணமின்றி நெருப்பு அணைந்து போகாது. அப்பாண்டத்துடனே ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் எடுத்துக்கொள்ளவேண்டும். வீரமானது செம்மையாய்க் கட்டுப் பட்டு இறுகியிருக்கும். இதைத் தனியாகவே உடல் இயல்பு, உடல் வன்மை, நோயின் வன்மை, முதலியவைகளுக்கேற்ற அளவுப்படி தகுந்த அனுபானங்களுடன் பயன்படுத்த மகாமாரிக் காய்ச்சல், (Plague) பிளேக், விரணமேக நோய்கள், குட்டங்கள், குறைநோய்கள், குன்மங்கள், கெட்டதசை சம்பந்தமான நோய்கள், மகா வாதங்கள், மகா நினைவுமயங்கத்தக்க நோய்கள், மகா சூலைகள், எம்மருந்திலும் தீராத கீல் பிடிப்புகள் முதலியவைகளும் தீரும். விடபேதி (காலரா) ·முதலிய எந்தப் பிணியானு லும் உடல் சில்லிட்டு, நாடிகளெல்லாம் வீழ்ந்து அடங்கிவிட்டாலும் இதை அளவுப்படி உட்கொண்ட அந்த நேரத்திலேயே உடலில் சூடேறி நரம்புகள் முறுக்கேற்றப்பட்டு நோய் குணமாகும்.

இவ்விதம் வீரத்தைக் கட்டி செந்தூரம், பற்பம், மெழுகு, திராவகம், செயநீர் முதலியவைகளில் அது உபயோகப்படுத்தப் படுகிறது. இதைக் கஷ்டப்பட்டு ஒருமுறை செய்துகொண்டால் அநேகவருடம் பயன்படுத்தலாம். இந்த வீரமானது பிரம்மபாணம் என்னும், மருந்து முதலிய முறைகளிலும் சேர்க்கப்படுகிறது. அறிவாளிகளான பயிற்சிபெற்ற மருத்துவர்கள் இதன் சிறப்பான முறைகளையும் தெரிந்து செய்வார்கள். இதனை, முறைப்படியும் அளவுப்படியும் நேரத்துக்கும் காலத்துக்கும் ஏற்றவாறு பயன் படுத்தினல் எவ்வித கெடுதியும் உண்டாகாது. வீரத்தைக் கட்டும் முறைகளில் பயிற்சிக்கு ஏற்றதாய் இதற்குச் சமானமானதொன்று இல்லையென்றே சொல்லவேண்டும். இம் முறையானது இரசவாதம், மருத்துவம் என்னும் இரு வகைக்கும் பயன்படுவதோடு மற்றெல்லா முறைகளைக் காட்டிலும் அதிகக் கீர்த்தி வாய்ந்த குணத்தை உடனே தெரிந்து கொள்ளலாம். இந்த முறையில் பயன்படும் துப்பாக்கி மருந்தின் பாகம் பின்வருகிறவிதமாம்.

## வீரக்கட்டிற்குத் துப்பாக்கி மருந்து

முன் சொல்லப்பட்டிருப்பதுபோல பாகப்படுத்தின கம்பி வெடியுப்பு 75 பங்கு. இனி பின்சொல்லப்படும் பாகப்படி தூய்மை செய்யப்பட்ட கெந்தகம் 10 பங்கு, எருக்குக்கரி 15 பங்கு.

**செய்முறை :—** முன் மூன்றையும் தனித்தனியாகப் பொடித்துத் தனித்தனியாக துணியால் சல்லித்துச் செய்துகொள்ளவேண்டும். பின்பு, மேற்கண்ட அளவுப்படி ஏற்றக்குறைவின்றிச் சரியாய் நிறுத்து எடுத்து மண் பாண்டத்தில் இட்டுக் கையால் நன்ருய்க் கலந்து கொள்ளவேண்டும். பின்பு மரக் கல்வத்திலிட்டு மரக்குழவியால் நன்ருய் அரைத்தெடுத்து மண் பாண்டத்தில் இட்டு, முன் சொல்லப்பட்டிருக்கிற காடியைத் தெளித்து ஈரப் பசையுண்டாக்கிச் சிறு வில்லைகளாய்ச் செய்து அதிகக் கவனமுடன் வெய்யிலில் உலர்த்தவேண்டும். ஈரப்பசையின்றி நன்ருய் உலர்ந்த பின்பு, மறுபடியும் மரக்கல்வத்திலிட்டு, மரக் குழவியால் பொடித்துத் தூளாக்கி முன்கூறிய காடிநீர் தெளித்து ஈரப் பசையுண்டாக்கி வில்லைகளாகச் செய்து முன்போல உலர்த்தவேண்டும். இவ்விதம், 7 தடவைகள் மீண்டும் மீண்டும் பொடித்துக் காடிவிட்டு வில்லைகள் செய்து உலர்த்திக்கொள்ளவேண்டும்.

எச்சரிக்கை :—இம் மருந்தானது அழிவிற்கு ஏதுவானதாகையால் அதில் கவனமுடன் செய்யவேண்டும். கருங்கல், இரும்பு முதலிய பாண்டங்களில் செய்யலாகாது. கடுமையான வெய்யிலில் வைத்தும் உலர்த்தலாகாது என்று தெரிந்திருக்கவேண்டும். இவ்வித மருந்தைச் செய்யவும் இதை பயன்படுத்தவும் அரசாங்கச் சட்ட அனுமதி (லைஸென்ஸ்) பெறவேண்டியது இன்றியமையாதது; ஆகையால், அவ்வித அனுமதியும் பெற்றுச் செய்ய வேண்டுமெனவும் தெரிந்திருக்க வேண்டும்.

மேற்கண்ட மருந்தைச் செய்ய முடியாமை நேரிடுமாளுல், உயர்தரமான அயல்நாட்டில் தயாரிக்கப்பட்ட மருந்தை வாங்கி பயன்படுத்திக் கொள்ளலாம்.

மேற்கண்ட பக்குவப்படி கைபாகம் செய்பாகம் தவருமல் செய்துமுடித்த முப்புச்சுண்ணமானது முன் சொல்லியிருப்பது போலவே பற்பங்கள், செந்தூரங்கள், இளகங்கள், தைலங்கள் முதலியவைகளில் இச் சுண்ணத்தைச் சேர்த்தால் அவற்றின் குணம் மேலானதாயிருக்கும். இன்னம் அறிவாளிகள் இதன் மூலமாய்ப் பற்பல சார்பு பொருள்கள் சேர்த்து அரிய பற்பங்கள், செந்தூரங்கள், உலோக மாரணங்கள் முதலியவைகளையும் செய்து கொள்வார்கள்.

## 63. முப்புச் சுண்ணம் வேறு

முன் சொல்லப்பட்டிருப்பதுபோல் பாகப்படுத்தப்பட்ட பூநீர் 1 படி. பாகப்படுத்தப்பட்ட கம்பிவெடியுப்பு 1 படி, பாகப் படுத்தப்பட்ட கறியுப்பு 1 படி.

இவற்றுள் வெடியுப்பையும் கறியுப்பையும் ஒரு குப்பியில் இட்டுக் கொள்க. மூன்று ஆண்டுகள் கடந்த பழைய காடி 15 படி. இக்காடியை மேற்கூறிய உப்புச் சேர்த்த குப்பியில் விட்டு உப்பை நன்ருய்க் கலக்கி 3 நாள் வைக்கவேண்டும். இடையில் நாள்தோறும் 4 அல்லது 5. தடவைகள் உப்பைக் கலக்கியும் வரவேண்டும். நாலாம்நாள் திரிபோட்டுத் தெளிவிறுத்துப் பெரிய கண்ணுடிக் குப்பிகளில் அடைத்து வைத்துக் கொள்ள வேண்டும். இந்தத் தெளிவானது பத்துப்படிக்குக் குறைந்திருக்க லாகாது. இதற்குக் காடித் தெளிவெனப்பெயர். அதற்கதிகமாக இருந்தாலும் தீமை ஏதுமில்லை. காடியானது எவ்வளவு நாள் சென்றதோ அவ்வளவு மேலானதே.

முன் பூநீரையும் பொடித்து அகன்ற பீங்கான் தட்டில் இட்டு அதில் 1 அல்லது $1\frac{1}{4}$ படி காடித் தெளிவைத் தெளித்து 3 நாள் இரவில் பனியில் வைக்கவேண்டும். நாலாம்நாள் பீங்கானி லுள்ளதை மூன்று பாகமாகச் செய்து, ஒரு பாகத்தைத் தண்ட வாளச்சட்டியில் இட்டு, அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து நீர் சுண்டினவுடன் மறுபாகத்தையும் போட்டு, அதிலுள்ள நீர் சுண்டினவுடன் மற்ெருரு பாகத்தையும்போட்டு அதிலுள்ள நீரும் சுண்டினவுடன் ஒரு பீங்கான் பாண்டத்தில் போட்டு வெய்யிலில் வைத்து உலர்த்தி உப்பாக்கிக் கொள்ளவும்.

(2) இந்த உப்பைப் பொடித்து முன் பீங்கான் பாண்டத்தில் போட்டு முதல் தடவை செய்தது போலவே, 1 அல்லது $1\frac{1}{4}$ படி காடித் தெளிவைத் தெளித்து, 3 இரவு பனியில் வைத்து, 4 நாள் மூன்று பங்காகச் செய்து, முன்போலவே ஒன்றன்பின்ஞென்ருகச் சேர்த்துக் காய்ச்சி நீர் சுண்டினவுடன் மறு பாத்திரத்திற் போட்டு வெய்யிலில் வைத்து உப்பாக்கிக் கொள்ளவேண்டும்.

(3) பின்பு முன்போலவே திரும்பத் திரும்ப 10 தடவைகள் மேற்கூறிய காடித்தெளிவை முன்னளவே விட்டுக் கரைத்துப் பனியில்வைத்துப் பின்பு காய்ச்சி உப்பாக்கிக் கொள்ளவும்.

(4) இந்த உப்பையெடுத்துப் பொடித்து, இதன் சமனெடை, ஜய்த்தூன் (ஆலிவ் எண்ணெய்) எண்ணெயிற் கட்டின நவாச் சாரத்தைச் சேர்த்துக் கல்வத்திலிட்டு முன் காடித் தெளிநீர்விட்டு,

2 சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி வெய்யிலில் உலர்த்தவேண்டும். ஈரப்பசையில்லாமல் முற்றும் உலர்ந்த பின்பு பெரிய அகல்களில் வைத்து மேலகல்மூடி வாய்க்கு அரைத்த மண்சீலை மூன்று செய்து கவசத்தின், 5 எடை விராட்டியில் புடமிட்டாறவிட்டெடுத்து, கல்வத்தில் பொடித்து முன் காடித் தெளிவை விட்டரைத்து முன்போல வில்லை செய்து உலர்த்திச் சீலைசெய்து முன்போலப் புடமிடவேண்டும். இவ்விதமே மூன்றும் தடவையும் புடமிடவேண்டும். வைத்த எடையிற் கொஞ்சங் குறையும், ஆயினும் தீமையில்லை; பின்பெடுத்துப் பொடித்து வாய கன்ற ஒரு பீங்கான் பாத்திரத்தில் இட்டு மேல்பீங்கான் மூடி சுண்ணும்புச்சீலை ஏழு செய்து ஈரப்பசையுள்ள இடத்தில் ஒருகெசம் சதுரக்குழியில் அல்லது செயநீர்க்குழியில் வைத்து, 40 நாள்கள் சென்றெடுக்க உப்பெல்லாம் செயநீராகியிருக்கும். செயநீராகாமல் ஏதேனும் எஞ்சிநின்றால் மேன்மேலாய்த் தெளிவையிறுத்துக் கொண்டு மீதியை அவ்விதமே வைத்து மேற்பீங்கான் மூடி, சுண்ணும்புச்சீலை செய்து முன்போலவே செயநீர்க் குழியில், 20 அல்லது, 30 நாள் வைத்தால் ஏதும் எஞ்சி இல்லாமல் செய நீராகிவிடும். பின்பெல்லாச் செயநீரையும் ஒன்றாய்க் கலந்து பீங்கான் பாத்திரத்தில் விட்டு, தூசி முதலியவைகள் விழாதபடி கவனமாய்ச் செய்து உலர்த்தி உப்பாக்கிக் கண்ணுடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

## இந்திரபான் நீர்

(5) முன் (8)ஆவதில் சொல்லப்பட்டிருப்பதுபோலக் கட்டப் பட்ட வெடியுப்பு 1 வீசை (1400 கிராம்) கோது, கொட்டை முதலியவை நீக்கப்பட்ட புளி 1 வீசை. இவை இரண்டையும் இடித்து முன் சொல்லப்பட்டிருப்பதுபோல் எரித்துச் சுண்ணம் செய்துகொள்க. இந்தச் சுண்ணம், 3 பங்கு, ஐய்த்தூன் (ஆலிவ்) எண்ணெயிற்கட்டின நவாச்சாரம் 1 பங்கு, இவை இரண்டையும் சேர்த்து அரைத்துப் பனியில்வைத்து, செயநீராக்கிக் கொள்ள வேண்டும். இந்தச் செயநீர் 30பலம் (1050கிராம்) கட்டின பூரம், கட்டினவீரம், *சீனக்காரச் சுண்ணம், சூடன் (கற்பூரம்), கட்டி வெள்ளைப் பாடாணம், துருசு இவ்வேழும் வகைக்கு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$கிராம்) திறமான கருநாபி, குருவண்டு இவ்விரண்டும் வகைக்கு 1வராகன் எடை ($3\frac{1}{2}$கிராம்) இவையெல்லாச் சரக்குகளையும் கல்வத்தில் மைபோலப்பொடித்து முன் செயநீரில் கலந்து ஒரு கண்ணுடிக் குப்பியில் மூடியிட்டுக் கடுவெய்யிலில் மூன்றுநாள்

* இதன் முறையும் பின்னெழுதப்படும்.

வைத்து, நாலாம்நாள் வேறொரு பாத்திரத்தில் விட்டு அடுப் பேற்றிச் சிறு தீயாய் எரித்து இரண்டுமூன்று கொதிவந்தவுடன் இறக்கி அசையாமல் ஒரு நாள் வைத்து மறுநாள் தெளிவை யிறுத்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும். இதற்கு இந்திரபான் நீர் எனப்படும்.

(6) முன் தயாரித்துக் கண்ணாடிக் குப்பியில் வைத்திருக்கிற உப்பில் 3 பலம் எடுத்துக் கல்வத்திலிட்டு மேற்கூறிய இந்திரபான் நீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, 2 சாமம் அரைத்து வில்லை தட்டிக் கொஞ்சமும் ஈரமில்லாமல் நன்றாய்க் காயவைத்து, அகலிலிட்டு மேலகல் மூடி அரைத்தமண் சீலை செய்துலர்த்தி ஒரு சாண் சதுரக் குழி தோண்டி அதற்குள் கருநிறமான ஆற்றுமணல் அரைப் பாகம் கொட்டி அதன்மேல் கவசத்தை வைத்து மேலும் மேற்படி மணலைக் குழி நிறையக்கொட்டி, அதன்மேல் 2 பலமுள்ள 10 விராட்டியை (எருமூட்டை) அடுக்கிப் புடமிடவேண்டும். பின்பு எடுத்து, முன்கூறிய இந்திரபான் நீர்விட்டு அரைத்து முன்போலக் கவசம் முதலியவை செய்து குழியில் வைத்துமேற்படி 15விராட்டி யில் புடமிடவும். இவ்விதம் ஒவ்வொரு தடவையும் ஐந்தைந்து எருமுட்டைகளை அதிகப்படுத்தி மணல் மறைவில் ஐந்து புடமிட வேண்டும். அதன்பின் முன் நீர்விட்டு அரைத்து முன்போலவே வில்லை முதலியவைகளும் செய்து, 15 விராட்டியில் வெளிப் புடம் ஒன்று போட்டெடுத்து, அதனுடன் கட்டின வீரம் 1 பலம் (35 கிராம்), தீப கர்ப்பூரம் 1 பலம், புனுகு $\frac{1}{4}$ பலம், இவற்றைச் சேர்த்து, மறுபடியும் முன்கூறிய நீர்விட்டு அரைத்து முன்போலவே வில்லைசெய்து காய வைத்து, 20 விராட்டியில் வெளிப்புடம் மற்றொன்றிட்டெடுக்கக் கடவுள் அருளால் கடுங்காரச் சுண்ண மாயிருக்கும்.

**குறிப்பு**:—வில்லையை அகலில் வைத்து மேலகல் மூடுவது வில்லைக்கும் மேலகலிற்குமிடையில் வெளியாயிராமல் நெருக்கமா யிருக்கவேண்டும், அப்படி இல்லாவிட்டால் இடைவெளியில் புகையடைந்து மருந்து கறுத்துப்போகும். ஆகையால், இந்த இயல்பையும் கவனிக்கவேண்டியது மிகவும் முக்கியமேயாம்.

இம் முப்புச் சுண்ணத்தையும் தனியாய் உள்ளுக்குப் பயன் படுத்தலாகாது. செயநீர்கள், திராவகங்கள், பற்பங்கள் செந்தூரங்கள், இளகங்கள், தைலங்கள் முதலியன எந்த மருந்து களுடன் அளவுப்படி இது சேர்க்கப்படுகிறதோ அந்த மருந்தின் குணம் அதிகப்பட்டு நிலைத்து நிற்கும். நெருப்பிற்கோடும் சரக்கு களையும், அதிகம் தீ தேவையான சரக்குகளையும் பற்பமாக்கவும், சிந்தூரிக்கவும் இந்த முப்புச் சுண்ணமானது அதிகம் பயன்படு

றாம். சிவக்காத செந்தூரங்களெல்லாம் சிவந்துபோகும். இதன் பெருமையைச் சுருங்கச் சொன்னால் அறிவாளிகளான பயிற்சி மிக்க பண்டிதர்கள் இச் சுண்ணங்களைத் தங்கள் புத்திக் கூர்மை யால் அநேகவித் தொடர்புகளாக்கிக் கொள்வார்களென்பதே. ஆகையால், இவ்வித முறைகளையே அவர்களையடுத்துத் தெரிந்து கொள்ளவேண்டும்.

**விண்ணப்பம்:**—இதுவரையில் ஐந்துவகை முப்புச் சுண்ணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஒவ்வொன்றும் பலரால் பலமுறை பயிற்சியின் முதிர்ச்சியினால் முடிந்தனவும் மிகவும் நேர்த்தியானவைகளுமாகும். இம் முறைகளைக் கைபாகம், செய் பாகம் முதலியவைகள் தவறாமல் செய்து முடித்தால் இவற்றிற்குச் சமானமான வேறு பக்குவங்கள் இல்லையென்றே சொல்லவேண் டும். ஆனால், இவற்றைச் செய்து முடிக்க முன் சொல்லியிருப்பது போல விடாமுயற்சி, இடம், பொருள், ஏவல், பிற உயிர்களிடம் கருணை, பிறருக்கு உதவி செய்யும் மனம் முதலியவைகள் மாத்திரம் முக்கியமாகத் தேவை. இம் முறைகளின் செய்பாகங்கள் இயன்ற வரையில் வகை விபரமாகவே எழுதப்பட்டிருக்கின்றன. ஆயினும், இவற்றைச் செய்யும்போது நேரிடும் தற்செயலாக நிகழக்கூடிய அநேக நிகழ்ச்சிகளும் உண்டு. அவை எல்லாவற் றையும் இங்கெழுதுவது கூடாமையாகும். ஆகையால், ஒரு பாகத்தை ஒருமுறை, இருமுறை, மும்முறை அடுத்தடுத்துச் செய்யின் அதிலுள்ள நுணுக்கங்களும் நுட்பங்களும் தெரிந்து போம். நாம் சாதாரணமாகச் சாதத்தைச் சமைக்கப்பழகவும் குறைந்தபட்சம் 5 அல்லது 6 முறைகளாவது அடுத்தடுத்துச் செய்யாமல் எவ்விதத் தேர்ச்சியும் அடைய முடியாது. ஆகையால் மன ஊக்கத்துடனும் விடா முயற்சியுடனும் முழுக்கவலையும் செலுத்திப் பிறருக்கு உதவுதல், உயிர்களிடம் அருட்தன்மை ஆகி யன பொருந்திய நல்லெண்ணத்துடனும் செய்யின் எல்லாப் பாகங்களும் கைக்கூடுமென்பது திண்ணம்.

## 64. முப்புச் சுண்ணம் மேற்போக்கு

மேற்கண்ட பாகங்களைக் கைபாகம் செய்பாகம் தவறாமல் செய்து பலவிதத் துன்பங்களைச் செய்யும் வல்லவர்கள் பலபேர் இருக்கின்றார்கள். அவற்றுள் பல பயிற்சிமிக்கவர்களுக்கு தெரிந்தே யிருக்குமாகையால் அவை எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளக் கூடாவிட்டாலும், அவற்றுள் ஒன்றிரண்டை இங்கு எழுதுவதால் தேவைப்படுவோருக்கு இவை பயன்படாமல் போகாதாகையால், அவற்றுள் சிலவற்றை மாத்திரம் இங்கு எழுதுவோம்.

(1) கட்டின நவச்சாரக்கட்டி பலம் 1 முப்புச்சுண்ணம் 1 வராகனெடை (11 கிராம்) சுண்ணத்தை உமிழ்நீரால் குழைத்து நவாச்சாரக் கட்டியின்மீது நாலாப்பக்கமும் பூசி வெய்யிலில் காய வைத்து, நன்ருயுலர்ந்த பின்பு கட்டியின்மீது ஒரு புளியன் இலைக் கனம் அத்திப்பாலையடித்து நிழலில் வைத்துவிடவேண்டும். மறுநாள் அந்தக் கட்டியின்மீது முன்மாதிரியே முற்கூறிய பாலை யடித்து வைத்துவிடவேண்டும். இவ்விதம் 5 நாள் அடித்து ஆரும் நாள் கரிநெருப்பில், திருப்பித்திருப்பி வாட்டிவர, நவாச்சாரமானது மெழுகாகிவிடும்.

இதற்காக இக்கட்டியை ஊசியால் குத்திப்பார்த்தால் அஃது, ஒரு பக்கமிருந்து மறுபக்கம் தடையின்றி இலகுவாய் ஊடுருவிச் செல்லும். இவ்விதமான பின்பு *தங்கத்தகட்டைச்சுற்றி முன் போலவே நெருப்பில் வாட்ட மெழுகானது தகட்டையுட் கொண்டு நன்ருய் வாங்கும். இவ்விதம் அரைப்பலம் முற்கூறிய தங்கத்தகட்டைக்கொடுத்துப் பீங்கான் குப்பியில் வைத்துக் கொண்டு அந்தந்த நேரத்துக்கு ஏற்றவாறு அளவுப்படி உட்கொண்டால் கொடிய நோய்களெல்லாம் தீரும். இன்னம், இதை பயன் படுத்தும் விதங்கள் நடைமுறையில் அனுபவமான மருத்துவர் களுக்குத் தெரியுமாகையால் அவர்கள் மூலமாய்த் தெரிந்து கொள்ளலாம்.

## 65. மேற்படி வேறு

கட்டின சாரம் 1 பலம் (35 கிராம்), முப்புச்சுண்ணம் 1 வராகன்எடை, இச் சுண்ணத்தை முட்டை வெள்ளைக்கருவில் 1 மணிநேரம் அரைத்து முன்கூறிய நவாச்சாரக் கட்டியின்மீது சமமாகக் கவசம் செய்து வெய்யிலில் வைத்துலர்த்தி நன்ருய் உலர்ந்த பின்பு, அதன்மேல் மூன்று சுண்ணும்பச்சீலை செய்துலர்த்தி $2\frac{1}{2}$ பலமுள்ள ($87\frac{1}{2}$ கிராம்) 3 விராட்டியில் புடமிட்டாற விட்டெடுக்க, நவாச்சாரமானது நீருகிச் சுண்ணமாயிருக்கும். இந்த நவாச்சாரச் சுண்ணம் 1 பங்கு, பச்சைச்சாரம் 3 பங்கு இவ் விரண்டையும் கல்வத்திலிட்டு, வெள்ளெருக்கன் பாலால் 1 சாம மரைத்து வழித்துப் பிங்கானிலிட்டுப் பனியில் வைக்க செய நீராகும்.

---

* தங்கத்தகடு என்பது கல் நகைகளின்மீது இழைக்கும் குந்தனத்தகடல்லு தாப்பூலத்துடன் போட்டுக்கொள்ளும் தங்கத்தகடாம். இன்னும் கடையில் விற்கும் தகடானது குறைந்த மாற்றுள்ளதாகையால், த்கடடிப்போரிடம் தங்கத்தைக் கொடுத்துத் தகடடிக்கச் செய்து சித்தப்படுத்திக் கொள்வதே நல்லது.

இந்த செயநீரால் ஒரு பலம் நவாச்சாரக் கட்டியை அப்பிரேகத் தட்டின்மீது வைத்து முன் சொல்லியிருக்கிறபடி சுருக்கிட நவாச்சாரம் கட்டுப்படும்.

மேற்சொன்னபடி கட்டின நவாச்சாரம், தூய்மையான தாளகம், தூய்மையான கெந்தகம், தூய்மையான கௌரி இவை வகைக்கு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்).

இவையெல்லாவற்றையும் கல்வத்திற் பொடித்து மேற்கூறிய முப்புச் சம்பந்தமான நவாச்சார செயநீர்விட்டு 1 சாமமரைத்துப் வில்லை செய்து உலர்த்தி வில்லை நன்றாய் உலர்ந்த பின்பு, அகலில் இட்டு மேலகல்மூடி சீலை செய்து நன்றாய் உலர்த்தி $2\frac{1}{2}$ பலம் எடையுள்ள 2 எருமுட்டையில் புடமிட்டாற விட்டெடுக்கச் செந்தூரமாம்.

இந்தச் செந்தூரத்தை ஒரு குன்றியெடை சமயோசிதமாய்த் தக்க துணை மருந்துகளுடன் உட்கொண்டுவர உடலின் எல்லா நோய்களும் நீங்கி வச்சிரம் போன்ற உடல் அமைப்பைத் தரும். நடைமுறையில் அறிந்துணர்ந்தவர்கள் இச் செந்தூரத்தால் பலவகைச் சிறப்பான பக்குவமுறைகளும் செய்துகொள்வார்கள்.

## நீராக்கல் அல்லது செயநீர்

பற்பம், செந்தூரம் முதலியவைகளைச் செய்ய மேற்சொல்லப் பட்ட முப்பு முறைதளைத் தவிர, குரு முறைகளென்னும் வேறு பல பாகங்களுமுண்டு. அவற்றைச் சொல்லுமுன் அவற்றிற்குதவி யான சில முறைகளைச் சொல்ல வேண்டியது. இன்றியமையாததா யுள்ளது. அவை வருகிற விதமாகும்.

உப்பு வகைகள் முதலிய எல்லாச் சரக்குகளையும் நீராக்கு தலுக்கு சீவனீயம் (நீர்) அல்லது பானீயம் (பருகும் நீர்) செயநீர் செய்தல் எனப் பொதுப் பெயராம். ஆனல், தனியானதற்குத் தனி செயநீர், கைவல்லிய செயநீர் (கைவந்த செயநீர்) என்பது உரித்தாம். இந்த நீரானது பற்பங்கள், செந்தூரங்கள், கட்டுகள் முதலியவைகளைச் செய்ய உதவியாக அதிகம் பயன்படுவதன்றி, இரசவாதி தொடக்கத்தில் கற்றுக்கொள்ள வேண்டியது இம் முறைகளேயாம். ஏனெனில், ஒவ்வொரு சரக்கையும் தனித் தனியாய் நீர்வடிவமாய் மாற்றத் தெரிந்து கொள்ளாவிட்டால் பல சரக்குகளைச் சேர்த்து நீராக்க அதாவது, செயநீராக்கத் தெரிந்துகொள்வது கூடாததாகும். ஆகையால், அவற்றுள் முக்கியமான சில பாகங்களை இங்கெழுதுவாம்.

## சரக்குகளை நீராக்கும் வகைகள்

எந்தச் சரக்கையும் நீர்வடிவாக்கிவிடலாம். ஆனால், ஒவ்வொன்றிற்கும் நாடு காலம், சரக்கின் தன்மை முதலியவைகளுக்குத் தக்கபடி பலவகைகளுண்டு. அவற்றுள் முக்கியமான வகைகள் நான்காம். அவை பின்வருகிற விதமாகும்.

### 1. குதிரையின் மலத்தில் பக்குவப்படுத்தல்

இரண்டு கெசம் (6அடி) ஆழமும் ஒரு கெசம் அகலமுமுள்ள ஒரு குழி கட்டாந்தரையான இடத்தில் தோண்டவேண்டும். அந்தக் குழி வாய்க்குச் சரியான பலகைமூடி அல்லது, மெல்லிய இரும்புத் தகட்டில் மூடி ஒன்றுசெய்து, இந்த மூடி முழுவதும் சிறு துளைகள் இடவேண்டும். அந்தக் குழியில் இரண்டடி உயரம் குதிரைச் சாணம் (மலம்) போட்டு நிறைத்து அதன்மேல் குமிழி யுண்டாகும் படி காய்ச்சிய வெந்நீரைத் தெளிக்கவேண்டும். நீராக்கவேண்டிய சரக்கை, இலேசானதும் உரத்ததானதுமான மேல்நாட்டில் தயாரித்த கண்ணாடிக் குப்பியில் அரைவாசி மட்டும் போட்டு, குப்பிவாய்க்கு மூடியிட்டு மூடியின் வாயில் மெழுகு, அரக்கு என்னும் ஏதேனும் தகுந்த ஒரு பொருளால் வாய்ப்புறத்தை நன்றாய்மூடி, முற்கூறியகுழியில் சாணத்தின் மீது வைத்து, குப்பி யின் கழுத்துவரையில் மூங்கில் அல்லது, பிரம்புத்தொப்பியால் மூடி, அதன்மேல் ஈரமாயுள்ள குதிரைச்சாணத்தை வைத்துக் குழியை நிறைத்து, அதன்மேல் முன் தயாரித்து வைத்திருக்கிற பலகைமூடியை அல்லது இரும்பு மூடியைவைத்து, அந்த மூடியின் மீது பச்சைப்புல்லை ஆல்லது, பச்சைத்தழைகளை இட்டு வைக்க வேண்டும். பின்பு, நாள்தோறும் இரண்டு மூன்று தடவைகள் மேலே இடப்பட்ட புல்லின்மீது அல்லது, தழையின்மீது வெந்நீர் தெளித்துவரவேண்டும். கோடைக்காலமாயின் தினம் ஒருதடவை மாத்திரம் தெளித்துவரவேண்டும். ஒவ்வொரு வாரமும் கண்ணாடிக் குப்பியின் மீதுள்ள லத்திகளை நீக்கி ஈரமான புதிய லத்திகளை நிறைத்துவரவேண்டும். இவ்விதம், 50நாள் செய்வதால் பொது வாய் பொருள்கள் நீர்வடிவமாகிவிடும்.

### 2. கிணற்றுப் பக்குவம்

ஈரப் பசையானவிடத்தில் மூன்று கெசம் ஆழமும் இரண்டு கஜம் அகலமுமுள்ள ஒரு குழி தோண்டவேண்டும், இதனை மூடத் தக்க ஒரு பலகைக் கதவுசெய்து அதன் மத்தியில் ஒரு சாண் சதுர மான துளையிட வேண்டும். இதற்குத் துளைவாயில் என்று பெயர்.

அதற்குக் கீல்கதவிட்டு, அந்தச் சிறுகதவின் மத்தியில் உட்பக்கத்தில் சற்றுக் கனமான இரும்பு வளையத்தை அடிவைக்கவேண்டும். மேலும், இந்தக் கதவைவெளியிலிருந்து தூக்கித் திறக்கும்படி வெளிப்பக்கத்திலும் ஒருபிடி அடித்துவைக்கவும் வேண்டும். இந்தச் சிறு கதவிற்குத் திட்டிவாயிற்கதவு அல்லது, கள்ளக்கதவு எனப்பெயர். பின்பு, அக்குழியில் ஆறு அடிவரையில் நீர் விட வேண்டும். நீராக்கவேண்டிய பொருள்களை ஒரு கண்ணாடிக் குப்பியில் அரைவாசிபோட்டு, குப்பிவாய்க்கு மூடியிட்டு இடைவெளியை மூடி தேவையான அளவு பலமான பட்டுக் கயிற்றின் ஒரு முனையில் கட்டிக்கொள்ளவேண்டும். முன் தயாரித்து வைத்திருக்கும் பெரியகதவைக் குழியின்மீது மூடி, திட்டவாயிற் கதவைத்தூக்கி, அதனுட்பக்கத்திலுள்ள் வளையத்தில் கண்ணாடிக் குப்பியில் கட்டப்பட்டிருக்கிற பட்டுக் கயிற்றின் மற்றொரு முனையைக்கோர்த்து, குப்பியானது நீரில் முக்கால் பாகம் அமுந்தி நிற்கும்படி தொங்கவைத்து, முடிந்து அக் கதவை மூடிவிட வேண்டும். இந்தக் குப்பியை இரண்டு மூன்றுநாட்களுக்கொரு தடவை ஏதேனும் அதற்கு அழிவு நேரிட்டிருக்கிறதாவென சோதனை செய்து வரவேண்டும். இவ்விதம், 1 அல்லது 2 மாதம் வரையில் அல்லது வைத்தச் சரக்கு நீராகும்வரையில் அதனதன் கணக்கின்படி வைக்க நீராகிவிடும்.

## 3. காடிநீர்ப் பக்குவம்

ஒன்பது அடி உயரமுள்ள ஒரு குப்பியில் ஆறு அடி உயரம் காடியை விடவேண்டும். இதை (அ) குப்பியென வைத்துக் கொள்வோம். இந்த குப்பியின் வாய்க்குச் சரியான மூடியொன்று பலகையாற்செய்து அதற்கு மத்தியில் உட்புறத்தில் ஓர் இரும்பு வளையமொன்று அடிக்கவேண்டும். ஓர் அடி நீளமுள்ள வேறொரு குப்பியின் அடியில் ஏழெட்டுச் சிறு துளைகள் இடவேண்டும். இதை (ஆ) குப்பியென வைத்துக்கொள்வோம். இந்த (ஆ) குப்பியின் துளைகளில் பட்டுநூல் திரிகளைச் சிறிது தளர்ச்சியாய்விட்டு, திரிகள் (ஆ) குப்பியின்கீழ் நாலங்குலமும் உள்ளே நாலங்குலமும் இருக்கும் படியாகச் செய்து, நீராக்கவேண்டிய சரக்கை (ஆ) குப்பியில் இட்டு இந்த (ஆ) குப்பியின் வாயை மூடி இடைவெளியில்லாமல்மூடி (ஆ) குப்பியினடியில் வேறொரு பீங்கான் பண்டத்தை. (ஆ) குப்பியிலுண்டாகும் நீரானது முன் வைத்திருக்கிற பட்டுநூல் திரி வழியாய் இந்தப் பாண்டத்தில் விழும்படியாகப் பார்த்து பட்டு நூல் கயிற்றால் (ஆ) குப்பியின்கீழ் தொங்கும்படிகட்டி (ஆ) குப்பியின் கழுத்தில் பலமான பட்டுநூல் கயிற்றைக்கட்டி (அ) குப்பியின் மூடியின் உட்பக்கத்திலுள்ள வளையத்தில் காடிக்குமேல்

(ஆ) குப்பியின் கீழ்த்தொங்கும் உரியானது இரண்டங்குலம் இருக்கும்படியாகத் தொங்கவிட்டுக்கட்டி (அ) குப்பி வாயைமூடி இடைவெளி யில்லாமல் அடைத்துக் குப்பியைக் குழியில் வைத்து, அதைச் சுற்றிலும் குப்பிக்கு மேலும் இரண்டடி இடமுள்ளதாக ஒரு பள்ளந்தோண்டி அதில் இந்தக் குப்பியை வைத்து, குப்பியைச் சுற்றிலும் குப்பிக்கு மேலும் புதிதானதும் ஈரமானது மான குதிரைச் சாணிகளை இட்டு நிறைத்து விடவேண்டும் நாள்தோறும் சாணியின்மீது வெந்நீர் தெளித்து வரவேண்டும். சரக்கின் வலுவிற்குத் தக்கபடி தினம் இரண்டு மூன்று தடவை களும் செய்யலாம். இவ்விதம் அந்தந்தச் சரக்குகளுக்குத் தக்க படி 1 அல்லது 2 மாதங்கள் வைக்க, அவை நீராகிக் காரமானவை களாகவும், சத்துள்ளனவாகவும் இறங்கும். இவ்விதம் காடியில் பக்குவப்படுத்தி நீராக்குவதற்கு யூனனி ஹல்லேமாரியா எனப் பெயர்.

## 4. தீயில் பக்குவம்

பெரிய தாமிரப்பாண்டமொன்றில் மூன்றில் ஒரு பாகம் வரையில் நீர்விட்டு, பாண்டத்தின் வாயில் குறுக்கின் இரு பக்கங் களிலும் தடைகள் வைத்து, அந்தத் தடைகளில் இரும்புத் துடுப் பொன்று இட்டுத் துடுப்பின் (சலாகையின்) மத்தியில் வளைய மொன்று இணைக்கப்பட்டிருக்கவேண்டும். இந்தப் பாண்டத்தின் விலாவின் பக்கத்தில் அல்லது, இதன் மூடியில் ஒரு துளைசெய்து குழாய்வைத்து வேண்டும்போது திறக்கவும் மற்ற நேரங்களில் மூடவும் தக்கவிதமாய்ச் செய்திருக்கவேண்டும். நீராக்கவேண்டிய சரக்கை இரட்டையாக மடிக்கப்பட்ட மெல்லிய ஒரு பட்டுத் துண்டில் முடிந்து முன் சொன்ன கம்பியில் வௌவாலைப்போல் பரவலாகக் கட்டி, இந்தச் சரக்கின் முடிச்சின்கீழ் வாயகன்ற ஒரு குப்பியை வைத்து முடிச்சியிலிருந்து விழும் நீரானது அந்தக் குப்பி யில் விழுந்து தங்கி நிற்கும்படியாக நேரே தொங்கவைக்க வேண்டும். இவ்விதம், வைக்கும் பாண்டமானது மருந்தின் முடிச்சி யின் அருகில் எட்டங்குலத்திற்குக் கீழும் பாத்திரத்தின் நீரின்மேல் ஒரு முழம் உயரத்திற்கு மேலும் இருக்கவேண்டும். இவ்விதம் திட்ட மாய்ச் செய்து தாமிரப்பாண்டத்தின் வாயைமூடித் துளையை நன்ருய் மூடி அடுப்பேற்றி விளக்கைப்போல அடுப்பையெரிக்க வேண்டும். சூடேறினவுடன் நீர் பொங்குமாகையால் அவ்வித மாகாமலிருக்க, தாமிரப் பாண்டத்தின்மீது ஈரச்சீலையைச் சுற்றி வைத்தும் நீரைத் தெளித்தும் அதிகக் கவனமாயும் இருக்க வேண்டும். அப்படியில்லாவிட்டால் நீர் பொங்கி அதனுள் தொங் கிக்கொண்டிருக்கும் பாத்திரத்தில் வந்துவிடுவதும் தவிர, மேல்

கவசத்தினின்றும் வெளிப்பட்டுப்போகும். இதனால் பாகங்கெட்டுப் போக ஏதுவாகும். நாள்தோறும் 1 அல்லது 2 சாமங்கள் எரிக்க வேண்டும். பாத்திரத்திலுள்ள நீரெல்லாம் சுண்டிவிட்டால் முன் வைத்திருக்கிற குழாயின் வழியாய்ச் செப்புப் பாண்டத்தில் நீரை விட்டு வரவும் வேண்டும். நீர் விடவேண்டியிருந்தால் பாண்டமானது குளிர ஆறினபின் குழாயைத் திறக்கவேண்டும். சூடாயிருக்கும்போது திறக்கலாகாது. தினந்தோறும் மேற்கண்டபடி செய்து ஒருவாரம் அல்லது, பத்து நாள்கள் சென்றெடுத்தால் வைத்த சரக்கானது நீராகி, அதன்கீழ்த் தொங்கும் பாண்டத்தில் சொட்டித் தங்கி நிற்கும். அந்த நீரை வேறு கண்ணாடிக் குப்பியில் இறுத்து வைத்துக் கொள்ளவேண்டும். வைத்த சரக்கெல்லாம் நீராகிவிட்டால் நல்லது. அப்படி நீராகாமல் ஏதேனும் எஞ்சி இருக்குமாயின், அதைக் கல்வத்திலிட்டு நவாச்சார நீர்விட்டு அரைத்து 3 நாள் பனியில் வைத்து, முன் செய்ததுபோல் பாத்திரத்தில் வைத்து எரித்து பாகப்படுத்திக் கொள்ளவேண்டும். மேற்கண்டபடி பாகப்படுத்தி நீராக்கும் முறைக்கு யூனானி "ஹல்லேஹு-மாமேமாரியா" எனப்பெயர்.

சரக்குகளை நீராக்கும் முறைகள் அனேக வகைகளுண்டு. அவற்றுள் முக்கியமானவைகளும் உத்தமமானவைகளும் இன்றியமையாமல் வேண்டியவைகளும் மேற்சொல்லப்பட்ட நான்கேயாகும். இவைகளுக்கே "செயநீர்க்குழி" எனவும் பெயர். செயநீர் செய்யவேண்டியதும் மேற்கண்ட வகைகளில் ஒரு வகையாகச் செய்து கொள்ளவேண்டியதும் முக்கியமாகும்.

## உப்பு முதலியவைகளைச் செயநீராக்கப் பொதுவிதி

(அ) எவ்வகை உப்பையும் தேவையான அளவு பொடித்து மெல்லிய துணியினால் சல்லித்துப் பீங்கான் பாண்டத்தில் இட்டு மூன்று இரவு பனியில் வைத்துப் பீங்கான் குழாய் வைக்கப்பட்ட இரும்பு *வாலையிலிட்டு வாய்க்குச் சீலைமண் செய்து திராவகம் இறக்கி, கண்ணாடிக் குப்பியில் விட்டு ஈரமான இடத்தில் அல்லது, மேற்கண்ட செயநீர்க்குழியில் ஒருவாரம் அல்லது, பத்து நாள்கள் மேற்கூறியபடி செய்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

(ஆ) மண் குப்பிகள் இரண்டு தயார்ப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும். தேவையான உப்பைப் பொடித்து

* வாலையின் விபரம் நமது யூனானி தாருட்யவிர்த்தி போதினி, 2 ஆம் பாகத்தில் வகை விமரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

மெல்லிய துணியினுல் சல்லித்து எடுத்துப் பனியில் மூன்று நாள் வைத்து நாள்தோறும் கையால் நன்ருய்ப் பிசைந்து கலந்து, நாலாம் நாள் ஒரு கூசாவிற் போட்டு வாய்க்கு அகலிட்டுச் சீலே மண் செய்து குப்பியின் விலாவில் சிறு துவாரங்களிட்டு அத் துவாரங்களில் மற்ருெரு குப்பியைப் பொருந்தவைத்துச் சீலே மண் செய்து ஆற்றங்கரை அல்லது, குளக்கரைக்கு அருகில் அல்லது, ஆழமான நீருள்ளவிடத்திற்கு அருகில் பத்து அடி தூரத்தில் இரண்டு மூன்று அடி பள்ளம் தோண்டி, முன் குப்பிகளே வைத்து ஒரு வாரஞ் சென்று எடுக்கக் குப்பியில் வைத்த உப்பானது நீராகி மறு குப்பியில் வடிந்து நிற்கும். நீராகாமல் ஏதேனும் மிஞ்சியிருந்தால் அதை முன்போலவே மறு முறையும் வைத்தெடுக்க நீராகிவிடும். இந்த நீரை முன்பாகத்திற் சொல்லி இருக்கிறபடி பீங்கான்குழாய் வைக்கப்பெற்ற இரும்பு வாலேயி லிட்டு வாய்க்குச் சீலேமண் செய்து சிறு தீயாயெரித்துப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இதைக் காரமேற்ற வேண்டுமானுல், அவ்வகை உப்பையே அந்த அளவே பொடித்துக் கூடுமானுல் துணியில் சல்லித்துக் கல்வத்திலிட்டு, மேற்கூறிய உப்புத் திராவகத்தையே விட்டு அரைத்து முன்போலவே குப்பியில் போட்டு, நீர்த்துறைக் கரையோரத்தில் புதைத்து நீராக்கி எடுத்து முன்போலவே வாலேயிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இரண்டாம் தடவை இறக்கின திராவகத்தையும், அவ்வகை உப்பையே முன்னளவே பொடித்துக் கல்வத்திலிட்டுத் திராவகத்தை ஊற்றி அரைத்து முன்போல நீருக்கு அருகில் புதைத்து நீராக்கி முன்போல வாலேயிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவும். இவ்விதம், மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் செய்யின் கடுங்காரமான நீராம். இவ்விதமே படிக்காரம் முதலியவைகளேப் பாகப்படுத்தி நீராக்கிக் கொண் டால் அதிக குணமாயிருக்கும். இந்தப் பாகமானது நீராக்கும் முறைகளில் மிகச் சிறந்தது.

(இ) பருமனுகவும் நீண்டும் இருக்கும் ஒரு சுரைக்காயின் நுனிப்பக்கத்தை அறுத்து, அதனுள்ளேயுள்ள விதை, தசை முதலியவைகளே நீக்கிவிட்டு, அதன் மத்தியில் ஒரு பாகத்தில் பல சிறு துளேகள் செய்து நீராக்க வேண்டிய உப்பைப் பொடித்துக் கூடுமானுல் துணியினுல் சல்லித்து, முன் தயாரித்து வைத்த சுரைக்காய்க்குள் நிறைத்து, துளேயின்கீழ்ப் பீங்கான் பாண்டம் அல்லது, கண்ணுடிக் குப்பியைப் பொருந்தச் செய்து, மண் முதலியவை விழாமற்படி கவனமாகச் செய்து குளிர்ச்சியான இடத்தில் வைத்திருந்தால் சுரைக்காயிலுள்ள உப்பெல்லாம்

நீராகிப் பாண்டத்தில் விழுந்திருக்கும். உப்பெல்லாம் நீரான பின் முன்போல வாலையிலிட்டுத் திராவமாகவும் இறக்கிக் கொள்ளலாம். தேவையானல் முன்போல மேன்மேலும் செய்து கொள்ளலாம்.

மேற்கண்ட சுரைக்காயில் செய்வதுபோலவே முலாம்பழம், பூசணிக்காய் முதலியவற்றிலும் செய்து கொள்ளலாம்.

## பருப்பொருள்களை நீராக்கப் பொதுவிதி

தங்கம், வெள்ளி, கருவங்கம், வெள்வங்கம். இரும்பு, செம்பு, நாகம் என்னும் இவற்றுள் ஒவ்வொன்றையும் நீராக்கவேண்டிய போது, அதை இராவித் தூள்செய்து கல்வத்திலிட்டு, நவாச்சார நீர், படிக்காரநீர் முதலியவற்றில் அதற்கு இனமான நீரைவிட்டு அரைத்து முன் சொல்லப்பட்ட வகைகளிலொருவிதமாய் நீர் செய்து கொள்ளவேண்டும். இந்த வகை நீரெல்லாம் பின்னர் விபரமாய் எழுதப்படும்.

## பதங்கப் பாண்டமும் பதங்கமேற்றும் விபரமும்

நவாச்சாரத்தைத் நீராக்குமுன் அதைப் பதங்கித்துக்கொள்ள வேண்டியது இன்றியமையாதது; ஆகையால், அம் முறைகளை முன்னர் எழுதுவாம். சரக்குகளைச் சாறு எடுக்க பதங்க பாண்டத்தைப் பற்றி இதற்குமுன் தெரிந்துகொள்ள வேண்டியதாகையால் அது பின்வருகிறவிதமாம்.

எந்தச் சரக்குகளையும் சாறு பிரிக்க இரண்டு பானைகள் வேண்டும். இவற்றுள் ஒன்று கீழும் ஒன்று மேலுமாயிருக்க வேண்டும். மேல் பானையானது கீழ்ப்பானையைக் காட்டிலும் இரண்டு பங்கு பெருத்ததாயிருக்கவேண்டும். ஆனல், இரண்டு பானையின் வாயும் சரியாய்ப் பொருந்தியனவாகவும் மட்டமான வாகவும் இருக்கவேண்டும். இப் பானைகள் இரும்பு, தாமிரம் முதலியவைகளாற் செய்யப்படினும், இலேசாய்க் கிடைக்கத் தக்கதும் எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்ததும் மண் பாண்டமே யாம். இந்தப் பாண்டங்களின் வெளிப்புறத்தில், மேல் நாட்டுச் சுண்ணும்பை அல்லது, கோபியைக் குழம்பாய்க் குழைத்துப்பூசி வெய்யிலில் வைத்து உலர்த்திவிடவேண்டும். இலிங்கம் முதலியவை களைப் பதங்கித்து இரசமெடுக்கவேண்டி இருந்தால் மேற்கூறிய பாண்டங்களின் வெளி, உள் என்னும் இரண்டு பக்கங்களிலும்

மேற்கண்ட மண்களிலொன்றைக் குழைத்துப்பூசி உலர்த்திக் கொள்ளவேண்டும். பின்பு, பதங்கமேற்றும் சரக்குகளை ஆங்காங்குச் சொல்லப்படும் விதமாய் தயாரித்துக் கீழ்ப்பானையிற் இட்டு மேற் பானையைப் பொருந்தவைத்துச் சுண்ணும்பு ஒரு பங்கும், கோதுமை மாவு இரண்டு பங்குமாகச் சேர்த்து நீர் ஊற்றிக் குழைத்துச் சீலையிற்தடவி கெட்டியாய்க் கவசம்செய்து ஈரம் உலரவைத்து, அடுப்பேற்ற வேண்டும். சிறுசட்டி அடுப்பின்மீதும் பெஞ்சட்டி அதன்மேலும் இருக்கவேண்டும். பின்பு, ஆங்காங்கு சொல்லப்படும் கால அளவு அடுப்பை எரிக்கவேண்டும். அடுப்பெரியும்போது மேற் பானையின்மீது சீலைத்துண்டைத் தண்ணீரில் நனைத்துப் பல மடிப்புகளாக மடித்துப்போட்டு அதிலுள்ள ஈரமானது உலர்ந்து போகாமல் அடிக்கடி அதன்மேல் நீரைத்தெளித்து வரவேண்டும்; அடுப்பெரிகிற வரையிலும் மேற்கண்டபடி செய்துவரவேண்டும். குறித்த காலத்திற்குள் மேற்பானையில் பதங்கமேறிப்போமாகை யால், அந்த அளவின்படி எரிப்பை நிறுத்திப் பாத்திரத்தை மெதுவாகவும் அசையாமலும் கீழிறக்கிவைத்துச் சூடாறினவுடன் பாத்திரத்தைப் பூமியில் கிடத்தாட்டிவைத்து, 1 நாள்வைத்துக் குளிர ஆறினபின் கவசத்தை மெதுவாய்ப் பிரித்து மேற்சட்டியில் பிடித்திருக்கும். மருந்தைத் தூவியினுல் (Brush) அதாவது, [illegible] துடைப்பத்தால் அல்லது ஓலைத்துண்டினல், செவ்வையாய் துடைத்தெடுத்துக் கண்ணுடிக் குப்பியில். பத்திரப்படுத்த வேண்டும். இவ்விதம் பக்குவப்படுத்தினதைத்தான் பதங்கம் எனக் கூறுவர்.



## 66. நவாச்சாரப் பதங்கம்

தேவையான நவாச்சாரத்தைப் பொடித்துத் தூளாக்கினது ஒரு பங்கு, கறியுப்பு அரைப்பங்கு, இரண்டையுங்கலந்து பதங்கப் பாண்டத்தில் இட்டு, மேற்சொன்ன முறைப்படி 2 அல்லது 3 சாமம் எரித்துப் பதங்கம் எடுத்துக்கொள்ளவும். பின்பு, இந்தப் பதங்கம் ஒருபங்கு, கறியுப்பு அரைப்பங்கு இரண்டையும் கலந்து முன்போலப் பதங்கித்துக் கொள்ளவும். இவ்விதம், ஒவ்வொரு தடவையும் காணும் பதங்க எடைக்கு அரைப்பங்கு புதிதாக கறியுப்பைச் சேர்த்து மேன்மேலும் பதங்கித்துக்கொள்வதே நவாச்சாரத் தூய்மையுமாம், நவாச்சாரப் பதங்கமுமாம்.

**குறிப்பு** :— இரசவாதத்திற்கும் வைத்தியத்திற்கும் ஆகும் முறைகளில் சேர்க்கப்படும் நவாச்சாரத்தைப் பதங்கித்துத் தூய்மை செய்தே சேர்க்கப்படவேண்டும். அப்படிச் செய்யா மற்ருன் எல்லா வகையிலும் நாம் ஏமாந்துபோகின்ருேம்.

## 67. நவாச்சாரப் பதங்கம் (வேறு)

நவாச்சாரம் 1 பங்கு, இந்துப்பு ½ பங்கு இவ்விரண்டையும் பொடித்துப் பதங்கப் பாத்திரத்தில்போட்டு பாகப்படி 2 அல்லது 3 சாமம் எரித்து, முறைப்படி பதங்கத்தை எடுத்துக்கொள்க. மறுபடியும் இப்பதங்கம் 1 பங்கு, இந்துப்பு அரைப்பங்கு இவ்விரண்டையும் சேர்த்தரைத்து முன்போலவே பதங்கித்துக் கொள்ளவும். இவ்விதம், ஒவ்வொரு முறையும் காணும் பதங்கத்தின் எடையில் பாதி புதிதாக இந்துப்பைச் சேர்த்து மீண்டும் மீண்டும் மூன்று தடவைகள் செய்யின், அதிக வெண்மையானவும் அதிக தூய்மையானவுமான பதங்கமாகும்.

## 68. நவாச்சார நிறப்பதங்கம்

நவாச்சாரம் 1 பங்கு, மஞ்சள் படிக்காரம் 1 பங்கு. இவ்விரண்டையும் பொடித்து மேற்சொன்ன முறைப்படி பதங்கித்துக் கொள்ளவும். பின்பு, கண்ட பதங்க அளவே முற்கூறிய மஞ்சள் படிகாரத்தைச் சேர்த்துப் பொடித்துப் பதங்கித்துக்கொள்ள வேண்டும். இவ்விதம், மென்மேலும் ஏழு தடவைகள் செய்து கொண்டால் உயர்ந்த நிறமுள்ள பதங்கமாம். இது பருப்பொருள்களையும் உயிர்ச் சரக்குகளையும் நிறமேற்ற மிக்க பயன்படும். இன்னும் இது வங்கத்தையும் பாகப்படுத்தும். இந்த நிறமேறிய நவாச்சாரத்திற்காகவும் இன்னம், வேறு மருத்துவச் செயல்களுக்காகவும் மஞ்சள் படிகாரம் வேண்டியதாகையால், அதன் வைப்பு முறைகளில் சிலவற்றையும் தெரிந்து கொள்ளவேண்டுவது இன்றியமையாததாகையால் அவற்றையும் இங்கெழுதுவாம்.

### படிக்கார வகைகள்

படிக்காரமானது பிறவிச்சரக்கு, இது பெரும்பாலும் எரிமலையடிவாரங்களில் அகப்படும். இஃது அனேக வகைகளாயினும் முக்கியமாய் வெள்ளை, சிவப்பு, மஞ்சள், பச்சை என நான்கு வகைகளாம்; இஃது ஒருவித தரைச்சத்து உறைந்துண்டாகிறது. இது ஏமன், மிஸ்ரு, அர்மீனியா முதலிய நாடுகளிலும் அவற்றைச் சுற்றிலுமுள்ள சில பகுதிகளிலும் உள்ள கனிகளில் உண்டாகின்றன. (அ) வெள்ளை நிறமானதற்குத் தமிழில் படிக்காரம், சீனக்காரம் எனவும், உருது மொழியில் "கல்க்தார்" எனவும், பார்சி மொழியில் "ஜாசேசுபேத்" எனவும் சொல்லப்படுகிறது. இதற்கு யமானி படிக்காரமெனவும் ஒரு பெயருண்டு. இது வெள்ளையாயும் தெளிவானதாயும் கலப்பற்ற பளிங்கைப் போலிருக்கும்.

(ஆ) இரண்டாவது சிவப்புப்படிக்காரம், இதற்குத் தமிழில் செம்படிக்காரம் என்றும், உருது மொழியில் "ரஸௌரி" என்றும் பார்சி மொழியில் "ஜாகேஸஊர்க்" என்றும் பெயர். இது சிறிது சிவந்த சாயலாக இருப்பதுடன் வெகு நுண்மையானதாய் விரலால் தேய்த்தால் தூளாகும் தன்மையுடையதாகவும், சற்று உருண்டை வடிவமுள்ளதாகவும், உவர்ப்புச் சுவையுள்ளதாகவும் இருக்கும்.

(இ) மூன்ருவது மஞ்சட்படிக்காரம். இதற்குப் பீத படிக்காரம் என்றும், பார்சியில் "ஞாஜேஜைபர்" என்றும், உருது மொழியில் "கலின்கத்தார்" என்றும் சொல்லப்படும். இதில் பலவகைகளுண்டு. இஃதும் எளிதாக ஒடியத்தக்கதாகவும், ஒருவித தீய நாற்றம். உடையதாகவும் இருக்கும். இந்த வகைகளில் நீண்டு சிறு குச்சிகளைப்போல் இருப்பவை நச்சுத் தன்மை உடையன. ஆகையால், இதை அருந்துவதற்கு மருந்தாகப் பயன்படுத்துவது

(ஈ) நான்காவது பச்சைப் படிக்காரம், இதற்குத் தமிழில் மரகதப் படிக்காரமென்றும் பார்சியில் "ஜாகேஸப்ஜ்" என்றும், யூனுனி மொழியில் "கல்கந்தார்," என்றும் சொல்லப்படும். இது வடிவம் முதலியவைகளில் படிக்காரத்தைப் போலவே இருக்குமாயினும், சுவை உவர்ப்பாயிருக்கும். இம் மரகத படிக்காரமானது இரசவாதத் தொழிலுக்கு மிகச் சிறந்தது. எல்லா இரசவாத மருத்துவர்களாலும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட நான்குவகைப் படிக்காரங்களும் பிறவிச் சரக்காய்க் கிடைப்பது அரிது. வெள்ளைப் படிக்காரமானது ஏராளமாய் வைப்பாக வைக்கப்பட்டு விற்கப்படுகிறது. இவ்விதமே இரசவாத மருத்துவர்களும் மற்ற மூன்றுவகைப் படிக்காரங்களையும் வைப்பாக வைத்து இரசவாத முறைகளில் பயன்படுத்திக் கொள்கின்ருர்கள். அவ்விதம் செய்யப்பட்டவைகளும் சற்றேறக்குறைய பிறவிச் சரக்கின் குணத்தில் ஒத்தே இருக்கின்றன. வெள்ளைப் படிக்காரமானது சாதாரணமாய்க் கடைகளில் எளிதாய்க் கிடைக்கிறது. மற்ற மூவகைப் படிக்காரங்களும் கடைகளில் கிடைப்பது அரிது. இவைகளின் வைப்பு முறைகளை இரசவாதிகள் தெரிந்திருப்பதால் தேவைப்பட்ட காலங்களில் தாங்களே வைப்பாகச் செய்துகொள்வதால் அதிகப் பயன்படச் செய்வதற்கு ஏதுவாகும். ஆகையால், அவற்றுள் சிலவற்றையும் இங்கே எழுதுவோம்.

## 69. வெள்ளைப் படிக்கார வைப்பு

நான்கு பங்கு அன்னபேதியை, 72 பங்கு நீரில் கரைத்துத் தெளிவிறுத்துக் கொள்ளவேண்டும். 1 பங்கு முட்டை மஞ்சள்

கருத் திநீர், 1 பங்குத் தூய்மை செய்யப்பட்ட பூநீர். இவை எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து வெய்யிலில் வைத்து உலர்த்தி அல்லது, நெருப்பில் வைத்துக் காய்ச்சி சுண்டவைத்து, 5 மாதம் வரையில் அதை ஒன்றும் செய்யாமல் ஓர் இடத்தில் வைத்துவிடவேண்டும். பின்பு, 10 அல்லது, 15 நாள்வரையில் நீர்விட்டு வந்து காயவைத்து அல்லது சுண்டவைக்கவேண்டும். இவ்விதம், நீர் விட்டுக் காயவைப்பதை மடக்கி மடக்கி, 2 அல்லது 3 தடவைகள் செய்யின் பளபளப்புள்ள கட்டிகளாய் விடும். இதுவே வெள்ளைப் படிக்காரமாம்.

இஃது இந்தியநாட்டில் கட்சு முதலிய இடங்களிலும் ஐரோப்பியாவில் பாலஸ்லே முதலிய நாடுகளிலும் இன்னம், வெவ்வேறு வகைகளாகச் செய்யப்படுகிறது.

## 70. மஞ்சள் படிக்கார வைப்பு

மேற்கண்ட முறைப்படி மஞ்சள் அன்னபேதியில் செய்து கொள்வதே மஞ்சள் படிக்காரமாகும்.

## 71. மஞ்சள் படிக்கார வைப்பு (வேறு)

தேவையான வெள்ளைப் படிக்காரத்தை, 18 பங்கு நீரிற் கரைத்துத் தெளிவிறுத்துக் கொள்ளவும், இந்தத் தெளிவு, 9 பங்கிற்கு 1 பங்கு முட்டை மஞ்சள் கருவைச் சேர்த்து நன்ருய்க் கலந்து நீராக்கிக் காய்ச்சிக் கொள்வதேயாம்.

## 72. பச்சைப் படிக்கார வைப்பு

தேவையான வெள்ளைப் படிகாரத்தை, 18 பங்கு நீரில் கரைத்துத் தெளிவிறுத்துக் கொள்க. ஜங்கால் பச்சை, வெள்ளைப் படிக்காரம் இவ்விரண்டையும் சமபாகமாகச் சேர்த்து வாலையி விட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும். இதற்கு ஜங்கால் நீர் எனப் பெயர். முன் தயாரித்து வைத்திருக்கிற படிக்காரத் தெளி நீர் 4 பங்கு ஜங்கால் தீநீர் 1 பங்கு, இரண்டையும் சேர்த்து மேற் சொல்லியிருக்கிறபடி தயாரித்துக் கொள்வதே பசும் படிக்காரமாம்.

## 73. பச்சைப் படிக்கார வைப்பு (வேறு)

தேவையனே அளவு மஞ்சள் படிக்காரத்தை 18 பங்கு நீரில் கரைத்துத் தெளிவிறுத்து, அதில் தாம்பிர அரப்பொடியைப் போட்டு வைத்துப் பச்சை நிறமுண்டாக உண்டாகத் தெளிவை

தனியே வேறே கண்ணுடிக் குப்பியில் வைத்துக்கொள்ளவேண்டும். இவ்விதம், சேகரிக்கப்பட்ட நீரைக் காய்ச்சித் தயாரித்துக் கொள் வதே பசும்படிக்காரமாம். தாமிர அரப்பொடியானது, நீரின் அளவில் எட்டில் அல்லது பத்தில் ஒரு பங்கிருக்கலாம். இதன் திட்டம் அனுபவத்தால் நிதானப்பட்டுவிடும்.

## 74. பச்சைப் படிக்கார வைப்பு (வேறு)

ஒரு பீங்கான் பாண்டத்தில் தேவையான அளவு வெள்ளைப் படிகாரத்தைப்போட்டு அதில், 18 பங்கு நீரைவிட்டுக் கரைத்துத் தெளிவிறுத்துக் கொள்ளவும். இந்தத் தெளிவு, 18 பங்கிற்கு, அரைப்பங்கு நவாச்சாரத் தூளைச் சேர்த்துச் செப்புப் பாண்டத் தில் இட்டு சிலநாள் வைத்துப் பின்பு காய்ச்சிக் கட்டியாக்கிக் கொள்ளவும்.

## 75. பச்சைப் படிக்கார வைப்பு (வேறு)

தேவையான அளவு மஞ்சள் படிக்காரத்தை 18 பங்கு நீரில் கரைத்துத் தெளிவிறுத்துக் கொள்க. இந்தத் தெளிவில் முன் சொன்ன மஞ்சள் படிக்காரத்திற்குச் சமனெடை ஜங்கால் பச்சை யைப் பொடித்துப் போட்டுத் தெளிவிறுத்துக்கொண்டு, அதைச் சிலநாள்வைத்து முறைப்படி காய்ச்சிக்கொள்ளவும்.

## 76. சிவப்புப் படிக்காரவைப்பு

தேவையான அளவு வெள்ளைப் படிக்காரத்தை, 18 பங்கு நீரில் கரைத்துத் தெளிவெடுத்துக் கொள்ளவும். இந்தத் தெளிவு, 10 பங்கு, ஜங்கால்பச்சை 2 பங்கு. இவ்விரண்டையுங் கரைத்துத் தெளிவெடுத்துச் சிவப்பு நிறமாக மாறுகிறவரையில் அந்த நீரைப் பத்திரப்படுத்திப் பின்பு காய்ச்சிக் கொள்ளவும். சீக்கிரம் சிவப் பாக மாருவிட்டால் இன்னம் ஜங்கால் பச்சையை செல்லத்தக்க அளவு அதிகப்படுத்திக்கொள்ளலாம்.

நாம் முன்னர் நவாச்சாரத்தை நீராக்கும் முறைகளைத் தொடங்கி, அதில் தேவையான பதங்க முறையைத் தொடங்கி அதில் தேவையான மஞ்சள் படிக்கார முறையைச் சொன்னது மன்றி அதற்கினமான மற்ற படிக்கார வகைகளையும் சொல்ல வேண்டியதாகையால், அம் முறைகளெல்லாம் இங்குச் சொல்லப் பட்டன. இனி, முன்கூறிய முறைகளின் தொடர்ச்சியாக நவாச்சாரப்பதங்க முறையைச் சொல்வோம்.

## 77. சாரப்பதங்கம் (வேறு)

நாட்டு நவாச்சாரம் 20 பலம், அன்னபேதி 20 பலம். இவ்விரண்டையும் தனித்தனியேத் தூள் செய்து இரண்டையும் ஒன்றாய்க் கலந்து வைத்துக் கொள்ளவேண்டும்.

இரண்டு குண்டு சட்டிகள், ஒரு சாண் ஆழமுள்ளவைகளாகவும், வாய் சரியாய்ப் பொருந்தும்படியானவைகளாகவும், கொஞ்சம் சந்தில்லாமல் தேய்க்கப்பட்டவைகளாகவும் தயார்ப் படுத்திக் கொள்ளவேண்டும். முன் தயாரித்து வைத்த மருந்தை ஒரு சட்டியில்போட்டு, மறு சட்டியால் மூடி, உளுந்துமாவால் கெட்டியாய் 3 அல்லது, 5 சீலை செய்துலர்த்தி அடுப்பேற்றி இரண்டு விரல் கனமுள்ள நான்கு விறகால் விடாமல் நான்கு சாமம் எரிக்கவேண்டும். மேற் சட்டியில் அது மறையும் படியாக உரத்த ஈரத்துணியைப் போட்டு ஈரம் உலராமல் நனைத்துக் கொண்டும் வரவேண்டும். இவ்விதமாக நான்கு சாமம் சென்றபின்பு எரிப்பை நிறுத்தி அடுப்புடன் அவ்விதமே வைத்து மறுநாட் காலையில் சீலையைப் பிரித்துக் கீழ்ச்சட்டியில் ஏதேனும் எஞ்சி நின்றால் அதையும் சுரண்டி மண்சட்டியிற்போட்டு முன்கூறிய கீழ்ச்சட்டியை இப்போது மேலே கவிழ்த்து முன்போல் உளுந்துமாவினால், 3 அல்லது 5 சீலை செய்து அடுப்பேற்றி முன் போலவே, 4 சாமம் எரிக்கவேண்டும். பின்பு, அடுப்புடன் விட்டு வைத்து மறுநாட் காலையில் கவசத்தைப் பிரித்துக் கீழ்சட்டியில் ஏதேனும் எஞ்சி நின்றால் அதையும் சுரண்டி மேற்சட்டியிற் போட்டு, இந்தக் கீழ்ச்சட்டியை இப்போது மேற்சட்டியாகக் கவிழ்த்து முன் போலவே சீலை செய்து முன்போலவே எரிக்க வேண்டும். இவ்விதம் கீழ்ச்சட்டி மேற்சட்டியாகவும், மேற்சட்டி கீழ்ச்சட்டியாகவும் மாற்றி மாற்றி மூன்று தடவை நன்னான்கு சாமமாக 12 சாமம் எரித்தானபின்பு பதங்கத்தைச் சுரண்டி எடுத்துக் கண்ணாடிக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும். மேற்கண்ட விதமாய் ஏழு தடவைகள் செய்யின் கடுங்காரமான பதங்கமாம். மேலும், ஒவ்வொரு தடவையும் பத்துபலம் அன்ன பேதியையும் சேர்த்துக்கொண்டு வந்தால் அதிகக் குணமுள்ளதாம். இதைச் செயநீராக்கியும் பயன்படுத்திக்கொள்ளலாம். செய நீராக்காமல் செந்தூரங்களுடன் சேர்த்துக் கொள்ளலாம். இந்தப் பதங்க சம்பந்தமாய்த் தங்கத்தைச் செந்தூரித்து சிறப்பான பாகங்களும் செய்யலாமாகையால் அதன் விபரத்தை இதன் திறவுகோலில் எழுதுவோம்.

## 78. சிவப்புப் படிக்கார வைப்பு (வேறு)

தேவையான வெண்காரத்தைப் பத்துப்பங்கு நீரில் கரைத்துத் தெளிவிறுத்துக் கொள்ளவேண்டும். வெள்ளைப்படிக்காரம் ஒரு பங்கு மேற்படி வெண்காரத் தெளிவு 4 பங்கு, இவை இரண்டையும் சேர்த்துக் கரைத்துத் தெளிவிறுத்துக் காய்ச்சிக் குழம்பு பதத்தில் வெய்யிலில் வைத்துலர்த்திக் கொள்ளவேண்டும். இவ்விதம், தயாரித்துக் கொண்ட படிக்காரம் பங்கு ஒன்றில் நான்குபங்கு முன்கூறிய வெண்காரத் தெளிவைவிட்டுக் கரைத்துத் தெளி விறுத்து முன்போலக் காய்ச்சிக் குழம்பு பதத்திலிறக்கி வெய்யிலில் வைத்து உப்பாக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதமே ஒவ்வொரு தடவையும் காணும் உப்பிற்கு நான்குபங்கு வெண்காரத் தெளிவை விட்டுத் தெளிவிறுத்துக் காய்ச்சி உலர்த்திக் கொள்ள வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் படிக்காரமானது சிவப்பு நிறமுடைதாய் ஆகிறவரையில் செய்து கொள்ளலாம். அதிகம் சிவப்பேறுமல் சிறிதளவு செந்நிறமாகி விட்டாலும் சிவப்புப் படிக்காரத்திற்குப் பதிலாக அதை உபயோகித்துக் கொள்ளலாம்.

## 79. சார வெப்பநீர்

ஆற்று நீர் 7 பங்கு. தண்ணீர்தெளித்து மலரவைக்காத கல் சுண்ணத்தூள் 1 பங்கு, நீரை ஒரு பீங்கான் பாண்டத்தில் விட்டு கல் சுண்ணத்தைப் போட்டுக் கலக்கி, மூன்று நாள் வைத்துத் தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும். இந்தத் தெளிவு, கல் சுண்ணம் என்னும், இரண்டையும் முன்னளவே சேர்த்து முன் செய்தது போலவே கொள்ளவேண்டும். இவ்விதம், இக் கணக்கின் படியே மீண்டும்மீண்டும் ஏழு தடவைகள் செய்தெடுத்து வாலையி லிட்டுத் தீநீராக இறக்கி ஒரு கண்ணுடிக் குப்பியில் வைத்துக் கொள்க. இதற்குச் சுண்ணப் பக்குவநீர் எனப் பெயர்.

ஆற்றுநீர் 7 பங்கு, நவாச்சாரம் அல்லது நவாச்சாரப் பதங்கம் 1 பங்கு. இவ்விரண்டையும் முன்சுண்ணப் பக்குவத்தில் சொன்னது போலவே தெளிவிறுத்துக் கொள்ளவும். அந்த தெளிவு 7 பங்கு நவாச்சாரம் அல்லது நவாச்சாரப் பதங்கம் 1 பங்கு. இவ் விரண்டையும்முன்போல் செய்து தெளிவு எடுத்துக் கொள்ளவும். இவ்விதமே ஒவ்வொரு தடவையும் தெளிவிறுத்து அதற்கு ஏழில் ஒரு பங்கு தொடக்கத்தில் சேர்த்த நவாச்சாரத்தை அல்லது, பதங் கத்தைச் சேர்த்து மீண்டும்மீண்டும் முன்கூறிய முறைப்படி தெளி விறுத்துக் கொள்ளவேண்டும். நவாச்சாரத்தை நீராக்கினதற்கு நவாச்சாரப் பதங்கப் பக்குவ நீரெனவும் பெயர்.

மேற்சொன்ன சுண்ணப் பக்குவ நீர் ஒரு பங்கு நவாச்சார அல்லது நவாச்சாரப்பதங்க பக்குவநீர் ஒரு பங்கு. இரண்டையும் கலந்து ஒரு கண்ணுடிக் குப்பியில் விட்டு வாய்ப் பகுதியை மூடி செயநீர் குழியில் 30 அல்லது, 40 நாள் விருப்பம்போல் வைத்தெடுத்துக் கொள்க. இந்த நீரை யூனனி இரசவாதப் பண்டிதர்கள் "மா-ஏ-தீகான்'' எனப் பெயரிட்டிருக்கின்றார்கள், அதன் பொருள் இரத்தினகாரக நீர். அதாவது, இரத்தினங்கள் முதலிய கற்களைக் கொல்லும் அல்லது நீராக்கும் நீரென்பதேயாகும்.

## 80. சார வெப்பநீர் (வேறு)

* புளித்த தெளிவித்த தயிர் ஒரு பங்கு, புளிப்பு நாரத்தம் பழரசம் அல்லது, எலுமிச்சம் பழச்சாறு ஒரு பங்கு. இவ்விரண்டையும் கலந்து வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக்கொள்க. இதற்குத் தெளிவித்த மோர் (தயிர்) பக்குவ நீரெனப்பெயர்.

நவாச்சாரம் அல்லது நவாச்சாரப் பதங்கம் ஒரு பங்கு, வெண்காரம் ஒரு பங்கு. இவ்விரண்டையும் பொடித்து ஒரு பாண்டத்தில் போட்டு, இதற்கு 5 பங்கு ஆற்று நீர்விட்டுக் கரைத்துத் தெளிவிறுத்து வெய்யிலில் வைத்துலர்த்தி உப்பாக்கிக் கொள்க. பின்பு கண்ட உப்பளவிற்கு 5 பங்கு நீர் விட்டுக் கரைத்துத் தெளிவிறுத்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஒவ்வொரு தடவையும் காணும் உப்பு அளவிற்கு வைத்து பங்கு நீர்விட்டு, மீண்டும் மீண்டும் முன்போலவே ஏழு தடவைகள் செய்தெடுத்து முடிவில் வெய்யிலில் வைக்காமல் அந்த நீரை வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் தீநீருக்கு காரசாரப் பக்குவ நீரெனப் பெயர்.

மேற்கண்ட ததிமஸ்து பக்குவ நீர் ஒருபங்கு, காரசார நீர் நான்கு பங்கு இரண்டையும்கலந்து ஒருகண்ணுடிக் குப்பியில் இட்டு வாய்ப் பகுதியை மூடி செயநீர்க் குழியில் 30 அல்லது 40 நாள் வைத்தெடுத்துக் கொள்ளவேண்டும் இவ்விதம், செய்யப்பட்ட நவாச்சார நீருக்கு வெப்ப (தீக்ஷண) நீரெனப்பெயர். இது எல்லாச் சரக்குகளையும் கரைக்க உபயோகப்படுகிறது.

---

* நன்ருய்ப் புளித்ததயிரை ஒரு மெல்லிய துணியில் முடிந்து தொங்க வைக்க அதிலிருந்து முத்துப்போல தெளிவான நீர் சொட்டும். இந்த நீரைச் சேகரித்து கண்ணுடிக் குப்பியில் வைத்துக்கொள்க. இவ்விதம் தயிரிலிருந்து சேகரிக்கப்பட்ட நீருக்குத் தெளிவித்த மோர் (தயிர்) எனப்பெயர்.

**குறிப்பு** :—மேற்சொல்லப்பட்ட இருவகைச் சாரநீர்களும் பருப்பொருள் (தூலம்) சரக்குகளான தங்கம் முதலியவைகளையும் இரத்தினம் முதலிய கல்வகைகளையும் கரைத்து நீராக்கப் பயன் படுகின்றன. முன் சொல்லப்பட்டிருக்கும் "பருப்பொருள் சரக்குகளை நீராக்கப் பொதுவிதி'' என்பதில் சாரநீர் என்பது மேற்கண்டவைகளேயாம். இன்னும், அவ்வகை முறைகளில் சார நீரென்பதும் மேற்கண்டவைகளேயாம். இதரவகைச் சாரநீர் களுக்கும் இந்தவகைச் சாரநீர்களுக்கும் இடையிலுள்ள வேறுபாட் டைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு இவைகளுக்கு நவாச்சார வெப்ப நீரென இங்குப் பிரித்துச் சொல்லப்பட்டிருக்கிறதெனத் தெரிந்துகொள்ள வேண்டியது.

## 81. சாரநீர்

நவாச்சாரத்தெளிவை (பதங்கத்தை) ஒருசிறிய மண் குப்பியில் இட்டு வாய்ப்பகுதியை மூடி, வேறொரு பெரிய பாண்டத்தின் நிறைய மேற்படி குப்பி மிதக்கும்படியாக நீர்விட்டு அடுப்பேற்றி முன்னே தயாரித்து வைத்திருக்கும் குப்பியைத் தண்ணீரில் விட்டுத் தண்ணீர் பொங்காமல் மெதுவாய்த் தீயில் எரிக்க வேண்டும். இவ்விதம், 1 அல்லது $1\frac{1}{2}$ சாமம் எரிக்க சாரம் அல்லது சாரப் பதங்கம் நீராகிவிடும்.

அல்லது முன் தயாரித்துவைத்த குப்பியைத் தண்ணீரில் மிதக்கும்படி இரண்டொரு வாரம் வைத்தாலும் நீராகிவிடும்.

## 82. சாரநீர் (வேறு)

நவாச்சாரத்தை அல்லது நவாச்சாரப் பதங்கத்தை மூங்கிற் குழாயில் இட்டு வாய்ப்பகுதியை மூடி, முன் சொன்னதுபோல ஒரு பெரிய பாண்டத்தில் நிறைய நீர்விட்டு அடுப்பேற்றி முன் கண்ட குழாயைத் தொங்கவிட்டுக் குழாய் வாய்ப் பக்கத்தைத் தூக்கிக் கட்டிவைத்துத் தண்ணீர் கொதிக்கும்படி அடுப்பை நன்றுயெரித்து மூன்று நான்கு கொதிகள் வந்தவுடன் எடுத்து நீராகியிருப்பதை வேறொரு கண்ணாடிக் குப்பியில் இறுத்துக் கொள்ளவும். ஏதேனும், நீராகாமால் பாக்கியிருந்தால் அதை முன்போலச் செய்ய நீராகிவிடும்.

## 83. சாரநீர் (வேறு)

நவாச்சாரத்தை அல்லது நவாச்சார பதங்கத்தை "நீராக்கும் பொதுவிதி'' என்னும், தலைப்பில் சொல்லப்பட்டிருப்பதுபோலச்

சுரைக்காயில் வைத்தும் நீராக்கிக்கொள்ளலாம். செயநீர்க்குழிகளிலும் அங்குச் சொல்லப்பட்டிருக்கும் ஏதேனும் ஒரு முறைப்படியும் செய்து நீராக்கிக்கொள்ளலாம்.

குறிப்பு :—நவாச்சாரநீர், நவாச்சாரப் பதங்கம் என்னும், இம்முறைகளை இரவாதத் தொழிலில் தேர்ச்சிபெற விரும்பும் ஒவ்வொருவரும் இன்றியமையாது தெரிந்து கொள்வதுந் தவிர, அம்முறைகளைச் செய்து முடித்துத் தயாரித்துக் கொள்ளவும் வேண்டும்.

ஏனெனில், அநேக இரசவாத முறைகள் மேற்கண்ட நீரில்லாமல் கைகூடுவது கூடாமையாகும். ஆகையால், இங்கெழுதப்பட்டிருக்கும் முறைகளைக் கவனமாய் மனத்திற்கொண்டு அவ்விதம் செய்துமுடிக்க முயலவேண்டும்.

## 84. உப்புநீர் படிக்காரநீர்

இதற்கு முன் "உப்பு மூதலியவைகளைச் செயநீராக்கப் பொது விதி" என்னும் தலைப்பில் (இ) என்னும், பாகத்திற் சொல்லப்பட்டிருப்பதுபோலச் சுரைக்காயைத் தயார்செய்து நீராக்க வேண்டிய எந்த உப்பையும், அல்லது எவ்வகை படிக்காரத்தையும் அதில் நிறைத்து அங்குச் சொல்லியிருக்கிற பாகப்படி நீராக்கிக் கொள்வதே அந்தந்த உப்புநீர் அல்லது, அந்தந்த படிக்கார நீரென முறையே சொல்லப்படும்.

## 85. படிக்கார நீர்

தூள்செய்த படிக்காரம் ஒரு பங்கு, முட்டை மஞ்சள்கரு மூன்றுபங்கு. இவ்விரண்டையும் ஒரு பாண்டத்திற்போட்டு, அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து வருவதுடன், கைவிடாமல் துழாவி வரவேண்டும். இப்படிச் செய்து வருவதால் இரண்டும் நன்ருய்ச் சேர்ந்து கறுத்துப்போகும். சேர்த்த அம்பிலியானது கரிந்து எரிந்து போனவுடன் முன்சேர்த்த அளவே புதிய முட்டை மஞ்சள்கருவைச் சேர்த்து முன் செய்தது போலவே துழாவி நன்ருய் கலந்து வரவேண்டும். இவ்விதம், படிக்காரமானது சிவக்கிற வரையில் புதிய அம்பிலியைச் சேர்த்து எரித்துத் துழாவி வரவேண்டும். படிக்காரம் சிவந்து நீரெல்லாம் சுண்டிக் கல்லைப் போல் இறுகிப் போனவுடன் இறக்கி ஆறவைத்துப் பொடித்து ஒரு கண்ணுடிக் குப்பியில் இட்டு, வாய்ப்பகுதியைமூடிக் குதிரை மலத்தில் தயார்ப்படுத்திய செயநீர்க் குழியில் வைத்து அங்கு சொல்லியிருக்கிற பாகப்படி நீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்த நீரானது பற்பங்களை நிறமேற்றப் பயன்படும். கறுத்த செந்தூரங்களைச் சிவப்பாக்கவும் உதவியாம்.

## 86. படிக்காரநீர் (வேறு) செந்நீர்

மேல்நாட்டுத் திராட்சைக் காடியை வலையிலிட்டுத் தீநீராக இறக்கி வைத்துக் கொள்ளவேண்டும். இந்தத் தீநீர் 40 பலம், தூய்மைப்படுத்திய படிக்காரம் அல்லது, படிக்காரச் சுண்ணம் 10 பலம். இவ்விரண்டையும் ஒரு பாண்டத்தில் இட்டுக் கரைத்துச் சில நாள் வைக்கவேண்டும். நாள்தோறும் இரண்டொரு தடவை கலக்கியும்வரவேண்டும். முடிவில் 3 அல்லது 4 நாள் கலக்காமல் வைத்துத் தெளிவை மாத்திரம் இறுத்து வேறு பாண்டத்தில் ஊற்றிக்காய்ச்சி, சிவந்த நிறமாய்வருந் தருணத்தில், இறக்கி ஆறினவுடன் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இந்த நீரை எந்தச் சரக்கையும் சிவப்பாக பயன்படுத்தலாம். இது சிவந்த நிறமாயிருப்பதாலும், கறுத்த செந்தூரங்களைச் சிவப்பாக்கப் பயன்படுத்துகின்ற காரணத்தாலும் இதற்குச் "செந்நீர்" எனச் சொல்லப்படுகிறது.

## 87. படிக்காரத் தூய்மை

தேவையான அளவு படிக்காரத்தைப் பொடித்து அதற்கு இரண்டு பங்கு பாகப்படுத்தின பனிநீரில் கரைத்துத் தெளிவிறுத்துக் காய்ச்சிக் குழம்புப் பதத்தில் வெய்யிலில் வைத்து உப்பாக்கிக் கொள்ளவேண்டும். இந்த உப்பை மறுபடியும் இதற்கு இரண்டு பங்கு நீரில் கரைத்து முன்போலக் காயச்சிக் குழம்பு பதத்தில் வெய்யிலில் உலர்த்தி உப்பாக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் பாகப்படுத்திக் கொள்வதே படிக்காரத் தூய்மையாம்.

## 88. படிக்காரச் சுண்ணம்

ஒரே கட்டியாயுள்ள படிக்காரம் 40 அல்லது 50 பலம். இது எடை எவ்வளவிருந்தபோதிலும் ஒரே கட்டியாய் மாத்திரம் இருக்கவேண்டும். இக்கட்டியைத் .தரையின்மீது வைத்து அதைச் சுற்றிலும் அரை அடிக்கப்பால் செங்கற்களை அல்லது, மண்ணைத் தடையாகச்செய்து இந்தத் தடையின் ஒரு பக்கத்தில் இரண்டு பெரிய துருத்திகளை வைத்துப் படிக்காரத்தின் மீது அது மறையும்படியாக நாட்டுக்கரியைப்போட்டு அதில் நெருப்பைப் போட்டு ஊத ஆரம்பிக்கவேண்டும். போட்ட கரி பற்றி எரிந்துவிட்டால் மேன்மேலும் கரியைப்போட்டு வர வேண்டும். இவ்விதம் ஆள் மாற்றிமாற்றிக் கைவிடாமல் நான்கு

சாமம் ஊதவேண்டும். அடிக்கடி கரியையும் போட்டுவரவேண்டும். இதற்காக 4 அல்லது, 5 மணங்கு கரி செல்லும். கருமார், கன்னூர் இவர்கள் ஊதுகிற பக்குவம் முதலியவைகளில் அனுபவப்பட்ட வர்களாகையால் அவர்களில் சற்றுப் புத்தி கூர்மையுள்ளவர்களை இதற்கு உதவியாக வைத்துக்கொண்டால் வெகு சுலபமாகவும் திறமாகவும் வேலை நிறைவேறிப் போகும். ஊத்தானது ஏற வேற படிக்காரமானது உருகியுருகி இறுகி, சுக்கானைப் போலாகி கார முண்டாகி வரும். இந்தக் காரமானது ஊத ஊதச் சிறிது சிறிதாய் அதிகரித்து வந்து முடிலில் ஆள் அருகில் நெருங்கக் கஷ்டமாகவும் இருக்கும். மேற்கண்ட பக்குவமாய், நான்கு சாமம் ஊதி அப்படியே ஆறவிட்டு மறுநாள் எடுத்தால் கட்டியானது இறுகிச் சுக்கானைப்போலிருக்கும். அதைப் பொடித்துக் கண்டிக் குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும். இம் முறைகளில் இது மிகவும் சுலப மானதும் பல தடவை அனுபவப்பட்டதுமாகைய்யால், அதிக மேன்மையானது என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இரசவாதத் தொழில் வெகுநாள் பண்பட்ட பயிற்சியுடையவர்கள் இதன் முறையைத்தெளிவாகத் தெரிந்துகொள்வார்கள். பயிற்சியில்லாத வர்கள் சற்று தயங்குவார்கள். ஆயினும், அவர்களும் நாம் முன் வற்புறுத்தியிருக்கிறதுபோல விடாமுயற்சியுடன் அடுத்தடுத்து இரண்டொரு தடவைகள் செய்யின் இப்பாகத்தின் நுட்பத்தை அறிந்துத் தவறுமல் செய்து கொள்ளக்கூடும்.

மேற்கண்ட பாகப்படிசெய்து முடிந்ததற்குப் படிக்காரச் சுண்ணம் எனப்பெயர். இன்னம், இதற்கு சீனகுரு என்றும் ஒரு பெயருண்டு. இந்தச் சுண்ணத்தை மேற்சொன்னபடி நீராக்கியும் பயன்படுத்தலாம். இதனுடன், வெடியுப்பு முதலியவைகளைச் சேர்த்து, செயநீராக்கியும் பயன்படுத்தலாம். நாம் முன் சொல்லி வந்திருக்கிறபடி முப்புச் சுண்ண பாகங்களில் சேர்க்கப்படுவதும் இதுதான். சுருங்கச் சொன்னுல் இந்த சீனகுருவால் அறிவாளிகள் பலமுறைகளைத் தொடர்புபடுத்திச் சிறந்த பக்குவ முறைகளிலும் பயன்படுத்திக் கொள்வார்கள். ஆகையால், அவற்றைப் பற்றி அவர்களையடுத்துத் தெரிந்து கொள்ளவேண்டும்.

## 89. சுண்ணச் சாரநீர்

தாளிக்காத கற்சுண்ணும்பு 1 பங்கு, *பாகப்படுத்தின பனிநீர் அல்லது ஆற்றுநீர் 4 பங்கு. சுண்ணத்தை ஒரு பாண்டத்தில் இட்டு முன்னே கூறிய நீரைவிட்டுக் கலக்கி மூன்று நாள் வைத்துத்

*பாகப்படுத்தின் பனிநீர் என்னும முறைகளில், கடையில் விற்கப்படும் பனிக்கட்டியை (Ice) வாங்கி அங்கு மேல் சொல்லியிருக்கிறபடி பாகப்படுததி அதற்குப் பதிலாகச் சேர்த்துக்கொள்ளலாம். இயல்பான பனிநீரே வேண்டு மென்பதும் கட்டாயமில்லை.

தெளிவிறுத்துக் கொள்ளவும். இந்தத் தெளிவு நாலு பங்கு, தாளிக்காத கற்சுண்ணும்பு ஒருபங்கு. இவ்விரண்டையும் சேர்த்துக் கலக்கி, மூன்று நாள் வைத்துத் தெளிவிறுத்துக் கொள்ளவும். இவ்விதமே ஒவ்வொரு தடவையும் காணும் தெளிவில் நாலிலொரு பங்கு தாளிக்காத கற்சுண்ணும்பைச் சேர்த்து மேன்மேலும் தெளிவிறுத்துக் கொள்ளவும். ஏழாந்தடவை எடுத்த தெளிவை வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும்.

81, 82, 83ஆம் பாகங்களுள் ஏதேனும் ஒருவகைப்படி தயாரித்து வைத்த சாரநீரை வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட இருவகைத் தீநீரையும் சமனளவாய்க் கலந்து கொள்வதே சுண்ணச் சாரநீராம்.

இந்த நீரானது இரத்தினம் முதலிய கல்லினங்களையும் சுண்ணமாக்கப் பயன்படுத்தப்படுகிறது.

## 90. முக்குண நீர்

பாகப்படுத்தின பூநீர் 15 படி. முப்பது படி பாகப்படுத்தின பனிநீரில் ஒரு பங்கு முற்கூறிய பூநீரை இட்டு வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவும். இவ்விதம், மேற்கண்ட பதினைந்து படி பூநீரையும் ஒவ்வொரு படியாக, ஒவ்வொரு தடவையும் இறக்கப்படும் தீநீரில் சேர்த்து மேன்மேலும் பதினைந்து தடவைகள் தீநீர் இறக்கிக்கொள்ளவும். இவ்விதம், பூநீரை மீண்டும் மீண்டும் இறக்கப்பட்டதற்குத் முக்குண நீரெனப் பெயர்.

இந்த நீரானது உயிர்ப்பொருள், பருப்பொருள் என்னும் எல்லாவகைச் சரக்குகளையும் நீராக்க பயன்படுகிறது.

குறிப்பு :—கடையில் விற்கப்படும் அப்பளாக்காரத்தையும் பூநீரைப் பாகப்படுத்தும் முறைப்படி, பாகப்படுத்தி மேற்கண்ட பாகப்படி செய்துகொள்ளலாம். அதற்கும் முக்குணசல நீரென்றே பெயர். ஆனுல், பூநீரின் முக்குண நீரானது அதிகக்காரமாகவும் குணத்தில் சுருசுருப்புள்ளதாகவும் இருக்கும். அப்பளக்காரத் முக்குண நீரானது குணத்தில் மந்தமானதாக இருக்கும்.

## 91. காரசார நீர்

பாகப்படுத்தின பூநீர் 7 படி, பதினைந்து படி பாகப்படுத்தின பனிநீரில் ஒரு படி முன்கூறிய பூநீரையும் இட்டு வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக்கொள்ளவும். பின்பு, இந்தத் தீநீரில் வேருெருபடி

முன்கூறிய பூநீரைச் சேர்த்து வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவும். இவ்விதம், மேற்கண்ட 7 படி பூநீரையும் ஒவ்வொரு படியாக ஒவ்வொரு தடவையும் இறக்கப்படும் தீநீரில் சேர்த்து, மேன்மேலும் 7 தடவைகள் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும்.

81, 82, 83ஆம் பாகங்களுள் ஒன்றின்படி தயாரித்து வைத்த சாரநீரையும் தனியாய் வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும்.

பின்பு, இந்த இருவகை நீரைச் சமபாகமாய்ச் சேர்த்து வாலையிலிட்டு இறக்கிக் கொள்வதே காரசார நீராம்.

இந்த நீரானது அதிக வெம்மையானது. உயிர்ச்சரக்கு. பருப்பொருள் சரக்கு என்னும் எல்லா வகைகளையும் நீராக்க பயன்படுகிறது.

## 92. காரசார நீர் (வேறு)

பாகப்படுத்தின பூநீர் 7 படி, பதினைந்து படி பாகப்படுத்தின பனிநீரில் ஒரு படி. முன்சொன்ன பூநீரைச் சேர்த்து, ஒரு மண் பாண்டத்தில் விட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து 2 படி நீர் சுண்டினவுடன் இறக்கி வைத்து இரண்டு நாள் சென்றபின் தெளிவை இறுத்து அதில் வேறொருபடி முன்கூறிய பூநீரைச்சேர்த்து முன்னே தயாரித்த பாண்டத்தைத் தூய்மைசெய்து அதில் விட்டு முன்போல அடுப்பேற்றி எரித்து மற்றிரண்டுபடி நீர் சுண்டின வுடன் இறக்கி முன்போலவே இரண்டுநாள் வைத்துத் தெளிவை இறுத்து அந்தத் தெளிவில் இன்னுமொரு படி முன்சொன்ன பூநீரைச் சேர்த்து முன்போலக் காய்ச்சி இரண்டுபடி சுண்டினவுடன் இறக்கி வைத்துத் தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் மேற்கண்ட ஏழு படி பூநீரையும் ஒவ்வொரு படியாக ஒவ்வொரு தடவையும் இரண்டிரண்டுபடி சுண்டவைத்து இறக்கி இறுத்த தெளிவில் சேர்த்து மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் காய்ச்சிக் கொள்ளவேண்டும். இக்கணக்கின்படி முடிவில் ஒருபடி நீர் இருக்கும். அதைப் பத்திரப்படுத்தவும். 81, 82, 83ஆம் பாகங்களுள் ஒன்றின்படி தயாரித்து வைத்த சாரநீர் 1 படி. இந்த இருவகை நீர்களையும் ஒன்றாகச் சேர்த்து வைத்துக் கொள்வதும் ஒருவகைச் காரசார நீராம். இதற்கும் மேற்கண்ட குணங்களே இருக்குமானாலும், முன்னது முதல் தரமானது; பின்னது இரண்டாந் தரமானது என நினைவில் வைக்க வேண்டும்.

## 93. காரதாரச் சாரநீர்

பாகப்படுத்தின பனிநீர் 40 படி, ஒரு படி பாகப்படுத்தின பூநீர், ஒரு படி தாளிக்காத கற்சுண்ணும்பு. இம் மூன்றையும் வாலையிலிட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் தீநீரில் இன்னொரு படி பூநீரையும் இன்னொரு படி தாளிக்காத சுண்ணும்பையும் சேர்த்து இரண்டாந் தடவையும் வாலையிலிட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் தீநீரில் மேலும் ஒரு படி பூநீரையும், ஒரு படி தாளிக்காத கற்சுண்ணும்பையும் சேர்த்து 3ஆம் தடவையும் வாலையிலிட்டுத் தீநீர் இறக்கிக்கொள்ள வேண்டும். இவ்விதம், ஒவ்வொரு தடவையும் இறக்கப்படும் தீநீரில் ஒவ்வொரு படி பூநீரையும் ஒவ்வொரு படி தாளிக்காத கல் சுண்ணும்பையும் சேர்த்து மேன்மேலும் ஏழு தடவைகள் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும். பின்பு, இந்தத் தீநீரின் பத்திலொரு பங்கு வெண்காரத்தையும் பத்திலொரு பங்கு தாளகத்தையும் மைபோலப் பொடித்துச் சேர்த்து மூன்று நாள் வைத்துக் கலக்கி வந்து நாலாம்நாள் வாலையிலிட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ள வேண்டும்.

முன் சொல்லப்பட்டிருக்கிற சாரநீர்களில் ஒருவகை நீரை வாலையிலிட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும்.

முதலில் தயாரித்து வைத்துள்ள நீர் இரண்டு பங்கு, பின்னர்த் தயாரித்து வைத்துள்ள சாரநீர் ஒரு பங்கு. இவை இரண்டையும் கலந்து ஒரு கண்ணுடிக் குப்பியில் விட்டுச் சிலநாள் வைத்திருந்து பின்பு பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

இந்தக் காரசார நீரினுல் எல்லாவகைச் சரக்குகளையும் நீராக்கிக் கொள்ளலாம்.

## 94. காரதாரச் சாரநீர் (வேறு)

பாகப்படுத்தின பனிநீர் 20 படி, பாகப்படுத்தின பூநீர் 1 படி, தாளிக்காத கற்சுண்ணும்பு 1 படி. இம் மூன்றையும் கலந்து ஒரு பாண்டத்தில்விட்டு நன்ருய்க் கலக்கி மூன்றுநாள் வைக்க வேண்டும். நாள்தோறும் இரண்டொரு தடவை கலக்கியும் வரவேண்டும். நாலாம் நாள் தெளிவை இறுத்து, அதில் மேலும் ஒரு படி பூநீரையும், ஒரு படி தாளிக்காத கற்சுண்ணும்பையும் இட்டுக் கரைத்து, முன்போல மூன்று நாள் வைத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம், ஒவ்வொரு தடவையும் இறக்கப்படும்

தெளிவில் ஒவ்வொரு படி பூநீரையும் ஒவ்வொரு படி தாளிக்காத கற்சுண்ணும்பையும் சேர்த்து மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் தெளிவிறுத்துக் கொள்ளவேண்டும. பின்னர், இந்தத் தெளிவின் பத்தில் ஒரு பங்கு வெண்காரத்தையும் பத்தில் ஒரு பங்கு தாளகத்தையும் மைபோலப் பொடித்துத் தெளிவுடன் சேர்த்து மூன்றுநாள் வைத்துக் கலக்கி நாலாம்நாள் தெளிவிறுத்துக் கொள்ளவேண்டும். இந்தத் தெளிவு ஒரு பங்கு முன் சொல்லப் பட்டிருக்கிற சாரநீர் இரண்டு பங்கு ; இவ்விரண்டையும் கலந்து ஒரு கண்ணுடிக் குப்பியில் விட்டுச் சிலநாள் வைத்திருந்து பின்பு பயன்படுத்தவும்.

இந்த நீரினுல் எல்லாவகைச் சரக்குகளையும் நீராக்கலாம் ஆனுல், முன்னே கண்ட முறை கொடிய காரமானது; பின்முறை அதனினும் சற்றுத் தாழ்ந்தது.

## 95. எரிநீர்

பாகப்படுத்தின பூநீர் 1 பங்கு, பாகப்படுத்தின பனிநீர் 12 படி. இவ்விரண்டையும் ஒரு மண்பாண்டத்தில் இட்டுக் கரைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து ஒருபடி நீர் சுண்டினவுடன் இறக்கி ஆறவைத்துத் தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும். இந்தத் தெளிவில் மேலும் ஒரு படி பூநீரைச் சேர்த்துக் காய்ச்சி ஒரு படியாக சுண்டினவுடன் இறக்கி ஆறவைத்துத் தெளி விறுத்துக்கொள்ளவும். இந்தத் தெளிவில் இன்னெருபடி பூநீரைப் போட்டுக் கரைத்து மூன்ரும் தடவையும் அடுப்பேற்றிக் காய்ச்சி ஒரு படியாக சுண்டினவுடன் இறக்கி ஆற வைத்துத் தெளி விறுத்துக்கொள்ளவும்.

இந்தத் தெளிவை வாலையிலிட்டுத் தீநீர் இறக்கி அந்தத் தீநீரையே மறுபடியும் வாலையிலிட்டுத் தீநீர் இறக்கிக்கொள்ளவும். இவ்விதம், அந்தத் தீநீரையே மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் இறக்கிக்கொள்வதே எரிநீராம்.

இந்த நீரால் அப்பிரேக நவநீதத்தை அரைத்துச் செயநீர்க் குழியில் பாகப்படி வைத்தால் அது கரைந்து நீராகிவிடும்.

### மிருதார சிங்கி (சிங்கிப் பாடாணம்)

சிங்கிப் பாடாணத்தை முற்காலம் முதல் எல்லாவகை மருத்துவர்களும் பயன்படுத்தி வருகின்ருர்கள். இஃது இரும்பைத் தவிர மற்ற உலோகங்களிலிருந்து செய்யப்படுகிறது. இது

பெரும்பாலும் வெள்வங்கம், கருவங்கம் என்னும் இவற்றுள் ஒன்றை எரித்துச் செய்யப்படுகிறது. இது தங்கச்சிங்கி, வெள்ளிச் சிங்கி, வங்கச்சிங்கி எனப் பல வகையாகும். ஈய மணலில் தங்கங் கலந்திருந்தால், தங்கத்தைப் பிரிக்க அந்த மணலை மூசையில் வைத்திருக்கும்போது தங்கச்சிங்கி உண்டாகிறது; அல்லது, தங்கத் தைத் தூய்மை செய்ய வங்கத்தைக் கொடுத்து ஊதும்போதும் இது உண்டாகிறது. இவ்விதமே ஈய மணலில் வெள்ளி கலந்திருந்து அதைப்பிரிக்க மூசையில் வைத்துருக்கும்போது வெள்ளிச்சிங்கி உண்டாகிறது; அல்லது, வெள்ளியைத் தூய்மை செய்ய வங்கத் தைக் கொடுத்து ஊதும்போதும் வெள்ளிச்சிங்கி உண்டாகிறது. வங்கத்தை உருக்கும்போது வங்கச்சிங்கி உண்டாகிறது. தங்கச் சிங்கியானது சிவந்திருக்கும். வெள்ளிச்சிங்கியானது வெளுத்த மஞ்சள் நிறமாயிருக்கும். வங்கச்சிங்கியானது சிவந்த மஞ்சள் நிறமாயிருக்கும். எல்லாவகைச் சிங்கியும் கல்லைப்போலக் கட்டி யாகவும் படைப்படையாய்ச் சேர்ந்துமிருக்கும். நீரில் கரையாது. ஆனல், விளாவின வெடியுப்புத் திராவகத்திற் கரையும்; சுவை சப்பென்றிருக்கும். இதற்கு மிருதாரச்சிங்கி, சிங்கிப்பாடாணம், சிங்கி எனப்பல பெயர்களும் உண்டு. கடைச்சரக்கில் மண், தாமிரம், இரும்பு முதலியவை கலந்திருப்பதுமுண்டு. ஆகையால், இரசவாத முறைகளுக்கு உபயோகப்படுத்தும்போது தூய்மை செய்து அல்லது பக்குவப்படுத்தி பயன்படுத்தவேண்டும்.

இதன் வைப்பும் பலவகையாம். ஆயினும், சீர்த்தி வாய்ந்த ஒருமுறையை மாத்திரம் இங்குச் சொல்வோம்.

கருவங்கத்தை உருக்கி, அதில் வங்கச் சிந்தூரத்தை அல்லது, எரித்துச் சாம்பலாக்கின கருவங்கத்தூளைச் சிறுகச் சிறுகத் தூவிக் கொண்டிருந்தால் இவ்விரண்டும் ஒன்ருய்க் கலந்துபோகும். இவை வேறுபாடின்றி ஒரு வடிவானவுடன் ஒரு பாண்டத்தில் இட்டு அதன்மேல் காரமான காடியை ஊற்றவேண்டும். இவ்விதம் செய்வதால், அதில் நன்ருய் எரிந்து அதனுடன் சேர்ந்து கொண்டிருக்கும் பாகமானது பிரிந்து வெளிப்பட்டுப்போம். பின்பு, இதை வால்கோதுமையுடன் சேர்த்து நீர்விட்டு வேக வைக்கவேண்டும். வால்கோதுமையானது உருவமின்றி நன்ருய் வெந்து நைந்துபோன தருணத்தில் இதையெடுத்துக் கழுவி, பற்று முதலியவைகளை நீக்கி, இதற்குச் சமனெடை உப்பைச் சேர்த்து அரைத்து ஒரு பாண்டத்தில் இட்டு நீர் ஊற்றி வைக்கவேண்டும். இந்தப் பாண்டத்தை நாள்தோறும் நன்ருய் அசைத்து வருவ துடன் மூன்று நாளைக்கொருதடவை நீரையும் மாற்றிப் புதிய நீரைவிட்டு வரவும் வேண்டும். இவ்விதம், 4 அல்லது 5 தடவைகள்

செய்தால் நன்றாய்த் தூய்மையாகி அதிலுள்ள பக்குவமாகாத பகுதிகளெல்லாம் வெளிப்பட்டுப் போகும். இதைத்தான் மிருதார் சிங்கி என்பர்.

## 97. மிருதாரசிங்கித் தூய்மை

தேவையான அளவு மிருதாரசிங்கியைச் செம்மறியாட்டுக் கம்பளத் துண்டில் (Woollen cloth) முடிந்து ஒரு பாண்டத்தில் போட்டு கால் அல்லது, காலேயரைக்கால் படி மொச்சைக் கொட்டையையும் போட்டு நீர் வார்த்துக் காய்ச்ச வேண்டும்; இந்த மொச்சைக் கொட்டையானது மைபோல வெந்து, நீரானது கறுத்துவிட்டால் பதமென இறக்கி அந்த நீரையும் கொட்டைகளையும் நீக்கி, வேறு கொட்டைகளையும் நீரையும் முன்போலச் சேர்த்துக் காய்ச்சவேண்டும். பின்பு, முன்போலவே கொட்டைகள் வெந்து நீரானது கறுத்தவுடன் இறக்கி முன்போலவே கொட்டைகளையும் நீரையும் நீக்கிவிடவேண்டும். நீரானது கறுக்காமல் வெண்மையாயிருக்கிற வரையில் கொட்டைகளைச் சேர்த்துக் காய்ச்சவேண்டும். மிருதாரச் சிங்கியானது வெளுத்துப்போகும். இவ்விதம் தூய்மைப்படுத்தி வெண்மையாக்கப்பட்டதற்கு உருதுவில் "மர்த்தக்" அல்லது "மிர்த்தக்" எனப்பெயர். இவ்விதம், செய்யப்பட்டதைத்தான் பின்வரும் சிங்கிநீர் என்னும் பாகங்களிலும், இதர இரசவாத முறைகளிலும் சேர்க்கப்படுகிறது. இன்னம், களிம்பு முதலியவைகளிலும் இதைச் சேர்ப்பதால் எவ்விதக் கெடுதியுமின்றி அதிகக் குணமுண்டாகுமென்பதில் சந்தேகமேயில்லை. செந்தூரஞ் செய்யவும் இதுவே பயன்படுகிறது.

## 98. மிருதாரசிங்கித் தூய்மை (வேறு)

தேவையான அளவு மிருதாரச்சிங்கி, இதற்குச் சமனெடை கறியுப்பு. இவ்விரண்டையும் மைபோலப் பொடித்து ஒரு பாண்டத்திலிட்டு அதன்மேல் நாலங்குலம் நிற்கும்படி நீர்விட்டு நாற்பது நாள் வைக்கவேண்டும். இதை நாள்தோறும் இரண்டு மூன்று தடவை அசைத்து வரவேண்டும். மேலும், வாரத்திற்கொரு தடவை அதிலுள்ள தண்ணீரை நீக்கிப் புதிய நீர்விட்டு மாற்றியும் வரவேண்டும். முடிவாய் நாற்பது நாள்கள் சென்றபின் நீரை இறுத்து விட்டுக் காயவைத்துப் பொடித்து உபயோகித்துக் கொள்ளவேண்டும். இவ்விதம், செய்யப்பட்டதைப் பாகப்படுத்திய சிங்கி எனச் சொல்லப்படும். இதைக் களிம்பு முதலிய பாகங்களில் சேர்ப்பதால் எவ்விதக் கெட்ட குணமும் உண்டாகாமல் சிறந்த குணத்தைக் காணலாம்.

## 99. சிங்கி நீர்

(அ) முன்சொன்னபடி தூய்மை செய்யப்பட்ட மிருதார சிங்கி 26 பலம் (930 கிராம்), இதனை மைபோலப் பொடித்து மெல்லிய துணியால் சல்லித்து, ஒரு பாண்டத்தில் விட்டு 96 பலம் (3360 கிராம்) வீரியமான காடியைவிட்டுக் கலந்து அடுப்பேற்றித் தீயை மெதுவாய் எரித்து வரவேண்டும். பாண்டத்திலுள்ள நீர் அரைவாசி சுண்டினவுடன் கீழிறக்கி, அசையாமல் ஓரிடத்தில் வைத்து நன்ருய் ஆறினவுடன் அதிலுள்ள தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும். அல்லது, மெல்லிய சல்லாத்துண்டில் வடி கட்டிக் கொள்ளலாம். மறுபடியும் இறுத்த அல்லது, வடிகட்டினத் தெளிவை அசையாமல் வைத்து இதிலுள்ள தெளிவையும் இறுத்துக்கொள்ளவேண்டும். இவ்விதமே முதல் தடவை இறுத்த அல்லது, வடிகட்டின தெளிவையே மீண்டும் மீண்டும் 5 அல்லது, 7 தடவை தெளிய வைத்து இறுத்து ஒரு பீங்கான் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும். இந்தத் தெளிவிற்குச் சிங்கிக் காடி எனப் பெயர். மேற்கண்ட அளவுப்படி சிங்கியையும், காடியையும் அதிக அளவாய்ச் சேர்த்துச் செய்து கொள்ளவேண்டும்.

(ஆ) பாகப்படுத்தின பூநீர் 26 பலம், அதிவீரியமான காடி 96 பலம். இவை இரண்டையும் ஒரு பாண்டத்தில் இட்டு நன்ருய்க் கலக்கி அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து அரைப்பாகம் நீர் சுண்டியவுடன் கீழிறக்கி அசையாமல் ஓரிடத்தில் இரண்டொரு நாள் வைத்துத் தெளிவிறுத்துக் கொள்ளவேண்டும். பின்பு, இந்தத் தெளிவையே மறுபடியும் அசையாமல் வைத்துத் தெளிவை இறுத்துக்கொள்ளவேண்டும். இவ்விதமே முதல் தடவை இறுத்த தெளிவையே மீண்டும் மீண்டும் 5 அல்லது 6 தடவைகள் தெளிவிறுத்து ஒரு பீங்கான் பாண்டத்தில் பத்திரப்படுத்த வேண்டும். இந்தத் தெளிவிற்குப் பூநீர்க் காடியெனப்பெயர். இதையும் இந்த அளவுப்படி அதிகமாகச் செய்துகொள்ள வேண்டும்.

(இ) முன்னர், (அ)வில் சொன்னபடி தயாரித்து வைத்திருக்கும் மிருதாரச்சிங்கி காடித் தெளிவு மூன்று பங்கும் (ஆ)வில் சொன்னபடி தயாரித்து வைத்திருக்கும் பூநீர் காடி ஒரு பங்கும் எடுத்து இரண்டையும் ஒன்ருய்க் கலக்கிக் கொள்ளவேண்டும். ஆனுல், மேற்கூறிய பூநீர்க் காடியை மிருதாரசிங்கி காடியில் விட்டால் எல்லாம் உடனே கறுத்துப்போகும். மிருதாரசிங்கிக் காடியைப்பூநீர்க்காடியில் விட்டால் எல்லாம் வெளுத்துப்போகும். ஆகையால், எவ்விதமாயினும் இரண்டையும் ஒன்ருய்க் கலக்கி

நன்ருய்க் கலந்து 'ஒரே வடிவமாகுமாறு அதிகநேரம் கலக்க வேண்டும். பின்பு, அப்படியே வைத்து விட்டால் பாண்டத்தின் அடியில் தயிரைப் போன்ற வண்டலானது படிந்திருக்கும். அதன் பின்பு பாண்டத்திலுள்ள நீரை மேலாக இறுத்து நீக்கிவிட வேண்டும். நீர் எல்லாவற்றையும் நீக்கிவிட்டு, அடியில் படிந் திருக்கும் வண்டலே வெய்யிலில் வைத்து உலர்த்தி எடுத்துக் கொள்ளவேண்டும். இதற்குச் சிங்கி காரபற்பம் என்று பெயர்.

(ஈ) மேற்படி சிங்கிக் காரபற்பம் 4 பங்கு, குஞ்சு பொறித்த கோழிமுட்டைச் *சுண்ணம் அல்லது பற்பம் அல்லது சூரணம் 1 பங்கு, நவாச்சாரப் பதங்கம் 1 பங்கு இம்மூன்றையும் ஒன்ருய்க் கலந்து முன் சொல்லப்பட்டிருக்கும் வகைகளுள் எந்தமுறைப் படியேனும் ஒருவகையாய் நீராக்கிக் கொள்ளவேண்டும். இந்த நீருக்கு வாத மறைமொழியில் (குழூக்குறி) சிங்கி நீர் என்றும், சிங்கி குரு என்றும் அரபியில் "லுப்னுல்கத்ரு" என்றும் பெயர்.

தாளகம், கெந்தகம், பாதரசம் முதலியவைகளுள் ஒன்றைப் பதம் செய்து எடுத்து இந்த நீர் விட்டு, 4 சாமமரைத்து இலகு வான தீயெரித்துத் தீயில் வைத்துச் சுட்ட கண்ணுடிக் குப்பியில் புகையாமல் இந்தநீர் தெளித்து வறுத்தெடுக்கவேண்டும். பின்பு, இதில் கொஞ்சம் எடுத்துக் காய்ச்சின தாமிரத் தகட்டின்மீது போட்டுப் பார்த்தால், புகையாமல் தகட்டில் ஊடுருவிச் சென்ருல் பக்குவமானதாம், இல்லாவிட்டால் முன்போலவே முன் சொன்ன நீர் விட்டரைத்து முன்செய்த பக்குவப்படியே முன்கூறிய நீர் தெளித்து வறுத்தெடுத்து முன்போலவே சோதனை செய்து பார்க்க வேண்டும். இவ்விதம், ஆய்வுக்கு ஒத்து வருகிற வரையில் செய்து அவரவர் விருப்பம்போல் அனேக முறைகளைச் செய்து முடிக்க லாம். இம் முறையைச் சற்று நிதானமாகவும் புத்திக் கூர்மை யுடனும் செய்தால் இஃது ஒன்றே போதுமெனச் சொல்லாம், அறிவாளிகளுக்கு இதன் சிறப்பான முறைகள் தெரியுமாகையால் அவர்களிடம் அவைகளைத் தெரிந்து கொள்ளலாம்.

## 100. சிங்கிநீர் (வேறு)

(அ) தூய்மைப்படுத்திய மிருதார்சிங்கி 26 பலம் (930 கிராம்) இதை மைபோலப் பொடித்து மெல்லிய துணியில் சல்லித்து ஒரு பாண்டத்தில் இட்டு, அதில் 96 பலம் (3360 கிராம்) அதிககாரமான காடியை விட்டுக் கலக்கி அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்துச் சுண்ட வைக்கவேண்டும். முன்றில் இரண்டு பங்கு சுண்டினவுடன் இறக்கி ஆறவைத்து மெல்லிய துணியில் வடிகட்டிக் கொள்ளவேண்டும்,

* இம்முறைகள் பின்னர் எழுதப்படும்.

வடிகட்டின நீர் 4 பங்குக்கு, இதற்கடுத்த முன்பாகத்திற் சொல்லப் பட்டிருக்கும் சிங்கிக்காடி நீர் 1 பங்கு ஆகச்சேர்த்து மறுபடியும் அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து முன்போலச் சிவந்தவுடன் இறக்கி ஆற வைத்து மெல்லிய சீலையில் வடிகட்டிக் கொள்ள வேண்டும். இந்த நீர் 3 பங்கு இந்தப் பாகத்திற்கு முன் பாகத்தில் (ஆ)வில் சொல்லப்பட்டிருக்கிற பூநீர்க்காடி 1 பங்கு. இவ்விரண்டையும் சேர்த்து இரண்டும் ஏகமாய்க் கலக்கும்படி நன்ருய்க் கலக்கி வைத்தால் அடியில் தயிர்போன்ற வண்டல் படிந்து உறைந்துபோகும். அதன் மேலுள்ள நீரையெல்லாம் சிறுகச் சிறுக மேலாக இறுத்து, நீரையெல்லாம் வடிகட்டின வுடன் பாண்டத்தின் கீழ் உறைந்து நிற்கும் வண்டலை வெய்யிலில் உலர்த்தி முன் சொன்ன முறைகளில் ஒரு விதமாய் இந்தச் சுண்ணத்தைச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும். இதற்கும் சிங்கி நீரென்றே பெயர். அந்த நீரானது இரசத்தைப் போல வெண்மை யாயிருக்கும்.

உயர்ந்த உலாந்தா இலிங்கத்தைக் கல்வத்திலிட்டு மேற்படி செயநீரைச் சிறுக சிறுகவிட்டு மூன்றுநாளரைத்து நெருப்பில் வெம்மை தாங்கும்படி தயாரித்த கண்ணுடிக் குப்பியில் வைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து முன்கூறிய செயநீரையே சிறுகசிறுகத் தெளித்து வறுக்கவேண்டும். இவ்விதம், ஓர் இரவும் பகலும் செய்து 1 நாள் ஆறவிட்டெடுத்துக் கொள்ளவேண்டும். இது சரியாய் முடிந்ததா என்று ஆய்வு செய்யும் வகையாவது நன்ருய் தூய்மை செய்யப்பட்ட தாமிரத் தகட்டின்மீது இதில் கொஞ்சமெடுத்து நீரில் இழைத்துப் பூசிநெருப்பில் காய்ச்சி எடுத்தால், அந்தத் தகடானது உள்ளும்புறமும் ஒரே தன்மையாய் ஊடுருவிப் பாய்ந்து நிறமற்று இருக்கவேண்டும். அல்லது, உள்ளும் புறமும் வெளுத்துப் போக வேண்டும். இவ்விரு வகையிலும் ஒரு வகையாக மாருவிட்டால், இதனையே மறுபடியும் கலவத்திலிட்டு முன்கூறிய செயநீர்விட்டு முன் போலவே அடுப்பில் வைத்துப் பக்குவப்படுத்தி முன்போலவே ஆய்வு செய்யவேண்டும். இப் பொழுது ஆய்வுக்கு ஒத்திராவிட்டால் மூன்ருந்தடவையும் செய்ய பக்குவமாகிவிடுவது திண்ணம். ஆனுல், பாகந்தவருமல் பயிற்சி முதிர்ச்சியால் முறைப்படியும் கவனத்துடனும் செய்து வெற்றி பெறவேண்டும்.

## 101. சிங்கிநீர் வேறு

தூய்மைசெய்து வெண்மையாகச்செய்த மிருதார்சிங்கி 13பலம் (455 கிராம்)இதை மைபோலப் பொடித்து மெல்லிய துணியில் வடி கட்டி ஒரு மண்பானையில் இட்டு அதில் 6½ பலம் பாகப்படுத்தின

மேல்நாட்டு திராட்சைக் காடித் நீரையூற்றி அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து, இரண்டு மூன்று கொதிவந்த பின்பு இறக்கி ஆற வைத்து வாய்குறுகின கண்ணாடிக் குப்பியில் விட்டு, வாய்க்கு மூடியிட்டுக் குதிரை மலத்தால் தயாரித்த செயநீர்க் குழியில் வைத்துச் செயநீராகச் செய்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு வாரமும் குழியிலுள்ள லத்திகளைமாற்றிப் புதியலத்திகளை நிறைத்து வர வேண்டும். இவ்விதம் செய்ய, 5 அல்லது 6 வாரங்களில் செயநீராகிவிடும். அவ்விதம், இந்த நீர் சித்தமானதற்கு ஆய்வாவது: இது மஞ்சள் கலந்த நீரைப்போல இருத்தல்; இரச நீரைப்போல சிவந்திருத்தல்; இந்த நீரை துருசுத் தூளுடன் சேர்க்கில் சுத்தப் பாலைப் போல வெண்மையாயிருத்தல்; இவை முதலியவைகளேயாகும், இதையும் கன்னிகைப்பாலென்றே சொல்லப்படுகிறது.

## 102. காடித்தீநீர்ப் பக்குவம்

காடியை வாலையிலிட்டுப் பாகப்படி தீநீர் இறக்கி கொள்ள வேண்டும். இந்தத் தீநீர் பத்துப்பங்கு; கறியுப்பு 2 பங்கு படிக்காரம், பாகப்படுத்தின பூநீர் இவை 1 வகைக்கு 1 பங்கு இவை எல்லாவற்றையும் பொடித்து மேற்கூறிய காடித் தீநீரில் இட்டு 7 நாள் வெய்யிலில் வைத்து எட்டாம் நாள் தெளிவை இறுத்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவும்; இதுவே காடித் தீநீர் பக்குவமாம். இந்த நீரை காடியைச் சேர்க்கச் சொல்லும் முறைகளில் அதற்குப் பதிலாகச் சேர்த்தால் சிறப்பான குணமுண்டாகும்.

**குறிப்பு** :— மேற்கண்ட மூவகைச் சிங்கி நீர்களும் வெகு அருமையான முறைகள். இவற்றைக் கையாள்பவர்களுக்கு இதன் உண்மை விளங்காமற் போகாது.

இந்தச் செயநீர்களால் இலிங்கத்தைச் சுருக்கிட, லிங்கம் கட்டும்; கட்டின லிங்கத்தைச் சுருக்கிட, அது மெழுகாகும். மேற்கண்ட முறைப்படி மற்ற சரக்குகளையும் பதங்கமெடுத்து இந்தச் செயநீர் விட்டரைத்துத் தீயிற் சுட்ட கண்ணாடிக் குப்பியில் வறுத்து எல்லாவிதச் சரக்குகளையும் நெருப்பிற் கோடாமற் கட்டிக்கொள்ளலாம். எல்லாவற்றிற்கும் புத்தித் தெளிவும் கைப்பழக்கமும்இன்றியமையாதனவாகும்.

மேற்கண்ட மூவகை முறைகளிலும் மிருதாரசிங்கி, காடி முதலியவைகள் அளவுப்படி தேவையான அளவு 4 அல்லது 5 பங்கு எடுத்துச் செய்து கொள்ளவேண்டும். மேலெழுதப்பட்டிருப்பதுபோல் ஓர் அளவைச் செய்து கொண்டால் பாகம் அரை குறையாய் முடியும். ஆகையால் உழைப்பு வீணாகும்.

## 103. எளிய சிங்கிநீர்

படிக்காரம் 4 பங்கு; மிருதாரசிங்கி 6 பங்கு; திராட்சைக் காடி 18 பங்கு, ஆற்றுநீர் 25 பங்கு, முன்னுள்ள இரண்டு சரக்குகளையும் மைபோலப் பொடித்துத் துணியால் சல்லித்துக் காடியில்போட்டு நன்றாய்க் கலக்கிக் கலந்து பின்பு நீரையும் சேர்த்து எல்லாவற்றை யும் மண்பாண்டத்தில் ஊற்றி அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து அரைப்பாகம் சுண்டினவுடன் இறக்கி மெல்லிய துணியால் வடிக்கட்டிக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இந்த நீரை மேற்பூச்சாக பயன்படுத்தி வருவதால், தளர்ந்த உறுப்புகள் இறுகிச் சிறுத்துப்போம், மேகப்படைகள், மேகப் புள்ளிகள் முதலியவை தீரும்.

## 104. அண்டநீர்

குஞ்சு பொரித்த கோழிமுட்டையின் ஓடுகளை அப்பளக்காரத் தைக் கரைத்த நீரிலிட்டு வேகவைத்து ஓடுகளில் ஒட்டிக்கொண் டிருக்கும் சவ்வுகளைப் போக்கி வேறு நீர்விட்டு நன்றாய்க் கழுவிச் சுத்தி செய்து வெய்யிலில் உலர்த்தி எடுத்துத் தூள்செய்து துணி யால் சல்லித்துக் கொள்ளவேண்டும். இந்தத் தூள் ஒரு பங்கு; நவாச்சாரம் அரைப்பங்கு; இந்துப்புக் கால்பங்கு; இம் மூன்றையும் கலவத்திலிட்டு முன் சொல்லப்பட்ட சார வீரிய நீரைவிட்டு 4 சாமமரைத்து ஒரு கண்ணாடிக் குப்பியில் ஊற்றிச் செயநீர்க் குழியில் முறைப்படி வைத்துச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்த அண்டநீரானது இனி சொல்லப்படும் இரசவாத முறை களிலும் சில சரக்குகளைக் கட்டவும் பயன்படுகிறது. முட்டைத் தோலைச் சுண்ணமாக்கி அல்லது, பற்பமாக்கிச் செய்யப்படும் நீரானது அதிக காரமாகவும் சரக்குகளைக் கட்டுவதில் அதிக பயன்படத்தக்கதாகவும் இருக்கிறபடியால், அண்ட ஓட்டைச் சுண்ணம் அல்லது, பற்பமாக்கும் சில முறைகளையும் இங் கெழுதுவோம்.

## 105. அண்டச் சுண்ணம்

குஞ்சு பொறித்த முட்டையோடுகளை மேற்கண்டபடி தூய்மை செய்து உலர்த்திப் பொடித்தத் தூள் 4 பலம் (140 கிராம்); கடல்நுரைத் தூள் 4 பலம் (140 கிராம்). இவ்விரண்டையும் சேர்த்துக் கலவத்தில் 1 மணி நேரமரைத்துப் பின்பு ஒரு மூசையி லிட்டு, வாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்துலர்த்தவேண்டும்.

முன்பே மூசையின்மீதும் 3 சீலைமண் செய்துலர்த்திக் கொள்ளவும் வேண்டும். மூசையில் மருந்தானது அரைவாசிதான் இருக்க வேண்டும்.

பின்பு மூசையை உலையில் வைத்து இரண்டு துருத்திகளால், 6 மணிநேரம் ஊதவேண்டும். இதற்கிடையில் மூசைக்கு எவ்விதத் தீங்கும் நேரிடாமல் மூசையைத் திருப்பித் திருப்பி வைத்து வரவும் வேண்டும். இதற்காக மேல்நாட்டு மூசையானல் நல்ல தாம்; அல்லது, வயிர மூசையை நாம் செய்துகொள்ளவேண்டும். மேற்கண்டபடி ஊதியெடுத்து மூசையைப் பிரிக்காமல் அப்படியே ஆறவைத்து மறுநாளெடுத்து ஒரு தட்டைப் பீங்கானில் இட்டு ஓர் இரவு பனியில் வைத்தெடுக்க மலர்ந்து சுண்ணமாகும்; இதனை உள்ளுக்கு மருந்தாகவும் பயன்படுத்தலாம். மேற்கண்டபடி செயநீராக்கிக் கொண்டால் அனேக மருத்துவச் செயல்களுக்குமாகும். ஆங்காங்கு அம் முறைகளும் சொல்லப்படும்.

## 106. அண்டச் சுண்ணம் (வேறு)

குஞ்சு பொறித்த கோழிமுட்டையோட்டை மேற்சொன்ன படி தூய்மைசெய்து உலர்த்திப் பொடித்து ஒரு மண் கலயத்தி லிட்டு வாய்க்குச்சில்லிட்டு வலுவாய்ச் சீலைமண் செய்து நெருப்பில் குறைந்த அளவு ஒரு நாள் புதைத்து வைக்கவும். பின்பு, ஆறவிட்டு எடுத்துப் பொடித்துக் கொள்வதேயாம்.

## 107. அண்டச் சுண்ணம் (வேறு)

நான்கு அல்லது ஐந்து பருமனுன எலுமிச்சம் பழங்களைச் சாறு பிழிந்து வடிக்கட்டித் திப்பி நீக்கி, அதில் இரண்டு அல்லது ஒரு வராகனெடை இஞ்சிச்சாற்றைவிட்டுக் கலந்து, இரண்டு சாமநேரம் வெய்யிலில் வைத்துப் பின்பு தூய்மை செய்யப் பட்ட முட்டையோட்டைப் போட்டுப் புரட்டிப் பிசைந்து சிறிது ஈரம் உலரும்படி செய்து ஒரு பெரிய மூசையில் இட்டு வாய்க்குச் சில்லிட்டு 5 சீலைமண் செய்து, முன்பே மூசைமீதும், 3 சீலைமண் செய்து காயவைத்து, உலையில் வைத்து இரண்டு சாமம் இரட்டைத் துருத்தியால் ஊதவேண்டும். ஊதும்போது மூசை சேதமாகாமல் மூசையைத் திருப்பித் திருப்பி வைத்துவர வேண்டும். நன்ருய் ஆறின பின்பு ஒரு பீங்கான் பாண்டத்தில் இட்டுக் காற்றில் ஆற வைத்துப் பின்பு எடுத்துப் பொடித்துக் கண்ணுடிக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும்.

இதை மேற்கண்டபடி செயநீராகச் செய்து கொள்ளலாம். தக்க சார்புப் பொருள்களுடன் உள்ளுக்குப் பயன்படுத்தினுல் பற்பலவித வாயுகள், பிரமேகங்கள் தீரும்.

## 108. அண்டச் சுண்ணம் (வேறு)

குஞ்சு பொறித்த முட்டையோடுகளை, முன் சொன்ன படி தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். தேவையான அளவு கலவத்திலிட்டு வெள்ளெருக்கம்பாலை அல்லது, நாட்டெருக்கம்பாலை விட்டு நான்கு சாமமரைத்து வில்லை செய்து காயவைத்து அகலில் வைத்து மேலகல்மூடி மூன்று சீலைமண் செய்து *கெசபுடம் இட்டு ஆறவிட்டு எடுக்க, சுத்த வெண்மையான சுண்ணமாகும். இரசவாதத் தொழிலுக்கு இம்முறை சிறந்தது கடினமான அனேக நோய்களுக்குமாகும்

## 109. அண்டச் சுண்ணம் (வேறு)

சவ்வீரம், இரசகற்பூரம், வெடியுப்பு, பூநீர் இந் நான்கும் வகைக்கு 1¼ வராகனெடை. இவற்றைப் பொடித்து, 50 எலுமிச்சம்பழங்களைச் சாறு பிழிந்து அதில் இட்டுக் கலக்கி அதில், 10 கோழிமுட்டைகளை முழுமையாய் போட்டு வெய்யிலில் வைத்துப் புரட்டிப் புரட்டிக் கொடுத்துவரவேண்டும். சாறெல்லாம் சுண்டினபின் கலவத்தில் இட்டு அரைத்து, குப்பைமேனிச்சாற்றைச் சிறுகச் சிறுக ஊற்றி 4 சாமமரைத்து வில்லை தட்டிக் காயவைத்து நன்ருயுலர்ந்த பின்பு அகலிலிட்டு, 5 சீலை மண் செய்து, பத்துப் பலமுள்ள, 50 விராட்டியில் புடமிட்டாற விட்டெடுத்து மறுபடியும் முன்போலக் குப்பைமேனிச் சாற்றை ஊற்றி 4 சாமமரைத்து முன்போலவே இன்னொரு புடமும் போட்டு ஆறவைத்துப் பொடித்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இதன் பின்பு பத்துக் கோழிமுட்டைகளைத் துள் செய்து அவற்றில் உள்ள வெண்கருவை மட்டும் சிறிது சிறிதாக விட்டு, ஒவ்வொன்றிலும் முன்சொன்ன சுண்ணத்தை நான்கு நான்கு குன்றிமணியெடை போட்டு, ஒரு சிறு சட்டியில்வைத்து முட்டைகள் முழுகும்படியாகக் குப்பைமேனிச் சாற்றை விட்டு, மேல்சட்டிமூடி 5 சீலைமண் செய்து கெசபுடம் போட்டு ஆறவைத்தெடுக்க திறமான சுண்ணமாகும்.

இது வாதம், மருத்துவம் என்னும் இரு கூறுகளுக்குமாகும். அறிஞர்கள் இதன் சிறப்பான முறைகளைத் தெரிந்துசெய்வார்கள்.

---

* இரண்டு முழம் கனமுள்ள அளவுக்கு ஆயிரம் விராட்டிகளை வைத்தெரிக்கும் புடம்.

## 110. அண்டச் சுண்ணம் (வேறு)

தேவையான அளவு முன்பாகப்படி தூய்மை செய்யப்பட்ட முட்டையோடுகளை ஒரு பாண்டத்தில் இட்டு, அதில் அவை முழுகும்படியாக நஞ்சறுப்பான் அல்லது விஷப்பாலை என்னும் பூண்டின் சமூலச்சாற்றைவிட்டு நன்ருய்ப் புரட்டிக் கொடுத்து 4 அல்லது 5 நாள் வைத்துக் கல்வத்திலிட்டு முன்கூறிய சாற்றையே சிறுகச் சிறுக ஊற்றி, 8 சாமம் அரைக்கவேண்டும். இதனை எத்தனை சாமம் அதிகமாய் அரைக்கின்ருேமோ அத்தனையும் சிறந்ததாகும். பின்பு, வில்லை தட்டிக் காயவைத்து அகலில் வைத்து மேலகல்மூடி சீலைமண் செய்து உலர்த்திக் கெசபுடம் இட்டாறவைத்தெடுக்கச் சுண்ணமாகும். தேவையானுல், இன்னொரு தடவையும் முன் சாற்றைவிட்டரைத்து முன்போலப் புடம் போடக் கடுங்கார முண்டாகும்.

இது வாதம். மருத்துவம் என்னும் இருவகை முறைகளுக்குமாம்; இந்தச் சுண்ணத்தைக் கொஞ்சமெடுத்து நீர் விட்டுக்குழைத்து மெல்லிய துணியில் தடவி இரவில் நோயால் பெருத்திருக்கும் அண்டத்தின்மீது போட்டுக்கட்டி வரவேண்டும்; இவ்விதம் சில தடவைகள் செய்யின் எவ்வித அண்டநோயும் நாளடைவிற் கரைந்து இயல்பான தன்மையில் சுருங்கிவிடும். மேலும் இழந்துபோன ஆண்தன்மை முன்போலுண்டாகும்.

மேற்கண்ட முறைகளுள் பல மிகவும் பயிற்சியால் வெற்றி கண்டதும், பற்பல கொடிய நோய்களைக் கண்டிப்பதில் சிறந்தவைகளுமாம். அவை, வெகுகாலமாய் அதிக மறைவாக வைக்கப் பட்டவை. இவற்றைப் பயன்படுத்தும் நண்பர்கள் அல்லது, பயிற்சியில் வெற்றிகண்ட மகான்கள் இவற்றின் அருமையைத் தெரிந்து கொள்வார்கள்.

**குறிப்பு** :— மேற்கூறப் பெற்றச் சுண்ணத்தை தக்க துணை மருந்துகளுடன் உட்கொண்டால் இரைப்பு நோய் (Asthma) குணமடையும்.

### கந்தகம்

கந்தகத்தை நீராக்கும் முறைகளைச் சொல்லுமுன், கந்தகத்தின் பிறப்பு முதலியவைகளைத் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது. ஆகையால், அதைப்பற்றி முன்னர்ச் சிறிதளவு தெரிந்துகொள்வோம்.

கந்தகமானது இயல்பாய் தோன்றும் (சைதன்ய) பொருள்களில் முதன்மையானதென நாம் முன்னமே அறிந்திருக்கின்ருேம். மேலும், கந்தகமானது பல உலோகங்களோடு சேர்ந்துபோவதால்

இதை ஒரு முதன்மையான இரசவாத கர்த்தாவெனவும் சொல்லப் படுகிறது. பண்டைக் காலந் தொட்டு, தமிழர்கள், இந்துக்கள், அரேபியர்கள் முதலியவர்களால் இது பயன்படுத்தப்பட்டு வருகிறது. முட்டையின் வெள்ளைக்கரு, வெள்ளுள்ளி, வெங்காயம் முதலிய பொருள்களில் கந்தகம் இணைந்திருக்கிறது. ஆனல், பெரும்பானமையாய் இது இரும்பு, செம்பு, ஈயம், இரசம் முதலிய உலோகங்களோடு சேர்ந்திருக்கின்றது. இப்படிச் சேர்ந்திருப்பதை வறுத்து கந்தகத்தை எடுத்துக் கொள்ளப்படும்; இன்னம், இது சில வாயுவோடும், உப்புகளுடனும், சில தாதுக்களுடனும், சில தாது சம்பந்தமான நீருடனும் கலந்திருக்கிறது. தூய்மையாக இயல்பாகத் தோன்றிய இந்தப் பொருளானது எரிமலைச் சாரல் களிலும் பூமியில் அனேக இடங்களிலும் காணப்படும். கடைச் சரக்கானது முக்கியமாய், சிசிலி, இத்தாலி, முதலிய நாடுகளி லிருந்து கொண்டுவரப்படுகிறது. கடையில் விற்கப்படும் கந்தகத் தில் அயம், நாகம், பாடாணம், சுண்ணும்பு முதலிய குற்றங்கள் இருக்கின்றன. ஆகையால், இதை உருக்கியாவது வாலையிலிட்டு இறக்கியாவது, பதப்படுத்தியாவது தூய்மை செய்து கொள்ள வேண்டும். கோழித்தலைகந்தகம், அமரசிலைக்கந்தகம், காட்டுக் கந்தகம், நெல்லிக்காய்க்கந்தகம், வாண அல்லது, குழாய்க் கந்தகம் எனப் பலவகைப்படும். ஆனல், சித்த, யூனனி இரசவாத மருத்து வர்கள், சிவப்புக் கந்தகம், பசுஞ் சாயலான பீத கந்தகம், வெள்ளை கந்தகம், ஊதாக் கந்தகம் என நான்கு வகைகளெனச் சொல் கிறர்கள். சிவப்புக் கந்தகமானது பிரகாசமுள்ளதாகவும், தன் சுரங்கத்தில் இராக் காலங்களில் தீபத்தைப் போன்ற ஒளியை உடையதாய் தனக்கடுத்திருக்கும் சுரங்கங்களிலும் வெளிச்சத்தை உண்டாக்கும் தன்மையுடையதாம்.

அதன் கனிகள் முக்கியமாய்ப் பார்சி நாட்டில் அம்மான் தீவில் இருக்கின்றன. நவாப் முஅதமுதுல் முலூக் ஸையத் உல்விகான் என்னும், மகாபண்டிதர் தன்னுடைய நூலில் சொல்கின்றர் "அம்மான் தீவிலுள்ள சில பாகங்களில் சிவப்புக் கந்தகத்தைப் பூமியிலிருந்து வெட்டியெடுத்ததை நான் நேரே பார்த்தேன்" என்று. ஆனல், இவரது தலை மாணுக்கர் சிவப்புக் கந்தகத்தைத் தான் பார்த்ததேயில்லையென்கிறர். ஜாலிநியூஸ் பண்டிதர் சொல்கிறதாவது: சிவப்புக் கந்தகம் மஞ்சள் கந்தகம், வெள்ளைக் கந்தகம், கறுப்புக் கந்தகம் என்ற நான்கு வகைகளென்பன நிச்சயமென்பதே. ஆனல், அனதாகி என்னும் பண்டிதர், சிவப்புக் கந்தகமானது பொன் சுரங்கங்களில் மாத்திரங் கிடைக்கு மென்கிறர். இவர்களெல்லாம் இவ்விதம் பலவகையாய்ச் சொன்னுலும் இராசவாதிகளுள் பெரும்பாலோர் கருத்தாவது.

சிவப்பு, வெள்ளை, கறுப்பு என்ற மூவகைக் கந்தகங்களையும் பிறவிச்சரக்கான மஞ்சள் கந்தகத்தால் வைப்பாகச் செய்யலா மென்பது. ஆகைடால், மஞ்சள் கந்தகம் பிறவியென்பதில் எவ்வித ஐயமுமில்லை என்பதுமேயாம்.

கந்தகமானது ஒரே மூலப்பொருளின் தன்மையைக் கொண்ட ஒப்பற்றபொருள் என்பதில் யாருக்கும் மறுப்பில்லை. கந்தகமானது, இயல்பாய் மங்கலான மஞ்சள் நிறமுள்ளது. இதைப் பாகப் படுத்துவதால் சிவப்பு, வெள்ளை, கறுப்பு முதலிய நிறமுடையவை களாகச் செய்யலாம். அல்லது, இதை எரித்து எடுக்கும்போது படும் வெம்மைக்குத் தக்கபடி நிறம் வேறுபடுவதுமுண்டு. இதற்கு வாசனையும் சுவையுமில்லை. ஆனல், இதைத் தேய்த்தால் ஒருவித கெட்ட நாற்றம் உண்டாகும். கைக்கு நறநறவென்றிருக்கும். இது நீரில் கரையாது; கற்பூரத்தைலம், கொழுப்பு, மண் ணெண்ணெய், சாராயம் முதலியவைகளிற் சொற்பமாய்க் கரையும்.

இது எளிதில் நெருப்பு பற்றத்தக்கது. 300° டிகிரிக்குக் காற்றுப்பட இஃது எரிக்கப்பட்டால் பற்றி எரியும். அதன் சுட ரானது மங்கலான நீல நிறமாயிருக்கும். இன்னம், இஃது இவ் வளவைப் பார்க்கிலும் அதிகமாய் எரிக்கப்பட்டால், ஊதா நிற மாக எரியும். 180° டிக்ரிக்கு எரிக்கப்பட்டால் அது ஆவியா யெழும்ப ஆரம்பிக்கும். 216° டிகிரிக்கு எரிக்கப்பட்டால் இளகும். 226° முதல் 280° டிகிரிக்கு எரிக்கப்பட்டால் முற்றும் நீர் வடிவாகி இலேசான மஞ்சள் நிறம் உடையதாகும். 320° டிகிரி யானல் உருக்கின பாண்டத்தைத் தலைகீழாகக் கவிழ்த்தாலும் அது சொட்டாத விதமாக நன்ருய் இறுகிச் சிவந்துபோகும்.

இந்த நிலையில் அது தண்ணீரில் போடப்பட்டால், சற்று நேரம் மெழுகைப்போல நைப்பாயிருக்கும்; ஆகையால், முத்திரை களை அழுத்திப் பதித்துக் கொள்ளவேண்டும். இன்னம், இதை இந்த நிலையில் நெகிழ்ந்து உரழ்ச்சியடையத்தக்க கம்பிகளாகவும் இழுக்கலாம். அதன் கொதி நிலையாகிய 482° டிகிரியிலிருந்து, 600° டிகிரி வரையில் எரித்தால் இலேசான நீர் வடிவத்தை அடைந்து விடுகிறது. இத் தருணத்தில் காற்றை வெளிப்படுத் தினல் எவ்வித மாறுதலுமின்றிக் கமலாப்பழம் நிறமான பக்கு வத்தை அடைந்துவிடும். இதை குளிர ஆறவைத்தெடுத்தால், முன் சொல்லப்பட்ட மாறுதல்களைப் பழையபடியடையத்தக்க தாய்விடும்.

## கந்தகமும் இரசவாதமும்

நாம் முன்சொல்லி இருப்பதுபோல இரசவாதமென்பது தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகத்தைப்போல் மாற்றிக் காண்பிக்கும் வித்தையென்று பொருளாகும். ஆகையால், தாழ்ந்த உலோகமான வெள்வங்கத்தை அல்லது வெள்ளியை உயர்ந்த உலோகமான பொன்னைப்போலச் செய்து காண்பிக்கவேண்டுமானால், மேற்கண்ட வங்கத்தை அல்லது வெள்ளியை அவ்விதம் நிறம் பெறும்படியான ஒரு மருந்தைத் தெரிந்துக் கொள்வது இன்றியமையாதது. இதற்காக நாம் முன்சொல்லியிருப்பது போலவே ஆழ்ந்த சிந்தனை, அதிகப் பயிற்சி, தேர்ந்த கைப் பழக்கம், விடாமுயற்சி முதலியவைகள் வேண்டும். ஏனெனில், நிறமேற்றப்பட்ட பொருளை நெருப்பின்மீது வைத்தால், ஏற்றின நிறமானது மாறிப்போகாமல் அல்லது ஓடிப்பாகாமல் அல்லது கெட்டுப் போகாமலிருக்கவேண்டும். இன்னம், அதில் பிறவிப் பொன்னிற்குள்ள அமைப்புகள் அல்லது குணங்களெல்லாம் உண்டாகிவிடவும் வேண்டும்; ஆகையால், அவ்வித மருந்திற்குப் பின் காணும் ஐந்து வகையான அமைப்புகள் இன்றியமையாது தேவையாம். அவையாவன :

(1) மேற்கண்ட வங்கத்தை அல்லது வெள்ளியை நிறமேற்றல்; (2) அதை நிறமேற்றிய பின், நிறமானது ஓடாமல் அல்லது மறைந்து போகாமல் நிலைத்து நிற்றல்; (3) வங்கத்தோடு அல்லது வெள்ளியோடு சேர்ந்துருகும் குணம்; (4) அவ்விதம் உருகும்போது அதினின்றும் நீங்கி அல்லது ஓடிப்போகும் குணமில்லாமை; (5) நிறமேற்றப்பட்ட பொருளுக்குப் பிறவிப் பொன்னின் அமைப்புகளை உண்டாக்கும் ஆற்றல் ஆகியவைகளேயாகும். இக் குணங்களையுடைய மருந்தைக் கண்டுபிடிப்பது அல்லது செய்து முடிப்பது இலகுவான செயலன்று. இவ்விதம், ஒன்றையொன்றாக மாற்றிக் காண்பிப்பதைத்தான் பார்சி மொழியில் கீமியா அல்லது சித்து, வித்தையென்று சொல்லப்படுகிறது.

இரசவாதத் தொழிலிற்கு முக்கியமானவை. வெள்ளை, மஞ்சள், என்ற இருவகை நிறங்களேயாகும். இவ்விருவகை நிறங்களால்தான் எல்லாவகை தொடர்புகளுமுண்டாகின்றன. ஆகையால், இவற்றின் மூலமான பற்றுச் செய்திகளைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டியது மிகவும் முக்கியம். இரசவாதத்தின் தொடர்பாய் அனேகவகை நிறங்களிருந்தபோதிலும், அவை எல்லாவற்றிற்கும் ஆதியில் தோன்றியவையும் தலையாயவையு

மானவை மேற்கண்ட வெள்ளை, மஞ்சள் என்ற இருவகை நிறங்களேயாம். ஆகையால், இவ்விரண்டுவகை நிறங்களை உண்டாக்க பாதரசம், கெந்தகம் என்ற இருவகை பொருள்களை இரசவாதிகள் ஆராய்ந்து தெரிந்தெடுத்திருக்கின்றார்கள். இவ்விரண்டில் பதரசத்தைப்பற்றி அதன் தலைப்பில் பேசுவோம். ஆனால், இங்கு இன்றியமையாத கெந்தகத்தைப்பற்றின செய்திகளை மாத்திரம் சுருக்கமாய் விவரிப்போம்.

வெள்ளியை ஒரே தடவையில் தொடக்கத்திலேயே சிவப்பாக்கிவிடும் மருந்தைக் கண்டு பிடிப்பது கடினம். ஆயினும், அதை முன்னர்க் கறுப்பாக்கிப் பின்னர்ச் சிவப்பாக்கும் பொருளை அல்லது, மருந்தையாயினுந் தெரிந்து கொள்ளவேண்டியது முக்கியம். வெள்ளியை ஆரம்பத்தில் கறுப்பாக்கி முடிவில் மஞ்சள் நிறமாக்கும் தனி பொருள்களில் தலைமையானது கந்தகமேயாகும். தனிப் பொருளில் இதற்குச் சமமானதொன்றுமில்லையென்பதே எல்லா இரசவாத பண்டிதர்களின் தீர்மானம். கந்தகத்தை அரைத்து வெள்ளியிற்பூசிப் புடமிட்டாலும், அல்லது வெள்ளியையுருக்கிக் கவளம் கொடுத்தாலும் அதைக் கறுப்பாக்கி விடும். பின்பு, அதை ஒட்டில் வைத்து ஊதியெடுத்தால் மஞ்சள் நிற முண்டாகிவிடும்; எந்தப் பொருள் தொடக்கத்தில் வெள்ளியைக் கறுப்பாக்கி பின்பு மஞ்சள் நிறத்தை யுண்டாக்குகிறதோ அவ்வித பொருளையாயினும் அல்லது அவ்வித மருந்தையாயினும் ஆராய்ந்து கண்டுபிடிப்பது இரசவாதிகளின் கடமை. இதற்காக இந்த வகையில் கந்தகமே சிறந்தது என்பதில் ஐயமேதுமில்லை. ஆயினும், இக் கெந்தகத்தில் ஒரு பெருங்குறை அல்லது ஒரு இழி குணமிருக்கிறது. அதாவது, எந்தப் பொருளில் இது கொடுக்க அல்லது சேர்க்கப்படுகிறதோ அந்தப் பொருளை வெட்டையாக்கி விடுங் குணமேயாம். வெள்ளியை உருக்கிக் கந்தகத்தைக் கொடுத்தால், வெள்ளியில் அதிக வறட்சியுண்டாக்கி அதை வெட்டையாக்கி விடுகிறது. ஆகையால், இக் குறையை அல்லது, இழி குணத்தை நீக்கவேண்டியது இன்றியமையாததாயிற்று. இன்னம், இதை நீக்க முயலும்போது நிறத்தையுண்டாக்கும் அதன் சிறந்த குணமானது நீங்கிப் போகாமல் தங்கியிருக்கும்படி செய்ய வேண்டியதும் இன்றியமையாததாகிறது. இவ்விதம், கந்தகத்திற்கு இயல்பான சிறந்த குணத்தை நிலைத்திருக்கச் செய்து அதற்கு இயல்பான இழி குணத்தை நீக்க முயற்சி செய்வதே கந்தகப் பக்குவமாம். இப் பக்குவங்களைத்தான் கட்டு, செந்தூரம், பற்பம் முதலிய பல முறைகளாக இரசவாத மருத்துவர்கள் கூறி இருக்கின்றார்கள்.

இக் காரணங்களால் இரசமும், கந்தகமும் இரசவாதத்தில் முதன்மையானவை என்பது விளங்கும். மேலும், "நெடிலான [1]நிறமெல்லாம் [2]சூதத்தாலே, நிலைத்த சிந்தூரமெல்லாம் [3]கந்தியாலே" யேனவும் ஆன்றோர் சொல்லியிருக்கின்றார்கள். இன்னம் கந்தகத்திற்கு, சத்தியென்றும், வருணகாரியென்றும், சிந்தூரத் தாதியென்றும், பல காரணப்பெயர்களுமுண்டு. கந்தகத் தொடர்பான முறைகள் ஆங்காங்குச் சொல்லப்படுமாயினும் அதை நீராக்கும் வகைகளுள் சிலவற்றை மாத்திரம் இங்கு முன்னர்ச் சொல்லுவோம்.

## 111. கந்தக நீர்

90வது முறைப்படி செய்யப்பட்ட முக்குண நீர், 79வது பாகப்படிச் செய்யப்பபட சார வீரியநீர். இவை இரண்டும் வகைக்கு 6 பங்கு, முறைப்படி பதங்கித்த கந்தகம் 1 பங்கு. இம் மூன்றையும் ஒன்றாய்க் கலந்து தீயில் சுட்டுப் பதப்படுத்திய கண்ணாடிக் குப்பியிலிட்டு வாய்ப்பகுதியை மூடி, கரிநெருப்பின் மீது வைத்து நான்கிலொருபாகம் சுண்டினவுடன் இறக்கி ஆற வைத்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும். இந்த நீரானது இரத்தத்தைப்போல் சிவந்திருக்கும்.

இந்த நீரானது செந்தூரங்கள் செய்வதற்கு முதன்மையானதாய்ப் பயன்படுகிறது. கறுப்பாயிருக்கிற செந்தூரங்களை இதை விட்டரைத்துப் புடமிடச் சிவந்துப்போகும். இன்னும், இஃது அநேக பாகங்களில் பயன்படுத்தப்படுகிறது. அவை ஆங்காங்கு எழுதப்படும்.

## 112. கந்தக நீர் (வேறு)

89வது பாகத்தில் சொல்லியிருக்கிறபடி தயாரித்த சாரச் சுண்ணநீர் 6 பங்கு, பாகப்படி பதங்கித்த கந்தகம் 1 பங்கு. இவை இரண்டையும் கலந்தரைத்து நெருப்பில் பதப்படுத்திய கண்ணாடிக் குப்பியில் இட்டு வாய்ப்பகுதியைமூடி, கரிநெருப்பின் மீது வைத்து, நான்கு பங்கு நீர் இருக்கும்போது எடுத்து ஆற வைத்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டியது.

இந்த நீரும் மேற்கண்டவைகளுக்காகும். இந்த இரண்டு பாகங்களும் இவ்வகைகளில் அதிகம் மேன்மையானவை.

---

1. நிறம் 2. பாதரசம் 3. கந்தகம்.

## 113. தாளக நீர்

மேற்கண்ட இருவகைப் பாகங்களிலும் கந்தகப் பதங்கத் திற்குப் பதிலாகப் பாகப்படி பதங்கித்த தாளகத்தைச் சேர்த்துச் செய்து கொள்வதேயாகும்.

மேற்கண்ட பாகங்கள் "குலாஸத்துல் முஜர்றபீன்" என்னும் அரபி மொழியிலுள்ள கீர்த்தி வாய்ந்த இரசவாத நூலில் கூறப் பட்டுள்ளவையாகும். மேலும், இவை பல முறை தன் முயற்சியால் பயிற்சியில் செய்யப்பட்டு வெற்றி கண்டவை.

## 114. கந்தக நீர் (வேறு)

தாளிக்காத கற்சுண்ணும்பை மெல்லியத் துணியில் சல்லித்த தூள் 2 பங்கு, நெல்லிக்காய்க்கந்தகம் 1 பங்கு. இவ்விரண்டையும் கல்வத்தில் மைபோலப் பொடித்து, ஒரு மண் பாண்டத்திலிட்டு, 12 பங்கு நீர்விட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து இரண்டு பங்கு நீர் சுண்டினவுடன் இறக்கி வடிகட்டிக் கொள்ளவேண்டும். அல்லது, தெளிவாய் இறுத்துக் கொள்ளவேண்டும். மறுபடியும் இந்த நீரில் முன்போல இரண்டு பங்கு சுண்ணத்தையும் ஒரு பங்கு கந்தகத்தையும் நுண்மையாய்ப் பொடி செய்து போட்டு அடுப் பேற்றி முன்போலக் காய்ச்சி இரண்டு பங்கு நீர் சுண்டினவுடன் துணியால் வடிகட்டிக் கொள்ளவேண்டும். அல்லது தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம், இந்த நீரையே மீண்டும் மீண்டும் முதலில் விட்ட நீரில் அரைப்பாகம் இருக்கும் பக்கு வத்தில் இறக்கியிறுத்துக் கண்ணுடிக் குப்பியில் வைத்துக்கொள்ள வும். குறைந்தது 5 மடக்காக்க நேரிடும்.

இந்த நீரானது அதிகக்காரமானதாகையால் இதற்கு, வீரியக் கந்தக நீரென்றும் அரபியில் "ஜாதுல்றுக்வத் அல்லது றக்வத்" என்றும் பெயர். இதன் பொருள் நுரை நீரென்பதேயாம். இது பெரும்பாலும் சுண்ணங்கள் செய்யவும், காரமற்ற செந்தூரங் களைக் காரமேற்றவும் பயன்படும்.

## 115. கந்தக வண்ண நீர்

தாளிக்காததும் காரமானதுமான கற்சுண்ணம் 1 பங்கு; பாகப்படுத்திய பனிநீர் அல்லதுஆற்றுநீர் 10 பங்கு. இரண்டையும் சேர்த்து அடுப்பேற்றி எரித்து, இரண்டு பங்கு நீர் சுண்டினவுடன் இறக்கி வடிகட்டிக் கொள்ளவேண்டும். மறுபடியும் இந்த நீரில் இன்னொரு பங்கு கற்சுண்ணத்தைச் சேர்த்து அடுப்பேற்றி எரித்து

இன்னம், இரண்டு பங்கு நீர் சுண்டினவுடன் இறக்கி வடிகட்டிக் கொள்ளவேண்டும். இவ்விதம், வடிகட்டின நீரையே மேன்மேலும் முன்னளவு சுண்ணத்தைச் சேர்த்து இரண்டு பங்கு நீராகச் செய்து கொள்ளவேண்டும். பின்பு, 2 பங்கு நெல்லிக்காய்க்கந்தகத்தைக் கல்வத்திலிட்டு முன்கூறிய நீரைச் சிறுகச் சிறுக விட்டு, 2 சாமம் அரைத்து வெய்யிலில் வைத்துலர்த்த வேண்டும். ஈரம் வற்றி உலர்ந்தவுடன் மறுபடியும் கல்வத்திலிட்டு முன் கூறிய நீரையே சிறுகச்சிறுக விட்டரைத்து மிகுதியாயிருக்கிற மேற்படி நீரில் கரைத்துத் தீயில் பதப்படுத்திய கண்ணுடிக் குப்பியில் வாய்ப் பகுதியை மூடி மற்ருெரு பெரிய பாண்டத்தில் நிறைய நீர் ஊற்றி, அதில் முன்ஞல் தயாரித்து வைத்த வெம்மை தாங்கும் கண்ணுடிக் குப்பியை மிதக்கும்படியாகவும் குப்பிவாயினுள் நீர் புகாமலும் பத்திரப்படுத்தி அடுப்பின்மீதேற்றிச் சிறு தீயாய் எரித்து வரவேண்டும். தண்ணீர் சூடேறித் தண்ணீர் கொதிக்க ஆரம்பித்தால் குப்பியிலுள்ள நீரானது சிவந்துவரும். குப்பியி லுள்ள நீர் முற்றும் நன்ருய்ச் சிவந்தவுடன் எரிப்பை நிறுத்தி அப்படியே குளிரவிட்டு ஆறினபின் குப்பியை எடுத்து வெய்யிலில் வைத்து வரவேண்டும். இப்படிச் செய்வதால் அந்த நீரானது இரத்தத்தைப் போல நன்ருய்ச் சிவந்துபோகும். பின்பு, அந்தக் குப்பியிலுள்ள நீரை மறு குப்பியில் வைத்துக்கொள்ள வேண்டும்.

எந்தப் பொருளேயும் அல்லது எந்த மருந்தையும் இந்த நீரை விட்டரைத்துப் பாகப்படுத்த அந்த மருந்து நிறமேற்றுவிடும். சிந்தூரிக்கவும் இது மிகவும் சிறந்ததேயாகும்.

## 116. கந்தக வண்ண நீர் (வேறு)

பாகப்படுத்தின பூநீர் இரண்டு பங்கு, காரமானதும் தாளிக் காததுமான கற்சுண்ணம் ஒரு பங்கு, பாகப்படுத்தின பனிநீர் அல்லது ஆற்று நீர் ஆறு பங்கு. இவையெல்லாவற்றையும் ஒன்ருய் கலந்து நன்ருய்க் கலக்கி ஓர் இரவும் பகலும் வைத்து மறுநாள் காலையில் அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து ஒரு பங்கு நீர் சுண்டின வுடன் இறக்கி வடிகட்டிக் கொள்ளவேண்டும். மறுபடியும் இந்த நீரில் முன்போலவே இரண்டு பங்கு பாகப்படுத்தின பூநீரையும் ஒரு பங்கு கற்சுண்ணத்தையும் சேர்த்துக் கரைத்து ஓர் இரவும் பகலும் வைத்து மறுநாள் காலையில் அடுப்பேற்றி மெதுவா யெரித்து இன்னெரு பங்கும் சுண்டினவுடன் இறக்கி வடிகட்டிக் கொள்ளவேண்டும். மூன்ரும் தடவையும் முன்போலவே செய்து வடிகட்டிக்கொள்ளவேண்டும். இந்த நீரானது கண்ணீரைப்போல அல்லது தண்ணீரைப் போலத் தெளிவாய் இருக்கவேண்டும்.

பளிங்குக் குப்பியொன்று தயார் செய்து அதன் வாய்க்குப் பீங்கான் மூடியொன்றும் சரிப்படுத்தி, இந்தப் பீங்கான் மூடியின் மத்தியில் அரைவிரல்கனம் துவாரமிடவேண்டும். வெண்மையான ஒரு பெரிய கண்ணாடிக் குப்பியின் அடியில் மத்தியில் ஒரு நூற் கனம் துளையிட்டுத் தயாரித்து வைத்துக்கொள்ளவேண்டும். தேவையான அளவு நிறமில்லாத கோராப்பட்டு நூற்கயிறொன்றும் தயார் செய்து கொள்ளவேண்டும்.

13 பலம் நெல்லிக்காய்க்கந்தகத்தை மைபோலப் பொடித்து ஒரு கித்தான் துண்டில் வைத்துக் குழிவாகச் செய்து எல்லா ஓரங்களையும் ஒன்றாய்ச் சேர்த்துச் சற்றுத் தளர்ச்சியாகவே முன் பட்டுநூற் கயிற்றின் ஒரு முனையால் நன்றாய்க் கட்டித் தொங்க விடும்படியாகவும், தொங்க வைத்தால் பட்டு நூற் கயிறானது முடிச்சின் மத்தியிலிருக்கும் படியாகவும் கட்டவேண்டியது. பின்பு, முன் சாடியைக் கீழே வைத்து முன் முடிச்சை அதற்குள் விட்டுப் பட்டுக் கயிற்றின் மற்றொரு முனையைக் குப்பியின் மூடியின் உட் பக்கமிருந்து நுழைத்து வெளிக்கிழுத்துக் குப்பியின் அடிப்பக்க மிருந்து குப்பியினுள்ளே செலுத்தி வெளிக்கிழுத்து, முடிச்சானது குப்பியினுள் மூடியின்கீழ் 1 அல்லது 2 அங்குலத்திலிருக்கும்படி யாகவும், முடிச்சானது தொங்கிக் கொண்டிருக்கும்படியாகவும் ஒன்றில் முடிந்துவிடவேண்டும். அந்தக் குப்பியின் கழுத்திலும் வேறொரு கயிற்றை முடிந்து குப்பியின் மூடியின்மீது நாலங்குலம் மேலாக இருக்கும்படியாகத் தூக்கிக் கட்டிவிடவும் வேண்டும். குப்பியில் தயாரித்து வைத்த நீரை நிறையவிட்டு வைத்தால் அந்த நீரானது பட்டுக் கயிற்றின் வழியாய்க் குப்பியிலிருந்து இறங்கி குப்பியினுள் இருக்கும் முடிச்சில் தங்கி அதற்குள்ளிருக்கும் கந்தகத் தூளிற் சென்று, அதினின்றும் குப்பியில் சொட்டும். இவ் விதம் செய்து கோடை காலத்தில் நல்ல வெய்யில் படும்படியான இடத்தில் வைக்கவேண்டும். குப்பியில் சொட்டும் நீரானது சிவந்திருந்தால் அதை வேறொரு குப்பியில் ஊற்றிக் கொள்ள வேண்டும். கொஞ்சமும் சிவக்காமல் வெள்ளையாயிருந்தால் அந்த நீரை மறுபடியும் முன் குப்பியிலேயே ஊற்றி விடவேண்டும். அடிக்கடி முடிச்சையும் அசைத்து வரவும் வேண்டும். வெய்யிலில் வெம்மை ஏறயேற நீரானது சிவந்துபோகும். இதையொரு தடவை கண்ணுற் பார்த்து விட்டால் இலகுவாய்த் தெரியும்; பார்க்காத வரையில் பேரளவாய்த்தான் காணப்படும். சிவந்த நீரையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துக் கண்ணாடிக் குப்பியில் விட்டு மறுபடியும் கடும் வெய்யிலில், 20 நாள் வைத்து எடுத்துப் பத்திரப் படுத்தவேண்டும். இதைச் செய்து முடிக்க பயிற்சியும் புத்திக் கூர்மையும் வேண்டும்.

இந்த நீரானது மேற்கண்ட எல்லா முறைகளுக்குமாகும். நிறமேற்றப்பட்ட மருந்துகள், செந்தூரங்கள் முதலிய அனேக பாகங்களுக்கும் பயன்படுகிறது.

## 117. சவுக்கார நீர்

திறமான சவுக்காரத்தைச் சிறுதுண்டுகளாகச் செய்து ஒரு கண்ணாடிக் குப்பியில் இட்டு, குதிரை மலத்தால் தயாரித்த செயநீர்க் குழியில் முறைப்படி வைத்தெடுக்க, பாலைப் போன்ற வெண்மையான நீராகும்.

உயிர்ப்பொருள்களைப் பதங்கித்து, இந்த நீரைவிட்டு அரைத்து வெம்மைத் தாங்கும் கண்ணாடிக் குப்பியில் இட்டு அடுப்பேற்றி மெதுவாய் எரித்து, இந்த நீரையே தெளித்துப் புகையாமல் வறுத்தெடுக்க ஒருவிதக் கட்டாகும். இந்த நீரானது முக்கியமாய்க் கந்தகத்தையும், இரசத்தையும் கட்டும்; ஆனால் இரசத்தைப் பதங்கமாகச் செய்துகொள்ளவேண்டும்.

குறிப்பு :—சவுக்காரமென்பது பலவகைப்படும் இரசவாதத் தொழிலுக்கு வேண்டியதை நாம் செய்துகொண்டால் மிகவும் உத்தமமாயிருக்கும். கீழ்க்காணும் சவுக்காரமானது அனேக வேலைகளுக்காகும். ஆகையால், அதன் இரண்டொரு முறைகளையும் சொல்வோம்.

## 118. சவுக்கார வைப்பு

பாகப்படுத்தின பூநீர் 2 படி, பாகப்படுத்தின கம்பி வெடியுப்பு 20 பலம், (700 கிராம்) பாகப்படுத்தின கறியுப்பு 10 பலம் (350 கிராம்) இவைகளைத் தனித்தனியாகப் பொடித்து' 4 படி கடல் நீரில் போட்டுக் கரைத்து மூன்று நாள் வைக்கவேண்டும். இடையில் நாள்தோறும் 4 அல்லது 5 தடவைகள் கலக்கியும் வரவேண்டும். நாலாம் நாள் தெளிவு இறுத்துத் தண்டவாளச் சட்டியில் இட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்துக் காய்ச்சிக் குழம்பு பதத்தில் இறக்கி வெய்யிலில் வைத்து உலர்த்தி உப்பாக்கிக் கொள்ள வேண்டும். கண்ட உப்பின் அளவிற்கு இரண்டு பங்கு கடல்நீரைச் சேர்த்து மறுபடியும் அந்த உப்பையே கரைத்து முன்போல செய்து தெளிவிறுத்து முன்போலக் காய்ச்சி உலர்த்தி உப்பாக்கிக் கொள்ள வண்டும். இந்தஉப்பையே மேன்மேலும் 5 தடவைகள் மேற்கண்ட படி பக்குவப்படுத்தி உப்பாக்கிக் கொள்ளவேண்டும். பின்பு, ஆறும் தடவை கண்ட உப்பின் அளவிற்கு இரண்டு பங்கு கடல்நீரைச் சேர்த்துக்கரைத்து, 3 நாள் வைத்துத் தெளிவிறுத்து அதில்

இரண்டு பலம் தீப கற்பூரத்தைப் பொடித்துப் போட்டு அடுப் பேற்றிச் சிறு தீயாக எரித்துக் குழம்பு பதமாய் வருகையில் கட்டின இரசகற்பூரம்; கட்டின சவ்வீரம்; கட்டின வெடியுப்பு; சீனக்காரச் சுண்ணம்; கட்டின நவாச்சாரம்; *கட்டின வெள்ளைப் பாடாணம்; பாகப்படுத்தின வெண்காரம்; பாகப்படுத்தின வளையலுப்பு; இவை எட்டும் வகைக்கு 1 பலம் (35 கிராம்) வீதம் இவை எல்லா வற்றையும் பொடித்துத் தூள் செய்து, ஒரு வராகன் எடை புனுகைச் சேர்த்து நன்றாய் கலந்து முன் தயாரித்துள்ள அடுப்பின் மீதிருக்கிற பாகில் போட்டுச் சூட்டுடனே கீழிறக்கிச் சிறு தீயாக எரித்து நன்றாய் கிண்டிக் கிளறி வெய்யிலில் வைத்து இறுகின பதத்தில் முட்டைகளைப் போன்ற உருண்டைகளாகப் பிடித்து வெய்யிலில் வைத்து உலர்த்திக்கொள்ளவேண்டும். இதுவே, இரசவாத முறைகளில் சேர்க்கப்படும் சவுக்காரமாகும்.

## 119. சவுக்கார வைப்பு (வேறு)

பாகப்படுத்தின பூநீர் அல்லது தூய்மை செய்யப்பட்ட வெண்மையான அப்பளக்காரம் 1 படி, இதில் இரண்டு படி நீரை அல்லது பாகப்படுத்தின பனிநீரை விட்டுக் கரைத்துத் துணியில் வடிக்கட்டின நீரில், 50 பூவந்திக்கொட்டை என்னும் பொன்னும் பழத்தை விதைநீக்கிப் பஞ்சுபோல் சிதைத்துப் போட்டும், ஒரு பலம் படிக்காரத்தைத் தூள் செய்துபோட்டும் ஓர் இரவு பகல் வைத்து மறுநாள் கையால் நன்றாய்ப் பிசைந்து துணியால் வடிக் கட்டிக் கொள்ளவேண்டும்.

நன்றாய் வெந்தும் கற்கரடு முதலியவைகள் நீக்கப்பட்டுத் துணியால் சல்லித்ததுமான கிளிஞ்சிற் சுண்ணம் $1\frac{1}{2}$ படி, இதில் இரண்டுபடி பாகப்படுத்தின பனிநீரை அல்லது ஆற்றுநீரை விட்டுக் கரைத்துச் சீலையில் வடிகட்டி, 75 பொன்னும்பழத்தை விதை நீக்கிப் பஞ்சுபோலச் சிதைத்துப்போட்டும், $1\frac{1}{2}$ பலம் படிக் காரத்தைத் தூள் செய்துபோட்டும், ஒரு நாள் வைத்து மறுநாள் கையால் நன்றாய்ப் பிசைந்து மறுபடியும் துணியில் வடிகட்டிக் கொள்ளவேண்டும்.

பின்பு, இந்த இருவகை நீரையும் ஒன்றாய்க் கலந்து அடுப் பேற்றிச் சிறு தீயாயெரித்து அரைப்பாகம் சுண்டினவுடன், 15 பலம் இலுப்பெண்ணெயை விட்டுக் காய்ச்சி கெட்டியான பதத்தில் மண்கோப்பையில் அல்லது கொட்டாங்கச்சியில் ஊற்றி நன்றாய்க் குளிர ஆற வைத்து எடுத்துக் கொள்ளவேண்டும். இதுவே சவுக்காரமாகும்.

---

* இம் முறைகளும் பின்னர் எழுதப்படும்.

கடையில் விற்கப்படும் சவுக்காரமானது இவ்வளவு குணத்தைத் தரத்தக்கதன்று. ஆகையால், நாம் மேற்கண்ட பாகப்படி செய்து பயன்படுத்திக் கொள்வதே சிறந்ததாகும். மேலும், அப்பளக்காரம், உவர்மண் முதலியவைகளால் செய்யப்படுவதை பார்க்கிலும் பூநீரால் செய்துகொள்வதே சிறந்ததாகும்.

**குறிப்பு:**—இவ்விதப் பாகங்களில் பாகப்படுத்தின பூநீர் கிடைக்காவிட்டால், ஆங்கில மருந்து அங்காடிகளில் விற்கப்படும் வாஷிங்சோடா (Washing Soda) என்னும் உப்பை பயன் படுத்திக் கொள்ளலாம். இந்த உப்பானது அப்பளாக்காரத்தைக் காட்டிலும் நூறுபங்கு மேலானதெனத் தெரிந்திருக்கவேண்டும்.

## 120. சவுக்கார நீர்

ஒரு வாயகன்ற பாண்டத்தில் அரைப்பாகம் கற்சுண்ணத்தைப் போட்டமுத்தி 118ஆம் பாகப்படி தயாரித்த சவுக்கார உருண்டைகளை வைத்து மேலும் கற்சுண்ணத்தைப் போட்டு சிறு தீயாய் இரண்டு சாமம் எரித்து ஆறவிட்டெடுத்து, மறுபடியும் முன்போலவே இவ்வுருண்டைகளைக் கற்சுண்ணத்தில் வைத்து எரித்தெடுத்துக் கொள்ளவும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 4 தடவைகள் செய்ய சவுக்காரமானது சுண்ணமாகும். இதை மிகக் கவனமாய்ச் செய்யவேண்டும். எரிக்கும்போது உருண்டைகள் உடைந்து கற்சுண்ணத்துடன் கலந்துபோகாமல் பக்குவப் படுத்தவும் வேண்டும்.

இந்தச் சுண்ணத்தை ஒரு கண்ணுடிக் குப்பியில் இட்டு, முன் சொல்லப்பட்டிருக்கும் ஒருவகைச் செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்த நீரால் எல்லாச் சரக்குகளையும் கட்டலாம். ஆனல், அதனதன் முறைப்படி பதங்கித்தும், பாகப்படுத்தியும், வறுத்தும், சுருக்கிட்டும் கட்டிக்கொள்ள வேண்டும். அம் முறைகளெல்லாம் ஆங்காங்கு எழுதப்படும்.

## 121. சவுக்கார நீர் (வேறு)

119ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி தயார் செய்யப் பட்ட சவுக்காரத்தை பனை ஓலைக் கனமுள்ள சிறு சீவலாகக் கத்தியால் சீவி, தண்ணீர் படாத புதிய மண் சாணக்கிகளில் ஒன்றேடொன்று படாமல் தனித் தனியாயிருக்கும்படியாகப் பரப்பிக் கடும் வெய்யிலில் வைத்து வந்தால், 4 அல்லது, 5 நாள்

களுக்குள் ஈரம், எண்ணெய்ப் பசை முதலியவைகளெல்லாம் நீங்கி சுண்ணம்போலாகிவிடும். இதை எடுத்துத் தூள் செய்து இதற்குச் சமனெடை பாகப்படுத்தின வெடியுப்பைச் சேர்த்து மைபோலப் பொடித்து மூன்று பங்காகப் பதங்கித்துக் கொள்ளவேண்டும். பின்பு, அடுப்பின்மீது மண் பாண்டத்தை வைத்து ஒரு பங்கைப் போட்டு, மெதுவாயெரித்து இரும்பு துடுப்பால் துழாவிவர பாண்டத்திலுள்ளது பற்றி எரியும். எரிந்தடங்கினவுடன் இன்னொரு பாகத்தையும் பாண்டத்திலுள்ளதுடன் சேர்த்து முன்போலவே வறுக்கவேண்டும். இதுவும் பற்றி எரிந்தடங்கினவுடன் மூன்ருவது பாகத்தையும் அதனுடன் சேர்த்து முன்போலவே வறுக்க, அதுவும் பற்றி எரிந்தடங்கினவுடன் இறக்கி வைத்து ஆறின பின்பு, கல்வத்தில் பொடித்துக்கொள்ளவும். இது கடுங் காரச் சுண்ணமாயிருக்கும்.

இதை ஒரு கண்ணாடிக் குப்பியிலிட்டு வாய்ப்பகுதியை மூடி குதிரைச் சாணத்தால் தயாரிக்கப்பெற்ற செயநீர்க் குழியில் அல்லது வேறுவகை செயநீர்க் குழியில் 40 நாள் வைத்தெடுக்க, செயநீராயிருக்கும். ஏதேனும், எஞ்சியிருந்தால் தயாரான நீரை இறுத்துக்கொண்டு எஞ்சியிருப்பதை மறுபடியும் முன்போலவே செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக்கொள்ள வேண்டும். இந்தச் சவுக்கார நீருக்கு, சவுக்கார செயநீரெனவும் மறு பெயருமுண்டு.

இந்தச் சவுக்கார நீரால் எல்லாச் சரக்குகளையும் கட்டலாம். ஆனல், அதனதன் முறைப்படி பதங்கித்தும், பாகப்படுத்தியும், வறுத்தும், சுருக்கிட்டுங் கட்டிக்கொள்ளவேண்டும். மேலும், இந்தச் சவுக்கார நீரானது ரச செந்தூரம் செய்யவும் பயன்படுகிறது.

**குறிப்பு :—** இங்குச் சொல்லப்படாத மற்ற உப்பினங்களைப் பொதுவிதியில் சொல்லப்பட்டிருக்கும் முறைப்படி நீராக்கிக் கொள்ள வேண்டும்.

## தூலச் சரக்குகளின் நீர் (பருப்பொருள்)

இதுவரையில் நாம் நவாச்சாரம், படிக்காரம், சுண்ணும்பு பூநீர், மிருதார்சிங்கி, சிற்றண்டம், கந்தகம், தாளகம், சவுக்காரம் முதலியவைகளை நீராக்கும் முறைகளைச் சொன்னேம். இவை எல்லாம் மருத்துவத்தில் அல்லது இரசவாதத்தில் முழுமையான புலமையை அடைய விரும்பும் ஒவ்வொருவருக்கும் மிகவும் இன்றியமையாதவைகளேயாகும். ஏனெனில், செந்தூரம் பற்பம் முதலியவைகளாகச் செய்யப்படும் ஒவ்வொரு சரக்கையும் நெருப்புக்கு

ஓடாமல் கட்டாவிட்டாலும், அல்லது பாகப்படுத்தாவிட்டாலும் அது பெரும்பான்மையும் பயன்படக் கூடாததாகவே முடியும். ஆகையால் அவ்வகை, முறைகளில் அதிகம் சிறந்தவைகளும், பல தடவைகள் பயிற்சியில் தெளிந்து கொள்ளப்பட்டவைகளுமான பல முறைகளை எழுதினேம். இன்னம், பருப்பொருள் சரக்கு களான தங்கம், வெள்ளி முதலியவைகளின் நீரானது வாதம், மருத்துவம் என்ற இருவகைகளுக்கும் பயன்படுகிறபடியால், அம் முறைகளிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட சில முறைகளையும் இங்கு எழுதுவோம். இன்னம், தங்கம் முதலிய பருப்பொருள் சரக்குகளின் பிறப்பு முதலிய அமைப்புகளை முன்னர், தெரிந்து கொள்ளவேண்டியது இன்றியமையாதது. ஆயினும், அவை எல்லாவற்றையும் இனி பின் சொல்லப்படும் அவ்வவற்றின் செந்தூரம் முதலிய பாகங்களில் முறையே எழுதப்படும்.

## 122. தங்க நீர்

தங்கத்தை உராவி எடுத்த தூளைக் கலவத்திலிட்டு, முக்குண நீர், காரசாரநீர், காரதாரச் சாரநீர் என்ற இவற்றுள் ஒரு வகை நீரைவிட்டுச் சிறுகச்சிறுக ஊற்றி 4 சாம நேரம் (12 மணி) அரைத்தெடுத்து ஒரு கண்ணுடிக் குப்பியில் விட்டு, வாய்ப் பகுதியை நன்ருய் மூடி, செயநீர்க் குழியில், 20 நாள் வைக்க நீராகிவிடும். இந்த நீரை வேறொரு குப்பியில் இறுத்துக் கொள்ள வேண்டும். அடியில் ஏதேனும் எஞ்சி நின்ருல், அதைக் கல்வத்தில் இட்டு முன் விட்டரைத்த நீரையே விட்டு இரண்டொரு சாமம் அரைத்து முன்போலவே குப்பியில் விட்டுச் செயநீர்க் குழியில் வைத்தெடுக்கவேண்டும். வைத்த பொருளானது கொஞ்சமும் எஞ்சி இல்லாமல் எல்லாவற்றையும் நீராக்கிக் கொள்ளவேண்டும்.

இத்தங்க நீரானது மருத்துவத்திலும் வாதத்திலும் பலவகை களாகப் பயன்படுத்தப்படுகிறது. அம் முறைகள் எல்லாம் ஆங்காங்கே எழுதப்படும். ஆயினும், அவற்றுள் சில பின் வருகிற விதமாகும். இதை உடல் வன்மை, நோய் வன்மை முதலியவைகளுக்குத் தக்கபடி அந்தந்த நேரத்துக்குத் தக்கவாறு, பொருத்தமான சார்பு பொருள்களுடன் அளவுப்படி உள்ளுக்குப் பயன்படுத்தலாம். தங்கம் சேர்க்கப்படும் முறைகளில் அல்லது செந்தூரங்களில் அல்லது மாத்திரைகளில் அந்தத் தங்கத்திற்குப் பதிலாக, அதை மேற்கண்டபடி நீராக்கி, அந்தப் பாகத்தில் விட்டரைத்துக் கலந்து தயாரித்தால், தங்கத்தைச் சேர்த்து தயாரிக்கப்படும் பாகத்தாலுண்டாகும் குணங்களைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு சிறப்பான குணமுண்டாகும். இன்னம், இந்த நீருடன் செயரசத்தை அல்லது வாலைரசத்தைச்

சேர்த்து ஒருவித பாகம் செய்து கட்டுப்படுத்தி வெள்ளியில் கொடுக்க அதை நிறமாற்றமடையச் செய்யும். இவ்வகை நீர்களின் பயனேச் சுருங்கக் கூறினுல், இறுகின பொருளே நீராக்கியும் நீருள்ள பொருளே இறுக்கியும் இரசவாதம் தொடர்பான அனேக வகை முறைகள் செய்யப்படுகின்றன என்பதே எல்லா இரசவாத மருத்துவர்களின் தீர்மானம்.

## 123. வெள்ளி நீர்

இடித்துத் தூளாக்கின வெண்காரம் 1 படி. இதனைப் பத்துப் படி நீரில் இட்டுக் கரைத்து வாலேயிலிட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் தீநீரில் இன்னெரு படி வெண்காரப் பொடியைச் சேர்த்து முன்போலவே வாலேயிலிட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் தீநீரிலேயே ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு படி வெண்காரத் தூளேச் சேர்த்து ஏழு முறை மேன்மேலும் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட விதமாகவே நவாச்சாரத்தையும் ஏழு முறைகள் மீண்டும் மீண்டும் தீநீர் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இவ்விரு வகைத் தீநீர்களேயும் சமபாகமாய்ச் சேர்த்துக் கொள்ளவேண்டும். பின்பு, சொக்க வெள்ளியை உராவின தூளேக் கல்வத்திலிட்டு, மேற்படி நீரைச் சிறுகச் சிறுக ஊற்றி நான்கு சாமம் அரைத்துக் குப்பியில் போட்டுச் செயநீர்க் குழியில் 20 நாள் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். ஏதேனும், எஞ்சி நின்ருல் முன்போலவே மறுபடியும் அந்த நீரைவிட்டு அரைத்து முன்போலவே செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவும். இவ்விதம், காலத்துக்கு ஏற்றவாறு இரண்டு மூன்று முறைகள் செய்யின் மீதியின்றி எல்லாம் நீராகிவிடும்.

இந்த நீரை, வெள்ளியைச் சேர்க்கவேண்டிய பாகங்களில் அதற்குப் பதிலாக இந்த நீரை விட்டரைத்துத் தயாரித்தால், வெள்ளியைச் சேர்த்த பாகத்தைக் காட்டிலும் அனேக மடங்கு அதிக நன்மைகள் உண்டாகும். மேலும், இதைத் தனியாகவே வெள்ளி பற்ப முதலியவைகளுக்குப் பதிலாகக் குறைந்த அளவாய்த் தருந்த சார்புப் பொருள்களோடு உள்ளுக்கும் பயன் படுத்தலாம். இன்னம், இரசவாதம் தொடர்பான முறைகளிலும் இந்த நீர் பயன்படுத்தப்படுகிறது. அம் முறைகளே இனி வரும் இடத்தில் காண்க.

குறிப்பு :— மேற்கண்டபடி தங்கம், தாமிரம், வங்கம் முதலிய பருப்பொருள்களேயும் நீராக்கிக் கொள்ளலாம்.

## 124. வெள்வங்க நீர்

படிக்காரம், நவாச்சாரம், வெண்காரம் இம் மூன்றும் வகைக்கு 1 பங்கு. வெள்வங்கப் பொடி 1 பங்கு. முன்னே கூறிய மூன்றையும் கல்வத்திலிட்டுப் பொடித்து வங்கப் பொடியையும் சேர்த்து, மேல்நாட்டுத் திராட்சைக் காடி (Wine) தீநீரைச் சிறுகச் சிறுகவிட்டு, 5 சாமமரைத்துக் கண்ணாடிக் குப்பியில் விட்டுச் செய நீர்க் குழியில் வைத்து, 20 நாள் சென்றெடுக்க எல்லாம் நீராகி நிற்கும். இந்த நீரை ஒரு மண் பாண்டத்தில் விட்டுச் சூடான சாம்பலில் வைக்க, அதிலுள்ள உப்பு நீரெல்லாம் போய், வங்க நீர் மாத்திரம் எஞ்சி நிற்கும். இந்த நீரானது கருஞ்சாயலான வெண்ணிறமாய் இருக்கும்.

## 125. வெள்வங்க நீர் (வேறு)

நவாச்சாரம் 2 பங்கு, வெள்வங்கப் பொடி 1 பங்கு. இவ் விரண்டையும் கல்வத்திலிட்டு, படிக்காரத் தீநீர், புளிப்பு திராட்சை ரசம், மேல்நாட்டுத் திராட்சைக்காடித் தீநீர், புளிப்பு நாரத்தம் பழச்சாறு என்னும் இவற்றுள் ஒன்றைவிட்டு, 2 சாமம் அரைத்துக் கண்ணாடிக் குப்பியில் விட்டு வாய்ப்பகுதியை மூடி, செயநீர்க் குழியில் இரண்டு வாரம் வைக்க நீராகிவிடும். இந்த நீரை ஒரு மண் பாண்டத்தில் விட்டுச் சூடாயிருக்கிற சாம்பலில் வைக்க அதிலுள்ள சாரநீர் முதலியவை நீங்கிப்போய் வெள்வங்க நீர் மாத்திரம் எஞ்சி இருக்கும்.

மேற்கண்ட வெள்வங்க நீரைப் பயன்படுத்தும் பாகங்கள் பின் சொல்லப்படும்.

## 126. வெள்வங்க நீர் (வேறு)

தேவையான அளவு வெள்வங்கத்தை உருக்கி தகட்டைப் போல வார்த்து மிகவும் சன்னப் பொடியாய்க் கத்தரித்துக் கொள்ளலாம். அல்லது, அதை சன்னமாய் உராவித் தூளாக்கியுங் கொள்ளலாம். இந்த இரு வகைகளிலும் ஒரு வகையாய்த் தயாரித்துக் கொள்ளப்பட்ட வெள்வங்கத் தூளைக் கல்வத்தி லிட்டு, காடித் தீநீரைச் சிறுகச் சிறுக ஊற்றிக் கைவிடாமல் அரைக்கவேண்டும். பின்பு, இதை ஒரு மண் ஓட்டில் விட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து முன்கூறிய காடித் நீரைத் தெளித்து வறுக்கவும் வேண்டும். இவ்விதம், 3 நாள்வறுத்தெடுக்க வேண்டும். மறுபடியும் இதைக் கல்வத்திலிட்டு முன்போலவே மூன்றுநாள் அரைக்க வேண்டும். இதன் பின்பு, இந்த மருந்து

13 பலத்துக்கு (455 கிராம்), படிக்காரம் $10\frac{1}{4}$ பலம், ($358\frac{3}{4}$ கிராம்) *வெள்ளைக் கந்தகம் $2\frac{1}{4}$ பலம் ($78\frac{3}{4}$ கிராம்) வீதமாகச் சேர்த்து ஒன்ருய்க் கலந்து முன்னைப்போல நீர் விடாமல் 3 நாள் அரைத்து, பச்சை கண்ணுடிக் குப்பியில் இட்டு, போட்ட மருந்தின்மீது நாலங்குலம் நிற்கும்படியாகக் காடித் தீநீரை விட்டுக் குப்பியின் வாயைப் பலமாய் மூடி மெழுகு முதலியவை தடவி, அல்லது கம்பி முதலியவைகளால் வலிமையாகக் கட்டி வெய்யிலில் வைக்க வேண்டும். இதை நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் குலுக்கி வரவும் வேண்டும். இவ்விதம், 24 நாள்கள் சென்று, 25ஆம் நாள் மெல்லிய துணியில் மெதுவாய் வடிகட்டிவாலையிலிட்டுத் தீநீராக்கி இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம், செய்யப்பட்டது வங்க நீரெனப்படுகிறது. மேற்கண்ட பாகங்களில் இதுவே சிறப்பான தாம். ஆனல், இதைப் கைபாகத்துடனும் கொஞ்சம் கவன முடனும் செய்துகொண்டால் பலவித மருத்துவத் தொழில் களுக்குப் பயன்படுவதாய் இருக்கும்.

இந்த வங்கநீரால், இரசம், தாளகம், கந்தகம் என்ற இவை களை நெருப்புக்கு ஓடாமல் கட்டலாம், மேற்கண்ட சரக்குகளை வாதம், மருத்துவம் என்ற இரு வகைகளில் எந்த வகையில் சேர்க்க வேண்டியதாயினும், அவற்றை மேற்கண்ட நீரால் பாகப் படுத்தி பயன்படுத்தினல் சிறப்பான குணமுண்டாகும். கந்தக மானது இந்த வங்க நீராலேதான் கட்டுப்படுகிறது. இதுவன்றி மற்ற முறைகளால் கட்டுப்படுவது மிகவும் அரிது. இம்முறையைத் தெரிந்து செய்யாதவர்கள் ஒரு போதும் கந்தகத்தையும் கட்ட மாட்டார்கள் என்று சொல்லலாம். அறிவாளிகள் இந்தப் பாகத்தை அறிந்து பாகப்படி செய்து முடித்தால் இந்த ஒன்றே போதும் இதைப்பற்றிக் கூறவேண்டிய பல செய்திகளுண்டு. அவையெல்லாவற்றையும் இங்கெழுதுவதால் பொருள் விரிவடை யும். மிக்க அறிவாளிகளுக்கு இக்குறிப்புகளே. போதுமானவை.

## 127. கருவங்க நீர்

தேவையான அளவு கருவங்கத்தை இரண்டு மூசைகளில் இட்டு, உலையில் வைத்து உருக்கி இரண்டு மூசைகளையும் இரண்டு நீர்க்காரையென்னும் குறட்டால் இரண்டு கையிலும் பிடித்துக் கொண்டு, பாகப்படுத்தின புளிப்புத் திராட்சைச் சாறு, மேல்நாட் டுத் திராட்சைக் காடித் தீநீர், புளிப்பு நாரத்தம்பழச் சாறு, எலு மிச்சம் பழச்சாறு என்ற இந்நான்கில் ஒன்றை ஒரு பாண்டத்தில் விட்டு, அதற்கு அருகில் இரண்டு மூசைகளையும் சற்றுச் சாய்த்துப்

* இதன் முறை பின்னெழுதப்படும்.

பிடித்துக்கொண்டு மூசையிலுள்ள வங்கமானது ஒன்றோடொன்று உராயும்படி தேய்க்க அதிலிருந்து வங்கமானது சிறு துண்டுகளாய்க் கீழிறங்கித் திரவத்தில் விழுந்து நொருங்கிப் பொடியாகிவிடும். இவ்விதம், செய்யும் வங்கமானது சிதறித் தெரிக்குமாகையால், கண், உடல் முதலிய இடங்களில் படாமல் கவனமாகச் செய்ய வேண்டும். இதற்காக அந்தத் திரவம் வைத்திருக்கிற பாண்டத்தின் வாயை நடுவில் துளையிடப்பட்ட சாணக்கியால் அல்லது பலகையால் மூடிவைத்து, அதன் மத்தியிலுள்ள துவாரத்தில்விட வேண்டும். இவ்விதம், செய்ய ஒரு தடவை கண்ணுல் பார்க்கத் தெரியும். இவ்விதம், மடக்கி மடக்கிச் சில தடவைகள் செய்யின் வங்கமெல்லாம் நொறுங்கித் தூளாகிவிடும்.

இவ்விதம், செய்யத் தெரியாதவர்கள் வங்கத்தை உருக்கி, மேற்கண்ட வகைகளில் ஒன்றை ஒரு பாண்டத்தில்விட்டு, அதன் வாயை முன்சொன்னபடி மூடி, அதன் மூலமாய்ச் சிறிது சிறிதாய்ச் சாய்த்து ஆறினபின், சன்னத் தூளாக இருப்பதை எல்லாம் ஒன்ருய்ச் சேகரித்துத் தனியே வைத்துக் கொள்ளவேண்டும். தூளாகாமல் பருமனுய் இருப்பவைகளைத் தனியே எடுத்து மறுபடியும் மூசையிலிட்டு உருக்கி முன்போலச் செய்து, இத் தடவையும் சன்னமாயிருக்கிற பொடிகளையும் தனியே எடுத்து முன் வைத்திருக்கிற தூளுடன் சேர்த்து வைத்துக் கொள்ளவேண்டும். பெருந் துண்டுகளாய் இருப்பதை மறுபடியும் ஒன்ருய்ச் சேர்த்து உருக்கி முன்போலச் செய்து கொள்ளவேண்டும். இவ்விதம், தேவையான எடைத் தூளைச் சேகரித்துக் கொள்ளலாம்.

இந்தப் பாகப்படியும் செய்ய இயலாவிட்டால் கருவங்கத்தை உராவி எடுத்த தூளைக் கல்வத்திலிட்டு மேற்கண்ட நான்குவகை நீர் வகைகளில் ஒரு வகை நீரை ஊற்றிக் கைவிடாமல் அரைத்து மாவாக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தக் கருவங்கமாவு, மடலரிதாரம், நவாச்சாரம் இவை வகைக்குச் சமபாகம், எடுத்துக்கொண்டு ஆரம்பத்தில் இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு, மூன்று சரக்குகளையும் ஒன்ருய்ச் சேர்த்து இரண்டு சாமநேரம் அரைத்துக் கண்ணுடிக் குப்பியில் இட்டு வாய்ப்பகுதியை மூடி செயநீர்க் குழியில் வைத்து ஒரு வாரஞ் சென்றபெடுக்க நீராகி இருக்கும். பின்பு, சூடான சர்ம்பலில் வைத்து நீரைச் சுண்ட வைத்தால் வங்க நீர் எஞ்சி நிற்கும்.

இந்தக் கருவங்க நீரால் இரசம், கெந்தகம் முதலியவைகளைக் கட்டலாம். இம்முறைகள்பற்றி பின்னர் எழுதுவோம்.

**குறிப்பு** :— மேற்கண்ட பாகப்படி வெள்வங்கத்தையும் நீராக்கிக் கொள்ளலாம். ஆனுல், இம் முறையில் அரிதாரத்தைச் சேர்க்கலாகாதெனத் தெரிந்திருக்கவேண்டும்.

## 128. வங்கசூத நீர்

வெள்வங்கத்தை உராவின தூள் 1 பங்கு, பாதரசம் 1 பங்கு. இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு அரைக்க இரண்டும் ஒன்ருகி உருண்டையாகிவிடும். இதன் பின்பு ஒரு பங்கு இரசப் பதங்கத்தைச் சேர்த்து 2 சாமம் நன்ருய் அரைத்துக் கண்ணுடிக் குப்பியில் இட்டு, வாய்ப்பகுதியை மூடி செயநீர்க் குழியில், 40 நாள் வைத்தெடுக்க நீராகி இருக்கும். இந்த நீரை மாத்திரம் வேருெரு குப்பியில் இறுத்து வைத்துக் கொள்ளவேண்டும்.

இந்த நீரால் அதனதன் முறைப்படி பக்குவப்படுத்திஞல் இரசம் முதலிய எல்லாச் சரக்குகளையும் கட்டலாம். இன்னம், இந்த நீர் பற்பலவித முறைகளுக்கும் பயன்படும். அவ்வகைகளை ஆங்காங்கு எழுதுவோம்.

இந்த நீரின் அடியிற் படிந்திருக்கும் வண்டலுடன் அண்டச் சுண்ணம், நவாச்சாரம் என்ற இவற்றைச் சேர்த்துச் சிங்கிநீரை விட்டரைத்து நீராக்கிக் கொண்டு அல்லது பாகப்படி பக்குவஞ் செய்து கொண்டு எல்லாவித குரு முறைகளிலும் இது சேர்க்கப் பட்டால் அதனதன் நிச்சயமான குணத்தை உண்டாக்கிவிடும். இன்னம், இந்த நீரை இரசத்தில் விட்டு, 4 சாமமரைத்து ஒட்டில் இட்டு, மறுபடியும் இந்த நீர் தெளித்தே வறுக்கவேண்டும். இவ் விதம் இரசம் கட்டுப்படுகிற வரையில் செய்யவும்.

இன்னும், இவ்விதம் இந்த நீரால் பருப்பொருள் சரக்குகளை யும் கட்டிக் கொள்ளலாம். இரசவாத முறைகள் பலவற்ருேடு தொடர்புப்படுவதும் இந்த நீரே. ஆனுல், அதனதன் பாகப்படி செய்ய முயற்சி செய்யவேண்டும். இஃது ஒரு சிறந்த முறை ஆகையால், இதற்காகக் கொஞ்சம் பயிற்சியும் விடாமுயற்சியும் நுண்ணறிவும் இன்றியமையாது இருக்கவேண்டும்.

## 129. அய நீர்

நாட்டிரும்பை அல்லது நைப்பான இரும்பை உராவின தூள் தேவையான அளவு. இதனை எலுமிச்சம்பழச் சாற்றில் மூன்று நாள் ஊறவைத்துக் கழுவி வெய்யிலில் உலர்த்திக்கொள்ள வேண்டும். இதன் எடையில் பாதி எடை படிக்காரத்தைத் தூள்

செய்து வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு கண்ணுடிக் குப்பியில் முன்கூறிய இரும்புத் தூளைப்போட்டு அதன்மேல் படிக்காரத்தூளை தூவி, அதன்மேல் ஓர் அங்குலம் நிற்கும்படி காரமான காடியை விட்டு வாய்ப்பகுதியை மூடி கடும் வெய்யிலில் வைக்கவேண்டும். இதனை நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் நன்ருய்க் குலுக்கியும் வரவும். இவ்விதம் ஏழு நாட்கள் செய்யின் இரும்புப் பொடியானது நீராகிவிடும்.

இந்த நீரை உள்ளுக்கும் பயன்படுத்தலாம். இரசவாத முறைகளிலும் பயன்படுத்தப்படுகிறது. இதன் பாகங்கள் பின்னர் எழுதப்படும்.

## 130. அயநீர் (வேறு)

நைப்பான இரும்பை அல்லது நாட்டு இரும்பை உராவின தூள் ஒருபங்கு, தூய்மை செய்யப்பட்ட மனேசிலை அரைப்பங்கு, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு இரண்டும் ஒன்ருய்க் கலக்கும்படி 2 அல்லது 3 சாமமரைத்து ஒரு கலயத்தில் இட்டு வாய்க்குச் சில்லிட்டு வலுவாய், 3 அல்லது 4 சீலமண் செய்து ஓர் இரவு முழுவதும் கரி நெருப்பிற்குள் வைத்துப் புரட்டிப் புரட்டி பாகப் படுத்தவேண்டும். அடுப்புடனே ஆறவிட்டுக் குளிர ஆறினபின் எடுத்துக் கொள்ளவேண்டும். தேன், நெய், பொரித்த வெண் காரம் என்னும் மூன்றையும் சமபாகமாய்ச் சேர்த்தரைத்து வைத்துக்கொள்ளவேண்டும். இதற்கு சீவநீர் என்று பெயர். முன் தயாரித்து வைத்துள்ள இரும்புடன், சீவநீர் கொஞ்சம் சேர்த்தரைத்துத் தூளாக்கி மூசையில் வைத்து ஊதி சரக்கானது நெருப்பைப்போல சிவந்தவுடன் எடுத்து ஆறவைத்து, மறுபடியும் இதைக் கல்வத்திலிட்டு; முன்கூறிய சீவநீரைச் சேர்த்து முன்போல அரைத்து முன்போலவே ஊதி சரக்குச் சிவந்தவுடன் எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் சீவநீரை விட்டு அரைத்து இரும்பானது வெண்மையாகிற வரையில் பாகப்படுத்த வேண்டும். பின்பு இதைக் கல்வத்தில் போட்டு, புளிப்பு மாதுளம் பழச்சாறு, மஞ்சள் கடுக்காய்க் குடிநீர் என்னும் இரண்டில் ஒன்றை விட்டு அரைத்து கண்ணுடிக் குப்பியில் போட்டு செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும்.

## 131. தாமிரநீர்

* தாமிரவெள்ளை அல்லது தாமிரப்பதங்கம் 1 பங்கு, நவாச்சாரப் பதங்கம் 4 பங்கு. இவற்றைக் கல்வத்திலிட்டு,

* இம்முறைகள் பின்னெழுதப்படும்.

கொதி நீரைச் சிறுகச் சிறுக விட்டு, 3 நாள் வைத்து இந்த நீர் தெளித்து, 3 நாள் வறுத்தெடுத்துக் கண்ணுடிக் குப்பியில் இட்டு, வாய்ப்பகுதியை மூடி செயநீர்க் குழியில் 5 நாள் வைத்தெடுக்க நீராகிவிடும்.

இந்த நீரை இனி ஆங்காங்குச் சொல்லப்படுவதுபோல பயன் படுத்தவேண்டும்.

## 132. தாமிரநீர் (வேறு)

தாமிரவெள்ளை அல்லது தாமிரப் பதங்கம் 1 பங்கை கல்வத்தி லிட்டு, 4 பங்கு சாரவீரிய நீரைச் சிறுகச் சிறுக ஊற்றி 4 நாள் அரைத்துப் பின்பு, இதை ஓட்டிலிட்டுக் கொதி நீரை சிறுகச் சிறுகத் தெளித்து வறுக்கவேண்டும். இவ்விதம் 3 நாள் வறுத் தெடுத்துப் பின்பு கண்ணுடிக் குப்பியில் போட்டு வாய்ப்பகுதியை மூடி செயநீர்க் குழியில், 5 நாள் வைத்தெடுக்க நீராகிவிடும்.

## 133. தாமிரநீர் (வேறு)

தாமிரவெள்ளை அல்லது தாமிரப் பதங்கம் 1 பங்கை கல்வத்தி லிட்டு 4 பங்கு சாரவீரியநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, மூன்று நாள் வைத்து நான்காம் நாள் கொதிநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, 3 நாள் அரைக்கவேண்டும். பின்பு கண்ணுடிக் குப்பியில்விட்டு வாய்ப் பகுதியை மூடி, செயநீர்க்குழியில், 5 நாள் வைத்தெடுக்க நீராகிவிடும்.

## 134. தாமிரநீர் (வேறு)

தாமிர அரப்பொடி, நவாச்சாரம். இவை இரண்டையும் சமமாய்ச் சேர்த்துக் கல்வத்திலிட்டுக் காரமான திராட்சைக் காடிவிட்டு, 4 நாள் அரைத்துப் பாகப்படி செயநீர்க் குழியில் வைத்தாலும் நீராகிவிடும். இதைப் பற்றி "றிஸாலயேகீமியா" என்னும் நூலில் எழுதியிருக்கிறதாவது, இது நீராகிவிடுவதில் ஐயமில்லை. ஆனல், குணஞ்செய்வதில் சிறப்பாயிராது என்பதே.

**குறிப்பு** :—சரக்குகள் இத்தனை நாளில் நீராகிவிடுமெனச் சொல்லப்பட்டிருப்பதால் பெரும்பாலும் அவ்விதமே நீராகிவிடும்; ஆனல், சில நேரங்களில் அவ்விதமாகாமல் அரை குறையாய் இருக்கலாம். அல்லது வைத்ததுபோலவும் இருக்கலாம். அதைப் பார்த்து நம்பிக்கை இழக்காமல் மறுபடியும் செயநீர்க் குழியில் வைத்தால் செயநீராகிவிடும்.

## 135. தாமிர வெள்ளைப்பொது

நாம் மேலே தாமிரவெள்ளை, அல்லது தாமிரப்பதங்கமெனச் சொல்லியிருப்பதால் அவற்றைத் தயாரிக்கும் முறைகளை இங்கு எழுதவேண்டியது இன்றியமையாதது. ஆகையால், அம் முறைகளுள் முக்கியமான சில பாகங்களை இங்கு எழுதுவோம்.

பருப்பொருள்களை வெள்ளையாக்க இலவணத் (உப்பு) திராவகம் இன்றியமையாதது ஆகையால், அம்முறையை மாத்திரம் முன்னர் எழுதுவோம். மற்ற திராவகங்களின் முறைகள் திராவக பாகத்தில் எழுதப்படும்.

## 136. இலவணத் திராவகம்

பாகப்படுத்தின கறியுப்பு 8 பங்கு, படிக்காரம் 6 பங்கு, திறமான காடி 8 பங்கு. முன் இரண்டு பொருள்களையும் நன்ருய்ப் பொடித்து இரும்பு வாலையில் போட்டுக் காடியையும் அதில்விட்டு முறைப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் திராவகத்தில் மறுபடியும் கறியுப்பு 8 பங்கு, படிக்காரம் 6 பங்கு, இந்த இரண்டையும் பொடித்துச் சேர்த்து மறுபடியும் வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம், இந்தத் திராவகத்திலேயே முன்கூறிய சரக்குகளை முன்னளவே 7 தடவைகள் மீண்டும் மீண்டும் சேர்த்துத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இது கடுங்காரமாயிருக்கும். உள்ளுக்கு பயன்படுத்தக் கூடாது. இது எல்லாவிதப் பருப்பொருள் சரக்குகளையும் வெள்ளையாக்க பயன்படும்,

## 137. இலவணநீர்த் திராவகம்

84ஆம் முறைப்படி கறியுப்பை நீராக்கி அதை வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் திராவகத்தையே மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் இறக்கிக் கொள்வதே இலவணநீர்த் திராவகமாகும். இதுவே பருப்பொருள் சரக்குகளை வெள்ளையாக்க அதிகமாய்ப் பயன்படுத்தப்படுகிறது.

## 138. தாமிர வெள்ளை

தேவையான அளவு தாமிர அரப்பொடியைக் கல்வத்திலிட்டு, இதற்குச் சமனளவு மேற்படி இலவணதிராவகத்தை அல்லது இலவணநீர்த் திராவகத்தைச் சிறுகச்சிறுக ஊற்றி மூன்று நாள் அரைத்துப் பின்பு ஓட்டிலிட்டு முன்னளவு முன் திராவகத்தையே சிறுகச் சிறுகத் தெளித்து 3 நாள் வறுத்துப் பின்பு ஒரு மண்

கலயத்திற் போட்டு வாய்க்குச் சில்லிட்டு வலுவாய்ச் சீலே மண் செய்து கரி நெருப்பிற்குள் வைத்து 1 நாள் எரிக்கவேண்டும். இவ்விதம் எரிக்கும்போது உள்ளிருக்கிற தாமிரமானது உருகிப் போகாமல் அடிக்கடி திருப்பிக் கொடுத்து வரவும் வேண்டும். இவ்விதம் எரித்தான பின்பு குளிர ஆறவைத்து எடுத்தால் பனிக்கட்டியைப் போல வெண்மையாகவும், திறமானதாகவும் இருக்கும், இதை எடுத்து நீராக்கிக் கொள்ளலாம் அனேக பக்குவங்களிலும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

உருது இரசவாதிகள் இவ்விதம் செய்யப்பட்டதை "முக்கல்லஸ்" சுண்ணம் என்கிருர்கள். ஆனுல் இது ஆயுர்வேத இரசவாத நூல்களில் சொல்லப்படும் சுண்ணங்களல்ல; ஏனெனில் இச் சுண்ணங்களின் அமைப்புகள் வேறு. அச் சுண்ணத்தின் குணங்கள் வேறு; மேலும் இது பற்பமுமாகாது என்பதே; ஆகையால், இவ் வேறுபாட்டைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு அதை வெள்ளேயெனப் பிரித்துச் சொல்லி இருக்கின்ருேம். ஆனுல், இவ்விதம் செய்யப்பட்ட வெள்ளேயில், பற்பம், சுண்ணம், செந் தூரம் என்ற வகைகளில் ஒருவகையாய்ச் செய்து கொள்ளலாம். அப்படி செய்யப்படும் பாகமானது சாதாரணமாய்ச் செய்யப் படும் முறைகளேக் காட்டிலும் அனேக மடங்கு மேலானது என்பதில் எவ்வித சந்தேகமுமில்லே.

## 139. பருப் பொருள் சரக்குகளே வெள்ளேயாக்கப் பொதுவிதி

தங்கம், வெள்ளி, தாமிரம், இரும்பு, அப்பிரேகம் முதலிய எல்லாவகைப் பருப்பொருள் சரக்குகளேயும் மேற்கண்ட பாகப் படியே வெள்ளேயாக்கிக் கொள்ளலாம். அவற்றைப் பல வகை களாய் வெள்ளேயாக்கக் கூடுமாயினும் மேற்கண்ட முறையே எல்லாவற்றைக் காட்டிலும் அதிகம் சிறப்பானது. பருப்பொருள் சரக்குகளே வெள்ளேயாக்க இதுவே சரியான முறை. மற்ற முறை களெல்லாம் இதற்கு ஈடாகாது. இந்த முறையில் தவறுதல் உண்டாகாது. மற்ற முறைகளில் தவறுதல் உண்டாவதுந் தவிர, அம்முறையாய்ச் செய்யப்படும் வெள்ளேயும் வீணே. அம் முறை களில் எடுத்துக் கொள்ளும் வருத்தமும் வீண் என்பதே.

பருப்பொருள் சரக்குகள் வெள்ளேயானதற்கு ஆய்வாவது, எந்தப் பொருளின் வெள்ளேயாயினும் ஒரு குன்றிமணி எடையில் 8ல் ஒரு பாகமெடுத்து நாவின் நுனியில் வைத்து மெதுவாய்ப்

பல்லால் உராய்ந்து கரைத்தால், அது முழுவதும் கரைந்துபோய் மீதி இல்லாதிருக்கவேண்டும். அப்படியில்லாமல் ஏதேனும் கரையாமல் எஞ்சி நின்ருல், முழுமையாய் அந்தச் சரக்கு வெள்ளையாகவில்லையென நிச்சயித்து, முதல் தடவை செய்த மாதிரியே இரண்டாம் தடவையும் அந்தத் திராவகத்தைத் தெளித்து வறுத்துப் பின்பு, கலயத்திற் போட்டு முன்போலவே எரித்தெடுக்க வேண்டும். இவ்விதம் இந்தச் சரக்கு வெள்ளையாய்ப் போவதுடன் மேற்கண்ட அமைப்பும் உண்டாகின்ற வரையில், எத்தனை தடவையாயினும் மீண்டும் மீண்டும் செய்து கொள்ளவேண்டும். இதில் பயிற்சி முதிர்வு பெற்றவர்களின் உதவியிருந்தால் நல்லது. இல்லாவிட்டாலும் புத்தியுடன் கருத்தாய் நாம் செய்யின் இரண்டு, மூன்று. தடவைகளில் தேர்ச்சி அடைந்துவிடலாம். இதற்கு விடாமுயற்சி முதன்மையானதாகும்.

## 140. தாமிரப் பதங்கம்

தாமிர அரப்பொடி 2 பங்கு, மனேசிலை, பொன்னரிதாரம், கறியுப்பு இவை வகைக்கு 1 பங்கு. இவற்றுள் பின் மூன்று சரக்குகளையும் தனித்தனித் தூள் செய்து, பின்பு நான்கையும் ஒன்ருய்க் கலந்து கல்வத்திலிட்டு, தண்ணீர் ஊற்றி, 1 நாள் அரைத்துப் பீங்கான் தட்டில் வைத்து, மூன்று நாள் வெய்யிலில் வைத்துக் கொஞ்சமும் ஈரமில்லாமல் உலர்ந்த பின்பு, கலயத்திற் போட்டு, வாய்க்குச் சில்லிட்டு, சீலை மண் செய்து 3 நாள், இரவு பகல் நெருப்பில் வைத்தெடுக்க வேண்டும். பின்பெடுத்துக் கல்வத்திற் பொடித்துச் சீலை வடிகட்டி நீர்விட்டுக் கழுவித் தாளகம் முதலியவைகளின் வாசனையை நீக்கிப் பின்பு அதை வெய்யிலில் வைத்து உலர்த்திக் கொஞ்சமும் ஈரமில்லாமல் உலர்ந்து போய் விட்டால், பதங்கப் பாத்திரத்திற் போட்டு அம் முறைப்படி பதங்கம் ஏற்றி எடுத்துக் கொள்ளவேண்டும். இப்பதங்கம் வெள்ளையாய் உப்பைப் போன்றிருக்கும். இந்தப் பதங்கமானது செயநீராக்கவும், செந்தூரம், பற்பம், தூய்மை முதலிய பாகங்களுக்கும் ஆகும். அம்முறைகளையும் பின் எழுதுவோம்.

## 141. இரசப்பதங்கம் (வேறு)

முற்றினதும் பருமனுமான ஊமத்தங் காய்களின் காம்பை வட்டமாய் அறுத்துக் காய்களிலுள்ள விதைகளை நீக்கி விடவேண்டும். ஒவ்வொரு காயிலும் அரைப்பாகம் பொடித்த இந்துப்பை நிறைத்து அதில் ஐந்து வராகன் எடை ($17\frac{1}{2}$ கிராம்) பதங்கித்த இரசத்தைவிட்டு, அதன்மேல் காயின் வாய்மட்டம் பொடித்த

இந்துப்பை நிறைத்து அழுத்தி விடவேண்டும். இவ்விதம் தேவையான காய்களைத் தயாரித்துக் கொள்ளவேண்டும். அடிகனத்த சட்டியில் அரைப்பாகம் பொடித்த கறியுப்புத் தூளைப் போட்டு, அதன்மேல் முன் தயாரித்து வைத்துள்ள காய்களை, ஒன்றோடொன்று படாமல் பரப்பி வைத்துக் காய்களின் இடுக்குகளிலும், காய்களின் வாய்மட்டம் வரையிலும் பொடித்த கறியுப்புத் தூளைப் போட்டழுத்தி மேல்சட்டி மூடி மூன்று சாமம் எரித்து ஆற விட்டெடுக்க, மேற்சட்டியில் பதங்கமேறி நிற்கும். அதைச் சுரண்டி எடுத்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இப் பதங்கம் முன் சொன்னபடி செயநீராக்கவும், செந்தூரம், பற்பம் முதலியவைகள் செய்யவும் பயன்படுமாம். மேலும், இதைத் தனியாகவும் உடல்வலிமை, நோயின் வலிமை முதலியவைகளுக் கேற்றபடியாகவும் தகுந்த சார்புப் பொருள்களோடு சேர்த்து ஏழு அல்லது ஒன்பது நாள்களும் பயன்படுத்தலாம்; உடல் தன்மைக்குத் தகுந்தபடி நாள்தோறும் இரண்டு அல்லது ஒரு வேளை பயன்படுத்தலாம். எல்லா வகைக் சிரந்திகள், எல்லா வகைச் சூலைகள், எல்லாவகை வாத நோய்கள், எல்லா வகை வாயு நோய்கள், பக்க வாத நோய்கள், புரைகள், பற்பல வகை கட்டிகள், பலவகை அரையாப்புகள், பலவகை மேக ஊறல்கள் முதலிய அனேக நோய்கள் தீரும். ஆனால், இப்பதங்கத்தைத் தனியாய்ப் பயன்படுத்தினால் வாய் பிடிக்கும். இதனையே செந்தூரமாகச் செய்து பயன்படுத்தினாலோ, மேற்கண்ட நோய்கள் எல்லாம் பறப்பதுமன்றி, வாய்பிடித்தல் முதலிய எவ்விதக் கெட்ட குணங்களும் உண்டாகாது. இதன் செந்தூரம் முதலிய பாகங்களெல்லாம் பின் எழுதப்படும்.

## 142. பாதரச நீர்

பாதரசத்தைப்பற்றி அதிகம் தெரிந்து கொள்ளவேண்டியது இன்றியமையாதது. அவை எல்லாவற்றையும் பின்னர் எழுதப்படும். ஆகையால், இங்குத் தேவையான சில பாகங்களை மாத்திரம் எழுதுவோம்.

பதங்கித்த பாதரசம் 1 பங்கு, நவாச்சாரம் 40 பங்கு (இது கட்டியானதாயிருந்தால் மிகவும் சிறந்தது). நவாச்சாரத்தைப் பொடித்து இரண்டு பங்காக்கி, இதில் ஒரு பங்கையும், முன் இரசத்தையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கலவத்திலிட்டு 2 சாமம் அரைத்துப் பின்பு மறுபங்கையும் சேர்த்து, 2 சாமம் அரைக்க வேண்டும். இதன் பின்பு 40 பங்கு கறியுப்பை (இதுவும் கட்டின

தாயிருந்தால் சிறந்ததே) பொடித்து முன்போலவே இரண்டு பங்காக்கி, அதில் ஒரு பங்கைச் சேர்த்து, 1 சாமம் அரைத்து மறு பங்கையும் சேர்த்து, ரசமானது தோன்ருமல் மறைந்து போகும் வரையில் அரைத்துப் பதங்கப் பாண்டத்தில் வைத்துப் பாகப்படி பதங்கித்துக் கொள்ளவேண்டும். இப் பதங்கத்தை எடுத்து மறுபடியும் கல்வத்தில் வைத்து நன்ருய் அரைத்துக் கழுத்து நீண்டிருக்கிற ஒரு கண்ணுடிக் குப்பியில் இட்டு வாய்ப் பகுதியை மூடி வைக்கவேண்டும்.

சரக்குகளை நீராக்கும் வகைகள் என்னும் தலைப்பில் (4) வது அக்கினிப்பாகம் என்னும் பகுதியில் சொல்லப்பட்டிருப்பதுபோல பாண்டமொன்று தயாரித்து அப் பாண்டத்திலுள்ள தடையில் குப்பியைத் தொங்கவைத்து, அங்குச் சொல்லியிருப்பது போலவே மற்ற காரியங்களைச் செய்து, ஓர் இரவு பகல் அடுப்பை எரிக்க வேண்டும். ஆனுல் பாண்டத்தில் அரைப்பங்கு நீர்தான் இருக்க வேண்டும். அங்குச் சொல்லியிருப்பதுபோலவே மூன்றில் இரண்டு பாகம் நீர் விடலாகாது. பாண்டத்திலுள்ள நீர் சுண்டிவிட்டால் அங்குச் சொல்லி இருப்பதுபோலவே புதிய நீர் விடவும் வேண்டும். இவ்விதம் பாகப்படி எரித்தாறவைத்து மறுநாள் எடுத்தால் குப்பியிலுள்ளவை எல்லாம் நீராகி இருக்கும். இது பார்வைக்குத் தூய்மையான நீரைப் போலவே இருக்கும். இதைத்தான் இரச நீர், இரசத் திரவம் எனப் பலவகைப் பெயர்களால் வழங்கப் படுகிறது.

## 143. இரச நீரின் பயன்

(அ) எந்தப் பருப்பொருளையும் உராவித் தூள் செய்து அதற்குச் சமனெடை தூய்மைசெய்த ரசத்தைச் சற்றுச் சூடேற்றி முன் கூறிய தூளுடன் சேர்த்துக் கலந்து, இதற்குச் சமனளவு மேற்படி இரசநீரைச் சேர்த்து ஒரு கண்ணுடிக் குப்பியில் விட்டு, செயநீர்க் குழியில் வைத்து அல்லது செயநீர் தீயில் செய்யும் முறைப்படி செய்து நீராக்கிக் கொள்ளலாம்.

(ஆ) தாமிர அரப்பொடி, தங்க அரப்பொடி, வங்க அரப் பொடி என்னும் இவற்றுள் ஒன்றைச் சூடேற்றி, மேற்படி இரசநீரில் சேர்த்துக் கண்ணுடிக் குப்பியில் விட்டு வாய்ப்பகுதியை மூடி, செயநீர்க் குழியில் வைத்து அல்லது, செயநீர்த் தீயில் பக்குவம் செய்யும் முறைப்படி செய்து நீராக்கிக் கொள்ளலாம்.

(இ) அப்பிரக நவநீதத்தை அல்லது மாணிக்கம் முதலிய எவ்வகைக் கற்களின் பொடியையும் மேற்படி இரசநீரில் மேற் கண்ட பாகப்படி செய்துகொள்ளலாம்.

குறிப்பு : — இந்த இரசநீரானது இன்னும் அனேக முறைகளுக்குப் பயன்படுகின்றது. ஆனால், இதைச் செய்யும் பாகத்தையும் அவரவர்களின் கைபாகத்தையும் பொறுத்தது. ஆகையால், இதைச் செய்து முடிக்க புத்திக் கூர்மையும் பயிற்சி முதிர்வும் கைப்பழக்கமும் இன்றியமையாமையாகும்.

## 144. இரச நீர் (வேறு)

இரசப்பதங்கம் 1 பங்கு. ஏழு தடவைகள் மடக்கி மடக்கிப் பதங்கித்த நவாச்சாரம் 21 பங்கு. இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு, 2 சாமமரைத்துப் பதங்கப் பாண்டத்திலிட்டுப் பாகப்படி பதங்கித்துக் கொள்ளவேண்டும். இப் பதங்கத்தை ஒரு கண்ணுடிக் குப்பியில் இட்டு அதன்மேல் 1 அங்குலம் நிற்கும்படியாக இலவணநீர் திராவகத்தை விட்டு, வாய்ப்பகுதியை மூடிச் செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். இந்த இரசநீரானது தூய்மையான நீரைப் போலிருக்கும்.

இந்த நீரும் மேற்கண்ட மருத்துவச் செயல்களுக்கு உதவும்.

## 145. இரச நீர் (வேறு)

தூய்மை செய்யப்பட்ட இரசம் 1 பங்கு. ஏழு தடவைகள் பதங்கித்த சாரப்பதங்கம் 1 பங்கு. இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்தில் இட்டு 2 சாமமரைத்துப் பின்பு, பாகப்படுத்தின இரண்டு பங்கு கறியுப்பையும் சேர்த்து 1 சாமமரைத்துப் பதங்கச் சட்டியில் வைத்துப் பாகப்படி பதங்கித்துக் கொள்ளவேண்டும. இப் பதங்கத்தை எடுத்து, அதன் சமனெடை ஏழு தடவைகள் மடக்கி மடக்கிப் பதங்கித்த சாரப்பதங்கத்தைச் சேர்த்து, 2 சாமம் அரைத்து, இரண்டு பங்கு பாகப்படுத்தின கறியுப்பைச் சேர்த்து, 1 சாமமரைத்து முன்போலப் பதங்கித்துக் கொள்ளவேண்டும். பின்பு, இந்தப் பதங்கத்தைக் கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்துக் கழுத்து நீளமான கண்ணுடிக் குப்பியில் போட்டு 142ஆம் பாகத்தில் சொன்னபடி நீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்த முறையானது எல்லா இரசவாத மருத்துவர்களாலும் அங்கீகரிக்கப்பட்டது. இந்த நீரானது எல்லாப் பருப்பொருள் சரக்குகளேயும் கரைத்து நீராக்கும். எந்தப் பொருளினுடைய வெள்ளேயை அல்லது பொடியைச் சற்றுச் சூடேற்றிக் காய்ச்சி முன்கண்ட இரசநீரில் சிறிது விட்டுக் கண்ணுடிக் குப்பியில் விட்டு வாய்ப்பகுதியை மூடி செயநீர்க் குழியில் வைக்க செயநீராகிவிடும்.

தங்கம், வெள்ளி, தாமிரம், வங்கம் என்னும் இவற்றுளொன்றின் அரப்பொடியைச் சூடேற்றிக் காய்ச்சி இந்த நீரில் தோய்த்து அப்படியே கண்ணுடிக் குப்பியில் விட்டு வாய்ப்பகுதியை மூடி செயநீர் குழியில் வைக்க நீரர்கிவிடும். இவ்விதமே அப்பிரேக வெள்ளை, கடினமான கல்லினங்கள் ஆகிய இவற்றை மேற்கண்ட விதமாகவே செய்தால் நீராகிவிடும். இன்னம் இந்த நீரானது இரசவாத முறைகளில் தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோக மாக்கவும் பயன்படுமாம். இம் முறையானது இத் தொழிலில் தேர்ச்சியுற்ற அறிஞர்களுக்குத் தெரியுமாகையால் அவர்கள் மூலம் தெரிந்து கொள்ளவேண்டும்.

**குறிப்பு** :—தாளகம், கந்தகம், முதலிய சில சரக்குகளை மீண்டும் மீண்டும் பதங்கிப்பதால் அப்பதங்கமே வேறு உலோகங் களை நிறமேற்றத்தக்கதாய் விடுகின்றது. பெரும்பான்மை ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் செய்யப்படுகிறது. இவ்விதமே சில சரக்கைக் கரைத்து நீராக்குவதிலும் பெரும்பான்மையும் ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் செய்யின் அதுவும் அவ்விதமே யாகும். ஆனுல் சில உப்பு வகைகளின் நீரானது நேரே சரக்கு களைக் கட்டுவதில் தொடர்பில்லாமல் இருப்பதும் உண்டு என்று நினைவில் வைத்திருக்கவும் வேண்டும்.

## அப்பிரகம்

அப்பிரகத்தைப்பற்றி உருது இரசவாத பண்டிதர்களாலும், சித்தமருத்துவ இரசவாதப் பண்டிதர்களாலும் சிறப்பாய்ப் பேசப்பட்டிருக்கிறது. அப்பிரக நவநீதம், அப்பிரகநீர், அப்பிரக ரசம், அப்பிரக வங்கம், அப்பிரகச் செந்தூரம். அப்பிரக பற்பம் முதலிய பல பாகங்களும் மருத்துவம், வாதம் என்னும் இருவகைத் தொழில்களுக்கும் பயன்படும்படியாகவும் சொல்லப்பட்டிருக் கிறது. ஆனுல், அதை நீராக்கும் முறைகளுள் சிலவற்றை இங்கு எழுதி, மற்றவைகளை ஆங்காங்கு அதனதன் முறைகளில் சொல்வோம். அப்பிரகத்தை நீராக்கவும் மற்ற பாகங்களாகச் செய்யவும் தொடக்கத்தில் அதைத் தூய்மை அல்லது தூளாக்க வேண்டியதாகையால் அதை முன்னர் எழுதுவோம்.

## 146. அப்பிரகத் தூய்மை

வெண்ணிறமான அல்லது கருநிறமான அப்பிரகத்தைக் கொல்லனுலையில் வைத்துக் காய்ச்சி, வெள்ளாட்டுச் சிறுநீரில் தோய்க்கவேண்டும். மறுபடியும் இதைக் காய்ச்சித் தோய்க்க

வேண்டும். இவ்விதம் 3 அல்லது 4 தடவைகள் செய்தால் அதிலுள்ள மண் முதலியவைகள் வெளியாகி அப்பிரகம் தூளாகிப் போகும். இதை நீர்விட்டுக் கழுவித் தூய்மை செய்து, இதை இதற்குச் சமனளவு நெல்லுடன் சேர்த்து ஒரு கம்பிளித் துண்டில் முடிந்து காடியில் ஒரு நாளூற வைத்து, மறுநாள் முடிச்சைக் கையால் தேய்க்க, காடியில் அப்பிரகமெல்லாம் கரைந்து வரும். அதை அசையாமல் அப்படியே வைத்துவிட்டால் அப்பிரகத்தூளெல்லாம்கீழே படிந்துவிடும். மேலே காடித் தெளிவு நிற்கும். காடித் தெளிவைக் கலங்காமல் சிறுகச்சிறுக இறுத்து நீக்கிவிட்டு அடியில் உறைந்து நிற்கும் அப்பிரகத் தூளை வெய் யிலில் காயவைத்துப் பத்திரப்படுத்தவும்; இது அப்பிரக நவநீத மெனவும் சொல்லப்படுகிறது.

## 147. அப்பிரகத் தூய்மை (வேறு)

மண்சட்டியைச் சிவக்கக் காயவைத்துத் தேவையான அப்பி ரேகத்தைப் பொடித்த தூளைப்போட்டு வறுத்து நன்ருய்ச் சூடேறினவுடன் பசுவின் பாலில் போடவேண்டும். நன்ருய் ஆறின பின்பு முன்போலவே சட்டியைக் காயவைத்து அதில்போட்டு வறுக்கவேண்டும். இவ்விதம் ஏழு தடவைகள் மடக்கிமடக்கி வறுத்துப் பாலிற் போட்டு எடுத்துக்கொள்ளவும். பின்பு, பச்சைக் கோரைக் கிழங்கின் சாற்றில் அல்லது கோரைக் கிழங்குக் குடிநீரில் மூன்றுநாள் ஊறவைத்து மேற்படி அப்பிரகத்திற்குச் சமனளவு நெல்லைக் கலந்து கம்பிளியில் அல்லது கெட்டித் துணியில் முடிந்து பொட்டலமாகச் கட்டி ஒரு பாண்டத்தில் காடித் தெளிவைவிட்டு அதில் இம்முடிச்சை விட்டு இரண்டு கைகளாலும் தேய்த்துக் கழுவினுல் அப்பிரகமெல்லாம் காடியில் இறங்கி நிற்கும்; அதை வெய்யிலில்வைத்துத் தெளியத் தெளிய காடியை இறுத்துவிட்டுக் கெட்டிப்பதமானவுடன் வில்லையாகச் செய்து, உலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும். இதுவே அப்பிரக நவநீதமாம். இவ்விதம் வெள்ளை, கறுப்பு என்னும் இருவகை அப்பிரகத்தையும் தூய்மையாக அல்லது நவநீதமாகச் செய்து கொள்ளலாம்.

## 148. அப்பிரக நீர்.

தேவையான அளவு அப்பிரக நவநீதத்தை ஒரு பாண்டத்தில் போட்டு, அதன்மேல் இரண்டங்குலம் நிற்கும்படி திறமானதும் கடுங்காரமானதுமான காடியை ஊற்றி 4 அல்லது 5 நாள் வைத்துப் புளிப்பேற்றி, செயநீர்க் குப்பியில் விட்டு வாய்ப்

பகுதியை மூடிச் செயநீர்க் குழியில் 40 நாள் வைத்தெடுக்கவும். அப்பிரகமெல்லாம் நீராகிவிடும். சில சமயம் முற்றும் நீராகாமல் ஏதேனும் அரைகுறையாய் இருந்தால், மறுபடியும் 20 அல்லது 30 நாள் காலத்துக்கு ஏற்றபடி செயநீர்க் குழியில் வைத்தெடுக்க, முற்றும் தூய்மையான நீரைப்போல நீராகிவிடும்.

## 149. அப்பிரக நீரின் பயன்

(அ) இந்த அப்பிரகநீரை வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொண்டால், அந்தத் தீநீரானது இரசநீருக்குச் சமானமானதாக இருக்கும். இன்னும் இதைக் காலத்துக்கு ஏற்றபடி, 3 அல்லது 4 தடவைகள் மீண்டும் மீண்டும் இறக்கிக் கொண்டால் அதிக வேகமானதாயிருக்கும். ஒரு பங்கு இந்தத் தீநீருடன் பத்துப் பங்கு தூய்மை செய்யப்பட்ட இரசத்தைச் சூடேற்றிச் சேர்த்துப் பாகப் படுத்தினுல், இரசம் இறுகிக் கட்டிக்கொள்ளும். இன்னும் இது 70 பங்கு இரசத்துடன் சேர்த்தாலும் அது கட்டிக்கொள்ளு மெனச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல், அவ்விதச் சக்தியுண்டாவதற்கு இந்தத் தீநீரைப் பல தடவைகள் மடக்கவேண்டியதாயிருக்கும். இவ்விதம் கட்டப்பட்ட இரசத்தைச் செந்தூரம் முதலியவைகளாகச் செய்தால், அனேக மருத்துவத் தொழில்களுக்கு உதவியாய் இருக்கும். இப்பாகங்களும் பின் சொல்லப்படும்.

(ஆ) "தரீகத்துல்கீமியா" என்னும் நூலில் எழுதியிருப்பதாவது, அப்பிரக நீரானது முறைப்படியும் பாகப்படியும் தயாரிக்கப்பட்டால் அஃது இரசத்தைக் கட்டுமென்பதில் எவ்வித ஐயமுமில்லை. அவ்விதம் கட்டப்பட்ட இரசமானது வாதம், மருத்துவம் என்னும் இருவகைகளுக்கும் சிறந்ததாய் இருக்கும் என்பதில் சந்தேகமுமில்லை. மேலும் இஃது அனேக மருத்துவங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது என்பதேயாம். உதாரணமாக, அம் முறைகளில் இங்கொன்றை எழுதுவோம்.

பத்துப் பங்கு தூய்மை செய்யப்பட்ட இரசத்தைச் சூடேற்றி, அதில் ஒரு பங்கு முன்சொன்ன அப்பிரக நீரைச் சேர்க்க, அந்த இரசம் கட்டுப்படும். அவ்விதம் கட்டப்பட்ட இரசத்தை வெள்ளி மூசையில் வைத்து உருக்கிப் பித்து நீரில் சாய்க்கவேண்டும். ஆனுல், வெள்ளியானது உருகி விடாமல் கவனமாய் இருக்கவும் வேண்டும். மறுபடியும் அந்த மூசையிலேயே உருக்கித் தேனில் சாய்க்க வேண்டும்; பின்னர், இதை எடுத்து மறுபடியும் அந்த மூசையிலேயே உருக்கி ஆட்டுக்கால் நெய்யில் சாய்க்கவேண்டும்; மறுபடியும் உருக்கிச் சிறுவர்களின் சிறுநீரில் சாய்க்கவேண்டும். இவ்விதம் சில தடவைகள் செய்து, முடிவாய் உருக்கி ஒன்றிலும்

சாய்க்காமல் உமியைப் போட்டுத் தண்ணீரில் நனைக்காமல் எடுத்துக்கொள்ளவேண்டும். இது குருவாகிவிடும். பின்பு விருப்பம் போல் செய்யவும். அறிவாளிகள் இந்தப் பாகத்தின் குறிப்பை அறிந்து செய்வார்களாகையால், இதன் சிறப்பான பாகங்களை அவர்களை அடுத்துத் தெரிந்துகொள்ளவேண்டும்.

## 150. காடியை காரமேற்றல்

எவ்விதக் காடியையும் கண்ணாடிக் குப்பி நிறையவிட்டுக் கொஞ்சமும் இடமில்லாமல் மூடியிட்டு, அரக்கால் முத்திரை இட்டு அல்லது கருவங்கத் தகட்டால் முடியைமூடி நாற்பதுநாள் கடும் வெய்யிலில் வைக்கவேண்டும். காடியானது கடுங்காரமா யிருப்பதற்குச் சோதனையாவது, அதை எந்தப் பொருளின்மீது போடுகிறோமோ, அந்தப் பொருளில் அது பட்ட இடத்தில் துளை அல்லது குழி விழுந்துவிடும்.

## 151. ஆட்டுக்கால் நெய்

தேவையான காட்டாட்டின் கால்களைத் தோல், மயிர் முதலிய வைகளைத் தூய்மை செய்து, வாலையிலிட்டுக் கால்களுக்குத் தகுந்த அளவு நீர் விட்டுத் திராவகம் இறக்கி, பனியில் அல்லது குளிர்ந்த இடத்தில் வைக்கத் தீநீரின்மீது ஆடையைப்போல் நெய் உறைந்து நிற்கும். இதை எடுத்துப் பத்திரப்படுத்தித் தேவையானபோது உருக்கிப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும்.

## 152. அப்பிரக நீர் (வேறு)

தேவையான அளவு அப்பிரக நவநீதத்தை தீயில் சுட்டெடுத்த கண்ணாடிக் குப்பியில் அல்லது நெருப்பிற்கு நிற்கத் தக்க பீங்கான் பாத்திரத்தில் போட்டு, அப்பிரகம் எடைக்கு ஏழு பங்கு எடை சாரவீரிய நீரைவிட்டு அடுப்பேற்றி சிறு தீயாக எரித்து, பாண்டத்தின் அடியானது தெரியாவண்ணம் குழம்பு பதமாய் ஆனவுடன் இதைச் செயநீர்க் குப்பியில் வழித்துப்போட்டு வாய்ப் பகுதியை மூடி (அ) குதிரை சாணக் குழியில் புடமிடும் பக்குவப் படிசெய்தும் நீராக்கிக் கொள்ளலாம். (ஆ) கிலாப் (காடிப்புடம்) பக்குவப்படி செய்தும் நீராக்கிக்கொள்ளலாம். (இ) தீயில் புடமிடும் பக்குவப்படி செய்தும் நீராக்கிக்கொள்ளலாம். இவற்றுள் தீப்புடம் பக்குவப்படி செய்வது சிறந்தது. அப்படிச் செய்யும் போது நாள்தோறும் கண்ணாடிக் குப்பியை நன்றாய்க் குலுக்கி வரவேண்டும். இடைவிடாமல் எரித்தும் வரவேண்டும்.

மேற்கண்ட வகைகளில் எந்தவிதமாயினும் ஒரு வகையாய்ச் செய்த நீரை மறுபடியும் வெப்பம் தாங்கும் கண்ணுடிக் குப்பியில் விட்டு, அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து முன்போலக் குழம்புப் பதமானவுடன் செயநீர்க் குப்பியில் வழித்துப் போட்டு முன் செய்ததுபோலவே ஒரு வகையாய் நீராக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் குழம்பாகச் சுண்ட வைத்தும் பின்பு நீராக்கியும் கொள்ளவேண்டும்.

இவ்விதம் தயாரிக்கப்பட்ட நீரானது அனேக முறைகளுக்கு பயன்படும். இதனுல் இரசத்தைக் கட்டி அனேகவித தொடர்புகள் ஏற்றலாம். மேலும் அறிவாளிகள் இதன் முறைகளேத் தெரிந்து செய்வார்கள், இதன் சிறப்பான முறைகளே இதன் திறவுகோலில் எழுதுவோம்.

## 153. அப்பிரக நீர் (வேறு)

அப்பிரக நவநீதம் 1 பங்கு. கட்டின சாரத்தூள் 7 பங்கு. இவ்விரண்டையும் சேர்த்து வெப்பம் தாங்கும் பீங்கானில் இட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து, காரமான காடியைத் தெளித்து, சாரமானது புகைந்து போகாமல் மெதுவாய் வறுத்து வரவேண்டும். இவ்விதம் நான்கு சாம நேரம் வறுக்கவேண்டும். அடிக்கடி காடியைத் தெளித்தும் வரவேண்டும், பின்பெடுத்துச் செயநீர்க் குப்பியில் விட்டு வாய்ப்பகுதியை மூடிக் குதிரைச் சாணக் குழிப்புடத்தின் பக்குவப்படி நாற்பது நாள் வைத்தெடுக்க நீராகிவிடும். இவ்விதம், கட்டாத சாரத்தையும் சேர்த்துச் செய்துகொள்ளலாம். ஆனுல், குணம் கொஞ்சம் இடை நிலையாய் இருக்கும்.

## 154. அப்பிரக நீர் (வேறு)

தேவையான அளவு அப்பிரக நவநீதத்தைக் கல்வத்திலிட்டு, காடியைச் சிறுகச் சிறுகவிட்டு, 1 நாளரைத்துச் சிறு ரொட்டிகளாகத்தட்டி ஓட்டில் வைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து, இருபுறமும் புரட்டிக் கொடுத்து, ஈரஞ் சுண்டினவுடன் ஓட்டுடன் விட்டுக் குளிர ஆறினபின், கல்வத்திலிட்டுப் பொடித்து முன் போலவே காடியை விட்டு, 1 நாளரைத்து முன்போலவே சிறு ரொட்டிகளாகத் தட்டி ஓட்டில் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்விதம் மூன்று தடவைகள் செய்த பின்பு, கல்வத்திவிட்டு, காடித் தீநீரைச் சிறுகச்சிறுக ஊற்றி, மூன்றுநாள் கைவிடாமலரைத்து ஒரு கண்ணுடிக் குப்பியில் போட்டு, துரிஞ்சி

நாரத்தம்பழச்சாறு, சிறுபிள்ளையின் சிறுநீர் என்னும் இருவகை நீர்களையும் சமபாகமாய்ச் சேர்த்து, மருந்தின்மீது நாலங்குலம் நிற்கும்படியாக விட்டு வாய்ப்பகுதியை மூடி, ஈரமான இடத்தில் புதைத்து ஒரு மாதம் சென்றபின் எடுத்துச் சமனளவு முள்ளங்கிக் கிழங்கின் சாற்றைச் சேர்த்துக் காய்ச்சி நீராக்கிக் கொள்ள வேண்டும். இதைச் செய்து முடிக்க கைபாகமும் பழக்கமும் வேண்டும்; நூதனமாய்ச் செய்கிறவர்கள் சில காலங்களில் மயங்க நேரிடும்.

## 155. அப்பிரக நீர் (வேறு)

அப்பிரக நவநீதம் 1 பங்கு, கட்டினசாரம் $1\frac{1}{2}$ பங்கு. இவ்விரண்டையும், சேர்த்துப் பொடித்து முள்ளங்கிக் கிழங்கின் சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு 1 நாள் முழுவதும் அரைத்து, மறுநாள் ஒரு மண் பாண்டத்தில் வைத்து,அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து முன் கூறிய கிழங்கின் சாற்றையே தெளித்து வறுக்கவேண்டும். இவ்விதம் 2 அல்லது 3 சாமம் வறுத்தெடுத்துக் கல்வத்திலிட்டு முன் கூறிய சாற்றையே விட்டு முன்போலவே 1 நாள் அரைக்க வேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் மூன்று தடவைகள் அரைத்தும் மூன்று தடவைகள் வறுத்தும் எடுத்துச் செயநீர்க் குப்பியில் இட்டு, அதன்மேல், 4 அல்லது 5 அங்குலம் நிற்கும் படியாக முள்ளங்கிக் கிழங்கின் சாற்றைவிட்டு வாய்ப்பகுதியை மூடிக் குதிரைச் சாணக் குழியில் புடமிடும் பக்குவப்படி இரண்டு மண்டலம் செய்ய நீராகிவிடும்.

## 156. அப்பிரக நீர் (வேறு)

அப்பிரக நவநீதம் 1 பங்கு. கல்லுப்புத் தூள் $1\frac{1}{2}$ பங்கு. இவ்விரண்டையும் கலந்து ஒரு பாண்டத்தில் இட்டு ஐந்து பங்கு சவுக்கார நீரைவிட்டு, அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து வர வேண்டும். இவ்விதம் எரிக்கையில் ஒரு சாமத்திற்கொரு தடவை குறைந்த நீர் அளவுக்குப் புதிய சவுக்கார நீரைவிட்டுச் சரிப்படுத்த வேண்டும். இவ்விதம், 12 சாமம் எரித்து ஆறவைத்துத் தண்ணீர் விட்டுத் தேய்த்துக் கழுவி, அப்பிரகம் வீணாகாமல் நீர் தெளியத் தெளிய இறுத்து நீக்கி, நீரெல்லாம் நீங்கி உலர்ந்த பின்பு நவநீதத்தின் முன்னளவு நவாச்சாரத்தைச் சேர்த்துக் கல்வத்தி லிட்டு, முள்ளங்கிக் கிழங்கின் சாற்றைச் சிறுகச்சிறுக ஊற்றி, 3 நாள் அரைத்துக் கண்ணாடிக் குப்பியில் இட்டு வாய்ப் பகுதியை மூடிச் சாணக் குழியில் புடமிடும் பக்குவப்படி இரண்டு மண்டலம் வைத்தெடுக்க நீராகி இருக்கும்.

## 157. அப்பிரக நீர் (வேறு)

அப்பிரக நவநீதம் 24 பலம் (840 கிராம்) படிக்காரத் தூள் 24 பலம் (840 கிராம்). அப்பிரக நவநீதத்தை ஒரு கண்ணுடிக் குப்பியில் இட்டு, அதன்மேல் படிக்காரத் தூளைத் தூவிக் குப்பியின் வாய்க்கு மூடியிட்டு 3 வராகன் எடை ($10\frac{1}{2}$ கிராம்) பூங்காவியை யும், 3 வராகன் எடை($10\frac{1}{2}$ கிராம்) வெண்காரத்தையும் நீர் ஊற்றி மைபோல அரைத்து, சீலைத் துண்டில் தடவி குப்பியின் வாயின் இடைவெளியை மூடி, ஒருமண் பாண்டத்தில் $1\frac{1}{4}$ படி சிறுபிள்ளை யின் சிறுநீரையூற்றிப் பாண்டத்தின் அடிமட்டத்திற்குமேல் நான்கு அங்குலம் நிற்கும்படியாகக் குப்பியைத் தொங்க வைப்பதுமன்றிச் சிறுநீரானது குப்பியின் கழுத்து மட்டம்வரை இருக்கும்படி பாண்டத்தின் வாயைமூடி சீலை மண் செய்து அடுப்பேற்றி, ஓர் இரவு பகல் எரித்து ஆறவிட்டெடுக்க நீராகி இருக்கும். எரிப்புத் தக்கவிதமாய் இராவிட்டால் நீராகாதாகையால், மறுபடியும் வைத்து எரித்துக்கொள்ள வேண்டும். இதில் எரிப்பு முதலிய பாகங்கள் தப்பினல் முறை தவறிப்போகும்.

## 158. அப்பிரக நீர் (வேறு)

பருமனுன முள்ளங்கிக் கிழங்கைக் காம்புப் பக்கத்தில் வட்ட மாய் அறுத்து அதற்குள்ளிருக்கும் தசையில் அரைப்பகுதியைக் குடைந்தெடுத்து நீக்கி, அதில் அப்பிரக நவநீதத்தைச் செலுத்தி, வாயில் முன்னறுத்த வில்லையை வைத்து நூலால் வலிமையாய்க் கட்டிவிடவேண்டும். இவ்விதம், தேவையான கிழங்குகளைத் தயாரித்து ஒரு பீங்கான் பாண்டத்தில் வைத்து மேலும் பீங்கான் பாண்டத்தின் இடைவெளியை அடைத்துக் குதிரைச் சாணக் குழியில் புடமிடும் பக்குவப்படி 1, 2 அல்லது 3 வாரங்கள் காலத்துக்கு ஏற்றவாறு வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். எல்லா முறைகளிலும் இது இலகுவானதும் நுட்பமானதுமாகும். வெள்ளை அப்பிரகத்தில் செய்யப்பட்ட நீரானது வெண்மையாய் இருக்கும். கிருட்டிண (கறுப்பு) அப்பிரகத்தில் செய்யப்பட்ட நீரானது கறுப்பாயிருக்கும்.

பின்பு இந்த நீரை முன்சொல்லி இருக்கிறபடி வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொண்டால் மேலும் சிறப்பானதாகும்.

ஆனுல் மேற்கண்ட முறையில் சேர்க்கப்படும் அப்பிரகத்தைச் சிறுநீரில் பக்குவப்படுத்திக் கொண்டால் சிறந்த குணமுடைய தாய் இருக்கும். அதன் விளக்கமாவது.

## 159. அப்பிரகப் பக்குவம்

அடி கனத்த பீங்கான் பாண்டத்தில் அப்பிரக நவநீதத்தை இட்டு, அதன்மேல் நாலங்குலம் நிற்கும்படி சிறுநீரை விட்டு ஊறவைக்கவேண்டும். ஒவ்வொரு மூன்றும் நாளும் சிறுநீரை மாற்றிப் புதிய சிறுநீரை விட்டு வரவேண்டும். இவ்விதம் 40 நாள் செய்து முடிவில் கழுவி உலர்த்தி எடுத்துக் கொள்வதே சிறுநீர்ப் பக்குவமாகும். ஆனுல் கழுவும்போதும் எடுக்கும்போதும் சரக்கு வீணுகாமல் கவனமாய் இருக்கவேண்டும்.

## 160. அப்பிரக நீர் (வேறு)

நரிவெங்காயம் அல்லது காட்டு வெங்காயம் எண்பதை இடித்துச் சாறு பிழிந்து, அப்பிரக நவநீதத்தை ஒரு கண்ணுடிக் குப்பியில் இட்டு, அதன் மேல், 6 அல்லது 8 அங்குலம் இருக்கும் படியாக முன்கூறிய சாற்றைவிட்டுக் கடும் வெய்யிலில் வைத்து வரவேண்டும். நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் நன்ருய்க் குலுக்கியும் வரவேண்டும். இவ்விதம் சிலநாட்கள் செய்துவரின் அப்பிரகம் நீராகி விடுமென "குலாஸத்துல் கீமியா" என்னும் நூலில் சொல்லப்பட்டிருக்கிறது.

**குறிப்பு :—**அப்பிரகநீர், அப்பிரகரசம் முதலிய அப்பிரக சார்பான முறைகளைப்பற்றி உருது இரசவாத மருத்துவர்கள் வெகு வாய்ச் சிறப்பித்துச் சொல்லியிருக்கின்ருர்கள்; சித்தமருத்துவ இரசவாத மருத்துவர்கள் இம்முறைகளில் மேற்கண்டவர்களுக்குக் குறைந்தவர்களல்லர். இதைப்பற்றி அரபியில் ஒரு பழமொழியும் வழங்குகிறது. அதாவது, மன்ஹல்லத் தலக்—இஸ்தக்ன மின்கலக் என்பது இதன் பொருள். "அப்பிரகம் நீராஞல் எப்போதுங் குறைவில்லை" என்பதே.

முன் சொல்லப்படாத வேறு சில சரக்குகளை நீராக்க வேண்டி யிருந்தால், "நீராக்கும் பொதுவிதி" என்னும் பாடத்தில் சொல்லப்பட்டிருப்பது போலவும் முன் சொல்லப்பட்டிருக்கும் சரக்குகளுக்கு இனமானதை அதற்கினமானதைப் போலவும் செய்துகொள்ளவேண்டும். மேலும் சில சரக்குகளைப் பதங்கமேற்றி யும், வெள்ளையாக்கியும் நீராக்க வேண்டியது முக்கியமானது. ஆகையால் அம்முறைகளுள் சிலவற்றையும் இங்கெழுதுவோம்.

## 161. கந்தப் பதங்கம்

நெல்லிக்காய்க் கந்தகத்தைத் தேவையான வரையில் கல்வத்திலிட்டுக் காரமானதும் கலப்பற்றதுமான காடியைச் சிறுகச் சிறுக ஊற்றி, கைவிடாமல் 3 நாள் அரைத்து, நிழலில்

உலர்த்தவேண்டியது. ஈரமில்லாமல் நன்ருய் உலர்ந்துபோன பின்பு பொடித்துக் கலப்பற்ற கெட்டித் தேனை விட்டுக் குழைத்து புளிப்பேறுகிற வரையில் வைக்கவேண்டும். இதற்குச் சுமார், 3 முதல் 7 நாட்கள் செல்லும்; பின்பு பதங்கப் பாண்டத்தில் இட்டு முறைப்படி பதங்கமேற்றி ஆறினபின் இறக்கிப் பதங்கத்தை எடுத்துக்கொள்ளவும். இப்பதங்கத்தில் கொஞ்சம் எடுத்து நெருப்பின் மீது வைத்தால் புகையாமல் குப்பெனப் பற்றி ஓடி விடவேண்டும். அப்படியில்லாமல் புகைந்தால் சரியாய்ப் பக்குவப்படவில்லையென உறுதி செய்துகொண்டு, முன்போலவே காடிவிட்டரைத்து நிழலில் காயவைத்துத் தேனில் குழைத்துப் புளிப்பேற்றி மறுபடியும் பதங்கித்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் புகையாமல் ஓடுகிற வரையில் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். இதைப் பாகப்படி கைமுறையாய்ச் செய்யின் முதல் தடவையிலேயே சோதனைக்குச் சரியாக இருக்கும்; தப்பினுல் மூன்று தடவைக் குள்ளாயினும் சரிப்பட்டுப் போகும்

இந்தப் பதங்கத்தைக் கடைக் கந்தகத்தைச் சேர்க்கவேண்டிய பாகங்களில் அதற்குப் பதிலாகச் சேர்த்துப் பயன்படுத்தினுல் இதன் குணத்தை என்னென்று சொல்லக்கூடும். இதுவே கந்தகத்தின் சிறந்த தூய்மை ஆகையால், இப்பதங்கத்தைத் தனியாகவும் உள்ளுக்குப் பயன்படுத்தலாம். மேலும் கந்தக இராசாயனம் என்ற பாகத்தில் கந்தகத்திற்குப் பதிலாய்ச் சேர்த்தால் அதில் சொல்லப்பட்டிருக்கும் எல்லா நோய்களும் தப்பாமல் தீரும். இதை நீராகவும், செயநீராகவும், செந்நிறமாகவும் செய்து கொள்ளலாம்.

## 162. கந்தகப் பக்குவம்

தேவையான அளவு நெல்லிக்காய்க்கந்தகத்தைப் பொடித்து இதற்குச் சமனெடை கோழி முட்டையின் மஞ்சள்கருவைச் சேர்த்து இரும்புச் சட்டியிலிட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து, இரும்புக் கரண்டியால் இடைவிடாமல் துழாவி வரவேண்டும். ஈரப்பசை இல்லாமற் சுண்டினவுடன் இறக்கிக் குளிர ஆறின பின்னர், எடுத்துப் பயன்படுத்திக்கொள்ளவும். இது சிவந்த நிறமாயிருக்கும்; வெள்ளியின்மீது கொடுத்தால் கொஞ்சம் மஞ்சள் நிறத்தைச் கொடுக்கும். அவ்விதம் ஆராய்ச்சிக்கு ஒத்திராவிட்டால், மறுபடியும் இதற்குச்சமன் மேற்கூறிய முட்டை மஞ்சள் கருவைச் சேர்த்து முன்போலவே செய்யவேண்டும். இவ்விதம் சோதனைக்கு ஒத்து வருகிறவரையில் செய்துகொள்ள வேண்டும். கந்தகந் தீய்ந்து போகாமற் கவனமாய் இருக்க

வேண்டும். எந்தப் பாகத்திற்கும் கைபாகம் தேர்ந்திருக்கவேண்டும். அடிக்கடி வற்புறுத்தி வருகின்றோம். அதற்காகக் கனவான்கள் மன்னிக்க வேண்டியது. இது சிவந்திருப்பதால் சிவப்புக் கந்தத் திற்குப் பதிலாகப் பயன்படுத்திக்கொள்ளலாம். இதுவும் கந்த கத்தின் ஒரு வகைத் தூய்மை அல்லது பக்குவமாம். இதனையும் மேற்கண்டபடி எல்லாப் பயன்படுத்தும் முறைகளிலும் சேர்த்துக் கொள்ளலாம்.

## 163. கந்தகப் பதங்கம் (வேறு)

நெல்லிக்காய்கந்தகம் 1 பங்கு. தூய்மை செய்த இரும்பு அரப்பொடி 1 பங்கு. இவ்விரண்டையும் கல்வத்தில் இட்டு, காரமான காடியைச் சிறுகச் சிறுக ஊற்றி, 2 சாமம் அரைத்து ஓட்டில் இட்டுக் கரிநெருப்பின்மேல் வைத்துப் புகையாமல் வறுக்கவேண்டும். வறுக்கும்போதும் காடியைத் தெளித்து வரவும் வேண்டும். சுமார் 2 அல்லது 3 மணிநேரம் வறுத்து முடிவாய் ஈரமில்லாமல் செய்து அதனுடன் கால்பங்கு சாரப் பதங்கத்தைச் சேர்த்துக்காடி விடாமல் அரைத்து பதங்கப் பாண்டத்தில் வைத்து பாகப்படி பதங்கித்துக் கொள்ளவேண்டும். இது பனிக்கட்டியைப் போல் வெண்மையாய் இருக்கும். மறுபடியும் இப் பதங்கத்திற்குச் சமனெடை தூய்மைசெய்த இரும்புப் பொடியைச் சேர்த்துக் கல்வத்திலிட்டு முன் காடிவிட்டு 2 சாமமரைத்து ஓட்டில் இட்டுக் கரிநெருப்பின்மீது வைத்துக் காடியைத் தெளித்து வறுத்தெடுத்துப் பதங்கத்திற்குக் கால்பங்கு சாரப் பதங்கத்தைச் சேர்த்து காடி விடாமல் அரைத்துப் பதங்கப் பாண்டத்தில் வைத்து முறைப்படி பதங்கித்துக் கொள்ளவேண்டும்.

இவ்விதமே இப்பதங்கத்தை மீண்டும் மீண்டும் ஏழு தடவை கள் இரும்புத்தூளைச் சேர்த்துக் காடியை ஊற்றி அரைத்தும், காடியைத் தெளித்து வறுத்தும், பின்பு நவாச்சாரப் பதங்கத் தைச் சேர்த்துக் காடியை விடாமல் அரைத்துப் பதங்கித்துக் கொள்ளவும். இதைப் பதங்கிக்கும்போது அடுப்பின்மீது வைத்து விறகால் எரிக்கக் கூடாது. தென்னை ஓலையால் அல்லது சணல் குச்சியால் அல்லது சுள்ளி விறகால் அல்லது இதைப்போன்ற இலேசான வேறு வகைகளால் எரிக்கவேண்டும்; அல்லது கரி நெருப்பின்மீது வைத்துப் பதங்கித்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் பதங்கிப்பதில் அதிகக் கவனமாகவே இருக்கவேண்டும். ஏனெனில், தீ அதிகப்பட்டுவிட்டால் இரும்பு உருகிச் சிட்டங் கட்டிப்போகும். அல்லது செந்தூரமாகிவிடும். தீயானது குறைந்து விட்டால் பதங்கமேறாமல் வைத்த மருந்து வீணாகும். ஆகையால்,

கந்தகத்தைப் பதங்கிப்பதில் அறிவுக் கூர்மை வேண்டும். இவ்விதமே இரும்பு அரப்பொடியின் எடையையும் நிச்சயித்து உறுதிப்படுத்த நேரிடும், அதாவது சில சமயம் இதில் கண்டிருப்பதுபோலச் சம அளவும், சில சமயம் $\frac{3}{4}$ அல்லது $\frac{1}{2}$ எடையும் வேண்டியிருக்கும். இந்த முறைகள் எல்லாம் பழகப் பழக பயிற்சித் தெளிவு முதலியவைகள் தனக்குத்தானே புலப்பட்டுப்போகும்; இப்பாகத்தைச் செய்துபழகாமல் புத்தகத்தில் உள்ளதைப் படித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதில் மாத்திரம் எவ்விதப் பயனும் உண்டாகாது. பாடுபட்டால் பயனுண்டாகும்.

**விண்ணப்பம்** :—பின் காணும் சில செய்திகளை எழுத மனமில்லையாயினும் சில தேவையான காரணங்களால் அவற்றை எழுத வற்புறுத்தப்பட்டவனாய் இருக்கிறேன். அவையாவன : இந்த நூலில் சொல்லப்பட்டிருக்கும் முறைகளுள் அனேகம் மிகவும் அருமையானவைகள். அவைகளெல்லாம் வழிவழியாகவும், இரகசியமாகவும் வைக்கத் தகுந்தவை; பயிற்சி முதிர்ந்தவர்களாகிய மகான்களுக்குத் தொண்டுசெய்து, அவர்கள் மனமிரங்கி, அருள்கூர்ந்து செய்யப்பட்டவை. அடியேனது வாழ்நாள், வருவாய், பல நூல் ஆராய்ச்சி என்னும் இவற்றுள் பெரும் பகுதி செலவிட்டு அறிந்து உணர்ந்து கொண்டவை. அவ்வளவு துன்பத்தோடு உரிமைப்படுத்திய முறைகளை இவ்வளவு இலேசாய் வெளியிடவேண்டிய காரணமென்னவெனின்,

நமது நூல்களைக் கைக்கொண்டு கற்கும் ஒவ்வொருவரும் அடியேனது துன்பத்தை அறிந்தும், நூலின் அருமை பெருமைகளைச் சீர்தூக்கியும், நம்மைப் பலவிதத்தாலும் கனப்படுத்தி, ஆதரித்து வருவதுமே முதற்காரணமாகும்.

மிகவும் அருமையான இந்த முறைகளை மனத்தில் வைத்திருப்பதால், அல்லது இரகசியமாய் ஏட்டில் எழுதி வைத்திருப்பதால் அதற்கேதேனும், விபத்து நேரிட ஏதுவுண்டு. ஆகையால், அவற்றை வெட்டவெளியாய் அச்சிட்டுவிட்டால் என்றும் அழியாதிருக்குமென்பது இரண்டாவது காரணமாகும்.

இந்த அருமையான பாகங்களை இரகசியமாய் வைத்து சொந்தமாய்ப் பயன்படுத்தி வருவதால், அவற்றால் உண்டாகும் பயனை அனுபவிப்பவர்கள் மிகவும் குறைவானவர்களாய் இருப்பார்கள். இவ்விதம், வெளிப்படுத்துவதால், அனேகர் அனேக பாகங்களைச் செய்து பயன்படுத்தி, அவற்றால் உண்டாகும் பயனை அடைவார்கள். மருத்துவர்கள் அனேகமாய்ப் பெருகி வருவார்கள்.

இதனால் உயிர்களிடம் அன்பு, பிறருக்கு உதவுதல், புண்ணியம் முதலியவை உண்டாகும் என்பது திண்ணம். இது மூன்றும் காரணமாகும்.

இம் முறைகளால் பயனடையும் ஒவ்வொருவரும் அடியேனை மறவாமல் எப்போதும் மனதில் நன்றியுள்ளவர்களாயிருப்பார்களென்பது நான்காம் காரணம். இன்னும் பல காரணங்களும் உள்ளன.

ஆனால், இப் பாகங்களின் அருமையையும் பெருமையையும் அறியாத சிலர் மற்ற அச்சுப் புத்தகங்களைப் போலவே இதையும் இணைத்து விடுவார்கள். அவர்கள் அப்படிச் செய்வதற்கு அறியாமையே காரணமாகும்.கோழிக்கு முன் அல்லது விலங்குக்கு முன் இரத்தினங்களையும் முத்துக்களையும் வைத்தால், அவற்றின் அருமையையும் உயர்வையும் அவை தெரிந்து கொள்ளமாட்டா. ஆனால், அவற்றுக்கு வேண்டியது தவிடாகையால், இரத்தினம் முதலியவைகளின் அருமையை எவ்விதம் அவை அறிந்து கொள்ளும். இரத்தினம் முதலியவை அரசர்களின் முடி முதலிய இடங்களில் எவ்விதம் ஒளி வீசிக் கொண்டிருக்கும்! அவற்றின் அருமைகளைத் தெரிந்தவர்களால் அவை எவ்விதம் போற்றப் படும். அவ்விதமே நூல்களைக் கற்றுணர்ந்த பண்டித சிரோன்மணிகளிடத்தில் இம் முறைகள் சிறப்படையாமல் போகா. சிலரோ புத்தகத்தின் பாரக் கணக்கையும் அதன் பருமனையும் கணக்கிட்டு இலேசாய் எண்ணுவார்கள். இதனால் அடியேன் கருத்தென்னவெனின், இந் நூலையும் மற்ற நூல்களைப் போல அவமதிப்புக் செய்யாமல், மருத்துவத்தில் முழுமையான புலமையைப் பெற விரும்பும் ஒவ்வொருவரும் இதனைக் கைக் கொண்டு, இதில் சொல்லப்படும் அரிய முறைகளைச் செய்து முடித்து, மானிடர்களுக்குண்டாகும் பெரிய நோய்களான தீராத நோய்களைத் தீர்த்து புண்ணியம், பொருள் கீர்த்தி முதலியவைகளை அடைந்து, என்றென்றும் யாவரும் இன்பமாய் வாழ்ந்திருக்க வேண்டுமென்பதேயாகும்.

## 164. இரசப் பதங்கம்

(அ) ஆரத்தி கற்பூரம் 8 பலம் (280 கிராம்) கறியுப்பு 32 பலம் (1120 கிராம்) இவ்விரண்டையும் தனித்தனியே இடித்துத் தூள் செய்து, பின்பு இரண்டையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கல்லுரலில் இடித்து, ஒரு மண்பானையிலிட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து நன்றாய் வறுத்துக் கொள்ளவேண்டும். இத் தூளைப் பதங்கப்

பாண்டத்தின் கீழ்ப்பானையிற் போட்டு, கையால் நன்ருய் அழுத்திச் சமமாய்ச் செய்து, அதன் மத்தியில் விடும் பாதரசம் கொள்ளும்படியான ஒரு சிறுகுழி செய்து கொள்ளவேண்டும்.

(ஆ) கறியுப்பு 8 பலம் (280 கிராம்), செங்கற்பொடி 8 பலம், கறியுப்பை இடித்துத் தூள் செய்து செங்கற் பொடியையும் அதனுடன் சேர்த்து மறுபடியும் இடித்து, நன்ருய்க் கலக்கச் செய்து; வேறு பானையில் இட்டு, இதனையும் நன்ருய் வறுத் தெடுத்து மூன்று பங்கு செய்து, இரண்டு பங்கை முன் தயாரித்து வைத்திருக்கும் கற்பூர உப்பின்மீது குழியுள்பட சமமாய்ப் பரப்பி விடவேண்டும். ஆனல் குழியிலுள்ளதை நன்ருய் அழுத்தி முன்போலவே பள்ளமாயிருக்கும்படி செய்யவேண்டும். பின்பு எட்டுபலம் *வாலை இரசத்தை அதாவது லிங்கத்திலிருந்தெடுத்த இரசத்தை அக்குழியில் விட்டு, அதன்மேல் மீதியாய் வைத்திருக்கிற உப்பு, செங்கற் பொடியைத் தூவி, மேற் பதங்கப் பானையை மூடி முறைப்படி சீலைமண் முதலியவைகள் செய்து காயவைத்து அடுப்பின் மீதேற்றி, 12 சாமம் காடாக்கினியாய் எரிக்கவேண்டும். எரிக்கும்போதும் பதங்கப்பாகத்தில் சொல்லி இருப்பது போலவும் செய்துவரவும் வேண்டும். இவ்விதம் செய்து ஒரு நாள் ஆற வைத்து மறுநாள் மெதுவாய்ப் பிரித்து, மேற் பாண்டத்தின்மீது ஏற்றியிருக்கும் பதங்கத்தைத் தகுந்த கருவியால் சுரண்டி எடுத்துக் கொள்ளவேண்டும். இம் முறையைத்தான் இரசவாத முறைகளிலும் மருத்துவ முறைகளிலும் பயன்படுத்தப்படுகிறது இதுவும் ஒருமுறை தயார் செய்யப்பட்டது மறுமுறை மேலுக் கேருது. அதாவது பதங்கிக்காது. நாம் இவ்விதம் பக்குவப் படுத்தின இரசத்தை மற்ற முறைகளோடு சேர்க்காமலும், சோம்பலாய்த் துன்பத்தைக் கருதிப் பின்வாங்கி கடை ரசத்தை வாங்கிச் சேர்ப்பதாலும், செய்பாகம் தெரியாமையாலும் பொறுமையின்றி அவசரப்படுவதாலும், நாம் பலவிதமாக ஏமாந்து போகின்ருேம்.

இப் பதங்கத்தையும் முன் சொல்லியிருக்கிற கந்தகப் பதங் கத்தையும் சேர்த்துப் பாகப்படி செந்தூரித்தால், அது சஞ்சீவிக்கு (மரணத்தைத் தடுக்கும் மருந்து) ஒப்பென்பதில் சிறிதும் ஐயமில்லை. மேலும், இப் பதங்கத்தை நீராக்கி அங்குச் சொல்லி இருப்பதுபோல செய்யின் அருமையான பாகங்களும் கைகூடு மென்பதில் தவறேதுமில்லை.

---

* இதன் முறை பின்னெழுதப்படும்.

## 165. இரசப் பதங்கம் (வேறு)

எட்டுப் பலம் வாலை இரசத்தை அல்லது பாகப்படுத்தின ரசத்தைக் கல்வத்திலிட்டு, சுண்ணநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி மூன்று நாள் அரைக்கவேண்டும். பின்பு, 84ஆம் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கும் முறைப்படி செய்த படிக்கார நீரை ஊற்றி 6 நாள் அரைக்கவேண்டும். இதன்பின்பு பதங்கப் பாண்டத்தின் கீழ்ப்பானையில் 16ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி உப்பைத் தயார்செய்து இரசத்தை விட்டு அங்குச் சொல்லி இருக்கிறபடியே பதங்கித்துக் கொள்ளவேண்டியது.

இவ்விதம் தயாரித்து வைக்கப்பட்ட பதங்கத்தை இரசவாத முறைகளிலும் மருத்துவ முறைகளிலும் சேர்ப்பதால், பலவகை நன்மைகளுண்டாகும். இதனை முன்சொன்னபடி நீராக்கியும் பயன்படுத்திக் கொள்ளலாம். இதனையே மீண்டும் மீண்டும் இரண்டு அல்லது மூன்று தடவைகள் காலத்துக்குத் தக்கவாறு செய்துகொண்டால் நெருப்பிற் கோடாமல் நிலைத்து நிற்கும். இது சேர்க்கப்படும் முறைகளாலும் சிறந்த முடிவுகள் உண்டாகும்.

## 166. இரசப் பதங்கம் (வேறு)

ஒரு பங்கு கருவங்கத்தை உருக்கி, இரண்டு பங்கு வாலை இரசத்துடன் கலந்து கல்வத்திலிட்டு, ஒரு பங்கு நவாச்சாரத்தையும் சேர்த்து நன்றாய் மென்மையாகும் வரையில் 1 நாள் அரைத்து மாசில்லாத பதங்கப் பாத்திரத்தில் வைத்துப் பாகப்படி செய்து, 12 மணிநேரம் பெருந்தீயாய் எரித்துப் பதங்கித்துக் கொள்ள வேண்டும். பின்பு இந்தப் பதங்கத்தை நிறுத்துக் குறைந்த எடை முன் கூறிய இரசத்தையும், நவாச்சாரத்தையும் சேர்த்து முன் போலவே ஒருநாள் அரைத்து நன்றாய் நைப்பானவுடன் முன் போலவே பதங்கித்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஒவ்வொரு தடவையும் குறையும் இரசத்தையும், நவாச்சாரத்தையும் சேர்த்து அரைத்துப் பதங்கித்து வரவேண்டும்; ஒவ்வொரு தடவையும் பதங்கமானது கறுப்பு நீங்கி வெளுத்து வரும்; முடிவாய்க் கற்பூரத்தைப் போல மருமாசு முதலியவை இல்லாமல் தூய்மையாகும் வரையில் பதங்கித்துக் கொள்ளவேண்டும்.

இந்தப் பதங்கமானது அனேக முறைகளுக்குப் பயன்படும். அவற்றுள் பின்சொல்லப்படுவது ஒன்றாகும்.

## 167. இரச நீர் (வேறு)

முன்கண்ட பதங்கத்தைச் செயநீர்க் கண்ணாடிக் குப்பியில் போட்டுப் பாகப்படி செயநீர்க் குழியில் வைத்து அல்லது தீப்புடம் பாகப்படி செய்து நீராக்கிக் கொள்க; இந்த நீரானது வெண்ணிற மாயிருக்கும். இந்த நீரில் தாமிரத் தகட்டைக் காய்ச்சித் தோய்த்தால், உள்ளும் புறமும் வெளுத்து வெள்ளியைப் போலாகி விடும். இந்த நிறம் மாறாது. இந்தப் பாகமானது பலதடவை பயிற்சி செய்து பழக்கத்தினால் வெற்றி கண்டது. செய்முறை தப்பினால் சோதனைக்கும் நிலைக்காது என அறியவேண்டும். இது சார்பான வேறு முறைகளை வந்த இடத்தில் காண்க.

**குறிப்பு :** இதற்கு முன்னும் பல இரசப் பதங்க முறைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. மருத்துவ முறைகளுக்கும் இரசவாத முறைகளுக்கும் இங்குச் சொல்லப்பட்டிருப்பவை போதுமானவை களாகையால், இம் மட்டில் நிறுத்தப்பட்டது.

### பாடாணம்

பாடாணமானது உயிர்ப் பொருள்களில் ஒன்றெனச் சில அறிஞர்களால் எண்ணப்பட்டிருக்கிறதென நாம் முன் சொல்லி இருக்கின்றோம்; இதன் பதங்கம் முதலியவைகளைச் சொல்லும் முன் அதன் பிறப்பு முதலிய சில கருத்துகளைத் தெரிந்து கொள்வோம்.

பாஷாணம் அல்லது பாடாணம் என்னும் சொல்லின் பொருள், கல், நஞ்சுச் சரக்கு என்பவைகளே. அதாவது கல்லைப்போலக் கடினத் தன்மை உடையதும் நஞ்சின் குணமுடையதும் தனிப் பொருளானதுமான ஓர் உலோகத்திற்குப் பெயர்; ஆகையால் பாடாணம் என்பது உருவத்தில் கல்லைப் போன்று, நஞ்சின் குணத்தையுடைய ஒவ்வொன்றிற்கும் பொதுப் பெயராம். இந்தச் சொல்லானது பண்டைக்காலத்தில் ஐயப்படக் கூடியதாய் இருந்தது போலவே தற்காலத்திலும் ஐயப்பாடு உள்ளதாய்ச் சொல்லலாம். ஏனெனில், மேற்கண்ட இருவகை அமைப்பு களுள்ள பொருள்கள் அனேகம் இருக்கின்றன. வீரம், இரச கற்பூரம், தாளகம், மனோசிலை, லிங்கம் முதலியவைகளும் மேற் கண்ட இருவகைக் குணங்களையும் உடையவைகளே. வெள்ளைப் பாடாணம், கௌரிப் (மஞ்சள் நிறம்) பாடாணம் என்பதும் ஐயப் பாடுள்ளவையே. ஏனெனில், வெள்ளை நிறமுள்ள வீரம், பூரம் என்பவைகளுக்கும், மஞ்சள் நிறமுள்ள தாளகம் முதலியவை களுக்கும் முறையே வெள்ளைப் பாடாணம், மஞ்சள் பாடாணம்

எனவும் சொல்லலாம். ஆனுல் நாம் இங்கு, கருதிய பாடாணத்திற்கு! இந்தியாவில் வெள்ளைப் பாடாணம், சங்குப் பாடாணம் என வழங்கி வருவதேயாகும். இதற்கு அரபியில் "ஸூம்முல் யார்" (Far) எலி நஞ்சு என்றும், "ஷூக்" என்றும் துராபுல்ஹல்க் "தொண்டைமண்" என்றும் "துராபுல் கய்" வாந்தி மண் என்றும் சொல்லப்படுகிறது.

இது சாதாரணமாய் பூமியில் உற்பத்தியாகின்ற பிறவிச் சரக்கு. இது சில சமயம் கலப்பில்லாமல் தூய்மையாய் அகப்படும். ஆனுல், இது சாதாரணமாய் கந்தகம், இரும்பு, தாமிரம் முதவிய உலோகங்களோடு கலந்திருக்கும். இப்படிக் கலந்திருக்கிற சரக்கை வறுத்தால் காற்றிலுள்ள உயிர்க் காற்றுடன் (Oxigen) சேர்ந்து பாடாணம் பதங்கிக்கும். இதுவே வெள்ளைப் பாடாணமாகும். மேலும் மேற்கண்ட விதமாய் இதனுடன் தொடர்புடையதாய் இருக்கும் தாதுப் பொருளையும் பிரித்து விடலாம். இவ்விதம் பிரிக்கப்பட்ட தாதுப்பொருளும் நஞ்சின் தன்மை உடையதே. ஆகையால் அவ்விரு வகைகளையும் அதிகம் கவனமாய்ப் பயன்படுத்தவேண்டும். மேற்கண்ட விதமாய் வெள்ளைப் பாடாணத்துடன் அடுப்புக் கரியைச் சேர்த்து எரித்துப் பதங்கித்ததற்குச் சுயம்புப் பாடாணமெனப் பெயர். இப்போது கடையில் விற்கப்படுவதும் இவ்வகையைச் சேர்ந்ததே. இதற்கு மினுமினுப்பு, ஊதாவண்ணம், எளிதில் நொறுங்குந் தன்மை முதலிய குணங்களுமுண்டு. இதைக் காற்றுப் புகாமல், சிறு தீ இட்டெரித்தால் பதங்கிக்கும். இதை 180° டிகிரி வரையில் எரித்தால், அஃது உருகுமுன் புகைந்து விடும். இது மகா கொடிய நஞ்சு ஆகும். இது தாது, தாது அற்றது என்னும் இரண்டிற்கும் இடை நிலையானது. இது சமமான வெப்பத்தில் ஒருவித மின்சாரத்தை உண்டு பண்ணி அதிக உயர்வான தாதுப் பொருளின் மினுமினுப்பைக் கொடுக்கும். ஆனுல், இது பெரும் பான்மையும் தீமுறுகலை ஒத்திருக்கும்.

தமிழ் நூல்களில் பிறவி 32. வைப்பு 32, ஆக 64 பாடாண வகைகளுண்டெனச் சொல்லப்படுகிறது.

மேற்கண்ட பாடாணமானது மருத்துவம், வாதம் என்னும் இருவகைகளிலும் பயன்படுகின்றது. ஆகையால், இதன் முறைகளையும் தெரிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாததே. ஆகையால், அவற்றின் பற்பல பாகங்களையும் தெரிந்து கொள்ள வேண்டியது முக்கியமே. ஆனுல், அவற்றுள் இங்கு இன்றியமையாததான அதன் பதங்க முறைகளை மாத்திரம் இங்கே எழுதுவோம்.

## 168. பாடாணப் பதங்கம்

தூய்மை செய்யப்பட்ட வெள்ளைப் பாடாணக் கட்டி 1 பலம் (35 கிராம்) இதனை ஒரு தாமிரக் கிண்ணத்தில் வைத்து, அந்தக் கட்டி முழுகும்படியாக வெள்ளெருக்கன் பாலை அல்லது நாட்டெருக்கன் பாலைவிட்டு, அடுப்பில் வைத்துச் சிறுதீயாக விளக்கைப் போல் ஒரு சுடராய் எரித்துக் கட்டியைப் புரட்டிக் கொடுத்துவர, பாலானது சுண்டி கட்டியைப் பிடித்துக்கொள்ளும். ஆறின பின்பு, கட்டியை எடுத்து நீர்விட்டுக் கழுவித் தூய்மை செய்து ஈரமில்லாமல் துடைத்து அல்லது சற்று நேரம் வெய்யிலில் வைத்து ஈரத்தை உலர்த்திக் கொள்ளவேண்டும். இக் கட்டியை சமமான ஒரு சாணக்கியின் மத்தியில் வைத்து, அதனை வாயகன்ற ஒரு சிறு மண்கலயத்தால் மூடி, அடுப்பிலேற்றிக் கலயத்தின் உதட்டைச் சுற்றிலும் நுண்மையாகப் பொடித்த சாம்பிராணித் தூளை வைத்துத் தீயை மெதுவாய் எரிக்க சாம்பிராணி உருகிச் சந்தில்லாமல் கலயமானது சாணக்கியில் பிடித்துக்கொள்ளும். ஊமத்தனிலையைப் பிழிந்து அந்தச் சாற்றில் மெல்லிய துணித் துண்டை நனைத்து, கலயத்தின்மேல் முழுவதுந் தடவி ஈரமுண்டாக்கிக் கொண்டு அடுப்பை விளக்கைப்போல தென்னை ஓலையால் இலந்தை விறகால் எரித்து வரவேண்டும். கலயத்தின் ஈரம் உலர்ந்துவிட்டால் உடனே முன்போலவே ஊமத்தனிலைச் சாற்றில் துணியை நனைத்துப் பூசவேண்டும். இவ்விதம் 2 அல்லது 3 சாமம் எரித்து ஆறவைத்து, கலயத்தின் உதட்டைக் கத்தியால் கீறி மெதுவாய் எடுக்க, கலயத்திலும், அதன் உதட்டிலும், பதங்கம் ஒட்டிக் கொண்டிருக்கும். மேற்பூசும் ஈரமானது அதிகமாயிருந்தால் சிலவேளை பற்பமுமாகிவிடும். எவ்விதமாயினும் இது வாதம், மருத்துவம் என்னும் இருவகைகளுக்குமாகும். இதன் சிறப்பான முறை திறவுகோலில் எழுதப்படும்.

## 169. பாடாணப் பதங்கம் (வேறு)

சோடா நீர்ப் புட்டியில் ஏழு சீலைமண் செய்து வெய்யிலில் வைத்து ஈரமில்லாமல் உலர்த்திக் கொள்ளவேண்டும். இதன் பின்பு வெள்ளைப் பாடாணம், நாயுருவி உப்பு, பாகப்படுத்தின பூநீர் இம் மூன்றும் வகைக்குச் சமபாகம், இம் மூன்றையும் கல்வத்திலிட்டு மைபோலப் பொடித்து முன் தயாரித்து வைத்துள்ள கண்ணாடிக் குப்பியில் இட்டு வாய்க்கு மூடியிட்டு, சந்தில்லாமல் சீலைமண் செய்து உலர்த்தி, ஒரு பானையில் நான்கு விரல் உயரம் மணலைக் கொட்டி, அதன் மேல் வைத்துப் பின்பு வைத்த குப்பியில் மறையும்படியாக மணலைக் கொட்டி, அடுப்பேற்றி,

4 சாமம் மட்டான தீயில் எரித்து ஒரு நாள் ஆறவைத்து எடுக்க கண்ணுடிக் குப்பியின் வாயில் பதங்கமேறி நிற்கும். இதைச் சுரண்டி எடுத்துக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும். இப்பதங்க மானது கொடிய நஞ்சாகையால் இரசவாதத் தொழிலுக்கு மாத்திரம் பயன்படுமாம். மருத்துவத்திற்குப் பயன்படாது. இதனை ஐங்கமென்றும் சொல்வதுமுண்டு.

## 170. பாடாணப் பதங்கம் (வேறு)

இனி பின் திராவக அத்தியாயத்திற் சொல்லப்படும் வெடி யுப்புத் திராவகத்தை விட்டுப் பாடாணத்தை 2 சாமமரைத்து முன் சொன்ன முறைப்படி பதங்கித்துக் கொள்ளவும்.

இந்தப் பதங்கத்தைச் சுர மாத்திரைகள், வேறு வகை செந் தூரங்கள் முதலியவைகளிற் சேர்க்க சிறப்பான குணமுண்டாகும். பாடாணம் சார்பான மற்ற முறைகள் பின் சொல்லப்படும்.

## பருப்பொருள்களைப் (தூலச் சரக்குகளை) பதங்கிக்கப் பொதுவிதி.

பருப் பொருள்களைப் பதங்கித்தல் முக்கியமாய் மூவகைப் படும்

(1) பதங்கிக்க வேண்டிய பொருளின் நுண்மையான பொடியைப் பாதரசம், உப்புகள். படிக்காரங்கள் என்னும் இவற் றுள் ஒன்றுடன் கலந்து கல்வத்திலிட்டுச் சார வீரிய நீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, வெண்ணெய் போலாகிற வரையில் அரைத்துப் பதங்கப் பாண்டத்தில் வைத்துப் பாகப்படி செய்தும் தொடக்கத் திலிருந்து இறுதிவரை பெருந்தீயாக எரித்தும் பதங்கித்தெடுத்து அதைச் சூடான சாம்பலில் அல்லது உமிக் காந்தலில் வைத்து அதிலுள்ள ஈரத்தை உலர்த்திக் கொள்ளுதல் வேண்டும்.

உயிர்ப்பொருளைப் பதங்கித்தல், பருப்பொருளைப் பதங்கித்தல் என்ற இருவகைகளுக்கிடையிலுமுள்ள வேறுபாடு பின்வருமாறு:

முன்னதான உயிர்ப்பொருள் இலேசில் இலகுவாய்மேலேறக் கூடிய தன்மையுடையதாகையால், அஃது ஒரே தடவையில் மேலேறிப்போகும். தேவையானல், மேலுள்ளதை மாத்திரம் எடுத்து முன்போலவே மீண்டும் மீண்டும் செய்யவேண்டும். பின்னுள்ளதான பருப்பொருளோ அதிக வருத்தத்தோடு அரிதாய் மேலேறும் தன்மையுடையது ஆகையால், ஒரே தடவையில்

மேலேருது. ஆகையால், மேலேயுள்ளதையும் கீழேயுள்ளதையும் எடுத்து முன்போலவே மீண்டும் மீண்டும் செய்யவேண்டும். மேலும் இது சில தடவைகளிலும் முற்றும் மேலேறிப் போகா தாகையால், பல தடவைகள் அல்லது முற்றும் மேலேறுகிற வரையில் மீண்டும் மீண்டும் பதங்கித்துக்கொள்ளவேண்டும்.

(2) (அ) பருப்பொருளானது வெள்ளையாகிறவரையில் எதையும் தொடர்புபடுத்தாமல், தொடர்ச்சியாய் மீண்டும் மீண்டும் பதங்கமேற்றல். (ஆ) பருப்பொருளை எரித்துக் கரித்து ஒன்றும் கலக்காமல் பதங்கித்தல் ஆகிய இவ்விருவகைகளாலும் அந்தப் பொருளைத் தூய்மை செய்தலே அதன் கருத்தாம்.

(3) பருப்பொருளுடன் பாதரசத்தைத் தொடர்புபடுத்தி அதனுடன் நவாச்சாரத்தையும் சேர்த்துப் பதங்கித்தல்; என்னும் இவைகளே.

பருப்பொருள்களைப் பதங்கிப்பதில் பாதரசமானது நவாச் சாரத்தைக் காட்டிலும் மிகவும் முக்கியமானதும் மேலானதும் ஆகும் எனப் பண்டிதர்களுள் பெரும்பாலோர் கருத்து.

இன்னம், வேறு சில பண்டிதர்களின் கருத்தாவது, பருப் பொருள்களைப் பாதரசத் தொடர்பின்றிப் பதங்கித்தல் கூடா தென்பதே. இவர்கள் கருத்து மிகவும் சரியானதே; ஏனெனில்,

எந்த உயிர்ப் பொருளாயினும் சரியே, எந்தப் பருப்பொரு ளாயினும் சரியே, இவை ஒன்ருேடு ஒன்று கலந்து ஒன்றை ஒன்று உட்கொள்ளும் தன்மையுடையதே பதங்கிப்பதற்குச் சிறந்ததாம். ஆகையால், அவ்வகைப் பொருள்களை ஒன்ருேடொன்று சேர்த்துப் பதங்கிப்பதே அதிகச் சிறந்ததும் பயன்படக்கூடியதுமான முறையாம். இன்னம் இலேசான உயிர்ப் பொருளானது பருப் பொருளோடு சேர்த்துப் பதங்கிக்கப்பட்டால் இலேசாகவே கலந்து பதங்கிக்கும். கனமான உயிர்ப்பொருளானது பருப் பொருளோடு கலந்து பகுங்கிக்கப்பட்டால் அது கனமாகவே கலந்து அதிகமாய்ப் பதங்கிக்கும். இந்தக் காரணங்களினுல் நவாச்சாரத்தைக் காட்டிலும் பாதரசமே பருப்பொருள்களைப் பதங்கிப்பதற்கு மேலானதென விளங்கும்.

## 171. தங்கப் பதங்கம்

தங்கவெள்ளை 1 பங்கு, பாதரசம் 4 பங்கு. இவ்விரண்டையும் சேர்த்து அரைத்து கலந்துகொள்ளவும். பின்பு, நெல்லிக்காய் கந்தகம், படிக்காரம் இவை இரண்டும் வகைக்கு 4 பங்கு. இவைகளை முன் மருந்தோடு சேர்த்து நவாச்சார நீர் விட்டு

4 அல்லது 5 சாமம் செம்மையாய் அரைத்துப் பதங்கப் பாண்டத்தில் பாகப்படி செய்து 4 அல்லது 5 சாமம் தொடக்கம் முதல் இறுதி வரையில் காடாக்கினியாக எரிக்கவும். ஒரு நாள் ஆற விட்டு மறுநாள் பிரித்து நம் முன் சொல்லி இருக்கிறதுபோலவே மேற் சட்டியிலுள்ளதையும் கீழ்ச் சட்டியிலுள்ளதையும் ஒன்ருய்க் கலந்து கல்வத்திலிட்டு முன் கூறிய நவாச்சார நீரையே விட்டு முன்போலவே, 12 அல்லது 15 மணிநேரம் அரைத்து மறுபடியும் பதங்கப் பாண்டத்தில் வைத்துப் பாகப்படி செய்து எரித்து ஆறவிட்டு எடுக்க, எல்லாம் பதங்கித்திருந்தால் நல்லதாம். அப்படியில்லாதிருந்தால் மூன்ரும் தடவையும் முன்போலவே செய்யவேண்டும். இவ்விதம், வைத்த தங்கவெள்ளை எல்லாம் பதங்கமாகிற வரையில் செய்து பத்திரப்படுத்தவேண்டும்.

இத்தங்கப் பதங்கமானது அனேக முறைகளுக்கு உதவியாகிறது. செயநீர், செந்தூரம், பற்பம் முதலியவைகளாகவும் செய்துகொள்ளலாம். இவ்விதம், பதங்கமாக்கித் தகுந்த எந்த மூலிகையின் சாற்றை விட்டரைத்துப் புடம் போட்டாயினும் இலகுவாய்ச் செந்தூரம், பற்பம் முதலியவைகளாகச் செய்து கொள்ளலாம். இப் பதங்கத்தால் இரசவாதத் தொடர்பான முறைகளுமுண்டு. அவை எல்லாவற்றையும் இதன் திறவுகோலில் விபரமாய் எழுதுவோம்.

## 172. வெள்ளிப் பதங்கம்

வெள்ளி வெள்ளை 1 பங்கு, பாதரசம் 3 பங்கு, நவாச்சாரம் 3 பங்கு. இம் மூன்றில் முன்னிரண்டையும் முதலில் கல்வத்தில் சேர்த்தரைத்து இரண்டும் கலந்த பின்பு, சாரத்தையும் சேர்த்து அரைக்கவேண்டும். எல்லாம் நன்ருய்க் கறுத்துப் போகிற வரையில் அரைத்து பதங்கப் பாத்திரத்திலிட்டுப் பாகப்படி செய்து பதங்கிக்கவேண்டும். தீயானது தொடக்கத்திலிருந்து முடிவு வரையில் பெருந்தீயாய் இருக்கவேண்டும். பின்பு குளிர ஆறினபின்பு பிரித்துக் கீழும் மேலும் உள்ளதை எடுத்துத் தேவையானுல் மறுபடியும் பதங்கித்துக் கொள்ளலாம்.

இந்த வெள்ளிப் பதங்கத்தைச் சில பருப்பொருள்களுடன் சேர்த்துப் பக்குவப்படுத்திப் பதங்கிக்கவும் கூடும். இப்பதங்கத்தையும், செந்தூரம், பற்பம், செயநீர் முதலிய பல பாகங்களாகச் செய்துக் கொண்டால் மிகுந்த சிறப்பான குணங்களைக் கொடுக்கும். மேலும் இது இரசவாத சிறந்த முறைகளுக்கும் பயன்படுகின்றது. அதன் விபரமும் இதன் திறவுகோலில் எழுதப்படும்.

## 173. வெள்ளிப் பதங்கம் (வேறு)

வெள்ளி 1 பங்கு. பாதரசம் பங்கு 4. இவ்விரண்டையும் கல்வத்தில் வைத்தரைத்துக் கலந்து கொள்ளவேண்டும். பின்பு இதனை ஒரு கலயத்தில் போட்டு வாய்க்குச் சில்லிட்டு வலுவாய்ச் சீலமண் செய்து அனலில் வெதுப்பி எடுக்கவேண்டும் அல்லது ஓட்டிலிட்டுக் கரிநெருப்பின்மீது புகையாமல் வறுத்துக் கொள்ளலாம். பின்பு பொரித்த படிக்காரத்தூள் கோழிமுட்டை மஞ்சள் கரு என்னும் இரண்டையும் அரைத்துக் குழைத்து அத னுடன் முன் தயாரித்து வைத்துள்ள வெள்ளி வெள்ளையையும் கலந்து இளகப் பதமாய்ச் செய்து கண்ணுடிக் குப்பியில் வைத்து, குப்பியின் மூடி பலமாய் சீலை செய்துலர்த்தி ஒரு பானைக்குள் நான்கு விரல் கன உயரம் மணலைக் கொட்டி அதன்மேல் முன் குப்பியை வைத்து குப்பி மறையும் படியாகவும் மணலைக் கொட்டி ஒரு நாள் எரித்து, ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் எடுத்துக் கல்வத்திலிட்டு, இரண்டொரு பங்கு, கறுப்பில்லாமல் சுத்தமான பொன்னரிதாரத்தை நுண்மையாகப் பொடித்து, கல்வத்திலுள்ள மருந்துடன் சேர்த்து, சாரநீரைச் சிறுகச் சிறுக விட்டு, ஒருநாள் முழுவதும் அரைத்துப் பதங்கப் பாண்டத்தில் போட்டு முறைப்படி செய்து ஆரம்பம் முதல் முடிவு வரையிலும் பெருந்தீயாக ஒரு நாள் முழுவதும் எரித்து, நிறுத்திக் குளிர ஆறின பின்புப் பிரித்தால் கொஞ்சம் அரைகுறையாய்ப் பதங்கித் திருக்கும். பின்பு கீழ்ப் பாண்டத்தில் உள்ளதையும், மேல் பாண்டத்தில் உள்ளதையும் எல்லாம் ஒன்முய்க் கலந்து மறுபடியும் கல்வத்திலிட்டு முன் நவாச்சாரநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி முன் போல ஒருநாள் முழுவதும் அரைத்து முன்போலவே பதங்கப் பாத்திரத்தில் வைத்துப் பதங்கித்துக் கொள்ளவேண்டும். இவ் விதம் வைத்த வெள்ளி வெள்ளையானது பாக்கியில்லாமல் முழு வதும் பதங்கிக்கிற வரையில் மீண்டும் மீண்டும் செய்து கொள்ளவேண்டும்.

இப்பதங்கமானது முன்சொன்னப் பதங்கத்தைக் காட்டிலும் அதிகம் மேலானது. இதையும் செயநீர், செந்தூரம், பற்பம் முதலியவைகளாகச் செய்துக் கொண்டால் சிறப்பான குணங்களை கொடுக்கும். மேலும், இப்பதங்கத்தை வேருெரு வகையாய்ப் பக்குவப்படுத்தி இரசவாத சார்பான சிறந்த முறைகளிலும் பயன்படுத்தப்படுகிறது. அதனை இதன் திறவுகோலில் சொல்லுவோம்.

## 174. தாமிரப் பதங்கம்

தாமிர வெள்ளையை, படிக்கார நீரைவிட்டு அரைத்துப் பின்பு, தண்ணீர் விட்டுக் கழுவித் தூய்மைசெய்து கொள்ள வேண்டும். இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட தாமிர வெள்ளை 1 பங்கு, பாதரசம் 3 பங்கு. இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு அரைத்துக் கலந்துகொள்ளவேண்டும். அதன் பின்பு, மூன்று பங்கு நவாச்சாரத்தைச் சேர்த்து, எல்லாம் ஒன்ருய்க் கலந்து ஒன்றுபடும்படியாக 12 அல்லது 15 மணிநேரம் அரைக்கவேண்டும். பின்பு, பதங்கப் பாண்டத்திலிட்டு அந்த முறைப்படி செய்து பெருந் தியாய் 1 நாள் முழுவதும் எரித்துக் குளிர ஆறினபின்பு எடுத்து, வைத்த சரக்கெல்லாம் பதங்கித்திருந்தால் நல்லது. அப்படியில்லாமல் அரைகுறையாக இருந்தால் எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து பாதரசமும் சேர்த்து அரைத்து முன்போலவே பதங்கித்துக்கொள்ள வேண்டும். இவ்விதம், வைத்தச் சரக்கு முழுவதும் பதங்கிக்கிற வரையில் மடக்கி மடக்கிச் செய்யவேண்டும். பின்பு, இப்பதங்கத்துடன் கலந்திருக்கிற பாதரசத்தையும் நவாச்சாரத்தையும் தணல்மீது வைத்துப் பக்குவப்படுத்தி நீக்கி விடவேண்டும். அப்படி நீக்கிவிட்டால் தனித் தாமிரப் பதங்கமாக இருக்கும்.

இத் தாமிரப் பதங்கமானது முன் சொன்னதுபோலவே செந்தூரம், பற்பம், செயநீர் முதலிய பல பாகங்களுக்கும் சிறப்பானதாய் இருக்கும்.

**குறிப்பு:** —பருப் பொருள்களுள் தாமிரமொன்றே இலேசாய்ப் பதங்கமேறும் தன்மையுடையதென எல்லா இரசவாத பண்டிதர்களின் தீர்மானம். இன்னம் தாமிரமானது இரசவாதத் தொடர்பாய் பொன், வெள்ளி, என்னும் இரண்டு முறைகளுக்கும் அதிகம் பயன்படுகிறது. ஆகையால், இப்பதங்கமும் மேற்கண்ட இருவகைச் சாதனைகளுக்கும் பயன்படுமாம். ஆனல், பொன் தொடர்பாய் வேண்டியதானல் தாமிர வெள்ளையை தங்கப்பதங்க முறையைப் போலவும், வெள்ளி தொடர்பாய் வேண்டியதானல் தாமிர வெள்ளையை வெள்ளிப் பதங்க முறையைப்போலவும் செய்வதுமன்றி மீண்டும் மீண்டும் பல தடவைகளும் செய்து கொள்ளவேண்டும்.

சரக்குகளைப் பதங்கித்தலே அதனதன் தூய்மையென முன் சொல்லியிருக்கின்ருேம். அவ்விதமே இத் தாமிரப் பதங்கமானது ஒப்பற்றத் தூய்மையாம். இதில் பின்னூறல் முதலிய எவ்விதக் குற்றமும் கிடையாது. இதனைத் தங்கத்தோடும் சேர்க்கலாம்.

வெள்ளியோடும் சேர்க்கலாம். ஆனல், தங்கத்தோடு சேர்க்க வேண்டியதாயின் முன்னர் மேற்சொல்லப்பட்டிருப்பதுபோல தாமிரத்தை வெள்ளையாக்கிப் பின்பு, தங்கப்பதங்க முறையைப் போல பதங்கித்துக்கொள்ளவேண்டும். இவ்விதமே வெள்ளியோடு சேர்க்க வேண்டியதாயின் முன்னர் சொன்னபடி தாமிரத்தை வெள்ளையாக்கிப் பின்பு, வெள்ளிப் பதங்க முறைப்படி பதங்கித்துக்கொள்ள வேண்டும். தேவையானபோது தாமிரப் பதங்கத்தையே முறையே தங்கப் பதங்க முறைப்படியும், வெள்ளிப் பதங்க முறைப்படியும் பதங்கித்துப் பயன்படுத்திக் கொள்ளலாம். எவ்விதம் செய்தபோதிலும் பயன்படும். மற்றவித தாமிரத் தூய்மை முதலியவைகளெல்லாம் இதற்குத் தாழ்ந்தவைகளென்றே சொல்லவேண்டும். இம்முறைப்படி செய்யாமல் கண்டபடி புடம்போடுவதெல்லாம் பணச் செலவு, காலவிரயம் முதலிய பலவகை நட்டமும் துன்பமுமே யொழிய, ஒருவித பயனும் உண்டாகாது. தாமிரத்தின் ஊறலும் மாருது; ஆகையால், மேற்கண்ட முறைப்படி பயிற்சி முறைப்படி அறிந்து தெளிந்து கைபாகந் தவருமல் செய்து முடித்தால் வாதம், மருத்துவம் என்னும் இரு வழியாலும் வெற்றி பெறலாம்.

## 175. வெள்வங்கப் பதங்கம்

வெள்வங்க வெள்ளை *1* பங்கு. பாதரசம் *1* பங்கு. இவ்விரண்டையும் கல்வத்தில் இட்டு இரண்டும் ஒன்ருகக் கலந்து ஒன்று படும்படியாக, 12 மணிநேரம் அரைத்து, பதங்கப்பாண்டத்தில் மேலுக்கு மேலாகப் பரப்பவும், பத்தி பத்தியாய் இருக்கும்படியாக ஒரு குச்சியால் முன் பரப்பினதைக் கீறிவிட்டு மேல்சட்டிமூடி பாகப்படி சீலைமண் முதலியவைகளும் செய்து தீயானது சிதறுண்டு போகாமல் செந்தூர அடுப்புத் தயார் செய்து அதன்மேல் வைத்து முறைப்படி செய்தும் தொடக்கம் முதல் முடிவு வரையிலும் பெருந் தீயாகவும், 12 மணிநேரம் எரித்துக் குளிர ஆறினபின் எடுக்க, எல்லாம் பதங்கமேறி நிற்கும். அப்படி ஏருமல் அரை குறையாய் இருக்குமானல் கீழ்மேல் சட்டிகளிலுள்ள எல்லாவற்றையும் சுரண்டியெடுத்து முன்போல பாதரசம் சேர்த்து முன்போல அரைத்து முன்போலப் பதங்கித்துக் கொள்ள வேண்டும்.

இந்தப் பதங்கமானது வெண்மையாயிருக்கும். இதுவும் இரசவாத தொடர்பான அனேக முறைகளில் சேர்க்கப்படுகிறது. மேலும் இதை நீராகவும் செய்து, அங்கு சொல்லப்பட்டிருப்பது போல பயன்படுத்திக் கொள்ளலாம்.

## 176. கருவங்கப் பதங்கம்

மேற்கண்ட பாகப்படியே கருவங்கத்தையும் செய்து கொள்வதே கருவங்கப் பதங்கமாகும்.

**குறிப்பு :** மேற்கண்ட பாகப்படியே எல்லாவித பருப்பொருள் சரக்குகளையும் பதங்கித்துக் கொள்ளலாமென இரசவாத பண்டிதர்களுள் பெரும்பாலோர் கருத்து.

## 177. அயப் பதங்கம்

அயவெள்ளையைத் தண்ணீர் விட்டுப் பலதடவைகள் கழுவி அதிலுள்ள கருப்பை நீக்கவேண்டும். பின்பு கொதிநீரைவிட்டுப் பல தடவைகள் கழுவி அதிலுள்ள உவர்ப்பு நீங்கும்படி கழுவ வேண்டியது. பின்பு ஈரமில்லாமல் உலர்த்திக் கொள்ளவேண்டும். இவ்விதம் தூய்மை செய்யப்பட்ட அயவெள்ளை 1 பங்கு, பாத ரசம் 1 பங்கு, தாளகம் 1 பங்கு இம் மூன்றையும் ஒன்ருய்க் கலந்து நவாச்சார நீரைச் சிறுகச் சிறுக விட்டு மெதுவாய், 2சாமம் அரைக்கவேண்டும். பின்பு இதைப் பதங்கப் பாத்திரத்தில் போட்டுப் பாகப்படி செய்து 12 மணிநேரம் பெருந்தீயாய் எரித்து மறுநாள் குளிர ஆறினபின்பு பிரித்து மேலேறி நிற்கும் பதங்கத்தைச் சுண்டி எடுத்துக் கண்ணுடிக் குப்பியில் வைத்துக் கொள்ள வேண்டும். பதங்கமாகாமல் கீழே எஞ்சி நிற்பதைக் கல்வத்தில் இட்டு முன் நவாச்சார நீரைவிட்டு, 12 மணிநேரம் முன்போலவே மெதுவாயரைத்துப் பதங்கப் பாத்திரத்தில் வைத்து முறைப்படி செய்து பெருந்தீயாய், 12 மணிநேரம் எரித்து ஆறவிட்டுப் பிரித்துப் பதங்கமேறியிருப்பதை எடுத்து முன் பதங்கத்துடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். கீழ்ச் சட்டியில் பதங்கமாகாமல் எஞ்சி நிற்பதை முன்போலவே நவாச்சார நீரை விட்டரைத்து முன் போல பதங்கித்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் வைத்த இரும்பு வெள்ளை யெல்லாம் பதங்கமாகிற வரையில் முன்போலவே மீண்டும் மீண்டும் செய்து கொள்ளவேண்டும்.

இவ்விதம் சேகரிக்கப்பட்ட இரும்புப் பதங்கமானது செந்தூரம் செய்யவும், செயநீர் செய்யவும் பயன்படுவதுமன்றி, இரசவாத தொடர்பான பல முறைகளில் சேர்க்கப்படுகிறது, அப்பாகங்களை வந்த இடத்தில் காண்க.

## 178. துத்தப் பதங்கம்

துத்தம் 1 பங்கு. பதங்கித்த பாதரசம் 3 பங்கு. இவ் விரண்டையும் கல்வத்திலிட்டு கந்தக நிற நீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, 2 சாமமரைத்து பாகப்படி பதங்கித்துக் கொள்ளவும்.

## 179. இராசவர்த்திக்கல் பதங்கம்

மேற்கண்ட பாகப்படியே இராசவர்த்திக் கல்லையும் (ஒருவகை இரத்தினம்) பதங்கித்துக் கொள்வதே இராசவர்த்திக்கல் பதங்கமாம்.

## 180. அரத்தக்கல் பதங்கம்

மேற்கண்ட பாகப்படியே அரத்தக்கல்லைப் பதங்கித்துக் கொள்ளுதலே அரத்தக்கல் அல்லது ஷாதன்ஜ் பதங்கமாம்.

மேற்கண்ட பதங்கங்களும் வாதம், மருத்துவம் என்னும் இருவகைப் பாகங்களிலும் பயன்படுகின்றன. அம்முறைகளெல்லாம் பின் எழுதப்படும்.

## 181. பச்சைப்படிக்காரப் பதங்கம்

பச்சைப் படிக்காரத்தைப் பொடித்து முட்டை மஞ்சள் கருவை விட்டுக் குழைத்துப் பதங்கப் பாத்திரத்தில் வைத்துப் பாகப்படி பதங்கமேற்றிக் கொள்ளவேண்டும்.

இவ்விதமே மற்றப் படிக்காரங்களையும் பதங்கித்துக் கொள்ளலாம்.

இவ்வகைப் பதங்கங்களும் வாதம் மருத்துவம் என்னும் இருமுறைகளிலும் பயன்படுத்தப்படுகின்றன. அம்முறைகளும் ஆங்காங்கெழுதப்படும்.

**குறிப்பு :**—இப் பதங்கங்களுக்குமுன் நவாச்சாரம் முதலிய பதங்கங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்குச் சொல்லப்பட்டிருக்கும் பதங்கங்கள் வாதம், மருத்துவம் என்ற இருவகைகளுக்கும் போதுமானவைகளாகையால் இந்த மட்டும் நிறுத்தப்பட்டது . இப்பதங்கங்களுக்காக, அந்தந்தச் சரக்குகளின் வெள்ளை இன்றியமையாதது. ஆகையால், அவற்றின் பொது விதியையும், சில முக்கிய பாகங்களையும் இனி எழுதுவோம்.

## தூலப் பொருள்களை வெள்ளையாக்க வேறொரு பொதுவிதி

வெள்ளையாக்க வேண்டிய பொருளை உராவி ஒரு கண்ணடிக் குவளையில் இட்டு, அதனுடன் அதன் சமனெடை, நவாச்சாரம், கறியுப்பு, கந்தகம் இம் மூன்றனுளொன்றையும் பொடித்துப் போட்டு, அதன்மேல் நாலங்குலம் இருக்கும்படியாகக் காரமான

காடியை விட்டுச் சில நாள் வைத்து, போட்ட பொருளானது கரைந்துபோன பின்பு எடுத்துக் கல்வத்திலிட்டு வெண்ணெய்ப் போலாகிற வரையில் 4 சாமம் அரைத்துப் பதங்கப் பாண்டத்தில் பதங்கிக்க, இலேசான அம்சங்கள் மேலேறிப்போகும், வைத்த பொருளானது கீழே வெள்ளையாய்த் தங்கிப்போகும், இதுவே அந்தப் பொருளின் வெள்ளையாம். அப்படி வெள்ளையாகா விட்டால் மறுபடியும் மடக்கி முன்போலவே செய்து கொள்ள வேண்டும்.

இம் முறையைப் பார்க்கிலும் அதிகம் மேலானதும் திறமான தும் நாம் முன்சொன்னதுபோலவே 139ஆம் பாகத்தில் சொல்லப் பட்ட முறையேயாகும். இதையும் இங்கெழுதிய காரணமாவது, சிலர் இந்த வகையில் விருப்பமுள்ளவர்களாய் இருக்கலாம். அத்தகைவர்களுக்கும் மன அமைதி உண்டாக்க வேண்டுமென்பதே நம் நோக்கமாகும்.

குறிப்பு :—தங்க முறைக்காக எந்தப் பருப்பொருளையும் வெள்ளையாக்க வேண்டுமானல், படிக்கார நீர், சிவப்பு கந்தக நீர், அண்டத்தெண்ணெய் என்ற மூன்றில் ஒன்றினல் அந்தப் பொருளை அங்குச் சொல்லியிருக்கிறபடி பாகப்படுத்தி வெள்ளை யாக்கிக் கொள்ளவேண்டும்.

வெள்ளி முறைக்காக எந்தப் பருப்பொருளையும் வெள்ளை யாக்க வேண்டுமாயின், கறியுப்புத் திராவகம், கறியுப்பு நீர்த் திராவகம் என்ற இரண்டில் ஒன்றைப் பயன்படுத்தி முன் சொன்னபடியே பக்குவப்படுத்தி வெள்ளையாக்கிக் கொள்ள வேண்டும். இதுவே, இந்தப் பொதுவிதியில் முதன்மையான இரகசியமென இரசவாதப் பண்டிதர்களுள் சிலரின் கருத்தாகும்.

ஆனல், வேறு சிலர் கருத்தாவது, 137ஆம் முறையில் சொல்லப்பட்டிருக்கும் இலவணநீர்த் திராவகத்திற்கு இந்த விதி பொருந்துமேயொழிய, 136ஆம் பாகமாகிய இலவணத் திராவகத் திற்குப் பொருந்தாது; ஏனெனில், அதில் கறியுப்பு, படிக்காரம் என்ற இரண்டும் சேர்ந்திருக்கிறது. ஆகையால், வெள்ளித் தொடர்பான முறைகளுக்கு இலவணநீர்த் திராவகத்தையும், தங்கத் தொடர்பான முறைகளுக்கு இலவணத் திராவகத்தையும் பயன்படுத்திப் பாகப்படுத்தி வெள்ளையாக்கிக் கொள்ளவேண்டு மென்பதே.

இன்னம் வேறு சிலர் கருத்தாவது, இந்த இலவணத் திராவக மொன்றையே மேற்கண்ட இருவகைப் பாகங்களுக்கும் பயன் படுத்தலாம். ஆனால், வெள்ளித் தொடர்பான முறைக்கானல் இப்போதுள்ளது போலவே கறியுப்பு 8 பங்கு, படிக்காரம் 6 பங்கு சேர்த்தும், தங்க முறைக்கானல் கறியுப்பு 6 பங்கும், படிக்காரம் 8 பங்கும் சேர்த்தும் திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டுமென்பதேயாகும். வேறு சிலர் கருத்தாவது, வெள்ளித் தொடர்பான முறைக்கு உப்பு 2 பங்கு, படிக்காரம் 1 பங்கும் சேர்த்தும், தங்க முறைக்குப் படிக்காரம் 2 பங்கும், உப்பு 1 பங்கும் சேர்த்தும் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டு மென்பதே.

ஒவ்வொரு முறையையும் மடக்கும்போதும் அந்தந்த முதல் அளவுப்படி அந்தந்தச் சரக்கைச் சேர்க்கவேண்டுமெனவுந் தெரிந் திருக்கவேண்டும்.

மேற்கண்டவைகளைச் செய்யும் முறை பின்வருகிற விதமாம்.

தேவையான பருப்பொருளின் தூளைக் கல்வத்திலிட்டு, மேற்படி வகைகளில் ஒருவகைத் திரவத்தைவிட்டு அரைத்து ஓட்டி லிட்டு நன்ருய்ச் சிவக்கிற வரையில் வறுக்கவேண்டும். இவ்விதம், மாற்றி மாற்றி வறுத்தும் அரைத்தும் வெண்ணெய் போலான பின் சட்டியில் வைத்து எரித்து வெள்ளையாக்கிக் கொள்ள வேண்டும்.

## அய வெள்ளை

தூய்மையான அயப்பொடி (இரும்பு) 1 பங்கு, நவாச்சாரப் பதங்கம் ½ பங்கு. இவ்விரண்டையும் ஒன்ருய்க் கலந்து கல்வத்தி லிட்டு நன்ருய் சேர்த்து 2 சாமம் அரைத்து, ஒரு பீங்கான் குவளையில்போட்டு அதன்மேல் இரண்டங்குலம் நிற்கும்படியாகக் காடித் தீநீரை விட்டு, குவளையின் வாயை மூடி வெய்யிலில் வைக்க வேண்டும். நாள்தோறும் குறைந்தபட்சம் 4 அல்லது 5 தடவைகள் செம்மையாய்க் குலுக்கியும் வரவேண்டும். விட்டநீர் சுண்டிக் குழம்புபதமாகி விட்டால் அதைக் கல்வத்திலிட்டு வெண்ணெய் போல அரைத்து ஓட்டில் நன்ருய்ச் சிவக்கிறவரையில் வறுக்க வேண்டும். பின்பு, முன்போலவே பீங்கான் குவளையில் போட்டுக் காடித் தீநீரையும் முன்போலவேவிட்டு வெய்யிலில் வைத்து முன்போலவே அரைத்து வறுக்கவேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கிச் செய்யின் பக்குவமாகிவிடும். இதுவே அயவெள்ளையாம். ஆனல், சிலர் இதைக் கேசர் அயம் என்கிருர்கள். வேறு சிலர்,

அயவெள்ளை, கேஸர் அயம் என்ற இரண்டும் ஒன்றே என்கிறார்கள். மேற்கண்ட பாகப்படி செய்து சட்டியில் வைத்து எரித்து வெள்ளையாக்கினதே அயவெள்ளை என்கிறார்கள். சிலர் எவ்விதமாயினும், இவ்விரண்டிற்கும் குணமொன்றே ஆனபடியால் பெயரின் வேறுபாடு சிறிதும் பாதிக்காதென்பதேயாகும். சிலர் கருத்தாவது, இவ்வளவு வேறுபாட்டிற்கும் காரணம் இது சிவந்த நிறமாய் இருப்பதேயாகும். ஆனால், மேற்கண்ட பாகப்படி செய்து முடிவில் எரித்துச் செய்வதற்கு வெள்ளையென்றும், எரிக்காமல் மேற் சொன்னபடி செய்துகொள்வதற்கு கேசர் அயம், சொர்ண அயம் என்றும் சொல்வதே நீதியாகும்.

## சொர்ண அயம்

நாட்டிரும்பின் அரப்பொடி அல்லது லாடத்தை உராவின அரப்பொடி 1 பலம். இதையொரு இரும்புக் கரண்டியில் வைத்து உலையில் வைத்தூதி நெருப்பைப்போலச் சிவந்தவுடன், நெல்லிக்காய்ச் சாற்றில் கொட்டவேண்டும். குளிர ஆறிப்போகிற வரையில் தாமதித்து எடுத்து முன்போலக் கரண்டியிற் போட்டு உலையில் வைத்தூதி நன்றாய்ச் சிவந்தவுடன் முன்போலவே நெல்லிக்காய் சாற்றில் போடவேண்டும். இவ்விதம், 7 தடவைகள் காய்ச்சிக் காய்ச்சிப் போட்டுக் குளிரவைத்து எடுத்துப் *புரசம்பட்டை அல்லது புரசம்பூத் தீநீரில் கழுவியுலர்த்தவேண்டும். 12 பலம் (420 கிராம்) †வெல்லக் காடியை ஒரு பாண்டத்தில் விட்டு, அதில் 8 வராகன் எடை (28 கிராம்) மஞ்சள் படிக்காரம், 4 வராகன் எடை (14 கிராம்) வெள்ளைப் படிக்காரம் என்ற இரண்டையும் பொடித்துப் போட்டு முன் தயாரித்து வைத்த அரப்பொடியையும் போட்டு இரண்டொரு நாள் வைத்துப் பின்பு, இரும்புப் பாண்டத்தில் அல்லது, ஏதேனும் ஒரு பாண்டத்தில் போட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்துக் காடிச் சுண்டி எல்லாம் ஒன்றாய் ஒன்றித்த பின்பு, அரப்பொடியானது சிவக்கும்படியாகக் காய்ச்சி, மற்றொரு பாண்டத்தில் கொஞ்சம் காடியைவிட்டு, அதில் போடவேண்டும். மறுபடியும் பொடியைக் காய்ச்சிச் சிவந்த பின்பு முன்போலவே காடியில் போடவேண்டும். இவ்விதம் 5 அல்லது 7 தடவைகள் செய்யின், அரப்பொடி

---

* புரசம்பட்டை அல்லது புரசம்பூ 1 பங்கு, தண்ணீர் 4 பங்கு. இவ்விரண்டையும் வாலையிலிட்டு இறக்கிக கொள்வதே முறையே புரசம்பட்டை, புரசம்பூத் தீநீராம்.

† பனைவெல்லப்பாகு 1 பங்கு, காடிநீர் 4 பங்கு. இவ்விரண்டையும் சேர்த்துக் காய்ச்சி வெய்யிலில் வைத்துக் காடியைப் போலப் பக்குவப்படுத்திக் கொள்வதே வெல்லக் காடியாம்.

மாவாகிக் கொஞ்சம் நிறம் பிடித்திருக்கும். இப்பொடியைச் செயநீர்க் குப்பியில் போட்டு, செயநீர்க் குழியில் அல்லது ஈரமான இடத்தில், 5, 6, அல்லது 7 நாள் வைத்தெடுத்து வெய்யிலில் வைத்து ஈரமில்லாமல் பக்குவப்படுத்திக் கொள்வதே சொர்ண அயம் அல்லது கேசர் அயமாம். இது, பொன்னைப் போல வேறுபாடின்றி இருப்பதால் இதற்குச் சொர்ண அயமெனவும், குங்குமப் பூவைப் போலுமிருப்பதால் கேசர் அயமெனவும் சொல்லப் படுகிறது.

இந்தச் சொர்ண அயம் அல்லது அயவெள்ளையென்பது மருத்துவம், வாதம். என்ற இருவகை முறைகளுக்குமாகும். இதனைச் செந்தூரம் முதலிய பாகங்களுடன் சேர்ப்பதாலும் அதிகக் குணமுண்டாம். இது சம்பந்த முறைகளும் பின் எழுதப் படும். மேலும், இச் சொர்ண அயத்தை இரசவாதத் தொடர்பான முறைகளோடு சேர்த்துப் பக்குவப்படுத்தினல் அவற்றிற்கு உலோகங்களையும் நிறமேற்றும் ஆற்றல் உண்டாகிவிடுகிறது. அதன் விபரமும் இதன் திறவுகோலில் எழுதப்படும்.

## 181. சொர்ண அயம் (வேறு)

இலாடத்தை உராவின அரப்பொடி 1 பங்கு இதனைக் கல்வத்திலிட்டு இரண்டு பங்கு கறியுப்பைச் சேர்த்துக் கொஞ்சம் நீரும் தெளித்து, 1 அல்லது 2 மணிநேரம் அரைத்துப் பின்பு நீர் விட்டு அலம்பிக் கழுவிவிடவேண்டும். மறுபடியும் முன்னளவே கறியுப்பைச் சேர்த்து முன்பொல அரைத்துக் கழுவவேண்டும். இவ்விதம், ஒவ்வொரு தடவையும் இரண்டு பங்கு கறியுப்பைச் சேர்த்து, 1 அல்லது 2 மணிநேரம் அரைத்துக் கழுவவேண்டும். இவ்விதம், அயமானது தூய்மையான வெண்ணிறம் • அடைகிறவரையில் கழுவவேண்டும். இதற்காகச் சுமார் 7 அல்லது 9 தடவைகள் மடக்க நேரிடும். முடிவில் உப்புப் பசையின்றிக் கழுவி உலர்த்திக் கொள்ளவேண்டும், இந்தப் பொடியை மண் பாண்டத்திலிட்டு அடுப்பேற்றி நன்ருய்ச் சூடேறினவுடன் எலுமிச்சம் பழச் சாற்றைச் சிறுகச் சிறுகத் தெளித்து வறுக்கவேண்டும், தீயைச் சிறிது சிறிதாய் அதிகப்படுத்தி எரித்து வரவும்வேண்டும். இவ்விதம், 12 மணிநேரம் முன்கூறிய எலுமிச்சம்பழச் சாற்றைத் தெளித்து வறுக்கவேண்டும். இதற்குள் செந்தூரம் போலச் சிவந்த நிறத் தூளாகிவிடும். அவ்விதம், தூளாகாவிட்டால் மறுபடியும் அவ்விதமாகிறவரையில் வறுத்துக் சொள்ளவேண்டும். பின்பு, ஒரு மூசையில் புரசம் பூவைப் பொடித்துத் தூளைக் காலங்குலம் போட்டு, அதன்மேல் முன் தயாரித்து வைத்த அயத்தூளைப்

பரப்பி, அதன்மேல் புரசம்பூத்தூளைப் போடவேண்டும். இவ்விதம் பூ ஓர் அடுக்கும், அயப்பொடி ஓர் அடுக்குமாகப் பரப்பிக் கீழும் மேலும் முன் சொன்ன பூத்தூள் இருக்கும்படியாகச் செய்து மூசைக்குச் சீலைமண் செய்துலர்த்திக் கொல்லனுலையில் வைத்து இரட்டைத் துருத்தியால் மூசையமுகும்படியாக ஊதி, ஆற வைத்தெடுக்க அயமானது உருகித் தங்க நிறமுடையதாய் இருக்கும்.

இது சொர்ண நிறமுடையதாய் இருக்கின்றபடியால், இதற்குச் சொர்ண அயமெனப் பெயரிடப்பட்டிருக்கிறது.

இது இரசவாதச் சிறப்பான முறையில் பயன்படுத்தப் படுகின்றபடியால் இதன் பாகத்தை இதன் திறவுகோலில் எழுதுவோம்.

## வங்கவெள்ளை

தேவையான அளவு தூய்மை செய்யப்பட்ட வெள்வங்கத்தை மண்பாண்டத்தில் இட்டு உருக்கி, நன்ருய் உருகினவுடன், நெல்லிக்காய்க்கந்தகத்தைத் தூள்செய்து சிட்டிகைச் சிட்டிகையாக அதில்போட்டுத் துழாவி வரவேண்டும். இவ்விதம், அடிக்கடி போட்டு வங்கமானது நொருங்கித் தூளாகிறவரையில் துழாவி வந்து எல்லாம் கறுத்த தூளான பின்பு எடுத்து, அதற்குச் சமனெடை நவாச்சாரம் சேர்த்து அரைத்து, அதனுடன் கொஞ்சம் பூநீரை அல்லது அப்பளாக்காரத்தைச் சேர்த்தும் அரைத்து 2 சாமம் ஓட்டில் வறுக்கவேண்டும். அல்லது பானையில் வைத்தெரிக்கவேண்டும். மறுநாள் வெள்ளையாய்த் தூய்மையாகிவிடும். இதுவே வங்கவெள்ளையாம்.

மேற்கண்ட முறைப்படியே கருவங்கம், நாகங்கள் என்பவைகளை வெள்ளையாக்கிக் கொள்ளவேண்டும்.

## இரசவெள்ளை

பதங்கித்த பாதரசம் $8\frac{3}{4}$ வராகன் எடை ($30\frac{1}{8}$ கிராம்), பாகப்படுத்தின கறியுப்பு $8\frac{3}{4}$ வராகன் எடை ($30\frac{1}{8}$ கிராம்), கடல்நுரை $3\frac{3}{4}$ வராகன் எடை ($12\frac{3}{4}$ கிராம்). இம் மூன்றையும் கல்வத்திலிட்டு, படிக்கார நீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, 12 மணிநேரம் கைவிடாமல் அரைத்து மறுநாள், வயிர மூசையில் வைத்து வாய்க்குச் சில்லிட்டுச் சீலை செய்து 4 அல்லது 5 மணி நேரம் கடினமாய் ஊதி, ஆறவிட்டுப் பீங்கான் பாத்திரத்தில் போட்டுப் பனியில் வைத்து மறுநாளெடுக்க எல்லாம் வெள்ளையாய் மலர்ந்திருக்கும்.

இப்பாகத்தைக் அதிக கவனமுடன் செய்யவேண்டும். பாகம் தவறினல் அரைகுறையாய் விடுவதுமுண்டு. ஆகையால் சட்டியில் வைத்து மேற்சட்டி மூடி இடையில் உள்ள துளைவழியை மூடி அடுப்பில் வைத்தெரித்து வெள்ளையாக்கிக் கொள்க. தேவை யாளுல் மீண்டும் எரித்துக் கொள்க.

மேற்கண்ட முறைப்படியே உபரசங்களாகிய இரசகற்பூரம், வீரம், இலிங்கம் முதலியவைகளை வெள்ளையாக்கிக் கொள்ள வேண்டும்.

இவ்விரசவெள்ளையும் வாதம், மருத்துவம் என்ற இரு வகைக்கும் பயன்படுமாம். இதன் முறைகளைப் பின்னெழு துவோம்.

**குறிப்பு** :—இந்தப் பாகத்தில் கடல்நுரையை இரசத்திற்குச் சமனெடை சேர்த்துச் செய்வதுமுண்டு.

## 182. தங்கவெள்ளை (வேறு)

தங்கம், கருவங்கம், வெள்ளையாக்கின அல்லது தூய்மை செய்த மிருதாரசிங்கி, இவை மூன்றும் வகைக்குச் சமபாகம். முதலில் மிருதாரசிங்கியைப் பொடித்துக் கருவங்கத்தை உருக்கிச் சிறிது சிறிதாய்க் கலந்துவர, வங்கமானது நொருங்கித் தூளாய்விடும். இதையெடுத்துக் கல்வத்தில் நன்ருயரைத்து மெல்லிய துணியால் சலித்து வைத்துக்கொள்ளவும். பின்பு தங்கத்தை உருக்கி, உருக்கு முகத்தில் முன் தயாரித்து வைத்த கருவங்கத்தூளைக் கொஞ்சம் கொஞ்சமாய்க் கலந்து ஒன்றிக்க வேண்டும். இவ்விதம், கருவங்கத் தூளெல்லாம் சென்றபின்பு எடுத்துக் கல்வத்தில் நன்ருயரைத்துப் பொடித்து மெல்லிய சல்லாத் துண்டில் சலித்து, தூளாகாமல் ஏதேனும், எஞ்சி நின்ருல் அதையும் உருக்கி முன்போலவே கலந்து அரைத்துத் தூள் செய்து துணியால் சலித்து, முன் தூளையும் ஒன்ருய்ச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இதைப் பக்குவமாகவும் கைமுறை யாகவும் செய்யின் ஒரே தடவையில் தங்கமெல்லாம் நொருங்கித் தூளாகிவிடும். பின்பு, இலவணநீர்த் திராவகத்தைவிட்டு 12 மணிநேரம்அரைத்து மண் பாண்டத்தில் வைத்து அதன் வாயை மூடிச் சீலைமண் செய்து உலரவைத்து அடுப்பேற்றி, 12 மணிநேரம் பெருந்தீயாய் எரித்துக் குளிர ஆற வைத்தெடுத்து, மறுபடியும் அதைக் கல்வத்திலிட்டு முன் இலவணநீர்த் திராவகத்தை விட்டு அரைத்து முன்போலவே எரிக்கவேண்டும். இவ்விதம், மீண்டும்

மீண்டும், அது வெள்ளையாகிறவரையில் செய்யவேண்டும். இவ்விதம், வெள்ளையாக்கப்பட்டதும் தங்கவெள்ளை எனப் படுகிறது.

குறிப்பு :— பருப்பொருள்களில் வெள்ளையாக்கும் முறைகளைப் பற்றித் தனியாகச் சொல்லப்படாதவைகளைப் பருப்பொருள்களை வெள்ளையாக்கப் பொதுவிதி என்பதில் சொல்லியிருக்கிறபடியே செய்து கொள்ளவேண்டும்.

நாம் இதுவரையில் சரக்குகளை நீராக்கல், வெள்ளையாக்கல், பதங்கித்தல் முதலிய முறைகளைச் சொல்லி வந்தோம். இப் பாகங்களெல்லாம் மருத்துவத்தில் முழுமையான புலமையை அடைய விரும்பும் ஒவ்வொருவருக்கும் கட்டாயம் தேவையே. இப் பாகங்களையறிந்து செய்ய இயலாதவர்கள் முழுமையான மருத்து வர்கள் என்றுச் சொல்லத்தகாதவர்களென்பதே பெரியோர்கள் கருத்தாகும். ஏனெனில், இப்பாகங்களைச் செய்யாவிட்டால் செந்தூரம், பற்பம் முதலியவைகளை முறைப்படி செய்ய இயலாது என்பதே முக்கியக் காரணம் ஆகும்.

மேலும், செந்தூரம் முதலியவைகளைச் செய்யச் சரக்குகளைக் கட்ட செயநீர் முதலியவைகளும் அவசியமாகையால், அவற்றுள் முக்கியமான சிலவற்றையும் இங்கு எழுதுவோம்.

## செயநீர்ப் பொதுவிதி

இதன் பொதுவிதி, செயநீர்க் குழி, பக்குவம் முதலிய விளக்கங் களெல்லாம் முன்னமே நீராக்கல் அல்லது செயநீர் என்னும் தலைப்பில் சொல்லப்பட்டிருக்கின்றன. அங்குத் தனிச் சரக்குகளைச் செய்து கொள்வதுபோலவே, இங்குப் பல சரக்குகளைச் சேர்த்துச் செய்துகொள்ளவேண்டும். ஆனால், ஒவ்வொரு சரக்கையும் அதனதற்குத் தகுந்ததுபோல், பதங்கமாக்குதல், வெள்ளையாக்கல், தூய்மையாக்குதல், பக்குவப்படுத்தல் முதலியவைகளைச் செய்து அந்தந்தப் பாகத்தில் சொல்லியிருக்கிற அளவின்படி நிறுத்து எடுத்து நீராக்கல் என்னும் தலைப்பில் சொல்லியிருக்கிறபடி செய்து செயநீர்க் கண்ணுடிக் குப்பியில்விட்டுச் செயநீர்க் குழியில் வைத்து செயநீராக்கிக்கொள்ளவேண்டும். தூய்மைசெய்தல், பதங்கித்தல், வெள்ளையாக்கல் முதலிய விதிகளைக் கவனிக்காமல் ஏட்டில் எழுதி யிருப்பதைப்போலச் செய்வதால்தான், இஞ்சி தின்றதைப் போலிருக்க நேரிடுகிறது. ஆனால், ஒவ்வொரு நூலிலும் அவ்விதம் பதங்கமேற்றி அல்லது பக்குவப்படுத்திச் சேர்க்கச் சொல்ல

வில்லையே என்னும் வினு எழலாம். அதற்குப் பதிலாவது: மருத்துவ நூல்கள் பலவகையாக வகுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன.

(1) உடலியல் (Physiology). இது நமது உடலிலுள்ள தாதுக்கள், உறுப்புகள் முதலியவைகளைப் பற்றிச் சொல்லும்.

(2) உடற்கூறு இயல் (Anatomy). இது நமது உடம்பிலுள்ள உறுப்புகளின் நன்னிலையில் இயங்கும் தொழிலைக் குறித்துக் காண்பிக்கும்.

(3) குணபாடம் (Materia Medica) இது மருந்துகளுக்காகச் சேர்க்கப்படும் பண்டங்களைக் குறித்து விவரிக்கும். ஆனால், இதில் உட்பிரிவுகள் அனேக வகையுண்டு. பண்டங்களின் தூயமுறை பண்டங்களின் எடைப் பாகம். பண்டங்களின் நட்பு, பகை ஆகியவற்றின் இயல்பு, பண்டங்களின் பக்குவம் முதலியவைகளில் ஒவ்வொன்றையும் தனித்தனியாகவே வடமொழி, அரபி முதலிய மொழிகளிலும் சில நூல்கள் தமிழிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. மருத்துவராகிய ஒவ்வொருவரும் இந்த நூல்களைக் கட்டாயம் தெரிந்திருக்கவேண்டும். இந்த நூல்களை வகை விபரமாய்த் தெரிந்துகொள்ளாதவர்கள் ஒரு நோய்க்கு நேர்மையான மருந்தைத் தயாரிக்க முடியாது. மேலும், நம் முன்னோர்களெல்லாம் இந்த நோய்க்கு இன்ன மருந்தெனக் குறிப்பாய்ச் சொல்லியிருப்பதெல்லாம், அதைப் பயன்படுத்தும் நாம் மேற்கண்ட நூல்களை அனுசரித்து, தூய்மைப்படுத்தல், சேர்மானம், பாகம், பக்குவம், அளவு, சார்புப்பொருள் முதலியவைகளை அறிந்து செய்வோம் என்ற நோக்கத்துடன் சொன்னதே ஒழிய வேறன்று. மேலும், ஒவ்வொரு பாகத்திலும் அதில் சேர்க்கப்படும் ஒவ்வொரு பண்டத்தின் தூய்மை, பக்குவம், பாகம் முதலியவைகளைச் சொல்வதானுல் அது நிறைவேற்றமடையாது. உதாரணமாக, ஒரு பாகத்தில் சுக்கு, கடுக்காய் என்ற இவற்றைச் சேர்க்கச் சொல்லி இருந்தால், சுக்கின் மேலே உள்ள நச்சுத்தன்மையுடைய தோலைச் சீவி, அதை இடித்துத் துணியால் சலித்துக் கொள்ள வேண்டுமெனவும், கடுக்காயின் உள்ளே உள்ள கொட்டையை நீக்கிவிட்டு, அதை இடித்துத் துணியால் சலிக்காமல் அதைத் தெளித்து எடுத்து, அதில் நெய்யைத் தெளித்து நெய்ப்பசை உண்டாக்கிப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டுமெனவும் பொருளாகும். அவ்வாறின்றிச் சுக்கைத் தோலுடனும், கடுக்காயைக் கொட்டையுடனும் இடித்துத் தூள் செய்து மேற்கண்டபடியும் பக்குவப்படுத்தாமல் சேர்க்கவேண்டுமெனப் பொருளாகாது.

மேலும் பயிற்சி முதிர்ந்தோர், அவ்விதம் ஒருபோதும் சேர்க்கவும் மாட்டார்களென்பது திண்ணம். இவ்விதமே ஒவ்வொரு பண்டத்திற்கும் எழுதுவதானுல் அது ஆகக்கூடியது, ஆகக்கூடாதது என்பது அறிவாளிகளுக்கு விளங்காமல் போகாது. ஆகையால், அம்முறைகளை எல்லாம் மேற்கண்டபடி தனித்தனி நூலாக எழுதி இருக்கின்ருர்கள். இவ்விதமே இரசவாதத்திற்கு வேண்டிய சரக்குகளின் பக்குவம், முதலியவைகளையும் தனித்தனியாய்ச் சொல்லி இருக்கின்ருர்களாகையாலும், இரசவாத முறைகளிலும் அந்தச் சரக்குகள் குறிப்பாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன ஆகையாலும், நாம் ஒவ்வொரு சரக்கையும் பதங்கித்தோ, வெள்ளையாக்கியோ, பாகப்படுத்தியோ, தூய்மை செய்தோ, கட்டுப்படுத்தியோ, எவ்விதமோ காலத்துக்கு ஏற்ருற்போல் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இதற்காகவே சோதனை நூலாகிய இரசவாதத் தொழிலுக்கு, நூல் பயிறசி, தந்திரம், அளவு, முதலியவை மற்றத் தொழிலைப் பார்க்கிலும் அதிக முக்கியமாய்த் தெரியவேண்டும் என்பது நண்பர்களுக்கு நன்கு விளங்காமற் போகாது.

"செயநீர்" என்பதன் பதப்பொருள் (வெற்றிநீர்) அதாவது, நெருப்பிற்கோடும் சரக்கை அவ்விதம் ஓடாமல் நெருப்பிற்கு எதிர்த்து நிற்கச் செய்யும் நீர் என்பதே. ஆகையால், இத்தன்மையுடைய நீரானது எவ்விதம், செய்யவேண்டுமென நாம் சற்று ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். அப்படி நாம் சிந்திக்காமலே இப்பொழுது நூல்களில் காணப்படுகிறதுபோல, கடையிலுள்ளதை வாங்கிவந்து சடை முதலியவைகளைக் கலந்து கடைந்து ஒன்றுமில்லாமல் முடிவில் மனமுடைந்து போகின்ருேம். ஆகையால், முன் சொல்லப்பட்டிருக்கும் தனி செயநீர்களையும் இனி சொல்லப்படும் யோக செயநீர்களையும் கவனித்து அதனதன் முறைப்படி தூய்மை முதலியவைகளைக் கவனமாய்ச் செய்து சேர்த்து முடித்துக் கொள்ளவேண்டுமென்பதே அடியேன் கருத்து.

செயநீர் முறைகள் ஒவ்வொரு நூலிலும், ஒவ்வொருவராலும் ஒவ்வொரு விதமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால், முக்கியமான சிலவற்றை மாத்திரம் இங்கெழுதுவோம்.

நவாச்சாரத்திற்குச் செயநீர்க் கர்த்தன் என வேருெரு பெயருமுண்டென முன் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால், பெரும்பாலும் செயநீரில் சேர்க்கப்படும் நவாச்சாரத்தைக் கட்டி அல்லது பக்குவப்படுத்திச் சேர்க்கவேண்டியது என நினைவில் வைக்கவேண்டும்.

## 183. கட்டுவகைச் செயநீர்

65ஆம் பாகப்படி செய்து பனியில் அல்லது செயநீர்க் குழியில் வைத்தெடுத்த செயநீர் 10 பலம் (350 கிராம்), கட்டின வீரம், கட்டின பூரம், இவ்விரண்டும் வகைக்கு 1 பலம் (35 கிராம்). இவ்விரண்டையும் மைபோலப் பொடித்து முன்கூறிய செயநீரில் போட்டு, ஒரு கண்ணடிக் குப்பியில் மூடியிட்டு நன்ருய்க் குலுக்கிக் கடும்வெய்யிலில் காலே முதல் மாலே வரையில் வைக்கவேண்டும். நாள்தோறும் 4 அல்லது 5 தடவைகள் குலுக்கியும் வரவேண்டும். இவ்விதம், 21 நாள்கள் பக்குவப்படுத்தி எடுத்துக் கொள்வதற்குக் கட்டுவகை செயநீரெனப் பெயர்.

எந்தச் சரக்கையும் பொடித்து இந்தச் செயநீரை விட்டு, 4 சாமமரைத்து, வெம்மை தாங்கும் பீங்கானிலிட்டு, முன்கூறிய செயநீரைத் தெளித்து, 2 அல்லது 3 சாமம் வறுத்தெடுத்து மறுபடியும் கல்வத்திலிட்டு முன்போல அரைத்து, மறுபடியும் முன்போல வறுத்தெடுக்க வேண்டும். இவ்விதம், அந்தச் சரக்கானது நெருப்புக்கோடாமல் நிற்கிறவரையில் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இவ்விதம், செய்யப்பட்ட செயநீருக்குச் சிவ செயநீரென மறுபெயருமுண்டு.

## 184. கட்டுவகைச் செயநீர் (வேறு)

121ஆம் பாகப்படி தயாரித்த சவுக்கார நீர் 10 பலம், கட்டினவீரம், கட்டினபூரம். இவ்விரண்டும் வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து அவற்றைத் தனித்தனியே மைபோலப் பொடித்துச் சேர்த்து, எல்லாவற்றையும் கண்ணடிக் குப்பியில் போட்டு மூடியிட்டு மேற்கண்ட 183ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி வெய்யிலில்வைத்து பாகப்படுத்திக் கொள்ளவேண்டும்.

இதற்கும் சிவ செயநீரெனவே பெயர். மேற்கண்ட பாகத்தில் சொல்லியிருக்கிறபடி எல்லாச் சரக்குகளேயும் கட்டிக் கொள்ளலாம்.

**குறிப்பு** :—120ஆம் பாகத்திற் சொல்லியிருக்கிறபடி சித்தஞ் செய்யப்பட்ட சவுக்காரநீர், இன்னம், பூநீர், நவச்சாரம், வெடியுப்பு என்னும் இவற்றின் சார்பாய்ச் செய்யப்பட்ட செயநீர், அண்டநீர், அண்டச் செயநீர் முதலியவைகளுள் முன்னும்

சொல்லப்பட்டிருக்கிற சாரவீரியநீர், சாரநீர், சுண்ணச்சாரநீர், முதலியவைகளுடனும், மேற்கண்டபடி வீரம், பூரம் சேர்த்துக் கட்டுவகை செயநீராகச் செய்தும் கொள்ளலாம். ஆனுல், அதனதன் சக்திக்குத் தகுந்ததுபோலக் சுறுசுறுப்பாகவும், வீரியமாகவும் சரக்குகளைக் கட்டும்.

## 185. மெழுகுவகைச் செயநீர்

முன் தயாரித்தக் கட்டுவகை செயநீர் அல்லது சிவ செயநீர் 10 பலத்துக்கு (350 கிராம்) வீரச்சுண்ணம், பூரச்சுண்ணம், நவாச் சாரச் சுண்ணம், படிக்காரச் சுண்ணம் என்ற இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) ஆகச் சேர்த்து முன் சொல்லியிருக்கிறபடியே 21 நாள் வெய்யிலில் வைத்துப் பக்குவப்படுத்திக் கொள்வதே மெழுகுவகைச் செயநீராம். இதற்குச் சத்திச் செயநீரென மறு பெயருமுண்டு.

இந்தச் செயநீரால் கட்டின சரக்குகளை அந்தந்த இனத்திற்குத் தகுத்தபடிப் பக்குவப்படுத்த மெழுகாகும். இதற்கெல்லாம் கை பாகம், செய்பாகம் முதலியவைகளைக் தொட்டுக் காட்டத் தெரிய வரும். சிந்தனைசெய்யும் ஆற்றல்கொண்ட அறிஞர்கள் தங்கள் அறிவின் அரிய ஆற்றலாலும் பாகத்தைக் கண்டு செய்து முடித்துக் கொள்வார்கள். மேலும், இதன் முறைகளும் ஆங்காங்குச் சொல்லப்படும்.

## 186. செந்தூரச் செயநீர்

முன் சொல்லியிருக்கிற கட்டுவகை செயநீர் அல்லது சிவ செயநீர் 1 பங்கு. முன் சொல்லப்பட்டிருக்கிற மெழுகு செயநீர் அல்லது சத்தி செயநீர் 1 பங்கு. இவ்விரண்டையும் ஒரு கண்ணுடிக் குப்பியில் விட்டு நன்ருய்க் குலுக்கி, முன்போலவே 21 நாள் வெய்யிலில் வைத்துப் பாகப்படுத்திக் கொள்வதே செந்தூரச் செயநீராம். இதற்குச் சிவசத்தி செயநீரென மறுபெயருமுண்டு.

இந்தச் செயநீரை முன்சொன்ன முறைப்படி கட்டின அல்லது மெழுகாக்கின சரக்குகளில் விட்டரைத்துப் பாகப்படி புடம் போட அல்லது பாகப்படி செந்தூரப் பாத்திரத்தில் வைத்து எரிக்கச் செந்தூரமாகிவிடும்.

மேற்கண்ட முறைகளால் பயிற்சி முதிர்வு பெற்றவர்களான அறிவாளிகள் அனேக முறைகளைத் தொடர்பு படுத்திச் செய்து கொள்வார்கள். இரசவாத முறைகளிலும் சிறந்த முறைகளையும் தெரிந்து செய்வார்கள்; ஆகையால், அவர்களையடுத்து அம்முறை களைத் தெரிந்துகொள்ளலாம்.

இந்த முறைகளை வாசிப்பவர்களுள் பயிற்சி, ஊக்கம் முதலியவைகள் இல்லாத சிலர் இம்முறைகளை எவ்விதம் செய்யக் கூடும் எனப் பலவிதமாய் மயங்கிச் சோம்பி இருப்பார்கள். இத்தகையவர்கள் இப் பாகங்களையேனும் மற்றப் பாகங்களை யேனும் செய்து முடிக்கமாட்டார்கள். வீண்கதைகளையும், வீண் சாமர்த்தியங்களையும் நம்பி கரைதுறையின்றி வீணாய்த் திரிவார் கள். மேலும், "சோம்பேறிக்கு வாழைப்பழந் தோலோடு" என்பது போலத் தேம்பித் திரிவதே இத்தகையவர்களின் முடிவாகும்.

## 187. அண்டச் செயநீர்

குஞ்சு பொரிக்கப்பட்ட கோழிமுட்டைத்தோல் 1 பலம் இதனை 104ஆம் பாகத்தில் சொன்னபடி தூய்மை செய்து உலர்த்திக் கொள்ளவேண்டும். பின்பு, இதைக் கல்வத்திலிட்டுக் கோழிமுட்டை வெள்ளைக் கருவைச் சிறுகச் சிறுக ஊற்றி 4 சாம மரைத்து வில்லை செய்து வெய்யிலில் நன்றாயுலர்த்தி உள்ளீர மில்லாமல் பார்த்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி 3 சீலைமண் செய்து ஒரு முழம் சதுரப் புடமிடச் சுண்ணமாகும். அல்லது, 105 முதல் 110 வரையிலுள்ள எந்த முறைப்படியேனும் தயாரித்த அண்டச் சுண்ணங்களில் எது தேவையோ அம் முறைப்படி தயாரித்த அண்டச் சுண்ணம், கட்டின வெடியுப்பு, பாகப்படுத்தின பூநீர் இம்மூன்றும் வகைக்கு 1 பங்கு இம் மூன்றையும் கல்வத்திலிட்டு, கோழிமுட்டை வெண்கருவை விட்டு நாலு சாமமரைத்து, வில்லை தட்டிக் காய வைத்து, ஓட்டி லிட்டு மேலோடு மூடி 5 சீலைமண் செய்து $2\frac{1}{2}$ பலமுள்ள ($87\frac{1}{2}$ கிராம்) 20 விராட்டியிற் புடமிட்டுக் குளிர ஆறவிட்டு எடுக்கச் சுண்ணமாகும்.

இந்தச் சுண்ணத்துடன் கட்டினவீரம் 1 பங்கு, கட்டின நவாச் சாரம் $1\frac{1}{2}$ பங்கு, பாகப்படுத்தின வெடியுப்பு 1 பங்கு இம் மூன்றை யும் சேர்த்துக் கல்வத்தில் போட்டு 2 சாமமரைத்துச் செயநீர்க் குப்பியில் விட்டு வாய்ப் பகுதியை மூடி செயநீர்க் குழியில் பாகப்படி செய்து 30 அல்லது 40 நாள் வைத்தெடுக்க நீராகி விடும். பின்பதனை வேறு குப்பியில் விட்டு வாய்க்கு மூடியிட்டு, சந்திற்கு அரக்கு முதலியவற்றால் மூடி 40 நாள் வெய்யிலில் வைக்கவேண்டும். நாள்தோறும் 4 அல்லது 5 தடவை நன்றாய்க் குலுக்கியும் வரவேண்டும். இவ்விதம் மேற்கண்டபடி நாற்பது நாள்கள் செய்யின், கடுங்காரச் செயநீராகும்; இதற்கும் அண்டச் செயநீர் எனப்பெயர்.

இந்தச் செயநீரால் எல்லாச் சரக்குகளேயும் கட்டலாம். ஆனல், அந்தந்தச் சரக்கிற்குத் தக்கபடி செய்யவேண்டும், அம் முறைகள் ஆங்காங்கு எழுதப்படும். ஆயினும், அடியிற் காண்கிற படி ஒரு பாகத்தை உதாரணமாகச் சொல்வோம்.

## 188. தாளக பற்பம்

இனி எழுதப்படும் முறைப்படி தூய்மை செய்யப்பட்ட பொன்னரிதாரம் 1 பலம் இதனைக் கல்வத்திலிட்டுப் பொடித்துத் தூள் செய்து முன்கூறிய அண்ட செயநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, 1 சாமமரைத்து, வெப்பம் தாங்கும் பீங்கானிலிட்டு, அடுப்பேற்றிச் சிறுதீயாய் எரித்து முன்கூறிய செயநீரைச் சிறுகச் சிறுகத் தெளித்துப் புகையாமல் 2 மணிநேரம் வறுத்து மறுபடியும் முன்போலக் கல்வத்திலிட்டரைத்து மறுபடியும் முன்போல வறுத்தெடுக்க வேண்டும். இவ்விதம், அந்தச் சரக்கானது கட்டுப்படுகிறவரையில் செய்து பின்பு தரா இலைச் சாற்றைவிட்டுக் கல்வத்தில் 2 சாமம் அரைத்து முன்கூறிய பீங்கானில் வைத்து மேற்படி இலைச் சாற்றைத் தெளித்து 1 சாமம், வறுத்து மறுபடியும் கல்வத்தில் முன் கூறிய இலைச் சாற்றை விட்டே 1 சாமமரைத்து வில்லை செய்து வெய்யிலில் உலர்த்தி முன்கூறிய இலையை அரைத்து ஓர் அங்குலக் கனமுள்ள கவசம் செய்து, அதன்மேல் 7 சீலைமண் செய்து கொஞ்சம் ஈரம் உலர்ந்தவுடன் 2½ பலமுள்ள 30 விராட்டியில் புடமிட்டு ஆறவிட்டெடுக்கப் பற்பமாகும். அரை குறையாய்ப் பற்பமாகி யிருந்தால், முன்கூறிய இலைச் சாற்றையே விட்டரைத்து முன்போலவே வில்லை செய்துலர்த்தி முன்போலப் புடமிட்டு எடுக்க பற்பமாகும்.

இத்தாளக பற்பமானது வாதம், மருத்துவம் என்ற இரு வகைக்கும் உபயோகமாகும். இது சற்றுத் துன்பமாயினும் உழைப்பிற்குத் தகுந்த ஊதியமுண்டு. நோய்களின் மீது பிரம்ம பாணத்தைப் போல பயன்படுத்தி வெற்றியடையலாம். இவ் விதமே மற்றச் சரக்குகளேயும் கட்டிக் கொள்ளலாம். பற்பமும் செய்து கொள்ளலாம். இவ்விதமாகச் செய்கிற பற்பத்திற்கும் வேறு விதமாகச் செய்கிற பற்பத்திற்கும் அனேக வேறுபாடு களுண்டு. அவற்றைப் பயிற்சி பெற்றவர்களாகிய அறிஞர்கள் அறிந்து கொள்வார்கள்.

## 189. அண்டச் செயநீர் (வேறு)

குஞ்சு பொரிக்கப்பட்ட கோழிமுட்டை ஓட்டை உப்புநீரில் வேக வைத்து, ஓட்டிற்குள்ளிருக்கிற சவ்வை நீக்கி வெய்யிலில்

ஈரமில்லாமல் உலர்த்திக்கொள்ளவேண்டும். இவ்விதம், பக்குவம் செய்யப்பட்ட முட்டைத்தோல் 3 பங்கு. இதனை ஒரு மண் பாண்டத்தில் போட்டு, அதன்மேல் இரண்டங்குலம் நிற்கும்படியாக, சிறுபிள்ளைகளின் சிறுநீரைவிட்டு, ஒரு நாள் வைத்து மறுநாள் அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து, சிறுநீரையெல்லாம் சுண்ட வைத்துக் கொள்ளவும். பின்பு, ஒட்டிலுள்ளதை எல்லாம் சுரண்டிக் கல்வத்திலிட்டு உத்தாமணிச் சமூலச் சாற்றைச் சிறுகச் சிறுக ஊற்றி, 4 சாம நேரம் அரைத்து வில்லைசெய்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். ஈரமில்லாமல் நன்ருய் உலர்ந்த பின்பு, ஒரு மூசையில் வைத்து மூசை வாய்க்குச் சில்லிட்டு வலுவாய் 3 அல்லது 5 சீலைமண் செய்துலர்த்திக் கொல்லனுலையில் வைத்து 4 மணி நேரம் கைவிடாமல் ஊதவேண்டும். ஊதும்போது மூசைக்குச் சிதைவு நேரிடாமல் கவனமுடன் திருப்பித் திருப்பியும் வரவேண்டும். இதைச் சற்றுக் கவனமாகவும் கைபாகமாகவும் செய்யவேண்டும், பின்பு வில்லையை எடுத்து அதற்குச் சமனெடை பாகப்படுத்தின அல்லது கட்டின வெடியுப்பைச் சேர்த்துக் கல்வத்திலிட்டு, உத்தாமணிச் சமூலச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு, 3 மணி நேரம் கைவிடாமல் அரைத்து வில்லைசெய்து வெய்யிலில் சற்றும் ஈரமில்லாமல் உலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி, 5 சீலைமண் வலுவாய்ச் செய்து நன்ருய் உலர்த்தி 3 பலமுள்ள 11 விராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறினபின்பு எடுத்து, கண்ட எடைக்குக் காற்பங்குக் கட்டின நவாச்சாரத்தைச் சேர்த்து இரண்டையும் மைபோலப் பொடித்து நான்கு அகலமான தட்டைப் பீங்கான்களின் ஓரங்களில் வைத்துப் பனியில் வைக்க நீர் கசியும். ஒவ்வொன்றிலுமுள்ள நீரை ஒன்ருய்ச் சேர்த்து மெல்லிய துணியில் வடிகட்டிக் கொள்ளவேண்டும். பகல் காலங்களுல் பீங்கான்களைக் குளிர்ச்சியான இடத்தில் வைத்திருக்க வேண்டும். மறுபடியும் இரவில் பனியில் வைக்கவேண்டும். முன் போலவே கசிந்த நீரைச் சேர்த்து வடிகட்டிக் கண்ணுடிக் குப்பியில் வைத்துக்கொள்ளவும். சுமார் ஒரு குப்பி செயநீர்க் காணும்.

ஆனுல், மேற்கண்டவிதம் செய்ய முடியாமற் போனுல் செயநீர்க் குப்பியில்போட்டுச் செயநீர்க்குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். ஆனுல் 10 நாளைக்கு ஒரு தடவை குப்பியை எடுத்துத் தெளிந்த நீரை மாத்திரம் இறுத்து வடிகட்டிக் குப்பியில் வைத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம், குப்பியிலுள்ள சரக்கெல்லாம் நீராகிறவரையில் செய்து கொள்ளவேண்டும்.

இந்தச் செயநீராலும் அநேக முறைகள் செய்யப்படுகின்றன. அம்முறைகள் ஆங்காங்கு எழுதப்படும்.

## 190. அண்டச் செயநீர் (வேறு)

எலுமிச்சம்பழச் சாறு 1 படி. இதனை ஒரு பீங்கான் பாத்திரத்தில் விட்டு, அதில் பத்துப் பலம் படிக்காரத்தைப் பொடித்துப் போட்டு, அதில் பத்துப் பருமனுன கருங்கோழி முட்டைகளைப் போட்டு, வெய்யிலில் வைத்து வரவேண்டும். கோழிமுட்டையின் மேலோடுகள் எல்லாம் கரைந்துபோகும். வெள்ளைக்கரு, மஞ்சள் கரு ஆகியவை சவ்வால் பொதியப் பட்டிருக்கும். அதை மாத்திரம் சவ்வுடனே தனியாய் எடுத்து கல்வத்திலிட்டு, அதனுடன் 2½ பலம் நவாச்சாரச் சுண்ணம் அல்லது நவாச்சாரப் பதங்கம், 2½ பலம், துருசு வெள்ளை அல்லது துருசுச் சுண்ணம் ஆகிய இரண்டையும் சேர்த்து 2 அல்லது 3 சாமமரைத்து ஒரு பீங்கானில் வழித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

எலுமிச்சம்பழச் சாறு, படிக்காரம், கரைந்த முட்டையோடு முதலியவைகளைத் தனியாய் மறுபடியும் வெய்யிலில் வைத்து அது குழம்புப் பதமாய் வருந்தருணத்தில் எல்லாவற்றையும் கல்வத்திலிட்டுக் கெட்டிப்பதமாகிற வரையில் அரைத்து வில்லை செய்து, ஈரமில்லாமல் நன்ருயுலர்த்தி அகலிலிட்டு மேலகல்மூடி வலுவாய் 5 சீலைமண் செய்து 3 பலமுள்ள 30 விராட்டியில் புடமிடச் சுண்ணமாகும்.

இச் சுண்ணத்துடன் முன் தயாரித்து வைத்திருக்கிற மெழுகையும் சேர்த்து 1 சாமமரைத்துப் பீங்கான் தட்டில் முறைப்படி வைத்துப் பனியில் வைக்க நீர் கசியும். அதைத் தனியே எடுத்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும். இவ்விதம் ஒவ்வோர் இரவும் பனியில் வைத்துக் கசியும் நீரைச் சேகரித்துக் கொள்ளவும். இவ்விதம், வைத்த சரக்கெல்லாம் நீரானபின் சேர்த்து இரண்டொரு நாள் வெய்யிலில் வைத்துப் பத்திரப் படுத்தவும்.

இவ்விதம், பனியில் வைத்துச் செய்ய முடியாவிட்டால் செயநீர்க் குப்பியில் வைத்து வாய்ப்பகுதியை மூடிச் செயநீர்க் குழியில் வைத்து முறைப்படி செயநீர் செய்துகொள்ளவும்.

இந்தச் செயநீரால் எல்லாச் சரக்குகளையும் மேற்கண்ட பாகப் படி செய்து கட்டுப்படுத்தலாம். இது வாதம், மருத்துவம் என்ற இருவகைப் பயன்களுக்கும் ஆகும். அறிவாளிகள் இதன் தொடர்பான முறைகளை அறிந்து செய்வார்களாயினும் ஆங்காங்குப் பல முறைகளையும் சொல்வோம்.

## 191. வெடியுப்புச் செயநீர்

50ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி வாழைக்கட்டைச் சாற்றில் தூய்மைசெய்யப்பட்ட வெடியுப்பு 10 பலம் (350 கிராம்). கோது கொட்டை முதலியவை நீக்கித் தூய்மை செய்யப்பட்ட புளி 10 பலம் (350 கிராம்). இவ்விரண்டையும் சேர்த்து மர உரலிலிட்டு இடித்து, மைபோலான பின்பு, சிறு வில்லைகளாய்ச் செய்து ஓட்டிலிட்டு 6ஆம் பாகத்தில் சொல்லப்பட்டிருப்பது போலச் செய்து சுண்ணமாக்கிக் கொள்ளவேண்டும்.

பின்பு, பாகப்படுத்தின வெண்காரம், படிக்காரச் சுண்ணம், சாரப்பதங்கம், பதங்கித்த கற்பூரம் இவை நான்கும் வகைக்குப் 1 பலம் (35 கிராம்). இவை எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்துக் கல்வத்திலிட்டு அரைத்துப் பின்பு, முன்கூறிய சுண்ணத்தையும் சேர்த்து 90ஆம் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிற முக்குண நீரை விட்டு, 2 சாமமரைத்துப் பனியில் வைத்துக் கசியக் கசிய நீரை எல்லாம் ஒன்ருய்ச் சேர்த்துக் குப்பியில் பத்திரப்படுத்தவும். இவ்விதம் வைத்த சரக்கெல்லாம் நீராகும் வரையில் பனியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். அல்லது செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். இதுவே வெடியுப்புச் செயநீராகும்.

மேற்கண்ட பாகப்படி செய்து எல்லாவிதச் சரக்குகளையும் கட்டலாம். எல்லாவிதச் சரக்குகளையும் பற்பமாக்கவும் சுண்ணமாக்கவும் பயன்படுகிறது. ஆனல் அதனதன் முறைகளையறிந்து செய்யவேண்டும். அம் முறைகளும் ஆங்காங்கு எழுதப்படும்.

## 192. வெடியுப்பு மடக்குச் செயநீர்

மேற்கண்ட பாகப்படி செய்த வெடியுப்புச் சுண்ணம் 10 பங்கு, பாகப்படுத்தின வெண்காரம், படிக்காரச் சுண்ணம், சாரப்பதங்கம், பதங்கித்த கற்பூரம் இந் நான்கும் வகைக்கு 1 பலம் (35 கிராம்) இவை எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு 191ஆம் முறைப்படி செய்த வெடியுப்புச் செயநீரை விட்டரைத்துமீதியாயிருக்கிற செய நீரையும் ஒன்ருய்ச் சேர்த்து, முன் சொல்லியிருக்கிற செய நீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். பின்பு முன் போலவே இரண்டாந் தடவையும் சரக்குகளைச் சேர்த்து, முன்னே தயாரித்து வைத்துள்ள செயநீரில் கொஞ்சம்விட்டு 2 சாமம் அரைத்து, மீதியாயிருக்கிற செயநீரையும் சேர்த்துச் செயநீர்க் குழியில் வைத்து நீராகிக் கொள்ளவேண்டும். இவ்விதம் 3 அல்லது நான்கு தடவைகள் செய்து, முடிவில் வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவும் வேண்டும். இதுவே வெடி மடக்குச் செய நீராம்.

இதன் பயன் அனேகமுண்டு. பற்பங்களைச் செய்யவும், சுண்ணங்களை முடிக்கவும் இது சிறப்பாய்ப் பயன்படும். கல்லினங்கள், ஒட்டினங்கள் முதலியவைகளையும் இந்த செயநீரை விட்டரைத்துப் புடமிடச் சுண்ணமாகும். இச் சுண்ணங்கள் கொடூரமான நோய்களைக் கண்டிக்கும். மேலும், மாத்திரைகள் முதலிய முறைகளிலும் சேர்க்கலாம். இவ்விதமே இந்தச் செய நீர் தொடர்பாகச் செய்யப்பட்ட சுண்ணம் முதலியவைகள் இரச வாதத் தொழிலுக்கும் பயன்படும். இது சார்பான சில முறை களையும் பின்னெழுதுவோம்.

## 193. குருவெடிச் செயநீர்

50ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி வாழைக் கட்டைச் சாற்றில் பாகப்படுத்தப்பட்ட கம்பி வெடியுப்பு 10 பலம் (350 கிராம்) கோது, கொட்டை முதலியவை நீக்கப்பட்ட புளி 10 பலம்; இவ்விரண்டையும் ஒன்றாய்ச் சேர்த்து மர உரலில் இரும்புலக்கை யால் மைபோல இடித்துக் கொள்ளவேண்டும். துருசிவெள்ளை, பதங்கித்த கற்பூரம், சீனவெள்ளை, பாகப்படுத்தின இந்துப்பு, சாரப்பதங்கம், நாயுருவி யுப்பு, அமுரியுப்பு இவ்வேழும் வகைக்கு 3 பலம் வீதம் எடுத்து இவற்றை ஒன்றாய்க் கலந்து மைபோலப் பொடித்து முன்னர்த் தயாரித்து வைத்திருக்கிற வெடியுப்புப் புளிக்கூட்டுடன் சேர்த்து மறுபடியும் மைபோல இடித்துச் சிறு வில்லைகளாகச் செய்து 6ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி எரித்துச் சுண்ணமாக்கிக் கொள்ள வேண்டும். இச் சுண்ணத்தை முறைப்படி பனியில் வைத்து அல்லது செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிச் சேகரித்துக் கொள்ளவேண்டும். பின்பு, 120ஆம் பாகப்படி செய்த சவுக்காரச் சுண்ணம், துப்பாக்கி மருந்தால் கட்டின வீரம், 57ஆம் பாகப்படி செய்த இரசகற்பூரம் இம் மூன்றும் வகைக்கு $1\frac{1}{4}$ வராகன் எடை ($4\frac{1}{8}$ கிராம்) இம்மூன்றை யும் மைபோலப் பொடித்து, முன் தயாரித்து வைத்துள்ள நீரிற் போட்டுக் குப்பியில் விட்டு மூடியிட்டு, கடும்வெய்யிலில் 1 அல்லது 2 வாரம் வைத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

இந்த நீரால், நாகம், காரீயம் முதலியவைகளைக் கட்டலாம். மேலும் அவற்றைச் செந்தூரமாகவும் செய்யலாம். இவ்விதம், செய்யப்பட்ட செந்தூரம் முதலியவை வாதம், மருத்துவம் என்ற இருவகைகளுக்குமாகும். இம்முறைகளை எல்லாம் இனி எழுதப்படும் கட்டுவகைப் பிரிவிலும், செந்தூர வகைப் பிரிவிலும் முறையே எழுதுவோம்.

## 194. பற்பவெடிச் செயநீர்

50ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி வாழைத் தண்டு நீரால் பாகப்படுத்தப்பட்ட கம்பி வெடியுப்பு 2 பங்கு, நவாச்சாரப் பதங்கம், கிளிஞ்சிற் சுண்ணும்பு, பாகப்படுத்தின பூநீர், இம் மூன்றும் வகைக்கு 1 பங்கு. இவை எல்லாவற்றையும் மைபோலப் பொடித்து ஒரு குப்பியில்போட்டு வாய்ப்பகுதியை மூடி, பனியில் வைத்து அல்லது செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ள வேண்டும். இந்த நீரை வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக்கொள்ள வேண்டும். இதுவே பற்பவெடி செயநீராகும். ஆனுல் மேலும் கடுங்காரமாக்க வேண்டுமானுல் இதனையே மடக்கி மடக்கி வாலையிலிட்டுத் தீநீராக்கிக் கொள்ளவும் வேண்டும்.

இந்தச் செயநீரால் கட்டின பாடாணத்தை அல்லது சவ்வீரத் தைச் சுருக்கிட அது பற்பமாகிவிடும். இவ்விதம் செய்யப்பட்ட பற்பமானது வாதம், மருத்துவம் என்ற இருவகைகளுக்குமாகும். இவ்விதம் செய்யப்பட்ட முறைகள், இவற்றின் தொடர்பான முறைகள் என்ற இவற்றை வெள்ளி, தூய்மையான தாமிரம் முதலியவைகளில் கொடுக்க நிறமுண்டாகும். ஆனுல் இந்தப் பக்குவங்களைப் பயிற்சி முதிர்ச்சி அடைந்தோரிடமிருந்து தெரிந்து கொள்ளவேண்டும்.

## 195. மகா செயநீர்

(அ) ஐய்த்தூன் எண்ணெயில் பாகப்படி செய்த நவாச்சாரம் அல்லது எவ்விதமாயேனும் பதங்கித்த நவாச்சாரம் 30 பலம் (350 கிராம்), வாழைத் தண்டுச் சாற்றில் பக்குவப்படுத்தினவெடியுப்பு, துப்பாக்கி மருந்தில் பாகப்படுத்தின வீரம், பாகப்படுத்தின சிலாசத்து, வெண்காரம், கந்தகப் பதங்கம், தாளகப் பதங்கம், கௌரிப் பதங்கம், நிமிளைப் பதங்கம், காரீயவெள்ளை, இலிங்க வெள்ளை, மனேசிலை வெள்ளை, துத்த வெள்ளை, தாமிர வெள்ளை, நாகவெள்ளை, இரசவெள்ளை, இப் பதினைந்தும் வகைக்கு 2 பலம் (70 கிராம்) வீதம் எடுத்து, இவை எல்லாவற்றையும் கல்வத்தி லிட்டு மைபோலப் பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

(ஆ) அறுபது கோழிமுட்டைகளை உடைத்து வெண் கருவை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும். இதன் சமனளவு வெள் ளெருக்கம் பால், அல்லது நாட்டெருக்கம்பால் இவ்விரண்டையும் கலந்து ஒரு பீங்கான் பாண்டத்தில் விட்டு அதில் 2 பலம் (70 கிராம்) 105ஆம் பாகப்படிசெய்த அண்டச் சுண்ணத்தைப் போட்டுக் கலக்கி 3 நாள் மூடி வைத்துத் தெளிந்த நீரை வடித்து

ஒரு குப்பியில் வைத்துக் கொள்ளவும். இவ்விதம் அதில் உண்டாகும் தெளிவை எல்லாம் சிறுகச் சிறுக இறுத்து ஒன்றாய்ச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

(இ) முன் தயாரித்து வைத்த தூளையெல்லாம் கல்வத்தில் போட்டு இந்தத் தெளிவைச் சிறுகச் சிறுக ஊற்றி 3 நாள் கை விடாமல் அரைக்கவேண்டும். பின்பு, ஒரே வில்லையாகத் தட்டி வெய்யிலில் உலர்த்தவேண்டும். கணீல் கணீல் என ஓசை உண்டாகும்படியாகக் கடும் வெய்யிலில் 2 வாரம் காயவைக்கவும் வேண்டும்.

(ஈ) படிக்காரம், இந்துப்பு, கிளிஞ்சில் தூள், சுக்கான் மண், கடல் நுரைத்தூள், அப்பளக்காரம், கிருட்டிண அப்பிரகத்தூள், வெள்ளை அப்பிரகத் தூள் கோழிமுட்டை ஓட்டுத் தூள், புறு முட்டை ஓட்டுத் தூள், காந்தத் தூள், இரும்பு அரப்பொடி, கருவங்கத் தூள், வெள்வங்கத் தூள், நாகத் தூள் இப்பதினைந்தும் வகைக்கு 3 பலம் (105 கிராம்). இவை எல்லாவற்றையும் ஒரு பீங்கான் பாண்டத்தில் போட்டு, அதன்மேல் $\frac{1}{2}$ அங்குலம் நிற்கும் படியாகச் சிறுவர்களின் சிறுநீரைவிட்டு, மூன்று நாள் வெய்யிலில் வைத்தெடுத்துக் கல்வத்திலிட்டு, முன் கூறிய சிறுநீர்விட்டு 4 சாமம் அரைத்து வில்லை செய்து ஈரமில்லாமல் நன்றாயுலர்ந்த பின்பு, அகலிலிட்டு மேலகல் மூடி 5 சீலைமண் செய்து $2\frac{1}{2}$ பலமுள்ள 50 விராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறினபின்பு எடுத்துக் கல்வத்தி லிட்டு முன் சொன்ன சிறுநீரை விட்டு மைபோல் அரைத்து, முன் தயாரித்து உலர்த்தி வைத்திருக்கிற வில்லைக்குக் கீழும் மேலுமா கவும், எங்கும் சமபாகமாகவும் கவசித்து நன்றாயுலர்த்தி, அதன் மேல் 7 சுண்ணாம்புச் சீலை செய்து நன்றாயுலர்த்தி, 3 பலமுள்ள 11 விராட்டியில் புடமிட்டு ஆறின பின்னெடுத்துச் சுண்ணாம்புக் கவசத்தை நீக்கிவிட்டு, மருந்துக் கவசத்தைப் பிரிக்காமலே அதன் மேல் புதிதாய்ச் சுண்ணாம்புச் சீலைக் கவசம் முன்போலச் செய்து, இரண்டாந் தடவை 13 விராட்டியில் புடமிட்டெடுத்து, முன்போல எரித்த சுண்ணாம்புக் கவசத்தை நீக்கிப் புதிதாய்ச் சுண்ணாம்புக் கவசம் செய்து மூன்றும் தடவை, 15 விராட்டியில் புடம் போட் டெடுத்து, முன்போலப் புதிதாய்ச் சுண்ணாம்புக் கவசம் செய்து நான்காம் தடவை, 16 விராட்டியில் புடம் போட்டெடுத்து, அவ்விதமே புதிதாய்ச் சுண்ணாம்புக் கவசம் செய்து, ஐந்தாம் தடவை 17 விராட்டியிலும் புடமிட்டுக் குளிர ஆறினபின் எடுத்து மேற் சுண்ணாம்புக் கவசத்தையும், மருந்துக் கவசத்தை யும் நீக்க, சாரம் முதலியவைகள் சுண்ணமாயிருக்கும். அதை

எடுத்துக் கல்வத்திலிட்டு மைபோலப் பொடித்துப் பீங்கான் பாண்டத்தில் முறைப்படி அனைத்தையும் பனியில் வைத்து அல்லது குப்பியில் போட்டு வாய்ப்பகுதியை மூடிச் செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். இந்த நீரை வேறொரு குப்பியில் விட்டுக் குளிர்ச்சியான இடத்தில் வைத்துத் தெளியத் தெளியத் தெளிவை மற்றொரு குப்பியில் இறுத்துக் கொள்ள வேண்டும்.

இந்த நீர் 10 பலத்துக்குத் துப்பாக்கி மருந்தில் கட்டின வீரம் 1 பலம் (35 கிராம்) வீதம் பொடித்துப் போட்டு நன்றாய்க் குலுக்கி, 20 நாள் கடும் வெய்யிலில் வைக்கவேண்டும். நாள்தோறும் 5 அல்லது 6 தடவைகள் குப்பியைக் குலுக்கியும் வரவேண்டும். மேற்கண்ட நாள்கள் கடந்து எல்லாம் ஒன்றித்துவிட்டால் பத்திரப்படுத்தவேண்டும். இதுவே மகா செயநீராகும்.

இந்த மகா செயநீரால் எவ்விதச் சரக்குகளையும் கட்டலாம், சுண்ணம், பற்பம், செந்தூரம் முதலியவைகள் செய்யலாம். இந்தச் செயநீர் எல்லா வகையிலும் பயன்படுகின்றபடியால் இதற்கு காவல் (இரட்சகம்) செயநீரென மறுபெயருமுண்டு.

இதைச் செய்து முடிப்பது பயிற்சித் திறமை இல்லாத போலி இரசவாதிகளுக்கு இயலாததேயாகும். பயிற்சியுடையோர் இதில் சேர்க்கப்படும் ஒவ்வொன்றையும் விடா முயற்சியுடனும், மன ஊக்கத்துடனும் செய்து முடித்துத் தங்கள் விருப்பத்தை நிறை வேற்றிக் கொள்வார்கள். மேற்கண்ட அமைப்புகள் இல்லாத சோம்பேறிகளான வீண்வாதம் செய்யும் வீணர்கள் ஒரு போதும் செய்து முடிப்பதுமில்லை. மேலும் கடவுள் பக்தி, பிறருக்கு உதவும் மனம் முதலியவைகள் இல்லாதவர்களுக்கு இம்முறை நிறைவேறு வதுமில்லை.

இதன் சார்பு முறைகள் பல. அவையெல்லாவற்றையும் அறிவாளிகள் அறிவார்களாகையால், அவர்கள்மூலம் தெரிந்துக் கொள்ளவேண்டும்.

## 196. இலகுசாரச் செயநீர்

ஜய்த்தூன் (ஆலிவ்) எண்ணெயில் பாகப்படி செய்த நவாச் சாரம் 10 பலம் (350 கிராம்). இதனை அகலமான ஒரு தட்டைப் பீங்கானில் போட்டு கையாந்தகரைச் சாற்றைத் தெளித்துப் பிசைந்து வெய்யிலில் உலர்த்தவேண்டும். நன்றாய்க் காய்ந்தவுடன் மறுபடியும் முன் சாற்றைத் தெளித்துப் பிசைந்து வெய்யிலில்

உலர்த்தவேண்டும். இவ்விதம் ஒரு நாளில் காலை முதல் மாலை வரையில், 7 அல்லது 8 தடவைகள் முன் கூறிய சாற்றைத் தெளித்துப் பிசைந்து உலர்த்திக் கொள்ளவேண்டும். இவ்வாறு 8 நாள்கள் செய்து ஒன்பதாம்நாள் முதல், 2 நாள்கள் வரையில் முன்கூறிய சாற்றைத் தெளிக்காமல் வெய்யிலில் வைத்துலர்த்தி, புதிதான மெல்லிய துணியில் தளர்ச்சியாய்ப் பொட்டலமாக (மூட்டை) முடிந்து வைத்துக் கொள்ளவேண்டும்.

மூன்று படி கொள்ளும்படியான மண் பானையில் $1\frac{1}{2}$ படி கிளிஞ்சில் சுண்ணும்பைக் கொட்டி கையால் நன்ருயமுத்திச் சமமாகச் செய்து முன் தயாரித்து வைத்துள்ள நவாச்சார முடிச்சை வைத்து அதன்மேலும் $1\frac{1}{2}$ படி கிளிஞ்சில் சுண்ணும்பைக் கொட்டிச் சமமாக நன்ருயமுத்திப் பானை வாய்க்குச் சாணக்கியால் மூடி 3 அல்லது 4 சீலைமண் செய்து அடுப்பேற்றி, 4 சாமம் எரித்து 1 நாள் ஆறவிட்டெடுக்க, நவாச்சாரமானது சுண்ணமாயிருக்கும். மஞ்சள் நிறமாகச் சிவக்கவேண்டும். சிவக்காவிட்டால் மறுபடியும் முன்போலச் சுண்ணும்பில் வைத்தெரிக்கச் சுண்ணமாகும்.

இந்தச் சுண்ணத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து ஒரு மெல்லிய சல்லாவில் முடிந்து, ஒரு பெரிய பானைக்குள் பீங்கான் பாண்டமொன்று வைத்து, முடிச்சியிலிருந்து விழும் நீரானது முன்கண்ட பிங்கான் பாண்டத்தில் சொட்டும்படியாக இந்த நவாச்சாரச் சுண்ண முடிச்சைக் கிழி கட்டித் தொங்கவைத்துப் பானைவாயை வேருெரு சட்டியால் மூடி, ஈரமான இடத்தில் புதைத்து வைத்து, 40 நாள்கள் சென்றெடுத்தால் சாரச்சுண்ண மெல்லாம் நீராகி, முன்கூறிய பீங்கானில் நிற்கும். இந்த இடத்தில் ஈரங்குறைவாக இருந்தால் நாள்தோறும் 3 அல்லது 4 குடம் நீர் அந்தக் குழியில் தெளித்து எப்போதும் ஈரமாக இருக்கும்படி செய்து வரவேண்டும். அல்லது இந்தச் சுண்ணத்தைச் செயநீர்க் குப்பியில் போட்டு வாய்ப்பகுதியை மூடி செயநீர்க் குழியில் வைத்து முறைப்படி செயநீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தச் செயநீரை ஒரு பீங்கான் பாண்டத்தில் விட்டு வெய்யிலில் வைத்துவர உப்பாகிவிடும். இந்த உப்பையே மறு படியும் முன்போலப் பானையில் கிழிகட்டி அல்லது செயநீர்க் குழியில்வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். இரண்டாம் தடவையும் வெய்யிலில் வைத்து உப்பாக்கி மறுபடியும் முன் போலப் பாகப்படி செயநீராக்கிக் கொள்ளவும். இவ்விதம் மூன்று தடவைகள் உப்பாக்கிப் பின்பு நீராக்கியும் கொள்ளவேண்டும்.

இதற்கு நவாச்சாரநீர் என்று சொல்வதே சரியானதாயினும், மூல நூலில் எழுதியிருப்பதைப் போலவே நாமும் இங்குச் செயநீர் முறையில் எழுதநேரிட்டது.

முன் சொல்லப்பட்டிருக்கும் சாரநீரைப் பயன்படுத்தும் முறைகளிலெல்லாம் இந்த இலகு சாரச்செயநீரையும் பயன் படுத்தலாம். இன்னம் முன்சொல்லப்பட்ட சாரநீரைக் காட்டிலும் இது அதிக மேலான குணத்தைக் கொடுக்கும். இன்னம் இதனுல் பாகப்படுத்தி முறைப்படி செய்து நாகத்தையும் கட்டலாம்.

## 197. இலகுசாரச் செயநீர் (வேறு)

29ஆம் பாகப்படி கட்டின நவாச்சாரக் கட்டி 10 பலம் (350 கிராம்), பாகப்படுத்தின கறியுப்பு, கட்டின வெடியுப்பு, பாகப் படுத்தின சீனக்காரம், 120ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிற சவுக் காரச்சுண்ணம், கட்டின சாரம் ஆகிய இவை ஐந்தையும் வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து பொடித்து சட்டியிலிட்டு வறுத்துக் கல்வத்தி லிட்டு, மேற்சொன்ன இலகுசாரச் செயநீரை விட்டு மெழுகைப்போல்அரைத்து முன்கண்ட சாரக்கட்டிக்குக் கவசம் செய்து உலர்த்தி, $1\frac{1}{2}$ படி சுண்ணும்பை ஒரு மண்பாண்டத்தில் போட்டு அழுத்தி முன் தயாரித்த கவசத்தை வைத்து அதன்மேலும் $1\frac{1}{2}$ படி சுண்ணும்பைக் கொட்டி அழுத்திப் பானை வாய்க்குச் சாணக்கி மூடி சீலமண் செய்து நான்கு சாமம் எரித்துக் குளிர ஆறவிட்டுப் பிரித்தெடுக்க சாரமானது யானைத் தந்தத்தைப் போலக் கட்டுப் பட்டிருக்கும்.

செம்மண் தரையிலுள்ள பூநாகத்தை மோரிலிட்டு 2 சாமம் ஊறவைக்க, மண்ணெல்லாம் வெளிப்பட்டுப்போகும். பின்பு பூச்சிகளை நீர்விட்டு நன்ருய்க் கழுவி, வெய்யிலில் உலர்த்தி ஒரு கலயத்தில் போட்டு மேலகல் மூடி 10 அல்லது 15 விராட்டி யில் புடமிட்டு ஆறவிட்டெடுக்க பற்பமாகியிருக்கும். இதற்குப் பூநாகப் பற்பமென்று பெயர்.

தலைமயிரைச் சிகைக்காய் முதலிய நீரில் உறவைத்து, வெந்நீர் விட்டுக் கழுவி எண்ணெய்ப் பசை முதலியவை இல்லாமல் தூய்மை செய்து வெய்யிலில் உலர்த்தி, அதை ஒரு கலயத்திற் போட்டு வாய்க்குச் சில்லிட்டு, சீலமண் செய்து 10 அல்லது 15 விராட்டியிற் புடமிட்டு ஆறவைத்தெடுக்க ஒருவிதச் சிட்டமாய் இருக்கும். இதை எடுத்துக் கல்வத்திற் பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும். இதற்கு உரோமச் சூரணம் என்று பெயர்.

முன்கட்டின சாரம் 2 பங்கு, பூநாக பற்பம், உரோமச் சூரணம் இவ்விரண்டும் வகைக்கு 1 பங்கு. இம் மூன்றையும் கல்வத்திலிட்டு, முன் கூறிய இலகுசாரச் செயநீரைவிட்டு 2 சாமம் அரைத்துச் செயநீர்க் குப்பியில் போட்டு, செயநீர்க் குழியில் பாகப்படி வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தச் செயநீரால் முக்கியமாய் நாகத்தைக் கட்டலாம். இவ்விதம் கட்டின நாகத்தைச் செந்தூரம் செய்தால் வாதம், மருத்துவம் என்னும் இருவகைக்கும் பயன்படும். இதன் தொடர்பான முறைகள் பலவுள. அப்பாகங்களைப் பின்னெழுதுவோம்.

குறிப்பு :—பூநாகத்தைப் பற்பம் செய்யாமலும் தலைமயிரை கரிக்காமலும், முன் சாரத்தோடு சமபாகமாகச் சேர்த்து முன் செயநீர் விட்டரைத்து மெழுகாக்கிக் கொள்ளவும். குப்பைமேனிச் சாற்றில் நாகத்தை 7 தடவைகள் உருக்கிச் சாய்த்துத் தூய்மை செய்து புளியிலைக் கனம் தகடடித்துச் சிறு துண்டுகளாகக் கத்தரித்துக் 'கொள்ளவேண்டும். பலமான மூசையில் முன்கூறிய மெழுகில் கொஞ்சம் வைத்துப் பரப்பி, அதன்மேல் ஒன்றிரண்டு நாக வில்லைகளை வைத்து அதன்மேல் மெழுகை வைத்துப் பரப்ப வேண்டும். இவ்விதம், ஓர் அடுக்கு மெழுகையும் ஓர் அடுக்கு நாகச் சல்லியையும் வைத்து மேலே மெழுகை வைத்து மூசை வாய்க்குச் சில்லிட்டு வலுவாய்ச் சீலைமண் செய்து வெய்யிலில் உலர்த்தி இரண்டு முழப் புடம்போட்டு, இரண்டு நாள் ஆறவிட்டெடுக்க, மணிமணியாய் உருகி நிற்கும். ஒரு மணியை வச்சிர மூசையில் வைத்து நன்ருய் உருக்க வேண்டும். அப்பொழுது மூன்றுவிதப் புகைகண்டு, நன்ருய்க் கண்விட்டாடும்பொழுது எடுத்துச் சாய்க்கவும். மஞ்சள் வண்ணச் சாயலாய் நீல நிறமான மையைப் போல் இந்த நாகத்தைச் செந்தூரித்தால் பல தொழிலுக்கு மாகும், மேலும், இந்த நாகமானது செந்தூரிக்காமலே இரசவாதத் தொழிலுக்குப் பயன்படுத்தலாம். இதன்முறை திறவுகோலில் எழுதப்படும்.

## 198. சிப்பிப்பாகச் செயநீர்

110ஆம் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி தயாரித்த சிப்பிச் செயநீர் 10 பலம் (350 கிராம்) 19ஆம் பாகப்படி அல்லது 20ஆம் பாகப்படி அல்லது 23ஆம் பாகப்படி தயாரித்த கறியுப்பு; சீனச் சுண்ணம் நவாச்சாரப்பதங்கம் அல்லது கட்டின நவாச்சாரம், வெடியுப்புச் சுண்ணம் இவை வகைக்கு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்) இந்

நான்கையும் முன் கூறிய சிப்பிச் செயநீரில் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயாய் எரித்து, இரண்டு மூன்று கொதி வந்தவுடன் இறக்கிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இந்த சிப்பிப் பாகச் செயநீரும் பலவகைக் கட்டு, செந்தூரம் முதலியவைகளுக்குப் பயன்படுகிறது. இது தொடர்பான முறைகளும் பின்னெழுதப்படும்.

## 199. மகாசிப்பிச் செயநீர்

முற்றின ஆற்றுச் சிப்பிகள் 10 பலம் (350 கிராம்), பாகப்படுத்தின பூநீர், கற்சுண்ணும்பு இவ்விரண்டும் வகைக்கு $\frac{1}{4}$ பலம். இவ்விரண்டையும் ஒருபடி நீரில் கரைத்து முன்கூறிய சிப்பிகளை அதில் போட்டு அடுப்பேற்றித் தண்ணீர் சுண்டினவுடன் இறக்கி, அப்படியே உரலிலிட்டு இடிந்துத் தூளாக்கி, அதனுடன் பத்துப் பலம், சாரப்பதங்கத்தைச் சேர்த்து 2 சாமம் எவ்விதத் திரவத்தையும் விடாமல் நன்ருயரைத்து அப்படியே 3 நாள் வைக்கவேண்டும்.

14ஆம் பாகப்படிதயாரித்துள்ள வெடியுப்பைப் பொடித்துப் பனியில் வைத்து செயநீராக்கிக் கொள்ளவேண்டும்.

முன் தயாரித்து வைத்திருக்கிற சிப்பிச் சாரத்தில் முன் தயாரித்த செயநீரைவிட்டு, 4 சாமமரைத்து வில்லைதட்டிக் காயவைத்துக் குகையிலிட்டு வாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்து, 3 பலமுள்ள 20 விராட்டியில் புடமிட்டு, குளிர ஆறவிட்டெடுத்துக் கல்வத்தில் பொடித்துப் பனியில் வைத்து நீராக்கிக் கொள்ள வேண்டும். அவ்விதம் செய்யக்கூடாத காலங்களில் செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். இதற்குச் சிப்பிப் பாகச் செயநீரென்றும், சிப்பிச் சாரச் செயநீரென்றும் பெயர்.

இந்தச் சிப்பிப் பாகச் செயநீரால் அனேக சரக்குகளைக் கட்டலாம். ஆனால், அதற்குத் தகுந்த விதமாய்ப் பாகஞ்செய்து கட்டவேண்டும். மேலும், இது சில செந்தூர முறைகளிலும் பயன் படுத்தப்படுகிறது.

**குறிப்பு** :—இந்தச் சிப்பி பாகச் செயநீரில் சீனச்சுண்ணம், சங்குச் சுண்ணம், பாடாணப் பதங்கம் என்ற இவற்றைச் சேர்த்து வெடியுப்பு முதலியவைகளைப் பலவித முறைகள் செய்வதும் உண்டு. அப் பாகங்களை ஆங்காங்கு எழுதுவோம். மேலும் வந்தவிடத்திலும் காண்க.

## 200. அறுவகைச் சிப்பிச் செயநீர்

பூநீரையும், கறியுப்பையும் தண்ணீரிற் கரைத்து அதில் ஆற்றுக் கிளிஞ்சில்களைப் போட்டுக் கொதிக்க வைத்து, நன்ருய் எரித்து 4 அல்லது 5 தடவைகள் கொதி வந்த பின் இறக்கிக் கிளிஞ்சில்களின் முதுகின் மீதுள்ள கருமை நீங்கும்படியாகத் தேய்த்துக் கழுவி வெய்யிலில் உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். இதுவே கிளிஞ்சில் தூய்மையாகும்.

இவ்விதம் தூய்மை செய்யப்பட்ட கிளிஞ்சில் 10 பலம் (350 கிராம்), வீரப்பதங்கம், பாகப்படுத்தின துருசு, பாகப்படுத்தின துத்தம், இரசப் பதங்கம். இரசகற்பூரப்பதங்கம்; பாகப்படுத்தின வெண்காரம் ஆகிய இவ்வாறும் வகைக்கு 1 வராகன் எடை (3½ கிராம்) இந்த ஆறு சரக்குகளையும் கல்வத்திலிட்டு, உமிழ் நீர், எலுமிச்சம் பழச் சாறு என்ற இருவகைத் திரவத்தையும் சம பாகமாய்ச் சேர்த்துச் சிறுகச் சிறுக விட்டு 1 சாமமரைத்து முன் தூய்மைப்படுத்தி வைத்திருக்கிற கிளிஞ்சில்களின் உள்ளிற் பூசிக் காய வைத்து, 3 பலமுள்ள ஐந்து விராட்டிகளை ஒடித்து அடுக்கி அதன்மேல்:ஒரு விராட்டியை முழுசாய் வைத்து, அதன்மேல் முன் சொன்ன மருந்தைப் பூசி, தயாரித்து வைத்திருக்கிற கிளிஞ்சில் களை வரிசையாய் அடுக்கி, அதன் மேலும் ஒரு முழு விராட்டியை வைத்து இரண்டு முழு விராட்டிக்கும் இடையிலுள்ள சந்துகளுக் கும் விராட்டித் துண்டு அடுக்கி சந்தில்லாமல் செய்து அதன்மேல் 5 விராட்டிகளை ஒடித்து அடுக்கிப் புடம்போட்டுக் குளிர ஆறின பின் பிரித்துப் பக்குவமாய்ச் சாம்பல் சேராமல் வெந்திருக்கிற கிளிஞ்சில்களை மட்டும் எடுத்துப் பொடித்துத் துணியால் சலித்து வைத்துக் கொள்ளவேண்டும். இந்தச் சுண்ணத்தின் எடைக்கு, நவாச்சாரப் பதங்கத்தை அல்லது கட்டின நவாச்சாரத்தைச் சேர்த்து இரண்டும் கலக்கும்படியாய் அரைத்து மூசையிலிட்டு, மூசை வாய்க்குச் சில்லிட்டு, 5 சீலை மண்செய்து கொல்லுலையில் வைத்து 2 அல்லது 3 மணிநேரம் ஊதவேண்டும். ஊதும்போது மூசைக்குத் தீங்கு நேரிடாவண்ணம் கவனமுடன் திருப்பித்திருப்பி வரவும்வேண்டும். இவ்விதம் மேற்கண்ட நேரம் ஊதி எடுத்துக் குளிர ஆறவைத்து மூசையை உடைத்தெடுக்க எல்லாம் ஒருவிதச் சுண்ணமாகி இருக்கும். இதை எல்லாம் சிதைவில்லாமல் ஒன்ருய்ச் சேகரித்துப் பீங்கான் தட்டுகளில் பாகப்படி வைத்துப் பனியில் வைக்க நீர் கசியும். இதனைத் தினந்தோறும் சேகரித்துக் கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இவ்விதம் செய்ய இயலாவிடின் மேற்படி சுண்ணத்தை செயநீர்க் குப்பியில் இட்டு வாய்க்கு மூடியிட்டு வாய்ப்பகுதியை

மூடி, செயநீர்க் குழியில் 40 நாள் வைத்துநீராக்கிக் கொள்ள வேண்டும். பின்பு இதை எடுத்து மெல்லிய துணியால் வடிகட்டி ஒரு கண்ணுடிக் குப்பியில் விட்டு வாய்க்கு மூடியிட்டு இராக் காலங்களில் குளிர்ச்சியான இடத்தில் அதாவது நீர்த்துறைக் கரையோரங்களில் வைத்து மறுநாள் காலையில் குப்பியில் தெளிந்து நிற்பதை மாத்திரம் இறுத்து வேறு குப்பியில் விட்டுக் கொள்ளவும். இவ்விதம் ஒவ்வோர் இரவும் பனியில் அல்லது நீர்க் கரையோரங்களில் வைத்துக் காலையில் தெளிவை மாத்திரம் இறுத்துத் கொள்ளவும். இவ்விதம் குப்பியிலுள்ளது எல்லா வற்றையும் தெளியத் தெளிய இறுத்துக் கொண்டு எஞ்சி நிற்கும் வண்டலை மறுபடியும் செயநீர்க் குப்பியில் விட்டுச் செயநீர்க் குழியில் வைத்து நீராக்கி முன்போல குப்பியில் வைத்துத் தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட இரு வகைகளில் ஒரு வகையாய்ச் செய்யப்பட்ட தற்கு இலகு சிப்பிச் செயநீரெனப் பெயர். சிலர் இதைச் சுண்ணச் செயநீரென்றும் சொல்கின்ருர்கள். இதன் பெயர் எவ்விதமா யினும் நமக்குக் காரியமே பெரிது.

இந்தச் செயநீரால் சுண்ணப்படுத்தவேண்டிய சரக்குகளைப் பக்குவப்படுத்திஞல் அச்சுண்ணத்திற்குச் சிறப்பான குணமுண் டாகும். மேலும், இந்தச் செயநீரால் பற்பலவித மருந்து முறைகள் செய்யப்படுகின்றன. அவையெல்லாம் ஆங்காங்கு எழுதப்படும்.

## 201. கறியுப்புச் செயநீர்

பாகப்படுத்தின அல்லது கட்டின கறியுப்பு தேவையான அளவு. இதைக் கல்வத்தில் இட்டு உத்தாமணி அல்லது வேலிப் பருத்தி என்னும் மூலிகையின் சமூலத்தை இடித்துப் பிழிந்து துணியால் வடித்துத் திப்பி நீக்கப்பட்ட சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு, 2 சாமமரைத்து மெல்லிய ஒரே வில்லையாகச் செய்து கனத்த மண்பீங்கானில் வைத்துக் கடும் வெய்யிலில் 7 அல்லது 10 நாட்கள் வைத்து, வில்லை தட்டிக் கணீர் கணீரெனச் ஓசை கேட்கும்படியாகக் காயவைத்த பின்பு, அதற்குச் சரியான அகலில் வைத்து மேலகல் மூடி சந்தில்லாமல் 5 சீலைமண் செய்து உலர்த்தி 3 பலமுள்ள 16 விராட்டியில் புடமிட்டு, ஒரு நாளாற வைத்து மறுநாள் வில்லையை எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து 1 மணிநேரம் அரைத்துப் பின்பு முன்கூறிய மூலிகைச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு முன்போலவே 2 சாமமரைத்து

முன்போலவே வில்லை செய்து உலர்த்தி முன்போலப் புடமிட வேண்டும். இவ்விதமே இந்த உப்பை மீண்டும் மீண்டும் நான்கு புடங்களிட்டு, ஐந்தாம் முறையும் முன்போல அரைத்து வில்லை செய்து காயவைத்துக் கவசஞ் செய்து 24 விராட்டிகளில் புடமிட்டு ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் எடுத்துப் பொடித்து ஒரு பீங்கான் பாண்டத்தில் வைத்து ஓர் இரவு ஆகாயத்தின்கீழ் வைத்து மறுநாள் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும். இதற்கு உப்புச் சுண்ணம் அல்லது சீனக்காரப்பூ என்று பெயர்.

இந்த உப்புச் சுண்ணம் அல்லது சீனக்காரப்பூ 4 பங்கு, வெடியுப்புச் சுண்ணம் 4 பங்கு, சீனக்காரச் சுண்ணம் 4 பங்கு, பாகப்படுத்தின இந்துப்பு, நவாச்சாரப் பதங்கம் அல்லது கட்டின நவாச்சாரம் இவை வகைக்கு 1 பங்கு, இரசகற்பூரப் பதங்கம் $\frac{1}{4}$ பங்கு. இவை எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு மைபோலப் பொடித்து ஒரு பீங்கான் பாண்டத்தில் பரப்பி வெய்யிலில் வைத்து, ஈரப்பசை இல்லாமல் உலர்த்திக் கொள்ளவேண்டும். பின்பு இத்தூளையெல்லாம் ஓர் அகலில் வைத்து மேலகல் மூடி 5 சீலைமண் செய்து உலர்த்தி, இந்தக் கவசத்தின் எடைக்கு 6 பங்கு விராட்டியில் புடமிட்டு ஒரு நாள் ஆறவிட்டு எடுக்க, தூளெல்லாம் உருகிக் கல்லைப்போலக் கெட்டிப்பட்டிருக்கும். இதை எடுத்துக் கல்வத்தில் அரைத்து மைபோலப் பொடித்துப் பீங்கானில் இட்டுப் பனியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும். அல்லது செயநீர் குப்பியில் போட்டுச் செயநீர்க் குழியில் வைத்துச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தச் செயநீரால் பலவகைச் சுண்ணங்களைச் செய்யலாம். பலவகைச் செயநீர்களையும் செய்துகொள்ளலாம். அறிஞர்களுக்கு அனேக வகைகள் தெரியுமாகையால் தத்தம் அறிவிற்குத்தெரிந்த வரையில் பாகங்களைச் சார்பு ஏற்றிச் செய்துகொள்வார்கள். ஆயினும், உதாரணமாகச் சில பாகங்களையும் இங்கு எழுதுவோம்.

## 202. வெடியுப்புச் சுண்ணம்

பாகப்படுத்தின வெடியுப்பு 10 பங்கு, பாகப்படுத்தின படிக்காரம் 8 பங்கு, முன் தயாரித்து வைத்துள்ள கறியுப்புச் சுண்ணம் அல்லது சீனக்காரப்பூ 5 பங்கு. இம் மூன்றையும் கல்வத்திலிட்டு மைபோலப் பொடித்துப் பின்பு, முன் தயாரித்து வைத்துள்ள கறியுப்புச் செயநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, 4 சாமம் அரைத்து வில்லைசெய்து, ஈரமில்லாமல் வெய்யிலில் உலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி 5 சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின்

எடைக்கு ஆறு பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறவிட்டு எடுக்கச் சுண்ணமாகி இருக்கும். இதுவே வெடியுப்புச் சுண்ண மாகும்.

## 203. வெடிசுண்ணச் செயநீர்

மேற்கூறிய வெடியுப்புச் சுண்ணம் 1 பங்கு, பச்சை நவாச் சாரம் 1 பங்கு. இவை இரண்டையும் பொடித்துப் பக்குவப்படி பனியில் வைத்துச் செயநீராக்கிக் கொள்ளலாம். அல்லது செய நீர்க் குப்பியில் விட்டுச் செயநீர்க் குழியில் வைத்து முறைப்படி செய்து செயநீர் செய்துகொள்ளவேண்டும்.

இந்த வெடிச்சுண்ணச் செயநீரால் துருசு, வீரம், இலிங்கம், வெள்ளைப் பாடாணம், தாளகம், கெந்தகம், என்னும் இந்த ஆறு சரக்குகளையும் கட்டலாம்.

இவற்றுள் ஒன்றை அப்பிரேகத் தகட்டின்மீது அல்லது வெம்மை தாங்கும் பீங்கானில் அல்லது தகரத் தகட்டின்மீது வைத்துச்சிறு தியாய் எரித்து மேற்கூறிய செயநீரில் சுருக்கிடக் கட்டுப்படும். அல்லது இந்தச் செயநீரை விட்டு மேற்கூறிய சரக்கு களில் ஒன்றை அரைத்து வெம்மை தாங்கும் பீங்கானில் வைத்து, மேற்கூறிய செயநீரைத் தெளித்து வறுத்து, மறுபடியும் முன் போலவே செயநீர்விட்டு அரைத்து வறுத்துக்கொள்ளலாம். இவ்விதம் அந்தச் சரக்குக் கட்டுப்படுகிறவரையில் செய்து கொள்ளவேண்டும்.

## 204. செயநீர் வீரக்கட்டு

தூய்மை செய்யப்பட்ட வீரத்தை மேற்சொன்ன முறைப்படி 4 சாமம் சுருக்கிட்டு அல்லது வறுத்துப் பாகப்படுத்திக் கட்டிக் கொள்வதே செயநீர் வீரக்கட்டாகும்.

## 205. வீரச்சுண்ணம்

மேற்கூறிய முறைப்படி கட்டின வீரம் 10 பங்கு, பாகப் படுத்தின படிக்காரம் 8 பங்கு, (படிக்காரச் சுண்ணமானல் தீவிர மான குணமாயிருக்கும்). கறியுப்புச்சுண்ணம் அல்லது சீனக்காரப்பூ 5 பங்கு. இவை எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு மைபோலப் பொடித்துப் பின்பு, முன் கூறிய கறியுப்புச் செயநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, 4 சாமம் அரைத்து வில்லைசெய்து, ஈரமில்லாமல் வெய்யி வில் உலர்த்தி, அகலிலிட்டு மேலகல் மூடி, 5 சீலைமண்செய்து

உலர்த்திக் கவசத்தின் எடைக்கு ஆறு பங்கு எடை விராட்டியில் புடமிட்டு ஆறவைத்து எடுக்க எல்லாம் சுண்ணமாகி இருக்கும். இதுவே வீரச் சுண்ணமாகும்.

## 206. வீரச்சுண்ணச் செயநீர்

மேற்படி வீரச்சுண்ணம் 1 பங்கு, பச்சை நவாச்சாரம் 1 பங்கு. இவ்விரண்டையும் பொடித்துப் பக்குவப்படி பனியில் வைத்துச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும். அல்லது செயநீர்க் குப்பியில் வைத்து, செயநீர்க் குழியில் வைத்து முறைப்படி செய்து செய நீராக்கிக் கொள்ளவேண்டும். இதுவே வீரச்சுண்ணச் செய நீராகும்.

## 207. செயவீரச் சுண்ணம்

மேற்கண்டபடி கட்டின வீரத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்கூறிய வீரச்சுண்ணச் செயநீரை விட்டுச் சிறுகச் சிறுக ஊற்றி. 3 நாள் கைவிடாமல் அரைத்து வில்லைதட்டி வெய்யிலில் உலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி, 5 சீலைமண் வலுவாய்ச் செய்து கவசத்தின் எடைக்கு 7 பங்கு விராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறினபின் எடுக்க, வீரமானது சுண்ணமாகி இருக்கும். இதுவே செயவீரச் சுண்ணமாகும்.

துட்பாக்கி மருந்தினுல் கட்டுப்படுத்தின வீரத்தையும் மேற் கண்ட பாகப்படி செய்து சுண்ணமாக்கிக் கொள்ளலாம். அதற்கும் செயவீரச் சுண்ணமென்று பெயராகும்.

## 208. வீரதுருசுச் சுண்ணம்

வெடியுப்புச் சுண்ணம், செயவீரச் சுண்ணம், இரசப்பதங்கம், நவாச்சாரப் பதங்கம், அல்லது கட்டின நவாச்சாரம் ஆகிய இந் நான்கும் வகைக்கு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்) இந்நான்கையும் கல்வத்தி லிட்டுப் பொடித்து, மேற்படி வீரச் சுண்ணச் செயநீர்விட்டு 2 சாமம் அரைத்து மெழுகுபோலான பின்பு, ஒரு பலம் துருசுக் கட்டியின்மேல் சமமாகக் கவசம் செய்து, கொஞ்சமும் ஈரமில்லா மல் வெய்யிலில் உலர்த்திப் பின்பு, அப்பிரகத் தகட்டின்மீது அல்லது வெம்மை தாங்கும் பீங்கானில் வைத்து முன்கூறிய வீரச் சுண்ணச் செயநீரைச் சிறுகச் சிறுக ஊற்றிச் சுருக்கிடவேண்டும். இவ்விதம், திருப்பித் திருப்பி மூன்று சாமம் சுருக்கிட்டுப் பின்பு, அகலில் வைத்து மேலகல் மூடி. 5 சீலைமண் செய்துலர்த்தி, $2\frac{1}{4}$ பல முள்ள 6 விராட்டியில் புடமிட்டு ஆறவைத்தெடுக்க, துருசானது சுண்ணமாகி இருக்கும்.

இத் துருசுச் சுண்ணத்தால் அனேகவிதத் தொடர்புகளைச் செய்யலாம். இவை எல்லாவற்றையும் இங்கு எழுத முடியாதாகையால், பயிற்சித் திறமையினால் அல்லது பழக்கத்தினால் பழகித் தெளிந்தவர்களை அடுத்துத் தெரிந்து கொள்ளவேண்டும். அறிவாளிகளுக்கு இக்குறிப்பொன்றே போதுமானது.

## 209. தாளகக்கட்டுச் சுண்ணம்

மேற்படி துருசுச் சுண்ணம், செயவீரச் சுண்ணம், இவை இரண்டும் வகைக்கு $2\frac{1}{4}$ வராகன் எடை. இந்த இரண்டையும் கல்வத்திலிட்டு, மேற்படி வீரச்சுண்ணச் செயநீரைச் சிறுகச் சிறுக விட்டு, 2 சாமம் அரைத்து ஒரு பலம் தாளகக் கட்டியின்மேல் சமமாகக் கவசம்செய்து வெய்யிலில் வைத்து ஈரம் இல்லாமல் உலர்ந்த பின்பு, அப்பிரகத் தகட்டின்மீது அல்லது வெம்மை தாங்கும் பீங்கானில் வைத்து முன்கூறிய வீரச்சுண்ணச் செயநீரால் 3 நாள் சுருக்கிடவேண்டும். அல்லது முன்போலவே செயநீரை ஊற்றிக் கல்வத்திலிட்டு அரைத்து வெம்மை தாங்கும் பீங்கானில் வறுத்துக்கொள்ளவேண்டும். வறுக்கும்போது மேற்கூறிய செயநீரையும் தெளித்துவரவேண்டும். முடிவில் ஈரம் இல்லாமம் வறுத்தெடுத்து முன்போலக் கல்வத்திலிட்டு முன்கூறிய செயநீரை விட்டு அரைத்து முன்போல வறுத்தெடுக்கவேண்டும். இவ்விதம், ஒரு நாள் அரைத்தும், ஒரு நாள் வறுத்தும் எடுக்க வேண்டும். இவ்வாறு மூன்று நாள் செய்யின் தாளகங் கட்டுப் பட்டுப் போகும்.

இதனை ஒரு மூசையில் வைத்து மூசையை ஒரு மெல்லிய ஓட்டால் மூடிக் கொல்லனுலையில் வைத்து ஊதவேண்டும். இரண்டு மணி நேரம் சென்ற பின்பு, $\frac{1}{2}$ மணிக்கொரு தடவை ஓட்டைத் திறந்து மூசையிலுள்ள மருந்தானது வெளுத்துச் சுண்ணமாகி விட்டதாவெனச் சோதித்து வரவேண்டும். அவ்விதம் வெளுத்துச் சுண்ணமாகிவிட்டால், மூசையை வெளியே எடுத்து வைத்துக் குளிர ஆறின பின்பு, குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும்.

இந்தத் தாளகச் சுண்ணத்தால் அநேக முறைகள் செய்யலாம். ஆனால் அதனதன் தொடர்புகளையும் முன்பின் இணைப்பு முறைகளையும் தெரிந்து செய்யவேண்டும்.

குறிப்பு:—தீயில் பக்குவப்படுத்தின தாளகத்தை, அல்லது சுருக்கிட்ட தாளகத்தை மூசையில் வைத்து ஊதி எடுப்பதைக் காட்டிலும் மிகவும் இலேசான வழியானது இது:

கட்டின தாளகத்தை முன்கூறிய செயநீரைவிட்டு அரைத்து வில்லை செய்து உலர்த்திச் சட்டியில் வைத்து மேல் சட்டி மூடி, சீலைமண் செய்து 4 சாமம் பெருந் தீயாய் எரித்து எடுத்துக் கொள்வதேயாம். ஏனெனில், மூசையை உலையில் வைத்து ஊதும் போது அதிகக் கவனம் வேண்டும். மேலும், தீயானது, நமக்கு வசப்பட்டதன்று. அதைக் குறைக்க அல்லது அதைப் பெருக்கத் திட்டமான அளவும் கிடையாது. ஆகையால், அடுப்பில் வைத்து எரித்தால் ஒரு தடவையில் சுண்ணமாகாவிட்டாலும் மறுதடவை முன்போல தயாரித்து முன்போலவே சட்டியில் வைத்து எரித்துக் கொள்ளலாம். இவ்விதம் எத்தனை தடவைகள் வேண்டுமோ அத்தனைத் தடவைகள் மடக்கி மடக்கியும் செய்துகொள்ளலாம். சட்டியில் வைத்து எரிப்பதால் எவ்விதத் தீமையும் இல்லை. உலையில் வைத்து ஊதும்போது பலவிதத் தீமைக்கு ஏதுவுண்டு. உலையில் வைத்து ஊதும்போது தூசு, தும்பு முதலியவைகள் விழ ஏதுவு முண்டு. சட்டியில் வைத்து எரித்தால், தூசு முதலியவைகள் ஒரு சிறிதும் விழ ஏதுவில்லை. உலையில் வைத்து ஊதும்போது சில வேளை வைத்த மருந்தானது முழுவதும் கட்டுப்படாமலிருந்தால் புகைந்துபோக ஏதுவுண்டு. சட்டியில் வைத்து எரித்தாலோ அவ்விதம் ஒரு வேளை முழுமையாய்க் கட்டுப்படாதிருந்தாலும் மேற்கண்டபடி ஓடிப்போகாமல் இருப்பதுமன்றி, அரைகுறையாய் இருக்கின்ற கட்டும் முற்றும் கட்டுப்பட்டு விடுகின்றது என்பதே ஆகும். ஆகையால், உயிர்ப்பொருள்களின் முறைகளை உலையில் வைத்து ஊதிப் பாகப்படுத்தித் தயாரிப்பதைக் காட்டிலும் சட்டியில் வைத்துப் பாகப்படுத்திக் கொள்வதே ஏற்றதும் தீமை யற்றதுமாகும் என விளங்கும்.

இதன் சார்பாக வேறு சில முக்கியமான செய்திகளைப்பற்றிச் சொல்லவேண்டியதும் இன்றியமையாததாகக் காணப்படுகிறது.

மேற்கண்ட காரணங்களால் உயிர்ப்பொருள்களை உலையில் வைத்து ஊதிப் பக்குவப்படுத்துவதைக் காட்டிலும் சட்டியில் வைத்து எரித்துக்கொள்வதே மேலானதென நாம் தெரிந்து கொண்டோம். இவ்விதமே,

உயிர்ப்பொருள்களை வெப்பம் தாங்கும் பீங்கானில் அல்லது சட்டியில் வைத்து வறுத்துக்கொள்வதைக் காட்டிலும் முன் சொன்னபடி அதை அரைத்துச் சட்டியில் வைத்து மடக்கி மடக்கி எரித்துக்கொள்வதே எல்லா விதத்திலும் மேலானது. ஏனெனில், வறுக்கும்போது புகைந்து போகாமலும், தீ அதிகப்படாமலும் தொடக்கம் முதல் முடிவு வரையில் அதிகக் கவனமாய் இருக்க

வேண்டும். இவ்விதம் ஒருவரே தொடர்ச்சியாய்ச் சரிவரச் செய்து முடிப்பது முடியாததாகும். எரிப்பதற்கோ அவ்விதத் துன்பம், இன்னல் முதலியவைகள் ஒன்றும் இல்லை; மேலும் உயிர்ப்பொருள் கள் புகைந்தோடிப்போகும் என்னும் ஐயப்பாடும் வைக்க வேண்டியதில்லை. அவ்விதம், ஒருக்காலும் புகைந்து போகவும் ஏதுவுண்டாகாது. ஆனால்,

பருப்பொருள்களை வறுத்துக் கொள்வதே மேலானது. ஏனெனில், பருப்பொருள்களை ஏதேனும் ஒரு திரவத்தை விட்டு அடுப்பேற்றி, அந்தத் திரவத்தைத் தெளித்து வறுப்பதால், அந்தத் திரவமானது அந்தப் பருப்பொருளில் நன்றாய்ச் சுவறி, சீக்கிரம் குணத்தைக் கொடுக்கும். ஆகையால், பருப்பொருள்களைச் சுருக் கிடுவதைக் காட்டிலும் மேற்கண்டபடி வறுத்துக் கொள்வதே மேலான பாகமாகும்.

உயிர்ப்பொருள்களை அதற்கினமான திரவத்தைவிட்டு அரைத் துச் சட்டியில் வைத்து மேற்சட்டி மூடி எரித்து மறுபடியும் அரைத்து மறுபடியும் எரிக்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் செய்து கொள்வதே அந்தப் பருப்பொருளைச் சுருக்கிடு வதைக் காட்டிலும் மேலானது. மேற்கண்டவற்றைச் சுருக்கிடும் பாகம் பின்வருகிற விதமாகும்.

## சுருக்கிடல்

பருப்பொருளைச் சுருக்கிட வேண்டுமானால், அந்தப் பொருளை அதற்கினமான திரவத்தை விட்டு, கால அளவுப்படி அரைத்துச் சட்டியில் அல்லது வெம்மை தாங்கும் பீங்கானில் வைத்து, முன் திரவத்தையே சிறுகச் சிறுகத் தெளித்து, கால அளவுப்படி வறுத்து, முடிவில் திரவம் தெளிக்காமல் வறுத்து, ஈரமில்லாமல் எடுத்து மறுபடியும் முன் திரவத்தைவிட்டு அரைத்து முன்போல வறுத்துக்கொள்ளவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் அரைத் தும், மீண்டும் மீண்டும் அந்தச் சரக்குப் பக்குவப்படுகிற வரையில் வறுத்துக் கொள்ளவும் வேண்டும்.

(அ) உயிர்ப்பொருளைச் சுருக்கிட வேண்டுமானால், அந்தப் பொருளை. அதற்கினமான திரவத்தை விட்டுக் கால அளவுப்படி அரைத்து வில்லை செய்து உலர்த்தி ஒரு சட்டியில் இட்டு மேல் சட்டி மூடி சீலைமண் செய்து, கால அளவுப்படி எரித்து முன் போலவே அதைக் கல்வத்திலிட்டு முன் கூறிய திரவத்தை விட்டு அரைத்து முன்போலவே வில்லை செய்து காயவைத்துச் சட்டியில் மேற்கண்டபடி எரிக்கவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் அரைத்து, மீண்டும் மீண்டும் எரித்துக் கொள்ளவேண்டும்.

இதுவே யூனனி மருத்துவர்கள் சுருக்கிடும் முறையாகும். இதைத்தான் அரபியில் 'தஷ்வியா' எனச் சொல்லப்படுகிறது. அதன் பொருள் நீர்செலுத்தி எரித்தல் என்பதாகும்.

(ஆ) சித்தமருத்துவ முறைப்படி ஒரு சரக்கைச் சுருக்கிடுவ தென்றல், அப்பிரகத் தகடு, ஓடு, தகரம், என்ற இவற்றுள் ஒன்றின்மீது வைத்து அடுப்பேற்றி அதற்கினமான திரவத்தைத் துளித்துளியாய் விட்டு, அல்லது சிறுகச் சிறுகவிட்டு, அதைப் புரட்டிக் கொடுத்து வருவதற்குப் பெயராகும். இப்படிச் செய்வ தால் நாம் விடுகிற திரவத்தின் திப்பி அதன்மேல் ஒட்டிப் பிடித்துக் கொண்டு தடையாகி நாம்விடும் திரவம் உட்செல்ல ஏதுவில்லாமற் போய்விடுகிறது. அந்தத் திப்பியை நாம் சுரண்டி நீக்கிவிட்டு அந்தத் திரவத்தை விட்டு வந்தாலும் அப்போதும் அந்தச் சரக்கு முழுவதும் ஒரே தன்மையாய் ஊடுருவிச் செல்ல ஏதுவில்லை; எவ்விதக் கவனத்துடன் செய்தாலும் மேற்பக்கங்களில் அதிக மாகவும் உள்பக்கங்களில் பட்டும் படாமலும் அரை குறை யாகவே இருக்கும். இதனுண்மை பழக்கத்தில் மேம்பட்ட ஒவ்வொருவருக்கும் விளங்காமற் போகாது. ஆகையால், உருது நூல் முறைப்படி செய்வதால் மேற்கண்ட குறைகளுக்கு வழி இல்லை. ஆகையால் வடமொழி நூலின் முறைப்படி சுருக்கிடு வதைக் காட்டிலும் உருது மொழி, தமிழ் மொழி ஆகிய நூல்களின் முறைப்படி அரைத்து வறுத்துக் கொள்வது மேலான தென்பது விளங்கும்.

## புடம் போடல்

பருப்பொருள் சரக்குகளைப் பொடிசெய்து அதற்கினமான திரவத்தை விட்டுக் கால அளவுப்படி அரைத்து, ஒரு பாண்டத்தில் போட்டு வாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்து கரிநெருப்பில் வைத்துப் பக்குவப்படுத்தல் யூனனி மருத்துவர்களின் புடமாம். ஆனல், இவ்விதம் சில சரக்குகளைச் செய்யவேண்டியது இன்றி யமையாததாயினும், பல சரக்குகளை அதற்கினமான திரவத்தை விட்டுக் கால அளவுப்படி அரைத்து ஒரு பாண்டத்தில் வைத்து அதன் வாயை மூடிச் சீலைமண் செய்து அடுப்பின்மீது வைத்து கால அளவுப்படி எரித்துக் கொள்வதுமுண்டு.

முன் அரைத்த மருந்தை அகலில் வைத்து மேலகல் மூடி சீலைமண் செய்து உலர்த்தி தக்க விராட்டிகளின் நடுவில் வைத்து எரித்துக் கொள்வதுமுண்டு. இவ்விதம் பாகப்படுத்துவதற்குப் பொதுவாய்ப் புடம்போடல் என்று பெயர்.

மேற்சொன்ன மூன்று வகைகளிலும் பின் சொல்லப்பட்ட வைகளான, எரித்தல், புடம் போடல் என்ற பாகங்களே மேலானவை. ஏனெனில், முன் சொல்லப்பட்ட வகையில் துன்பம், அமைதியின்மை முதலிய பலவகை கெடுதிகளுண்டு. அவற்ருல் மருந்திற்குக் கெடுதி மட்டுமன்றிக் குறையுண்டாகவும் ஏதுவாகும். பின்கண்ட இரண்டிலுமோ அவ்விதக் குறைகள், அவ்வித இன்னல்கள் முதலியவைகளில்லை. ஆகையால், எவ்வித குறைவும் நேரிட எதுவுமில்லை என்பதே.

உயிர்ப் பொருள்களைத் தீயில் பக்குவப்படுத்தல், எரித்தல், புடமிடல் என்ற மூன்றுவகை முறைகளுமுண்டு. ஆனல், இவற்றுள் தீயில் பக்குவம் செய்தல், புடமிடல் என்ற இரண்டைக் காட்டிலும் அந்தந்தச் சரக்கிற்குத் தகுதியான திரவத்தை விட்டு அரைத்துப் பாண்டத்தில் வைத்து மேல் பாண்டம் மூடிச் சீலை மண்செய்து அடுப்பின்மீது வைத்துக் கால அளவுப்படி எரித்துக் கொள்வதே மேலானதாகும்.

## உலையிற் பக்குவப்படுத்தல்

பருப்பொருள்களை அவற்றிற்குத் தகுதியான திரவத்தை விட்டுக் கால அளவுப்படி அரைத்து மூசையில் வைத்து வாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்து கொல்லனுலையில் வைத்துப் பக்குவப் படுத்தலாம்.

பருப்பொருளை அதனதனுக்குத் தகுதியான திராவகத்தை விட்டுக் கால அளவுப்படி அரைத்து வில்லை செய்து உலர்த்திச் சட்டியில் வைத்து மேற்சட்டி மூடி இடைவெளி இல்லாமல் சீலை மண் செய்து அடுப்பின்மீதேற்றிக் கால அளவுப்படி எரித்துப் பக்குவப்படுத்தியுங் கொள்ளலாம்.

ஆனல், இவற்றுள் முன்கண்ட பாகமே சிறப்பானது. ஏனெனில், மூசையில் வைத்து ஊதுவதால் கடினமான சரக்குகள் சீக்கிரம் பக்குவப்பட்டுப்போகும். எரிப்பதால் தாமதமும் பல தடவைகள் மீண்டும் மீண்டும் செய்யும்படியாகவும் நேரிடும் என்பதே.

உயிர்ப் பொருள்களை மேற்கண்ட பாகப்படி செய்து உலையில் வைத்து ஊதிப் பக்குவப்படுத்துவதைக் காட்டிலும் அவ்விதம் செய்து சட்டியில் வைத்து எரித்தெடுத்துக் கொள்வதே மேலாம்.

இங்கு இந்த முறைகளைச் சொன்னதன் கருத்தாவது, பருப்பொருள், உயிர்ப்பொருள் என்ற இவற்றுள் அந்தந்தச் சரக்கிற்குத் தகுந்த விதமாகவும், அந்தந்தப் பாகத்திற்குத் தகுந்த விதமாகவும், நேரத்துக்குத் தக்கவாறும் உறுதி செய்து கொள்ள வேண்டுமென்பதே இரசவாதிகளின் பயிற்சி முதிர்ச்சியால் கண்ட முடிவாகும். நாம் இங்கு எழுதி இருப்பதெல்லாம் பெரும் பான்மையானவை சாதாரணப் பொதுவிதிகளேயாகும். மேலும் ஒவ்வொரு முறையிலும் தீயில் பக்குவப்படுத்துதல், சுருக்கிடல், புடம்போடல், வறுத்தல், எரித்தல், உலையிலூதல் என ஆங்காங்கும் எழுதப்பட்டிருக்கிறது. ஆகையால், பொதுவாகச் சொல்லப்பட்டிருக்கும் விதிகளையும் ஒவ்வொரு முறையிலும் ஆங்காங்கு சொல்லப்பட்டிருக்கும் சிறப்பு விதிகளையும் சீர்தூக்கிப் பார்ப்பதுடன், அந்தந்த மருந்துகள் முடியும் விதங்களையும் நோக்கி நேரத்துக்குத் தக்கபடி செய்து கொள்ள வேண்டியதே அறிவாளிகளின் கடமையாகும்.

மேலும், ஒவ்வொரு பாகத்திலும் எதிர்பாராத எத்தனையோ இடையூறுகளுண்டாகும். அவை எல்லாவற்றையும் எழுதி அவற்றுள் ஒவ்வொன்றிற்கும் உள்ள சூழ்ச்சி முறைகளும் எழுதுவதானல் எங்ஙனம் கூடும்? சாதாரணமாய் அரிசியையும் நீரையும் சேர்த்து சமைப்பதில் எத்தனையோ எதிர்பாராத இடையூறுகள் உண்டாகின்றன. ஒரு தடவை நீர் குறைந்து போகிறது. ஒரு தடவை நீர் அதிகமாகிவிடுகிறது. ஒரு தடவை நெருப்பு அதிகரித்துத் தீய்ந்து போய்விடுகிறது. ஒரு தடவை தீ போதாமல் அரை குறையாய்விடுகிறது. சிலசமயம் சோறு கூழைப்போலக் குழைந்து விடுகிறது. சில சமயம் சோறும் மொச்சைக் கொட்டைகளைப் போல விரைத்துக் கொண்டிருக்கிறது. சிலசமயம் சோற்றில் புகை சூழ்ந்து புகை நாற்றமுண்டாகி விடுகின்றது, இத்தனை மாறுதல் களும் தீயின் வேறுபட்டால் உண்டாகின்றன.

சிலசமயம் சாதமானது மஞ்சள் நிறமாகிவிடுதல், சில சமயம் சாதங் கறுத்துவிடுதல், சிலச்மயம் எவ்வளவு எரித்த போதிலும் போட்ட அரிசி போட்டது போலவேயிருத்தல்; சில சமயம் சோறு நொந்து நைந்துபோதல் முதலிய குறைகளெல்லாம் நீர் வேறு பாட்டால் நேரிடுகின்றன.

இவ்விதமே சாதமானது தலை விரிந்து போதல், இளைத் திருத்தல், தீயநாற்றம் வீசல், சுவையான எவ்விதப் பண்டங் களோடு அருந்தியபோதிலும் அதன் இலைப்பு, அதன் தீய நாற்றம் முதலியவை மாருதிருத்தல் முதலிய பலகுறைகள் அரிசியின் மாறுபாட்டால் நேரிடுகின்றன.

மேலும், பலவகைக் குறைகள் பாகம் செய்வான் கவனக் குறைவாலும் சேர்க்கப்படவேண்டியதில் முன்பின்னுகவும் கால மில்லா நேரத்தில் சேர்ப்பதாலும் அநேகம் நேரிடுகின்றன. இவை எல்லாவற்றையும் நாம் நாள்தோறும் நம்வீட்டில் வழக்கமாகக் கண்ணுற் பார்த்து வருகின்ருேம். அவ்விதம் பார்க்க நேராத சிலரும் இருக்கலாம். அவ்வகையாளர்கள் தத்தம் சமையற் காரர்களைக் கேட்டால் அதன் உண்மை விளங்கும். சாதாரண மானதும் நாள்தோறும் நடைபெறுவதுமான இதற்கே இவ்வளவு பாடுகளும் இவ்வளவு கேடுகளும் நேரிட ஏதுவுண்டென்ருல் அருமையான இப்பாகங்களின் பாட்டையும் கேட்டையும் கேட்கவும் வேண்டுமோ ?

ஆகையால், நாம் இங்கு எழுதியிருப்பதையும் மேற்கொண்டு, அப்போதைக்கப்போது உண்டாகும் அமைப்பு முதலியவைகளுக் கேற்ப நேரத்துக்குத் 'தக்கபடி சிந்தனையோடு அளவுப்படி பயன் படுத்தி எடுத்த காரியத்தை முடித்துக் கொள்வதே அறிவாளி களின் கடமையாகும்.

## 210. பாடாணக்கட்டுச் சுண்ணம்

முன்சொன்ன துருசுச்சுண்ணம், செயவீரச் சுண்ணம் இவை யிரண்டும் வகைக்கு வராகன் எடை $2\frac{1}{2}$ ($8\frac{3}{4}$ கிராம்) இந்த இரண்டை யும் கல்வத்திலிட்டு மேற்படி வீரச்சுண்ணச் செயநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி 2 சாமமரைத்து, தூய்மையான ஒரு பலம் பாடாணக் கட்டியின்மீது எங்கும் சமமாகக் கவசம் செய்து வெய்யிலில் வைத்து ஈரமில்லாமல் உலர்ந்த பின்பு, அப்பிரகத் தகட்டின்மீது தீயில் பதம்செய்த பீங்கானில் வைத்து முன்கூறிய வீரச்சுண்ணச் செயநீரால் 3 நாள்கள் சுருக்கிடவேண்டும். அல்லது முன்கண்ட செயநீரை ஊற்றிக் கல்வத்தில் அரைத்து வெம்மை தாங்கும் பீங்கானில் வறுத்துக் கொள்ளல்வேண்டும். வறுக்கும்போது மேற்படி செயநீரையும் சிறுகச் சிறுகத் தெளித்து வரவும்வேண்டும். முடிவில் ஈரமில்லாமல் வறுத்தெடுத்து முன்போலக் கல்வத்தி லிட்டு முன்கூறிய செயநீரை விட்டு அரைத்து முன்போல வறுத்து எடுக்கவேண்டும். இவ்விதம், ஒரு நாள் அரைத்து ஒருநாள் வறுத்து எடுக்கவேண்டும். இவ்விதம், 3 முறை செய்யின் பாடாணங் கட்டுப்பட்டுப்போகும்.

முற்றும் கட்டுப்பட்டதாவெனச் சோதனை செய்து நிச்சயித்து முன் சொன்ன செயநீர்விட்டு 1 நாள் அரைத்து வில்லை செய்து உலர்த்தி ஒரு சட்டியில் வைத்து மேற்சட்டி மூடி 5 சீலைமண் செய்து காயவைத்து அடுப்பேற்றி, பெருந்தீயாய் 4 சாமம்

எரித்து 1 நாள் ஆறவிட்டு மறுநாளெடுத்து, மேற்சட்டிக் கீழ்ச் சட்டியென்னும் இரண்டிலுமுள்ளதையெல்லாம் சுரண்டிக் கல்வத் திற்போட்டு முன் செயநீரைவிட்டு 1 நாளரைத்து வில்லை செய்து வெய்யிலில் உலர்த்தி முன்போலவே சட்டியில் வைத்து மேற்சட்டி மூடி சீலைமண் செய்து உலர்த்தி அடுப்பேற்றி முன்போலவே பெருந் தீயாய் 4 சாமம் எரித்து ஒரு நாள் ஆறவிட்டு எடுக்கவேண்டும். இவ்விதம், பாடாணமானது சுண்ணமாகிற வரையில் 3 அல்லது 4 தடவைகள் மீண்டும் மீண்டும் அரைத்து மடக்கிமடக்கி எரித்துச் சுண்ணமாக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தப் பாடாணச் சுண்ணத்தாலும் அனேக முறைகள் செய்யலாம். ஆனல், அதனதன் சார்புப் பொருளையும் அதனதன் செய் முறைகளையும் அறிந்து செய்யவேண்டும். இதன் தொடர்பு முறைகளைப்பற்றியும் ஆங்காங்கு சொல்லப்படும்.

**குறிப்பு** :— நாம் பல முறைகளிலும் ஆங்காங்கு ஒரு மருந்தால் சார்புபடுத்தி அதனதன் முறைப்படி அனேக மருந்துகள் செய்துகொள்ளலாம் என்றும் அவையெல்லாம் பயிற்சி பெற்று முதிர்ந்த அறிவாளிகளுக்குத் தெரியுமென்றும் பல தடவை எழுதி வந்திருப்பது இதைக் கருத்தாய்க் கற்கும் ஒவ்வொரு மருத்துவர் களுக்கும் நினைவில் இருக்குமென்பது நிச்சயம். இதற்கு எடுத்துக் காட்டாக மேற்கண்ட முறைகளை எழுதினேமாயினும், அவற் றையே இங்கு மறுபடியும் நினைவில் இருப்பதற்காகச் சுருக்க மாகவும் சொல்வோம். தொடக்கத்தில் கறியுப்புச் செயநீர் சொல்லத் தொடங்கியது காரணமாக,

1. கறியுப்புச் சுண்ணப் பாகத்தைத் தெரிந்து கொண்டோம்.

கறியுப்புச் சுண்ணம் சார்பாய், 2. கறியுப்புச் செயநீர் பாகத் தைத் தெரிந்துகொண்டோம்.

இன்னும் இக்கறியுப்புச் சுண்ணம் சார்பாய், 3. வெடியுப்புச் சுண்ணப் பாகத்தைத் தெரிந்துகொண்டோம்.

இவ்வெடியுப்புச் சுண்ணம் சார்பாய், 4. வெடிச்சுண்ணச் செயநீர் பாகத்தைத் தெரிந்துகொண்டோம்.

இந்த வெடிச்சுண்ணச் செயநீரால், 5. துருசுக்கட்டு, 6. வீரக் கட்டு, 7. இலிங்கக்கட்டு, 8. வெள்ளைப் பாடாணக்கட்டு 9. தாளகக்கட்டு, 10. கந்தகக்கட்டு என்ற முறைகளைத் தெரிந்துகொண்டோம்.

பின்பு, கறியுப்புச் சுண்ணம், வெடிச்சுண்ணச் செயநீர் என்னும் இரண்டின்சார்பாய், 11. துருசுச்சுண்ணம், 12. வீரச் சுண்ணம், 13. இலிங்கச்சுண்ணம், 14. வெள்ளைப் பாடாணச் சுண்ணம், 15. தாளகச்சுண்ணம், 16. கந்தகச்சுண்ணம் என்ற இம்முறைகளைத் தெரிந்துக் கொண்டோம்.

மேற்கண்ட ஒவ்வொரு சுண்ணத்தின் சார்பாய் முறையே, 17. துருசுச் சுண்ணச் செயநீர், 18. வீரச்சுண்ணச் செயநீர், 19. இலிங்கச்சுண்ணச் செயநீர், 20. பாடாணச்சுண்ண செயநீர், 21. தாளகச்சுண்ணச் செயநீர், 22. கந்தகச்சுண்ணச் செயநீர் என்ற வகைகளைத் தெரிந்துகொண்டோம்.

இந்தச் சுண்ணச் செயநீர் சார்பாய் 23. செயதுருசுச்சுண்ணம் 24. செயவீரச்சுண்ணம் 25. செயலிங்கச் சுண்ணம் 26. செய பாடாணச் சுண்ணம் 27. செயதாளகச் சுண்ணம் 28. செயகந்தகச் சுண்ணம் என்ற முறைகளைத் தெரிந்துகொண்டோம்.

இன்னும், முன்கண்ட வெடியுப்புச் சுண்ணம் செயவீரச் சுண்ணம் முதலியவற்றின் தொடர்பினுல் 29. வீரதுருசுச் சுண்ணம் 30. வீரவீரச் சுண்ணம் 31 வீரலிங்கச் சுண்ணம் 32. வீரப் பாடாணச் சுண்ணம் 33. வீரத்தாளகச் சுண்ணம் 34. வீர கந்தகச் சுண்ணம் என்ற முறைகளைச் செய்யலாமெனத் தெரிந்து கொண்டோம்.

மேற்கண்ட வீரத் துருசுச்சுண்ணம், செயவீரச் சுண்ணம், வீரச்சுண்ணச் செயநீர் என்ற இவற்றின் சார்பினுல் 35. துருசுக் கட்டுச் சுண்ண்ம் 36. வீரக்கட்டுச் சுண்ணம் 37. இலிங்கக்கட்டுச் சுண்ணம் 38. பாடாணக்கட்டுச் சுண்ணம் 39. தாளகக்கட்டுச் சுண்ணம் 40. கந்தகக்கட்டுச் சுண்ணம் என்ற முறைகளைச் செய்யக்கூடுமெனத் தெரிந்து கொண்டோம்.

இன்னும், இவற்றுள் ஒன்ருேடொன்றைச் சார்புப்படுத்தி மேற்கண்ட நாற்பது பாகங்களைப் போன்ற பற்பல நாற்பது முறைகளாகப் பெருக்கிக் கொள்ளக்கூடும். இம் முறை களெல்லாம் வாதம், மருத்துவம் என்னும் செயல் முறைகளுக்கும் உதவுமாகையால் மேற்கண்ட பாகங்களை வேறு விதமாகச் சார்புப் படுத்தித் தனியாய் மருத்துவ முறைகளுக்காகவும், அவ்விதமே மற்ருெரு விதமாகத் தொடர்பு படுத்தி இரசவாதத் தொழிலிற் காகவும் தயாரித்துக் கொள்ளலாம். இவ்விதம், ஒவ்வொரு முறைக்கும் அததற்குத் தக்க சார்பு முறைகளையும், முதன்மை யான முறைகளையும், துணை முறைகளையும், கிளை முறைகளையும்

சிறிய நூலில் வகைப்படுத்தி எழுதுவது முடியும் முடியாது என்பதைப்பற்றி அறிவாளிகளே சிந்தித்து நிச்சயிக்கவேண்டும். அப்படி வகை விபரமாய் எழுதுவது கூடாமை ஆயினும், பயிற்சி முதிர்ச்சி அடையாத புதிய அல்லது இளம் இரசவாதிகளுக்கும் பயன்படும்பொருட்டு, மற்றவர்கள் தத்தம் புத்தியால் அறிகுறியாய் விளங்கிக் கொள்ளும் பொருட்டும் அந்தந்தச் சமயங்களில் சில சமயம் குறிப்பாகவும், சில சமயம் விரிவாகவும் அந்தந்த முறை முதலியவைகளையும் எழுதுவோம். ஆனுல் அந்த விபரங்கள் அந்தக் குறிப்புகள் முதலியவைகளெல்லாம் இப் பாகத்தையும் இனி அச்சிடப்படும் மற்ற பாகங்களையும் இதன் திறவுகோலையும் தொடக்கம் முதல் இறுதிவரை கவனமாய்ப் பார்ப்பவர்களுக்கே புலப்படும். அப் டியின்றி அரைகுறையாய்ப் பார்வையிடுபவர்களுக்கு ஒருபோதும் இம் முறைகளின் சார்பு முதலியவைகள் புலப்படா. ஏனெனில், ஒவ்வொரு முறையின் தொடர்புகளையும் ஒரே காலத்தில் அல்லது ஒரே இடத்தில் சொல்வது கூடாமையாம். அப்படிச் சொன்னபோதிலும் தெரிந்துகொள்வதும் கூடாமையாம். மேலும், ஒவ்வொரு சரக்கிற்கும் பலவகைப் பாகங்கள் உண்டு. ஆகையால், அந்தந்தப் பாகங்களில் மாத்திரம் முறையே சொல்லக்கூடும். மேலும், ஒன்றன்பின் ஒன்ருய்ச் சொல்வதே நூலாசிரியர்களின் வழக்கமும் முறையுமாகும் என்பதே. ஆகையால் வாதம், மருத்துவம் என்ற இரண்டிலும் முழுமையான புலமையை விரும்பும் ஒவ்வொருவரும் இந்த நூலைத் தொடக்கம் முதல் இறுதிவரை பார்வையிட்டு அங்குச் சொல்லப்படும் ஒவ்வொரு முறையையும் கவனமாகவும், கைபாகத்துடனும் செய்து முடித்துக் கொண்டால், கடவுளின் அருளாலும் பெரியோர்களின் வாழ்த்தினுலும் மேற்கண்டபடி வாதம், மருத்துவம் என்ற இருவகை நூல்களிலும் வல்லவர்களாவார்கள் என்பதில் எவ்வித ஐயமும் வேண்டியதில்லை. ஏனெனில், இந்நூலில் இரசவாதத் தொழில் சார்பான எல்லாவகை முறைகளும் தொடக்கம் முதல் இறுதிவரை வரிசைப்படுத்தி எழுதப்பட்டிருக்கின்றன. மேலும், மற்ற நூல்களைப்போலச் சில முறைகள் எழுதப்பட்டும் சில முறைகள் எழுதப்படாமலும் இல்லை. இரசவாத நூலை விரும்பும் ஒருவருக்கு இந்த ஒரு நூலே போதுமானது. கடவுளினது அருளால் இந்த நூலைக் கற்று இதன்படி பயிற்சி செய்யும் பண்டிதர்கள் இத்தொழிலில் வல்லவர்களாவார்களென்பதில் எவ்வித ஐயமும் இல்லை. மேலும், இந்த நூலில் தமிழ், உருது என்ற இருவகை நூல்களில் வல்ல அறிஞர்களின் பயிற்சி முதிர்ச்சியால் கைவந்த முறைகளே எழுதப்பட்டிருக்கின்றன. மேலும், மற்ற நூல்களை மறைமொழியாகவும்

(குழூஉக்குறி) எடை பேதமாகவும், புடம் பேதமாகவும், இலக்கப் பெயராகவும், குறிப்புப் பெயராகவும், மறைவாகவும், கரவாக வும், சுருக்கமாகவும், இடையிடையே விட்டும், தொடக்கம் ஒரு பக்கத்திலும் முடிவு மற்றொரு பக்கத்திலுமாகவும், வீணான செய்திகளை வளர்த்திப் பெருக்கியும், பயன்படத்தக்க செய்திகளைக் குறுக்கிச் சுருக்கியும் எழுதாமல் யாவரும் தெரிந்து கொள்ளும்படி எளிய உரை நடையில் எழுதப்பட்டிருப்பதே முக்கியக் காரண மாகும்.

## 211. வெடியுப்புச் செயநீர் (வேறு)

பாகப்படுத்தின வெடியுப்பு 10 பலம் (350 கிராம்), கோது கொட்டை முதலியவை நீக்கித் தூய்மை செய்யப்பட்ட புளி 7 பலம் (245 கிராம்), சீனச்சுண்ணம், பாகப்படுத்தின வெண்காரம் இவை இரண்டும் வகைக்கு 1 பலம் (35 கிராம்); தனித்தனியே கட்டின நவாச்சாரப்பதங்கம் அல்லது நவாச்சாரம் 2 பலம் (70 கிராம்) இவை எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து மைபோல இடித்துச் சிறு வில்லைகளாகச் செய்து அடுப்பில் இரும்புச் சட்டியை ஏற்றி அதில் நான்கு நான்கு வில்லைகளாக வைக்க, அவை ஒரு விதச் சீறலுடன் எரிந்து சாம்பலாகிவிடும். இவ்விதம், எல்லா வில்லைகளையும் வைத்தெரித்து நன்றாய்ப் பக்குவமாகச் சாம்ப லாக்கிக் கொள்ளவேண்டும். இது கடுங்காரமாகவும் மங்கலான வெண்ணிறமாகவும் இருக்கும்.

வாயகன்ற பீங்கான்களின் ஓரங்களில் அணைத்து வைத்து அந்தப் பக்கத்தைச் சற்று உயர்த்தி வைத்து, இரவில் பனியில் வைக்கவேண்டும், காலையில் கசிந்து நிற்கும் செயநீரை மேலாக இறுத்து வேறு குப்பியில் விட்டுக் கொள்ளவும் வேண்டும். பகலில் அப்பாண்டங்களில் தூசு மண் முதலியவை விழாதபடி பத்திர மாய்க் குளிர்ச்சியான இடத்தில் வைக்கவும் வேண்டும். பின்னர், முன்போலவே இரவில் பனியில் வைத்துக் காலையில் கசிந்து நிற்கும் நீரை இறுத்துக் கொள்ளவேண்டும், இவ்விதம், இரவிற் பனியில் வைத்தும் பகலில் மூடி குளிர்ந்த இடத்தில் வைத்தும் அதிலிருந்து கசிகிற நீரை எல்லாம் சேகரித்தும் முடிவில் எல்லாவற்றையும் ஒன்றாய் ஒரு கண்ணாடிக் குப்பியில் சேகரித்துக் குப்பியின் வாயில் மூடியிட்டு அந்தக் குப்பியைப் பனியில் 3 நாள் வைத்தெடுத்து, பின்பு ஒரு பீங்கான் கோப்பையில் அந்தச் செயநீரைவிட்டு பௌர்ணமிக்கு முன்னும் அதற்குப் பின் இரண்டு மூன்று நாளும் வைத்தெடுத்துப் பத்திரப்படுத்தவும். இவ்விதம் செய்ய முடியா விட்டால் செயநீர்க் குழியில் வைத்துப் பாகப்படி செய்தும் செயநீராக்கிக் கொள்ளலாம்.

நவச்சாரப் பதங்கம் அல்லது கட்டின நவாச்சாரம் 1 பலம் (35 கிராம்); துப்பாக்கி மருந்திற்கட்டின வீரம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்); இரசப்பதங்கம், இரசகற்பூரப் பதங்கம் இவை வகைக்கு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்). இவை நான்கையும் கல்வத்திலிட்டுச் சிப்பி பாகச் செயநீரை அல்லது சிப்பிச் செயநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி 2 சாமமரைத்துச் சிறு வில்லையாய்ச் செய்து வெய்யிலிலுலர்த்தி ஈரமில்லாமல் நன்றாயுலர்ந்த பின்பு, சிறு அகலிலிட்டு மேலகல் மூடி 5 சீலைமண் வலுவாய்ச் செய்து உலர்த்தி, இக்கவசத்தின் எடைக்கு 7 பங்கு விராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறினபின் எடுத்துக் கல்வத்தில் பொடித்து முன் தயாரித்துவைத்திருக்கிற செயநீரில் போட்டு நன்றாய்க் குலுக்கிக் கலந்து வேறு குப்பியில் ஊற்றி வாய்க்கு மூடியிட்டு 11 நாள் வெய்யிலில் வைத்து, நாள் தோறும் 4 அல்லது 5 தடவைகள் நன்றாய்க் குலுக்கி வரவேண்டும். இதுவும் வெடியுப்புச் செயநீராம்.

புடம் போடுவதற்குப் பதிலாய், ஒரு சட்டியிலிட்டு மேற்சட்டி மூடி, 5 சீலை மண் வலுவாய்ச் செய்து அடுப்பேற்றிச் சிறு தீயாய் 2 சாமம் எரித்து ஆறினபின் எடுத்துப் பொடித்து மேற்சொன்ன படியே சேர்த்துப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். இதனை மீண்டும் மீண்டும் சிப்பிநீர் ஊற்றி அரைத்து மீண்டும் மீண்டும் எரித்துக் கொள்வதாலும் சிறப்பான குணம் காணப்பட்டிருக்கிறது.

இந்தச் செயநீரால் எல்லாவிதச் சரக்குகளையும் கட்டுவதோடு மெழுகுமாக்கலாம். அவ்விதம், செய்து பற்பலவிதச் சார்பு மருந்துகளையும் செய்யலாம், இதன் பயன்களும் பலவுள. அவை ஆங்காங்கு எழுதப்படும்.

## 212. நாகசாரச் செயநீர்

கட்டின நவாச்சாரம் அல்லது பதங்கித்த நவாச்சாரம் 10 பலம் (350 கிராம்); 182ஆம் பாகப்படி தயாரித்த சிப்பிச் சுண்ணம் 8 பலம் (280 கிராம்). பாகப்படுத்தின வெடியுப்பு 2 பலம். (70 கிராம்). தூய்மைசெய்த பாதரசம், தூய்மை செய்த சிறு கண்நாகம், பாகப்படுத்தின வெண்காரம், பாகப்படுத்தின கந்தகம் அல்லது கந்தகப் பதங்கம். இந்த நான்கும் வகைக்கு 1 பலம் (35 கிராம்). இவற்றுள் நாகத்தை உருக்கிப் பாதரசத்தோடு சேர்த்து வெண்காரம், கந்தகம் என்ற இரண்டையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு சாரநீர் விட்டு 2 சாமமரைத்துப் பின்பு பூநீரைச் சேர்த்து 2 மணிநேரம் அரைத்துப் பின்பு சாரத்தைச் சேர்த்து 2 சாமம் அரைத்து முடிவில் சுண்ணும்பைச் சேர்த்து

1 சாமம் அரைக்கவேண்டும். அடிக்கடி சாரநீரை வார்த்து அரைக்கவேண்டும். முடிவில் வில்லையாகச் செய்து வெய்யிலில் வைத்து உலர்த்திப் பின்பு கல்வத்தில் பொடித்துப் பெரிய மூசையில் போட்டு வாய்க்குச் சில்லிட்டு வலுவாய் 5 சீலைமண் செய்து 22 பலம் (770 கிராம்), $2\frac{1}{2}$ பலமுள்ள ($87\frac{1}{2}$ கிராம்) 30 விராட்டியில் புடமிட்டு ஆறவைத்தெடுக்க எல்லாம் ஒருவித சுண்ணத்தைப் போல்இருக்கும்.

இச்சுண்ணத்தை அகன்ற பீங்கான்களில் ஓர் ஓரத்தில் அணைத்துவைத்து, அந்தப் பக்கத்தைச் சற்று உயர்த்திப் பனியில் வைத்துக் காலையில் கசிந்து நிற்கும் நீரைச் சேகரித்துக் கொள்ள வேண்டும்.

இப்பாண்டத்தைப் பகலில் தூசி முதலியவைகள் விழாதபடி மூடிக் குளிர்ச்சியான இடத்தில் வைத்திருந்து இரவில் பனியில் வைக்கவேண்டும், இவ்விதம் நாள்தோறும் வைத்த சரக்கானது கரைந்து கசிகிறவரையிற் சேகரித்து முடிவில் எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து கொள்ளவேண்டும். இவ்விதம், செய்ய முடியா விட்டால் குப்பியில் எல்லாவற்றையும் இட்டு வாய்க்கு மூடி யிட்டுச் செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்ளவேண்டும்.

பின்பு ஒரு குப்பியில் விட்டு மூடி, இரண்டொரு நாள் பனியில் வைத்து மறுபடியும் குப்பியில் உள்ள தெளிவை மாத்திரம் இறுத்துக் கொண்டு, அடியிலிருக்கிற வண்டலை குப்பியுடன் பனியில் மறுபடியும் இரண்டொரு நாள் வைத்து, அதிலுள்ள தெளிவையும் இறுத்து முன் எடுத்த தெளிவுடன் கலந்து கொள்ளவேண்டும். இவ்விதம், குப்பியிலுள்ளது எல்லா வற்றையும் தெளியத்தெளிய இறுத்துச் சேகரித்துப் பத்திரப் படுத்தவும்.

பின்பு படிக்காரச் சுண்ணம், வெடியுப்புச் சுண்ணம், இவை இரண்டும் வகைக்கு 1 பலம் (35 கிராம்); கட்டினவீரம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்). வாலைரசம் $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்). வெள்ளுரம் வராக னெடை $1\frac{1}{4}$ ($4\frac{3}{8}$ கிராம்) குருவண்டு 100, இவை எல்லாவற்றையும் கல்வத்திற் பொடித்துச் சிப்பிபாக நீரைவிட்டு 2 சாமம் அரைத்து வில்லைதட்டி வெய்யிலில் உலர்த்தி, மறுபடியும் பொடித்து முன் சொன்ன சிப்பிப்பாக நீரைவிட்டு முன்போலவே 2 சாமமரைத்து வில்லை தட்டிக் 'காயவைத்து மூன்ரும் தடவையும் பொடித்து முன்கண்ட செயநீரை விட்டரைத்து வில்லை செய்து உலர்த்திப் பொடித்து முன் தயாரித்து வைத்திருக்கும் செயநீரில் இட்டு நன்ருய்க் குலுக்கி வெய்யிலில் 11 நாள்கள் வைத்து வரவேண்டும்.

நாள்தோறும் குப்பியை 4 அல்லது 5 தடவைகள் நன்ருய்க் குலுக்கியும் வரவேண்டும். இவ்விதம் பாகம் செய்யப்பட்ட செயநீரானது நாகசாரச் செயநீரெனப்படுகிறது.

இந்த நாகசாரச் செயநீரானது எல்லாவிதச் சரக்குகளையும், அதாவது உயிர்ப்பொருள், பருப்பொருள் முதலியவைகளையும் கட்டப் பயன்படுகிறது. பற்பம், செந்தூரம் முதலியவைகளும் செய்ய இந்தச்செயநீர் பயன்படுகிறது. இன்னும் இதன் மூலமாய்ப் பலவகைத் தொடர்புகளும் ஏற்படலாம். செயநீர் மூலமாய்ப் பருப்பொருள் சரக்குகளைக் கட்டும் வகைகளுள் பல முன் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்தச் செயநீரால் உபரசச் சரக்கைக் கட்டும் வகைகளில் ஒன்றை எடுத்துக்காட்டாக இங்குச் சொல்வோம். அது பின் வருகிற விதமாகும்.

## 213. இலிங்கக்கட்டு

பம்பாய் இலிங்கம் ஒரே கட்டியாயுள்ளது 1 பலம் (35 கிராம்). இதனை ஆழமான ஒரு சிறு பீங்கானில் வைத்துக் கட்டி முழுகும் படியாக முன்கண்ட செயநீரைவிட்டு உமிக்காந்தலில் வைக்க வேண்டும். இவ்விதம் வைத்து விட்ட செயநீரானது சுண்டிவிட்டால் மறுபடியும் முன் செயநீரை முன்போலவே விட்டு உமிக்காந்தலில் வைக்கவேண்டும். இவ்விதம், செய்யும்போது கட்டியைப் புரட்டி கொடுத்து வரவேண்டும். இவ்விதம் 10 தடவைகள் விட்டு விட்டுச் சுண்ட வைத்துப் பின்பெடுத்து நீர் விட்டுக் கழுவி ஈரமில்லாமல் உலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

படிக்காரம் 10 பலம் (350 கிராம்). இதனைக் கல்வத்தி லிட்டு .மைபோலப் பொடித்துக் குப்பைமேனி இலைச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு 2 சாமமரைத்து வில்லை செய்து, 5 அல்லது 6 நாள் வெய்யிலில் வைத்து ஈரமில்லாமல் உலர்த்தி, அகலிலிட்டு மேலகல்மூடி 3 சீலைமண் செய்து 3 பலமுள்ள (105 கிராம்) 30 விராட்டியில் புடமிட்டு, ஒரு நாள் ஆறவிட்டெடுத்துப் பொடித்து முன்போலக் குப்பைமேனிச் சாற்றை விட்டரைத்து, முன்போல் புடம் போட்டுக் கொள்ளவும். இவ்விதம், அதையே மீண்டும் மீண்டும் அரைத்து 5 புடம் போட்டுக் கொள்ளவும். இதுவே பக்குவப் படிக்காரமாகும்.

மேற்படி பக்குவப் படிக்காரம் 1 பலம் (35 கிராம்). பாதரசம், கருவங்கம் இவ்விரண்டும் வகைக்கு $1\frac{1}{4}$ வராகனெடை($4\frac{3}{8}$ கிராம்). வெடியுப்புச் சுண்ணம் பலம் $\frac{1}{4}$ ($8\frac{3}{4}$ கிராம்). இவற்றுள் வங்கத்தையும் இரசத்தையும் கலந்து மற்றெல்லாவற்றையும் ஒன்ருய்ச்

சேர்த்துக் கோழிமுட்டையின் மஞ்சள் கருவால் 2 சாமமரைத்து, முன்தயாரித்து வைத்துள்ள இலிங்கத்திற்கு எங்கும் சமமாயிருக்கும்படிக் கவசம்செய்து, சற்று உலர்த்தி, பருமனுனதும் நன்ருய்ப் பழுத்ததுமான வில்வப்பழத்திற்குள் வைத்துச் சந்தில்லாமல் செய்து பழத்தின்மேல் ஏழு சீலைமண் செய்து 3 பலமுள்ள 15 விராட்டியில் புடமிட்டு, ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் எடுத்துக் கவசத்தை நீக்கி இலிங்கத்தை எடுத்துப் பொடிந்துப் பத்திரப்படுத்திக் கொள்ளவேண்டும்.

இந்த இலிங்கமானது வாதம், மருத்துவம் என்ற இரு முறைகளுக்குமாகும். நெரிக்கட்டிவரும் சுரம், யானைக்கால் சுரம், மேக சுரம், நீரிழிவு, அண்டவாதம், விதைவாதம், கப நோய்கள், வாயு நோய்கள் முதலிய அனேக நோய்கள் தீரும். இரசவாதத் தொழிலிலும் இது பயன்படுத்தப்படுகிறது. இதன் சிறப்பான முறைகளை இதன் திறவுகோலில் எழுதுவோம்.

**குறிப்பு :—** இலிங்கக்கட்டு முறைகள் மேற்கண்ட பாகமொன்ருேடே முடிந்துவிட்டதென நினைக்கவேண்டாம். இதைப் போன்றதும் இதற்கு மேலானதுமான உருக்கு இலிங்கக்கட்டு மெழுகு இலிங்கக்கட்டு, செந்தூர இலிங்கக்கட்டு, நிற இலிங்கக் கட்டு என்னும் நானுவித இலிங்கக்கட்டுகள் உள்ளன. அவை எல்லாம் இதற்கடுத்த பாகங்களில் வகை விபரமாகச் சொல்லப் படும். மேற்கண்ட முறையானது செயநீர் மூலமாய் இலிங்கத்தைக் கட்டும் பலவகைகளில் ஒன்று. இஃது இங்கு ஓர் எடுத்துக்காட்டாக எழுதப்பட்டதே ஒழிய மற்றபடி அன்று.

## 214. வெண்காரச் செயநீர்

பொரித்த வெண்காரம் 2 பலம் (70 கிராம்). தீபகற்பூரம் 2 பலம். நவாச்சாரப்பதங்கம், நவாச்சார உப்பு (Smelling Salt), பாகப்படுத்தின யவச்சாரம் (வெடியுப்பு), பாகப்படுத்தின உவாச் சாரம், பாகப்படுத்தின சத்திச்சாரம் ஆகிய இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம் (17$\frac{1}{2}$ கிராம்) இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனிமைபோலப் பொடித்து, பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து அரைத்து மெல்லிய சல்லாத்துண்டில் தளர்ச்சியாய் முடிந்து, ஒரு பானைக்குள் ஒரு பீங்கான் கோப்பையை வைத்து, அதற்கு நேரே அந்தப் பானையின் வாயில் மூங்கிற்குச்சியொன்றைக் குறுக்கிற் போட்டு, இந்த முடிச்சை அதில் கட்டித் தொங்கவிட்டு, இந்த முடிச்சியிலிருந்து வடியும் நீரானது அந்தப் பீங்கானில் சொட்டும் படியாகப் பார்த்து, அந்தப் பானையை வாயகன்ற சட்டியால்

மூடவேண்டும். இந்த மூடுசட்டியானது பானையின் விலாவின் மீது சந்தில்லாமற் படிந்திருக்கவேண்டும். இச்சட்டி வாய்க்கும் பொருந்து வாய்க்கும் உழுந்துமாச்சீலை செய்து, இப்பானை கொள்ளும்படியான வேறொரு பெரிய பாண்டத்தில் நீரைவிட்டு, அதில் முன் தயாரித்து வைத்துள்ள பானையை மிதக்கவிட்டு, அந்தப் பாண்டத்தின் வாயையும் மூடிக் குளிர்ச்சியான இடத்தில் வைக்கவேண்டும். இவ்விதம் நாற்பது நாள்கள் சென்று எடுத்தால், எல்லாம் நீராகி இருக்கும். இப்படிச் செய்யக் கூடாதிருந்தால், எல்லாச் சரக்குகளையும் முன் தயாரித்தபடியே செய்து, செயநீர்க் குப்பியிலிட்டு வாய்க்கு மூடியிட்டு கிணற்று முறையில் புடமிடும் (கூபப்புடம்) பக்குவப்படி செய்து நீராக்கிக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட இருவகைகளில் ஒரு வகையாய்ச் செய்த இந்த செயநீரைப் பீங்கான் வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவும் வேண்டும். இதுவே, வெண்காரச் செயநீராம், இதனையே அதிகக் காரமானதாய்ச் செய்து கொள்ள வேண்டுமெனில், முதலில் தயாரித்த சரக்குகளை எல்லாம் இரண்டாந் தடவையும் சேகரித்துப் பொடித்து, முதல் தடவை இறக்கின தீநீரைவிட்டு 2 சாமமரைத்து, இரண்டாந்தடவையும் வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் இதனையே மடக்கி மடக்கி அரைத்தும், மடக்கி மடக்கி வாலையிலிட்டும் இறக்கிக் கொண்டால், கடுங்காரமாயிருக்கும்.

இந்தச் செயநீரால் எல்லாவகைச் சரக்குகளையும் கட்டலாம். இவை வாதம், மருத்துவம் என்ற இருவகைகளுக்குமாம். இம் முறைகளும் ஆங்காங்கு எழுதப்படும்,

## 215. படிக்காரச் செயநீர்

88ஆம் பாகத்திற் சொல்லியிருக்கிறபடி தயாரித்து வைக்கப் பட்ட படிக்காரச் சுண்ணம் 2 பலம் (70 கிராம்). மேல் நாட்டுக் கற்பூரம் 2 பலம் (இது ஆங்கில மருந்துக் கடைகளில் வில்லை வில்லைகளாக விற்கப்படுகிறது) இதற்கு ஆங்கிலத்தில் (Purified Camphor எனப்பெயர்.) நவாச்சாரப்பதங்கம் அல்லது கட்டின நவாச்சாரம் பாகப்படுத்தின யவாச்சாரம், பாகப்படுத்திய உவாச்சாரம் பாகப்படுத்திய சத்திச்சாரம் என்ற இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்). இவை எல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து, நவாச்சார நீரை விட்டு 12 சாமமரைத்துச் செயநீர்க் குப்பியில் வைத்து வாய்க்கு மூடியிட்டுக் குதிரைச் சாணக் குழியில் புடமிடும் பக்குவப்படி செய்து செயநீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தச் செயநீரையே காரமானதாகவும் வெப்பக் குணமுள்ளதாகவும் செய்து கொள்ள வேண்டுமாயின், முன் சரக்குகளை மறுபடியும் தயாரித்து, அதில் முன்னெடுத்த செயநீரை விட்டரைத்து வெய்யிலில் வைத்துச் சுவறினபின், மறுபடியும் செயநீர்க் குப்பியில் வைத்து மூடியிட்டு, செயநீர்க் குழியில் வைத்து முன்போலவே பக்குவப்படுத்திச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும். அல்லது இதனைப் பீங்கான் வாலையிலிட்டுத் தீநீராகவும் இறக்கிக் கொள்ளலாம். எவ்விதமாயினும் மீண்டும் மீண்டும் செய்யச் செய்ய காரமும், வீரமும் அதிகமாமென்பது எல்லோர்க்குந் தெரிந்த ஒன்றாகும்.

இந்தப் படிக்காரச் செயநீரால், பற்பலவித இரசவாதத் தொழிலிற்காகும் முறைகள் செய்யப்படுகின்றன. மேலும், இதனால் மருத்துவத்திற்காகும் பல முறைகளும் செய்யப்படுகின்றன. இவையெல்லாம் ஆங்காங்கு எழுதப்படும்.

## 216. படிக்காரநிறச் செயநீர்

88ஆம் பாகப்படி தயாரித்த படிக்காரச் சுண்ணம் 1 பங்கு. வெடியுப்புச் சுண்ணம் 1 பங்கு. 20ஆம் பாகத்திற் சொல்லப்பட்டிருப்பது போலத் தயாரிக்கப்பட்ட கறியுப்பு 1 பங்கு இம்மூன்றையும் சேர்த்து அரைத்துக் குப்பியிலிட்டுச் செயநீர்க் குழியில் வைத்துப் பாகப்படி செய்து 40 நாள் சென்று செயநீராக்கிக் கொண்டு, இதனைப் பீங்கான் வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும்.

இவ்வகைப் படிக்காரச் செயநீரால் சில சரக்குகளைக் கட்டக் கூடுமெனினும், பெரும்பாலும் இது பொன்னை நிறமேற்றப் பயன்படுகிறது. இம்முறையானது பெரியோர்களான பயிற்சி முதிர்ந்தவர்களுக்குத் தெரியுமாகையால், அவர்களோடு பழகித் தெரிந்து கொள்ளவேண்டும். இதற்குப் பார்சியில் (அப்ஜா) எனப் பெயர். இதன் பொருள் அதிகப்படுத்தல் என்பதாம். அப்ஜா முறைகளில் அனேகம் பின்னெழுதப்படும்.

## 217. துருசுச் செயநீர் (வேறு)

தேவையான துருசைக் கல்வத்திற் பொடித்து 195 அல்லது 196ஆம் பாகப்படி தயாரித்துள்ள நவாச்சாரச் செயநீரைவிட்டு 4 சாமமரைத்துப் பீங்கானில் வைத்து, முன்கூறிய செயநீரைத் தெளித்து மெதுவாய்த் தீ எரித்து வறுக்கவேண்டும். இவ்விதம்,

2 சாமம் வறுத்து முடிவில் செயநீர் விடாமல் ஈரஞ்சுவற வறுத்தெடுத்துக் கல்வத்தில் மறுபடியும் போட்டு முன்சொன்ன செயநீர் தெளித்து முன்போலவே 2 சாமமரைத்து முன்போலவே வெம்மை தாங்கும் பீங்கானில் முன்கூறிய செயநீர் தெளித்து முன்போலவே வறுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 3 அல்லது நான்கு தடவைகள் செய்யின், துருசானது வெளுத்துக் காரமாகிவிடும், காடியில் அல்லது தயிரில் சிறிதளவு குழைத்துப் பார்த்தால் பசுமை வராமலிருக்கவேண்டும், பசுமை வந்தால் மறுபடியும் முன்போலவே அரைத்து வறுத்தெடுத்துப் பக்குவப் படுத்திக் கொள்ளவேண்டும். 5 அல்லது 6 தடவைகளுக்குள் மேற்கண்ட தேர்வுக்குச் சரியாயிருக்கும். இதுவே துருசுச் சுண்ணமாகும்.

இத்துருசுச் சுண்ணம் 1 பலம் (35 கிராம்). துப்பாக்கி மருந்தில் கட்டின வீரம் அல்லது வீரச் சுண்ணம் 1 பலம் (35 கிராம்), கட்டின நவாச்சாரம் அல்லது நவாச்சாரப் பதங்கம் 1 பலம் (35 கிராம்), முப்புச் சுண்ணம் அல்லது பூநீர்ச் சுண்ணம் $\frac{1}{2}$ பலம் (17$\frac{1}{2}$ கிராம்) இரசகற்பூரப் பதங்கம் அல்லது இரசகற்பூரச் சுண்ணம் $\frac{1}{2}$ பலம் (17$\frac{1}{2}$ கிராம்). இவை எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து கல்வத்திலிட்டு 19ஆம் பாகப்படி தயாரித்த காரசார நீரைவிட்டு 2 சாமமரைத்து வில்லை தட்டிக் காயவைத்து அகலிலிட்டு மேலகல்மூடி 5 சீலைமண் வலுவாய்ச் செய்து, இக் கவசத்தின் எடைக்கு 7 பங்கு எடை விராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறவிட்டெடுக்க எல்லாம் ஒரு வகைச் சுண்ணமாகி இருக்கும்.

இதைப் பீங்கானில் அணைத்துப் பனியில் வைத்து முறைப் படி செயநீராக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம், செய்யக் கூடாத காலங்களில் செயநீர்க் குப்பியில் இட்டு மூடியிட்டு, செய நீர்க் குழியில் வைத்துப் பாகப்படி செயநீராக்கிக் கொள்ள வேண்டும்.

இந்தச் செயநீரால் உயிர்ப்பொருள், பருப்பொருள் என்னும் இருவகைச் சரக்குகளையும் கட்டலாம். பயிற்சி முதிர்வு பெற்ருேர் பற்பலவிதமாய்ச் சார்புகளேற்றிச் செய்வார்களாகையால் அவர் கள்மூலம் தெரிந்து கொள்ளலாம். இந்த நூலிலும் ஆங்காங் குப் பல முறைகளும் எழுதப்படும்.

## 218. இலகுமெழுகுச் செயநீர்

தேவையான தீப கற்பூரத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து 9ஆம் பாகப்படி தயாரித்து வைத்த காரசார நீரைவிட்டு 4 சாமமரைத்து வெம்மை தாங்கும் பீங்கானில் வைத்து,

விளக்கின்மீது வைத்து மேற்படி செயநீர் தெளித்து வறுக்க வேண்டும். இதை வறுக்கும்போது, ஈரப்பசையாய் இருக்கும் படியாகவே மேற்படி செயநீரைத் தெளித்து வரவேண்டும். ஈரப்பசை இல்லாவிட்டால் ஆரம்பத்தில் குப்பெனப் பற்றிப் போகும். இவ்விதம் 2 சாமம் வறுத்து மறுபடியும் கல்வத்திலிட்டு முன்போலவே செயநீர் ஊற்றி அரைக்கவேண்டும். மறுபடியும் முன்போலவே வறுக்கவேண்டும். இவ்விதம், பக்குவமாய்த் தீப் பற்ருமல் கவனமுடன் மீண்டும் மீண்டும் வறுத்து வந்தால் நெருப்பிற்கு நிற்கும். நெருப்பின்மேல் போட்டால் பற்றி எரியாமல் இருக்கிறவரையில் மீண்டும் மீண்டும் அரைத்தும் வறுத்தும் கொள்ளவேண்டும். இதுவே பக்குவப்படுத்தின தீப கற்பூரம் அல்லது கட்டின தீபகற்பூரமென்று பெயர்.

மேற்படி விதமாய்க் கட்டின கற்பூரம், வெடியுப்புச் சுண்ணம், நவாச்சாரப் பதங்கம், அல்லது கட்டின நவாச்சாரம்; சவுக்காரச் சுண்ணம் இந்நான்கும் சமனெடை; இவற்றைக் கல்வத்திலிட்டு ஆரையிலைச் சாற்றைச் சிறுகச்சிறுக ஊற்றி நான்கு சாமங்கள் அரைத்து வில்லை செய்து வெய்யிலில் வைத்து ஈரமில்லாமல் உலர்த்தி அகலிலிட்டு மேலகல்மூடி 4 சீலைமண்செய்து, இக்கவசத் தின் எடைக்கு 7 பங்கு எடை விராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறின பின்னெடுத்துத் தட்டைப் பீங்கானில் அணைத்துப் பனியில்வைத்துச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும். அப்படிக் கூடாத காலங்களில் செயநீர்க் குப்பியில் இட்டு வாய்க்கு மூடியிட்டு இடைவெளியை மூடிச் செயநீர்க் குழியில் வைத்து முறைப்படி செய்து செயநீராக்கிக் கொள்ளவேண்டும். இதுவே இலகு மெழுகுச் செயநீராம்.

எந்தச் சரக்கையும் முறைப்படி கட்டி இந்த மெழுகுச் செய நீரால் 4 சாமம் சுருக்கிட்டாலும், அல்லது 4 சாமம் அரைத்து வெம்மைதாங்கும் பீங்கானில் வறுத்துப் பாகப்படுத்தினுலும் மெழுகாகும். இவ்விதம், செய்யப்பட்ட மெழுகுகள் வாதம் மருத்துவம் என்ற இருவகைகளுக்குமாகும். இதைப் பயன் படுத்தும் விதங்கள் பயிற்சி முதிர்ந்தவர்களுக்குத் தெரிந்த ஒன்ருகும்.

## 219. நவகாரச் செயநீர்

(அ) கட்டின அல்லது பாகப்படுத்தின வெடியுப்பு 4 பலம் (140 கிராம்). கோது, கொட்டை நீக்கப்பட்ட பழம்புளி 8 பலம் (280 கிராம்). துரிசுச் சுண்ணம் அல்லது பாகப்படுத்தின துரிசு, பாகப்படுத்தின கற்பூரம், பாகப்படுத்திய பூநீர், பாகப்படுத்திய கல்லுப்பு, பாகப்படுத்திய இந்துப்பு, சீனச்சுண்ணம், கட்டின

நவாச்சாரம் அல்லது நாவச்சாரப் பதங்கம். இவ்வேழும் வகைக்கு 1 பலம் (35 கிராம்). இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியே பொடித்து ஒன்ருய்க்கலந்து புளியையும் சேர்த்துக் கல்லுரலில் மைபோல இடித்துச் சிறு வில்லைகளாகச் செய்து அடுப்பில் இரும்புச் சட்டியை ஏற்றி அதில் நான்கு நான்கு வில்லைகளாய் வைக்க; அவை ஒருவித சீறலுடன் எரிந்து சாம்பலாகிவிடும். இவ்விதம், எல்லா வில்லைகளையும் நான்கு நான்காக வைத்துச் சாம்பலாக்கிக் கொள்ளவேண்டும். இதில் காரமாயிருப்பதால் இதனைச் சுண்ணமெனச் சொல்வதுமுண்டு.

(ஆ) செம்மண் பூமியிலுள்ள பூநாகத்தைப் பசுவின் மோரில் அல்லது பசுவின் பாலில் போட்டு 2 அல்லது 3 மணிநேரம் ஊற வைக்க அவை மண்ணை எல்லாம் கக்கிவிடும். அதை நன்ருய்க் கழுவித் தூய்மை செய்து வெய்யிலில் உலர்த்தி ஈரமில்லாமல் காய்ந்தபின்பு, ஒரு சிறு மண்கலயத்தில் முற்றும் நிறைந்திருக்கும்படி போட்டு வாய்க்குச் சில்லிட்டு, 2 சீலைமண் செய்து தகுந்த விதமாய்ப் புடமிட்டெடுக்க ஒருவித பற்பமாகி இருக்கும் இதற்குப் பூநாகபற்பமெனப் பெயர்.

(அ)வில் சொல்லப்பட்ட பற்பம் அல்லது சுண்ணம் 4 பங்கு (ஆ)வில் சொல்லப்பட்ட பூநாகபற்பம் 1 பங்கு இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு நவாச்சார நீரைச் சிறுகச் சிறுக ஊற்றி 2 சாம மரைத்து செயநீர்க் குப்பியில் போட்டு வாய்க்கு மூடியிட்டு இடைவெளியை மூடி செயநீர்க் குழியில் 40 நாள் வைத்து எடுக்க எல்லாம் நீராகிவிடும். ஏதேனும் எஞ்சி இருந்தால் நீரை மாத்திரம் இறுத்துக்கொண்டு எஞ்சி நிற்பதை முன்போலவே குப்பியில் விட்டு செயநீர்க் குழியில் வைக்க நீராகிவிடும். இவ்விரண்டு வகையையும் ஒன்ருய்க் கலந்து வேருெரு குப்பியில் விட்டு, நாயுருவியுப்பு, கள்ளிப்பழுப்பு உப்பு இவை இரண்டும் வகைக்கு அரைக்கால் பங்காக அதில் சேர்த்து வாய்க்கு மூடியிட்டு இரவில் பனியில் வைத்துக் காலையில் தெளிந்த நீரைக் கலங்கலில்லாமல் இறுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஒவ்வொரு இரவிலும் பனியில் வைத்து மறுநாள் காலையில் தெளிவை இறுத்து எல்லாவற்றையும் ஒன்ருய் கலந்து கொண்டு பத்திரப் படுத்தவும். இதுவே நவகாரச் செயநீராகும். இதனைப் பூநாகச் செயநீரெனவும் சொல்வதுண்டு.

இந்தச் செயநீரால் உயிர்ப்பொருள், பருப்பொருள் என்னும் இவற்றுள் எந்தப் பொருளையும் அந்தந்த இனத்திற்குத் தகுந்தது போல் 1, 2, 3, அல்லது 4 சாமம் சுருக்கிட்டால், அல்லது அரைத்து வறுத்துப் பக்குவப்படுத்தினல் கட்டுப்பட்டுப்போகும். இவ்விதம்,

கட்டின சரக்கை மருத்துவச் சார்பான எந்த முறையுடனும் அல்லது இரசவாதச் சார்பான எந்த முறைகளுடனும் சேர்த்துச் செய்தால், அதன் குணம் சிறந்திருக்குமென்பதில் எவ்விதத் தடையுமில்லை.

## 220. தாரபற்பச் செயநீர்

பாகப்படுத்தின அல்லது கட்டின வெடியுப்பு 8 பலம் (280 கிராம்). கோது, கொட்டை முதலியவை நீக்கித் தூய்மை செய்யப்பட்ட புளி 8 பலம். (280 கிராம்) பாகப்படுத்தின பூநீர் அல்லது (Washing Soda) என்னும் மேல்நாட்டு பூநீர், படிக்காரச் சுண்ணம் அல்லது பாகப்படுத்தின படிக்காரம், பாகப்படுத்தின வெண்காரம், கட்டின அல்லது பதங்கித்த நவாச்சாரம் இவை நான்கும் வகைக்கு 1 பலம் (35 கிராம்). இந்த சரக்குகள் ஒவ்வொன்றையும் தனித்தனியாய்ப் பொடித்து முடிவில் எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து புளியையும் சேர்த்துக் கல்லுரலில் மைபோல் இடித்து, இரண்டு விரல் கனமுள்ள திரியாகச் செய்து, ஓர் ஓட்டில் ஒரு வளைவின்பின் மற்ருெரு வளைவாகச் சுற்றி வைத்து, அடுப்பின் மீதேற்றிச்சிறு தீயாக எரித்துவர, ஓட்டிலுள்ள திரியானது ஒருவித சீறலுடன் பற்றியெரிந்து சாம்பலாகிவிடும். இதனை ஒரு மெல்லிய சல்லாத் துண்டில் முடிந்து, ஒரு பானையில் ஒரு பீங்கானை வைத்து, அதற்கு நேரே இம்முடிச்சைக் கிழிக்கட்டி, பானையின் வாயை வேருெரு சட்டி கொண்டுமூடி, ஈரப்பசையான இடத்தில் 1 அல்லது $1\frac{1}{2}$ முழமுள்ள குழி தோண்டி அதில் வைத்து மூடிவிட வேண்டும். பனிக்காலமாயின் குழியின்மீது நீரும் தெளித்து நைப்பாக்கி வரவும் வேண்டும், வெய்யில் காலமாயின் முன் தயாரித்து வைத்த பானையைச் சிறு குட்டையிலுள்ள நீரின்மீது அல்லது கிணற்றின் நீரின்மீது விட்டு வைக்கவேண்டும். அல்லது முன் தயாரித்து வைத்த சுண்ணத்தைச் செயநீர்க் குப்பியில் விட்டுக் கிணற்றுக் குழியில் புடமிடும் வகையிலும் செய்துக் கொள்ளலாம். மேற்கண்டவகைகளுள் ஒருவிதமாக 25 நாள்கள் செய்யின் எல்லாம் நீராகிவிடும்.

## 221. அரிதார பற்பம்

மேற்கண்ட செயநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி, தூய்மை செய்த அரிதாரத்தை 4 சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி $1\frac{1}{2}$ படிப் பானையில் முக்கால்படி கற்சுண்ணத்தைப் போட்டமுத்தி, அதன்மேல் பனங்கள்ளை அல்லது நீரைத் தெளித்து அதன்மேல் முன் தயாரித்து வைத்துள்ள வில்லைகளை ஒன்றன்மீது ஒன்று படாமல் பரப்பி வைத்து, அதன்மேலும் $\frac{3}{4}$ படி கற்சுண்ணத்தைப் போட்டமுத்தி, மேலும்

பனங்கள்ளை அல்லது நீரைத் தெளித்து அடுப்பின் மீதேற்றி விளக்கின் சுடர்போல 4 சாமம் எரிக்கவேண்டும். பின்பு, ஒரு நாள் குளிர ஆறினபின்பு, மறுநாள் கவனமுடன் மேற் சுண்ணும்பை நீக்கி வில்லைகளை எடுத்துக் கல்வத்திலிட்டு முன் தயாரித்த செயநீரை விட்டரைத்து முன்போலவே வைத்து எரித்துக் கொள்ளவும். இதனையே மீண்டும் மீண்டும் மூன்று தடவைகள் மேற்கண்டபடியே அரைத்து எரித்துக் கொள்ள தாளகமானது அருமையான பற்பமாகும்.

இந்த பற்பத்தின் பெருமை சிறப்பாகப் பேசத்தக்கது. எலும் புருக்கி நோய், காசம், மேல் மூச்செறிதல் முதலிய கபச்சார்பான எல்லா நோய்களும் தீரும். வாய்க் குமட்டுதல், வாந்தி, உணவை வெறுத்தல் முதலிய தாளகத்தின் தீயகுணங்களில் ஏதும் உண் டாகாது. எல்லாவகை உடற்கூறு உள்ளவர்களுக்கும் பயன் படும்.

## 222. வெடிவீரச் செயநீர்

பாகப்படுத்தின வெடியுப்பு 10 பலம் (350 கிராம்). படிக்காரம் $4\frac{1}{2}$ பலம் ($157\frac{1}{2}$ கிராம்). சவ்வீரம் 1 பலம் (35 கிராம்). இம் மூன்றையும் தனித்தனி தூள் செய்து வைத்துக் கொள்ள வேண்டும். ஓர் இரும்புச் சட்டியை வெள்ளையாகும்படியாக தேய்த்துத் துலக்கிக் கழுவி அடுப்பேற்றி, அதில் மூன்றில் ஒரு பங்கு வெடியுப்புத் தூளைப் போட்டுப் பரப்பி, அதன்மேல் மூன்றில் ஒரு பங்கு வீரப்பொடியைத் தூவி, அதன்மேல் மூன்றில் ஒரு பங்கு படிக்காரத்தூளைத் தூவி, அதன்மேல் மறுபடியும் மூன்றி லொரு பங்கு வெடியுப்புத் தூளைப்போட்டு அதன்மேல் மூன்றி லொரு பங்கு வீரப்பொடியைத் தூவி, அதன்மேல் மூன்றிலொரு பங்கு படிக்காரத்தூளைத் தூவி, மூன்றும் அடுக்கும் வெடியுப்பு, வீரம், படிக்காரம் என்ற இவற்றை முறையே பரப்பித்தூவி, சிறு தீயாய் எரிக்க, எல்லாம் உருகி நீர்போலாகிப் பின்பு சுண்டின வுடன் இறக்கி ஆறவைத்துப் பொடித்துக் கொள்ளவேண்டும். இதுவே வெடிவீரச் சுண்ணம் எனப்படும். இதனைப் பீங்கானில் அணைத்துப் பனியில் வைத்துச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் செய்யக்கூடாவிட்டால் செயநீர்க் குழியில் வைத்துச் செயநீராக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தச் செயநீரில், மேற்சொன்னபடியே வெடிவீரச் சுண்ணத் தைப் புதிதாய் தூய்மைப்படுத்தி மறுபடியும் சேர்த்து 2 சாம மரைத்து 3 நாள் பனியில் வைத்து நாலாம் நாள் வாலையிலிட்டு தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தத் தீநீரில் மேற்சொன்னபடியே வெடிவீரச் சுண்ணத்தை இரண்டாம் தடவையும் புதிதாய்த் தயாரித்துச் சேர்த்து இரண்டாம் தடவையும் வாலையிலிட்டுத் தீநீர் இறக்கிக் கொள்ள வேண்டும்.

இவ்விதமே இந்தத் தீநீருடன் வெடிவீரச் சுண்ணத்தைச் சேர்த்து மீண்டும் மீண்டும் தீநீர் இறக்கிக் கொண்டால், வெகு வீரமாகவும் காரமாகவும், இருக்கும். நேரத்துக்குத் தகுந்தாற் போலவும் அழைப்புக்குத் தகுந்தபடியும் மீண்டும் மீண்டும் செய்து கொள்ளவேண்டும். இதைப் பழக்கத்தால் தானே தெரிந்து கொள்ளலாம்.

இந்த வெடிவீரச் செயநீரானது பற்பலவகைச் சுண்ணங்களைச் செய்யப் பயன்படுகிறது. அம் முறைகளெல்லாம் ஆங்காங்கு எழுதப்படும்.

## 223. சாரசூதச் செயநீர்

கட்டின சாரம் அல்லது சாரப்பதங்கம் 5. பங்கு, இரசப் பதங்கம் 1 பங்கு. இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு 1 சாம மரைத்து, வெள்ளையாய்த் துலக்கின இரும்புச் சட்டியைக் கரி நெருப்பின்மேல் வைத்து, அதில் போட்டு விசிறியினால் விசிற வேண்டும். இப்படிச் செய்து வரும்போது 1 வராகன் எடை ($3\frac{1}{2}$ கிராம்) மேல்தோல் நீக்கி இடித்த சுக்குத் தூளை $\frac{1}{2}$ மணிக்கு ஒரு தடவைத் தூவியும் வரவேண்டும், இவ்விதம், இரண்டும் நன்றாய்க் கலந்து ஒன்றாகும் வரையிலும் செய்து இறக்கி ஆறினபின் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்து அகன்ற பீங்கான்களில் அணைத்து இரவிற் பனியில் வைத்துக் காலையில் கசிந்திருக்கும் நீரை இறுத்து ஒரு கண்ணாடிக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும். இப் பீங்கானை பகலில் தூசு முதலியவை விழாதபடி மூடிக் குளிர்ச்சியான இடத்தில் வைத்து மறுபடியும் இரவில் பனியில் வைத்துக் காலையில் கசிந்த நீரை இறுத்து முன் எடுத்த நீருடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் பீங்கானிலிருந்து நீர் கசிகிறவரையில் சேகரித்துக் கொள்ளவேண்டும். நீர் கசியாமல் திப்பியாய் எஞ்சி நிற்பதையும் பத்திரப்படுத்தவேண்டும். இதனை முன் போலவே 2அல்லது 3 தடவை மடக்கி மடக்கிச் செய்துகொண்டால் அதிக குணமுள்ளதாகும்.

இந்தச் செயநீரானது வாதம், மருத்துவம் என்ற இரு வகைகளுக்கும் பயன்படும். தேள் கொட்டின கடிவாயில் இந்தச் செயநீரில் ஒரு துளியை அல்லது இரண்டு துளிகளைச் சொட்ட அந்த வேதனை, எரிவந்தம் முதலியவை உடனே நின்றுபோகும். மேலும்

இந்தச் செயநீரை, மகோதரம், பாண்டு, கவிசை (ஒருவகை வயிற்று நோய்) நீர்க்கட்டு, சதையடைப்பு, கல்லடைப்பு முதலிய நோய்களுக்கும் உள்ளுக்குப் பயன்படுத்தலாம். மேலும் நேரத்துக்கு ஏற்றபடி உசிதமாய் அனேக நோய்களுக்குப் பயன்படுத்தலாம்.

## 224. சார வீர பூரச் செயநீர்

(அ) கட்டின நவாச்சாரம் அல்லது நவாச்சாரப்பதங்கம் 10 பலம் (350 கிராம்). கட்டின வீரம், அல்லது வீரப்பதங்கம் 5 பலம் (175 கிராம்) கட்டின இரசகற்பூரம் அல்லது இரசகற்பூரப் பதங்கம் 5 பலம் இவை மூன்றையும் ஒன்ருய்க் கலந்து கல்வத்தில் 1 சாமம் நன்ருயரைத்துச் செயநீர்க் குப்பியில் விட்டுச் செயநீர்க் குழியில் 27 நாள்கள் வைத்துச் செயநீராக்கிக் கொள்ள வேண்டும். ஏதேனும் எஞ்சி நின்ருல் மறுபடியும் முன்போலவே, வைத்து நீராக்கி எல்லாவற்றையும் முன் தயாரித்த நீருடன் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

(ஆ) கட்டின நவாச்சாரம் அல்லது நவாச்சாரப் பதங்கம் 5 பலம் (175 கிராம்), கட்டின வீரம் அல்லது வீரப்பதங்கம் $1\frac{1}{4}$ பலம் ($43\frac{3}{4}$ கிராம்), கட்டின இரசகற்பூரம் அல்லது இரசகற்பூரப் பதங்கம $1\frac{1}{4}$ பலம் ($43\frac{3}{4}$ கிராம்) இவை மூன்றையும் ஒன்ருய்ச் சேர்த்துக் கலக்கும்படி அரைத்துக் கொள்ளவேண்டும்.

(இ) பின்புமுன்னேதயாரித்து வைத்திருக்கிற செயநீரில் இட்டு வாலையில் இட்டு, அடுப்பேற்றித் தீநீராக இறக்கிக் கொள்ளவும். மேலும் கடுங்காரமாகச் செய்துகொள்ள வேண்டுமாயின், இந்தத் தீநீரில் (ஆ)வில் சொல்லியிருக்கிறபடி தயாரித்துச் சேர்த்து மறுபடியும் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இதனை மூன்று தடவைக்குமேல் மடக்கலாகாது. அப்படி மடக்கினுல் சரக்குகளைக் கொன்று நாசமாக்கிவிடும்.

இந்தச் செயநீரால் முக்கியமாய் நாகம் கண்ணடங்கிப் புகையாமல் கட்டுப்பட்டுப் போகிறது. இவ்விதஞ் செய்யப்பட்ட நாகமானது சிந்தூரிக்க அதிகம் பயன்படுகிறது. மேலும், இஃது ஏமரசக்களங்கு செய்யவும் பயன்படுகின்றது. இதன் முறை முதலிய சிறப்புகளை இதன் திறவுகோலில் எழுதுவோம்.

## 225. தங்கச் செயநீர்

(அ) 91ஆம் பாகப்படி தயாரித்த காரசார நீர் 10 பலம் (350 கிராம்) பாகப்படுத்தின பூநீர், சங்குச் சுண்ணம், பாடாணச் சுண்ணம் இவை மூன்றும் வகைக்கு 1 பலம் (35 கிராம்) இவை

மூன்றையும் முன்கண்ட காரசார நீரில்போட்டு ஒரு குப்பியில் விட்டு மூடியிட்டு கடுவெய்யிலில் 21 நாள்கள் வைக்கவேண்டும். இதனை நாள்தோறும் 5 அல்லது 6 தடவைகள் நன்றாய்க் குலுக்கி வரவேண்டும். இவ்விதம், செய்து வருவதால், மேற்கூறிய நீரில் காரமேறி வீரிய குணமுள்ளதாகிவிடும்.

(ஆ) கட்டின தாளகம், இரச கற்பூரப்பதங்கம் அல்லது கட்டினபூரம், வீரப்பதங்கம் அல்லது கட்டின வீரம், இவை மூன்றும் வகைக்கு $2\frac{1}{2}$ வராகன் எடை ($8\frac{3}{8}$ கிராம்). இவை மூன்றையும் கல்வத்திலிட்டு, முன்னுல் காரமேற்றிய காரசார நீரைச் சிறுகச் சிறுகவிட்டு. 2 சாமமரைத்துக் கொள்ளவும்.

(இ) $2\frac{1}{2}$ வராகன் எடை ($8\frac{3}{4}$ கிராம்) சுத்தமான தங்கத்தைப் புளியிலைக்கனம் தகடடித்து, அந்தத் தகட்டின்மீது (ஆ)வில் உள்ளதைச் சமமாகப் பூசி 10 நாள் கடும்வெய்யிலில் உலர்த்திச் சிறு அகலிலிட்டு, மேலகல்மூடி, 5 சீலைமண் செய்து, கவசத்தின் எடைக்குப் பத்துப்பங்கு விராட்டியிற் புடமிட்டாற விட்டு எடுக்கத் தங்கத் தகடு நொருங்கித் தூளாகிப்போம். அப்படிப் பதமாயிராவிட்டால் முன்போல இன்னொரு முறையும் செய்து கொள்ளவேண்டும் இதற்குத் தங்கவெட்டை எனப் பெயராம்

இத் தங்க வெட்டையைக் கல்வத்திலிட்டு. முன்காரமேற்றிய காரசாரநீரைவிட்டு 4 சாமமரைத்து வில்லை செய்து சிறு அகலிவிட்டு மேலகல்மூடி, 5 சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் எடைக்கு 15 பங்கு விராட்டியில் புடமிட்டாறவிட்டெடுக்கச் சுண்ணமாகும். இதுவே தங்கச் சுண்ணமாம்.

இத்தங்கச் சுண்ணம் 1 பங்கு, நவச்சாரப் பதங்கம் 2 பங்கு இவை இரண்டையும் கல்வத்திலிட்டுச் சாரநீர் விட்டு, 2 சாமம் அரைத்துச் செயநீர்க் குப்பியில் வைத்து மூடியிட்டுச் செயநீர்க் குழியில் இரண்டொருவாரம் வைத்தெடுக்க செயநீராகும். இதுவும் ஒருவகைத் தங்கச் செயநீராம்.

இத்தங்கக் செயநீராலும் எல்லாவிதச் சரக்கையும் கட்டலாம். இந்தச் செயநீரை வெம்மை தாங்கும் பீங்கானில்விட்டு, செய ரசத்தை விட்டுத் திராவக விளக்கில் (spirit lamp) பிடித்துக் கொண்டிருந்தால், மேற்படி இரசமானது கட்டுப்படும். இவ்விதம், கட்டுப்பட்ட இரசத்தைச் செந்தூரமாக்கினுல் வாதம், மருத்துவம் என்னும் இருவகைகளுக்குமாகும். இவ்விதமே ஒவ்வொரு சரக்கையும் அதற்குத் தகுந்த விதமாய்ப் பாகப்படுத்தக் கட்டுப்பட்டுப் போகும்.

## கவனிப்பு

122ஆம் பாகத்திலும் தங்கநீர் என ஒரு முறை சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பாகத்தையும். அந்தப் பாகத்தையும் சற்றுக் கவனமாய்ச் சிந்திக்க முற்பட்டால், இவ்விரண்டு பாகங்களின் முடிவு ஒரேவிதமெனவும், இவற்றின் செய்பாகம் சற்று வேறுபட்டதெனவும் தெரியவருகிறது. ஆகையால், பருப்பொருள் கருத்தில் வேறுபட்டாலும், மூலக் கருத்தில் ஒன்றியிருப்பது எல்லோருக்கும் நன்கு புலப்படும். ஆகையால், இரசவாதத் தொழிலை விரும்பும் ஒவ்வொருவரும் வரிசைப்படியும் முறைப்படியும் மூலபாகங்களைத் தெரிந்துகொண்டால், பருப்பொருள் பாகங்களை அனேகமாய்ப் பெருக்கிச் செய்யும் திறமை தானே உண்டாகிவிடும். ஆகையினால் தான் 'துறைகோடி தொந்தங் கோடி' என ஆன்றோர் சொல்லி இருக்கின்றார்கள். இலக்கியம், இலக்கணம், பலநூல் ஆராய்ச்சி, முதலியவைகளில் வல்லவரான ஒருவர், எவ்விதச் செய்யுட்களையும் செய்யக்கூடும். சித்திரமெழுதும் வித்தையை முறையாய்த் தக்க ஆசானிடத்தில் கற்றுத்தேர்ந்த சைத்திரிகன் தனக்கு விருப்பமானதைச்சித்திரிக்கக் கூடும். இவ்விதமே ஒவ்வொரு தொழிலையும் முறையாகத் தக்கவிதமாய்க் கற்றுத் தேர்ந்தால், தனக்கு விருப்பமானபடி செய்யும் ஆற்றல் தனக்குத் தானே வந்துவிடும். 'சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழும் நாப்பழக்கம், வைத்ததொரு கல்வி மனப்பழக்கம் நித்த நடையும் நடைப்பழக்கம்' எனச் சொல்லப்பட்டிருப்பதும் தெரிந்த ஒன்றே. இந்த இரசவாதத் தொழிலுக்கும் அவ்விதமே நாம் தொடக்கத்தில் சொன்னது போலவே, கல்வி, அறிவு, தக்க நூல் பயிற்சி. புத்திகூர்மை, விடாமுயற்சி, பயிற்சிமுதிர்ச்சி, கைப்பழக்கம், தக்க ஆசான் உதவி முதலியவைகளுண்டானல், கடவுளுதவியாலும், பெரியோர்கள் வாழ்த்தினுலும் இத் தொழிலில் விருத்தி அடைந்து, அருமையான பாகங்களைச் செய்து, கடினமான நோய்களையும் அறக் களைந்து, தாமும் மற்றவர்களுமான எல்லோரும் வச்சிர உடலுள்ளவர்களாகச் சுகமே நீடூழி வாழ்வார்கள். ஆகையால், இப் பாகத்திலும், இதற்கடுத்த பாகங்களிலும், இரசவாதத் தொழிலுக்குத் தேவையான எல்லா முறைகளையும் தொடக்கம் முதல் இறுதிவரை எழுதி இருப்பதால், மேற்கண்டபடி நோயற்று நீடூழி வாழ விரும்பும் ஒவ்வொருவரும் மருத்துவத்தில் முழுப்புலமையை அடைய விரும்பும் ஒவ்வொருவரும், இவற்றை வரிசை முறையாய்க் கற்று, அங்குள்ளதுபோல் செய்து பழக்கமுதிர்ச்சி பெற்று, முற்றும் வெற்றி பெறவேண்டியது இன்றியமையாத கடமையுமாகும்.

**இரசவாத சிந்தாமணி முதற்பாகம் முற்றும்**

# இரசவாத சிந்தாமணி

## இரண்டாம் பாகம்

### நூல்

இந்நூலின் முதற் பாகத்தில் இரசச் சரக்குகள் முதல் யாவற்றையும் நீராக்கும் வகைகள், செயநீராக்கும் வகைகள், பதங்கமாக்கும் முறைகள், பற்பமாக்கும் முறைகள் முதலிய பல முறைகளும், மற்றும் இரசவாதம் சம்பந்தமான பல பொருள் களையும் புது மாணுக்கர்கள், முது மாணுக்கர்கள் ஆகிய இரு சாரார்க்கும் பயன் ஆகும்படி எழுதப்பட்டன. இதன் தொடர்ச்சி யாய்ப் பற்பலவகைத் திராவக முறைகள் முதலியவற்றை எழுதுவோம்.

### திராவகப் பொதுவிதி

முதற்பாகத்தில் சொல்லப்பட்டிருக்கும் செயநீர் வகைகள், நீர் வகைகள் ஆகியவைகளை வாலையிலிட்டுப் பாகப்படி இறக்கிக் கொள்வதே பொதுமுறையாகும். இதற்குத் திராவகப் பொது விதி என்று பெயர்.

திராவகமானது பெரும்பாலும் அனல் தாங்கும் கண்ணுடிக் குப்பியில் இறக்கிக் கொள்வதே சிறப்புடையதாகும். இதற்காகத் தற்காலத்தில் பலவகை இயந்திரங்கள் செய்து விற்கின்றபடியால், முற்காலத்து இயந்திரங்களான குப்பி முதலியவைகளை வைத்துக் கொண்டு துன்பப்பட வேண்டியதில்லை.

நிற்க, இக்காலத்திலுள்ள திராவக இயந்திரங்கள் மிகவும் தூய்மையானவையாகவும், சேதமின்றி இறக்கக்கூடியனவாகவும் இருக்கின்றன. ஆனல், காரமான சில திராவகங்களை இறக்கு வதற்கு அவ்வகைப் பாண்டங்கள் பயன்படுவதில்லை. அவ்வகைத் திராவகங்களை இறக்குவதற்குத் தாமிரவாலை, வெள்ளிவாலை ஆகியவற்றைச் செய்துக்கொள்ளவேண்டும். ஆகையால், திராவ கத்தின் குணம், அளவு முதலியவைகளுக்கு ஏற்றபடி பீங்கான்,

தாமிரம், வெள்ளி, இரும்பு, மண் முதலியவைகளாலும் சிறியன, பெரியனவாகவும் செய்து கொள்ளவேண்டும். இவை யாவற்றையும் இங்கு எழுதுவதற்கு இயலாதாகையால், நிலைமைக்கேற்பச் செய்து கொள்வதே நன்மையாம்.

## உப்பு வகைகளின் திராவகப் பொதுவிதி

உப்பு வகைகளில் தேவையான ஒன்றை அல்லது பலவற்றைத் திராவகமாக இறக்கிக்கொள்ள வேண்டுமாயின், மூலப்பொருளைக் குழி அம்மியில் நன்கு பொடித்து, ஒரு பீங்கான் தட்டில் இட்டுப் பரப்பி, மூன்று இரவு பனியில் வைத்து, நான்காம் நாள் கீழ்ப் பாண்டம் இரும்பாகவும் மேல்பாகம் பீங்கானுகவும் இருக்கப் பெற்ற வாலையிலிட்டு, அடுப்பேற்றி மெதுவாக எரித்து வடியும் திராவகத்தைக் குப்பியில் பத்திரப்படுத்திக் கொள்ளவேண்டும். ஒரு திராவகத்தையே அதிகக் காரமுடையதாகச் செய்து கொள்ள வேண்டுமானுல், முன்னளவு புதிய சரக்கைக் கல்வத்திலிட்டு முன் இறக்கின திராவகத்தை விட்டு இரண்டு சாமம் மரைத்து முன்போலவே வாலையிலிட்டு இறக்கிக் கொள்ள வேண்டும். இஃது ஒரு மடக்குத் திராவகமெனப்படும். இவ்விதம், நான்கைந்து முறை செய்துக் கொள்வது சாலச்சிறந்ததாகும்.

## படிக்காரவகைத் திராவகப் (புதைநீர்) பொதுவிதி

திராவகமாக்கவேண்டிய படிக்காரத்தை அல்லது, படிக்கார வகைகளை மைபோலரைத்து அதிகமாக இருந்தால் நான்கு அல்லது ஐந்து பாகங்களாகச் செய்து, ஒரு பாகத்தை ஒரு மண் தாழியில் இட்டு, வாய்க்குச் சில்லிட்டுச் சீலை செய்து ஓடுகிற நதிக்கரையில் தண்ணீரிலிருந்து நாலு கெசம் தூரத்தில் அதில் தண்ணீர் புகாமல் கவனமாகப் புதைத்து வைக்கவேண்டும். மூன்று இரவு பகல் சென்ற பின்பு எடுத்து நன்ருய்க் குலுக்கி அதிலுள்ள சரக்கானது ஒன்றும் பாக்கியாக நின்றுபோகாமல் இருந்தால் நல்லது. அப்படி ஏதேனும், மீதியிருந்தால் மறுமுறையும் இரண்டு நாள் புதைத்து வைக்க வேண்டும். பிறகு எடுத்து, அந்தத் தண்ணீரில் மற்றொரு பாகத்தைச் சேர்த்து முன்போல் மூன்று நாள் புதைத்தெடுத்து நன்ருய்க் குலுக்கி வைத்த சரக்கு முழுமையும் தண்ணீராகி விட்டால், மற்றொரு பாகத்தையும் சேர்த்து முன்போல் புதைத்து வைத்தெடுக்க வேண்டும். இவ்விதம், எத்தனைப் பாகங்கள் இருக்கின்றனவோ, அத்தனைத் தடவை மீண்டும் மீண்டும் புதைத்து நன்ருய்த் தண்ணீரானபின் பீங்கான் வாலையிலிட்டுப் பாகப்படி திராவக மிறக்கிக் கொள்ளவேண்டும்.

இத்திராவகத்தை (புகைநீர்) அதிகக் காரமுள்ளதாய்ச் செய்து கொள்ளவேண்டுமாயின் முன் அளவு சரக்குகளைக் கல்வத்திலிட்டு இத்திராவகத்தைச் சிறுகச் சிறுக ஊற்றி அரைத்து, அத்திராவகம் முழுவதும் சென்றபின் முன்போல ஓடுகிற நதிக்கரைக்கு அருகில் புதைத்து வைத்தெடுத்து வாலையிலிட்டுத் திராவகமிறக்கிக் கொள்ளலாம். ஆனல், முன்முறை அதிகக் காரமாகவும் திராவகம் அதிக அளவும் இறங்கும். பின்னளவோ அவ்வளவு சிறப்புடைய தாக இருக்காது. ஆகையால், மேற்கூறியபடி ஏழு முறைகள் மீண்டும் மீண்டும் திராவகத்தை இறக்கிக் கொண்டால் கடுங் காரம் உடையதாக இருக்கும்.

இவ்வகைத் திராவகங்கள் பெரும்பான்மையும் சரக்குகளைத் தூய்மை செய்யவும், சுண்ணங்கள் செய்யவும் இன்னும் அனேகச் சிறப்புடைய மருந்து முறைகள் செய்யவும் பயன் படுகின்றன. ஆங்காங்கும் அவ்வவற்றின் பயன்களைப்பற்றி எழுதப்படும்.

## 226. பூநீர்த் திராவகம் (புகைநீர்)

தூய்மைசெய்த பூநீர் 7 படி, கல்லுப்பு 7 பலம் (245 கிராம்), மர உப்பு 7 பலம் (245 கிராம்) (Carbonate of Pottash). இவை யாவற்றையும் தனித்தனியே பொடித்து 7 பங்காகச் செய்து வைத்துக்கொள்க; ஒரு பங்கை 30 படி பாகப்படுத்தின பனிநீரில் அல்லது காடித் தண்ணீரில் போட்டு வாலையிலிட்டுத் தீநீராக (திராவகமாக) இறக்கிக் கொள்ளவும். இந்நீரில் மற்றொரு பாகத்தைச் சேர்த்துக் கரைத்து மறுபடியும் வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவும். இவ்விதம் மேற்கண்ட ஏழு பாகங் களையும் ஒன்றன் பின் ஒன்றுய் ஒவ்வொரு பாகத்தையும் இட்டு 7 தடவைகள் மடக்கி மடக்கி இறக்கிக் கொள்ளவும். இவ்விதம் செய்யப்பட்டதே பூநீர் திராவகமாகும். இதில் எண்ணெய்க் கசிவு முதலிய குற்றங்கள் நீங்கித் தூய்மை பெறும்.

இத்திராவகத்தைப் பற்பம், செந்தூரம் முதலிய முறைகளில் சேர்ப்பதால், விசேடக் குணமுண்டாகும். இதன் முதற்பாகத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற முக்குணநீர், காரசாரநீர், காரதாரநீர், எரிநீர் முதலியவைகளெல்லாம் பூநீர்த் திராவகம் எனப்படு கின்றன. இவற்றின் முறைகள், பயன் யாவும் அங்குச் சொல்லப் பட்டிருக்கின்றன.

## 227. பூநீர்த் திராவகம் (வேறு)

காரமான காடி 13 பங்கு, பாகப்படுத்தின பூநீர் 2 பங்கு. மேற்படி காடியில் பூநீரைக் கரைத்து வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்ளவேண்டும். பிறகு, இந்தத் தீநீரை மாத்திரம் வாலையிலிட்டு மறுபடியும் தீநீரை இறக்கிக் கொள்ளவும். இவ் விதம் முதல் தடவை இறக்கின தீநீரை மட்டும், மடக்கி மடக்கி 7 தடவைகள் திராவகமாக இறக்கிக் கொண்டால், முறையே தரத்திற்குத் தக்கபடி காரம், குணம் முதலியவை சிறப்புடை யனவாக இருக்கும்.

இந்தத் தீநீரால் எல்லாவிதச் சரக்குகளையும் கட்டலாம். நெருப்பிற்கு ஓடும் சரக்குகளையும் நெருப்பிற்கு ஓடாமல் கட்ட லாம். இதன் பாகத்தைத் தெரிந்தவர்கள் வேறு அனேக முறை களையும் செய்து கொள்வார்கள்.

## 228. பூநீர்த் (புகைநீர்) திராவகம் (வேறு)

பாகப்படுத்தின பூநீர் 1 பங்கு, பாகப்படுத்தின பனிநீர் 12 பங்கு. இந்த நீரால் பூநீரைக் கரைத்து, ஓர் இரவு பகல் தெளிய வைத்துப் பிறகு தெளிவை இறுத்து ஒரு பாண்டத்தில் விட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி 12-ல் ஒரு பங்குத் தண்ணீர் சுண்டினவுடன் இறக்கித் தெளிய வைக்கவேண்டும். மறுநாள் தெளிவை இறுத்து அடுப்பேற்றிக் காய்ச்சி அதில் 11-ல் ஒரு பங்கு நீர் சுண்டினவுடன் இறக்கி ஆறவைத்துத் தெளிவை இறுத்துக் கொள்ளவும். இவ் விதம் 7 தடவைகள் காய்ச்சி ஆற வைத்துத் தெளிவை இறுத்து வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் திராவகத்தையே மறுபடியும் வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவும். இவ்விதம் இந்தத் திராவகத்தை மடக்கி மடக்கி 4 தடவைகள்செய்து கொள்ளவேண்டும்.

இத் திராவகமானது அப்பிரேகத்தை நீராக்கவும், சில இரச வாடையுள்ள பொருள்களைக் கட்டவும் பயன்படுகின்றது.

## 229. வெடியுப்புத் திராவகம்

தூய்மைசெய்த அல்லது பாகப்படுத்தின வெடியுப்பு $1\frac{1}{2}$ பங்கு, படிக்காரம் 1 பங்கு. இவ்விரண்டையும் தனித்தனியே பொடித்துப் பிறகு ஒன்றுயச் சேர்த்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகமும் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இதனை அதிகக் காரமுள்ளதாகச் செய்து கொள்ள வேண்டிய தாயின், முன் சரக்கையே ஏழு பங்காக்கி ஒவ்வொரு பங்கின் பின் ஒவ்வொன்ருய்ச் சேர்த்து, மடக்கி மடக்கித் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். மதுமேகம், நீர்க்கட்டு, நீரடைப்பு, மகோதரம், வயிற்றுவலி, குன்மம், மார்புவலி முதலியவை யாவும் குணமாகும்.

## 230. மேற்படி (வேறு)

பாகப்படுத்தின வெடியுப்பு 2 பங்கு, பொரித்த படிக்காரம் 1 பங்கு. இவ்விரண்டையும் தனித்தனியே பொடித்துப் பிறகு இரண்டையும் ஒன்ருய்ச் சேர்த்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். மேற்கூறியபடி பல தடவைகளாக மடக்கி மடக்கிச் செய்து கொள்வோமோ அத்தனைக்கத்தனைக் காரமாகவும் மேலான குணமுள்ளதாகவும் இருக்கும்.

இம் முறையில் வெடியுப்பு 2 பங்கு, பொரித்த படிக்காரம் ½ பங்கு சேர்த்துத் திராவகம் இறக்கிக் கொள்வதும் உண்டு.

**தீரும்நோய்கள் :—** நீர்க்கட்டு, நீரடைப்பு, மகோதரம், மார்பு வலி, வயிற்றுவலி, குன்மம் முதலிய நோய்கள் தீரும், மடக்கி, மடக்கி இறக்கப்பட்ட திராவகமானது கடுங்காரமுடையதாக இருக்கும். ஆகையால், சண்டரசபற்பம், இரசபற்பம் முதலியவை செய்வதற்கு ஏதுவாகும்.

## 231. மேற்படி (வேறு)

பாகப்படுத்தின வெடியுப்பு 100 பலம் (3500 கிராம்), படிக் காரம் 100 பலம் (3500 கிராம்). இவ்விரண்டையும் தனித்தனியே பொடித்துப் பிறகு இரண்டையும் ஒன்ருகச் சேர்த்துக் கழுதையின் சிறுநீரைச் சிறுகச் சிறுகவிட்டு 8 சாமம் நன்கு நெகிழ அம்மியில் வைத்தரைத்துப் பனியில் மூன்று இரவு வைத்து, ஏழு பங்காக்கி, ஒரு பங்கை வாலையிலிட்டு முறைப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். பிறகு இத் திராவகத்தில் மற்ருெரு பங்கைச் சேர்த்து அரைத்து ஒரு நாள் பனியில் வைத்து மறுநாள் வாலையி லிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். பிறகு இத்திராவகத்தில் மற்ருெரு பங்கைச் சேர்த்து அரைத்து ஒரு நாள் பனியில் வைத்து மறுநாள் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதமே ஏழு பங்கை மடக்கி மடக்கித் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இத்திராவகமானது அதிக கடுங்காரம் உடையதாக இருக்கும். இதனை உள்ளுக்குப் பயன்படுத்த வேண்டுமாயின், தண்ணீரில் அல்லது தகுந்த துணை மருந்துடன் உடல்வலிமை, நோய்வலிமை முதலியவற்றிற்கு ஏற்ற விதமாக 1 முதல் 2 துளிகள் கலந்து பருகச் செய்யவேண்டும். மேற்கூறப் பெற்ற நோய்கள் கடினமான தாயினும் குணமாகும். மேலும் இந்தத் திராவகமானது இரச செந்தூரம். துருசுச் செந்தூரம் முதலியவைகள் செய்வதற்குப் பயன்படும்.

## 232. சாரத் திராவகம்

பாகப்படுத்தின நவாச்சாரத்தை ஓர் அனல் பீங்கானில் இட்டு, அந்த எடை சுண்ணத் திராவகத்தை விட்டு வறுத்துப் புகையாமல் சுவற வைக்கவேண்டும். அந்தத் திராவகமெல்லாம் சுவறின பிறகு எடுத்து, மறு தடவையும், அந்த பீங்கானில் நவாச் சாரத்தை போட்டு, அந்த அளவு. சுண்ணத் திராவகத்தைத் தெளித்து வறுத்து, சுவற வைக்கவேண்டும், இவ்விதம் பத்துத் தடவைகள் மடக்கி மடக்கிப் பக்குவம் செய்து எடுத்துச் செயநீர்ப் பாண்டத்தில் போட்டுச் செயநீர்க் குழியில் வைத்து நீராக்கிக் கொள்வதே சாரச் சீவநீராம். அல்லது சாரச் செயநீர் எனப்படும்.

செயநீர்க்குழி இல்லாவிட்டால். குதிரைலத்தி, ஈரமண் முதலியவிடங்களில் வைத்தும் நீராக்கிக் கொள்ளலாம். இந்த நீரால் இரசம், வெள்ளைப் பாடாணம், கெந்தகம், இலிங்கம் முதலியவைகளைக் கட்டலாம்.

கட்டவேண்டிய சரக்கை அப்பிரேகத் தகட்டின் மீது வைத்து மேற்கண்ட திராவகத்தால் 3 சாமம் சுருக்கிடக் கட்டுப்பட்டுப் போகும்.

மேற்கண்ட சாரச் செயநீரை வாலையிலிட்டுத் திராவகமாக வும் இறக்கிக் கொள்ளலாம். அது சாரத் திராவகம் எனப்படும். இது அதிகக் காரமாக இருப்பதுமன்றி, முன்பு கூறப்பெற்ற சரக்குகளைக் கட்டவும் பயன்படும்.

**குறிப்பு :—** இதில் சேர்க்கவேண்டிய சுண்ணத் திராவக மானது மற்ெருரு முறை சொல்லப்பட்டிருக்கிறது. அது செய்ய இயலாவிடின் அடியிற் கண்ட விதமாகவும் செய்து கொள்ளலாம்.

தாளிக்காத கற்சுண்ணும்பு 1 படி. இதனை ஒரு மண் பாண்டத்தில் போட்டு, அதில் 4 படி தண்ணீர் விட்டுச் சற்றுத் தாமதித்து நன்ருய்க் கிளறி, ஒரு நாள் வைத்து மறுநாள்

தெளிவை இறுத்து வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்வதே சுண்ணத் திராவகமாகும். இதனை அதிகக் காரமானதாகச் செய்து கொள்ள வேண்டுமாயின் முன்னிறக்கின திராவகத்தையே மறு படியும் வாலையிலிட்டு இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் எத்தனைத் தடவை வேண்டுமாயினும் செய்துகொள்ளலாம்.

## 233. சொர்ண சாரத் திராவகம்

நாட்டு நவாச்சாரம் 40 பலம் (1400 கிராம்). அன்னபேதி 40 பலம் (1400 கிராம்). இவ்விரண்டையும் தனித்தனியே தூள் செய்து இரண்டையும் ஒன்றுய்க் கலந்து வைத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டு குண்டுச் சட்டிகள் ஒரு சாண் ஆழமுள்ளவைகளாக வும், வாய் சரியாய்ப் பொருந்தும் படியானவைகளாகவும், கொஞ்சமும் சந்தில்லாமல் தேய்க்கப்பட்டவைகளாகவும் இருக்க வேண்டும். மேற்கூறப்பெற்ற மருந்தை ஒரு சட்டியில் போட்டு மறுசட்டியால் மூடி, உளுந்து மாவால் கெட்டியாய் 3 அல்லது 5 சீலை செய்துலர்த்தி அடுப்பேற்றி இரண்டு விரல் கனமுள்ள நான்கு விறகுகளால் விடாமல் நான்கு சாமம் எரிக்கவேண்டும். மேல்சட்டி யில் அது மறையும்படியாக உரத்த ஈரத்துணியையும் போட்டு, ஈரம் உலராமல் நனைத்துக் கொண்டும் வரவேண்டும். இவ்வித மாக நான்கு சாமம் சென்ற பின்பு, எரிப்பை நிறுத்தி, அடுப்புடன் அவ்விதமே வைத்து, மறு நாள் காலையில் சீலையைப் பிரித்துக் கீழ்ச் சட்டியில் ஏதேனும் எஞ்சி நின்றுல் அதையும் சுரண்டி மேற்சட்டி யில் போட்டு முன் கீழ்ச்சட்டியை அப்போது மேலே கவிழ்த்து, முன்போலவே 4 சாமம் எரிக்கவேண்டும். பின்பு அடுப்புடன் விட்டு வைத்து மறுநாள் காலையில் கவசத்தைப் பிரித்துக் கீழ்ச் சட்டியில் ஏதேனும் பாக்கியாய் நின்றுல், அதையும் சுரண்டி மேல் சட்டியில் போட்டு, இந்தக் கீழ்ச் சட்டியை இப்போது மேல் சட்டி யாகக் கவிழ்த்து முன்போலவே சீலை செய்து முன்போலவே எரிக்க வேண்டும். இவ்விதம் கீழ்ச்சட்டி மேல்சட்டியாகவும், மேல்சட்டி கீழ்ச்சட்டியாகவும் மாற்றி மாற்றி 5 தடவைகள் நன்னுன்கு சாம மாக 20 சாமம் எரித்தான பின்பு, பதங்கத்தைச் சுரண்டி எடுத்துப் குப்பியில் பத்திரப்படுத்தவும். இந்தப் பதங்கமானது சிவந்த வண்ணமாக இருக்கவேண்டும். அப்படிச் சிவக்காவிட்டால் 5 தடவைகள் என்னும் எண்ணிக்கையைச் சிவக்கிறவரையில் மேற் கண்ட விதமாக மடக்கி மடக்கிச் செய்யவேண்டும். இவ்வாறு ஆரம்பத்திலிருந்தே ஒவ்வொரு தடவையும் இருபதிருபது பலம் அன்னபேதியையும் சேர்த்து வருவதால் சிறந்த குணம் உண்டாகும்.

பிறகு இளையவர், முதியவர் ஆகியவர்களின் தலைமுடியைச் சீயக்காய்த் தண்ணீரில் ஊறவைத்து வெந்நீர்விட்டு அலம்பித் தூய்மை செய்து உலர்த்திச் சிறிதாகக் கத்தரித்த தூள் 40 பலம் (1400 கிராம்) எடுத்துக்கொள்க.

தலைமுடி, அண்ட ஒட்டுத்தூள், பூநீறு ஆகிய இவை மூன்றையும் சேர்த்து இடித்து, ஓட்டில் லேசாக வெதுப்பி எடுத்து ஒரு பெரிய குப்பியில் இட்டு வாய்க்குக் கல் மூடியிட்டு, ஒரு குழியில் அரைவாசி குதிரை லத்தியைப் போட்டு, அதன்மேல் இந்தக் குப்பியை வைத்து மேலும் குதிரை லத்திகளைப் போட்டு மூடி வைக்கவேண்டும். முன்பு, தூய்மைப்படுத்தின பதங்கத்தையும் மற்றொரு குப்பியிலிட்டு மூடியிட்டு வேறொரு குழியில் அரைவாசி குதிரை லத்திகளைப் போட்டு அதன்மேல் புட்டியை வைத்து மேலும் லத்திகளைப் போட்டு மூடி வைக்கவேண்டும்.

மூன்று வாரங்கள் சென்ற பின்பு முன்கூறிய லத்திகளை நீக்கிப் புதிய லத்திகளைப் போடவேண்டும். பிறகு 6 வாரங்கள் சென்ற பின்பு, இரண்டு வகைகளையும் ஒன்றாய்ச் சேர்த்து வேறொரு புட்டியில் போட்டு, வாய்க்குக் கல் மூடியிட்டு முன்போலவே 3 வாரம் குழியில் வைத்தெடுத்து 3 நாள் ஆறவைத்த பின்பு வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் திராவகமானது சிவந்த நிறமாயிருக்கும், பிறகு இந்தத் திராவகத்தையே மறுபடியும் பீங்கான் வாலையிலிட்டு இரண்டாந் தடவையும் திராவகம் இறக்கி, மூன்றாந் தடவையும் பீங்கான் வாலையிலிட்டு இறக்கிப் பத்திரப்படுத்தவேண்டும்.

இந்தத் திராவகமானது செயரசச் செந்தூரம் செய்யப் பயன்படும். இதன் விபரம் பிறகு எழுதப்படும். இதன் சிறப்பு முறைகள் யாவும் இதன் திறவுகோலில் எழுதப்படும்.

## 224. மேற்படி வேறு

இதன் முதல் பாகத்தில் 77ஆம் முறையில் சொல்லப்பட்டிருக்கும் சாரப்பதங்கத்தைச் செயநீரில் போட்டு, பிறகு செயநீர்க் குழியில் பாகப்படி வைத்து, செயநீராக்கிப் பிறகு வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் இறக்கிக் கொண்ட திராவகத்தையே மறுபடியும் 2 அல்லது 3 தடவைகள் மடக்கி, மடக்கி இறக்கிக் கொள்வதாலும் அதிகக் காரமாகவும் சிறந்த குணமுடையதாகவும் இருக்கும்.

## 235. மேற்படி வேறு

இதன் முன்பாகத்தில் சொல்லப்பட்டிருக்கும் சாரநீரை (பாகப்படி செய்த சாரநீர்) வாலையிலிட்டுத் திராவமாக இறக்கிக் கொள்வதே சாரத்திராவகமாகும்.

## 236. காரசாரத் திராவகம்

கடல் நுரை 40 பலம் (1400 கிராம்) பாகப்படுத்தின நவாச்சாரம் 40 பலம் (1400 கிராம்). இவ்விரண்டையும் தனித்தனியே பொடித்து ஒன்ருய்ச் சேர்த்து 7 பாகமாய்ச் செய்து ஒரு பாகத்தை வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இன்னொரு பாகத்தைக் கல்வத்திலிட்டு இத் திராவகத்தை விட்டரைத்து இரண்டாந் தடவையும் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஏழு பாகத்தையும் மடக்கி மடக்கி 7 தடவை திராவகம் இறக்கிப் பத்திரப்படுத்தவும். இந்தத் திராவகத்தால் எல்லாவிதச் சரக்குகளையும் கட்டலாம்.

## 237 கல்லுப்புத் திராவகம்

கடல்நுரை 20 பங்கு, படிக்காரம் 12 பங்கு, அன்னபேதி 6 பங்கு. இவை எல்லாவற்றையும் தனித்தனியே பொடித்து ஒன்ருய்ச் சேர்த்து 7 பங்காக்கி ஒரு பாகத்தை வாலையிலிட்டு முறைப்படி திராவகம் இறக்கவும். பிறகு மற்ருெரு பாகத்தைக் கல்வத்திலிட்டு முன் இறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கவேண்டும். இவ்விதமே ஏழு பாகத்தையும் ஒன்றன் பின் ஒன்ருய் அப்போதைக்கப்போது இறக்கும் திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டு இறக்கிக் கொள்ளவேண்டும்.

பயன் :— அப்பிரேக வங்கம் 1 பங்கு, வாலை இரசம் 1 பங்கு. இவ்விரண்டையும் கலந்து முன் திராவகத்தை விட்டரைத்து உருட்டி எடுத்து இரும்புக் குகையில் வைத்துக் குகையைக் கரி நெருப்பின்மீது வைத்து, முன் திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டுச் சுருக்கிடவேண்டும். இவ்விதம் 2 அல்லது மூன்று சாமம் செய்யின் இரண்டும் ஒன்ருகிக் கல்லைப் போல இறுகிக் கட்டுப் பட்டுப் போகும். பிறகு விருப்பம் போல் மருத்துவம், வாதம் முதலிய முறைகளில் பயன்படுத்திக் கொள்ளலாம். இதன் சிறப்பான முறைகளைப்பற்றித் திறவுகோலில் எழுதப்படும்.

## 238. கறியுப்புத் திராவகம்

இதன் முதல் பாகத்தில் 183ஆம் முறையில் சொல்லப் பட்டிருக்கும் முறைப்படி (பாகப்படி) செய்த கறியுப்புச் செய நீரை வாலையிலிட்டுத் திராவகமாக இறக்கிக் கொள்வதேயாகும்.

## 239. அன்னபேதித் திராவகம்

அன்னபேதி 4 பலம் (140 கிராம்) எருக்கம் பழுப்புச்சாறு 10 பலம் (350 கிராம்) அன்னபேதியைப் பொடித்து மேற்படி சாற்றில் போட்டு நன்முய்க் கலக்கி ஓர் இரவு பனியில் வைத்து மறுநாள் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இத் திராவகத்துடன் அன்னபேதி 4 பலம் (140 கிராம்), எருக்கம் பழுப்புச்சாறு 10 பலம் (340 கிராம்) இவ்விரண்டையும் முன் போலத் திராவகம் இறக்கிக் கொள்ளவும்.

இத்திராவகமானது தாமிரத்தைத் தூய்மை செய்யவும் தாமிரத்தைச் செந்தூரிக்கவும் பயன்படுகின்றது. இதன் முறை களை இதன் திறவுகோலில் எழுதுவோம்.

## 240. பேதித் திராவகம்

அன்னபேதி 1 பங்கு, கெந்தகம் 1 பங்கு, இவ்விரண்டையும் தனித்தனியே பொடித்து இரண்டையும் ஒன்முய்க் கலந்து 3 பாகமாகச் செய்து பாகப்படி வாலையிலிட்டு மடக்கி மடக்கித் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

பயன் :— பசரிதுத்தம் $3\frac{1}{4}$ வராகன் எடை, பால் துத்தம் $1\frac{5}{8}$ வராகன் எடை. இவ்விரண்டையும் அரைத்து இரும்பு மூசையில் வைத்து மேற்படி திராவகத்தைச் சிறுகச் சிறுக ஊற்றிச் சுருக்கிட வேண்டும். இவ்விதம் 2 அல்லது 3 சாமம் செய்யின் சுண்ண மாகும், இந்தச் சுண்ணமானது வாதம், மருத்துவம் என்னும் இரு முறைகளுக்கும் ஆகும்.

## 241. சுண்ணத் திராவகம்

பாகப்படுத்தின பூநீர் 24 பலம் (840 கிராம்). தண்ணீர் தெளிக்கப்படாத கற்சுண்ணும்பு 12 பலம் (420 கிராம்). இவ் விரண்டையும் பீங்கான் பாண்டத்தில் போட்டு அதில் 4 படி தண்ணீர் விட்டு 3 நாள் ஊற வைக்கவேண்டும். நாள்தோறும் 2 அல்லது 3 தடவை ஒரு மூங்கில் குச்சியால் நன்முய்க் கலக்கி வர வேண்டும். நான்காம் நாள் தெளிவை இறுத்து அளந்து எவ்வளவு

நீர் முன் அளவிற்குக் குறைந்திருக்கிறதோ அவ்வளவு நீரும், அதற்குத் தகுந்த பூநீறும் கற்சுண்ணமும் அதில் சேர்க்கவேண்டும். அதாவது, ஒரு படி தண்ணீர் குறைந்தால் ஒரு படி தண்ணீரும் 6 பலம் பூநீரும் (210 கிராம்), 3 பலம் சுண்ணும்பும் (105 கிராம்), சேர்க்கவேண்டும். இக்கணக்கின் படி முன் தெளிவுடன் சேர்த்து மறுபடியும் மூன்றுநாள் வைத்து முன்போலவே நாள்தோறும் கலக்கி வரவேண்டும். பிறகு நாலாம் நாள் தெளிவை இறுத்து அளந்து முன் கணக்கின்படியே முன் நான்கு படிக்குக் குறைந்த அளவு தண்ணீரையும், அதற்கான பூநீர், சுண்ணும்பு ஆகியவற்றையும் அத் தெளிவுடன் சேர்த்துக் கரைத்து 3 நாள் வைத்து நாள்தோறும் கலக்கி வந்து, பிறகு நான்காம் நாள் தெளிவை இறுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் மூன்று நான்கு தடவைகள் செய்து, அந்தத் தெளிவில் கோழி இறகைத் துவைத்தால் அந்த இறகிலுள்ள முடி உதிர்ந்து விடும். இவ்விதம் ஆகாவிட்டால் மறுபடியும் முன்போலவே ஒன்றிரண்டு தடவைகள் செய்து கொள்ளவேண்டும். இவ்விதம் தயார்ப்படுத்திய நீருக்குக் காரச் செயநீர் எனப்பெயர். இந்த நீரானது கந்தகத்தைத் தூய்மை செய்யவும், அதைக் கட்டுப்படுத்தவும் பயன்படுகிறது.

இத்தத் தெளிவை வாலையிலிட்டுத் தீநீராக இறக்கிக் கொள்வதே சுண்ணத் திராவகமாகும். இத் திராவகமானது பல சரக்குகளைக் கட்டவும், சுண்ணமாக்கவும் பயன்படுத்தப்படுகிறது, முன் சொல்லப்பட்ட சாரத்திராவகத்திலும் சேர்க்கப் பயன்படுகிறது.

**குறிப்பு :—** பூநீருக்குப் பதிலாக அப்பளக்காரத்தை அல்லது மேல்நாட்டு அப்பளக்காரத்தைச் (Washing Soda) சேர்த்துச் செய்வதுமுண்டு. ஆனல், நாட்டுக் காரத்தைக் காட்டிலும் மேல் நாட்டுக் காரமே மேலானதெனத் தெரிந்திருக்கவேண்டும்.

## 242. கந்தகக் கட்டு

இதற்கு அனல் தாங்கும் கண்ணுடிக் கிண்ணமாயின் நன்ரும். இல்லாவிட்டால் பலமான ஒரு பீங்கான் கிண்ணத்தின் அடிப் பாகத்தில், சுண்ணும்பையும், களிமண்ணையும் சமபாகமாகச் சேர்ந்து அரைத்துத் துண்டுச் சீலையில் தடவி, 5 அல்லது 7 கவசம் செய்து உலர்த்தித் தயார்செய்து வைத்துக் கொள்ளவேண்டும். தற்காலத்தில் ஆங்கில மருந்துக் கடையில் உயர்தரமான அனல் பீங்கான்கள் கிடைப்பதால், அதையே வாங்கிக் கொண்டால் மிகவும் நன்மையாம். எவ்விதமாயினும் சரி, ஒருவிதமாகத் தயாரிக்கப்பட்ட மேற்கண்ட கிண்ணத்தில் தேவையான அளவு

நெல்லிக்காய்க் கந்தகத்தை வைத்து, அதன் மேல் நாலங்குலம் நிற்கும்படி மேற்படி கார நீரைவிட்டு, அதனுடன் கொஞ்சம் கறி யுப்பையும் போட்டுக் கரி நெருப்பின்மீது இந்தக் கிண்ணத்தை வைக்க வேண்டியது. இந்த நெருப்பானது அதிக வெண்மை யுடன் வெய்யிலைப்போல் இருக்க வேண்டும். மேலும் அதன் வேகமானது கொதிக்கும்படியான அவ்வளவு வெம்மையான தாகவும் இருக்கலாகாது. கொதி கண்டால், உடன் நெருப்பி லிருந்து எடுத்து விடவேண்டும். இவ்விதம் முறைப்படி சில நாள் கள் செய்து வந்தால் அதிலுள்ள நீரெல்லாம் சுண்டிப்போகும். பிறகு, கெந்தகத்தை எடுத்துத் தண்ணீரில் கழுவித் தூய்மை செய்து கொள்ளவேண்டும். இரண்டாம் தடவையும் முன் போலவே திராவகம் விட்டுச் சிறிதளவு உப்பும் கூடச் சேர்த்துத் திராவகத்தைச் சுவற வைத்துக் கழுவித் தூய்மை செய்து எடுத்துக் கொள்ளவேண்டும். கெந்தகமானது அதிக வெண்மை யாக நெருப்பிற்கு ஓடாதிருக்கும். இதுவே, கெந்தகத்தின் தூய்மையும் கட்டுமாகும். இப்படி ஆகாவிட்டால் முன்போலவே மூன்றாந் தடவையும் கைபாகமாகச் செய்து கொண்டால் அவசியம் கட்டுப்பட்டுப் போகும்.

இவ்விதம் கட்டுப்பட்ட கெந்தகத்தைப் பலவிதத் தொந்தங் கள் ஏற்றக்கூடும். அறிந்தவர்களை அடுத்துத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆயினும் இங்கொரு முறையை மாத்திரம் உதாரண மாய் எழுதுவோம்.

## 243. கந்தக மெழுகு

கட்டின கெந்தகம், இலிங்கம் (இது கட்டினதாயின் நன்றும்), தாமிர வெட்டை ஆகிய இவை வகைக்கு 2 வராகன் எடை (7 கிராம்), பொரித்த வெண்காரம் 1 வராகன் எடை ($3\frac{1}{2}$ கிராம்) இவற்றைக் கல்வத்திலிட்டு அண்டத் தைலத்தைச் சிறுகச் சிறுக ஊற்றி மூன்று நாள் அரைத்துச் சிமிழில் அடைத்து வைத்துக் கொள்ளவும். 3 பங்கு வெள்ளியை உருக்கி, உருக்கு முகத்தில் ஒரு பங்கு மெழுகைக் கொடுக்க உள்ளது போலிருக்கும். பட்டறி வுடையோர் இதன் பாகத்தைத் தெரிந்து சொல்வார்களாகை யால் மற்ற விபரத்தை அவர்களிடம் தெரிந்து கொள்ளவும்.

## 244 அண்டத் திராவகம்

கோழி முட்டைகளின் மஞ்சள் கரு 30. படிக்காரம் 1 பலம் (35 கிராம்), நவாச்சாரம் 1 பலம் (35 கிராம்), நெல்லிக்காய்க் கெந்தகம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), கெட்டித்தேன் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்)

இவை எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு மைபோல அரைத்து வாலேயிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கவும். இந்தத் திராவகமானது சிவந்த நிறமாக இருக்கும். இதனையே 3 தடவைகள் மேற்கூறப் பெற்ற, சரக்குகளுடன் சேர்த்து மடக்கி, மடக்கித் திராவகம் இறக்கிக் கொண்டால் வெள்ளியை மஞ்சள் நிறமாக்கவும், பொன்னின் நிறத்தை அதிகப்படுத்தவும் பயன்படுகிறது.

குறிப்பு ;— இத்தைலத்தை இளம் பிள்ளைவாதம், வாதம் போன்ற நோயாளிகளுக்கு உடலின் மேல் தேய்த்துவர நல்ல பலனைக் கொடுக்கும்.

## 245 தொட்டித் திராவகம்

செப்புத்தொட்டி, நெல்லிக்காய்க் கெந்தகம், நவாச்சாரம் ஆகிய மூன்றும் வகைக்குச்சமபாகம். இவற்றைத் தனித்தனியே பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து அரைத்து ஒரு பீங்கான் பாண்டத்தில் போட்டு, அதன்மேல் இரண்டங்குலம் நிற்கும்படியாகக் காரமான காடியை விட்டு வெய்யிலில் வைத்துக் காடி சுண்டினவுடன் வாலேயிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இரண்டாவது முறையும் முன் தயாரித்து வைத்தது போலச் சரக்குகளைச் சேர்த்தரைத்துக் காடிவிட்டுச் சுவற வைத்துப் பின்பு, முன் இறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலேயிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

மூன்ருவது முறையும் முன் சித்தப்படுத்தின சரக்குகளைச் சேர்த்தரைத்துக் காடிவிட்டுச் சுவற வைத்த பின்பு, இரண்டாம் முறை இறக்கிய திராவகத்தை விட்டரைத்து வாலேயிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தத் திராவகத்தால் இரசம் முதலியவை கட்டுப்படும். மேலும், இதனுல் எல்லாவகை உயிருள்ள பொருள்களேயும் கட்டலாம்.

## 246. சூத பந்தனத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 20 பங்கு. படிக்காரம் 18 பங்கு. கெந்தகம் 2 பங்கு. இவை எல்லாவற்றையும் தனித்தனியே பொடித்துப் பின்பு ஒன்ருய்ச் சேர்த்து 7 பங்கு செய்து ஒரு பங்கை வாலேயிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தத் திராவகத்தை முன் தயார்ப்படுத்தி வைத்திருக்கிற மற்ெருரு பாகத்தில் விட்டுக் கலந்து வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதமே மற்றப் பாகங்களையும் ஒவ்வொரு தடவையும் இறக்கிப் பத்திரப்படுத்தவேண்டும்.

**பயன்:**—தேவையான வாலை இரசத்தை ஒரு பீங்கான் பாண்டத்தில் விட்டு, அந்த இரசம் முழுகும்படியாக மேற்படி திராவகத்தை விட்டு 7 நாட்கள் சென்ற பின்பு எடுக்கக் கட்டுப் படும். மறுபடியும் முன்போலவே செய்ய முழுக்கட்டாகும்.

## 247. மேற்படி (வேறு)

1. இந்துப்பு, 2. வெடியுப்பு, 3. நவாச்சாரம் (Carbonate of Pottash), 4. மரவுப்பு, 5. படிக்காரம். இவை வகைக்குச் சம பாகம். இவை எல்லாவற்றையும் தனித்தனியே பொடித்து முடிவில் எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து 7 பாகமாக்கி ஒன்றன்பின் ஒன்ருய் வாலையிலிட்டு 7 தடவைகள் மீண்டும் மீண்டும் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

**பயன்:**— தேவையான அளவு வாலை இரசத்தைக் கல்வத்தி லிட்டு மேற்படி திராவகத்தை விட்டு நான்கு சாமம் அரைத்து ஒரு சட்டியிலிட்டு மேற்சட்டி மூடிச் சீலைமண் செய்து அடுப்பி லேற்றி 4 சாமம் எரிக்கவேண்டும். பிறகு ஒரு நாள் ஆற வைத்து மறுநாள் எடுக்க இரசமானது பதங்கித்திருக்கும். அந்த இரசத்தை எடுத்து முன்போலவே, முன் கூறிய திராவகத்தை விட்டரைத்து முன்போலவே உருக்கவேண்டும். இதுபோல இரண்டாம் முறை செய்து கொள்க. மூன்ரும் தடவையும் முன்போலவே தயாரித்து இரண்டாம் தடவை இறக்கின திராவகத்தையும் சேர்த்து இறக்கிக் கொள்ளவேண்டும்.

இவ்விதம் முன் மடக்கி இறக்கின திராவகமானது நவாச் சாரம், வெண்காரம், கல்லுப்பு, படிக்காரம் முதலியவைகளைக் கட்டுவதற்குப் பயன்படுகிறது.

மேலும் இதனுடன் இரசிதப் பொடி (வெள்ளிப்பொடி), செந்தூரப்பொடி ஆகிய இவற்றைச் சேர்த்துத் திராவகம் இறக் கிக் கொண்டால் கந்தகம், மனேசிலை, இரசம் ஆகிய இவைகளைக் கட்டப் பயன்படும். அந்தப் பொடியில் வெள்ளியை அல்லது தங்கத்தை உராவித் திராவகத்திலிட்டு முதற் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிற படிக்கார நீரைவிட்டு அரைக்கவேண்டும்.

அந்த நீர் சுவறச் சுவற அரைத்துத் தூளான பின்பு எடுத்துக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும். மேற்கண்ட தேன் திராவகம் 100க்கு 1 பங்கு மேற்படி வெள்ளிப்பொடியை அல்லது தங்கப் பொடியை ஒவ்வொரு தடவையும் சேர்த்துத் திராவகம் இறக்கவேண்டும். மேலும் வெள்ளி வேலைக்கானால் வெள்ளிப் பொடியையும், தங்க வேலைக்கானால் தங்கப் பொடியையும் சேர்க்கவேண்டும். இந்தத் திராவகம் செய்யக்கூடிய பட்டறிவுள்ள வர்கள் உதவி இன்றியமையாதாகையால் அவர்களின் உதவியால் தெரிந்து கொண்டு இறக்க ஆரம்பிக்கவேண்டும். கூர்மையான புத்தியுள்ள அறிவாளிகளுக்கு அவ்வித உதவி ஒரு பொருட்டன்று. இவ்விதம் செய்து வைத்த இரசமானது மேலேறிப் பதங்கிக் காமல் நின்றுவிட்டால் பதமென எடுத்துக் கொள்ளவேண்டும். அல்லது ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் செய்துகொண்டா லும் கட்டுப்பட்டுப்போகும். இந்த இரசமானது கட்டுப்பட்ட தாயினும் திரவ ரூபமாகவே இருக்கும். இதைச் சிந்தூரித்தால் வாதம், மருத்துவம் என்னும் இருவகைக்கும் சிறந்ததாக இருக்கும்.

மேலும், மேற்கூறியபடி கட்டின இரசம், அப்பிரேக நவநீதம், வெள்ளி இம்மூன்றையும் மேற்படி திராவகம் விட்டரைத்துப் புடமிட பற்பமாகும். இதுவும் வாதம், மருத்துவம் என்னும் இருவகைக்கும் ஆகும்.

## 248. தேன் திராவகம்

திறமான கெட்டித்தேன் 48 பலம் (1680 கிராம்). இதனை ஒரு பாண்டத்தில் விட்டு, அதில் சில முள்ளங்கிக் கிழங்குகளைச் சிறு சிறு கீற்றுகளாய்ச் செய்துபோட்டு, ஓர் இரவு வைத்து மறுநாள் காலையில்அந்த முள்ளங்கித் துண்டுகளை எடுத்துவிட்டுத் தேனை மாத்திரம் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இந்தத் திராவகம் வடியும்போது இரண்டு வகைகளாக வரும். ஒன்று வெள்ளையாக இருக்கும். மற்றொன்று சிவந்த நிறமாக இருக்கும். இந்த இரண்டையும் தனித்தனியே வெவ்வேறாய்ப் பிடித்துக்கொண்டு சிவப்பு வண்ணமாக இருப்பதை நெருப்பில் வைத்துச் சற்றுச் சூடு கண்டவுடன் எடுக்க வெண்மை யாகிவிடும். பிறகு இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து வைத்துக் கொள்ளவும்.

இரண்டாம் தடவையும் முன்னளவு தேனைத் தயாரித்தது போலவே செய்து, வாலையிலிட்டு முன் இறக்கிய திராவகத்தையும் சேர்த்துத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

## 249. வண்ணத் திராவகம்

பாகப்படுத்தின நவாச்சாரம் 6 பலம் (210 கிராம்); கெந்தகம் 3 பலம் (105 கிராம்); துருசு, அன்னபேதி, தாளகம் இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்). இவை எல்லாவற்றையும் தூள் செய்து ஏழு சீலைமண் செய்து உலர்த்தப்பட்ட குப்பியிலிட்டு அதன் வாயின் அடியில் துவாரமிட்ட மண் பாத்திரமொன்றை வைத்துக் குப்பி பொருந்தி இருக்கும்படி செய்து, மேல் குப்பியின் வாய்க்கு மூடியிட்டு அடுப்பில் வைத்து மெதுவாக எரித்துப் பாகப் படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

பயன் :— இந்தத் திராவகத்தில் வெள்ளியை உருக்கிச் சாய்க்க, கொஞ்சம் நிறமேறி இருக்கும். இவ்விதமாய் 3 அல்லது 4 தடவைகள் உருக்கிச் சாய்க்கலாம்.

## 250. இரச வெண்ணெய்த் திராவகம்

நெல்லிக்காய்க் கெந்தகம், மேல்நாட்டு நவாச்சாரம், கம்பி வெடியுப்பு, அன்னபேதி இவை நான்கும் வகைக்கு 2 பலம். (70 கிராம்).

செய்முறை:—இந்த நான்கு பொருள்களையும் கல்வத்திலிட்டு 2 மணிநேரம் நன்றாக அரைக்க நைப்புண்டாகும்.

அடிக்கனமுள்ள ஒரு குப்பியின் அடியில் 6 சீலைமண் செய்தும் அதன் மேல்பாகத்தில் இரண்டு சீலைமண் செய்தும் நன்றாய் உலர்த்தித் தயார் செய்து வைத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் தயாரித்து வைத்த குப்பியில் கொள்ளும்படியாகச் சற்று உள்ளாழ்ந்த அடியையுடைய வேறொரு குப்பியைத் தயார் செய்து அதன் உள்ளாழ்ந்திருக்கும் பகுதியில் மத்தியில் துவாரம் வைத்துக் கொள்ளவேண்டும்.

பிறகு முன்பு அரைத்த சரக்குகளைச் சீலைமண் செய்து தயாராய் வைத்திருக்கிற குப்பியில் போட்டு மண் பாண்டத்தில் நான்கு விரல் கனம் மணலைப் போட்டுச் சரக்குப் போட்டிருக்கிற குப்பியை வைத்து, புட்டியின் கழுத்து வரையில் மணலைக் கொட்டித் துவாரமிட்டு வைத்துள்ள குப்பியைப் பொருத்திச் சந்தில்லாமல் செய்து மேல் குப்பியின் வாய்க்கு மூடியிட்டு பத்திரப்படுத்தி அடுப்பின் மீதேற்றித் தீயைச் சிறிதாக எரித்துப் பிறகு அதிகப் படுத்த வேண்டும். சில சமயம் அடுப்பில் எரியும்போது தீப்பற்றிக் கொள்வதும் உண்டு. அப்படிப் பற்றிக்கொண்டால் உடனே அடுப்பிலுள்ள நெருப்பை நீக்கிவிட்டுச் சற்றுநேரம் தாமதித்துப்

புகையை நீக்கிவிட்டு, நெருப்பைப் போட்டு மெதுவாக எரிக்க வேண்டும். இந்தத் திராவகத்துடன் கொஞ்சம் கெந்தகச் சுடர் வெளிப்படும். அதை நீக்கலாகாது. அதுவும் பயன்படுகிறது. இதைத் திரவகக் குப்பியில் விழிப்புடன் பத்திரப்படுத்தவேண்டும்.

அரைப்பலம் வாலை ரசத்தைக் கல்வத்திலிட்டு நாலைந்து துளி திராவகத்தை விட்டு அரைக்கவேண்டும். விட்ட திராவகம் வற்றியவுடன் மறுபடியும் 4 அல்லது 5 துளித் திராவகம் விட்டு அரைக்கவேண்டும். இவ்விதம் 18 சாமம் அரைத்துப் பிறகு குப்பியில் போட்டுக் குப்பியைச் சுற்றிலும் 5 சீலைமண் செய்து உலர்த்தி ஒரு பானையில் 4'' மணலைக் கொட்டி அதன்மேல் குப்பியை வைத்து குப்பியின் வாயை மூடாமல் திறந்து வைத்துக் குப்பியின் கழுத்து வரையிலும் மணலைக் கொட்டிப்பரப்பி அடுப்பின் மீது ஏற்றிச் சிறுதீயாக எரிக்கவேண்டும். அப்படி எரிக்கும்போது குப்பியிலிருந்து புகை எழும்பும். சற்று நேரம் தாமதித்துக் குப்பியின் வாயின்மீது ஓர் ஓட்டுத் துண்டை வைத்துப் பார்க்கவேண்டும். அந்த ஓட்டில் எவ்விதக் கறையும் உண்டாகாது. அப்படி உண்டானுல் அந்த ஓட்டை நீக்கிவிட்டு வாயைத் திறந்து வைத்து எரிக்க வேண்டும். கறை உண்டாகாமல் இருந்தால், அந்தப் குப்பியின் வாய்க்கு மூடியிட்டுச் சீலைமண் செய்து இரண்டு மணி நேரம் மெதுவாக எரித்துத் தீயை நிறுத்திவிடவேண்டும். மணலானது குளிர ஆறினபின் மூடியைத் திறந்து மருந்தை இரும்புச் சலாகையில் சுரண்டி எடுத்துக் கொள்ளவேண்டும். அதில் இரசம் இருக்கும். பின்பு இந்த இரசத்தையும் முன்னே முடித்த மருந்துடன், கல்வத்திலிட்டு முன் திராவகத்தை விட்டு அரைத்துக் கல்வத்திலுள்ள மருந்தானது ஈரம் தட்டும்படியாகக் கொஞ்சம் விட்டு முன்போல் அரைத்துப் பின்பு முன்போலவே குப்பியில் போட்டு முன் மாதிரியே எரிக்கவேண்டும். பிறகு மூன்றும் தடவையும் முன் மாதிரி செய்து முன்மாதிரியே எடுத்துக் கொள்ளவேண்டும். இரசம் எல்லாம் மடிந்து பற்பமாகி இருக்கும். இந்தப் பற்பத்தைத் தூய்மையான வேறு இரசத்தில் கொடுத்துப் பக்குவம் செய்ய இரச வெண்ணெய் ஆகும். இந்த வெண்ணெயைச் சிந்தூரித்தால் மருத்துவம், வாதம் என்னும் இருவகைக்கும் ஆகும். இம் முறைகள் பின் எழுதப்படும்.

## 251. சிங்கமுகத் திராவகம்

கறியுப்பு 4 படி, செங்கல்மாவு 1 படி. இரண்டையும் உரலில் இட்டு நன்ருக இடித்துக் கொள்ளவேண்டும். இரண்டு குண்டுச் சட்டிகளை ஒன்ருேடு ஒன்று பொருந்தும்படியாகவும் சரியாய்

மட்டமாக இருக்கும்படியாகவும் தேய்த்துத் தயாரித்து வைத்துக் கொள்ளவேண்டும். இதைக் காட்டிலும் மேலானது. இதன் முதல் பாகத்தில் சொல்லப்பட்டிருப்பது போன்ற பதங்கப் பாண்டத்தைத் தயாரித்துக் கொள்வதேயாகும்.

பின்பு, முன் தயாரித்து வைத்திருக்கிற செங்கல் உப்புக் கலவையைக் கீழ்ப்பாண்டத்தில் போட்டு அழுத்தி, அதன் நடுவில் ஒரு சிறு பள்ளம் செய்து அந்த குழியில் தூய்மை செய்த இரசம் 8 பலம் (280 கிராம்) விட்டு மேற்சட்டி மூடி சட்டி வாய்க்கு உளுந்துமாவைக் குழைத்துத் தடவப்பட்ட சீலைத்துண்டால் 7 சீலைமண் செய்து, நன்றாய் உலர வைத்து அடுப்பேற்றி 12 சாமம் (36 மணி) பெருந்தீயாக எரிக்கவேண்டும். அடுப்பு எரியும்போது மேற் பாத்திரத்தின்மீது சீலைத்துண்டை நனைத்துப் பல மடிப்புகளாக மடித்துப்போட்டு அதிலுள்ள ஈரமானது உலர்ந்து போகாமல் அதன்மேல் அடிக்கடி ஈரத்தை உண்டாக்கியும் வரவேண்டும். அடுப்பு எரியும் வரையிலும் மேற்கண்டபடி செய்து வரவேண்டும். 12 சாமத்திற்குள் பதங்கம் ஏறிப்போகுமாகையால், எரிப்பை நிறுத்திப் பாண்டத்தை மெதுவாகவும் அசையாமலும் கீழிறக்கி வைத்துச் சூடு ஆறினவுடன் பாண்டத்தைப் பூமியில் கிடக்கும்படி செய்து ஒரு நாள் சென்று குளிர ஆறின பின் கவசத்தை மெதுவாய்ப் பிரித்து மேற்சட்டியில் பிடித்திருக்கும் பதங்கத்தை மயிர் குச்சுவினால் (Brush) அல்லது ஓலைத்துண்டினால் செவ்வையாய்த் துடைத்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட விதம் செய்தெடுத்த *இரசப்பதங்கம், வெடியுப்பு வகைக்குப் பத்து பலம் (350 கிராம்). சீனக்காரம் 25 பலம் (875 கிராம்). இம்மூன்றையும் தனித்தனியே பொடி செய்து பிறகு எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து நன்றாய்க் கலந்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். திராவகம் இறக்கும்போது தொடக்கத்தில் வரும் நீரைத் தனியே நீக்கிவிடவேண்டும். திராவகம் இறக்கத் தொடங்கும்போதும், திராவகம் இறக்கும் போதும், திராவகம் இறக்கி முடிந்த பின்பும் அவரவர்கள் வழிபடும் தெய்வத்தை அல்லது பெரியோர்களைத் தியானம் செய்து இறக்கவேண்டும். திராவகம் இறக்கும் இடமும், அங்குள்ளவர்களும் மனம், வாக்கு, காயம் முதலியவைகளால் தூய்மையாக இருக்கவேண்டும். மேலும் திராவகம் இறக்கும் போது பரிமளப் பொருள்களும் வைத்திருக்கவேண்டும்.

---

* முதல் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிற இரசப்பதங்க முறைகளுள் எதையேனும் ஒரு வகையையும் செய்து பயன்படுத்திக் கொள்ளலாம்.

பயன் :—இந்தச் சிங்கமுகத் திராவகமானது பலவகைச் செந்தூரங்கள், பற்பங்கள் முதலியவை செய்ய பயன்படுகிறது. இதன் முறைகள் ஆங்காங்கே எழுதப்படுமாயினும் எடுத்துக் காட்டாக இரண்டொரு பாகங்களை எழுதுவோம்.

## 252. வீர இரசச் செந்தூரம்

வீரம் 2 பலம் (70 கிராம்); தண்டவாள அரப்பொடி 2 பலம் (70 கிராம்). இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு அரைக்க இரசம் கக்கும். இவ்விதம் எடுக்கப்பட்ட 4 பலம் இரசத்தை மேற்கூறிய முறைப்படி பதங்கித்துக் கொள்ளவும். இப் பதங்கத்தைக் கல்வத்திலிட்டுச் சிங்கமுகத் திராவகம் விட்டு ஒரு சாமம் அரைத்துப் பிறகு அனல் பீங்கானை அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து மேற்படி சிங்கமுகத் திராவகத்தையே தெளித்துத் தீய்ந்து போகாமல் இரண்டு சாமம் வறுத்தெடுத்து, ஏழு சீலைமண் செய்து உலர்த்தப்பட்ட காசிக் குப்பியில் அரைப்பாகம் நிரப்பி வாய்க்கு மாக்கல் மூடியிட்டு நன்ருக உலர்த்திக் கொள்க. ஒரு சட்டியில் நான்கு விரலளவு மணலைக் கொட்டி அதன்மேல் முன் தயாரித்து வைத்திருக்கிற குப்பியை வைத்துக் குப்பி மறையும்படியாக மணலைக் கொட்டிப் பானை வாயைச் சாணக்கியால் மூடிச் சீலைமண் செய்து அடுப்பேற்றித் தீபம். கமலம் பெருந்தீ என்ற முத்தீயும் முறையே இரண்டிரண்டு சாமமாய்க் கூடிய 6 சாமமெரித்து ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் குப்பியின் மூடியை நீக்கிப் குப்பிக் குள்ளிருக்கும் மருந்தை இரும்புச் சலாகையால் சுரண்டி மண் முதலியவை விழாதபடி மிக விழிப்போடு எடுத்துப் பளிங்கு மூடியுள்ள குப்பியில் எடுத்து வைக்கவேண்டும். இந்தச் செந்தூரமானது அதிகம் சிவந்த வண்ணமாயிராமல் பவளத்தைப் போன்ற சிவந்த வண்ணமாயிருக்கும். இஃது எல்லா நோய்களுக்குமாகும். ஆனல், நோய்வலிமை, உடல்வலிமை, உடலியல்பு, காலம் முதலியவைகளைக் கண்டு, ஒவ்வொன்றிற்கும் தக்கதாகவும், ஒவ்வொரு நோய்க்கும் தக்க துணைமருந்துகளில் கொடுக்க வேண்டும். ஆகையால், பல்வேறு மருத்துவ நூல் பயிற்சியும், பல்லாண்டுப் பழக்கமும் உள்ள பரம்பரை மருத்துவர்களுக்கு இந்தச் செந்தூரமானது வச்சிராயுதம் போன்றது. அவ்வாறன்றி, சாமியார் மருத்துவம், சந்நியாசி மருத்துவம், விளம்பர மருத்துவம், கற்றறி மோழை மருத்துவம். பரம்பரைப் பெயர் மருத்துவம், வியாபாரி மருத்துவம், வயிற்றுப்பாட்டு மருத்துவம், வேளைச்சோற்று மருத்துவம் ஆகிய பாமர மருத்துவர்கள் இவ்வரிய செந்தூரத்தை வைத்துப் பயன்படுத்தத் தக்கதன்று. ஏனெனில், இவர்கள் · இதை எச்சமயத்தில்,எவ்விதம் பயன்படுத்த

வேண்டுமென்னும் நுட்பத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ளக் கூடாதாகையால், இம் மருந்தின் பெருமை குன்றி, அருமைமங்கி குறைந்து இழிவடைந்து போகுமென்பதே முக்கியக் காரண மாகும். இன்னம். இவ்வரிய செந்தூரமானது. வாதத்திற்கும் ஆகுமாகையால், அம்முறைகளை அறிந்த பட்டறிவு உள்ளவர் களிடம் தொண்டு செய்து கண்டு கொள்ளவும்.

## 253. இராசமுக திராவகம்

வீரம் 2 பலம் (70 கிராம்), தண்டவாள அரப்பொடி 5 பலம் (70 கிராம்). இவ்விரண்டையும் கல்வத்தில் சேர்த்தரைக்க இரசம் வெளிப்படும். இவ்விதம் எடுத்த வீரரசம் 4 பலம் (140 கிராம்). இதனைச் சிங்கமுகத் திராவகப் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி பதங்கித்துக் கொள்ளவேண்டும். பின்பு, இந்தப் பதங்கம் 5 பலம் (175 கிராம்); வெடியுப்பு 10 பலம் (350 கிராம்); சீனக்காரம் 25 பலம் (875 கிராம்). இம் மூன்றையும் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து கல்வத்தி லிட்டு மேற்படி சிங்கமுகத் திராவகத்தை விட்டு 2 சாமம் (6 மணி) அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இதற்கே இராசமுகத் திராவகமென்று பெயர். இது எல்லா மருந்துப் பொருள்களையும் கட்டுவதற்குப் பயன்படும்.

மறுபடியும் முன் தயாரித்து வைத்தது போல வீரரசப் பதங்கம் முதலிய சரக்குகளை மேற் சொன்ன அளவெடுத்து முன் கூறிய இராசமுகத் திராவகத்தை விட்டு 2 சாமமரைத்து வாலையி லிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவும். இதற்கு இராசமுகத் திராவகமெனப் பெயர். இது முன்னதைப் பார்க்கிலும் அதிகக் காரமாயிருக்கும். இஃது எல்லாவித மருந்துப் பொருள்களையும் கட்டப் பயன்படும்.

## 254. மடக்குத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 10 பலம் (350 கிராம்); சீனக் காரம் 25 பலம் (875 கிராம்). இவ்விரண்டையும் தனித்தனியே பொடித்துப் பின் இரண்டையும் சேர்த்து நன்ருய்க் கலந்து வாலையி லிட்டுப் பாகப்படி திராவகமிறக்கிக் கொள்ளவேண்டும். மறுபடி யும் முன்போலவே முன் சரக்குகளை முன்னளவே தயாரித்து முதல் முறை இறக்கின திராவகத்தை எல்லாம் வற்றவற்ற விட்டரைத்து வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொண்டு மூன்ரும் முறையும்

முன்போலவே சரக்குகளைத் தயார்ப்படுத்தி இரண்டாம் தடவை இறக்கின திராவகத்தை எல்லாம் வற்றவற்ற விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். நான்காம் முறையும் முன்போலவே சரக்குகளைத் தயாரித்து மூன்றுந் தடவை இறக்கின திராவகத்தையெல்லாம் வற்றவற்ற விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும். இவ்விதம் ஏழு தடவைகள் முதல் முறையைப் போலவே இரண்டு சரக்குகளை ஒவ்வொரு தடவையும் சேர்த்து ஒவ்வொரு தடவையும் இறக்கும் திராவகத்தையும் விட்டரைத்து மடக்கி மடக்கி இறக்கும் திராவகமே மடக்குத் திராவகமெனப்படுகிறது.

இந்தத் திராவகமானது பலவகைச் சரக்குகளைக் கட்டவும், சண்டரச பற்பஞ் செய்யவும் உதவுகிறது.

## 255. திரிமூர்த்தித் திராவகம்

முன் சொல்லப்பட்டிருக்கிற சிங்கமுகத் திராவகம், இராசமுகத் திராவகம், மடக்குத் திராவகம் என்ற மூன்று வகைகளையும் சமபாகமாய்ச் சேர்த்து வாலையிலிட்டுத் திராவகமிறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் இறக்கப்பட்ட திராவகத்திற்குப் பிரம்மா, விட்டுணு, உருத்திரன் என்று மூன்று பெயர்களையும் சேர்த்து திரிமூர்த்தித் திராவகமெனப்படுகிறது.

இந்தத் திரிமூர்த்தித் திராவகமும் பற்பல வேலைகளுக்குப் பயன்படுகிறது. சரக்குகளைக் கட்டவும், சரக்குகளைப் பற்பம் செய்யவும் பயன்படுகிறது.

## 256. திருவருள் திராவகம்

மேற்சொல்லப்பட்ட திரிமூர்த்தித் திராவகத்தை வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். பின்பு இந்தத் திராவகத்தையே இரண்டாம் தடவையும் வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஒவ்வொரு தடவையும் இறக்கும் திராவகத்தையே மீண்டும் மீண்டும் 5 முறையில் இறக்கப்பட்டதே திருவருள் (பெற்ற) திராவகமாகும். இதனைச் சாதாரணமான குப்பியில் வைத்தால் அது வெடித்துப் போகுமாகையால், இதனை அரக்குக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இந்தத் திருவருள் (பெற்ற) திராவகத்தை நவலோகத்தின் மீது தடவிப் பக்குவப்படுத்த பற்பமாகும்.

## 257. நவலோகத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 10 பலம் (350 கிராம்); சீனக் காரம் 35 பலம் (1225 கிராம்); அன்னபேதி, பாகப்படுத்தின பூநீறு, *நீலன், சுடர்க்கொடியோன், வீரம், அரசன், தேவி இவை வகைக்கு ஒரு பலம்.

செய்முறை :— இவற்றுள் அரசன், தேவி இரண்டையும் நன்ருகக் கறுக்கும் வரை அரைத்துக்கொள்க. மற்றவகை ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு எல்லா வற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து நன்ருய் 2 சாமம் அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ளவெண்டும்.

இந்தத் திராவகத்தால் கட்டவேண்டிய சரக்கை 1 முதல் 2 சாமம் சுருக்கிடக் கட்டுப்பட்டுப் போகும்.

முன்சொன்ன சரக்குகளை முன் அளவே சேர்த்து முன் இறக்கின திராவகத்தை வார்த்தரைத்து வாலையிலிட்டுப் பாகப் படி திராவகம் இறக்கிக் கொள்ளவும். இவ்விதம் ஒவ்வொரு தடவையும் இறக்கும் திராவகத்தை விட்டரைத்து மீண்டும் மீண்டும் 3, 5, 7 முறை திராவகம் இறக்கிக்கொண்டால் மடக் கிற்குத் தக்கபடி திறமாயிருக்கும்.

## 258. அறுவகைத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 10 பலம் (350 கிராம்); படிக் காரம் 8 பலம் (280 கிராம்); துருசு, நவாச்சாரம், கறியுப்பு, வெண்காரம் இவை வகைக்கு ஒரு பலம் (35 கிராம்). எல்லா வற்றையும் நைய மைபோல் பொடித்து, வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இரண்டாம் தடவையும் முன் சரக்குகளை முன்னளவே நிறுத்தெடுத்து முன் இறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் 3, 5, அல்லது 7 தடவைகள் ஒவ்வொரு தடவையும் முன்கண்ட சரக்குகளை முன்னளவே எடுத்து செய்ய, ஒவ்வொரு தடவை இறக்கப்படும் திராவகத்தை விட்டரைத்து மீண்டும் மீண்டும் திராவகம் இறக்கிக் கொள்ளவும். இவ்விதம் இறக்கப்பட்ட திராவகமானது அதிகக் காரமாக இருப்பதுடன் பல சரக்குகளைக் கட்டப் பயன்படும்.

---

* நீலன் = துருசு ; சுடர்க்கொடியோன் = சூடன் = அல்லது தீப கற்பூரம்; அரசன் = இரசம் ; தேவி = கந்தகம்.

இந்தத் திராவகம் 10 பலத்திற்கு, இரசகற்பூரம், வீரம் இவை வகைக்கு ஒவ்வொரு பலம் பொடித்துப்போட்டு 20 நாள் கடும் வெய்யிலில் வைத்துப் பின்பு பயன்படுத்தினுல், அதிகக் குணத்தைக் கொடுக்கும். சிலர் திராவகம் இறக்கும்போதே மேற்படி இரண்டு சரக்குகளேயும் வாலேயிலிட்டுத் திராவகமாக இறக்கிக் கொள்வதுமுண்டு.

## 259 இரச செந்தூரத் திராவகம்

அன்னபேதி 28 பலம் (980 கிராம்); பாகப்படுத்தின வெடியுப்பு $6\frac{1}{2}$ பலம் ($227\frac{1}{2}$ கிராம்); பொரித்த துருசு $3\frac{1}{4}$ பலம் ($113\frac{3}{4}$ கிராம்); பொரித்த படிக்காரம் $16\frac{1}{4}$ வராகனெடை ($48\frac{3}{4}$ கிராம்).

**செய்முறை :** ஒரு பாத்திரத்தில் அன்னபேதியைப் போட்டு அது முழுகும்படியாகச் சிறு பிள்ளேகளின் சிறுநீரைவிட்டு மூன்று நாள் வைத்து நாலாம் நாள் அடுப்பேற்றிச் சிறு தீயாய் எரித்து, அடிபிடிக்காமல் விழிப்போடு சிறுநீரைச் சுண்டவைத்து ஈரமில்லாமல் செய்து கொள்ளவேண்டும். பின்பு எல்லாச் சரக்குகளேயும் ஒன்ருய்ச் சேர்த்தரைத்து வாலேயிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இதனேயே அதிகக் காரமானதாகச் செய்து கொள்ள வேண்டுமாயின், முன்கூறிய சரக்குகளே முன் அளவே எடுத்து முன் இறக்கின திராவகத்தை எல்லாம் சிறுகச் சிறுக விட்டரைத்து வாலேயிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவும். இவ்விதம் 3, 5, அல்லது 7 தடவைகள் முன்கூறிய சரக்குகளே, முன் அளவே எடுத்து ஒவ்வொரு தடவையும் இறக்கப்படும் திராவகத்தை விட்டரைத்து வாலேயிலிட்டுப் பாகப்படி மீண்டும் மீண்டும் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தத் திராவகத்தை விட்டு, இரசத்தை அரைத்துச் சட்டியில் வைத்து மேற்சட்டிமூடி சந்தில்லாமல் சீலேமண் செய்து 4 சாமம் (12 மணி) எரிக்கவேண்டும். பின்பு எடுத்து முன்கூறிய திராவகத்தை முன்போலவே விட்டரைத்துச் சட்டியில் வைத்து எரிக்கவேண்டும். இவ்விதம், செந்தூரமாகிற வரையில் மீண்டும் மீண்டும் அரைத்தும் மீண்டும் மீண்டும் எரித்தும் வரவேண்டும்.

இவ்விதம், செய்யப்பட்ட இரச செந்தூரமானது எல்லா நோய்களுக்கும் பயன்படும். இதன் மேன்மை தெரிந்தவர்கள் இதனுல் வேறு அனேக பாகங்களும் செய்து கொள்வார்கள்.

## 260. மேற்படி வேறு

அன்னபேதி, படிக்காரம், வெடியுப்பு, கறியுப்பு, துருசு ஆகிய இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்). இவை எல்லாவற்றையும் தொடக்கத்தில் தனித்தனியாகப் பொடித்துப் பின் எல்லா வற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவும். இரண்டாந்தடவையும் முன் கண்ட சரக்குகளையே முன்னளவே எடுத்து முன்னிறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம், எத்தனை மடக்குகள் வேண்டுமோ அத்தனை மடக்குகள் முன்கூறிய சரக்குகளை முன் அளவே எடுத்து ஒவ்வொரு தடவையும் இறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும். மடக்கிற்குத் தகுந்தாற் போலவே காரம், குணம் முதலியவைகளுமிருக்கும்.

**பயன்படுத்தல் :—** மேற்கண்ட பாகத்திற் சொல்லி இருக் கின்றபடி செய்யின் இரசமானது செந்தூரமாகும்.

## 261. தேவித் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 40 பலம் (1400 கிராம்); படிக் காரம் 20 பலம் (700 கிராம்); பாகப்படுத்தின பூநீர், கந்தகம் இவையிரண்டும் வகைக்கு 10 பலம் (350 கிராம்); கல்லுப்பு 5பலம் (175 கிராம்).

**செய்முறை :—** தொடக்கத்தில் பூநீரையும் கந்தகத்தையும் கல்வத்திலிட்டு 4 சாமமரைத்து 3 இரவுகள் பனியில் வைத்தெடுத் துக் கொள்க. பின்பு, மற்ற பொருள்கள் ஒவ்வொன்றையும் தனித் தனியாகப் பொடித்து, முன் தயாரித்து வைத்திருக்கிற கந்தக யோகத்துடன் சேர்த்து நன்ருய்க் கலந்து 3 நாள்கள் வெய்யிலில் வைத்து 4 ஆம் நாள் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகமிறக்கிக் கொள்க. அவசியமானல் முன்கூறிய சரக்குகளை முன்னளவே எடுத்து முன்னிறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையி லிட்டுத் திராவகம் இறத்கிக் கொள்ளவும்.

**பயன் :—** இதனல் சங்கு, துருசு முதலியவைகளைப் பற்ப மாக்கலாம்.

## 262. நரசிங்கமுகத் திராவகம்

வெடியுப்பு 20 பலம் (700 கிராம்); படிக்காரம் 10 பலம் (350 கிராம்). முதற் பாகத்திற் சொல்லியிருக்கும் முறைகளி லொன்றின்படி செய்த கந்தகப் பதங்கம் 7 பலம் (245 கிராம்);

கல்லுப்பு, அண்டக்கல் இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்); இரச கற்பூரம், நாயுருவியுப்பு இவை வகைக்கு 3 பலம் (105 கிராம்); பாகப்படுத்தின பூநீர், வெள்ளைப் பாடாணம் இவை வகைக்கு 2 பலம் (70 கிராம்); துருசு, நவாச்சாரம் இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்).

செய்முறை :— இவற்றையும் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து மறுபடியும் அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்க. மறுபடியும் முன்போலவே 'எல்லாச் சரக்குகளையும் முன்கூறிய எடையே எடுத்து முன்னிறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையி லிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்க.

இந்தத் திராவகத்தால் எல்லா உலோகங்களையும் நீற்றலாம்.

## 263. மார்த்தாண்டத் திராவகம்

கோழிமுட்டை மஞ்சட்கரு 50 பலம் (1750 கிராம்); நவச் சாரத் தூள் 25 பலம் (875 கிராம்). இவ்விரண்டையும் ஒரு பாண்டத்தில் போட்டு மூங்கிற் குச்சி மத்தினுல் அல்லது வேறு கருவியால் நன்ருய்க் கலந்து, ஒன்ருய்க் கலந்தபின் வேருெரு பீங்கான் தாழியில் (ஜாடி) இட்டு வாய்க்குச் சாணக்கி மூடி, சீலைமண் செய்து இப்பாண்டத்தின் நான்கு மடங்கு சதுரக் குழி தோண்டி அதில் மூன்றிலொரு பங்கு குதிரையின் புதிய லத்திகளை நிறைத்து முன் தயாரித்து வைத்துள்ள தாழியை (ஜாடியை) வைத்து, அதன்மேலும் குதிரையின் புதிய லத்திகளைப் போட்டு நிறைத்து வைத்து ஒரு வாரஞ் சென்ற பின் எடுக்க எல்லாம் நீராகி இருக்கும். அப்படி நீராகாமல் ஏதேனும் பாக்கி இருந்தால், மறுபடியும் சமயத்திற்குத் தகுந்தபடி 4 அல்லது 5 நாள்கள் வைத்தெடுக்க தூயநீராக இருக்கும். பின்பு வாலையி லிட்டுத் திராவகமாக இறக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தத் திராவகமானது பல மருந்துப் பொருள்களைக் கட்ட வும், வேறு அனேக வேலைகளுக்கும் பயன்படுகின்றபடியால், அம்முறைகள் ஆங்காங்கு எழுதப்படுமாயினும் இங்கும் எடுத்துக் காட்டாக ஒரு பாகத்தை எழுதுவோம்.

## 264. இலிங்கக்கட்டு

உலாந்தா இலிங்கம் 1 பலம் (35 கிராம்). இஃது ஒரே கட்டியாகவும் நான்கு பக்கங்களும் சமமானதாகவும் இருக்க வேண்டும். இக்கட்டியானது ஒரு பலத்திற்குச் சற்று முன்

பின்னுக இருப்பினும் பாதகமில்லை, இக்கட்டியைக் கோழி முட்டையின் வெள்ளைக் கருவில் புரட்டிப் பின்பு, உடனே தாமிர அரப்பொடியில் நன்ருகப் புரட்டவேண்டும். இந்தத் தாமிரப் பொடியானது இலிங்கக் கட்டியின்மீது எங்கும் சமமாய் நன்ருய்ப் பிடிக்கும்படி பக்குவமாகப் புரட்டவேண்டும். பின்பு இதனை நல்ல வெய்யிலில் நன்ருய் உலர்த்தவேண்டும். ஈரப்பசை கொஞ்சமும் இல்லாமல் முற்றும் உலர்ந்தபின்பு, மறுபடியும் இக் கட்டியைக் கோழிமுட்டையின் வெள்ளைக் கருவில் இரண்டாம் தடவையும் நன்ருய்ப் புரட்டி, உடனே தாமிர அரப்பொடியில் புரட்டவேண்டும். இந்தத் தடவையும் கட்டியின் நாலாப்பக்கமும் சமமாகப் பொடி ஒட்டி இருக்கிறதா என நன்கு பார்த்து, நன்ருய் ஒட்டாத இடத்தில் கொஞ்சம் வெள்ளைக் கருவைத் தடவித் தாமிரப்பொடியில் புரட்டி, வெய்யிலில் உலர்த்த வேண்டும். இவ்விதம், பத்துத் தடவைகள் ஒவ்வொரு தடவையும் முட்டை வெள்ளைக் கருவில் புரட்டிப் பின்பு தாமிரப் பொடியில் புரட்டிக் காயவைத்து வரவேண்டும். ஒவ்வொரு தடவையும் முட்டைக்கரு, கட்டி முழுவதும் பட்டிருக்கிறதா எனவும், கட்டி முழுவதும் சமபாகமாய்த் தாமிரப்பொடி பிடித்திருக்கிறதா எனவும், நன்ருகப் பார்த்து வருவதுடன் ஒவ்வொரு தடவையும் நன்ருய் உலர்த்தப்படவும் வேண்டும். இவ்விதம், முறையாகவும் கைப் பக்குவமாகவும் பத்துத் தடவைகள் செய்தான பின்பு, கட்டியின் மீது ஒரு சீலைமண் செய்து கொஞ்சமும் ஈரமில்லாமல் முற்றும் உலர்ந்தபின், வேருெரு மண்சீலை செய்து உலர்த்தவேண்டும். இவ்விதம், ஒன்றன்பின் ஒன்ருக ஐந்து சீலைமண் செய்து உலர்த்திக் கொள்ளவேண்டும். இந்தச் சீலைமண் செய்வதிலும் நிதானமாய் அவசரப்படாமல் முறைப்படி செய்து கொள்ளவேண்டும். பின்பு, இக்கவசத்தைக் குக்குடப் புடமிடவேண்டும். அதாவது, இக் கவசத்தின் 4 முதல் 6 எடை விராட்டியில் புடம் போடவேண்டும். புடமானது, குளிர ஆறினபின்பு கவசத்தை எல்லாம் நீக்கிவிட்டு இலிங்கக் கட்டியை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும். இஃது ஒரு தடவையாகும்.

இரண்டாம் தடவையும் இந்த இலிங்கக் கட்டியை முட்டைக் கருவில் துவைத்துப் பின்பு தாமிரப் பொடியில் முன்போலவே புரட்டி முன்கூறிய மாதிரியே உலர்த்திக்கொள்ளவேண்டும். இவ்விதமே பத்துத் தடவைகள் செய்தான பின்பு, முன்போலவே ஐந்து சீலைமண் ஒன்றன்பின் ஒன்ருய்ச் செய்து முன்போலவே பக்குவமாய்த் தயாரித்து முன்போலவே குக்குடப் புடமும் போட்டுக் கவசங்களை நீக்கி இலிங்கக் கட்டியை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, மூன்றும் தடவையும் முன்போலப் பத்துத் தடவைகள் முட்டைக் கருவிலும், தாமிரப்பொடியிலும் ஒன்றன்பின் ஒன்றுய் முறையே வைத்துப் புரட்டியும் உலர்த்தியும் முன் போலவே சீலைமண்ணும் செய்து குக்குடப் புடமும் போட்டுக் கவசங்களை நீக்கி இலிங்கக் கட்டியை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட விதமாக மூன்று தடவைகள் கைபாகமாகச் செய்யின் சித்தர் அருளால் இலிங்கமானது முழுக்கட்டாகிவிடும்.

பின்பு. இந்த இலிங்கக்கட்டியைக் கரிநெருப்பில் வாட்டி இளஞ்சூடு கண்டவுடன் முட்டை வெள்ளைக் கருவில் போட்டு ஆற வைக்கவேண்டும், பின்பு, அதையெடுத்து மறுபடியும் கரி நெருப்பில் வாட்டி இளஞ்சூடு கண்டவுடன் முட்டை வெள்ளைக் கருவில் போடவேண்டும். இவ்விதம், 12 தடவைகள் செய்து கொள்ளவேண்டும்.

இதன்பின்பு, இந்த இலிங்கக் கட்டியைப் பீங்கான் கல்வத்தில் இட்டுப் பொடித்து மேற்படி மார்த்தாண்டத் திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமம் (3 மணி) அரைத்து, வில்லைதட்டி அனல் தாங்கும் பீங்கானிலிட்டு அடுப்பேற்றி மிதமான தீயாக எரித்து முன்கூறிய மார்த்தாண்டத் திராவகத்தையே சிறுகச் சிறுக விட்டுச் சுருக்குக் கொடுக்கவேண்டும். அல்லது, வறுத்தெடுக்க வேண்டும். இவ்விதம் 3 அல்லது நான்கு தடவைகள் செய்து, பத்துப் பங்கு மெல்லிய வெள்ளித் தகட்டை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி முன்சொன்ன மருந்தில் ஒரு பங்கை எடுத்து அந்த தகட்டின்மீது போட்டால், அத்தகடு முழுவதும் ஊடுருவிப் பாய்ந்துத் தகட்டில் வண்ணமுண்டாக வேண்டும். அப்படி வண்ணமுண்டாஞல் அதுவே பதமாம். அவ்வாறு வண்ண முண்டாகா விட்டால், முன்போலவே பொடித்து மேற்படி திராவகம் விட்டரைத்து வில்லைதட்டி முன்போலவே மேற்படி திராவகத்தில் 4 சாமம் சுருக்கிடவேண்டும். அல்லது வறுத்தெடுக்க வேண்டும். எத்தனைத் தடவையாஞலும் வண்ணம் (நிறம்) உண்டாகிற வரையில் மேற்கண்டபடி பாகப்படுத்த வேண்டும். இது வாய்ப்புள்ளவர்களுக்குத்தான் கிட்டுமாகையால், அத்தகைய வர்கள் முயற்சி செய்து பார்க்கலாம்.

## 265. துருசுக்கட்டுத் தொந்தம்

துருசு 20 வராகன் எடை (70 கிராம்), திறமான தேன் 10 வராகன் எடை (35 கிராம்); முன்னர்த் துருசைக் கல்வத்திற் பொடித்து வேருெரு மண்பாண்டத்தில் இட்டு முன்கூறிய தேனை

விட்டுக் குழைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்து, ஈரப்பசையற்றுப் போகிறவரையில் சுண்ட வைக்கவேண்டும். ஈரப்பசை நீங்கிவிட்டால், அதில் வெள்ளைப் புள்ளிகள், அதாவது வெள்ளைப் பொடிகள் காணப்படும். அதுவே பதமென எடுத்துக் கல்வத்தி விட்டு மறுபடியும் அரைத்து, தூயநீர் (சுத்தசலம்) விட்டுவிட்டுக் கழுவ, அதிலுள்ள கருமையெல்லாம் நீங்கித் தூய வெண்மையாகி விடும். பின்பு ஈரமில்லர்மலுலர்த்தி இதற்குச் சமனெடை முன் புடம் போட்டெடுத்த இலிங்கக் கட்டுகளைச் சேர்த்துப் பொடித்து முன் மார்த்தாண்டத் திராவகத்தை விட்டு, இரண்டொரு சாமம் அரைத்துப் பின்பு வில்லை தட்டி அனல் தாங்கும் பீங்கானில் வைத்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து, முன் திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டுச் சுருக்கிடவேண்டும். அல்லது, வறுத்தெடுக்க வேண்டும். இவ்விதம். 4 சாமம் (12 மணிநேரம்) சுருக்கிட்டால் இரண்டுஞ் சேர்ந்து கட்டுப்பட்டுப்போகும். இவ்விதம், கட்டுப்பட்டதற்குச் சோதனையாவது, பத்துப்பங்கு மெல்லிய வெள்ளித் தகட்டை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி, ஒரு பங்கு மேற்படி துரிசு இலிங்கக் கட்டுதனைத் தட்டிப்போட்டு முழுவதும் ஊடுருவிப் பாய்ந்து நிறம் கொடுப்பதேயாகும். அப்படி நிறங் கொடுக்கா விட்டால் அம்மருந்தை மறுபடியும் பொடித்து முன்கூறிய திராவகம் விட்டு ஒரு சாமம் அரைத்து வில்லை தட்டி முன்போலவே சட்டியில் வைத்து முன்கூறிய திராவகத்தால் சுருக்கிடவேண்டும். இவ்விதமே மேற்படி தகட்டில் நிறமேற்றும் சத்து உண்டாகிற வரையில் முன்மாதிரியே பாகப்படுத்திக் கொள்ளவேண்டும்.

**குறிப்பு :—**மேற்கண்ட மூன்று முறைகளும் நம் பெரியோர்களின் சொந்தக் குறிப்புகளில் குழூஉக்குறி மொழியாய் எழுதப் பட்டவைகள். அம்முறைகள் எழுதப்பட்டிருந்த தன்மையை உய்த்துணருங்கால், இவை மிக அருமையானவை என விளங்குகிறது. அதிக முயற்சியுடன் இவற்றின் வழக்கியல்புகளைக் கண்டு பிடித்து உலகோர்க்கு உதவும் வகையில் வெளியிட்டிருக்கிறேன். ஆகையால், இவற்றின் உண்மையை அறிய, முயற்சியெடுத்துச் சித்திபெற்ற நண்பர்கள் உயிர்களின்மீது அருள்தன்மையை மறவாதிருக்கும்படி மிகவும் நயமாகக் கேட்டுக் கொள்கின்றேன்.

## 266. சங்கத் திராவகம்

இரண்டாங்காய்ச்சல் வெடியுப்பு ஒரு பங்கு: படிக்காரம் ஒரு பங்கு; நாட்டு நவாச்சாரம் $\frac{1}{4}$ பங்கு.

**செய்முறை :—**இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்தரைத்து

வாலையிலிட்டு அடுப்பேற்றி இரண்டு சாமம் (6 மணி நேரம்) வரையில் மெதுவாயெரிக்கவேண்டும். இவ்விதம், எரிக்கும்போது, கீழ்ப்பாண்டம் சிவந்துபோகும். சிவந்த வண்ணமுள்ள புகை யுண்டாகிப் பின்பு வெள்ளை நிறமான புகையுண்டாகித் திராவகம் (புகைநீர்) வடியும்.

இந்தத் திராவகமானது காரமானதாகையால், கை முதலிய உடலுறுப்புகளில் படாமல் துணி முதலியவைகளைச் சுற்றிக் கொண்டிருக்கவேண்டும். இதனை 3 அல்லது 4 தடவைகள் மடக்கி மடக்கி பாகப்படுத்தி அதில் இரும்பைப் போட்டால் இரும்பு கரைந்துபோகும்.

**குறிப்பு** :—சங்கைக் கரைக்கும் சத்தியுள்ளதற்குச் சங்குத் திராவகமென்பது சிலர் கருத்து. பார்சி மொழியில் "தேஜாபே-பாறூகி" என்று பெயர். தேஜாப் என்பது திராவகம்; பாறூகி என்பது இம்முறையை ஆதியில் கண்டுபிடித்த ஆய்வாளரின் பெயரென்பது சிலர்கருத்து. இரும்பைக் கரைக்கும் குணமுள்ள தற்கெல்லாம் பாறூகியெனச் செல்லப்படும் என்பது சிலர் கருத்து.

இஃது இரசவாதத் தொழிலில் பயன்படுத்தப்படுவதுமன்றி, வெள்ளியிலிருந்து தங்கத்தைப் பிரிக்கவும் பயன்படுகிறது. இன்னம், தீய மாமிசத்தைப் போக்கவும், தேமல், படை, குட்டம் முதலியவைகளைப் போக்கவும் பயன்படுகிறது.

இதனைக் கெட்டிப் புட்டியில் பத்திரப்படுத்தவேண்டும்.

இதனுல், எல்லாச் சரக்குகளையும் கட்டலாம். மற்றும் அனேக வேலைகளுக்கும் பயன்படும்.

## 267. காளி சங்கத் திராவகம்

படிக்காரம், அன்னபேதி, வெடியுப்பு, மரவுப்பு (Corbonate of potash) கடல்நுரை. பூநீர், வெள்ளைப்பாடாணம், வளைய லுப்பு, கந்தியுப்பு, நாயுருவியுப்பு, குப்பைமேனியுப்பு, வெண் காரம், கள்ளிச்சாம்பல், நாட்டு நவாச்சாரம், தாளகம், துருசு ஆகிய பதினறு பொருள்களும் வகைக்குச் சமனெடை.

செய்முறை ;—இவை எல்லாவற்றையும் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு 2 சாமம் (6 மணி)

அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் (புகைநீர்) இறக்கிக் கொள்ளவேண்டும். ஆரம்பத்தில் சில சமயம் திராவக மானது குழம்பாகவும். கலங்கலாகவும் இறங்கும்.

அதுபோன்ற சமயங்களில் அடுப்பைச் சற்றுநேரம் அதாவது ஏறக்குறைய ஒருமணிநேரம் நிறுத்தி வைத்து மறுபடி எரிக்கத் திராவகம் இறங்கும்.

இந்தத் திராவகத்துடன் முன் சரக்குகளைச் சேர்த்து மடக்கித் திராவகம் (புகைநீர்) இறக்கினல் அதிகக் காரமாயிருக்கும்.

## 263. மீளிசங்கத் திராவகம்

மேற்படி மீளிசங்கத் திராவகம் 8 பலம் (280 கிராம்); நாலாங்காய்ச்சல் வெடியுப்பு 2 பலம் (70 கிராம்); படிக்காரம் 18 வராகனெடை (63 கிராம்); கந்தகம் 2 வராகனெடை (7 கிராம்);

செய்முறை :—சரக்குகளை எல்லாம் கல்வத்திலிட்டு மேற்படி திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமமரைத்து மிகுதியான திராவகத்தையும் கலந்து சிறு தோண்டியில் போட்டு அதன்மேல் பீங்கான்வாலை அல்லது மண்வாலை வைத்து முறைப்படி திராவகம் இறக்கிக்கொள்ளவேண்டும்.

பயன்படுத்தல் :—தூய்மையான இரசத்தை ஒரு பீங்கான் பாத்திரத்தில் விட்டு மேற்படி திராவகம் அது முழுக ஊற்றி வெய்யிலில் வைக்கவேண்டும். விட்ட திராவகம் சுண்டினவுடன் மறுபடியும் முன்கூறிய அளவு திராவகம் (புகைநீர்) விட்டு வெய்யி லில் வைக்கவேண்டும். இவ்விதம், 7 நாட்கள் வரை நாள்தோறும் செய்து வெய்யிலில் வைத்து எடுக்க இரசம் கட்டிப்போகும். பின்பு, இந்த இரசத்தை அகலில் வைத்து இந்தத் திராவகத்தைக் கொஞ்சம் விட்டு மேலகல்மூடி சீலைமண்செய்து இலகுவான புடம் போடக் கெட்டியாகிப்போகும்.

## 269. துத்தமாரணத் திராவகம்

பூநீர் 4 பலம் (150 கிராம்); படிக்காரம், வெடியுப்பு நவாச்சாரம், அன்னபேதி, கந்தகம் ஆகிய இச்சரக்குகளைக் கல்வத்தில் பொடித்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தல்:**—பசரிதுத்தம் 3 வராகனெடை ($10\frac{1}{2}$ கிராம்), துருசு $1\frac{5}{6}$ வராகனெடை இந்த இரண்டையும் சேர்த்தரைத்து இரும்பு மூசையிலிட்டு நெருப்பின்மீது வைத்து முன்கூறிய திராவகத்தைச் சிறுகச்சிறுக ஊற்றிச் சுருக்கிட்டுவர வைத்த சரக்கானது சுண்ணமாகிப் போகும். இது சிறப்பான முறைகளுக்குப் பயன்படும். இதனைத் திறவுக்கோலில் எழுதுவோம்.

## 270. அயசங்கத் திராவகம்

நாலாங்காய்ச்சல் வெடியுப்பு 3 பலம் (105 கிராம்) ; இந்துப்பு 8 பலம் (280 கிராம்) ; அமுரியுப்பு 3 பலம் (105 கிராம்); அரப்பொடி $2\frac{1}{2}$ பலம் ($87\frac{1}{2}$ கிராம்); நாட்டு நவாச்சாரம் 2 பலம் (70 கிராம்) ; அன்னபேதி 2 பலம் (70 கிராம்) ; துருசு 2 பலம் (70 கிராம்) ; படிக்காரம் 1 பலம் (35 கிராம்) ; பூநீர் 1 பலம் (35 கிராம்) ; வெண்காரம் 1 பலம் (35 கிராம்) ; பிராந்தி $\frac{1}{2}$ படி.

**செய்முறை :**—முன்னர், அய அரப்பொடியைப் பழச்சாற்றில் 3 நாள் ஊறவைத்துக் கழுவி தூய்மைசெய்து ஈரமில்லாமல் உலர்த்திப் பின்பு, கல்வத்திலிட்டு, பிராந்தியைச் சிறுகச்சிறுக ஊற்றி அரைத்து அயப்பொடியானது அரைப்பட்டுக் கரைந்து போனபின் மற்ற சரக்குகளையும் சேர்த்து அரைத்து வாலையி லிட்டுப் பாகப்படி திராவகம் (புகைநீர்) இறக்கிக் கொள்ள வேண்டும். திராவகம் இறங்கும்போது முன்னல் இறங்கும் நீரையும் பின்னல் இறங்கும் நீரையும் தனித்தனியே பிடித்து வைத்து நீக்கிவிடவேண்டும்.

இந்தத் திராவகமும் இரசவாத முறைகளில் பயன்படுத்தப் படுகிறது.

## 271. காளகண்ட சங்கத் திராவகம்

நாலாங்காய்ச்சல் வெடியுப்பு 24 பலம் (840 கிராம்); படிக்காரம் 16 பலம் (560 கிராம்) இவ் விரண்டையும் முன்னர்த் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு இரண்டையும் சேர்த்தரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டும். ஆரம்பத்தில் இறங்கும் திராவகம் காரமற்றதாக இருக்கும். அதைத்தனியே பிடித்து வைத்துக்கொள்ளவேண்டும். அதற்குப் பிறகு இறங்கும் திராவகமானது காரமுள்ளதாகவும், மஞ்சள் நிறச் சாயலுள்ளதாகவும் இருக்கும். இதைத் தனியே பிடித்து ஒரு பளிங்குக் குப்பியில் வைத்துக்கொள்ளவேண்டும்.

பின்பு முன்கூறிய சரக்குகளை முன்னளவே எடுத்து முன்போலவே தனித்தனியேப் பொடித்துப் பின்பு இரண்டையும் ஒன்ருய்க் கலந் தரைத்து, அதில் (முன்கூறிய) தனியாய் பொடித்து வைத்திருக்கிற காரமற்ற திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டரைத்து, அந்தத் திராவகமெல்லாம் வற்றினபின்பு காரமுள்ள திராவகத்தை விட்டரைத்து, வாலையிலிட்டு முன்கூறியது போலவே முன்னீரைத் தனியாய் பிடித்துத் தனியே வைத்துக்கொள்ளவும். பின்பு இறங்கும் காரமுள்ள திராவகத்தைத் தனியே பிடித்து வேறே வைத்துக்கொள்ளவேண்டும்.

மூன்ரும் தடவையும் முன்கூறிய சரக்குகளை முன் அளவே முன் மாதிரியே செய்து, வாலையிலிட்டுத் திராவகம் (புகைநீர்) இறக்கி முன் இறங்கும் நீரைத் தனியாகவும், பின்னல் இறங்கும் நீரைத் தனியாகவும் பிடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

முன்னல் இறங்கும் நீரானது, குன்ம முதலிய நோய்களுக்கு; நீரில் 3 அல்லது 4 துளிகளை விட்டுப் பருகச் செய்விக்கலாம். பின்னல் இறங்கும் அதாவது காரமுள்ள திராவகத்தைக் காளகண்டமேக நாராயண செந்தூரம் செய்ய பயன்படுத்திக் கொள்ளலாம். இன்னும், இரசவாதம் சம்பந்தமான வேறு பல முறைகளுக்கும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## 272. பூபதிசங்கத் திராவகம்

பாகப்படுத்தின பூநீர், பாகப்படுத்தின வெடியுப்பு, கடல் நுரை, படிக்காரம், கறியுப்பு, அரிதாரம், நெல்லிக்காய்க் கெந்தகம் இந்த ஏழும் வகைக்கு 5 பலம் (175 கிராம்).

**செய்முறை :—** இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர்த் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து நன்ருய்க் கலந்து, இளநீரைச் சிறுகச்சிறுக விட்டு 2 சாமம் (6 மணி) அரைத்து வெய்யிலில் வைத்து ஈரமில்லாமல் உலர்த்திப் பின்பு பீங்கான் தட்டில் இட்டுப் பனியில் அல்லது ஆகாயத்தின் கீழ் மூன்று இரவு வைத்து, வாலையிலிட்டுப் பாகப்படி செய்து மெதுவாக எரித்துப் பக்குவமாய்த் திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும்.

இரண்டாம் தடவையும் முன்கூறிய சரக்குகளை முன் அளவே எடுத்துப் பொடித்து முன்சொன்ன திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ளவேண்டும்.

மூன்றும் தடவையும் முன்கூறிய சரக்குகளை முன் அளவே எடுத்து, இரண்டாம் தடவை இறக்கின திராவகத்தை விட்டு அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டும்.

பயன் :—இந்தத் திராவகமானது கரிசல் முறை சண்டரச பற்பம் செய்யவும், இரசபற்பம் முதலியவை செய்யவும் பயன்படுவதோடு, வேறு பற்பல இரசவாதச் சார்பு முறைகளை முடிக்கவும் உதவும்.

## 273. உபயமுககுருவத் திராவகம்

நவாச்சாரப்பதங்கம் 10 பங்கு, அண்ட ஓட்டுச் சுண்ணம் 10 பங்கு, கோழிமுட்டை வெள்ளைக்கரு 10 பங்கு. இம்மூன்றையும் ஒன்ருய்க் கலந்து 2 சாமம் (6 மணி) அரைத்துச் செயநீர்ப் புட்டியில் இட்டு வாய்மூடி இறுக்கம் செய்து, குதிரையின் புதிய லத்திகள் நிறைக்கப்பட்ட குழியில் 20 நாள் வைத்தெடுக்க செயநீராகி இருக்கும். பின்பு, இந்தச் செயநீரை வாலையிலிட்டுப் பாகப்படி திராவகமிறக்கி, திராவகத்தைத் தனியே வைத்துக்கொள்ள வேண்டும். வாலையிலுள்ள வண்டலை எடுத்துப் புதிய ஒரு சிறு சட்டியில் இட்டு, மேற்சட்டி மூடி வாய்க்குச் சீலைமண் செய்து, உலையில் வைத்துத் தாமிரம் உருகத்தக்க நெருப்பாய் ஊதி எடுத்து நன்ருய்க் குளிர ஆறினபின் எடுத்துக் கல்வத்திலிட்டு, முன் இறக்கின திராவகத்தைவிட்டு 2 சாமம் (6 மணி) அரைத்து, இரண்டாம் தடவையும் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கித் திராவகத்தைத் தனியே வைத்துக் கொண்டு வாலையிலுள்ள வண்டலை முன்போலவே சட்டியில் வைத்து மேல்சட்டி மூடி, வாய்க்குச் சீலைமண் செய்து உலையில் வைத்து முன்போலவே ஊதிக் குளிர ஆறின பின் எடுத்து, கல்வத்திலிட்டு இரண்டாம் தடவை இறக்கின திராவகத்தை விட்டரைத்து மூன்றும் தடவையும் வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும். இவ்விதம், வாலையில் வண்டல் படியாத வரையில் செய்து திராவகத்தை மாத்திரம் இறக்கிக் கொள்ளவேண்டும். இதுவே, ஒருவகை குருத்திராவகமாகும்.

பயன் :—வாதச் சார்பான பற்பங்கள், செந்தூரங்கள் செய்ய வேண்டின் அந்த யோகங்களை இந்தத் திராவகத்தை விட்டரைத்துப் பக்குவப்படுத்த சிறந்த குணத்தைக் கொடுக்கும். இவ்விதமே தூய்மை செய்யப்பட்ட உயிர்ப் பொருள்களை (வஸ்துகளை) எல்லாம் பற்பமாக்கவும், சுண்ணம் செய்யவும் பயன்படுகிறது.

தாமிரத் தகட்டைக் காய்ச்சி, அதன்மேல் இந்தத் திராவகத்தைத் துளித்துளியாக விட்டு வந்தாலும், அல்லது காய்ச்சின தகட்டை இந்தத் திராவகத்தில் தோய்த்தெடுத்தாலும் அந்தத் தகடானது உள்ளும் புறமும் வெளுத்துப்போகும்.

## 274. பஞ்சமுகக் குருத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 20 பலம் (700 கிராம்); படிக் காரம் 10 பலம் (350 கிராம்); சவட்டுப்பு 5 பலம் (175 கிராம்); கல்லுப்பு 5 பலம்; நாயுருவியுப்பு 1 பலம் (35 கிராம்).

செய்முறை :—இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு, எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து அரைத்து நன்ருய்க் கலந்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இரண்டாம் தடவையும் முன்கூறிய சரக்குகளை முன்னளவே முன்போலவே நன்ருய் அரைத்துக் கலந்து முன்னிறக்கின திராவ கத்தைச் சிறுகச் சிறுக விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

மூன்ருந் தடவையும் முன்கூறிய சரக்குகளை முன்னளவே முன்போலவே நன்ருய் அரைத்துக் கலந்து இரண்டாந் தடவை இறக்கின திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டரைத்து வாலையி லிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தத் திராவகமானது இரசவாதச் சார்பான அனேக முறை களைச் செய்ய பயன்படுமாம். இன்னும், சண்டரச பற்பம், காள கண்டமேக நாராயண செந்தூரம், இரசசெந்தூரம், அய பற்பம் முதலியவைகளைச் செய்யவும் பயன்படுகிறது. ஆனுல் அந்தந்தச் சரக்கிற்குத் தகுந்தபடி கைமுறையாய்ச் செய்து கொள்ள வேண்டும். இம்முறைகள் ஆங்காங்கு எழுதப்படும்.

## 275. சப்தமுகக் குருத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 20 பலம் (700 கிராம்); படிக் காரம் 10 பலம் (350 கிராம்); வீரம், கல்லுப்பு சவட்டுப்பு இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்); அமுரியுப்பு 3 பலம் (105 கிராம்); 2 பலம் (70 கிராம்).

செய்முறை :— இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனி யாகப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து மறுபடியும் அரைத்து நன்ருய்க் கலந்து, அகன்ற பீங்கானில்

போட்டு வெய்யிலில் காய வைக்கவேண்டும். காயும்போது அதை அடிக்கடி ஒரு குச்சியினுல் துழாவியும் வரவேண்டும். இவ்விதம், நாள்தோறும் 5 அல்லது 6 தடவைகள் துழாவி 3 நாள் காய வைத்து, நாலாம் நாள் வாலேயிலிட்டுப் பக்குவமாகவும் பாகப் படியும் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இரண்டாந்தடவையும் முன் சரக்குகளே முன்னளவே எடுத்து முன்போலவே பொடித்து முன்போலவே வெய்யிலில் 3 நாள் உலர்த்திப் பின்பு கல்வத்திலிட்டு, முன் திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டரைத்து வாலேயிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

மூன்ருந் தடவையும் முன்கூறிய சரக்குகளே முன்போலவே முன் அளவே எடுத்தரைத்து வெய்யிலில் 3 நாள் காயவைத்துப் பின்பு இரண்டாந் தடவை இறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலேயிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தல்:**— இந்தத் திராவகத்தால் உபரசங்கள் எல்லா வற்றையும் கட்டலாம். தங்கம் முதலிய உலோகங்களேயெல்லாம் பற்பங்களாக்கவும் பயன்படும். இரசவாதச் சார்பான முறைகள், மருத்துவச் சார்பான முறைகள் ஆகிய இருவகை முறைகளுக்கு மாகும். ஆனுல், அந்தந்தப் பாகங்களுக்கேற்றபடி செய்ய வேண்டியது இன்றியமையாததாகையால் கைபாகம், செய்பாகம் முதலியவைகளேத் தெரிந்து கொள்ளவேண்டியது மிகவும் முக்கிய மாம். இது சார்பான பல முறைகளும் ஆங்காங்கே எழுதப்படும்.

## 276. மகா குருத் திராவகம்

(அ) 1. சங்கங்குப்பி, 2. நாயுருவி, 3. எருக்கு, 4. கொடி வேலி, 5. துத்தி, 6. ஊமத்தை, 7. குப்பைமேனி இவற்றைத் தனித் தனியே எரித்தெடுத்த சாம்பல்; 8. தென்னே ஒலேயையும் மட்டை யையும் எரித்தெடுத்த சாம்பல், 9. வாழைச்சருகை எரித் தெடுத்த சாம்பல், 10, முருங்கைப்பட்டையை எரித்தெடுத்த சாம்பல், 11. கொம்புக்கள்ளிப் பழுப்பை எரித்தெடுத்த சாம்பல், 12. சீமைக் கற்ருழைச் சருகை எரித்தெடுத்த சாம்பல் ஆகிய பன்னிரண்டு வகைகளும் வகைக்கு 4 பலம் (140 கிராம்) வீதம்.

(ஆ) ஒட்டகம், குதிரை, கழுதை, யானே, பசு, வெள்ளாடு, சிறுபிள்ளே ஆகிய ஏழுவகை உயிரினங்களின் சிறுநீர் வகைக்கு 8 பலம் (280 கிராம்).

(இ) பாகப்படுத்தின வெடியுப்பு, படிக்காரம், இவை இரண்டும் வகைக்கு 25 பலம் (875 கிராம்); பாகப்படுத்தின பூநீர், கல்லுப்பு, வளையலுப்பு, சவட்டுப்பு, கல்மதம், முள்ளியுப்பு, நவச்சாரம். தீப கற்பூரம், இந்துப்பு, அன்னபேதி, கறுப்புப்பு, கறியுப்பு ஆகிய இவை பன்னிரண்டு வகைகளும் வகைக்கு 2 பலம் (70 கிராம்) வீதம் இவற்றைத் தனித்தனியாகப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.

(ஈ) பிராந்தி. சங்கங்குப்பியிலைச்சாறு. நாயுருவிச்சாறு ஆகிய இவை செல்லத்தக்க அளவு.

செய்முறை :—(ஆ) விலிள்ள சிறுநீர் வகைகளையெல்லாம் எடுத்து ஒரு பீங்கான் தாழியில் (ஜாடியில்) போட்டு அதில், (அ) விலுள்ள சாம்பல்களையெல்லாம் கலந்தொன்ருய்ப் போட்டு மூங்கிற்குச்சியால் நன்கு கலக்கி விடவேண்டும். நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் கலக்கி வந்து 3 நாள் சென்ற பின்பு நான்காம் நாள் மேல் தெளிவைப் பக்குவமாய் இறுத்துப் பாகப்படி காய்ச்சி முக்காற்பாகம் வற்றிக் குழம்பு பதமானவுடன் இறக்கி வெய்யிலில் வைத்துவர, நீரெல்லாம் வற்றி உப்பாகி விடும். பின்பு (இ) யிலுள்ளவைகளோடு சேர்த்து நன்ருய்ப் பொடித்துப் பிராந்தியைச் சிறுகச்சிறுக வார்த்து 4 சாமம் அரைத்து உலர்த்திக் கொள்ளவும். பின்பு சங்கங்குப்பிச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு 4 சாமம் (12 மணி) அரைத்து உலர்த்திக் கொள்ளவும். பின்பு, நாயுருவிச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு 4 சாமம் அரைத்து 5 வில்லைகளாகச் செய்து வெய்யிலில் நன்ருய் உலர்த்திக் கொள்ளவேண்டும்.

பிறகு, ஒரு வில்லையை வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கவேண்டும். மற்ரெரு வில்லையைக் கல்வத்திலிட்டு முன் இறக்கின திராவகத்தை விட்டு ஒரு சாமம் அரைத்துப் பின்பு வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கவும். மூன்ரும் வில்லையைக் கல்வத்திலிட்டு இரண்டாம் தடவை இறக்கின திராவகத்தை விட்டு ஒரு சாமம் அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். நாலாம் வில்லையையும் கல்வத்திலிட்டு மூன்ரும் தடவை இறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். முடிவாய் ஐந்தாம் வில்லையை கல்வத்தி லிட்டு நாலாம் தடவை இறக்கின திராவகத்தை விட்டு ஒரு சாமம் அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டும்.

**எச்சரிக்கை :—** இந்தத் திராவகமானது கொடிய காரமான தாகையால், அரைக்கும் போதும் இறக்கும்போதும் எடுக்கும் போதும் கை; கண், உடல் முதலிய இடங்களைத் துணி, தோல் முதலியவைகளால் பொதிந்து மேலிற் கொஞ்சமும் படாமல் பார்த்து அதிக விழிப்புடன் இருக்கவேண்டும்.

இந்தத் திராவகம் இறக்க ஆரம்பிக்கும்போதும், இறக்கி முடிந்த உடனேயும் தாம்தாம் வழிபடும் இறைவனையும், சித்தர்களையும் வணங்கி வழிபாடு முதலியவைகள் செய்து மணம்தரும் நறுமண வகைகளையும் வைத்துச் சர்க்கரை, மிட்டாய் முதலிய இனிப்பு வகைகள், கனிவகைகள், முதலியவைகளை வைத்தும் பாத்திஹா, தோத்திரம் முதலியவைகளைச் செய்வதுமன்றி ஏழைகள் முதலிய நாடோடிகளுக்குப் பால்சோறு, நற்சோறு முதலியவைகளும் வழங்கவேண்டும், இதனைச் செய்பவர்களும், மனம், வாக்கு, காயம், ஆடை முதலியவைகளால் தூய்மையாக இருப்பதுடன் இத்திராவகத்தை இறக்கும் இடத்திலும், இத்திராவகம் இறக்கும் போதும் தீட்டு முதலியவைகள் உள்ளவரொருவரும் அண்டாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். கெட்ட பார்வையுள்ளவர்கள் பஞ்சமாபாதகங்கள் ஒன்றில் அல்லது பலவற்றில் சம்பந்தமுள்ளவர்கள், குருத்துரோகி, ஆசான்துரோகி, வைத்தியர் துரோகி, பெரியோரை நிந்திப்பவர்கள், பரிதாபம், ஈவு, இரக்கம், தயவு, அருள் முதலியவைகள் இல்லாதவர்கள் முதலிய இழிகுணம் உடையவர்களுக்கு இது கிட்டுவது அரிது. ஒருவேளை நல்லபடி மூடிந்துவிட்டாலும் அதனுல் பயனுண்டாவது அரிதினும் அரிதாகும். ஆகையால், தெய்வ வழிபாடு, பிறர்க்கு உதவும் தன்மை, உயிர்களின்மீது அருள்தன்மை, உலகுக்கு உதவும் நோக்குடையோராய் மன்னுயிரையும் தன்னுயிரைப்போல் பாவித்துவரும் மகான்களுக்கு இத்திராவகம் சித்தியாகுமென்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**பயன்படுத்தல் :—** இஃது எல்லாகை நோய்களுக்குமாகும். அறுபத்து நான்கு பாடாண வகைககளையும் கட்டுப்படுத்தும். இரசம், வெள்வங்கம், கருவங்கம் முதலிய எல்லா வகைகளையும் மெழுகாக்கும். பவளம், முத்து, முத்துச்சிப்பி முதலியவைகளை நீக்கும். சுரக்கட்டி, வாயுக்கட்டி, மகோதரம் வாதச் சார்பான வீக்கம், பித்தம் சார்பான வீக்கம், எல்லாவகைப் பாண்டுகள், சோகைகள், எல்லாவகைப் பீலிக நோய்கள், இரைப்பிருமல், நீர்ப்பீனிசம், சூதகவாயு இவ்விதமான அனேக வகை நோய்கள் தீரும். ஆனுல், அந்தந்த நோய்களுக்குத் துணை மருந்துடன் கொடுக்கவேண்டும். அவற்றுள் சிலவற்றை இங்கு எடுத்துக் காட்டாக எழுதுவோம்.

வாதப்பாண்டு (வளி), பித்தப்பாண்டு (அழல்), சிலேத்துமப் பாண்டு (ஐயம்), கலப்புப்பாண்டு (சன்னி), மிர்திகாபுக்த பாண்டு ஆகிய இவற்றுக்குக் கொடிவேலி வேர்ப் பட்டைத் தீநீரில் 2 முதல் 5 துளிகள் உடல்வலிமை, நோய்வலிமை முதலியவைகளுக்கு ஏற்றவிதமாகக் கலந்து கொடுக்கவேண்டும்.

வாதத்தைப் (வளி) பற்றி வருகின்ற எல்லா நோய்களுக்கும் முக்கியமாய் வாதத்தைப்பற்றி வருகின்ற வாதகுன்மம், வாத மகோதரம், வாதவிக்கல், வாதமாரடைப்பு, வாதஉப்புசம், வாதஇரைப்பிருமல், வாத பக்கசூலேத்தம்பனம், வாத வியர்வைக் குரோதானிலம், வாத ஆமைக்கட்டு, வாதவல்லே முதலிய நோய் களுக்கு சந்தனத் தீநீரில் மேற்கண்டபடி கொடுக்கவேண்டும்.

வீக்கப்பாண்டு, நச்சுப்பாண்டு, உறக்கவாதப் பாண்டு, விக்கலாதி பாண்டு, பிரமியபாண்டு என்ற இவைகளுக்குச் சாம்பிராணி இலேத் தீநீரில் கொடுக்கவேண்டும்.

மலஞ் சிறுநீர்க்கட்டு, கக்கல், வியர்வை, தாகம், ஏப்பம் என்ற இந்த இயல்புகளேயுடைய குன்ம நோய்களுக்கு நல்லவெல்லத் தீநீரில் கொடுத்துவரவேண்டும்.

வாதகுன்மசூலே, குடல்வாதம், குடல் முறுக்குநோய் முதலிய வைகளுக்கு வெள்ளறுகுத் தீநீரில் கொடுத்து வரவேண்டும்.

நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீரருகல் முதலிய நோய்களுக்கு நெருஞ்சி சமூலத் தீநீரில் கொடுக்கவேண்டும்

இவ்விதம், ஒவ்வொரு நோய்க்குத் தகுந்தபடி மருத்துவர்கள் நிலேமைக்கேற்றவாறு இளகம், குடிநீர், தீநீர், மணப்பாகு முதலியவற்றுடன் கலந்து கொடுத்தால் மேற்கண்ட எல்லா நோய்களும் தீரும். இது பட்டறிவுடைய மருத்துவர்களுக்கு வச்சிராயுதம் போன்றது.

## 277. மகாகுருத் திராவகம்

குப்பைமேனி சமூலத்தை எரித்துச் சாம்பலாக்கி நீரில் கரைத் துத் தெளிவை இறுத்துக் காய்ச்சியெடுத்த உப்பு, வாழைச் சருகை முன்கண்டபடி செய்தெடுத்த உப்பு, துத்தி சமூலத்தை முன்கண்டபடி செய்தெடுத்த உப்பு, நாயுருவி சமூலத்தை முன் கண்டபடி செய்தெடுத்த உப்பு, முருங்கைப்பட்டையை முன் கண்டபடி செய்தெடுத்த உப்பு, ஊமத்தன் சமூலத்தை முன்கண்ட படி செய்தெடுத்த உப்பு, தென்னே ஓலேயையும், மட்டைகளேயும்

முன்கண்டபடி செய்தெடுத்த உப்பு, வெள்ளறுகு சமூலத்தை முன்கண்டபடி செய்தெடுத்த உப்பு, கொடிவேலி வேரை முன் பாகப்படி செய்தெடுத்த உப்பு, எருக்கு சமூலத்தை முன்பாகப்படி செய்தெடுத்த உப்பு. இவை வகைக்கு 3 பலம் (105 கிராம்), கல்லுப்பு, வளையலுப்பு, இந்துப்பு, பாகப்படுத்தின நவாசாரம், துருசு, துத்தம், பாகப்படுத்தின பூநீர். இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்), அன்னபேதி 17 பலம் (595 கிராம்), சவட்டுப்பு 20 பலம் (700 கிராம்), படிக்காரம் 70 பலம் (2450 கிராம்), தூய்மைசெய்த வெடியுப்பு 100 பலம் (3500 கிராம்).

**செய்முறை** :—இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகத் தூள் செய்து, பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய் நன்ருய்க் கலந்து 11 பாகங்களாகச் செய்து தனித்தனியாகக் கட்டி வைத்துக் கொள்ளவேண்டும். இவ்வொவ்வொரு பாகமும் சுமார் 25 பலம் (875 கிராம்) இருக்கும். இதில் ஒரு பாகத்தை வெம்மை தாங்கும் கண்ணுடி வாலையிலிட்டுத் தீயை மெதுவாக எரிக்கப் புகையுடன் திராவகம் இறங்கும். திராவகம் இறங்கும்போது வாலை வெடிக்காமலும், எரிந்து தீய்ந்து போகாமலிருக்கும்படி அதிகக் கவனமுடன் இருக்கவேண்டும். கைமுறையாய் இரண்டொரு தடவை பார்த்துக்கொண்டால் பாகந் தெரிந்துவிடும். திராவகம் இறங்க இறங்க பலமான வேருெரு குப்பியில் இட்டு மூடியிட்டு வர வேண்டும். வாலையிலிட்ட சரக்கெல்லாம் திராவகமாக இறங்கிய பின் எரிப்பை நிறுத்தி வாலையானது குளிர ஆறினபின் அதிலுள்ள தூசு முதலியவற்றைக் கழுவித் தூய்மைசெய்து வைத்துக்கொள்ள வேண்டும். பின்பு, மற்ருெரு பாகத்தைக் கல்வத்தில்போட்டு முன்னிறக்கின திராவகத்தைவிட்டு ஒரு சாமமரைத்து முன் தூய்மைபடுத்திய வாலையிலிட்டு இரண்டாந் தடவையும், முன் போலவே பாகப்படி திராவகம் இறக்கிப் பத்திரப்படுத்தவும். பின்பு, மூன்ரும் பாகத்தைக் கல்வத்திலிட்டு இரண்டாந் தடவை இறக்கின திராவகத்தை விட்டு ஒரு சாமமரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும். இவ்விதம், ஒவ்வொரு பாகத்தையும் கல்வத்திலிட்டு ஒவ்வொரு தடவையும் இறக்கின திராவகத்தை விட்டரைத்து வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இம்முறையே மேற்கண்ட 11 பாகங்களையும் மீண்டும் மீண்டும் திராவகம் இறக்கி முடிவாக இறங்கின திராவகத்தைக் கெட்டியான குப்பியில் ஊற்றிப் பத்திரப்படுத்தவேண்டும்.

**பயன்படுத்தல்**:—இந்தத் திராவகத்தால் எல்லாவிதச் சரக்குகளையும் கட்டலாம். மேலும், இந்தத் திராவகத்தை மிகவும் குறைந்த அளவாய்த் தக்க துணைமருந்துடன் கொடுக்கக்

கடுமையான குன்மம் முதலிய பல நோய்கள் தீரும். இதன்றியும் மேற்கண்ட பாகத்தில் சொன்ன நோய்களுக்கெல்லாம் மேற் கண்ட துணைமருந்துகளில் கொடுக்கலாம். மேற்கண்ட முறைகள் எல்லாம் இதற்குமுண்டு. அறிவாளிகள் இவ்விரு வகைகளின் மூலமாய் அனேக வேலைகளைச் செய்துகொள்வார்கள். ஆகையால் சிறப்பான பாகங்களை அவர்களிடம் தெரிந்துகொள்ளவேண்டும்.

குறிப்பு :– சவுட்டுப்பு என்பதைச் சிலர் அப்பளாக்காரமென வும். அப்பளாக்காரத்திலிருந்து எடுக்கப்படும் வேறொரு வகை உப்பு எனவும் இன்னம் பலர் பலவிதமாகவும் சொல்கின்றார்கள். சவடு என்பது உவர்மண், அதாவது பூநீர் விளையும் நிலத்தில் எடுக்கப்படும் ஒருவகை மண். இந்தியாவில் இது பெரும்பான்மை யும் துணியின் அழுக்கைநீக்க சலவையாளர்களால் பயன் படுத்தப்படுகிறது. இந்த மண்ணைக் காய்ச்சி எடுக்கப்படும் உப்பே சவுட்டுப்பாம். ஆனால், இதற்குப் பதிலாக அயல் நாடுகளி லிருந்து கொண்டு வரப்பட்ட வாஷிங்சோடா (Washing Soda) என்னும் உப்பை அல்லது கார்போனேட் ஆப் சோடா (Carbonate of Soda) என்னும் உப்பைச் சேர்த்துக்கொண்டால் அதிக வீரிய முள்ள குணமுள்ளதாய்க் காணப்பட்டிருக்கிறது. இந்த உப்பா னது ஆங்கில மருந்து கடைகளில் சாதாரணமாய்க் கிடைக்கக் கூடியதே. மேலும், அதிக சுத்தமாகவும் எண்ணெய் இல்லாத தாகவும் இருக்கின்றபடியால் பூநீறுக்குப் பதிலாக வாஷிங் சோடாவை சேர்ப்பவர்களுமுண்டு.

இந்தப் பாகத்தில் சேர்க்கப்படும் சாம்பல் உப்புகளைச் சேகரிக்க நகரத்திலுள்ளவர்களுக்குச் சற்றுத் துன்பமாகும். ஆனால், பணத்திற்கும் துன்பத்திற்கும் யோசிக்காதவர்களுக்கு எந்த வேலையும் எந்த இடத்தும் சுலபமாய் முடிவதுமன்றி பலனை அனுபவிப்பவர்களும் அவர்களேயாம்.

## 278. ஏகதசமுகத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 20 பலம் (700 கிராம்), படிக் காரம் 10 பலம் (350 கிராம்), கல்லுப்பு, சவட்டுப்பு, சவ்வீரம் இம்மூன்றும் வகைக்கு 5 பலம் (175 கிராம்), வெள்ளைப் பாடாணம் 3 பலம் (105 கிராம்), துருசு, நாயுருவியுப்பு, கொடிவேலி சமூலத்தை எரித்துச் சாம்பலாக்கி அதனின்றெடுத்த உப்பு, பாகப்படுத்தின பூநீர், இந்நான்கும் வகைக்கு 2 பலம் (70 கிராம்), பாகப்படுத்தின நவாச்சாரம் 1 பலம் (35 கிராம்).

செய்முறை :—இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர் தனித் தனியே பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து இரண்டு சாமமரைத்து 3 நாள் வெய்யிலில் உலர்த்தி நான்காம் நாள் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டும்.

இரண்டாந் தடவையும் முன் கூறிய சரக்குகளை முன்னளவே எடுத்து முன்போலவே பொடித்து வெய்யிலில் 3 நாள் உலர்த்தி நான்காம் நாள் முன்னிறக்கின திராவகத்தைச் சுவறச் சுவற விட்டரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

மூன்ரும் தடவையும் முன்கூறிய சரக்குகளை முன்னளவே எடுத்து முன்போலவே எல்லாவற்றையும் ஒன்ருய்ப் பொடித்து வெய்யிலில் மூன்று நாள் வைத்துலர்த்தி, நான்காம் நாள் கல்வத்திலிட்டு இரண்டாந் தடவை இறக்கின திராவகத்தை முன் செய்ததுபோலவே சிறுகச் சிறுக விட்டு அரைத்து வாலையி லிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ளவேண்டும்.

பயன்படுத்தல்:—இது இரசவாத தொடர்பான பல முறைகள், மருத்துவத் தொடர்பான முறைகள் என்ற இரு வகைக்கும் பயன் படுமாம். கட்டு, பற்பம், செந்தூரம், சுண்ணம், நீராக்கல் முதலிய பல முறைகளுக்கும் இன்னும் அனேக சிறப்பான முறைகளுக்கு மாகும்.

## 279. எளிய கட்டுவகைத் திராவகம்

தாளகம், இரசகர்ப்பூரம், படிக்காரம், முதற்பாகத்தில் 169ஆம் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிற பாடாணப் பதங்கம், இரசப் பதங்கம் 183ஆம் பாகத்திலுள்ள உப்புச் சுண்ணம் அல்லது சீனக்காரப்பூ, வெண்காரம், சவ்வீரம், பாகப்படுத்தின நவாச் சாரம், இவ்வொன்பதும் வகைக்கு சமபாகம்.

செய்முறை :—இவற்றுள் ஒவ்வொன்றையும் ஆரம்பத்தில் தனித்தனியே பொடித்துப் பின்பு, எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து அரைத்துப் பீங்கானில் போட்டு வைத்தால் நைப்புண் டாகும், அப்படி நைப்புக் கண்ட பின்பு வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

அதிக காரமானதாக வேண்டுமாயின் இச்சரக்குகளைச் சேர்த்தே மறுபடியும் மீண்டும் மீண்டும் 5 அல்லது 7 தடவைகள் திராவகத்தை இறக்கிக் கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தல் :**—கட்டவேண்டிய சரக்குகளை அப்பிரகத் தகட்டின்மீது வைத்து இத்திராவகத்தால் பாகப்படி சுருக்கிட அவை கட்டுப்பட்டுப் போகும்.

## 280. எளிய மெழுகுவகைத் திராவகம்

துருசு, சவ்வீரம், 183ஆம் பாகத்திலுள்ள உப்புச்சுண்ணம் அல்லது சீனக்காரப்பூ, பாகப்படுத்தின நவச்சாரம் இந்நான்கும் வகை ஒன்றுக்குச் சமபாகம்.

இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியே பொடித்துப் பின்பெல்லாவற்றையும் ஒன்ருய்ச்சேர்த்து நன்ருய்க் கலக்கும்படி அரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தல் :**—கட்டின சரக்குகளை அப்பிரகத் தகட்டின் மீது வைத்து இத்திரவாகத்தாற் சுருக்கிட மெழுகாகும். இவ் விதம் செய்யப்பட்ட மெழுகானது வாதம், வைத்தியம் இருவகை களிலும் உபயோகமாம்.

## 281. எளிய செந்தூரத் திராவகம்

பாகப்படுத்தின வெடியுப்பு 10 பங்கு, படிக்காரம் 8 பங்கு, சீனக்காரப்பூ அல்லது படிகாரப்பூ 1 பங்கு, இம்மூன்றையும் கல்வத்திலிட்டு கட்டுவகை செயநீர், அண்டவகை செயநீர், கார செயநீர், சுண்ண செயநீர் என்ற இவற்றுள் ஒன்றை விட்டு அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டில்வைத்து மேலோடு மூடி 5 சீலைமண் செய்து இலகுபுடம் போட வெண்மையான தூளாகும். இதுவே சுண்ணமாகும்.

இந்தச் சுண்ணம் 16 பங்கு, அன்னபேதி 8 பங்கு. பாகப் படுத்தின வெடியுப்பு 7 பங்கு, சாதிலிங்கம் 6 பங்கு, தாளகம் 5 பங்கு, கெந்தி 4 பங்கு, இரசகருப்பூரம் 3 பங்கு, செவ்வீரம் 2 பங்கு, இரசப்பதங்கம் 1 பங்கு.

**செய்முறை :**—இவைகள் ஒவ்வொன்றையும் தனித்தனியே பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து அரைத்துப் பனியில், 5, 6 நாள்கள் வைக்கின் சரக்கெல்லாம் நைப்பாகிவிடும். பின்பு, வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தல் :**—கட்டின பொருள்களை மேற்படி திராவகத்தைச் சிறுகச் சிறுக வார்த்து 2 சாமமரைத்து வில்லைசெய்து வெய்யிலில் நன்றாய் உலரவைத்து ஓட்டில்வைத்து மேலோடு மூடி 5 சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் எடைக்கு 8 பங்கு கொண்ட விராட்டியில் புடமிட்டு ஒரு நாளாறவிட்டு மறுநாள் எடுக்க செந்தூரமாகி இருக்கும். இவ்வகைச் செந்தூரங்கள் வாதம், வைத்தியம் ஆகிய இருவகைகளுக்குமாகும். இன்னம், கட்டுப்பட்ட பலசரக்குகளுள் ஒன்றிற்கொன்று இனமான பலவற்றை மேற்படி திராவகத்தை விட்டரைத்து முன்சொல்லியிருக்கிறபடி புடமிட்டு எடுக்கச் செந்தூரமாகும். அவ்வகைச் செந்தூரங்களும் வாதம், வைத்தியம் என்ற இருவகைகளுக்குமாகும். அவை பலவாயினும் இங்கு ஒரு முறை மாத்திரம் உதாரணமாக எழுதப்படும்.

## 282. சதுர்முகச் செந்தூரம்

கட்டின தாளகம், கட்டின சாதிலிங்கம், கட்டின இரசம், கட்டின கெந்தகம், இந்நான்கும் வகை ஒன்றுக்குச் சமபாகம். இவற்றைக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன் திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டு 4 சாமமரைத்துப் வில்லைதட்டி மூன்று நாள் வெய்யிலில் உலர்த்தி நாலாம் நாள் புதிய அகலில் வைத்து மேலகல் மூடி 7 சீலைமண் செய்து இரண்டுநாள் வெய்யிலிலுலர்த்தி அடுத்தநாள் அக்கவசத்திற்குப் பத்துப் பங்கு கொண்ட விராட்டியில் புடமிட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாளெடுக்க முழுமையும் செந்தூரமாயிருக்கும். அப்படியாகாமல் அரைகுறையாக இருந்தால் இதனைக் கல்வத்திலிட்டு முன் திராவகத்தை முன்போலவே சிறுகச் சிறுகவிட்டு 2 சாமமரைத்து வில்லைசெய்து இரண்டு நாள் வெய்யிலில் காயவைத்து அடுத்தநாள் அக் கவசத்தின் 8 பங்கு கொண்ட விராட்டியில் புடமிட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் எடுக்க முழுப்பங்கும் செந்தூரமாகியிருக்கும்.

இச்செந்தூரத்தை யூனானி பாகப்படி செய்ய வேண்டின், முன் கூறிய சரக்குகளை முன்போலவே அரைத்து வில்லைதட்டிக் உலரவைத்து ஒரு சட்டியில் வைத்து மறுசட்டிமூடி 7 சீலைமண் செய்து அடுப்பேற்றித் தீபாக்கினியாய் நான்கு சாமம் எரித்து ஒருநாளாறவிட்டு மறுநாளெடுக்க மூன்றிலொரு கூறு செந்தூரமாகி இருக்கும். இதனை முன் திராவகம்விட்டு முன்போலவே நான்கு சாமம் அரைத்து முன்போலவே வில்லைதட்டிக் காயவைத்து நன்றாய் உலர்ந்த பின்பு முன்போலவே சட்டியில் வைத்து நான்கு சாமம் எரித்து எடுக்க மூன்றிலிரண்டு பங்கு செந்தூரமாகியிருக்கும்.

மூன்றுந் தடவையும் முன்போலவே அரைத்து உலர வைத்துச் சட்டியில் வைத்து முன்போலவே எரித்தெடுக்க, முற்றும் செந்தூரமாகி அருணனைப்போல இருக்கும்.

(3) முன்கூறிய சரக்குகளையெல்லாம் முன் திராவகம்விட்டு நான்கு சாமமரைத்து வில்லைசெய்துலர்த்தி ஈரமின்றி உலர்ந்த பின்பு பொடித்து அக்கினிப் பீங்கானிலிட்டு முன்கூறிய திராவகத்தைத் தெளித்துப் புகையாமல் ஒரு சாமம் வறுத்துக்கொள்ள வேண்டும். நன்றாய்க் குளிர ஆறினபின்பு மறுபடியும் அதைக் கல்வத்திலிட்டு முன்கூறிய திராவகத்தைவிட்டு முன்போலவே அரைத்து முன்போலவே வில்லைதட்டி உலர வைத்துப் பின்பு பொடித்து முன்போலவே வறுத்தெடுத்து ஆற வைத்து மூன்றும் தடவையும் முன்போலவே செய்துகொள்ளில், மிக மேலான செந்தூரமாகும். இதன் பயன் அனேகம் எழுதப்பட்டிருக்கின்றன. அவையெல்லாவற்றையும் இங்கெழுதுவதானால் இச்சிறிய நூல் அதிக விரிவெய்துமாகையால் அவற்றுள் முக்கியமான இரண்டொரு முறைகளை மட்டும் இங்கெழுதுவோம்.

## 283. செகமோகன சித்த இளகம்

நிஷாஸ்தா 4 பலம் (140 கிராம்), இதை தூய்மைபடுத்தத் தெரியாதவர்கள் இதற்குப் பதிலாக கோதுமை 2 பலம் (70 கிராம்), கோதுமை நெய் (2 பலம்), சீமைநீர்முள்ளி விதைத் தூள் (இது கிடைக்காவிட்டால் நாட்டு நீர்முள்ளி விதைத் தூள்) 4 பலம் (140 கிராம்), நிலப்பனைக் கிழங்குத் தூள் 4 பலம், சன்னலவங்கப்பட்டைத் தூள் 4 பலம், பேரீச்சம்பழம் 4 பலம், கருவேலம் பிசின் 2 பலம் (70 கிராம்), கஞ்சா 2 பலம், அரிசித் திப்பிலித் தூள் ½ பலம் (17½ கிராம்), சாதிக்காய், பன்னீர் விட்டிழைத்து உலர்த்தின சந்தனம் ஆகிய இவற்றின் தூள் வகைக்கு 2 விராகன் எடை (7 கிராம்), சீனிச்சர்க்கரை 20 பலம் (700 கிராம்), நெய் 20 பலம், தேன் 10 பலம் (300 கிராம்).

செய்முறை :—கஞ்சாவை 7 தடவை தேய்த்துக் கழுவி தூய்மைசெய்து நான்கு படி பசுவின்பாலில் போட்டுக் காய்ச்சிப் பிரைக்குற்றிக் கடைந்து வெண்ணெயாக்கி உருக்கி நெய்யாக்கிக் கொள்ளவும். இதற் கஞ்சா நெய் எனப் பெயர்.

நிஷாஸ்தாவைத் தூள்செய்து நெய்யிற் சிவக்க வறுத்துக் கொள்ளவேண்டும். (நிஷாஸ்தா இல்லாவிட்டால் கோதுமை மாவையும், கோதுமை நெய்யையும் தனித்தனியே நெய்யில்

வறுத்துக் கொள்ளவேண்டும்). பின்பு இதனை அம்மியில் வைத்து மைபோலப் பொடித்துக் கொள்ளவேண்டும். பேரீச்சம் பழத்தையும் நெய்யில் வறுத்தெடுத்து அம்மியில் வைத்துக் கொஞ்சம் பசுவின் பால்விட்டு மைபோல அரைத்துக் கொள்ளவேண்டும். கருவேலம் பிசினையும் நெய்யில் வறுத்தெடுத்து அம்மியில் வைத்து நுண்மையாய்ப் பொடித்துக் கொள்ளவேண்டும். பின்பு எல்லாத் தூள்களையும் ஒன்றாய்ச் சேர்த்து சீனிச்சர்க்கரையைக் காய்ச்சிப் பாகு பக்குவத்தில் மேற்படித் தூள் கலவையைப் போட்டு நன்றாய்க் கிளறிக் கீழிறக்கித் தேனைவிட்டுக் கிளறிப் பின்பு கஞ்சா பக்குவ நெய்யை விட்டுக் கிளறி முடிவில் முன் நெய்யில் மிச்சமாயிருப்பதையும் விட்டு நன்றாய்க் கலந்து குளிர ஆறினபின்பு பீங்கான் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும்.

**பயன்படுத்தல்** :—மேற்கூறிய செந்தூரத்தை இந்த இளகத்தில் துணைமருந்துடன் உட்கொண்டுவர நரம்பு சம்பந்தமான எல்லா நோய்களையும் நீக்கி உடல் பலம், மன ஊக்கம் மன வலிமை, மனதிடம் முதலிய அனேக குணமுண்டாகும். இதனைக் கற்பமாகவும் சில பெரியோர்கள் உட்கொள்வார்கள். கஞ்சாவைச் சேர்க்க விருப்பமற்றவர்கள் அதனை நீக்கிவிட்டு மற்ற பொருள்களைச் சேர்த்துச் செய்துகொள்ளலாம். எவ்வித காரணத்தாலுண்டான பலவீனம் வலிமைக் குறைவு, உடற் சோர்வு முதலியவைகளை நீக்கும். இருதயம், ஈரல், இரைப்பை, தலைமூளை முதலிய இராச கருவிகள் பலப்பட்டு இரத்த விருத்தி, ஆயுள் விருத்தி முதலியவை உண்டாகும். இதன் சிறந்த குணம் பலவாகையால் இதை அனுபவ சித்தமாய் அனுபவிக்கும் பண்டிதர்கள் முதல் எல்லோரும் தெரிந்துகொள்ளக் கூடுமாகையால் இதுவரையில் நிறுத்தப்பட்டது.

## 284. சீனு அல்வா

பறங்கிச் சக்கை அல்லது பறங்கிப் பட்டை 4 பலம் (140 கிராம்) தூள்செய்து கொள்ளவும். ஒரு மண் பாத்திரத்தில் அரைப்படி பசுவின் பாலையும், அரைப்படி தண்ணீரையும் கலந்து ஊற்றி அப்பாத்திரத்தின் வாயில் மெல்லிய துணியால் வேடுகட்டி அதன்மேல் மேற்படி பறங்கிப்பட்டைத் தூளை வைத்து அதன் மேல் ஒரு பெரிய சட்டியைக் கவிழ்த்துப் பால் சுண்டுகிற வரையில் வைத்தெரித்துக் கொஞ்சம் பாலிருக்கும்போதே இறக்கிச் சற்றுத் தாமதித்துச் சூடாறினவுடன் எடுத்து நிழலில் உலர்த்தி ஈரமில்லாமல் நன்றாயுலர்ந்த பின்பு அம்மியில் அல்லது கல்வத்தில் பொடித்துக்கொள்ளவேண்டும்.

கல்மதப் பொடி 4 விராகனெடை (14 கிராம்), சிறுநாகப் பூத்தூள், கசகசா சாதிப்பத்திரித் தூள், வாலுழுவையரிசித் தூள் ஆகிய இவை வகைக்கு 2½ வராகன் எடை, சீனுக்கற்கண்டுப் பொடி 10 பலம் (350 கிராம்), பசுவின் நெய் 4 பலம் (140 கிராம்), தேன் 1 பலம் (35 கிராம்), பசுவின் பால் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—கசகசாவைச் கொஞ்சம் பசுவின் பால்விட்டு வெண்ணெபோல் அரைத்தெடுத்துக் கொள்ளவும் பின்பு, மற்றெல்லாத் தூள்களேயும் ஒன்ருய்க் கலந்து அரைத்து கசகசாவை இதில் சேர்த்துக்கொள்ளவும். பின்பு பசுவின் பாலிற் கற்கண்டைக் கரைத்து அடுப்பேற்றிக் காய்ச்சிப் பாகு பக்குவத்தில் முன் தூய்மைப்படுத்தி வைத்திருக்கிற தூள் கலவையைப் போட்டு நன்ருய்க் கிளறிக் கீழிறக்கி நெய்யை விட்டுக் கிளறிப் பின்பு, தேனேயும் சேர்த்து ஆறினபின் பீங்கான் பாண்டத்தில் பத்திரப்படுத்தவேண்டும்.

**பயன்படுத்தல்:**—இந்த இளகத்தில் வேளே ஒன்றுக்கு வராகன் எடை 3, 4 எடுத்து அதில் முன்கூறிய செந்தூரத்தை சேர்த்துக் கொள்ள மேக சம்பந்தமான எல்லா நோய்களும் தீரும். வெட்டைச்சூடு, பிரமியம், நீர்த்தாரை இரணம், புண்கள், புரைகள், மேகத்தடிப்பு, மேகச்சிட்டங்கள், குட்டம், குறைநோய் முதலியவை தீரும். இதற்கு எவ்விதப் பத்தியமுமில்லேயாதலால், ஆண்கள், பெண்கள், சிறுவர்கள் முதலிய எல்லோருக்கும் பயன்படும். மேலும், இது வாதம், பித்தம், சிலேத்துமம் என்ற மூவ்வுடலார்க்கும் பொருந்துவதுமன்றி குறிஞ்சி, முல்லே, மருதம், நெய்தல் என்றும் நானிலத்திலும் பயன்படுத்தலாம். கோடைகாலம், மழைகாலம் என்ற விகற்பமின்றி எல்லாக் காலத்திலும் பயன்படுத்தக்கூடும். ஆனுல், அனுபவசாலிகளான மருத்துவர்கள் சமயோசிதமாய் பயன்படுத்தி வெற்றி பெறத்தக்க முறையாகையால் உடல் வலிமை, நோய் வலிமை முதலியவைகளுக்கேற்ற விதமாய்ப் பக்குவமாய்க் கொடுத்தால் மேற்கண்ட பற்பல நோய்கள் கடவுளின் அருளால் தீருமென நம்பிக்கையோடு சொல்ல ஏதுவுண்டு.

## 285. அசுவகந்தி இளகம்

திறமான சீமை அமுக்கிராக் கிழங்குத் தூள் (அகப்படாவிட்டால் சுத்தமான நாட்டு அமுக்கிராக்கிழங்கைச் சேர்த்துக் கொள்ளலாம்) 4 பலம் (140 கிராம்), மேல்தோல் போக்கியிடித்து துணியில் சல்லித்த அதிமதுரத் தூள் 3 பலம் (105 கிராம்),

வறுத்து தூள் செய்து வடிகட்டிய ஓமத் தூள் 3 பலம் (105 கிராம்), கல் முதலியவைகள் நீக்கப்பட்ட கசகசா 3 பலம் (105 கிராம்). இதனை சற்று இளவறுப்பாய் வறுத்து அம்மியில் வைத்துக் கொஞ்சம் நீர் தெளித்து வெண்ணெபோல அரைத்தெடுத்துக் கொள்ளவேண்டும். சீமைநீர்முள்ளி விதைத் தூள் 3 பலம் (105 கிராம்), (இது அகப்படாவிட்டால் நாட்டு நீர்முள்ளி விதைத் தூளைச் சேர்த்துக் கொள்ளலாம்.) மேல்தோல் சீவப்பட்ட சுக்கு, மிளகு, அரிசித் திப்பிலி, வால்மிளகு, மஞ்சட்கடுக்காய்த் தோல், சாதிக்காய், சாதிப்பத்திரி, இலவங்கம், இலவங்கப் பட்டை, அக்கராகாரம், வாய்விளங்கம், தாளிசபத்திரி இவற்றைத் தனித்தனியே இடித்தத் தூள் வகை ஒன்றுக்கு 1 பலம் (35 கிராம்) இசுப்கோல் விதை 1 பலம் (35 கிராம்) இதனைக் கொஞ்சம் நீரில் போட்டு ஊற வைத்து இதன் கோழையை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும். இதனை யிடித்தால் இதற்கு நஞ்சின் சுபாவமுண்டாகிவிடுமென ஞாபகத்தில் வைக்க வேண்டும். சீனி சர்க்கரை 32 பலம் (1120 கிராம்) நெய் 8 பலம் (280 கிராம்) தேன் 8 பலம் (282 கிராம்)

செய்முறை :—மேற்கூறியப்படி தயார்செய்த தூள்களையும் அரைத்த கசகசாவையும் இசுப்கோல் கோழையையும், ஒன்றாய்ச் சேர்த்துக் கொள்ளவும். பின்னர் சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் தயார்ப்படுத்தி வைத்திருக்கும் தூள் வகையறுக்களைக் கொட்டிக் கிளறி நெய்யைவிட்டு நன்றாய்ப் புரட்டிப் பின்பு தேனைச் சேர்த்து நன்றாய்க் கீழ்மேலாகக் கிளறி குளிர ஆறினபின் பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

பயன்படுத்தல் :—இந்த இளகத்தில் வேளை ஒன்றுக்கு $1\frac{1}{2}$ அல்லது 2 வராகன் எடை எடுத்து முன் செந்தூரத்தை இதில் வைத்துச் சாப்பிட்டு வர கப சம்பந்தமான எல்லா நோய்களும் குணமாகும். இதனால் உடல் பெருக்கும். கணச்சூடு, வெட்டைச் சூடு முதலிய நோய்கள் குணமாகும். இதன் பயன் பலவாயினும் அனுபவசாலிகள் சமயோசிதமாய் உபயோகித்து வெற்றி அடைவார்களென்பதில் சந்தேகமில்லை.

குறிப்பு :— மேற்கண்ட சதுர்முக செந்தூரமானது அதிகக் காரமானதாகையால் மிகவும் குறைந்த அளவாய் உபயோகிக்க வேண்டியது. சாதாரணமான உடலினர்க்கு ஒரு குன்றிமணி எடையில் பதினாறில் ஒரு பங்கு கொடுக்கவேண்டும். வலிமையுள்ள உடலினர்க்கு கொஞ்சம் அதிகப்படுத்தியும் கொடுக்கலாம்.

இச் செந்தூரத்தைக் கற்பமுறையாக ஒருவருடம் சாப்பிட்டால் நரை திரை மாறி மூப்பு நீங்கி இளமை உண்டாகும்.

## 286. கட்டுவகைத் திராவகம்

பாகப்படுத்தின பூநீர் $\frac{3}{4}$ படி, பாகப்படுத்தின வெடியுப்பு $2\frac{1}{2}$ படி, (இதனைத் தூள் செய்து கொள்ளவேண்டும்), படிக்காரம் 2 பலம் (70 கிராம்) இதையும் பொடித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

செய்முறை :— வெடியுப்பைத் தண்டவாளச் சட்டியில் போட்டு அடுப்பேற்றி மெதுவாக எரிக்க உப்பானது உருகி நீர் போலாகும். அப்போது பூநீரைச் சேர்த்து இரும்புக் கரண்டியால் நன்ருய் மத்தித்து இரண்டும் கலந்தவுடன் படிக்காரத் தூளைத் தூவியிடைவிடாமல் மத்தித்துவர சட்டியிலுள்ள உப்பானது உரைந்துபோகும். அப்படியே சட்டியைக் கீழிறக்கி ஆற வைத்தால் உப்பானது இறுகிக் கல்லைப்போலாகிவிடும். இதை உளியினல் கொஞ்சமாய்ச் சேதமில்லாமல் வெட்டியெடுத்துக் கல்லுரலில் இரும்புலக்கையால் இடித்துத் தூள் செய்து ஒரு பீங்கான் தட்டில் போட்டுப்பின் காண்கிறபடி செய்யவேண்டும்.

(2) கட்டின கறியுப்பின்* தனி செயநீர் $1\frac{1}{2}$ படி இதனைச் சிறுகச் சிறுக முன் தயார்ப்படுத்தியிருக்கிற உப்பில் தெளித்துப் பகலில் வெய்யிலில் உலர்த்த வேண்டும். இவ்விதம் அந்த $1\frac{1}{2}$ படி செயநீரையும் 10 நாளைக்குள் செலுத்திவிடவேண்டும்.

(3) பின்பு ஜவத்தூள் எண்ணெயால் கட்டினத் தனி நவச்சார செயநீர் $1\frac{1}{2}$ படி இந்த செயநீரையும் முன் செய்ததுபோலவே மேற்படி உப்பில் சிறுகச் சிறுகத் தெளித்து வெய்யிலில் உலர்த்த வேண்டும். இவ்விதம், அந்த செயநீர் சென்றபின் இரண்டு மூன்று நாள் தனியாய் வெய்யிலில் உலர்த்தவேண்டும்.

பின்பு அதை 7 பங்காக்கி ஒரு பங்கை வாலையிலிட்டுப் பாகப் படி திராவகம் இறக்கிக்கொள்ளவும். மறுபடியும் மற்ருெரு பாகத்தைக் கல்வத்திலிட்டு முன்னிறக்கின திராவகத்தை விட்டரைத்து இரண்டாந் தடவையும் வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இவ்விதம் 7 பங்கையும் 7 தடவைகள் அப்போதைக்கப்போது இறக்கப்படும் திராவ கத்தை விட்டரைத்து மீண்டும் மீண்டும் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

---

* கட்டின தனியுப்பைச் செயநீர் செய்யும் வகை முதற்பாகத்தில் எழுதப் பட்டிருக்கிறது.

பின்பு இந்தத் திராவகம் 10 பலம் (350 கிராம்), கட்டின வீரம், கட்டின இரசகற்பூரம் இவ்விரண்டும் வகைக்குப் பலம் ஒவ்வொன்ருக நன்ருகப் பொடித்து முன்கூறிய திராவகத்துடன் சேர்த்து வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும் இதுவே கட்டுவகைத் திராவகமாகும்.

பயன்படுத்தல்:—கட்டவேண்டிய சரக்குகளை இந்தத் திராவகத்தில் நனைத்து நனைத்து நெருப்பில் வாட்டவேண்டும். அல்லது அந்த சரக்கை அப்பிரகத் தகட்டின்மேல் வைத்து 1 அல்லது 2 சாமம் சுருக்கிட எல்லா சரக்குகளும் கட்டுப்பட்டுப்போகும். மேற்கண்டபடி செய்யப்பட்ட திராவகத்திற்குச் சிவத்திராவகமென மறுப்பெயருமுண்டு.

## 287. கட்டுவகைத் திராவகம் (வேறு)

முதற் பாகத்தில் 121ஆம் பாகப்படி தயார்ப்படுத்தின சவுக்காரநீர் 10 பலத்துக்கு கட்டினவீரம், கட்டினபூரம் இவ்விரண்டும் வகை ஒன்றுக்குப் பலம் ஒவ்வொன்ருக நன்ருய்ப் பொடித்துச் சேர்த்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டும்.

இந்தத் திராவகம் பலம் 10-க்கு (350 கிராம்) கட்டினவீரம், கட்டினபூரம் இவ் விரண்டும் வகை ஒன்றுக்கு அரை பலமாக (17½ கிராம்) நன்ருய்ப் பொடித்துச் சேர்த்து மறுபடியும் வாலையிலிட்டுப் பாகப்படித் திராவகம் இறக்கிக்கொள்ளவேண்டும்.

மறுபடி முன்கூறிய திராவகத்தில் 'முன்கூறிய கணக்கின் படியே, சவ்வீரம், பூரம் என்னும் இரண்டையும் பொடித்துச் சேர்த்து முன்போலவே திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இதற்கும் சிவ திராவகம் எனப்பெயர்.

பயன்படுத்தல்:—மேற்படி பாகத்திற்கு சொன்னபடி செய்து எல்லாச் சரக்குகளையும் கட்டலாம்.

குறிப்பு:—120ஆம் பாகத்தில் சொல்லியிருக்கின்றபடி தயார் செய்யப்பட்ட சவுக்காரநீர், இன்னம் பூநீர், நவாச்சாரம், வெடியுப்பு என்னும் இவை மூன்றின் சம்பந்தமாய் செய்யப்பட்ட செயநீர், அண்டநீர், அண்ட செயநீர் முதலியவைகளுடனும் முன் சொல்லப்பட்டிருக்கிற சாரதீக்ஷணநீர், சாரநீர். சுண்ணசாரநீர் முதலியவைகளுடனும் மேற்கண்டபடி வீரம், பூரம், என்னும்

இரண்டையும் சேர்த்துத் திராவகமிறக்கிக் கட்டுவகைத் திராவக மாகச் செய்துக்கொள்ளலாம். ஆனுல், அதனதன் சக்திக்கு தகுந்ததுபோல சுறுசுறுப்பாகவும், வீரியமுள்ளதாகவும் சரக்கு களைக் கட்டும்.

## 288. மெழுகுவகை திராவகம்

முன் சொல்லப்பட்டிருக்கிற கட்டுவகைத் திராவகம் அல்லது சிவத்திராவகம் 10 பலம் (350 கிராம்) வீரம், பூரம், நவச்சாரம், படிக்காரம், என்னும் இந்நான்கும் வகைக்கு ½ பலம் (17½ கிராம்) எடுத்து மைப்போலப் பொடித்துச் சேர்த்து வாலையிலிட்டு திராவகம் பாகப்படி இறக்கிக் கொள்ளவேண்டும் இதுவே மெழுகு வகைத் திராவகமாம். இதற்குச் சத்தி திராவகமென மறு பெயரும் உண்டு.

இதில் மேற்கண்ட வீரம், பூரம், நவச்சாரம் என்னும் இவற்றைக் கட்டுப்படுத்திச் சேர்த்தால் அதிகச் சிறப்புதான். மேலும் இத் திராவகத்தையே 3 அல்லது 5 தடவைகள் மீண்டும் மீண்டும் இறக்கிக் கொண்டால் கடுங்காரமாயிருக்கும்.

இந்தப் பாகத்தைக் கைபாகமாய்க் கஷ்டப்பட்டு முடித்தால் வைத்தியம், வாதம், என்ற இருவகைக்குமாகும் மெழுகுகளை முடித்துக் கொள்ள ஏதுவாகும்.

இந்தத் திராவகத்தால் கட்டின சரக்குகளை அந்தந்த இனத் திற்குத் தகுந்தபடி பக்குவப்படுத்த மெழுகாகும். இதற் கெல்லாம் கைபாகம் செய்பாகம் முதலியவைகளைச் சுட்டிக் காட்டவேண்டும். தொட்டுக் காட்டாத வேலை சொட்டுப் போட்டாலும் வராது என்னும் பழமொழியொன்றும் வழங்கி வருகின்றது. ஆனுல், புத்திமான்கள் தங்கள் தங்கள் நுட்ப அறிவின் அரிய சாமர்த்தியத்தாலும் சிறப்பான பாகத்தைக் கண்டு செய்து முடித்து யாவருக்கும் பயன் உண்டாகும்படி செய்வார்கள்.

## 289. செந்தூரவகைத் திராவகம்

முன்சொல்லப்பட்டிருக்கிற கட்டுவகைத் திராவகம் அல்லது சிவதிராவகம் 1 பங்கு, முன் சொல்லப்பட்டிருக்கிற மெழுக்கு வகைத் திராவகம் அல்லது சத்தி திராவகம் 1 பங்கு, இவ்விரண் டையும் ஒன்ருய்க் கலந்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்வதே செந்தூரவகைத் திராவகமாகும். இதற்கு சிவசத்தி திராவகம் என மறுபெயருமுண்டு.

இந்தத் திராவகத்தை முன்கூறிய முறைப்படி கட்டின அல்லது மெழுகாக்கின சரக்குகளில் விட்டரைத்துப் பாகப்படி புடம்போட அல்லது சட்டியில் வைத்து மேல் சட்டிமூடி சந்தில்லாமல் சீலேமண் செய்துலர்த்தி அடுப்பில் வைத்து அந்தந்தச் சரக்கிற்குத் தகுந்தபடி 2, 3 அல்லது 4 சாமம் எரித்தெடுக்க செந்தூரமாகும்.

மேற்கண்ட முறைகளால் அனுபவசாலிகளான அறிவாளிகள் அநேகமுறைகளைத் தொந்தமேற்றிச் செய்து கொள்வார்கள். இரசவாத சம்பந்தமான அநேக முறைகளிலும் அநேக சிறந்த முறைகளையும் தெரிந்து செய்து கொள்வார்கள். ஆகையால். அவ் வகையார்களையடுத்து அவர்கள் மனமிரங்கும்படி தொண்டு செய்து, தம் மேல் பிரியமுண்டாகும்படிச் பற்பலவித சகாயமும் செய்தும் மனமகிழ்ச்சியோடு தரும்படி செய்து நாம் அம் முறைகளைப் பெற்றுக் கொள்ளவேண்டும்.

குறிப்பு:—மேற்கண்ட திராவகங்களைச் செய்ய துன்பம் முதலியவை உண்டெனினும், அதற்குத் தகுந்த பயனும் உண்டு. பாடுபட்டால் பலனுண்டு என்பதற்கேற்ப இம் முறைகளைக் கைபாகமாகவும் கவனத்துடனும் செய்துகொண்டால் எல்லாங் கைகூடுமென்பதில் சந்தேகமில்லை. ஆனால் அனுபவம், ஊக்கம், முயற்சி முதலியவைகளில்லாத சிலர் இம் முறைகளை இவ்வித கஷ்டத்தோடு எவ்விதம் செய்யக்கூடும். இது மனிதரால் ஆகிறதா? எனப் பலவிதமாய்ப் பிதற்றுவதுமுண்டு. இத்தகையினர்கள் இப் பாகங்களையேனும் மற்றெப்பாகங்களையேனும் ஒரு போதும் செய்யார்கள். வீண் வார்த்தைகளையும், பொய்க்கட்டுக்களையும், தலைகாலில்லாச் சாமர்த்தியங்களையும் வாய்ப் பேச்சாகவே சொல்லித் திரிவார்கள். இத்தகையினர்கள் தாம் கெடுவதுந்தவிர தம்மைச் சார்ந்தவர்கள், சினேகிதர்கள் முதலிய எல்லோரையும் கெடுத்துவிடுவார்கள். கண்டவர்களின் பேச்சைக் கேட்டு எல்லாவற்றையும் பொன்மயமாக்கி விட வேண்டுமென்னும் பித்தம் தலைக்கேறி கைப்பொருள் முதலிய எல்லாவற்றையுமெரித்து கரியாக்கி ஏழ்மை நிலையிலாகி விடுகின்றார்கள். இப்படி இவர்களுக்கு நேரிடுவதெல்லாம் தக்க நூல்ப் பயிற்சியில்லாமையும், உண்மையான ஆசானுதவியில்லாமையே காரணம். இதற்கெல்லாம் மேலாக, இவர்களுக்கு உண்டாகும், எல்லையிலாப் பேராசையே பிரதானமென நிச்சயமாய்ச் சொல்லலாம். ஏனெனில், உண்மையான இரக்கச் சிந்தனை, உயிர்களிடத்தில் உண்மையான பேரன்பு முதலியவைகளுடைய நல்லோர்வளுக்கு மாத்திரம் இவையெல்லாம் சித்தியாகுமேயொழிய

மற்றோர்களுக்கு சித்தியாவது மிகவும் துர்லபம். ஆகையால் கடவுளின் மீது நமது முழு நம்பிக்கையையும் வைத்து உண்மைப் பரோபகாரம், உண்மை சீவகாருண்யம் முதலியவையுடையோர் களாய் இருப்பின் நாம் எதைத் தொட்டபோதிலும் அது துலங்கும் என்பதிற் சந்தேகமில்லை.

## 290. மகாசீன திராவகம்

நாலாங்காய்ச்சல் வெடியுப்பு 30 பலம், படிகாரம் 20 பலம் சிவக்க வறுத்த அன்னபேதி 10 பலம், நாயுருவியுப்பு 6 பலம் பாகப்படுத்தின பூநீர் 5 பலம், பாகப்படுத்தின நவச்சாரம் 4 பலம், சவுட்டுப்பு 3 பலம், கல்லுப்பு 2 பலம், வளையலுப்பு 1 பலம், இந்துப்பு ½ பலம்.

செய்முறை—இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியேப் பொடித்துப் பின்பெல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து மறு படியும் அரைத்துப் பனியில் மூன்று நாள் அல்லது உப்பெல் லாம் நைப்பாகிறவரையில் பனியில் வைத்து 5 பாகமாய்ச் செய்து ஒரு பாகத்தை வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். பின்பு மற்றொரு பாகத்தைக் கல்வத்திலிட்டு முன் திராவகத்தை விட்டு ஒரு சாமமரைத்து வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும் மறுபடி மற்றொரு பாகத்தைக் கல்வத்திலிட்டு இரண்டாந் தடவை இறக்கின திராவகத்தை ஊற்றி ஒரு சாமம் அரைத்து வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். மற்ற இரண்டு பாகத்யையும் முன்போலவே அப்போதைக்கப் போது இறக்கும் திராவகத்தை விட்டரைத்து மடக்கி மடக்கித் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தல் :**—இத்திராவகத்தால் எல்லாச் சரக்குகளையும் கட்டலாம். கட்டவேண்டிய சரக்குகளை திராவகத்தில் நனைத்து நனைத்துக் கரிநெருப்பில் வாட்டவேண்டும். இவ்விதம், இரண் டொரு முறை செய்யப் பொருள்கள் கட்டுப்பட்டுப்போகும். அல்லது கட்டவேண்டிய சரக்கை இத்திராவகத்தில் நனைத்துத் தீயில் காட்டிக் கொளுத்திக் கொள்ளவேண்டும் அல்லது சரக்குகளை வாலையிலிறக்கின திராவகத்தை விட்டரைத்து திராவகம் இறக்கி அக்கினிப் பீங்கானில் வைத்துக்கொண்டு சரக்குகளின் மீது தெளித்துத் தெளித்து வறுத்தெடுத்துக் கொள்ளலாம். சரக்கெல்லாம் கட்டுப்பட்டுப்போகும்.

இவ்விதம் கட்டப்பட்ட சரக்கை, பற்பம் செந்தூரம் முதலியவைகளாகச் செய்தால் வாதம் மருத்துவம் என்ற இரு வகையிலும் சிறந்த குணத்தைக் கொடுக்கும்.

## 291. இந்திரசாலத் திராவகம்

முதற்பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிற சேகரிக்கப்பட்ட பூநீர் தெளிநீர் 10 படி, முதற் பாகத்தில் சொல்லப்பட்டிருப்பது போல பாகப்படுத்தின பனிநீர் 40 படி,இவ்விரண்டையுங் கலந்து பெரியதான திராவகப் பாண்டத்திலிட்டுத் திராவகமாக இறக்கிக் கொள்ள வேண்டும். வாலைப்பாண்டம் சிறியதாக இருந்தால் இரண்டு மூன்று தடவைகளாகவும் இறக்கிக் கொள்ளலாம் திராவகம் இறக்கினபின் திராவகப் பாண்டத்தில் தங்கி நிற்கும் வண்டலிலும் பாகப்படுத்தின பனிநீரை விட்டுக் கரைத்துத் திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும். இத்தடவையும் ஏதேனும் வண்டல் படிந்திருந்தால் அதிலும் பாகப்படுத்தின பனிநீரைவிட்டுக் கலக்கி மூன்றும் தடவையும் திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டும். இவ்விதம் சேகரித்த திராவகத்தை எல்லாம் அகண்ட பீங்கான் பாண்டத்தில் விட்டுப் பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து திராவகத்தையெல்லாம் உப்பாக்கிக் கொள்ள வேண்டும்.

முன்போலவே சேகரிக்கப்பட்ட இவ்வுப்பில் பாகப்படுத்தினப் பனிநீரை விட்டுக் கலக்கி நான்காம் தடவையும் திராவகம் இறக்கி முன்போலவே அகண்ட பீங்கான் பாண்டத்தில் இட்டுப் பகலில் வெய்யிலிலும் இரவில் பனியிலும் வைத்து உப்பாக்கிக் கொள்ள வேண்டும்.

இவ்விதமே மடக்கி மடக்கி பத்துத் தடவைகள் செய்தால் பூநீரானது எல்லாவித மாசுகளுமற்று மிகவும் மேன்மையானதாயிருக்கும். இதுவே (தசதீட்சை) என்றும் சொல்வார்கள். ஆனல், பூநீரானது கைப்பு, எண்ணெய் முதலிய மாசுகளினின்றும் நீக்கப் பட்டிருக்கும்.

ஐந்தாங் காய்ச்சல் வெடியுப்பு 4 வீசை கோது, கொட்டை முதலியவை நீக்கித் தூய்மை செய்யப்பட்ட புதுப்புளி 4 வீசை, இவ்விரண்டையும் சேர்த்து மரஉரலிலிட்டு இடித்து மைபோலான பின்பு சிறு வில்லைகளாகச் செய்து அடுப்பில் இரும்புச் சட்டியை ஏற்றி அதில் நந்நான்கு வில்லைகளாக வைக்க, அவை ஒருவித சீறலுடன் எரிந்து சாம்பலாகிவிடும். இவ்விதம் எல்லா வில்லைகளையும் வைத்தெரித்து நன்றாய்ப் பக்குவமான சாம்பலாக்கிக் கொள்ளவேண்டும்.

இச்சாம்பலை பீங்கான் தட்டிற் போட்டுப் பனியில் சற்றுச் சாய்த்து வைக்க நீர் கசியும். நீரானது கசிய கசிய அதையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துப் பளிங்குக்குப்பியில் பத்திரப்படுத்தவும்.

இவ்விதம், வைத்த சரக்கெல்லாம் நீராகிறவரையிற் பனியில் வைத்து நீராக்கிக் கொள்ள வேண்டும். அல்லது செயநீர்க் குழியில் வைத்துச் செயநீராக்கிக் கொள்ள வேண்டும்.

இந்தச் செயநீரை வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கி மறுபடியும் அந்தத் திராவகத்தை மடக்கி மடக்கி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இவ்விதம் அந்தத் திராவகத்தையே மடக்கி மடக்கி மூன்று தடவைகள் இறக்கிக் கொண்டால் போதுமானதாகும். திராவகம் இறக்கும்போது அவசியமானால் பாகப்படுத்தின பனிநீரில் கொஞ்சம் சேர்த்தும் திராவகம் இறக்கிக்கொள்ளலாம். இதற்குத் தனி வெடியுப்புத் திராவகம் என்று பெயர். இதனை வெடியுப்பு நீரெனச் சொல்லப்படும்.

முதற்பாகத்தில் 79ஆம் முறையில் சொல்லப்பட்டிருப்பது போல தயாரித்து வைத்துள்ள சாரதீட்சணநீர் அல்லது, முதற் பாகத்தில் 81ஆம் முறையில் சொல்லப்பட்டிருக்கும் சாரநீர், இவ்விரண்டில் முன்னதே சிறந்தது. அது கிடைக்காவிட்டாலும் அதைச் செய்துமுடிக்க இயலாத காலத்திலும் பின்கண்ட பாகத்தைச் செய்து கொள்ளலாம். ஆயினும், முன்னதே, சிறந்ததென தெரிந்திருக்க வேண்டும்.

செய்முறை :—பூநீர் திராவகம் 2 பங்கு. வெடியுப்புத் திராவகம் 1 பங்கு நவச்சார திராவகம் $\frac{3}{4}$ பங்கு; முன் சொல்லப் பட்டிருக்கும் பாகங்களில் ஏதேனும் ஒருவகையாய்ச் செய்யப் பட்ட கறியுப்புத் திராவகம் $\frac{1}{2}$ பங்கு. இந்நான்கையும் சேர்த்துக் கண்ணாடி வாலையிலிட்டுப் பாகப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும். இத்திராவகத்தை மூன்றுந் தடவையும் கண்ணாடி வாலையிலிட்டுத் திராவகம் இறக்கிக் கொள்ள வேண்டும். இவ்விதம், இறக்கப்பட்ட திராவகத்தை இந்திரசால திராவகமெனவும் ஆதி திராவகமெனவும் பலவாறாகக் குறிக்கப் பட்டிருக்கிறது.

இந்தத் திராவகத்தை உப்பாக்கினதே முப்புச் சுண்ண மென்பது சிலர் கருத்து.

குறிப்பு :—இந்த முறையானது "மீஜானே கீமியான்" என்னும் பிரபலமான யூனானி இரசவாத நூலில் எழுதப்பட்டிருக் கிறது. இதனைப் பயன்படுத்தும்விதம் முதலிய விவரங்களெல்லாம்

எழுதப்படவில்லை. ஆகையால், அதிலிருப்பதுபோலவே நாமும் இங்கெழுத மனமுவந்தோம். ஏனெனில், இம்முறைகளில் அனுபவ சித்தி அடைந்த பலர் இருக்கலாம். இந்தப் பாகமானது மற்றவர்களுக்கு அவ்வளவாக பயன்படாவிட்டாலும் அத்தகையவர்களுக்கு எவ்வளவு பயன்படுமென நாமிங்கு எடுத்துரைப்பது அவசியமன்று. மேலும், இந்தப் பாகத்தைச் செய்துமுடிக்க விருப்பமுள்ளவர்கள் மேற்கண்ட அனுபவசாலிகளை அடுத்து அதன் முழு விவரத்தையும் கேட்டுத் தெரிந்துகொள்ளவும் ஏதுவாகும் என்பதில் ஐயமில்லை. இப்பாகத்தின் மாதிரியைப் பார்க்கில் மிகவும் சிறந்த குணமுள்ள ஒன்றெனக் காணப்படுகிறது. நமக்கு இதில் பயிற்சி இல்லாதபடியால் இதைப்பற்றி இங்கு விரிவாய் எழுத இயலவில்லை.

## 292. நாகக்கட்டுத் திராவகம்

சவ்வீரம், வெடியுப்பு, நவச்சாரம் இம் மூன்றும் வகைக்கு 2 பலம், இவற்றைத் தனித்தனியாகப் பொடித்து மறுபடி எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து ஒரு மணிநேரம் அரைத்து, ஏழு சீலைமண் செய்து உலர்த்தப்பட்ட ஒரு பளிங்குக் குப்பியில் போட்டு இதனை உள்ளிடத்துக் கொள்ளும்படியானதும் அடியில் தொளையிடப்பட்டதுமான வேறொரு பளிங்குக்குப்பியின் அடியில் பொருத்தி, சந்தில்லாமல் மூடி மேல்குப்பியின் வாய்க்கு மாக்கல்லால் மூடியிட்டு ஒரு சட்டியில் நாலங்குல மணலைப் பரப்பி, அதன்மேல் முன் தயாரித்து வைத்துள்ள குப்பியை வைத்து அடுப்பேற்றிக் காடாக்கினியாக தீயெரித்தால், மேல் குப்பியில் திராவகம் இறங்கும். அந்தக் குப்பியின் தொளைக்கு அருகில் திராவகம் வந்துவிட்டால், அடுப்பைச் சற்று நிறுத்தி சற்று ஆறினவுடன் மேற்குப்பியை எடுத்து அதிலுள்ள திராவகத்தை வேறொரு குப்பியில் ஊற்றிக் கொள்ள வேண்டும். மறுபடியும் முன் போலவே மருந்துள்ள குப்பியின் வாயில் பொருத்தி சந்தில்லாமல் மூடி வாய்க்கு மூடியிட்டு முன்போலவே அடுப்பேற்றி எரிக்கத் திராவகம் இறங்கும். இவ்விதம், கைபாகமாக இறங்கும் திராகவகத்தை எல்லாம் மிகவும் கவனத்தோடு எடுத்து ஒன்றாய்ச் சேர்த்து வைத்துக் கொள்ளவேண்டும்.

இதனைக் காரமானதாகச் செய்துகொள்ள வேண்டுமாயின் முன் சரக்குகளை முன்னளவே எடுத்து முன்னிறக்கின திராவகத்தை விட்டரைத்து முன்போலவே கைபாகமாய்த் திராவகம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தல்:**—சிறுகண் நாகத்தை உருக்கி, உருக்கு முகத்தில் கட்டின நவச்சாரப் பொடியைக் கொஞ்சம் தூவி இலுப்பெண்ணெயிற் சாய்க்கவேண்டும். பின்பு உருக்கி முன் போலவே கட்டின நவச்சாரப் பொடியைக் கொஞ்சம் தூவி முன் போலவே இலுப்பை எண்ணெயில் சாய்க்கவேண்டும். இவ்விதம், 21 தடவைகள் செய்து எடுக்க நாகமானது தூய்மையாகும். பின்பு இந்த நாகத்தில் ஒரு பலமெடுத்து மண் பாண்டத்திலிட்டு உருக்கி, உருக்கு முகத்தில் ஒவ்வொரு துளியாக மேற்படி திராவகத்தை விடவேண்டும். இவ்விதம், ஏறக்குறைய 1 முதல் 1½ சாமம் செய்யின் நாகமானது கண்ணடங்கிக் கட்டும், அப்படிக் கட்டுப்படாமலிருந்தால் மறுபடியும் முன்போல 1 அல்லது 2 மணி நேரம் செய்துகொள்ளவும்.

இது கட்டுப்பட்டதை அறிய ஆய்தல்:—நல்ல வெள்ளி 7 பங்கு அயத்தாமிரம் அல்லது தூய்மையான தாமிரம் 3 பங்கு; இவ்விரண்டையும் உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி நாகம் ஒரு பங்கு கொடுத்து, பின்பு எல்லாவற்றையும் நன்ருக உருக்கி எடுத்து ஓட்டில் வைத்து அரைபாகம் தாமிரம் அறும்படியாக ஊதியெடுத்து விரும்பம்போல் தாயைச் சேர்த்துப் பயன்படுத்தலாம். இது ஒருவகை வாதப் பொன்னுகும். அனுபவமுள்ளவர்கள் தம்தம் விருப்பம்போல் செய்து கொள்வார்கள்.

## 293. குப்பியை வைத்துத் தொளையிடுதல்

மேற்கண்ட பாகங்களுள் பலவற்றைக் குப்பியினுல் திராவகம் இறக்கிக் கொள்ளலாம். மேலும், சரக்குகள் சொற்ப எடையுள்ளதாயினும் குப்பியில் திராவகம் இறக்கிக் கொள்வது எளிது. ஆகையால், குப்பியில் தொளையிட (துவாரமிட) தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். அவை பின்வரும் விதமாகும்.

ஷாம்பேயின் வைன் என்னும் சாராயம் மேல் நாட்டிலிருந்து கொண்டுவரப்படுகிற புட்டி இதற்கு மிகவும் பயன்பாடு உள்ளது. அது அகப்படாதபோது புட்டியின் அடியிலுள்ள குமிழானது உள்நோக்கி அகழ்ந்து, புட்டியின் நடுவில் உயர்ந்திருக்க வேணடும். இத்தன்மையான புட்டியொன்று சேகரித்து அதைத் தலைகீழாகக் கவிழ்த்துத் துவாரஞ் செய்ய வேண்டிய பாகத்தில் கொஞ்சம் சூடனை வைத்துக் கொளுத்திவிட வேண்டும். அது எரிந்தடங்கினவுடன் மறுபடியும் இன்னெருதுண்டு சூடனை வைத்துக் கொளுத்திவிட வேண்டும். இவ்விதம், 3 முதல் 4 தடவைகள் செய்து புட்டி நிறைய மணலை நிறைத்துப் புட்டி மட்டமாய்க் கொள்ளும்படியானதும், வட்டமானதுமான குழியொன்று தோண்டி அடியில்

நாலைந்தங்குலம் மணலைப்போட்டு அதன்மேல் புட்டியைத் தலை கீழாக குழியின் நடுவில்நட்டு, புட்டியைச் சுற்றிலும், புட்டியின் உயர மட்டமாகவும் குழிநிறைய மணலைப்போட்டு நிறைத்துச் சரிப்படுத்திக் கெட்டிப்படுத்திக் கொள்ள வேண்டும். மறுபடியும் தொளை செய்ய வேண்டிய இடத்தில் முன்போலக் கொஞ்சம் சூடனை வைத்துக் கொளுத்திவிட வேண்டும். இது எரிந்து ஆறினவுடன் மறுபடியும் ஒரு துண்டை வைத்துக் கொளுத்தி விடவும் இவ்விதம் 4 முதல் 5 தடவைகள் செய்து, அந்த இடத்தில் எழுத்தாணியால் அல்லது கூர்மையான இரும்பாணி யால் மிகுந்த கவனத்தோடு தொளையிட வேண்டும். அவசியமான அளவு தொளை (துவாரம்) இட்டபிறகு, புட்டியை எடுத்து உள்ளிருக்கிற மணலைக் கொட்டிவிட்டு விருப்பம்போல் பயன் படுத்திக் கொள்ளவேண்டும்.

மேற்படி வேறுவகை :— மேற்கண்டதுபோல் புட்டியில் மணலை நிறைத்துக் குழியில் புதைத்துக் கொள்ள வேண்டும். பின்பு சூடனை வைத்துக் கொளுத்திவிடுவதற்குப் பதிலாக சிறிய இரும்புக்குண்டைப் பழுக்கக் காயவைத்துத் தொளையிட வேண்டிய இடத்தில் வைத்து அது ஆறினவுடன் மறுபடியும் பழுக்கக் காய்ச்சி வைக்க வேண்டும். இவ்விதம் 4 அல்லது 5 தடவைகள் செய்து எழுத்தாணியால் அல்லது கூர்மையான இரும்பாணியால் மிகு கவனத்துடன் தேவையான அளவு தொளை யிட்டு முன்போலவே செய்து கொள்ள வேண்டும்.

குறிப்பு :— மேற்கண்ட வகைகளைப் பார்க்கிலும் கண்ணாடிக் காரர்கள் கண்ணாடியைப் பிளக்கும் அல்லது தொளையிடும் வயிராயுதத்தால் தொளையிட்டுக்கொள்வது மிகவும் எளிய முறை யாகும். ஆனால், அவ்விதம் செய்துகொள்ள இயலாதவர்கள் மேற் கண்ட இருவகைகளில் தங்களுக்கு விருப்பமான அல்லது இயன்ற விதமாக பக்குவமாய்ச் செய்து கொள்வதே நல்லதாகும்.

விண்ணப்பம் :— இதுவரையில் திராவக வகைகளுள் பல வற்றைச் சொன்னோம். இம் முறைகளுள் பல எளிமையாகவும், சில மிக உழைப்பை வேண்டுவனவாகவும் சொல்லப்பட்டிருக் கின்றன. இதன் மூல நூலில் இன்னும் அனேக பாகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவைகளை எல்லாம் இங்கு எழுதி இருக்கின்றோம். அவசியமற்றவைகளும், அதிக பயனற்றவைகளுமான பல பாகங்களை எழுதாமல் விடுத் தோம். ஏனெனில், இங்கெழுதப்பட்டிருக்கும் பாகங்களே புது மாணாக்கர், முதுமாணாக்கர் என்ற இருதரத்தாருக்கும் போது மானவைகள் என்பதே.

வாதம், மருத்துவம் ஆகிய இரு வகைக்கும் சரக்குகளின் தூய்மை முக்கியமானதாகையால் அதை எழுதத் தொடங்கி அவற்றுள் உலோகங்களின் தூய்மையை முதன்மையாகச் சொல்வோம்.

## தாமிரம்

அதிக பயன்பாடுள்ள இந்த உலோகம் பூமியில் சுரங்கங்களில் சாதரரணமாய் அகப்படுகிறது. இது முன்னோர்களுக்கு வெகு காலமாகத் தெரிந்த ஒன்றே. இது பலவகை மருந்துகள் அதாவது கண்மாத்திரை, உருக்கு மாத்திரை, களிம்பு, பற்பம், செந்தூரம் ஆகியவை செய்யப் பயன்படுகின்றது. ஆனால், இதில் கந்தகம், பாடாணம், இரும்பு ஆகியவை பெரும்பான்மையாகக் கலந்திருப்பதாலும், பச்சை, ஊதா என்ற நிறமுள்ள இருவகை உப்புகளும் சிறுபான்மையாகக் கலந்திருப்பதாலும் இதைத் தூய்மை செய்து இதிலுள்ள மாசுகளை நீக்கியே பயன்படுத்தவேண்டும். மேலும், இது இரசவாத சம்பந்தமாய் பல உலோகங்கள் அதாவது பித்தளை, வெங்கலம், தரா ஆகிய உலோகங்கள் செய்ய இது முக்கியமானதாகும்.

எட்டெடைச் செம்பில் இரண்டெடை துத்தமிட
திட்டாமல் வெங்கலமாஞ் சேர்த்துருக்க —கெட்டியாய்
.... மூ செம்பில் ஒரு மூன்று துத்தமிட
........ பித்தளையாம் பார்.

இன்னம், இது வெள்ளி, தங்கம் முதலியவைகளோடு சேர்த்து அவற்றை முன்னிலுந் தாழ்ந்ததாய்ச் செய்யவும் கையாளப்படுகிறது ஆகையால், இதன் பிறப்பு, தூய்மை முறைகள், தூய்மையானதா என்று அறிய ஆய்வு ஆகியவைகளை முன்னர்த் தெரிந்து கொள்வோமாக.

தாமிர மண்ணை அல்லது தாம்பிர கனிஜதாதுவை மந்தமான அக்கினித் தணலின்மேல் வைத்து வறுத்து முன்னர் அதிலுள்ள கந்தகத்தின் சில பாகத்தைப் போக்கப்படுகிறது. இவ்விதம் வறுத்து கந்தகத்தை நீக்கப்பட்ட மேற்படி கனிஜதாதுவுடன் ஒருவகைக் கிட்டத்தைச் சேர்த்துருக்க, அதிலிள்ள அயச்சத்தானது இக்கிட்டத்தோடு சேர்ந்து செந்தூரக் கட்டிகளாகப் பிரிநது மேலே தங்கியும், தாம்பிரமானது கனமானதாசுவும் உருக்கத் தக்கதுமான கந்தகக் கட்டியைப் போலாகிக் கீழே தங்கியும் விடுகிறது. பின்பு மேலே தங்கியிருக்கும் கிட்டத்தை நீக்கி விட்டு அதிலுள்ள எஞ்சியிருக்கும் கந்தகத்தைப் போக்கவும்,

தாம்பிரத்தூளைச் செந்தூரமாக்கவும், மறுபடியும் மறுபடியும் வறுக்கப்படுகிறது. இந்தப் பக்குவத்தை அடைந்து செந்தூர மானவுடன், அது நன்றாய்க் கிளறப்பட்டு, அதனுடன் உருக்கப் படாத வேறு தாம்பிரகெந்தியைச் சேர்க்கப்படுகிறது. இவ்விதம் செய்வதால், அந்தச் செந்தூரத்தினின்றும், அந்தக் கந்தகத்தினின்றும், தாமிரமுண்டாகி பாகப்படாத பிராண வாயுவில் சில பாகமும் கந்தகமும் நீங்கிப்போகிறது. இவ்விதம் தயாரிக்கப்பட்ட பக்குவமற்ற தாம்பிரமானது அதிக அளவாய் ஊதுலையில் வைத்து உருக்கப்பட்டு, உருகும்போது, கை மரக் கட்டையால் துழாவுவதால் அக்கட்டையிலிருந்து உண்டாகும் சாணிப்பால் மிச்சமுள்ள புராணவாயுவும் நீங்கி, கட்டி உருவ மடைந்து நாம் இப்பொழுது பார்க்கிறதுபோல உரமுள்ளதாகவும் தூய்மையானதாகவும் உள்ள நிலையைப் பெறுகிறது. இவ்விதம் பக்குவப்படுத்தினதைத்தான் தாமிரம், செம்பு முதலியவைகள் எனச் சொல்லப்படுகிறது.

மேலும், தாமிரமானது அனேகவகை மூலிகைகளிலிருந்தும் பொருள்களிலிருந்தும் சில நீர்களிலிருந்தும் எடுக்கலாம்,

தாமிரமானது உரமானதாகவும், ஒட்டத்தக்கதாகவும் சற்றே கடினமானதாகவும் உள்ள உலோகம். இதன் நிறம் சிவப்பு; இதைத் தேய்த்தால் ஒருவித நாற்றம் உண்டாகும். இது மெல்லிய கம்பியாக இழுக்கவும் மெல்லிய தகடாக அடிக்கவும், அதிநுண்மையான சரக்குகளாய் சுற்றவும் வரும். மேலும் இது நேர்த்தியான மின்வாங்கியும், அவ்விதமே நேர்த்தியான சூடு வாங்கியுமாகும் காற்றுப்பட்டால் மெதுவில் களிம்புண்டாகும். நெருப்பில் பழுக்கக் காய்ச்சி ஆறவைத்தால் அதன்மேல் சிவந்த ஒருவிதத் தூள் படியும். நெருப்பில் பழுக்கக் காய்ச்சி உடனே தண்ணீரில் தோய்த்தால் அதன்மேல் செதிள்கள் உண்டாகும்.

வெடியுப்புத் திராவகமானது இதனை அதிக பலமாய்க் கரைக்கும். அப்போது அதிலிருந்து சிவந்த புகையுண்டாகும். பலமான கந்தக திராவகத்தைவிட்டு நெருப்பில்வைத்துக் காய்ச்சினால் மட்டும் தாமிரம் கரையும். அப்படிக் காய்ச்சாத வரையில் கரையாது. இது உருக 1090 டிகிரி சூடு வேண்டும். இதனை மிகவும் குறைந்த அளவாய் வெள்ளி, தங்கம் என்ற இவற்றுடன் சேர்க்கப்பட்டால், அதனதன் குணத்தைப் பெறும். ஆனால் செம்மையாய்த் தூய்மை செய்யப்பட்ட தாமிரமானது வெள்ளி. தங்கம் என்ற இவற்றுடன் மிதமான அளவோடும், அதனதன் முறைப்படியும் சேர்க்கப்பட்டால் அந்தந்த வகைக்

குணத்தைப் பெறுகிறது. ஆகையினுலேதான் தாமிரமானது தூயதாவென நிச்சயிக்க அதனதன் பாகப்படி முறையே தங்கம், வெள்ளி இவற்றுடன் சேர்த்து பரிசோதிக்கப்படுகிறது. அவ்விதம் சேர்க்கப்பட்ட வெள்ளி, தங்கம் முதலியவைகள் தம்தம் இயல்பான குணத்தையுடையதாக இருந்தால் தாமிரம் சரியாக தூய்மையாயிற்றென்றும், அவ்விதமில்லாமல் மாறுபட்டால் தாமிரம் சரியாக தூய்மையாகவில்லை என்றும் நிச்சயிக்க வேண்டியது. இன்னம், இவ்விதம் சேர்க்கப்பட்ட தாமிரமானது புடத்திற்கும், திராவகத்திற்கும் பின்வாங்காதிருந்தால் அதிக மேலானுதாக இருக்கும்.

இவ்விதம், தூய்மையான தாமிரத்தை மேற்கண்டபடி பற்பம், செந்தூரம், கண்மாத்திரை, உருக்குமாத்திரை, களிம்பு முதலியவைகளாகச் செய்து முறையே உள்ளுக்கும், வெளிக்கும் பயன்படுத்த வேண்டியது. இதனுல், முறைப்படி தயாரிக்கப்பட்ட மருந்துகளால் கடினமான பற்பல நோய்கள் தீரும். ஆகையால், முன்னர் இதன் தூய்மை முறைகளேயும் அதன் பல வகை சோதனைகளேயும் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

**தாமிரத்தின் குணம் (சித்த மருத்துவம்) :—** இதன் இயல்பு ...... வறட்சியுமாம், பக்கவாதம், முகவாதம், மூட்டுவாதம் சீதள சம்பந்தமான நோய்களுமாகும். குட்டம், பெருநோய், முதலிய நோய்களுக்கும் பயன்படுமாம். காடியிலிழைத்து மேற்பூச்சாகப் பூசினுல் வீக்கங்களேக் கரைக்கும். சொறியைப் போக்கும். பித்த விகற்பம், கப விகற்பம் ஆகியவைகளேயும் கண்டிக்கும். இருமல் சுவாசகாசம் ஆகியவைகளேயும் கண்டிக்கும். இரணங்களேயும் கண்டிக்கும். (தீக்குணம்) வாந்தியுண்டாக்கும். வெப்ப உடலினர்க்காகாது. (பரிகாரம்) வாதுமைப் பிசின்.

**தாமிரத்தின் குணம் (ஆயுள் வேதம்) :—** கபாதிக்கம், பீலீகம், செரியாமை, வெண்குட்டம், செந்நீர் பித்தம், சன்னிபாதம், பெருவயிறு, வழுவை, செந்நீர்குன்மம், புண்கள், முப்பிணிகாசம் இருமி, தாது இழப்பு, விழிநோய் முதலியவை தீரும்.

## தாமிர பற்பம், செந்தூரத்தின் சிறப்புகள்

உருவங்குறு பசியும்பெறு முரமும்பெறு முரமா
மிருகண்டரு டநபன்பெறு மிகையும்பெறு குவரே
வருசெம்புறு மலினந்தெரி வகையும்பொடி வகையும்
பருகும்பெரு விதமுந்தெரி பவரம்புவி மிசையே

இதன் கருத்து :— தாமிரத்திலுள்ள களிம்பை நீக்கும்வகை அதனை பற்பம், செந்தூரம் முதலியவைகளாகச் செய்யும்வகை, அதனை உட்கொள்ளும் அளவு, துணைமருந்துகள், மருந்துணவுகள், முதலிய வகைகளை அறிந்து அம்முறைப்படி செய்து முடித்து அவ் விதிப்படி உண்பவர்கள் வயிற்றிலுண்டாகும் பசியையும் பலத் தையும் இவ்வளவெனச் சொல்லவும் முடியாது. மார்கண்டே யரைப்போல் வாழ்நாள் வளர்ச்சி உண்டாகும். அவ்விதம், பாகப்படி முடித்து விதிப்படி கொள்ளாவிட்டால் தீமையும் மேற் கண்ட அளவேயாம்.

## தாமிர பற்பத்தின் சிறப்பு

செம்படலை யையரிகாற் சேத்துமகா சத்தைவெட்டிச்
செம்படலை யையமறச் செய்தளிக்கும் — செம்படலை
பாசுபத மாமருந்துப் பார்த்தார்எச்ச யந்தனெனும்
பாசுபத மாமருத்தப் பன்.

தாமிர பற்பம் :— தாமிர பற்பமானது பொதுவாக முப்பிணி களால் (முத்தோடம்) விளைந்த நோய்களைப் போக்குவதன்றி, சிறப்பாக சிவந்த படைகளையும், ஐயகாசத்தையும் போக்கு வதால், இப்பற்பம் மருத்துவர்களுக்கு பாசுபதபடைக்கலத்திற்கு ஒப்பாகுமெனச் சொல்லலாம் கால்கள் சில்லிட்டுச் சேத்துமம் மேற்கொண்ட காலத்தில் இப்பற்பத்தால் மருத்துவஞ்செய்து பரிகரித்த மருத்துவரை அன்னைக்கு ஒப்பெனச் சொல்லலாம் என்பதேயாம்.

## தாமிரச் செந்தூரத்தின் சிறப்பு

செப்பருண வாகை செயமாமன் மீளமுன்னர்ச்
செப்பருண வாகைவரச் செய்வதுமெய்—செப்பருணங்
கொண்டலையார் வைகற் குளிர்ச்சியுறு நன்மைக்குக்
கொண்டலையார் சொல்வரெண்ணுங் கோள்

தாமிரச் செந்தூரம் :— தாமிரச் செந்தூரமானது முக்கிய மாக வாதத்தை முதலாகக்கொண்ட மூவகைச் சயங்களையும் போக்கி உடற்கு அழகைக் கொடுப்பது மட்டுமல்லாமல் இதைப் புசிக்கிறவர்கள் மேகவெட்டையால் வருந்தாதவர்களாய்க் குளிர்ச்சியுறுவார்கள்; ஆதலின் ‘பரிதியின் வெப்பத்தைப் போக்கிக் குளிர்ச்சியுறச் செய்கின்ற மேகத்தை இதற்கிணையாகக் கூறுவர்.’ இதனைச் சிந்திப்பீர்களாக என்பதேயாகும்.

இன்னும் பற்பல விதமாக இதன் சிறப்புகளைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் முன்சொல்லி இருப்பது போல் இதன் தூய்மை, பற்ப செந்தூர முறைகள் என்பவைகளின் முறையான பாகத்தை அறிவது கடினம். அவ்வாறு அறிந்தபின் அவ்விதம் செய்து முடித்தாலும் அதைச் சோதித்து நிச்சயித்து அறிவது எல்லாவற்றையும் காட்டிலும் அதிக கடினம். மேற்கண்ட வகைகளுள் தாமிரத் தூய்மையானது முதலாவதாகத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகையால், பலவகைத் தாமிரத் தூய்மை முறைகளையும், அவ்விதம் அது தூய்மையாயிற்றுவென அறிய வேண்டியது கடமையானபடியால், அவைகளின் சோதனை முறைகளையும் எழுதத் தொடங்குவாம். இங்கு சுமார் நூறு பாகங்கள் எழுதப்படும். அவற்றுள் அவரவர்க்கு விருப்பமானபடியும், அவரவர்கள் சக்திக்கு இயன்றது போலவும் செய்துகொள்ள ஏதுவாகும். மேலும், இம்முறைகளெல்லாம் மிகவும் சிறந்தவைகளும் மிகவும் இரகசியமானவைகளுமாகும். அனுபவசாலிகளான அறிவாளிகளுக்கு இதனுண்மையும், அருமையும் பெருமையும் விளங்காமற் போகா.

## 294. தாமிரத் தூய்மை

தாமிரத் தகட்டைக் கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சிப் பாகலிலைச் சாற்றில் தோய்க்க வேண்டும். குளிர ஆறினபின் மறுபடியும் முன்போலக் காய்ச்சி மேற்படி புதிய சாற்றில் மடக்கி மடக்கி 21 தடவைகளும் அதன் பின்பு வெந்தயக் கீரைச் சாற்றில் 21 தடவைகளும், அதேமாதிரி கத்தரி இலைச் சாற்றில் 21 தடவைகளும் மீண்டும் மீண்டும் தோய்த்தால் தாமிரம் தூய்மையாகும்.

## 295. தாமிரத் தூய்மை (வேறு)

இலிங்கம், சவ்வீரம், தாளகம், நவச்சாரம் இந்நான்கும் வகைக்கு 4 குன்றியெடை; இவற்றைக் கல்வத்திலிட்டுப் பொடித்து உமிழ்நீர்விட்டு மைபோலரைத்துக் கால்பலம் எடையுள்ள மெல்லிய தாமிரத் தகட்டிற்கு இரு பக்கங்களிலும் பூசி உலர்த்தி, அது கொள்ளத்தக்க சிறிய ஓட்டில் $6\frac{1}{2}$ வராகனெடை ($22\frac{1}{2}$ கிராம்) பூநீரைப் பரப்பி அதன்மேல் முன் சித்தப்படுத்தின தாமிரத் தகட்டை வைத்து அதன்மேலும் $6\frac{1}{2}$ வராகனெடை பூநீரைப் போட்டு மறைத்து மேலோடு மூடி 3 அல்லது 4 சீலைமண் செய்துலர்த்தி 5 பலமுள்ள ஐந்து விராட்டியில் புடம் போட்டு ஆறினபின் எடுத்து தகட்டை நன்றாய்த் தட்டி அசடு

நீக்கிவிட வேண்டும். இரண்டாந் தடவையும் முன்போலவே மருந்தை அரைத்துத் தகட்டில்பூசி உலர்த்தி முன்போலவே அகலில் வைத்து பூநீர் இட்டு புடம்போட வேண்டும். இவ்விதம், 5 தடவைகள் மீண்டும் மீண்டும் புடமிட்டு எடுத்துருக்கி வைத்துக்கொள்ளவேண்டும். இவ்விதம், செய்தால் தாமிரம் தூய்மையாகும்.

**தூய்மை ஆராய்வு** :—இது வாதம், மருத்துவம் என்ற இரு முறைகளுக்கும் ஆகும். இது சரியாக தூய்மையாகி இருந்தால் வெள்ளி ஏழு பங்கும், இத் தாமிரம் மூன்று பங்குமாகச் சேர்த் துருக்கிப் பின்பு ஊதித் தாமிரத்தை அற நீக்கிவிட்டால், குணமான மட்டமாயிருக்கும். விருப்பம்போல் தாயைச் சேர்த்தால் அதற்குத் தகுந்த குணமுள்ள வாதப் பொன்னும்.

## 296. தாமிரத் தூய்மை

கௌரிப் பாடாணம், நெல்லிக்காய்க் கந்தகம், நவச்சாரம், வெண்காரம், படிக்காரம் ஆகிய இவ்வாறும் வகைக்கு ஒரு வராகனெடை; இவற்றைக் கல்வத்திலிட்டு மைபோல அரைத்து, ஒருபலம் எடையுள்ள தாமிரத் தகட்டின் இருபுறங்களிலும் சமமாகப்பூசி உலர்த்தி ஒரு அகலில் கொஞ்சம் சோடா உப்பு, பூநீர், அப்பளாகாரம் என்ற மூன்றனுள் ஒன்றைப் பரப்பி, அதன் மேல் முன் சித்தப்படுத்தின தகட்டை வைத்து, அதன் மேலும் கீழ் வைத்திருக்கிற பொருளையே போட்டுமூடி மேலகல்மூடி; 3 சீலைமண் செய்து 5 பலமுள்ள பத்து வறட்டியில் புடமிட்டு ஆறவிட்டு எடுத்துப் பார்த்து அது நன்றாய்த் தூய்மையாகி இருந்தால் நல்லது; இல்லாவிட்டால் முன் மருந்துகளில் அரைப்பாக எடை சேர்த்து அரைத்து முன்போல புடம் (சுடுகை) போட்டெடுக்கத் தூய்மையாகும்.

**தூய்மை ஆராய்வு** :—இது மருத்துவம், வாதம் என்ற இரு வகைகளுக்குமாகும். சிலர் மணி வெள்ளி இரண்டணுவை உருக்கி உருக்குமுகத்தில் மேற்படி தாமிரம் மூன்று குன்றியெடை சேர்த்து மறுபடியும் நன்றாக இரண்டும் கலக்கும்படி உருக்கி எடுத்து, சேர்த்த தாமிரம் அற ஊதியெடுத்து, நாலிலொரு தங்கம் சேர்க்க அஞ்சு மாற்றுள்ள வாதப் பொன்னும்.

## 297. தாமிரத் தூய்மை (வேறு)

(1) வெடியுப்பு, சூடன், பாறையுப்பு இவை மூன்றும் வகைக்கு அரைப்பலம்; இவற்றைக் கல்வத்திலிட்டு உமிழ்நீரை விட்டு ஒரு சாமம் (3 மணி) அரைத்து வில்லைசெய்து வெய்யிலிலுலர்த்தி,

அகலில் வைத்து மேலகல் மூடி 3 சீலைமண் செய்து 4 பலமுள்ள பத்து எருமுட்டையில் புடமிட்டு, ஆறின பின்னெடுத்துக் கல்வத்தி லிட்டுப் பொடித்து உமிழ்நீரைவிட்டு மறுபடியும் ஒரு சாமம் அரைத்து வில்லைசெய்து உலர்த்தி முன்போலவே 10 எருமுட்டை யில் புடமிட்டெடுக்க, ஒருவித செந்தூரமாகி இருக்கும்.

(2) வளையலுப்பு, துரிசு, வெண்காரம், வெடியுப்பு, இரசக் கருப்பூரம் ஆகிய இவ்வைந்தும் வகைக்கு ஒரு பலம்; இவற்றைக் கல்வத்திற் பொடித்துச் சிறுபிள்ளைகளின் மூத்திரத்தைச் சிறுகச் சிறுக விட்டு 2 சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி அகலில் வைத்து மேலகல் மூடி 3 சீலைமண் செய்து 4 பலமுள்ள பத்து விராட்டியில் புடமிட்டு ஆறவிட்டெடுக்க இதுவும் ஒருவகை செந்தூரமாகி இருக்கும்.

(3) பின்பு, மேற்கண்ட இருவகை செந்தூரங்களுடன், நாயுருவிச் சாம்பல் ஒரு பலம், காட்டெருமுட்டைச் சாம்பல் ஒரு பலம் என்ற இவற்றைச் சேர்த்துக் கல்வத்திலரைத்து நன்றாய்க் கலந்து ஒரு பளிங்குக்குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும்.

அவசியமானபோது மேற்படி கலவையில் செல்லத்தக்க அளவெடுத்து உமிழ்நீரில் குழைத்து, நாகூர்சல்லியின் இருபுறத் திலும் புளியிலைக்கனம் சமமாய்ப் பூசி உலர்த்தி அகலில் வைத்து மேலகல் மூடி 3 சீலைமண் செய்து 4 பலமுள்ள பத்து விராட்டியில் புடமிட்டு எடுக்கத் தூய்மையாம். அவசியமானல், இன்னொரு புடமும் முன்மாதிரியே போட்டுக் கொள்ளலாம்.

**தூய்மை ஆராய்வு:—** இது இருக்கிற மாதிரிக்குத் தகுந்தது போல தங்கத்துடனும் சேர்த்துச் சொகுசா முறைக்கும் சேர்த்துக் கொள்ளலாம். வெள்ளியிலும் பாகப்படுத்திக் கொள்ளலாம். இதன் குணத்தை அனுபவத்தால் நிச்சயித்துச் சமயோசிதமாகச் செய்து கொள்ளவேண்டும்.

## 298. தாமிரத் தூய்மை (வேறு)

வளையலுக்காக பயன்படுத்தப்படும் தாமிர ரேக்கு $1\frac{1}{4}$ பலம், இதனை ஒரு பீங்கான் கிண்ணத்தில் போட்டு, அதன்மேல் அரைப் பலம் காரமான வெடியுப்புத் திராவகத்தை (Strong Nitric Acid) விட்டால் புகையுண்டாகும். நன்றாய்ப் புகையடங்கின வுடன் தண்ணீரை விட்டு நன்றாய்க் கழுவி 6 முதல் 7 தடவைகள் கழுவித் தூய்மைசெய்து மூசையிலிட்டு உருக்கி எடுத்துக் கனமுள்ள தகடாய்த் தட்டிக்கொண்டு, ஒரு வராகனெடை சவ்வீரத்தை

எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு அரைத்து இரண்டு பங்காக்கி ஒரு பங்கைத் தகட்டின் இருபுறத்திலும் தடவி உலர்த்தி, ஒரு விராட்டித் துண்டின்மீது வைத்து, அதன் மேலும் மறுவிராட்டித் துண்டை வைத்து 5 பலமுள்ள பத்து விராட்டியில் புடமிட வேண்டும். பின்னர், முன்னர் அரைத்தெடுத்து வைத்திருக்கிற மறு பங்கு வீரத்தையும் இத்தகட்டின் இருபுறத்திலும் சமமாய்ப் பூசி உலர்த்தி முன்போலவே புடமிட வேண்டும்.

இவ்விரண்டு புடமும் தீர்ந்தபிறகு, மருதோன்றி இலையை அரைத்த விழுது 5 பலம்; இதனை இரண்டு அடையாகத் தட்டி தகடு தெரியாமல் பொதிந்து, மேலே ஒரு சீலைமண் செய்து 5 பல முள்ள பத்து எருவில் புடமிட்டு, மறுபடியும் முன் போலவே மருதோன்றி இலையில் இன்னொரு புடமும் இடவேண்டும்.

இதன்பின் நீல இலைச்சாறு பிழிந்து ஒரு மண்பாண்டத்தில் தகடு நனையும்படியாக ஊற்றி வைத்துக்கொண்டு இந்தத் தகட்டைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சித் தோய்க்க வேண்டும். நன்றாய் ஆறின பின்பு மறுபடியும் பழுக்கக் காய்ச்சித் தோய்க்க வேண்டும்.

முடிவாய், வேறு புதியநீல இலைச்சாற்றில் முன் தாமிரத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். மறுபடியும் நன்றாய்க் குளிர ஆறின பின் முன்போலவே உருக்கி மேற்படி சாற்றில் சாய்க்க வேண்டும் இப்படி உருக்கிச்சாய்க்க வாய்ப்பில்லாதவர்கள் நன்றாய் பழுக்கக் காய்ச்சி மறுபடியும் நூறு தடவைகள் தோய்த்தெடுத்துக் கொள்ள வேண்டும். இந்தத் தாமிரமானது மருத்துவம் வாதம் என்ற இரண்டு முறைகளுக்கும் ஆகும்.

**தூய்மை ஆராய்வு:**—ஏழு பங்கு நல்ல வெள்ளி, மூன்று பங்கு மேற்படி செம்பு, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி உருக்குமுகத்தில் ஒரு பங்கு ஒணன் பக்குவ இலிங்கக்கட்டை (இம் முறையானது கட்டுவகைப் பாகத்தில் சொல்லப்படும்.) கொடுத்து நன்றாய்க் கலக்கும்படி உருக்கி எடுத்துத் தகடடித்து, உப்பு ஒரு படி, செங்கற்பொடி 2 படியுமாகச் சேர்த்து—மேற்படி தகட்டை விளக்கெண்ணெயில் நனைத்து மத்தியில் வைத்துத் தகட்டிற்குத் தகுந்ததுபோல் புடமிடவும். இதைப்போலவே இன்னொரு புடமும் போட்டெடுத்து உருக்கி எடுத்தால் நேர்த்தியான மட்டமாயிருக்கும்.

பின்பு, இந்த மட்டம் ஒரு வராகனெடை, தங்கம் ஒரு வராகனெடை, முன் தூய்மை செய்த தாமிரம் ஒரு குன்றிமணியெடை;

இவை எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து உருக்கியெடுத்து, அதை நான்காகத் துண்டித்து நன்ருயுருக்கிக் கொண்டால் வாதப் பொன் உள்ளது போலிருக்கும்.

## 299. தாமிரத் தூய்மை (வேறு)

கப்பல் செம்புத் தகட்டை உருக்கி இரண்டு பலம் எடுத்து தகடடித்து ஒரு தம்படியைப்போல வெட்டிக்கொள்ளவேண்டும். சவ்வீரம் $3\frac{1}{4}$ வராகனெடை, இதனை எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒருமணி நேரம் கைவிடாமல் அரைத்து ஏழு பங்காக்கி வைத்துக் கொள்ளவேண்டும். பின்னர், முன் சல்லிகளின் இருபுறங்களிலும் மேற்படி வீரத்தின் ஒரு பங்கைப் பூசி வெய்யிலில் உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

சிறுபசரி (இதற்கு இந்துஸ்தானி பெயர் சவுலாயி பாஜி) அல்லது கோழிக் கீரை என்னும் இலையை அம்மியில் வைத்து அரைத்து, ஒரு அங்குல கனமுள்ள இரண்டு அடைகளாகத் தட்டி ஒன்றின்மேல் முன் தயாரித்து வைத்திருக்கிற சல்லிகளை ஒன்ருெடொன்று படாமல் வைத்து, அதன்மேல் மற்ருெரு அடையைப் பொதித்து சந்தில்லாமல் பார்த்து, அதன்மேல் மூன்று சீலைமண் செய்து 5 பலமுள்ள ஏழு விராட்டியில் புடமிட்டு, ஆறினபின் எடுத்துக் கவசத்தை நீக்கி சல்லிகளை எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதமே மிகுதியான 6 பங்கையும் பூசி ஆறு புடங்கள் போட்டெடுத்துக் கொள்ளவேண்டும்.

கூடிய மொத்தம் 7 புடங்களுக்கும் முன் அரைத்த வீரத்தை மேற்சொன்னதுபோல் சமமாக ஏழு பங்காக்கி வைத்துக் கொண்டு ஒவ்வொரு பங்காய்ப் பூசி வரவேண்டும். மேற்படி கீரையானது ஒவ்வொரு தடவைக்கும் புதிது புதிதாக இருக்க வேண்டும்.

பின்னர், வேறு $3\frac{1}{4}$ வராகன் எடை சவ்வீரத்தை எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு மணிநேரம் அரைத்து-ஏழு பங்காக்கி வைத்துக் கொள்ளவேண்டும். அதில், ஒரு பங்கை அந்தச் சல்லிகளின்மேல் பூசி வெய்யிலில் உலர்த்தி, புளியாரைக் கீரையை அரைத்து ஒரு அங்குல கனமுள்ள இரண்டடைகளாகத் தட்டி ஒரு அடையின்மீது முன்கூறிய தயார்ப்படுத்திய சல்லிகளை ஒன்ருெடொன்று சேராமல் வைத்து, மேல் மற்ருெரு அடையால் மூடி சந்தில்லாமல் செய்து, அதன்மேல் மூன்று சீலைமண் செய்து 5 பலமுள்ள ஏழு விராட்டியில் புடமிட்டெடுத்துக் கொள்ள வேண்டும்.

இவ்விதமே மற்ற ஆறு பங்குகளையும் ஒவ்வொரு பங்காய்ச் சல்லிகளின்மீது தடவி உலர்த்தி தடவைக்குத் தடவை புதிது புதிதாகப் புளியாரைக் கீரையை அரைத்து அடைகள் செய்து பொதிந்து மடக்கி மடக்கி மறுபடியும் ஆறு புடமிட்டுக் கொள்ள வேண்டும்.

முன்னேழு புடமும் பின்னேழு புடமும் போட்டுத் தீர்ந்தால் தாமிரமானது பொன்னைப் போலிருக்கும். அவரவர்கள் அனுபவ சித்தம் போல மருத்துவம், வாதம் என்ற இருவகைகளுக்கும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## 300. தாமிரத் தூய்மை (வேறு)

கம்பி வெடியுப்பு, படிகாரம், நாட்டு வெண்காரம் இம் மூன்றும் வகைக்கு $\frac{1}{2}$ பலம்; இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித் தனியே மைபோலப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒரு பீங்கான் பாண்டத்தில் போட்டுக் கையால் நன்றாய்க் கலந்து, ஒன்றாய்க் கலந்தபின் இரண்டு பாகமாக்கி, ஒரு பாகத்தை ஒரு சிறு கலயத்திற்போட்டுச் சமமாகச் செய்து பரப்பி அதன்மேல் இரண்டு பலம் நாட்டு நவச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேல் மற்றொரு பங்குத் தூளையும்போட்டு, விரலால் நன்றாய் அழுத்தி, நவச்சாரக்கட்டித் தெரியாமல் செய்யவேண்டும். கலயமானது இவையெல்லாம் மட்டமாய்க் கொள்ளத் தக்கதாக இருக்க வேண்டும். கொஞ்சம் பெரியதாயிருப்பினும் பாதகமில்லை. பின்பு கலயத்தின் வாய்க்குச் சில்லிட்டு, சந்திற்கு மண்பூசிக் கெட்டிப் படுத்திப் பின்பு ஏழு சீலைமண் செய்து வெய்யிலில் உலர்த்தி 5 பல முள்ள 25 விராட்டியில் புடமிடவேண்டும். நன்றாய்க் குளிர்ந்த பின் எடுத்தால் கலயத்துக்குள்ளே எல்லாச் சரக்குகளும் ஒன்றாய்ச் சேர்ந்துருகி இருக்கும். இது ஏறக்குறைய 2 முதல் 2½ பலம் மருந்து நிற்கும்.

இதில் ஏறக்குறைய அரைப்பலம் மருந்தை எடுத்து கல்வத்தில் பொடித்து, உமிழ்நீரை விட்டுச் சந்தனம்போல அரைத்து, இரண்டு பங்காக்கி, ஒரு பங்கை முன் காலத்து பெரிய துட்டு பத்தில் ஒவ்வொன்றிலும் ஒரு பக்கத்தில் மேற்படி சந்தனத்தைச் சமமாகப் பூசி, ஒரு ஓட்டில் வைத்து வெய்யிலில் வைக்கவேண்டும். வைத்த பக்கம் காய்ந்துவிட்டால் மறுபக்கந் திருப்பி முன்னரைத்து வைத்திருக்கிற மற்றொரு பாகத்தைத் தடவி முன்போலவே ஓட்டில் வைத்து முன்போலக் காய வைத்துக் கொள்ளவேண்டும். பின்பு, இவற்றையொரு அகலில் வைத்து மேலகல்மூடி, 5 சீலைமண் செய்து உலர்த்தி, 5 பலமுள்ள

10 விராட்டியில் புடமிட்டு, நன்ருய்க் குளிர ஆறினபின் எடுத்து, ஒவ்வொரு துட்டையும் தட்டினுல் அதிலிருந்து செதள்கள் வெளிப்படும், நன்ருய் முழுவதும் சுத்தமாக செதள் வெளிப்பட்டுவிட்டால் முன்மருந்தை இலேசாகத் தடவி முன் போலவே புடம் (சுடுகை) போடவேண்டும். இவ்விதமே மறு படியும் நான்கு புடம் போடவேண்டும். செதளானது நன்ருய் வெளிப்படாதிருப்பின் மருந்தைக் கொஞ்சங் கனமாகப் பூசி 4 முதல் 5 விராட்டிகளை அதிகப்படுத்தி புடம் போட வேண்டும். இவ்விதம், சமயோசிதமாய் மருந்தின் அளவு, புட திட்டம் முதலியவைகளை நிதானித்து 6 புடமும், போட்டுத் தீர்ந்தபின் உருக்கி தூய்மை செய்தெடுத்துக் கொள்ளவேண்டும். இந்தத் தாமிரமானது மருத்துவம், வாதம் என்ற இருவகைக்கு மாகும்.

## 301. தாமிரத் தூய்மை (வேறு)

தாமிர அரப்பொடி 10 பலம், (350 கிராம்), திறமான கடலைப்புளிப்பு 5 பலம் (175 கிராம்), விஸ்கி என்னும் சாராயம் (Whisky) 5 பலம்; பூவரசம்பட்டையிற் கொஞ்சம் நீரைத் தெளித்து இடித்துப் பிழிந்த சாறு 5 பலம் (175 கிராம்). நாகப் பட்டையில் கொஞ்சம் நீரைத் தெளித்து இடித்துப் பிழிந்த சாறு 5 பலம், இரசம், வெடியுப்பு இவை இரண்டும் வகைக்கு ஒரு பலம், நவச்சாரம், நெல்லிக்காய்க்கந்தகம், இலிங்கம் இம் மூன்றும் வகைக்கு ½ பலம், இரசக்கற்பூரம், செவ்வீரம் இவ் விரண்டும் வகைக்கு ¼ பலம், தங்கரேக்கு 10.

**செய்முறை** :—முன்னர் இரசத்தைக் கல்வத்திலிட்டு, கந்தகத் தைச் சேர்த்து, இரசம் மாள்கிறவரையில் அரைத்துப் பின்பு இரசக்கற்பூரம், வீரம் என்ற இரண்டையும் சேர்த்து இரசவாடை கொஞ்சமுமில்லாமல் அரைத்துப் பின்பு மற்ற சரக்குகளையும் சேர்த்து மைபோல அரைத்தெடுத்துக் கொள்ளவேண்டும். தங்க ரேக்கைத் தாமிரப்பொடியில் சேர்த்துக் கையால் பிசைந்து கொடுக்கத் தங்கமானது தாமிரப்பொடியில் கலந்துபோகும். இந்தப் பொடியை ஒரு பீங்கான் சிமிழியில் (குப்பியில்) போட்டு, அதன்மேல் மேற்கண்ட திரவ நிலையிலுள்ளவைகளை எல்லாம் ஊற்றி, அதன்மேல் முன் அரைத்தெடுத்தத் தூளைத்தூவி, ஒரு மூங்கிற்கம்பால் நன்ருய்க் கலக்கிவிட்டு சிமிழின் (குப்பி) வாய்க்கு மூடியிட்டு ஏழு சீலைமண் செய்து உலர்த்தி 12 முழம் குழி தோண்டி அருகில் முன் சிமிழியைப் (குப்பியை) புதைத்து வைக்கவேண்டும். ஒரு மாதம் சென்றபின்பு எடுத்து, அதில்

உள்ளதை எல்லாவற்றையும் மூன்று சீலைமண் செய்து உலர்த்தப் பட்டு, மூசையில் போட்டு, மூசை வாய்க்குச் சில்லிட்டு 3 சீலைமண் செய்து உலர்த்தி கொல்லனுலையில் வைத்து மூசையமுக ஊதி யெடுத்து ஆறவைக்க வேண்டும். நன்கு குளிர ஆறினபின் மூசையிலுள்ளதை எடுத்து மறு மூசையிலிட்டு உருக்கவேண்டும். நன்றாயுருகின பின்பு, ஆறவைத்தெடுத்துக் கொள்ளவேண்டும். சற்றேறக்குறைய 6 பலம் தாமிரமிருக்கும். அது தூயதாய் இருக்கும். மருத்துவம், வாதம் என்ற இரு முறைக்குமாகும். இதற்கு எடைக்கெடை தங்கம் சேர்த்துருக்கவேண்டும். பின்பு எடுத்து வெட்டி மறுமூசையில் வைத்து உருக்கி எடுக்கவேண்டும், இவ் விதம் செய்தெடுத்தால நேர்த்தியான வாதப் பொன்னும்.

## 302. தாமிரத் தூய்மை (வேறு)

காலணு கனமுள்ள தாமிரத்தகடு 5 பலம் (175 கிராம்), உயர்ந்த காந்தம் ஒரு பலம், கல்நார் ஒரு பலம், கருஞ்செம்பை இலை, விளா இலை, சிவப்பு முள்ளிக்கீரை, சீத்தாப்பழ இலை இந் நான்கும் வகைக்கு 6 பலம் (210 கிராம்).

**செய்முறை:**—இந்தக் கல்நாரானது நான்கு பக்கமும் மேடு பள்ளமின்றிச் சமமானதாக இருக்கவேண்டும். அல்லது, உருண்டையாகச் செய்துகொண்டாலும் மிகவும் உத்தமமே. பின்பு, தாளிக்காத கிளிஞ்சிற் சுண்ணும்பு ஒரு பலம், இதனைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு வெண்ணெய் போலரைத்து மேற்படி கல்நார் கட்டிக்கு எங்கும் சமமாக இருக்கும்படி கலசம் செய்து உலர்த்தி வேறொரு பலம் தாளிக்காத கிளிஞ்சிற் சுண்ணும்பை முன்போலவே எலுமிச்சம் பழச்சாற்றை விட்டரைத்து 5 அல்லது 6 சேலைத்துண்டில் தடவி முன் தயார்ப்படுத்தின கல்நார் கட்டிக்குக் கவசித்து 40 பலம் விராட்டியிற் புடமிட்டு ஆறவிட்டு எடுக்க கல்நாரானது சுண்ணும்பைப்போல வெண்மையாக இருக்கும். இது ஒருவகைக் கல்நார்ச் சுண்ணம் ஆகும்.

2. மேற்சொல்லப்பட்டிருக்கிற நான்கு இலைகளையும் ஒன்றாய்ச் சேர்த்து உரலிலிட்டு இடித்துப் பின்பு அம்மியில் வைத்து அரைத்து மைபோலானபின்பு ஏழு பங்காக்கி வைத்துக் கொள்ளவேண்டும். பின் தாமிரத் தகட்டின்மீது எங்கும் சமமாக இருக்கும்படி பூசி சற்று உலரவைத்து அதையொரு விராட்டியின் துண்டின்மீது வைத்து மற்றொரு துண்டால் மூடி, 40 விராட்டி யிற் புடமிடவேண்டும். இவ்விதமே மற்ற ஆறு பங்கையும் கவசித்து முன்போலவே புடமிட்டு எடுத்துக்கொள்ளவேண்டும்.

3. கந்தகத்தை கல்வத்திலிட்டு நன்ருய்ப் பொடித்துப் பின்பு மேற்படி கல்நார் சுண்ணத்தையும் சேர்த்துப் பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு 2 மணிநேரம் அரைத்துச் சந்தனம்போலான பின்பு ஏழு பங்காக்கி வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு பங்கையெடுத்து முன் புடம்போட்டு எடுத்து வைத்திருக்கும் தகட்டின்மீது எங்கும் சமமாய்ப்பூசி உலர்த்தி மெல்லிய ஓட்டில் வைத்து மேலோடு மூடி, சீலைமண் செய்யாமலே 50 பலம் விராட்டியில் புடமிட்டு நன்ருய் ஆறின பின் எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதமே மற்ற ஆறு பங்கையும் தடவி முன்போலவே புடமிட்டெடுத்துக் கொள்ள வேண்டும்.

4. இதன்பின், நாகப்பட்டையில் கொஞ்சம் நீர் தெளித்து இடித்துப் பிழிந்த சாறு $\frac{3}{4}$ படி, இதை 3 பாகமாக்கி ஒரு பாகத்தில், முன் தயாரித்து வைத்திருக்கிற தாமிரத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். ஆறினபின் எடுத்து உருக்கி மற்ருெரு பாகச்சாற்றில் சாய்க்க வேண்டும். இவ்விதமே மற்ருெரு பாகத்திலும் உருக்கிச் சாய்த்துக் கொள்ளவேண்டும். இப்படி உருக்கிச் சாய்க்க இயலாதவர்கள் தகட்டை நெருப்பில் பழுக்கக் காயவைத்து ஒவ்வொரு பாகத்திலும் ஏழு ஏழு தடவைகள் தோய்த்துக் கொள்ளவேண்டும். பின்பு உருக்கி எடுக்கத் தூய்மையாகும். இதனைச் செந்தூரமாகச் செய்தாலும் சிறப்பு மிகுந்த குணமுள்ளதாகும். **இது தூய்மையாகியதின் ஆராய்வாவது:** இந்தத் தாமிரம் 3 பங்கு, நல்லவெள்ளி 7 பங்கு, தங்கம் 10 பங்கு, இவை எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து உருக்கினுல் வாதப்பொன்னுவதேயாம், இதற்குப் பனி அப்ஜா போடுவதுமுண்டு. அம் முறையும் பின்னெழுதுவோம்.

## 303 தாமிரத் தூய்மை (வேறு)

ஓலைக் கனமுள்ள நல்ல தாமிரத்தகடு தேவையான 3 அளவு, வெள்ளைக் காட்டாமணக்கின் பாலையும், எலுமிச்சம்பழச் சாற்றையும் சமபாகமாய்ச் சேர்த்து ஒரு பீங்கான் பாண்டத்தில் விட்டு, அதில் மேற்படி தகட்டைப்போட்டு மூன்று நாள் ஊற வைக்கவேண்டும். மேற்படி திரவமானது தகட்டின்மீது 2 முதல் $2\frac{1}{2}$ அங்குலம் நிற்கும்படியாக இருக்கவேண்டும். மூன்று நாளுஞ் சென்றபிறகு மேற்படி தகட்டை எடுத்துக் கொள்ளவும். ஆகாயத்தாமரையை அரைத்த விழுதை மேற்படி தகடு அடங்கும்படியாகவும் விரற்கனமுள்ளதாகவும் இரண்டு அடைகள் செய்து மேற்படி தகட்டிற்குக் கீழும் மேலுமாகப் பொதிந்து

சந்தில்லாமல் அழுத்திவிட்டு, ஓட்டில் வைத்து மேலோடு மூடி 3 சீலைமண் செய்து கவசத்தின் பத்தெடை விராட்டியிற் புட மிட்டு ஆறினபின் எடுக்கவும். இவ்விதம், பத்துப் புடமிட்டு எடுத்து உருக்கியெடுக்க தூய்மையான தாமிரமாகும்.

தூய்மை ஆராய்வு :— நல்ல வெள்ளி 1 பங்கு, மேற்படி தூய தாமிரம் 1 பங்கு, தங்கம் 1 பங்கு இம் மூன்றையும் சேர்த்துருக்கி எடுத்து நான்கு துண்டுகளாய் வெட்டி இரண்டாந் தடவையும் உருக்கவேண்டும். மூன்றும் தடவையும் முன்போலவே உருக்கி எடுத்தால் வாதப் பொன்னும்.

## 304. தாமிரத் தூய்மை (வேறு)

அன்னபேதி, சவ்வீரம், நவச்சாரம், குஞ்சு பொறிக்கப்பட்ட முட்டையோடு இந் நான்கும் வகைக்கு $\frac{1}{2}$ பலம்.

செய்முறை :— இவற்றைக் கல்வத்திலிட்டு முன்னர் தனித் தனிப் பொடித்துப் பின்பெல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து அரைத்துக் கொள்ளவும். ஆகாயத்தாமரையிலையை வேருடன் கொண்டுவந்து அதிலுள்ள பூச்சி, பாசி முதலியவைகளை நீக்கி உரலிலிட்டு இடித்தால் நீர் தாராளமாய் வரும்.

முன் அரைத்து வைத்திருப்பதில் இந்தச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு 3 மணிநேரம் கைவிடாமல் அரைத்து ஒரே வில்லை யாகச் செய்து வெய்யிலில் வைத்து நன்ருய் உலர்த்திக் கொள்க. புதிய ஆகாயத்தாமரையிலையை அரைத்த விழுது 8 பலம், இந்த விழுதை மேற்படி வில்லைக்குக் கவசித்து, அதன்மேல் 3 சீலை மண் செய்து உடனே கவசத்தின் எடைக்கு 6 பங்கு விராட்டியிற் புடமிட்டாறவிட்டு எடுத்து கவசத்தை நீக்கி மருந்தை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும்.

இந்த வில்லையைப் பொடித்துப் புளியனிலைச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு ஒரு சாமம் கைவிடாமல் அரைத்து வில்லை தட்டி ஒரே வில்லையாகச் செய்து நன்ருய் உலர்த்திக் கொள்க. பின்பு, புதிய புளியனிலையை அரைத்த விழுது 8 பலம்; இந்த விழுதில் முன் வில்லையை வைத்து நன்ருய்ப் பொதிந்து மூன்று சீலைமண் செய்து உடனே கவசத்தினெடைக்கு ஆறு பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறியபின் எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, இந்த மருந்தை கல்வத்திற் போட்டுப் பொடித்து ஆகாயத்தாமரையிலைச் சாற்றைவிட்டு 3 மணிநேரம் அரைத்து.

ஐந்து பங்காக்கி, ஒரு பங்கைக் காலணு கனமுள்ள ஒரு பலம் தாமிரத் தகட்டின் இருபுறமும் எங்கும் சமமாய்த் தடவி உலர்த்தி ஒரு ஓட்டில் கொஞ்சம் உழமண்ணை அல்லது, அப்பளா காரத்தைப் பரப்பி, அதன்மேல் வைத்துத் தகட்டின்மீதும் கீழ் பரப்பின மருந்தையே கொஞ்சம் பரப்பி மேலோடுமூடி 3 சீலை மண் செய்துலர்த்திக் கவசத்தின் ஏழு பங்கெடை விராட்டியிற் புடமிட்டாற விட்டு எடுத்துக் கொள்க.

பின்பு, மறுபங்கு மருந்தைக் கொஞ்சம் முன்சாற்றை விட்டரைத்து நைப்புண்டாக்கி முன்தகட்டிற்கு முன் போலவே பூசி, முன்போலவே புடமிட்டெடுக்கவேண்டும். இவ்விதமே மிகுதி யான மூன்று பங்கு மருந்தையும் தடவி 3 புடமிட்டெடுத்துக் கொள்ளவும். ஆகக்கூடிய இந்த ஐந்து புடமும் பக்குவமாய்த் தீர்த்தெடுத்தால் தாமிரமானது தூய்மையாகிவிடும்.

தூய்மை ஆராய்வு:—நல்லவெள்ளி 7 பங்கு, மேற்படி தூய்மை யான தாமிரம் 3 பங்கு, தங்கம் 1 பங்கு, இம் மூன்றையும் சேர்த்து மூசையிலிட்டு நன்ருயுருக்கிக் கொள்ளவேண்டும். மடக்கி மடக்கி வெட்டி வெட்டி 8 தடவைகள் உருக்கி யெடுத்தால்ஒருவித வாதப்பொன்னும். அவசியமானுல் இரண் டொரு ஓடு ஊதியுங்கொள்க. இப் பாகங்களெல்லாம் அனுபவ சாலிகளுக்குத் தெரியும். ஆகையால், அவர்களை அடுத்துத் தெரிந்துகொள்ள வேண்டும். மேலும், மேற்படி தாமிரத்தைச் செந்தூரஞ்செய்தால் அதிக சிறப்புள்ள குணத்தைத் தரும். இம் முறை பின் எழுதப்படும்.

## 305. மேற்படி வேறு

மூக்குத்திப் பூண்டைச் சில இடங்களில் சுவற்று முள்ளங்கி யெனவும் வழங்குகிருர்கள். இந்தப் பூண்டை அரைத்த விழுது 4 பலம், இதனை அரையணு கனமுள்ள தாமிரத் தகட்டிற்கு இரு புறங்களிலும் சமமாய்க் கவசித்து ஒரு ஓட்டில் வைத்து மேலோடு மூடி சீலைமண்செய்து உடனே கவசத்தின் எடைக்கு 16 பங்கு விராட்டியிற் புடமிட்டாற விட்டு எடுத்து, தகட்டின்மீதுள்ள அழுக்கையெல்லாம் கத்தியால் பக்குவமாய்ச் சுரண்டி எடுக்க வேண்டும். மறுபடியும் முன் இலையை அரைத்த விழுது முன்னளவே எடுத்துக் கவசித்து ஓட்டில் வைத்து சீலைமண்செய்து முன்போலவே புடமிட்டெடுத்துத் தகட்டின்மீதுள்ள அழுக்கை யும் கத்தியால் சுரண்டி எடுக்கவும்.

இவ்விதம், 20 தடவைகள் புடமிட்டெடுத்து மூசையில் வைத்து உருக்கி, உருக்குமுகத்தில் கட்டின நவச்சாரத் தூளில் அல்லது, கறியுப்புச் செந்தூரத்தில் கொஞ்சமெடுத்துச் சுருக்குக் கொடுக்க வேண்டும். அப்படியே மூன்றும் தடவையும் சுருக்கிட்டு நன்றாய்க் கலந்துருகின பின்பு எடுத்துக் கொள்ளவேண்டும். இது ஒரு வகை நல்ல தூய்மையாகும். இது மருத்துவம், வாதம் என்ற இரு வகைக்குமாகும்.

தூய்மை ஆராய்வு :— நல்ல வெள்ளி 2 பங்கு, மேற்படி தாமிரம் 1 பங்கு, தங்கம் 3 பங்கு; இம் மூன்றையும் சேர்த்து உருக்கி எடுத்து நாலாய் வெட்டியெடுத்து மறுபடியும் உருக்க வேண்டும். இவ்விதம், அதை மடக்கி மடக்கி 3 தடவைகள் உருக்கியெடுக்க ஒருவகை வாதப் பொன்னும். இன்னும், இந்தத் தாமிரத்தைத் தங்கத்தோடு சேர்த்துத் தம்பாக்கவும் செய்து கொள்ளலாம்.

இந்தத் தாமிரத்தை இரணக் களிம்புகளில் சேர்த்தால் எவ்வித இரணமாயினும் சரியே குணமாகும். அழிபுண், அழிகிரந்தி முதலியவைகளும் தீரும். இதனைப் பன்னீர்விட்டு இழைத்து மேகப்படை, மேகத்தடிப்பு, மேகச்சொறி, மோகச்சொறி, பேய்ச் சொறி, நாய்ச்சொறி முதலியவைகளின்மீது பூசி, ஒரு சாமநேரம் வைத்திருந்து, சிகைக்காய்த் தேய்த்துக் குளிர்ந்த நீரில் தலை முழுக்குச் செய்துவிடவேண்டும். இவ்விதம், சில நாள் செய்தால் மேற்கண்ட நோய்கள் தீரும்.

## 306. மேற்படி வேறு

ஆகாயத் தாமரையை அரைத்த விழுது 10 பலம், காலணு கனமுள்ள தாமிரத் தகடு $2\frac{1}{2}$ பலம்; இத்தகட்டை முன்விழுதில் வைத்து இருபக்கங்களிலும் சமமாயிருக்கும்படியாய்ப் பொதிந்து ஒரு ஓட்டில் வைத்து மேலோடுமூடி 2 சீலைமண் செய்து உடனே கவசத்தினெடைக்கு $1\frac{1}{2}$ பங்கு விராட்டியிற் புடமிட்டாறவிட்டு எடுத்துக் கவசத்தை நீக்கித் தகட்டை எடுத்துக்கொள்க.

மறுபடியும் புதிதாய் முன்னிலையை அரைத்த விழுதை முன் மாதிரியே புடமிட வேண்டும். இவ்விதமே, $1\frac{1}{2}$ புடங்கள் பக்குவமாய் முன் மாதிரியே செய்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

மூங்கிலுப்பு $\frac{1}{2}$ பலம், கழுதைப்பால் 5 பலம், முன்னதைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்துத் தூளான பின்பு மேற்படி பாலைச் சிறுகச் சிறுக விட்டு பால் முழுவதும் செல்கிறவரையில்

அரைக்க வேண்டும். பின்பு, தேற்றான்விதை அளவு மாத்திரைகள் செய்து நிழலில் வைத்து உலர்த்திக் கொள்ளவேண்டும். இதற்கு மூங்கிலுப்பு மாத்திரையெனப் பெயர்.

இந்த மூங்கிலுப்பு மாத்திரை ஒரு வராகன் எடை; இதனைப் பொடித்து மூன்று பங்காக்கித் தனித்தனியாய்க் காகிதத் தாளில் மடித்து வைத்துக் கொள்க. ஒரு பலம் முன் செம்பை மூசையில் வைத்துருக்கி நன்றாயுருகிக் கண்விட்டாடும்போது முன்மடித்து வைத்திருக்கிற பொட்டலத்திலுள்ள மருந்தை அதிற்கொட்டி கரிக்குச்சியால் கோலாடி நன்றாயூதி சற்றுநேரம் தாமதித்து மறு பொட்டலத்திலுள்ள மருந்தைக் கொட்டி முன்போலவே செய்ய வேண்டும். சற்றுத் தாமதித்து மூன்றாம் பொட்டத்திலுள்ளதையும் போட்டுக் கோலாடி முன்போலவே செய்து 10 நிமிடம் நன்றாயூதி எடுத்துக் கொள்ளவேண்டும்.

இந்தத் தாம்பிரமானது ரோஜாப்பூ நிறமாய் வெகு நேர்த்தியாயிருக்கும். இன்னம், இந்தத் தாமிரமானது மருத்துவம், வாதம் என்ற இருவகைக்கும் அதிகம் மேலானதென்றும் இதற்குச் சமானமானதொன்றுமில்லை என்றும், சிலரால் சொல்லப்படுகிறது. ஆனால், இதனுண்மையை அனுபவசாலிகளே அறிந்து நிச்சயிக்க வேண்டியதாகையால், அவர்கள் வசமே இதனை ஒப்புவித்து விடுகின்றோம். அவர்களே தம்தம் விருப்பம் போல் சோதித்துக் கொள்ளட்டும். இதனால், இதில் ஒருவகை செந்தூரம் சொல்லப்பட்டிருக்கிறது. அது மிகவும் நல்ல முறையாகையால் அதனை மாத்திரம் இங்கெழுதுவோம்.

## 307. தாமிரச் செந்தூரம்

மேற்கண்டபடி தூய்மை செய்யப்பட்ட தாமிரத்தை உராவின தூள் ஒரு பலம்; இதனைக் கல்வத்திலிட்டுப் புளியாரைச் சாற்றை அல்லது புளிப்பு மாதுளம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு 4 சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி, அகலிலிட்டு மேலகல் மூடி 5 சீலைமண் செய்து கவசத்தின் எடைக்கு 25 பங்கெடையிற் புடமிட்டு ஆறவிட்டு எடுக்கவேண்டும்.

இதனை முன்போலவே முன் சாற்றைவிட்டு முன்போலவே அரைத்துப் புடமிடவேண்டும். இவ்விதம், இதனை மடக்கி மடக்கி 9 அல்லது 11 புடமிடச் செந்தூரமாகும். சில சமயம் இரண்டொரு புடம் அதிகமாவதும் உண்டு. எப்படியானபோதிலும் பாதகமில்லை. நன்றாய் முருக்கம்பூ போலச் சிவந்து போகிற வரையில் புடமிட்டெடுத்துக் கொள்ள வேண்டியதே நிதானம்.

குறிப்பு :—கடவுளின் அருளால் செந்தூரப் பாகங்கள் ஒவ்வொன்றிலும் அனேகம் பின் சொல்லப்படுமாயினும் மேற்கண்ட தாமிரத் தூய்மைக்குச் சொந்தமான பாகத்தை, அதைச் சார்ந்தாற்போல் எழுதவேண்டியது தேவையாகத்தோன்றியது. இன்னும், மேற்கண்ட பாகப்படி வேறுவகையாய்த் தூய்மை செய்த தாமிரங்களையும் செந்தூரஞ் செய்து கொள்ளலாம். ஆனுல், முன்னதிற்கும் மற்றவைகளுக்கும் சிறப்பான வேறுபாடு உண்டு.

## 308. மேற்படி வேறு

திறமான தாமிர அரப்பொடி 5 பலம், இதனைக் கல்வத்திற் போட்டு, 2 சாமம் நன்ருயரைத்து, அதிக நுண்மையான பொடியாகச் செய்து, ஒரு பீங்கான் பாண்டத்திலிட்டு, அதில் 15 வெள்ளாட்டுப் பித்துக்களின் நீரைவிட்டு அந்தப் பீங்கான் வாயை ஒரு மண் அகலால் மூடி 3 நாள் வெய்யிலில் வைக்கவேண்டும். நாலாம் நாள் காலையில், அந்தப் பொடியில் முன்போலவே, 15 வெள்ளாட்டுப் பித்துக்களின் நீரைவிட்டுப் பீங்கான் வாயை மண் அகலால்மூடி -முன் போலவே 3 நாள் வெய்யிலில் வைக்க வேண்டும். மறுபடியும், ஏழாம் நாள் காலையில் முன்போலவே 15 வெள்ளாட்டுப்பித்து நீர்களை விட்டு பீங்கான் வாயை மூடி முன் போலவே 3 நாள் வெய்யிலில் வைக்கவேண்டும். இவ்விதம், மும்மூன்று நாளுக்கொரு தடவை 15 வெள்ளாட்டுப் பித்து நீர்களை விட்டும், மும்மூன்று நாள்கள் வெய்யிலில் வைக்க வேண்டியது. ஆகக்கூடிய 9 நாளும், 45 வெள்ளாட்டுப் பித்து நீரும் விட்டு மேற்கண்டபடி பாகப்படுத்தின பின்பு, கால்பலம் பொரித்த வெண்காரத்தைத் தூளாக்கி முன் பொடியுடன் சேர்த்து நன்ருய்க் கலந்து, கெட்டியான ஒரு மூசையில் பாண்டத்திலுள்ளதை எல்லாம் வழித்துப் போட்டு, மூசை வாய்க்குக் கவசம் செய்யாமலே திறந்தபடியே வைத்து ஊதி தாமிரமானது உருகி கண்விட்டாடின பிறகு எடுத்துக் கொள்ளவேண்டும்.

இதில் ஒரு பலம் தாமிரத்தை எடுத்து காலணு திட்டமாய்ச் சிறுவில்லைகளாய் வெட்டிக் கொள்ளவேண்டும். பத்துப்பலம் புங்கங்காயை அல்லது புங்கம்பட்டையை மைபோல அரைத்து இரண்டு அடைகளாகத் தட்டி ஒரு அட்டையின்மீது மேற்படி தாமிரத் துண்டுகளை ஒன்ருெடொன்று படாமற் பரப்பி அதன்மேல் மறு அடையை வைத்துக் கெட்டிப்படுத்திவிட வேண்டும். இந்த அடைகள் தாமிரத் துண்டுகளுக்குச் சரியாக இருக்கவேண்டும். அதிகம் பெரிதாய் அல்லது அதிகம் சிறியதாக

இல்லாமல் மட்டமாகவும் இருக்கவேண்டும். பின்பு, அதன்மேல் மூன்று சீலமண் செய்து, கவசத்தின் எடைக்குப் பத்துப் பங்கெடை விராட்டியிற் புடமிட்டாற விட்டு எடுக்கவேண்டும். மறுபடியும், அந்தத் தாமிர வில்லைகளை எடுத்துக்கொண்டு முன் போலவே பத்துப்பலம் புங்கங்காயை அல்லது புங்கம்பட்டையை அரைத்து முன்போலவே பொதிந்து சீலமண் செய்து புடம் போட வேண்டும், இவ்விமே ஏழு தடவைகள் மடக்கி மடக்கிப் புடம் போட்டுத் தீர்க்கவேண்டும்.

இதன் பின்பு பத்துப்பலம் கூவளங்காயை அல்லது பட்டையை அரைத்து முன்போலவே பொதிந்து சீலமண் முதலியவை செய்து புடமிட வேண்டும். இவ்விதம் 7 தடவைகள் மடக்கி மடக்கிப் புடம்போட வேண்டும்.

இதன் பின்பு இத் தாமிரம் ஒவ்வொரு துண்டின்மீதும் பிரம தண்டு பாலை 4 முதல் 5 தடவைகள் சொட்டிப் பூசி நன்று யுலர்த்தி, ஒவ்வொன்றின் மீதும் இரண்டிரண்டு சீலமண் செய்து கவசத்தின் எடைக்குப் பத்துப்பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் கொள்ளவேண்டும்.

எருமைச்சாணியைக் கரைத்துக் குழம்புப்பதத்தில் வடிகட்டி ஒரு மண்பாண்டத்தில் விட்டுக்கொண்டு முன் தாமிரத்துண்டு களைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சித் துவைக்கவும். பின்பு எடுத்துக் காய்ச்சி முன்போலவே தோய்க்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 21 தடவைகள் மேற்படி சாணிப் பாலில் தோய்த்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

இதன் பின்பு ஆளிவிதை எண்ணெயை ஒரு சிறு பாண டத்தில் விட்டுக்கொண்டு மேற்படி செம்புத் துண்டுகளைப் பழுக்கக் காய்ச்சி மேற்படி எண்ணெயில் போடவேண்டும். ஆறின பின் மறுபடியும் நெருப்பில் பழுக்கக் காய்ச்சி முன்போல் எண்ணெயில் போடவேண்டும், இவ்விதம், மடக்கி மடக்கி 21 தடவைகள் செய்யவேண்டும்.

இதன் பின்பு திறமான கந்தகம் ஒரு பலம், இதனைக் கல்வத்தில் பொடித்து மணத்தக்காளி இலைச்சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு 2 சாமம் (6 மணி) அரைத்துப் பின்பு குழம்பு பதமாய்ச் செய்துகொண்டு, அதில் மேற்படி தாமிரத்துண்டுகளை நனைத்து வெய்யிலில் உலர்த்தி நன்றுய் உலர்ந்த பின்பு ஒரு விராட்டித் துண்டில் அடுக்கி அதன் மேலும் ஒரு விராட்டித்துண்டை வைத்து 70 பலம் விராட்டிகளை அதன் கீழும் மேலும் அடுக்கிப் புடம்

(சுடுகை) போடவேண்டும். ஆறினபின் எடுத்து முன் கந்தகக் குழம்பில் நனைத்துச் சற்று உலர்த்தி முன்போலவே விராட்டி அடுக்கி முன்னளவு விராட்டியிற் புடம் போடவேண்டும். இவ்விதமே பன்னிரண்டு புடங்கள் போடவேண்டும்.

**குறிப்பு** :—இங்குச் சொல்லியிருக்கின்ற புடத் திட்டங்களே எப்போதும் சரியானதென நினைக்கலாகாது. ஏனெனில் விராட்டியின் கனம், இலேசு, புடம்போடப்பட்ட இடம், காற்றின் நிலை ஆகிய பலவித விகற்பங்களில் புடத்தின் வெப்பம் குறைந்தும் அதிகப்பட்டும் போவதுமுண்டு. ஆகையால், இங்குச் சொல்லப் பட்டிருக்கும் அளவைக் குறிப்பாக வைத்துக்கொண்டு சமயோசித மாக சில சமயங்களில் அதிகப்படுத்தியும் சில சமயங்களில் குறைத்தும் கொள்ள வேண்டியது. எந்த கருத்தையும் நாம் சற்றுக் கவனமாய்ச் சிந்தித்துச் செய்யின் அனுபவத்தாலேயே ஒவ்வொன்றையும் நிச்சயித்து அறிந்து கொள்ள ஏதுவாகும்.

**தூய்மை ஆராய்வு** :— இந்தத் தூய்மை செய்த தாமிரம் ஒரு பங்கு, நல்ல வெள்ளி 2 பங்கு; இவ்விரண்டையும் சேர்த்துருக்க வேண்டும். இதனை மூன்று மூசைகள் மாற்றி உருக்கின பின்பு இதனுடன் ஒரு பங்கு தங்கத்தைச் சேர்த்துருக்க ஐந்து மாற்று பொன்னைபோல இருக்கும்.

இந்த வாதப்பொன்னைத் திருகுகள்ளிப் பால் மாற்றேற்ற யோகத்தில் நனைத்து, காவிக்கல் பொடியில் இட்டு இலகுபுடம் போட வேண்டும். இவ்விதம், மூன்று புடம் போட்டால் வயது அதிகம்போல் காணப்படும். இந்தத் தாமிரத்தைப் பற்பமாகச் செய்தால் பற்பல நோய்களுக்குப் பயன்படும். இதன் முறை களும் பின்னெழுதப்படும்.

## 309. தாமிரத் தூய்மை (வேறு)

கனமான பத்துப்பலமுள்ள தாமிரத் தகட்டை ஒவ்வொரு பலமுள்ள பத்துத் துண்டுகளாய்ச் செய்துக் கொள்ள வேண்டும். பத்துப் பலமுள்ள துண்டைப் பத்துப் பாகமாகச் செய்துக் கொள்ளலாம். ஒவ்வொரு துண்டும் சரியாக ஒரு பலமுள்ளதாய் இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை.

பருமனான நாற்பது எலுமிச்சம் பழங்களைச் சாறு பிழிந்து ஒரு மண் பாண்டத்தில்விட்டு வைத்துக் கொள்ள வேண்டும்.

மேற்படி தாமிரத் துண்டுகளைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சி மேற்படி எலுமிச்சம்பழச் சாற்றில் தோய்க்க வேண்டும்.

ஆறினபின் எடுத்து முன்போலக் காய்ச்சி முன்போலவே தோய்க்கவேண்டும். இவ்விதம், எலுமிச்சம்பழச் சாற்றில் மடக்கி மடக்கிப் பத்துத் தடவைகள் செய்து கொள்ளவேண்டும்.

காற்படி தாளிக்காத சுண்ணும்பை அல்லது கிளிஞ்சில் சுண்ணும்பை ஒரு படி நீரில் கரைத்து ஒரு மண் பாண்டத்தில் விட்டு வைத்துக் கொள்ளவேண்டும். பின்பு, முன் தகடுகளை முன் போலவே கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சி மேற்படி சுண்ணும்பு நீரில் தோய்க்க வேண்டும். மறுபடியும் அதைக் காய்ச்சித் தோய்க்க வேண்டும். இவ்விதமே மடக்கி மடக்கி பத்துத் தடவைகள் செய்து, துண்டுகளை நன்ருய்த் தேய்த்துக் கழுவி தூய்மை செய்துக் கொள்ளவேண்டும்.

வெள்ளைச் சாரணைக் கீரையை அரைத்த விழுதை ஒவ்வொரு துண்டிலும் இருபுறமும் காலங்குல கனம் கவசித்து, விராட்டியின்மீது அடுக்கி, அதன் மேலும் வேருெரு துண்டு, விராட்டியை வைத்து 60 பலம் எடையுள்ள விராட்டியை அதன் கீழும் மேலும் அடுக்கிப் புடம் போட வேண்டும். பின்பு எடுத்து முன்போலவே மேற்படி வெள்ளைச் சாரணைக் கீரையில் முன்பாகப்படியே செய்ய வேண்டும். இவ்விதம், ஐந்து புடம் (சுடுகை) போட்டு, தகட்டின் மீதுள்ள செதள்களை நீக்கிவிட வேண்டும்.

இப்புடங்களில் இடையிடையே தகடுகள் அதிகந் தேய்ந்து போனல் பத்துப் புடம் போட வேண்டுமென்பது அவசியமல்ல. 5 முதல் 7 புடத்திலேயே நிறுத்திக் கொள்ளலாம்.

திறமான காந்தம், கல்நார், சிலாசத்து இம்மூன்றும் வகைக்கு ¼ பலம்; தாளிக்காத கிளிஞ்சிற் சுண்ணும்பு ¼ பலம்; இவற்றை எல்லாம் தனித்தனி பொடித்து பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்தரைத்துப் பொடியாய்ச் செய்து பத்து பங்காக்கிப் பத்துப் பொட்டலங்களாகக் கட்டிக்கொள்ள வேண்டும். ஒரு பொட்டலத்திலுள்ள மருந்தை எலுமிச்சம்பழச் சாற்றிற் குழைத்து, எல்லாத் துண்டுகளிலும், இருபுறங்களிலும் தடவி விராட்டித் துண்டின்மீது அடுக்கி, அதன்மேல் மறு விராட்டியால் மூடி தரையின்மீது இருபது பலம் விராட்டியை அடுக்கி அதன்மேல் தாமிரத் துண்டுகளை அடுக்கி இருக்கிற விராட்டியை வைத்து அதைச் சுற்றிலும் முப்பது பலம் விராட்டியை அடுக்கி, அதன் மேலும் இருபது பலம் விராட்டியையும் அடுக்கி புடம் போட்டு ஆறின பின்பு, துண்டுகளின் மீதுள்ள சாம்பலை மெதுவாய் நீக்கி, அவற்றை மாத்திரம் எடுத்துக்

கொள்ளவேண்டும். மறுபடி இன்னொரு பொட்டலத்திலுள்ள மருந்தை முன்போலவே புதிய எலுமிச்சம்பழச் சாற்றில் குழைத்து முன்போலவே முன் துண்டுகளில் பூசி முன்போலவே புடம் போட வேண்டும்.

இவ்விதமே முன்னெடுத்து வைத்திருக்கிற பத்து பொட்டலங்களையும் பத்துப் புடம் (சுடுகை) போட்டுத் தீர்த்தால் செம்பு தூய்மையாகும்.

தூய்மை ஆராய்வு :—நல்ல வெள்ளி 7 பங்கு, இந்தத் தூய்மை செய்த செம்பு 4 பங்கு; இவ்விரண்டையும் சேர்த்துப் பக்குவமாக உருக்கி எடுத்து எடைக்கெடை தங்கம் சேர்த்தால் 7 மாற்றுள்ள பொன்னைப் போலிருக்கும். இது செந்தூரம், பற்பங்கள் முதலியவைகளாய்ச் செய்து கொள்ள மிகவும் மேலானத் தூய்மையாகும்.

## 310. தாமிரத் தூய்மை (வேறு)

வெள்ளிப் பீங்கான் அல்லது குளோப் பீங்கான் ஓடு என்னும் இவற்றுள் ஒன்றைப் பொடித்தரைத்துத் துணியில் சலித்தத் தூள் 5 பலம், பூநீர் அல்லது சீமை உழமண் (Washing Soda) 5 பலம், இவ் விரண்டையும் கல்வத்தில் போட்டரைத்துக் கலந்து ஒரு மண் கலயத்தில் போட்டு வாய்க்குச் சில்லியிட்டு 5 சீலைமண் செய்து 30 பலம் விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுக்கக் கலயத்திற்குள் எல்லாம் உருகிக் கட்டி இருக்கும். அதில் ஐந்து பலம் எடுத்துக் கல்வத்திலிட்டு, அரைத்து நன்ருய்ப் பொடியான பின் ஒரு பலம் நேர்வாளப் பருப்பை, ஒவ்வொன்ருய் மேற்படி மருந்துடன் சேர்த்துத் தேன்விட்டு அரைக்க வேண்டும். நேர்வாளமெல்லாம் சென்றவுடன் நன்ருயரைக்க மெழுகாகும். அதையெடுத்து இரண்டு அடையாகத் தட்டி ஒரு அடையை ஒரு ஓட்டில் வைத்து மேலும் மறு அடையை வைத்து மேலோடு மூடி 2 சீலைமண் செய்து உலர்த்தி மறுபடியும் அதன்மேல் 3 சீலை மண் செய்து உலர்த்தி மறுபடியும் 2 சீலைமண் செய்து உலர்த்திக் கூடிய ஏழு சீலை மண்ணும் ஈரமின்றி உலர்ந்த பின்பு கெச புடமிட்டு ஆறினபின் எடுக்க தாமிரமானது தூய்மையாகி ஒளியாயிருக்கும். கெச புடமாவது; ஒரு கெச ஆழம், ஒரு கெச அகலம், ஒரு கெச நீளமுள்ள குழி ஒன்று தோண்டி அதில் புளியம்பிரணி, ஆட்டுப் புழுக்கை, விராட்டி என்ற இவற்றைக் குழியில் அரைபாகம் போட்டு அதன்மேல் கவசத்தை வைத்து, அதன்மேல் மேற் சொன்னவைகளைப் போட்டுக் குழியை நிறைத்து நெருப்பிட்டு ஆறினபின் எடுத்துக் கொள்வதேயாகும்.

இதனைச் செந்தூரம், பற்பம் முதலியவைகளாகச் செய்து பயன்படுத்தினால் பற்பல நோய்கள் தீரும்.

## 311. தாமிரத் தூய்மை (வேறு)

40 அல்லது 50 நாகூர் சல்லிகளைப் புளியிலைக் கனம் தகடடித்து எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு நாள் ஊற வைத்துத் தூய்மையாகக் கழுவிக் கொள்ள வேண்டும். அதன்பின்பு மணத் தக்காளிக் கீரையை அரைத்த விழுது 23 பலம், இதனை இரண்டு அடையாகச் செய்து ஒன்றின்மேல் மேற்படி சல்லிகளை வைத்து அதன்மேல் மற்றொரு அடையையும் வைத்துக் கெட்டிப்படுத்தி ஒரு சாணக்கியில் வைத்து மேலும் மறு சாணக்கி மூடி 3 சீலை மண் செய்து வாய்பந்தனம் செய்து கவசத்தின் எடைக்கு 6 பங்கெடை விராட்டியிற் புடமிட்டுக் குளிர ஆறின பின்பு கவசத்தை நீக்கி, சல்லிகளை மாத்திரம் எடுத்து, முன்போலவே புதிதாய் மணித்தக்காளிக் கீரையை அரைத்து முன்போலவே கவசித்து முன்போலப் புடம் போடவேண்டும். இவ்விதம் 11 புடம் போட்டு எடுத்தால் தாமிரமானது தூய்மையாகும். இது மருத்துவம், வாதம் என்ற இருவகைக்குமாகும்.

## 312. தாமிரத் தூய்மை (வேறு)

நாகூர் செம்பு சல்லிகளைப் பொடியாய் நறுக்கி ஒரு பீங்கான் கோப்பையிற் போட்டு, அவை முழுகும்படியாக, பிராந்தியையும், சீமைத் திராட்சைக் காடியையும் சமனாய்க் கலந்து விட்டுப் பத்து நாள் வைத்து பதினோராம் நாள் தண்ணீர்விட்டுக் கழுவி தூய்மை செய்து கொள்க.

மறுபடியும் இந்தப் பொடியை முன்போல பீங்கான் கோப்பையில் போட்டு, முன்போலவே பிராந்தியையும், சீமை திராட்சைக் காடியையும் சமனாய்க் கலந்து விடவேண்டும். பத்து நாள் சென்று பதினோராம் நாள் தண்ணீர்விட்டுக் கழுவி தூய்மை செய்யவேண்டும். இவ்விதம் 4 தடவைகள் மீண்டும் மீண்டும் செய்து கொள்ள ஒருவிதத் தூய்மையாகும்.

பூநீர், கௌரிப்பாடாணம் மனோசிலை, நாகம், இரசம், இவ்வைந்தும் வகைக்குச் சமபாகம்; இவற்றில் இரசத்தை ஒரு மண் கிண்ணத்தில் விட்டு, அதனுடன் கொஞ்சம் நல்லெண்ணெய் ஊற்றி, நாகத்தை இரும்புக் கரண்டியில் வைத்துருக்கி மேற்படி இரசம் விட்டிருக்கிற கிண்ணியிற் சாய்க்க இரண்டும் ஒன்றறக்

கலந்து கொள்ளும். பின்பு, அந்த வட்டையெடுத்து எண்ணெய்ப் பசை இல்லாமல் துணியில் துடைத்துத் தூய்மை செய்து வைத்துக் கொள்ளவேண்டும். பின்பு மற்ற சரக்குகள் ஒவ்வொன்றையும் தனித்தனியே நுன்மையாய்ப் பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும். இரச நாக கலப்பினைக் கல்வத்தில் இட்டுக் கௌரிப் பொடியையும் அதன் பின்பு, மனோசிலைப் பொடியையும், முடிவாய்ப் பூநீர்ப் பொடியையும் சேர்த்து ஒரு மணி நேரம் நன்றாய் அரைத்துப் பின்பு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு 3 மணி நேரம் அரைத்து ஒரே வில்லையாகத் தட்டி வெய்யிலில் வைத்து உலர்த்திக் கொள்ளவேண்டும். இந்த வில்லையை ஒரு மண் சட்டியின் நடுவில் வைத்து அவ் வில்லையைச் செப்புக் கிண்ணியால் மூடி அதன் வாய்க்கு உளுந்துமாவால் சீலை செய்து வாய்மூடி சந்தில்லாமல் செய்து காயவைத்து அக்கிண்ணி அமிழ்ந்திருக்கும்படியாகவும் அதன் மேல் 2 அங்குலம் இருக்கும் படியாகவும் பொடிமணலைக் கொட்டி அடுப்பேற்றி தீபாக்கினியாக. ஒரு சாமம் எரித்து பின்பு கமலாக்கினியாக எரித்து வர வேண்டியது. அப்படி எரித்து வருகையில் சட்டியிலுள்ள மணல் கருகிய பதத்தில் வந்தால் எரிப்பை நிறுத்தி, ஆறவிட்டுப் கிண்ணத்திற்குள் படிந்திருக்கும் பதங்கம் அந்த வில்லையில் ஏதேனும் மிச்சமிருப்பின் முதலிய எல்லாவற்றையும் எடுத்துப் பொடித்துப் பளிங்குக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டியது.

முன்பு பாகப்படுத்தி வைத்திருக்கிற தாமிரம் ஒரு பலம் இந்த மருந்து $\frac{1}{2}$ பலம். இவ்விரண்டையும் சேர்த்து மூசையில் வைத்து உருக்கி, உருகின பின் கரிக்குச்சியால் நன்றாய்க் கிளறி விட்டு, இரண்டும் ஒன்றாய் கலந்த பின் எடுத்து, சரவுலையில் வைத்தூதி சேர்த்த மருந்தெடையை நீக்கிவிடவேண்டும். வைத்த செம்பு எடையிலும் கொஞ்சங் குறைந்துபோன போதிலும் பாதகமில்லை. ஆனால் தூயதாகவும், மாசுகளறவும் ஊதியெடுக்க, தாமிரமானது ஒரு வகையாய்த் தூய்மையாகிக்கட்டும். இது மருத்துவம், வாதம் என்ற இருவகைக்குமாகும். இதனைச் செந்தூரமாய்ச் செய்யின் பல நோய்களுக்குக் கொடுக்க உதவும்.

**தூய்மை ஆய்வு :—** இந்தச் செம்பு 3 பங்கு, நல்ல வெள்ளி ஒரு பங்கு, தங்கம் $\frac{1}{2}$ பங்கு; இம் மூன்றையும் சேர்த்துருக்கி, செம்பில் ஒரு பங்கை சரவுலையில் வைத்து ஊதிப் போக்கினால் வாதப் பொன்னாகி, மற்ற பொன்னைப்போல இருக்கும். இவ்விதம் கூட்டப்பட்டதை உராவித் தூள் செய்து, முறைப்படி செந்தூரஞ் செய்தால் பற்பல நோய்களுக்குமாகும்.

## 313. தாமிரத் தூய்மை (வேறு)

கப்பல் செம்பு அல்லது முன்காலத்துப் பெரிய துட்டு, இவ்விரு வகையுள் ஒரு வகையில் $2\frac{1}{2}$ பலம் ($87\frac{1}{2}$ கிராம்) எடுத்துப் பல துண்டு களாய் அகலமாகச் செய்து கொள்ளவேண்டும். கீழ்ப் பக்கஞ் சிவந்திருக்கிற சிறு அம்மான் பச்சரிசி இலையை அரைத்த விழுது 16 பலம் (560 கிராம்) இதில் மேற்படி தாமிரத் துண்டுகளை வைத்துப் பொதிந்து ஒரு சீலமண் செய்து கொள்க. உடனே 200 பலம் விராட்டியில் அரைப் பாகத்தை ஒரு பழம்பானையில் அடுக்கி அதன் மேல் மேற்படி கவசத்தை வைத்து அதன் மேலும் மீதி விராட்டியை அடுக்கிக் காற்றில்லாத இடத்தில் புடமிட்டு ஆறின பின் தகட்டை எடுத்துக் கொள்ளவேண்டும். இம் மாதிரியே மீண்டும் மீண்டும் 11 புடங்கள் போட்டுத் தாமிரத்தை எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, துருசு, நவச்சாரம், படிக்காரம் இம் மூன்றும் வகைக்கு ஒரு பலம் (35 கிராம்); இவற்றைக் கல்வத்திலிட்டுப் பொடித்து ஒரு பலம் எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு வில்லைதட்டி வெய்யிலில் உலர்த்த வேண்டியது. வில்லையை விரலால் தட்டினுல் கணீரென ஒலி கேட்கவேண்டும். வில்லையின் மத்தியில் கொஞ்சமும் ஈரமிருக்கலாகாது. பின்பு இதனை ஒரு அகலில் வைத்து மேலகல் மூடி மூன்று சீலமண் செய்து உலர்த்தி கவசத்தின் எடைக்கு 5 பங்கெடை விராட்டியில் புடமிடவேண்டும். ஆறினபின் எடுக்க நேர்த்தியான பற்பமாகி இருக்கும். வைத்த எடை குறையாது. இதனைப் பொடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, வாழைக்கிழங்கை இடித்துப் பிழந்த சாறு ஒரு படி, இதனை ஒரு மண்பாண்டத்தில் விட்டு முன் பற்பத்தை அதில் கரைத்து வைத்துக்கொண்டு அதில் முன்கூறிய தாமிரத்தை உருக்கிச் சாய்க்கவேண்டும். ஆறினபின் எடுத்து உருக்கி முன் போலவே சாய்க்கவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் 11 தடவைகள் சாய்க்கவேண்டும். பின்பு, இத்தாமிரத்துக்குச் சமனெடை கருவங்கம் சேர்த்துருக்கி, சரவுலையில் வைத்து ஊதி யெடுத்தால் அரைபாகம் செம்புதான் தேறும். இது கடினமான பாகமாயினும் அதற்குத் தகுந்ததுபோலவே குணமும் இருக்கும். இது ஒருவகை நல்ல தூய்மையாகையால் மருத்துவம், வாதம் என்ற இருவகையிலும் மேலான குணத்தைத் தரும்.

**தூய்மை ஆய்வு** :—இத்தாமிரம் 5 பங்கு, தங்கம் ஒரு பங்கு சேர்த்துப் பார்த்தால் இதன் குணம் தெரியவரும். இது இருக்கும்

தன்மைக்கேற்றபடி அனுபவத்தால் கண்டு நிச்சயித்துக் கொள்ளலாம்.

மேற்கண்டவை சேர்த்துச் செந்தூரம் செய்தால் பற்பல நோய்கள் தீரும். இதன் முறை பின்னர் எழுதப்படும்.

## 314. தாமிரத்தூய்மை (வேறு)

செம்பையிலே, முள்ளிக்கீரை, கொடித்துத்தியிலே, சீத்தாப்பழ இலே, விளாஇலே இவ்வைந்து வகைகளும் வகைக்கு ஒரு பிடி, இவற்றை வெண்ணெய்போல அரைத்து இரண்டு அடை செய்து, காலஞ கனமுள்ள ஐந்து பலம் (175 கிராம்), தாமிரத்தகட்டை வைத்து, அதன்மேலும் மற்ருெரு அடையை வைத்து நன்ருய்ப் பொதிந்து இரண்டு சீலேமண் செய்து நூறுபலம் விராட்டியில் புடமிடவேண்டும். ஆறினபின் எடுத்து இரண்டாம் தடவையும் முன்போலவே மேற்கண்ட ஐந்துவகை இலேகளேயும் அரைத்துப் புடமிடவேண்டும்.

பின்பு அரைப்பலம் திறமான காந்தத்தை சிவப்பு மணித் தக்காளிச் சாற்றை அல்லது பச்சைமணித்தக்காளிச் சாற்றை விட்டு மைபோல அரைத்துக் கொஞ்சம் சாற்றைக் கூடுதலாக விட்டு குழம்புபோலச் செய்து பத்துப் பங்காக்கிக் கொள்ள வேண்டும். இதில் ஒரு பாகத்தைத் தகடு தெரியாமல் முழுவதும் பூசி வெய்யிலில் காயவைத்து ஒரு சீலேமண் செய்து 70 பலம் (2450) கிராம் விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துத் தகட்டின்மீதுள்ள செதள்களேத் தட்டி நீக்கவேண்டும். தகட்டின் மீது கருமை படர்ந்திருந்தால் தகட்டை நீரில் நனேத்துக் கத்தியால் சுரண்டி நீக்கிவிட வேண்டும். பின்பு, முன்னெடுத்து வைத்திருக்கிற மற்ருெரு பாகத்தைத் த-வி முன்போலவே புடம் போட்டெடுத்து முன்போலவே செய்யவேண்டும். இவ்விதம் பத்துப் புடங்களும் இட்டுத்தீர்த்து விடவேண்டும் இந்தப் பத்துப் புடங்களிலும் மேற்கண்ட அரைப்பலம் காந்தத்திற்கு அதிகம் கூடாது. அப்படிப் போதாமலிருந்தால் மேற்கண்ட சாற்றைவிட்டுக் குழப்பிக் கொள்ளவேண்டும்.

வேறு அரைப்பலம் காந்தத்தைச் சீமைக் கரிசலாங்காணிச் சாற்றை விட்டரைத்துக் குழப்பி ஐந்து பங்காக்கி மேற்கண்ட விவரப்படியே மீண்டும் மீணடும் புடமிட்டெடுக்க மிகமேலான தூய்மையாகும்.

**தூய்மை ஆய்வு :** – இத்தாமிரம் ஒரு பங்கு, நல்லவெள்ளி 7 பங்கு, இவற்றுடன் 10 பங்கு தங்கத்தைச் சேர்த்து உருக்கி

எடுத்து நான்கு துண்டுகளாய் வெட்டி மறுபடியும் உருக்க வேண்டும். இவ்விதம் மூன்று தடவைகள் மாற்றி மாற்றிக் கலக்கி உருக்கிக் கொண்டால் வாதப் பொன்னாகும். இந்தப் பொன்னைச் செந்தூரஞ்செய்தால் அதிகச் சிறப்புள்ளதாக இருக்கும்.

## 315. தாமிரத் தூய்மை (வேறு)

கருவங்கத்தை உருக்கி உருக்கி மூன்றுதரம் தரையில் சாய்த்து சாய்த்தெடுக்க ஒருவித பக்குவமாகும். இவ்விதம் பாகப்படுத்தப் பட்ட கருவங்கம் ஒரு பலம், இரசம் ஒரு பலம், இவ்விரண்டையும் முன் சொல்லப்பட்டிருக்கிறபடி கலந்து கொள்ளவும். வெடியுப்பு, படிகாரம், குஞ்சு பொரிக்கப்பட்ட முட்டைத்தோல் இம் மூன்றும் வகைக்கு ஒரு பலம், இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியே தூள் செய்து பின்பு, மேற்கண்ட ஐந்து சரக்குகளையும்கல்வத்தில் இட்டு அரைத்துத் தூள் செய்து எலுமிச்சம்பழச் சாற்றை சிறுகச் சிறுகவிட்டு 2 சாமம் அரைத்து மைபோலான பின்பு ஒரு வராகன் எடையுள்ள உருண்டைகளாகச் செய்து காயவைத்து இனி எல்லாவற்றையும் ஒரு பெரிய மூசையில் இட்டு மூசை வாய்க்கு ஓடு மூடி மூன்று சீலைமண் செய்து கொல்லுலையில் வைத்துக் கரயால் மூடி மூசை சிவக்கவூதி மருந்தை எடுத்து வைத்துக் கொள்க.

தாமிரம் ஒரு பங்கு, மேற்கண்ட மருந்து ஒரு பங்கு, தாமிரத்தை மூசையிலுருக்கி, நன்றாய்க் கண்விட்டாடும்போது, மேற்படி மருந்தைக் கொஞ்சங் கொஞ்சமாக சுருக்கிட்டு ஒரு மரக்குச்சியால் கிளறிக் கொடுக்கவேண்டும். சற்றுத் தாமதித்து முன்போலவே சுருக்குக் கொடுத்து முன்போலவே செய்ய வேண்டும். இவ்விதம் மேற்கண்ட மருந்தையெல்லாம் சுருக்கிட்டு, முடிவில் நன்றாய் ஊதியெடுத்து ஆறவைத்துத் தாமிரம் முதலியவை கண்ட எடைக்கு சமன் கருவங்கஞ் சேர்த்து, சரவுலையில்வை வத்து, வங்கமற ஊதி எடுக்க வேண்டும். பின்பு உருக்கி வங்கச் சத்தில்லாமல் தூய்மை செய்து கொள்ளவும்.

இவ்விதம் செய்யப்பட்ட தாமிரமானது மிகவும் தூயதாக இருக்கிறது. இது மருத்துவம், வாதம் என்ற இரு வகைக்கும் பயன்படுமாம்.

**தூய்மை ஆய்வு:—** வெள்ளி ஏழு பங்கு, மேற்படி தாமிரம் மூன்று பங்கு தங்கம் பத்து பங்கு; இவற்றை ஒன்றாய்ச் சேர்த்து உருக்கி எடுத்து நான்காக வெட்டி மறுபடியும் உருக்கி எடுத்துக்

கொள்ள வேண்டும். இவ்விதம் உருக்கியும் துண்டுகளாக்கியும் மடக்கி மடக்கி மூன்று தடவை செய்துகொண்டால் எல்லாங் கலந்து ஒருவித வாதப் பொன்னாகும்.

இந்தப் பொன்னை உராவி, இதற்குச் சமபங்கு செயரசத்தைச் சேர்த்து, முன் சொல்லப்பட்டிருக்கும் செந்தூர வகைத் திராவகத்தை விட்டரைத்துப் புடம்போட்டுப் பாகப்படி செய்து வர மிக மேலான செந்தூரமாகும். இது ஒரு வகை திரிலோக செந்தூரமாகையால், நோய் வலிமை, உடல் வலிமை முதலியவைகளுக்கு ஏற்றபடி சமயோசிதமாக தகுந்த துணை மருந்துகளில் கொடுக்க கடினமான நிலையிலுள்ள பற்பல நோய்களும் தீர்ந்து உடல் திடப்பட்டு, உள்ளஊக்கம் முதலிய பலவகை உடல் வளமைகளும் உண்டாகும்.

## 316. தாமிரத் தூய்மை (வேறு)

தேவையான அளவு தாமிரத் தகட்டைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சி, சங்கங்குப்பி இலைச்சாற்றில் தோய்க்கவேண்டும். இந்தச் சாற்றைத் தாமிரம் முழுகும்படியான அளவாகப் பாண்டத்தில் விட்டுக் கொள்ளவேண்டும். ஒரு தடவை தோய்த்த சாற்றில் மடக்கி மடக்கி ஐந்து தடவைகள் தாம் தோய்க்கலாகும். பின்பு, அதிலுள்ள சாற்றை நீக்கிவிட்டு புதியசாற்றை விட்டுக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஐந்து தடவைகளுக்கு ஒரு தடவை சாற்றை மாற்றிக் கொண்டு 10 தடவைகள் காய்ச்சித் தோய்த்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

பிறகு, மருதோன்றி இலையை அரைத்துத் தகட்டின்மீது காலங்குல கனம், தகடு முழுவதும் கவசித்து ஒரு ஓட்டில் வைத்து மேலகல்மூடி மூன்று சீலைமண் செய்து 120 பலமுள்ள விராட்டியில் புடமிட்டாறவிட்டு எடுத்து, முன்போலவே மருதோன்றி இலையை அரைத்துக் கவசித்துச் சில்லியிட்டு முன்போலவே புடம் (சுடுகை) போடவேண்டும். இவ்விதம், அந்தத் தகடானது வெட்டையாகி விட்டால் விரலால் நிமிட்டினால் நொறுங்கித் தூளாகும் தன்மையை அடைகிறவரையில் மேற்சொன்னபடி பாகமாய்ப் புடம் போட்டெடுத்துக் கொள்ளவேண்டும், இதற்குத் தாமிர வெட்டையென்றும் மறுபெயருண்டு. இந்த வெட்டையானது ரோசாப் பூவைப்போல சிவந்த நிறமுடையதாக இருக்கும்.

**தூய்மை ஆய்வு :—** நல்ல வெள்ளி 10 பங்கு, இத் தாமிரம் 2 பங்கு, இவ்விரண்டையும் மூசையிலிட்டு உருக்கி எடுத்து

எடைக்கெடை தங்கஞ் சேர்த்து உருக்கிக்கொள்ள ஒரு வகை வாதப் பொன்னாகும். மேலும் இது அவரவர்கள் அனுபவப்படி பல விதமாய்ச் செய்யப்படுகிறது.

இந்தச் செம்பைச் செந்தூரவகை திராவகமிட்டு அரைத்து 7 புடமிட்டெடுத்தால் அதிக வண்ணமுள்ள செந்தூரமாகிவிடும். ஆனால், இதன் துணைமருந்து முதலியவைகளை நிதானித்து, சமயோசிதமாய்ச் செய்யவேண்டியது. கற்றறிந்த மருத்துவருக்கு இயலுமேயொழிய, சாதாரணமாக மற்றெல்லோருக்கும் இயலாதென அறிந்திருக்க வேண்டும்.

## 317. தாமிரத் தூய்மை (வேறு)

வேப்பங் கொழுந்தை அரைத்த விழுது 15 பலம் (525 கிராம்), 5 பலம் தாமிரத் தகட்டை, சம அளவுள்ள ஐந்து துண்டுகளாகத் துண்டிட்டுக் கொள்ளவேண்டும். மேற்படி விழுதுக்குள் மேற்கண்ட ஐந்து துண்டுகளையும் ஒன்றோடொன்று படாமல் வைத்து நன்றாய்ப் பொதிந்து, அதன்மேல் ஒரு சீலைமண் செய்து 150 பலமுள்ள விராட்டியில் புடமிட வேண்டும். நன்றாக ஆறினபின்பு தகடுகளை எடுத்து முன்போலவே வேப்பிலையை அரைத்த விழுதுக்குள் செலுத்தி முன்போலசீலைமண் செய்து முன்போலவே புடமிட வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி பத்துப் புடம் போட்டுத் தகடுகளை எடுத்துக்கொள்ளவும்.

கல்நார் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), சிலாசித்து 1 பலம் (35 கிராம்); இவ்விரண்டையும் முன்னர் தனித்தனியே பொடித்துப் பின்பு இரண்டையும் சேர்த்து நன்றாய் அரைத்துப் பத்துப் பங்காக்கிப் பத்துப் பொட்டலமாகக் கட்டிக் கொள்ளவேண்டும். பின்பு, ஒரு பொட்டலத்திலுள்ள மருந்தைக் கல்வத்தில் போட்டு, எலுமிச்சம் பழச் சாற்றை விட்டுஅரைத்து மைபோலான பின்பு மறுபடியும் கொஞ்சம் சாற்றைவிட்டுக் குழம்பு பதமாய்ச் செய்துக் கொண்டு முன் தாமிரத் தகடுகளின்மேல் எங்கும் சமமாயிருக்கும் படியாகப் பூசி வெய்யிலில் உலர வைத்து, ஒரு ஓட்டில் ஒன்றின்மீது ஒன்று படாமல் மட்டமாய்ப் பரப்பி மேலோடுமூடி 3 சீலைமண் செய்து 100 விராட்டியிற் புடமிட்டாறின பின்பு எடுத்துக் கொள்ள வேண்டும், மறுபடியும் முன்போலவே மற்றொரு பொட்டலத்திலுள்ள மருந்தை அரைத்து முன்போலவே தகடுகளில் பூசி புடம் போடவேண்டும். இவ்விதமே பத்துப் பொட்டலங்களிலும் உள்ள மருந்தைப் பத்துத் தடவையாகப் பத்துப் புடங்கள் போட்டெடுத்துத் தாமிரத்தை மூசையிலிட்டு உருக்கி எடுக்க,

தாமிரத்திலுள்ள கசடு முதலியவை நீங்கி தூய்மையாய் இருக்கும். இது மருத்துவம், வாதம் என்ற இரு முறைகளுக்கும் பயன்படும்.

## 318. தாமிரத் தூய்மை (வேறு)

(1) கழுதை மூத்திரம் 4 படி, இதில் $1\frac{1}{2}$ படி உழமண்ணையும் 2 பலம் (70 கிராம்) தாளிக்காத கற்சுண்ணும்பையும் போட்டு பத்து அல்லது பதினைந்து நாட்கள் வைத்திருக்க வேண்டும். இந்த நாள்களில் நாள்தோறும் இரண்டு மூன்று தடவைகள், அதை ஒரு மூங்கிற் குச்சியால் கலக்கிக் கொண்டு வரவேண்டும். மேற்கண்ட நாள்கள் சென்ற பின்பு மறு பாண்டத்தில் தெளிவை இறுத்துக் கொள்ளவும். நாட்டு நவச்சாரம் 2 பலம், இதனை நுண்மை ஆகும்படி பொடித்து முன்தெளிவிற்போட்டு மூன்று அல்லது நான்கு நாள்கள் வைத்திருக்க வேண்டும், இதற்கு தேசிநீர்த் தெளிவெனப் பெயர்.

(2) வளையக்காரர்கள் பயன்படுத்தும் தாமிர ரேக்கு 7 பலம், ஏழெட்டுப் பலம் தாமிரம் உருச்கத்தக்க மூசைகள் 25; இவ்விரண்டு வகைகளையும் தயாரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

(3) சவ்வீரம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), இது ஒரே கட்டியாக இருக்க வேண்டும். ஒரு கலயத்தில் காற்படி இளநீரை விட்டு அதில் அரை வராகனெடை சூரத்துக் கற்பூரத்தையும், அரை வராகனெடை மிளகையும் தனித்தனியாக அரைத்துப் போடவேண்டும். 120 காரமான வெற்றிலையின் காம்புகளை மைபோல அரைத்துப் போட்டு ஒரு மூங்கில் குச்சியால் இளநீரை நன்ருய்க் கலக்கி விட வேண்டும். முன் சவ்வீரக்கட்டியை, பலமான மெல்லிய நூலின் ஒரு தலைப்பைக் கட்டிக் கலயத்திற்குள் கட்டியைத் தொங்க விட்டு, குச்சியைக் கலயத்தின்மேல் குறுக்காகப் போட்டுவிட வேண்டும். இந்த வீரக்கட்டியானது இளநீருக்குமேல் $2\frac{1}{2}$ அல்லது 3 அங்குலத்திற்குமேல் தொங்கிக் கொண்டிருக்க வேண்டும். இவ்விதம், தயார்ப்படுத்திய இந்தக் கலயத்தை அடுப்பின் மீதேற்றிச் சிறு தீயாக எரிக்க வேண்டும். கலயத்திலுள்ள இளநீரானது பொங்கி. வீரக்கட்டியின் மீது படலாகாது' இளநீரிலுண்டாகும் ஆவி மாத்திரம் எழும்பி வீரக்கட்டியின்மீது படவேண்டும்; இவ்விதம் மெதுவாக எரித்துக் கலயத்திலுள்ள இளநீரெல்லாம் சுண்டினபின் கலயத்தைக் கீழிறக்கி வைத்துக் குளிர ஆறினபின் எடுத்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

மேற்படி பாகப்படி செய்தெடுத்த சவ்வீரம் ½ பலம் (17½ கிராம்), வெண்காரம் ½ பலம், குஞ்சு பொறிக்கப்பட்ட கோழி முட்டை ஓடு 1 பலம் (இவற்றிலுள்ள சவ்வுகளை நீக்கித் தூய்மை செய்யவேண்டும்) இவற்றுள் முன்னர் முட்டை ஓடுகளை கல்வத்தி லிட்டு மைபோலப் பொடித்துப் பின்பு முன் வீரத்தைச் சேர்த்துப் பொடித்து 1 முதல் 2 மணி நேரம் நன்ருய் அரைத்துத் தூள் செய்து ஒரு பலம் நாட்டு வெண்காரத்தையும் சேர்த்து 2 மணி நேரம் அரைக்க வேண்டும். இதைத் தூள் செய்யும்போது காற்று வாட்டமாய் உட்கார்ந்து அரைக்கலாகாது. ஏனெனில் இதில் கொடிய நஞ்சாகிய வீரம் சேர்ந்திருப்பதால் இந்த மருந்தின் தூள் அல்லது. காரம், கண், மூக்கு முதலிய உறுப்புகளில் செல்ல ஏதுவாகி அவற்றிற்குக் கெடுதி உண்டாகும். மேலும், இந்தத் தூளைக் கையால் தொட்டால் உடனே தேய்த்துக் கழுவி தூய்மை செய்ய வேண்டும். இவ்விதம், அதிக கவனத்துடன் அரைத்து நன்ருய் வெண்ணெய்போலான பின் மூன்று பங்காக்கி மூன்று பொட்டலங்களாகக் கட்டி வைத்துக் கொள்ளவேண்டும்.

செய்முறை:—(2) இதிலுள்ள தாமிர ரேக்குகளைப் பொடியாய்க் கத்தரித்து ஒரு பெரிய மூசையிற் போட்டு, சீமைத் துருத்தியுள்ள உலையில் வைத்து ஊதியுருக்க வேண்டும்.

(1) இதிலுள்ள தேசிநீர்த் தெளிவை ஒரு பாண்டத்தில் இத் தாமிரம் முழுகும் படியான அளவு விட்டு, மூசையிலுள்ளது உருகி நன்ருய்க் கண்விட்டாடினவுடன் அதில் சாய்கக வேண்டும். அந்த நீரானது கொதித்துத் தானே குளிர ஆறினபின், இந்தப் பாண்டத்திலுள்ள தாமிரத்தையும், உருக்கின மூசையிலுள்ள தாமிரமணிகளையும் ஒன்றையும் விடாமல் கவனமாக எடுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம். செய்யாவிட்டால் தடவைக்குத் தடவை சன்னஞ் சன்னமாய் குறைந்து அதிகங் குறைந்து போக ஏதுவாகும் என்பதே.

அந்தத் தாமிர வில்லையை நான்காக வெட்டியும் மற்ற மணி களையும் ஒன்ருய்ச் சேர்த்து முன் சித்தப் படுத்தி வைத்திருக்கிற மூசைகளிலொன்றில் போட்டு உலையில் வைத்து உருக்க வேண்டும். உருக்கும்போது கொஞ்சம் கொஞ்சம் வெண்காரமும் போட்டு வரவேண்டும். முன்தேசி நீர்த் தெளிவில் முன்னளவு வேருெரு பாண்டத்தில் விட்டு, தாமிரமானது கண்விட் டாடினவுடன் அதில் சாய்க்க வேண்டும். கொதித்து நன்ருய்க் குளிர ஆறினவுடன் முன்போலவே இந்த பாண்டத்திலுள்ள

மணிகள், மூசையிலுள்ள எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து, அந்த வட்டையும் நான்காக வெட்டி மறுமூசையில் இட்டு உருக்க வேண்டும்; இவ்விதம், தடவைக்குத் தடவை புதிது புதிதாய்த் தேசிநீர்த் தெளிவை வெவ்வேறு பாத்திரங்களில் விட்டுக் கொண்டு 15 தடவைகள் முன் சொன்னதுபோலவே உருக்கிச் சாய்க்க வேண்டும். இப்பதினைந்து தடவைகளும் உருக்கிச் சாய்க்க பக்குவந் தெரிந்த இரண்டு ஆள்களுக்கு ஒரு நாள் முழுவதும் செல்லும். பக்குவந் தெரியாதவர்களாயினும், சோம்பேறிகள் ஆயினும், விடாமுயற்சி, ஊக்கம் முதலியவைகளில்லாதவர்கள் ஆயினும் இதன் ஆரம்பத்திலேயே விட்டு விடுவார்கள். வேறு சிலர் இந்த சமயத்தில் விட்டு விடுவார்கள். பக்குவந்தெரிந்தவர் களுக்கும் முயற்சி, ஊக்கம் முதிலியவை உள்ளவர்களுக்கும் இந்த வேலை மாத்திரமல்ல, எந்த வேலையும் பெரிதல்ல, எவ்வித தொல்லைப் பட்டும் சாதித்தே முடிப்பார்கள்.

மறுநாள், அந்தத் தாமிரத்தை மூசையில் போட்டு உருக்கி உருகினவுடனே ஒரு நீண்ட சிறிய இரும்புக் கரண்டியால் முன் எடுத்து வைத்திருக்கிற பொட்டலங்களில் ஒரு பொட்டலத் திலுள்ள பொடியில் கொஞ்சம் எடுத்து உருக்கு முகத்தில் கொடுத்து நீண்ட இரும்புக் கம்பியால் துழாவிக் கொடுக்க வேண்டும். இந்த மருந்தைச் சுருக்குக் கொடுக்கும்போது உண் டாகும் புகையானது கண்ணில் படாமல் கவனமாக இருக்க வேண்டும். ஒரு பொட்டலத்திலுள்ள 5 நிமிடத்திற்கு ஒரு தடவையாய் அல்லது சமயோசிதமாய்த் தாமதித்து ஒரு மணி நேரத்திற்குள் சுருக்குக் கொடுத்துவிட வேண்டும். பின்பு, மூசையை வெளியில் எடுத்து வைத்துக் குளிர ஆறின பின்பு, தாமிரத்தை மறு மூசையிலிட்டு உருக்கி முன்போலவே மறு பொட்டலத்திலுள்ள பொடியை எல்லாம் முன்போலவே கொஞ்சம் கொஞ்சமாக முழுதுமாய் ஒரு மணிக்குள் சுருக்குக் கொடுத்து மூசையை வெளியிலெடுத்து, ஆறவைத்து நன்றாய்க் குளிர்ந்த பின்பு, மூன்றாவது மூசையில் இட்டு முன்போலவே உருக்கி முன்போலவே மூன்றாம் பொட்டலத்திலுள்ள பொடி யையும் ஒரு மணிக்குள் சுருக்குக் கொடுத்துக் கிளறியானபின் மூசையை எடுத்து வெளியில் வைத்துக் குளிர ஆறினபின், நான்காம் மூசையிலிட்டு உருக்கிநன்றாய் கண்விட்டாடினவுடன், நல்ல தண்ணீரில் சாய்க்கவேண்டும். இவ்விதம், செய்யப்பெற்ற தாமிரமானது வெகு நேர்த்தியாகவும் சிறப்பான குணமுள்ள தாகவும் இருக்கும். இதனைச் செந்தூரம் ஆக்கினாலும் ஒப்பற்ற குணத்தைக் கொடுக்கும். கடினமான நோய்களெல்லாம் தீரும்.

இவ்விதமே இது இரசவாதச் சார்பான முறைகளிலும் அதிகமாகப் பயன்படுகின்றது. இது புடத்திற்கு ஓடுகிறதில்லை. அப்படி ஓடினும் நிறத்தை அதிகப்படுத்தியே போகும். ஆகையால், அனுபவசாலிகள் இதன் குணத்தை நிச்சயித்தறிந்து தங்கள் விருப்பம்போல் செய்து கொள்வார்கள்.

## 319. தாமிரத் தூய்மை (வேறு)

கறியுப்பு, வெடியுப்பு, படிக்காரம், இரசக்கற்பூரம், துருசு, வெண்காரம் ஆகிய ஆறு பொருள்களும் வகைக்குச் சமனெடை, இவற்றுள் ஒவ்வொன்றையும் ஒன்ருய்க் கலந்து, எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு வெண்ணெய்போலாகிறவரையில் அரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி, வெய்யிலில் ஈரமில்லாமல் உலர்த்தி, ஒரு அகலில் வைத்துப் பரப்பி மேலகல்மூடி 5 சீலைமண் செய்து உலர்த்தி இக் கவசத்தின் எடைக்கு 3 பங்கெடை விராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறினபின் எடுக்க ஒருவகை பற்பமாகும்.

செல்லத்தக்க அளவு மேற்படி பற்பத்தை எடுத்துக் கல்வத்தில் பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு அரைத்துக் குழைத்துப் புகையிலைக் கனமுள்ள ஒரு பலம் நல்ல செம்புத் தகட்டிற்கு எல்லாப் பக்கங்களும் சமமாய்ப் பூசி வெய்யிலில் உலர்த்தி ஒரு ஓட்டில் சீமை உழமண்ணை அல்லது, Washing Soda வைப் பொடித்து பரப்பி அதன்மேல் முன் சித்தப்படுத்தி உலர்த்தி வைத்திருக்கிற தகட்டை வைத்து, அந்தத் தகடு மறையும்படியாக முன்கூறிய மேல்நாட்டு உழமண் பொடியைப்போட்டு, மேலகல் மூடி மூன்று சீலைமண் செய்து கவசத்தின் எடைக்குப் பதினைந்து பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறினபின் தகட்டை எடுத்துக்கொள்ளவும்.

இரண்டாம் தடவையும் முன் பற்பத்தைக் கல்வத்தில் எலுமிச்சம்பழச் சாற்றை விட்டரைத்து முன்போல தகட்டிற்குக் கவசித்து உலர்த்தி ஓட்டில் வைத்து முன்போலவே புடமிட வேண்டும்.

மூன்ரும் தடவையும் முன்போலவே புடமிட்டு உருக்கி எடுக்க, தாமிரமானது தூய்மையாகி இருக்கும்.

இது மருத்துவம், வாதம் என்ற இரு முறைகளுக்குமாகும். இதனைத் தங்கத்தோடு சேர்த்துத் தம்பாக்குச் செய்தால் மிக மேலானதாக இருக்கும்.

## 320. தாமிரத் தூய்மை (வேறு)

திறமான தாமிரம் 3 பலம் (105 கிராம்) (இதற்காக அயச் செம்பானல் நல்லது) இதைத் தம்பிடி கனமுள்ளதாகத் தகடடித்துக் கொள்ளவேண்டும். சவ்வீரம் ஒரு பலம், இதனைக் கல்வத்தில் பொடித்து எலுமிச்சம்பழச்சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு அரைத்து மைபோலானபின்பு மூன்று பங்காக்கி வைத்துக் கொள்ளவேண்டும். இந்த ஒரு பாகத்தை மேற்படி செப்புத் தகட்டின்மீது அரைக்கால் நூற்கனம் எங்கும் சமமாக இருக்கும் படி பூசி வெய்யிலில் உலர்த்தி ஒரு ஓட்டில் அப்பளக்காரத் தூளைப் பரப்பி அதன்மேல் மேற்படி தகட்டை வைத்து, அதன் மேலும் மேற்படி தூளைப் போட்டு மேலோடுமூடி 5 சீலைமண் செய்து, கவசத்தினெடைக்கு 8 பங்கு விராட்டியில் புடமிட்டா றினபின் எடுத்துத் தகட்டின் மீதுள்ள செதள் முதலியவற்றைப் போக்கித் தூய்மை செய்து, அதன்மேல் மற்றொரு பாகத்தை முன்போலவே எங்கும் சமமாய்ப் பூசி முன்யேலேவே புடமிட வேண்டும்மூன்றும் தடவையும் மேற்கண்டபடியே புடமிட்டு, தகட்டின் மீதுள்ள செதள் முதலியவைகளைத் தூய்மை செய்துக் கொள்ளவேண்டும்

இதன் பின்பு, மருதோன்றி இலையை அரைத்த விழுதை, தகட்டின்மீது எங்கும் சமமாய் ஒரு அங்குல கனமிருக்கும்படி கவசித்து ஒரு ஓட்டில் வைத்து மேலோடுமூடி, கவசத்தின் எடைக்கு, 8 பங்கெடை விராட்டியிற் புடமிட்டாறவிட்டு எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதமே, இந்த இலையை அரைத்துக் கவசித்து முன்போலவே மீண்டும் மீண்டும் 7 புடமிட்டு எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, அவுரி இலையை இடித்த சாற்றில், மேற்படி தாமிரத்தை உருக்கிச் சாய்க்கவேண்டும். நன்றாய் ஆறினபின் மறுபடியும் உருக்கி முன்கூறிய சாற்றில் சாய்க்கவேண்டும். இவ்விதமே, மீண்டும் மீண்டும் 11 தடவைகள், சக்தியுண்டானல் 21 தடவைகள் சாய்த்துத் தகடடித்து, கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சி மேற்படி சாற்றில் துவைக்கவேண்டும். மறுபடியும் தகட்டைக் காய்ச்சித் துவைக்கவேண்டும. இவ்விதம், 11 தடவை கள் செய்து மூசையிலிட்டு உருக்கி எடுக்க, தாமிரமானது தூய்மையாகி இருக்கும். இத் தாமிரத்தைச் செந்தூரித்துப் பயன்படுத்தினல் பற்பல வகை கடின நோய்களெல்லாம் தீரும். மேலும், $1\frac{1}{2}$ பங்கு நல்ல வெள்ளி, ஒரு பங்கு இத் தாமிரம், $1\frac{1}{4}$ பங்கு தங்கம் மூன்றையும் சேர்த்து உருக்கி எடுத்துப் பின்பு, அதை நான்கு துண்டுகளாகச் செய்து மறுபடியும் உருக்கவேண்டும்.

இவ்விதம், மீண்டும் மீண்டும் 3 தடவைகள் செய்யின் ஒருவித வாதப் பொன்னுகும். தங்கம் 4 பங்கு, இந்தத் தாமிரம் ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்து முன்போலவே உருக்கி எடுத்தாலும் ஒருவித வாதப்பொன்னுகும். இவ்விதம், சேர்க்கப்பட்ட வாதப் பொன்னை உராவிச் செந்தூரித்தால் வலுவான அனேக நோய்கள் நலமாகும்.

## 321. தாமிரத் தூய்மை (வேறு)

பிராண்டையைத் துண்டுகளாக நறுக்கி இடித்துப் பிழிந்த சாற்றைத் தகடு முழுகும்படியாய் ஒரு பாத்திரத்தில் விட்டு, அதில் கொஞ்சம் நவச்சாரத் தூளைத் தூவி தாமிரத் தகட்டைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சித் தோய்க்கவேண்டும். இவ்விதம், தோய்க்கப் பெற்ற சாற்றை நீக்கிவிடவேண்டும். நன்ருய்க் குளிர ஆறின பின்பு தகட்டை எடுத்து முன்போலவே கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சி, வேருெரு பாண்டத்தில் புதிதாய் முன்சாற்றை முன்போலவேவிட்டு கொஞ்சம் நவச்சாரத் தூளைப் போட்டுத் தோய்க்கவேண்டும். இவ்விதம், எண்பதுமுறை பழுக்கக் காய்ச்சி, ஒவ்வொரு தடவையும் புதிய சாற்றைவிட்டு நவச்சாரத் தூளைத்தூவி மேற்படி தகட்டைக் கரிநெருப்பில் காய்ச்சித் தோய்க்கவேண்டும். நன்ருய் ஆறினபின் முன்போலவே தகட்டைப் பழுக்க வைத்து முன்போலவே புதிய சாற்றை வேருெரு பாண்டத்தில் விட்டுக் கொஞ்சம் நவச்சாரத் தூளும் தூவித் தோய்க்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் செய்து, எடுத்துத் தாமிரத்தை உருக்கி எடுக்கத் திறமான தூய்மையாகும்.

இது மருத்துவம், வாதம் என்ற இரு வகைகளுக்கும் ஆகும்.

## 322. தாமிரத் தூய்மை (வேறு)

யானைக்கற்ருழை, பிமேராக்காசி, சீமைக் கற்ருழை என்ற மூன்று பெயரும் ஒன்றுக்குப் பெயராம்.

இந்த மடல்களைச் சிறிய துண்டுகளாய்ச் செய்து உரலிலிடித்த சாற்றை ஒரு பாண்டத்தில் தாமிரம் முழுகும்படியாக விட்டு, அதில் கொஞ்சம் நவச்சாரத் தூளைப் போட்டு, தாமிரத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். ஆறினபின் எடுத்து முன்போலவே உருக்கி, புதிதாக முன் சாற்றை வேருெரு பாண்டத்தில் விட்டுக் கொஞ்சம் நவச்சாரத் தூளையும் போட்டுக் கலக்கிச் சாய்க்க வேண்டும். இவ்விதமே, மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள்

உருக்கிச் சாய்க்க தாமிரம் தூய்மையாகும். இது மருத்துவம், வாதம் என்ற இரு வகைக்கும் ஆகும்.

## 323. தாமிரத் தூய்மை (வேறு)

புளியிலையை அம்மியில் வைத்து எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு அரைத்து வெண்ணெய் போலான பின்பு எடுத்து வைத்துக் கொள்ளவேண்டும்.

நாகூர் சல்லிக் காசுகளை நன்றாய்த் தேய்த்துக் கழுவிவிட்டு, முன்னரைத்து வைத்திருக்கிற விழுதை சல்லிகளின் மேலெங்கும் சமமாய்க் கவசித்துக் கொள்க. சோற்றுக் கற்றாழையின் மடலைப் பிளந்து, அதற்குள் மேற்படி தயாரித்து வைத்திருந்த சல்லிகளை வைத்து மறுபிளப்பால் மூடி, நூலால் இரு பிளப்புகளையும் கட்டிப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். இவ்விதம், சல்லிகளுக்குத் தகுந்தது போல எத்தனை மடல்கள் வேண்டுமோ அத்தனை மடல்களைச் சித்தப்படுத்தி, ஒவ்வொரு மடலையும் ஒவ்வொரு சீலைமண் செய்து, மடல்கள் வேகத்தக்க அளவு தீயைக் கொடுக்கத் தக்க புடம் போடவேண்டும். நன்றாய்க் குளிர ஆறின பின்பு சல்லிகளை எடுத்து முன்போலவே புளியிலையை எலுமிச்சம் பழச்சாற்றை விட்டு அரைத்த விழுதால் கவசித்துச் சோற்றுக் கற்றாழை மடல்களுக்குள் வைத்து மூன்போலவே புடம் போடவேண்டும். இவ்விதமே, மீண்டும் மீண்டும் ஏழு புடங்கள் போட்டெடுத்துக் கொள்ளவும்.

பின்பு, மருதோன்றி இலையை அரைத்துப் பச்சரிசிக் கழுநீரில் குழம்பாய்க் கலக்கி வைத்துக் கொண்டு, வேறு ஒரு பாண்டத்தில் கொஞ்சம் விட்டு, மேற்படி செம்பை உருக்கிச் சாய்க்கவேண்டும். நன்றாய்க் குளிர ஆறின பின்பு மறுபடியும் அந்தச் செம்பை எடுத்து உருக்கி, முன் தயார்ப்படுத்தி வைத்திருக்கிற கழுநீர்க் கூட்டில் கொஞ்சம் புதிதாய் வேறொரு பாண்டத்தில் விட்டு, அதில் சாய்க்கவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் சாய்க்கின் தாமிரமானது தூய்மையாகும்.

இது வாதம், மருத்துவம் என்ற இருவகைக்கும் பயன்படும்.

## 324. தாமிரத் தூய்மை (வேறு)

பிரமி இலையை இடித்துக் கிட்டிகட்டி பிழிந்த குழம்பு, புளித்த மோர், எலுமிச்சம்பழச்சாறு என்ற இவை சமபாகம். இவற்றை ஒன்றாய்க் கலந்து ஒரு பீங்கான் கோப்பையில் விட்டு, தாமிரக் காசுகளைத் தேய்த்துக் கழுவி, மேற்படி கலவையில் இட்டு ஏழு நாள்கள் சென்றபின் எடுத்துக் கழுவிக் கொள்ளவும்.

இரண்டாம் தடவையும் முன்போலவே பிரமி இலைச்சாறு, புளித்தமோர், எலுமிச்சம்பழச்சாறு என்ற இவற்றைக் கலந்து, முன் சல்லிகளைப் போட்டு ஏழுநாள்கள் சென்று எட்டாம் நாளெடுத்துக் கழுவித் தூய்மை செய்து கொள்ளவேண்டும்.

மூன்றும் தடவையும் முன்போலவே செய்துகொள்ள வேண்டும்.

இதன்பின்பு, மஞ்சள் துத்திப்பூவை அரைத்த விழுதில் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற சல்லிகளைச் சொருகி நன்றாய்க் கவசித்து, அதன்மேல் ஏழு சீலைமண் செய்து கவசத்திற்கு ஏழுபங் கெடை விராட்டியில் புடமிட்டு ஆறவிட்டு எடுக்கவும். மறுபடியும் முன்போலவே முன்பூவை அரைத்த விழுதில் வைத்து முன்போலவே புடமிட்டுக் கொள்ளவும். இவ்விதம் மீண்டும் மீண்டும் ஏழுபுடங்கள் போட்டெடுத்துக் கொண்டால் தாமிர மானது தூய்மையாகும்.

இது மருத்துவ பாகத்திற்குச் சிறந்தது. ஆகையால், இதனை உராவி செந்தூரம் முதலியவைகளாகச் செய்து பயன்படுத்தலாம்.

## 325. தாமிரத் தூய்மை (வேறு)

நல்ல தாமிரத்தை உராவின பொடி ஒரு பலம் (35 கிராம்), வெள்ளைப் பூப்பூக்கிற கொள்ளுக்காய் வேளையின் இலை 2 பலம் (70 கிராம்), இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டு எலுமிச்சம் பழச் சாற்றை சிறுகச் சிறுக விட்டு 2 சாமம் அரைத்து வில்லை தட்டி 4 நாள் கடும் வெய்யிலில் வைத்துத் துப்புரவாக உலர வைக்க வேண்டும். இந்த வில்லையைத் தட்டினால் கணீல்கணீலென ஒலி கேட்கவேண்டும். இவ்விதம், காய்ந்திருத்தல் பதமென்று நிதானித்து, இந்த வில்லையை ஒரு ஓட்டில் வைத்து மேலோடு மூடி 3 சீலைமண் செய்து கவசத்தின் எடைக்கு 8 பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்து வில்லையைப் பொடித்து, ஊதுகுழா யில் ஊதிப்புடைத்துச் சாம்பலை நீக்கிவிட்டு, தாமிரப் பொடியை மட்டும் வேறு மூசையிலிட்டு உருக்கி எடுக்கத் தூய்மையாகும்.

இன்னும், இதைப் பார்க்கிலும் அதிகமாகச் செய்துக்கொள்ள வேண்டியதாயின் முன்போலவே இன்னொரு தடவையும் செய்து கொள்ளவேண்டும். இந்தச் செம்பானது செந்தூரம் முதலிய மருத்துவ முறைகளுக்கு மிகவும் மேலானதாகும்.

## 326. தாமிரத் தூய்மை (வேறு)

தாளகம் $\frac{3}{4}$ பலம் (26$\frac{1}{4}$ கிராம்), வெண்காரம் $\frac{3}{4}$ பலம், இவ்விரண்டையும் முன்னர்த் தனித்தனியேப் பொடித்துக்கொண்டு பின்பு, இரண்டையும் ஒன்ருய்க் கலந்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு அரைத்து வெண்ணெய் போலன பின்பு தூதுளங்காய் அளவு மாத்திரைகளாய்ச் செய்து சற்று நிழலில் காய வைத்துக் கொள்ளவேண்டும்.

நல்ல செம்பு 2 பலம் (70 கிராம்), இதனை மூசையிலிட்டு உருக்கி கண்விட்டாடும்போது மேற்படி மாத்திரைகளில் ஒன்றை சுருக்கிட வேண்டும். சற்றுநேரம் தாமதித்து, இன்னொரு மாத்திரையைச் சுருக்கிட வேண்டும். பின்பு, ஒரு குச்சியால் தாமிரத்தை நன்ருய்க் கிளறியும் விடவேண்டும். இவ்விதம், அவசரப்படாமலும், மூசைக்குச் சேதம் நேரிடாமலும் விழிப்புடன் எல்லா மாத்திரைகளையும் சுருக்கிட்டு நன்ருய்க் கலக்கும்படி கிளறி எடுத்து, ஆறவைத்து நன்ருய்க் குளிர்ந்தபின்பு மூசையை உடைத்து அதிலுள்ள தாமிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும்.

இந்தத் தாமிரம் ஒரு பங்கு, கருவங்கம் ஒன்றரைப் பங்கு இரண்டையும் சேர்த்து உருக்கி, சரவுலையில் வைத்து ஊதி. வங்கத்தை நீக்கித் தூய்மைசெய்து மறுபடியும் உருக்கி எடுக்க தாமிரம் தூய்மையாகும்.

இது மருத்துவம், வாதம் என்ற இருவகைக்கும் பயன்படும். இதனை உராவி செந்தூரவகைத் திராவகத்தை விட்டரைத்துப் பாகப்படி புடமிட்டெடுக்கச் செந்தூரமாகும்.

## 327. தாமிரத் தூய்மை (வேறு)

படிக்காரம், தாளகம், அப்பிரேகம் குன்றிமணிப் பருப்பு, புருவினெச்சம் இவ்வைந்தும் வகைக்கு 1 பலம் (35 கிராம்), இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர் தனித்தனியேப் பொடித்துப் பின்பு, எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து அரைத்து, கூத்தன் குதம்பைச் சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு வெண்ணெய் போலாகிற வரையில் அரைத்து மூன்று பாகமாகச் செய்து வைத்துக் கொள்ளவேண்டும்.

திறமானதும் காலணு கனமுள்ளதுமான செம்புத்தகடு 1$\frac{1}{2}$ பலம் (52$\frac{1}{2}$ கிராம்), மற்ருெரு பங்கு மருந்தை இந்தத்தகட்டின்

மீது எங்கும் சமமாய்ப்பூசி உலரவைத்து ஒரு அகலில் சீமை உழ மண்ணைத்தூள் செய்து பரப்பி அதன்மீது முன் சுத்தப்படுத்தி வைத்திருக்கிற தகட்டைவைத்து, அதன்மேலும் முன் மண்ணைத் தூவி மேலோடுமூடி, 3 சீலேமண் செய்து கவசத்தின் எடைக்கு 6 பங்கு விராட்டியில் புடமிட்டாறவைத்து, எடுத்துக் கொள்ளவும். இரண்டாந்தடவையும் முன்போலவே ஒரு பங்கு மருந்தைத் தகட்டின்மீது பூசி உலரவைத்து ஓட்டில் வைத்துக் கவசித்து முன்போலவே புடம் போடவேண்டும். மூன்றுந்தடவையும் முன்போலவே செய்தெடுத்து உருக்கியெடுக்க, மிக மேலான தூய்மையாகும்.

இவ்விதம், செய்யப்பட்ட தாமிரமானது வைத்தியம், வாதமென்னும் இருவகைக்கும் உபயோகமாகும்.

## 328. தாமிரத் தூய்மை (வேறு) வெள்ளை

மிளகு, அரிசித்திப்பிலி, கட்டின நவச்சாரம், இம்மூன்றும் சமஎடை, இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியேத் தூள் செய்து, பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்தரைத்துக் கொஞ்சம் காடியும் விட்டு மைபோல அரைத்து, மறுபடியும் செல்லத்தக்க காடியும் சேர்த்துக் குழம்புப் பதமாய்க் கலக்கி வைத்துக்கொண்டு, தாமிரத்தையுருக்கி அதில் சாய்க்கவேண்டும். மறுபடியும் அத்தாமிரத்தை எடுத்துருக்கி முன் குழம்பில் சாய்க்கவேண்டும். இவ்விதம் 11 தடவைகள் செய்யின் தாமிரமானது தூய்மையாகி வெளுத்துப்போகும். இப்பதினேரு தடவைகளில் தாமிரம் வெளுக்காவிட்டால், மறுபடியும், 3 அல்லது 4 தடவைகள் அதிகம் செய்து கொள்ளலாம். அல்லது, தாமிரம் வெளுக்கிற வரையில் செய்து கொள்ளலாம்.

இத்தாமிரத்தை இவ்விதம் தூய்மை செய்வது கடினமாயினும், இது மருத்துவத்திற்கு அதிகப் பயனுள்ளதாய் இருக்கிறது. மேற்கண்ட முறைப்படி சிரமப்பட்டுத் தூய்மை செய்த தாமிரத்தை பற்பமாக அல்லது செந்தூரமாக, அல்லது வேறு அனேக முறையாக செய்தால் அதிக வேகமாகவும், கடின நோய்களையும் தீர்க்கத்தக்கதாகவும் இருக்கிறது.

இதன் மகிமை இதனைச் செய்து முடித்து அனுபவிப்பவர்களுக்கு மட்டும் தெரியுமேயொழிய மற்றவர்களுக்கு அவ்வளவாய்த் தெரியாது.

## 329. தாமிரத் தூய்மை (வேறு) வெள்ளை

தாமிரத்தை உராவினத் தூள் தேவையான அளவு, இதனைக் கல்வத்திலிட்டு, சாரநீர், படிக்காரநீர் என்ற இவற்றைச் சம பாகமாய்க் கலந்து, சிறுகச் சிறுகவிட்டு, 2 சாமமரைத்து அயச் சட்டியில் முன் திராவகத்தைத் தெளித்து வறுக்கவேண்டும். இவ்விதம், ஒரு சாமம் செய்து மறுபடியும் முன்போலவே கல்வத்திலிட்டு, முன் கலவையை விட்டு, ஒரு சாமமரைத்துப் பின்பு, அயச்சட்டியிலிட்டு முன்போலவே வறுத்தெடுக்க வேண்டும். இவ்விதம், சில தடவைகள் செய்ய தாமிரமானது தூய்மையாகி வெளுத்துப்போகும்.

இதனைப் பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து கொண்டால் அதிக குணமாயிருக்கும்.

## 330. தாமிரத் தூய்மை (வேறு) வெள்ளை

வெள்ளைப் பாடாணம் 3½ வராகனெடை, வேப்பங்கொட்டை பருப்பு 6½ வராகனெடை இவையெல்லாவற்றையும் கல்வத்தி லிட்டுப் பொடித்து, எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து, 2-சாமமரைத்து, உருண்டையாகச் செய்து பழுத்த கத்தரிக்காயைக் குடைந்து அதற்குள் வைத்து, அந்த கத்தரிக் காயின் தண்டினலேயே அந்த வாயையடைத்து நூலால் கட்டி, 3 சீலைமண் செய்து கவசத்தினெடைக்கு, 2 பங்கு எடை விராட்டியிற் புடமிட்டாறினபின் எடுத்துக் கொள்ளவேண்டும்.

தூய்மையான தாமிரத்தை உருக்கி பத்திற்கொன்று மேற்படி மருந்தைக் கொடுத்துச் சற்றுத் தாமதித்து நன்றாய்க் கிளறிவிட்டு நன்றாய்க் கலந்து உருகின பின்னெடுத்துக் கொள்ளவும். ஒரு தடவையில் வெள்ளையாகாவிட்டால் மறுமுறையும் சுருக்கிட்டுக் கொள்ளவேண்டும்.

இத்தாமிரமானது தூய்மையாகி வெள்ளையாயிருக்கும். இது மருத்துவம், வாதம் என்ற இருவகைகளுக்குமாகும். புடமானது திட்டமாயிருக்க வேண்டும். அப்படி இல்லாமல் தீ அதிகமாயினும் கெட்டுப் போகிறது. தீயானது குறைந்து விட்டாலும் குணங் கொடுப்பது இல்லை. ஆகையால், இதனைச் செய்து முடிக்கத் தீயின் திட்டத்தை அனுபவமாய்க் கண்டு நிச்சயித்துக் கொள்ள வேண்டும்.

## 331. தாமிரத் தூய்மை (வேறு) வெள்ளை

தாமிரம், நல்லவெள்ளி, வெள்வங்கம், தூய்மையான பாடாணம் இந்நான்கும் வகைக்கு ¾ வராகனெடை, இவற்றை ஒரு மூசையிலிட்டு, வாய்க்குச் சில்லியிட்டு, உலையில் வைத்து ஊதி உருக்கியெடுக்க மூன்று உலோகங்களும் ஒன்ருகி வெள்ளையாய் இருக்கும். இதன் உருக்குமுகத்தில் கட்டின பாடாணத்தைக் கொடுத்தால் மேலும் சிறப்பாக இருக்கும். பின்பிதனை உராவி, கெந்தகநீர் அல்லது படிககாரநீர் என்ற இவற்றிலொன்றை விட்டரைத்துப் புடமிட்டுவர செந்தூரமாகிறது. இது குட்டம் முதலிய நோய்களுக்கு உபயோகமாகிறது. ஆனல், இதனைக் கற்று அறிந்த அனுபவ வைத்தியர்கள் மாத்திரம் தக்க துணை மருந்துடன் உபயோகிக்க வேண்டியதே தவிர மற்றவர்கள் உபயோகிக்கத் தக்கதன்று.

## 332. தாமிரத் தூய்மை (வேறு) வெள்ளை

கறியுப்பு, வெடியுப்பு, படிகாரம், நவச்சாரம், வீரம் இவ்வைந்தும் வகைக்கு ஒரு பலம், இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர் தனித்தனியே பொடித்துப் பின்னர் எல்லாவற்றையும் ஒன்ருய்க் கலந்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு மெழுகு பதமானவுடன் எடுத்து ஐந்து பங்காகச் செய்து கொள்ள வேண்டும்.

அரையணு கனமுள்ள $1\frac{1}{4}$ பலம் செம்புத் தகட்டின் இருபுறமும் மேற்கண்ட மருந்தின் ஒரு பாகத்தையெங்கும் சமமாய்ப் பூசி உலர்த்தி, ஒரு ஓட்டில் பூநீர், உழமண், சீமையுழமண் என்னும் இவற்றுள் ஒன்றைக் கொஞ்சந்தூவி, தாமிரத் தகட்டை வைத்து, அதன்மேலும் கீழ்ப்போட்ட தூளையே தூவி மேலோடு மூடி 3 சீலை மண் செய்துலர்த்தி, கவசத்தினெடைக்கு 15 பங்கு விராட்டியில் புடமிட்டாற விட்டெடுத்துத் தகட்டை நன்ருய்த் தேய்த்துக் கழுவித் தூய்மை செய்யவேண்டும்.

இரண்டாந்தடவை, இன்னெரு பங்கு மருந்தை முன் பூசினது போலவே அந்தத் தகட்டிற்கு எங்கும் சமமாயிருக்கும்படி பூசி உலர்த்தி முன்போலவே ஓட்டில் வைத்துப் பக்குவப்படுத்தி முன் போலவே புடம் போட்டெடுத்துத் தேய்த்துக் கழுவி தூய்மை செய்து கொள்ளவேண்டும். இவ்விதமே மிகுதியாயிருக்கிற மூன்று பங்கு மருந்தையும் பூசிப் பூசிப் பக்குவப்படுத்தி மூன்று புடம்போட்டு எடுத்து உருக்கியெடுக்க நல்ல தூய்மையாகும். இது வெளுப்பாயிருக்கும்.

இது வைத்தியம், வாதம் என்ற இருவகைக்குமாகும்; இதன் பற்ப முறைகள் பின்னெழுதப்படும்.

## 333. தாமிரத் தூய்மை (வேறு)

நெல்லிக்காய் கெந்தகம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) இதனை வெண்ணெய்போல் பொடித்துத் தனியாயெடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

நவச்சாரம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) இதனை வெண்ணெய் போலப் பொடித்துத் தனியாய் வைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு அகலமான அகலில் முன்னர் அரைப்பங்கு நவச்சாரத் தூளைப்பரப்பி, அதன்மேல் அரைப்பங்கு கந்தகத்தூளைப் பரப்பி, அதன்மேல் நவச்சாரத் தூளைப் பரப்பி விரலால் பக்குவமாய் அழுத்திவிட்டு, மேலகல்மூடி, இரண்டு சீலைமண் செய்து, கவசத்தினெடைக்கு இருபது பங்கெடை விராட்டியில் புடமிட்டாற விட்டெடுத்து அகலிலுள்ள தாமிரத்தையும், அதனுடனிருக்கும் சிட்டம் முதலிய எல்லாவற்றையும் மூசையிலிட்டு உருக்கி எடுக்கத் தாமிரமாகும். இதனை ஒருவகைக் களங்கு எனச் சொல்லவேண்டியது. ஆயினும், தூய்மை செய்யப்பட்ட தாமிரத்தின் குணமிருப்பதால் அந்த வகையுடன் சேர்க்கப்பட்டது.

இது வைத்தியம், வாதம் என்ற இருவகைக்குமாகும். இந்தக் களங்குதனைப் பாகப்படி செந்தூரஞ்செய்தால் நல்ல குணங் கொடுக்கும்.

இந்தக் களங்கு ஒரு பங்கு, நல்லவெள்ளி 4 பங்கு, தங்கம் ஒரு பங்கு, இம்மூன்றையும் ஒன்ருய்ச் சேர்த்து மூசையிலிட்டு உருக்கி எடுத்து, இரண்டோடு ஊதியெடுத்துத் தகட்டித்து, உப்பு, செங்கற்பொடியென்ற இரண்டையும் சேர்த்து அதில் வைத்து, மட்டத்திற்குத் தகுந்த விராட்டியிற் புடமிடவேண்டும். இவ்விதம், பக்குவமாய் புடமிட்டுச் சேர்த்த தாமிரத்தை நீக்கி விட்டால் ஒருவித வாதப்பொன்னுகும். இதனையே தங்கம் இறக்கினுல் ஒன்றுக்குக் கால் தங்கமிறங்குமாம். செய்து பார்த்தால் இதனுண்மை விளங்கிப்போகும்.

## 334. தாமிரத் தூய்மை (வேறு)

திறமையான உழமண் அரைப்படி, தாளிக்காத கற்சுண்ணும்பு $\frac{1}{8}$ படி, இவ்விரண்டையும் ஒன்று அல்லது ஒன்றரை படி நீரில் போட்டுக் கலக்கி, ஒரு நாள் வைத்து மறுநாள் அதிலுள்ள தெளிவையிறுத்துக் கொள்ளவேண்டும். இந்தத் தெளிவில் நல்ல

தண்ணீரிலுள்ள கிளிஞ்சல்களைப் போட்டு, அடுப்பேற்றி சிறு தீயாகயெரித்து அந்த நீரையெல்லாம் சுண்டவைத்து எடுத்தால் கிளிஞ்சல்களெல்லாம் வெளுத்துப்போகும்.

வீரம், இரசகற்பூரம, படிக்காரம், தாளகம், துருசு இவ் வைந்தும் வகைக்கு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்), இவற்றைக்கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து அரைத்து மைபோலானபின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற கிளிஞ்சல் களின் எல்லாப்பாகங்களிலும் சமமாகத் தடவிக் காயவைத்துக் கிளிஞ்சல்களுக்குத் தக்கவிதமாய் புடமிடச் சுண்ணமாகும். பின்பு, மேற்படி சுண்ணம் 5 பலம் (175 கிராம்), நவச்சாரம் 5 பலம், இவ்விரண்டையும் தனித்தனியேப் பொடித்து ஒரு கலயத்தில் போட்டு, கலையத்தின் வாய்க்குச் சில்லிட்டுக் கவசத்தின் 20 பங்கு விராட்டியிற் புடமிட்டெடுக்கக் காரச்சுண்ணமாகும்.

பின்பு, இச் சுண்ணத்தை அகண்ட ஒரு பீங்கான் தகட்டில் பரப்பி, அந்தப் பக்கத்தைச் சற்று உயர்த்தி வைத்து இரவில் பனியில் வைத்துக் காலையிலெடுக்க, பாண்டத்தின் ஓரத்தில் செய நீர் கசிந்திருக்கும். அதைக் கவனமாக எடுத்து ஒரு பளிங்குக் குப்பியில் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவும். ஒவ்வொரு நாளிரவும் பனியில் மேற்கண்டபடி வைத்து ஒவ்வொரு நாளும் கசிந்து நிற்கும் செயநீரைச் சேகரித்து வரவேண்டும். இவ்விதம், அந்தச் சுண்ணத்தையெல்லாம் செயநீராக்கிக் கொள்ள வேண்டும்.

அவசியமானபோது தாமிரத்தையுருக்கி, மேற்படி செய நீரில் சாய்க்கவேண்டும். மறுபடியும் அந்த தாமிரத்தையெடுத்து உருக்கி முன்போல சாய்த்துக்கொள்ளவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 11 தடவைகள் உருக்கிச் சாய்த்துக் கொண்டால் தாமிரமானது தூய்மையாகிக் கட்டுப்பட்டுப் போகும்.

## 335. தாமிரத் தூய்மை (வேறு)

கழுதை சிறுநீர் 4 படி, இதில் அரைப்படி உழமண்ணையும், அரைப்படி அப்பளாக்காரத்தையும், ஒரு பலம் தாளிக்காத கற் சுண்ணாம்பையும் போட்டு, நன்றாய்க் கலக்கிவிட்டு மூன்று நாள் வைக்கவேண்டும், ஒவ்வொரு நாளும் 4 அல்லது 5 தடவைகள் நன்றாகக் கலக்கிக்கொண்டு வரவேண்டும். 4ஆம் நாள் கலக் காமல் விட்டு வைத்து மறுநாள் தெளிவை மாத்திரம் இறுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு நவச்சாரம், படிக்காரம் இவ்விரண்டும் வகைக்கு 5 பலம் (175 கிராம்), இரசகற்பூரம், வீரம் இவ்விரண்டும் வகைக்கு ஒரு பலம், தூய்மையான கோழிமுட்டைத்தோல் $\frac{1}{4}$ பலம், இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியேப் பொடித்துப் பின் ஒன்ருய்சேர்த்து அரைத்துமேற்படி தெளிவில்போட்டு. பளிங்குக் குப்பியின் வாய்க்கு மூடியிட்டு 5 அல்லது 6 நாள்கள் வெய்யிலில் வைத்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

அவசியமானபோது தாமிரத்தை உருக்கி இந்தத் திராவ கத்தில் மீண்டும் மீண்டும் 12 தடவைகள் சாய்த்தெடுத்துக் கொண்டால் ஊறலற்று தூய்மையாகிவிடும்.

இவ்விதம், தூய்மைச் செய்யப்பட்ட தாமிரமானது வைத்தியம், வாதம் என்ற இருவகைக்கும் மிக மேலானதாய் இருக்கும்.

## 336. தாமிரத் தூய்மை (வேறு)

மூங்கிலுப்பு $3\frac{1}{4}$ வராகனெடை, இரசகற்பூரம் $\frac{1}{4}$ வராக னெடை, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு, தாய்ப்பால் விட்டு ஒரு சாமமரைத்து, தேற்ருன் விதை அளவு மாத்திரைகள் செய்து நடுவில் துவாரமிட்டு நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

தாமிரத்தை வெள்ளைத்துளசிச் சாற்றில் மீண்டும் மீண்டும் 5 தடவைகள் உருக்கிச் சாய்க்கவேண்டும். கூடாவிட்டால், தாமிரத்தகட்டை கரிநெருப்பில் பழுக்கக்காய்ச்சி முன் சொல்லப் பட்ட வெள்ளைத் துளசியிலைச் சாற்றில் மீண்டும் மீண்டும் நூறு தடவைகள் தோய்த்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட இரு வகைகளில் ஒரு வகையாய்ச் செய்தெடுத்த தாமிரம் ஒரு தோலா, இதனை மூசையிலிட்டு உருக்கிக் கண் விட்டாடும்போது மேற்படி மாத்திரைகளிலொன்றை அதிற் போட்டு, அந்த மாத்திரையை ஒரு இரும்புச் சலகையால் அழுத்திப்பிடித்துக் கொண்டிருக்கவேண்டும். சற்று நேரஞ் சென்று இன்னொரு மாத்திரையைப் போட்டு, இரும்புச் சலாகை யால் அழுத்திப்பிடித்து மாத்திரையையும் போட்டு அழுத்திக் கொண்டிருந்து சற்று நேரஞ்சென்று நன்ருயூதியெடுக்க தாமிர மானது தூய்மையாகிப்போகும். இந்த முறையானது மிகவும் திறமானதெனச் சொல்லப்பட்டிருக்கிறது.

இது வைத்தியம், வாதம் என்ற இரு முறைகளுக்குமாகும். இதனை உராவி கந்தக நீரை அல்லது படிக்கார நீரை விட்டு அரைத்துப் புடமிட்டுவர செந்தூரமாகும். கண்மாத்திரைகளுக்காக இது அதிகம் உபயோகமாகிறது. நல்லவெள்ளி 7 பங்கு, மேற்படி செம்பு 3 பங்கு, தங்கம் ஒரு பங்கு இவை எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்துருக்கி, உருக்குமுகத்தில் கட்டின இலிங்கத்தைக் கொடுத்து எடுத்து இரண்டோடு ஊதியெடுக்க ஒருவகை வாதப்பொன்னுகும்.

## 337. தாமிரத் தூய்மை (வேறு)

பூவரசன்விதை *10* பலம் (*350* கிராம்), தூய்மை செய்யப்பட்ட பூநீர், *1* பலம் (*35* கிராம்), சவ்வீரம் *1* ($3\frac{1}{2}$ கிராம்) வராகனெடை, முன்னர், பூநீரையும் வீரத்தையும் கல்வத்திலிட்டு நன்ருய்ப் பொடித்துக் கொள்ளவேண்டும். பூவரசன் விதையை ஒன்றிரண்டாய்ச் சிதைத்து, முன் பொடியையும் சேர்த்து நன்ருய்ப் பிசிறி பாகப்படி குழித்தைலம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

இந்தத் தைலத்தில், நல்ல தாமிரத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். நன்ருயாறின பின்பு எடுத்து அதை துடைக்காமலே அப்படியே மூசையிலிட்டுருக்கி, முன்போலவே அந்தக் குழித் தைலத்தில் சாய்க்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 5 தடவைகள் சாய்த்து எடுத்து முடிவில் உருக்கி எடுத்துக் கொள்ளவேண்டும். இது சொகுசாவைப்போலவே இருக்கும்.

இதனை உராவி, தங்கம் கந்தகம் முதலிய சரக்குகள் சேர்த்துப் பாகப்படி செந்தூரித்தால் நாட்பட்ட அனேக நோய்கள் தீரும்.

மேலும், வெள்ளி, தங்கம் முதலியவைகளோடு சம்மந்தப் படுத்தியும் அதனுலுண்டாகும் குணத்தையும் சோதித்து நிச்சயித்தறியலாம்.

## 338. தாமிரத் தூய்மை (வேறு)

வெண்காரம் $6\frac{1}{2}$ வராகனெடை, இதனை நாரத்தம் பழச் சாற்றைவிட்டு ஒரு மணிநேரம் அரைத்து, $3\frac{1}{4}$ வராகனெடை நிறையுள்ள பாடாணக் கட்டிக்குப்பூசிக் கவசித்து வெய்யிலில் உலர்த்தி ஒரு கலயத்திற்குள் வைத்து இதனை அடுப்பேற்றி எரித்து 40 பலம் நாரத்தம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுக அதில் விட்டுச் சுருக்குக் கொடுக்கவேண்டும். எல்லாச் சாறும் தீர்ந்து விட்டபின் கலயத்தைக் கீழே இறக்கி வைத்து நன்ருய் ஆறின

பின், கலயத்தின் வாய்க்குச் சில்லிட்டு 5 சீலைமண் செய்து இந்தக் கலயத்தின் எடைக்கு 4 பங்கெடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் கலயத்தை உடைத்துப் பாடாணத்தை எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்பு, ஈரமான நாரத்தம்பழத்தோலை அரைத்த விழுது 25 பலம் இதற்குள் முன் சித்தப்படுத்தின பாடாணக்கட்டியை வைத்து, நன்றாய்க் கவசித்து அதன்மேல் 3 சீலைமண் செய்து, கவசத்தினெடைக்கு 3 பங்கு விராட்டியில் புடமிட்டாற விட்டெடுத்துக் கொள்ளவேண்டும். புடம் போட்டிருக்கும் போது அதிக கவனமாக இருக்கவேண்டும். ஏனெனில், தீயானது அதிகமாயிருந்தால், சரக்கின் வாசனை காணும். அப்படிக் கண்டால் உடனே தீயைப் பிரித்து ஆறவைத்து விடவேண்டும். இந்தப் புடமானது அதன்மேல் கவச மாத்திரம் வேகத்தக்கதாக இருக்கவேண்டும். இதைப் புடம் போடுவதில் அசட்டையாய் இருந்தால் முன்பட்ட கஷ்டமெல்லாம் வீணேயாகும். செந்தூரம். பற்பம் முதலியவைகள் பெரும்பாலும் கைவல்லியமாகாத தற்குக் காரணம். தீயின் ஏற்றக் குறைச்சலேயாகும். மேலும், பாடாணம் முதலிய அக்கினிக்கு ஓடும் சரக்குகளைப் புடம் போடுவதில் அதிக விழிப்பாக இருக்கவேண்டியது. ஆகையால், மேற்கண்ட புடத்தை சாக்கிரதையுடன் போட்டெடுத்துக் கொள்ளவேண்டும்.

திறமான தாமிரம் 4 பங்கு; இதனை உருக்கி, உருக்கு முகத்தில் ஒரு பங்கு மேற்படி பாடாணத்தைக் கொடுத்து நன்றாய்க் கிளறிவிட்டு, சற்றுத் தாமதித்து எடுத்து ஆறவைக்க வேண்டும். குளிர ஆறினபின் எடுக்கத் தாமிரமானது தூய்மை யாகி வெளுத்திருக்கும். அப்படி வெளுக்காதிருந்தால் பாடாண மானது முறைப்படி முடியவில்லையென நிதானித்து மறுபடியும் செய்து கொள்ளவேண்டும். இந்தப்பாகம் பல தடவை செய்யப் பட்டிருப்பதால், ஆரம்பத்திலிருந்தே பாகப்படியும் கைமுறை யாகவும் செய்துக் கொள்ளவேண்டும்.

இந்தப் பாகப்படி செய்தெடுத்த தாமிரமானது வைத்தியம், வாதம் என்ற இரு முறைகளுக்கும் நன்கு உபயோகமாகிறது.

## 339. தாமிரத் தூய்மை (வேறு)

வெள்ளைக் கூழாங்கல் இது ஒரு வகைக் கல்லினம் இது வெள்ளைக் கற்கண்டுத் துண்டுகளைப் போன்றதாய் இருக்கும் இவ் வகைக் கற்கள் புதுச்சேரி சாலைகளிலெல்லாம் அதிகமாகக் காணப் படுகின்றன. இன்னம், இக்கற்கள் திருச்சிராப்பள்ளியிலிருந்து

மதுரைக்குப்போகும் சாலைகளிலும் இருக்கிறதாகக் கேள்வி. சென்னையில் மிகவும் அரிதாய்க் கிடைக்கிறது.

இந்தக் கூழாங்கல் 10 பலம், இதனையிடித்துத் துணியில் சலித்துக்கொள்க. கப்பல் செப்புத் தகட்டை உராவின தூள் 10 பலம் (350 கிராம்), திறமான கடலைப்புளிப்பு பிருந்தி இவ் விரண்டும் வகைக்கு 15 தோலா, இவ்விரண்டையும் ஒன்றாய்க் கலந்து கொள்ளவேண்டும்.

செய்முறை :—வாயகன்ற ஒரு மட்டிப்பீங்கான் தாழியில் ஆரம்பத்தில் மேற்படி கற்பொடியை அரைக்காலங்குலம் கனம் பரப்பி, அதன் பரப்பில் மேற்படி செம்புப்பொடியை ஒரு நெற்கனம் பரப்பவேண்டும். அதன்மேல் நெற்கனம் கற் பொடியைப் பரப்பவேண்டும். அதன்மேல் நெற்கனம் செம்புப் பொடியைப் பரப்ப வேண்டும். இவ்விதம், ஒரு அடுக்குச் செம்பு பொடியுமாக அடுக்கடுக்காய் பரப்பி முடிவில் அடியிற் போட் டிருக்கிறதுபோல மேலேயும் அரைக்காலங்குலம் கனம் கற் பொடியும் போட்டு அதன்மேல் கடலைப் புளிப்பையும், பிருந்தியையும் கலந்து வைத்திருப்பதை விடவேண்டும். இது அந்த அடுக்கிற்குமேல் நாலங்குலத்திற்குக் குறையாமலிருக்க வேண்டியது. நாலங்குலத்திற்கு மேல் எவ்வளவு அதிகம் இருந்த போதிலும் பாதகமில்லை. முன்விட்ட திராவகம் இந்த அள விற்குக் குறைவாய் இருந்தால், அந்த அளவிற்குத் தகுந்தது போலக் கடலைப் புளிப்பையும் பிருந்தியையும் சேர்த்துவிட்டுக் கொள்ளவேண்டியது. இதல் பிறகு, தாழி வாய்க்கு மூடி இட்டு ஏழு சீலைமண் செய்து ஈரமில்லாத கட்டாந்தரையில் இரண்டு முழ ஆழமுள்ள பள்ளத்தில் புதைத்துவைக்க வேண்டியது. நாற்பது நாள்சென்ற பின்னெடுத்துப் பெரிய மூசையிலிட்டு, இரட்டைத் துருத்தியுள்ள உலையில் வைத்து மூசை யழுக ஊதி எடுத்துவைத்துக் குளிர ஆறினபின் மூசையை உடைத்து அதிலுள்ளதை எடுக்க தாமிரமெல்லாம் மணிமணியாக இருக்கும். இம் மணிகளை யெல்லாம் விழிப்புடன் சேர்த்து மறு மூசையிலிட்டு, வெண்காரங் கொடுத்து உருக்கி எடுக்க மிகவும் நேர்த்தியான செம்பாயிருக்கும்.

இவ்விதம், பாகமாய்ச் செய்தெடுக்கப்பட்ட தாமிரமானது வைத்தியம், வாதமென்ற இருவகைகளுக்குமாகும். இச்செம்பை உராவி, இனி செந்தூர முறைகளிற் சொல்லப்படும் வகைகளில் ஏதேனும் ஒரு வகையாய்ச் செந்தூரித்து அந்தந்த நோய்களுக் கேற்ற துணை மருந்துகளில் உபயோகித்தால் அனேக கடினமான நோய்களெல்லாம் தீரும்.

நல்ல வெள்ளி 2 பங்கு, மேற்படி தாமிரம் ஒரு பங்கு, தங்கம், ஒரு பங்கு, இம்மூன்றையும் ஒன்ருய்ச் சேர்த்து உருக்கியெடுத்து, அதை நான்காக வெட்டி மறுபடியும் மூசையிலிட்டு உருக்க வேண்டும். இவ்விதமே மூன்ருந் தடவையும் உருக்கியெடுக்க ஒரு வாதப் பொன்னுகும். இப்பொன்னே உராவி, அதைப் பாகப்படி செந்தூரித்துத் தக்க துணே மருந்துகளுடன் உபயோகிப்பதனுலும் அனேக நோய்கள் தீரும்.

## 340. தாமிரத் தூய்மை (வேறு)

நாலாங்காய்ச்சல் வெடியுப்பு, வெண்காரம், படிக்காரம் கட்டினசாரம், தாளிக்காத கற்சுண்ணம் இவ்வைந்தும் வகைக்கு 2 பலம், இவற்றை முன்னர் தனித்தனியே பொடித்துப் பின்னர் எல்லாவற்றையும் சேர்த்தரைத்து, அகன்ற பீங்கானின் ஒரு பக்கத்தில் அணேத்து, அப்பக்கத்தைச் சற்று உயரமாகத் தூக்கி இரவில் பனியிலும், பகற்காலங்களில் குளிர்ந்த இடத்திலும் வைத்துவர செயநீர் கசிந்துவரும். செயநீரானது கசியக் கசிய ஒரு புட்டியில் சேகரித்து வந்து, வைத்துச் சரக்கில் செயநீர் வருகிறவரையில் சேகரித்துக்கொள்ள வேண்டும்.

அப்பிரகத் தகட்டை எடுப்பில் வைத்து, அதன்மேல் ஒரு பலமுள்ள வீரக்கட்டியை வைத்து, அடுப்பை மெதுவாயெரித்து, மேற்படி திராவகத்தைத் துளித்துளியாய்ச் சொட்டிச் சுருக்கிட வேண்டும். தீ அதிகப்படாமல் அதிக விழிப்புடன் எரிக்க வேண்டும். கைபாகமாய் 2 அல்லது 3 சாமம் சுருக்கிட வீர மானது ஒரு வகைக்கட்டாகும்.

எட்டுபங்குத் தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில் ஒரு பங்கு மேற்படி வீரத்தைப் பொடித்துக் கொடுத்து நன்ருயுருக்கி எடுத்துத் தாமிரமானது தூய்மையாகிவிட்டால் அதில் ஏதேனும் அரைகுறையாக யிருந்தால் அத்தாமிரத்தை மறுபடியும் உருக்கி அரைப்பங்கு முன் வீரத்தைப் பொடித்து உருக்குமுகத்திற் கொடுத்து உருக்கியெடுக்கத் தாமிரமானது தூய்மையாய் இருக்கும்.

இத்தாமிரமானது வைத்தியம், வாதமென்னும் இரு வகைகளுக்குமாகும். இதைச் தூய்மைப்படுத்தும் போதுண்டாகும் புகையைச் சுவாசித்தாலும் கண்ணிற்படும்படியாய் இருந்தாலும் ஆகாது. அப்படி நேரிடும் பாகத்தில் ஏதேனும் தீமையும் உண்டாகாதிராது ஆகையால், இயன்றவரையில் அதிக கவனத் துடன் செய்து முடிக்க வேண்டும்.

குறிப்பு :—மேற்கண்ட ஐந்து சரக்குகளையும் பத்துப் பத்து பலங்களாய் வாங்கிப் பொடித்து மூன்று பங்காக்கி பாகப்படி மடக்கி மடக்கித் திராவகமாக இறக்கி வீரக்கட்டுக்குச் சுருக்கிட்டு மேற்கண்டபடி செய்து கொள்ளலாம்.

## 341. தாமிரத் தூய்மை (வேறு)

உராவின செம்புப்பொடி 1 பலம் (35கிராம்), படிக்காரம், வெண்காரம், இலிங்கம், தாளகம், நவச்சாரம், நெல்லிக்காய்க் கந்தகம், இவ்வாறும் வகைக்கு $\frac{1}{2}$ பலம்.

செய்முறை :—தாமிரப் பொடியுடன் எல்லாச் சரக்குகளையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு, உத்தாமணிச் சமூலத்தையும் இடித்தச் சாற்றை சிறுகச் சிறுக வார்த்து 2 சாமமரைத்து, மெழுகுப் பதமாய்ச் செய்து கொள்ளவேண்டும். இது கொள்ளத் தக்க மூசையை நெருப்பிற் சுட்டுக்கொண்டு, அதில் மருந்தை வழித்து போட்டு, மூசைவாய்க்குச் சில்லிட்டு, 2 சீலைமண் செய்து சந்து பந்தனம் செய்து, மறுபடி மூசை சில்லு முதலியவைகள் முழுவதும் 5 சீலைமண் செய்து, உலர்த்தி, உலையில் வைத்து மூசை யமுக ஊதியெடுத்து ஆற வைக்க வேண்டும். மூசையானது குளிர ஆறினபின்பெடுத்து, அதிலுள்ள செம்பை எடுத்து மறு மூசையிலிட்டு, வெண்காரஞ் சேர்த்து, உருக்கியெடுக்கத் திறமான செம்பாகும்.

அவசியமாயிருந்தால், இதனை உராவித் தூள் செய்து முன் போலவே சரக்குகளைச் சேர்த்து இரண்டாந் தடவையும் செய்து கொள்ளவேண்டும்.

இந்தச் செம்பானது வைத்தியம் வாதம், என்ற இருவகைக்கு மாகும். இதனை உராவி செந்தூரவகைத் திராவகத்தைவிட்டு அரைத்துப் பாகப்படி புடம் முதலியவை போட்டுச் செந்தூரிக்கச் செய்து தக்க துணைமருந்துடன் உபயோகித்தால் அனேக நோய்கள் போகும்.

## 342. தாமிரத் தூய்மை (வேறு)

தாமிரத்தைக் காலணு கனமாகத் தட்டித் தகடடித்து வைத்துக் கொள்ளவேண்டும். புளியிலைச் சாறு, பசுவின் சிறுநீர், எலுமிச்சம்பழச்சாறு என்ற மூன்றும் சமபாகமாய்க் கலந்து ஒரு பாண்டத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இக் கலவையில் தாமிரத்தகட்டைப் போட்டு பத்து நாள்கள் ஊற வைத்துப் பதினோராம் நாள் எடுத்து, புளியால் தேய்த்துக் கழுவி எடுத்துக் கொள்ளவேண்டும்.

புளிநரளைக்கழங்கு, நாய்க்கோட்டான்பட்டை இவ் விரண்டையும் நைய இடித்து அரைத்த விழுதுக்குள் வைத்துக் கவசித்து அதன்மேல் இரண்டு சீலைமண் செய்து, கவசத்திற்கு 6 பங்கெடை விராட்டியில் புடமிட வேண்டும். புடம் ஆறினபின் தகட்டை எடுத்து முன்னிரண்டு வகைகளையும் அரைத்துக் கவசித்து முன் போலவே புடம் போடவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் முன் இரண்டு வகைகளையும் அரைத்துக் கவசித்துப் பத்துப் புடம் போடவேண்டும்.

அகத்திப்பழுப்புச்சாறு, முறுக்கனிலைச் சாறு, கொள்ளுக்காய் வேளைச்சாறு, கறுப்பு அல்லது சிவப்பு குன்றிமணியிலைச் சாறு· இந்த நான்கு வகைகளையும், தனித்தனியே அரைத்த விழுது வகைக்கு 2 பலம், (70கிராம்) தூய்மையான பூநீர் 1 பலம், (35கிராம்) இவை எல்லாவற்றையும் சேர்த்து மைபோல அரைத்து குழம்பு பதமாய் இருக்கும்படியாகத் தேவையான அளவு கழுவிச் சிறுநீரில் கரைத்து. மேற்படி செம்பையுருக்கிச் சாய்க்க வேண்டும்· நன்றாயாறின பின்னெடுத்து முன்போலவே உருக்கி சாய்க்க வேண்டும். இவ்விதம், பத்துத் தடவைகள் செய்தெடுத்துக் கொள்ளவும்.

இது வாதம், வைத்தியம் என்ற இருவகைக்குமாகும். இதைப் பாகப்படி செந்தூரித்தால் அனேகவகை நோய்கள் தீரும்.

தூய்மை ஆய்வு:—நல்ல வெள்ளி 6 பங்கு, மேற்படி செம்பு 4 பங்கு, தங்கம் 1 பங்கு இம்மூன்றையும் சேர்த்து மூசையிலிட்டு எடுத்து ஆறினபின் நாலாய் வெட்டி மறுமூசையிட்டு உருக்கிக் கொள்ளவேண்டும். மூன்றும் தடவையும் இவ்விதமே செய்து கொள்ள ஒரு வகை வாதப் பொன்னாகும். இப்பொன்னை உராவி செந்தூரித்தால் மேலான குணத்தைத் தரும்.

## 343. தாமிரத் தூய்மை (வேறு)

கறியுப்பு, வெடியுப்பு, படிக்காரம், இரசகருப்பூரம். துருசு இவ்வைந்தும் வகைக்குச் சமபாகம். இவற்றை உமிழ்நீரால் மைபோலரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி வெய்யிலிலுலர்த்தி கொள்ள வேண்டும். நன்றாலர்ந்தபின்பு ஒரு அகலில் வில்லைகளைப் பரப்பி மேலகல் மூடி 5 சீலைமண் செய்து, கவசத்தின் எடைக்கு 5 பங்கு விராட்டியிற் புடமிட்டெடுக்க ஒருவகைப் பொடியாய் இருக்கும்.

தாமிரம் 1 பங்கு, (இதனைத் தகடாய்ச் செய்துக் கொள்ள வேண்டும். அல்லது, தாமிரச் சல்லிகளை எடுத்துக் கொள்ள

வேண்டும்.) முன் சித்தப்படுத்தின ஒரு பங்கு. இந்தப் பொடியைக் கல்வத்திலிட்டு, உமிழ்நீர் விட்டரைத்து மருந்தை எல்லாம் தாமிரத்தின் மீது பூசி உலர்த்தி, ஒரு ஓட்டில் வைத்து மேலோடு மூடி மூன்று சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் எடைக்குப் பதினைந்து பங்கு விராட்டியில் புடமிட்டாற விட்டு எடுத்துக் கொள்ளவேண்டும்.

இவ்விதமே மீண்டும் மீண்டும் பத்துப் புடமிட்டெடுத்து முடிவாய்த் தாமிரத்தை உருக்கி எடுத்துக் கொள்ளவும். இந்தச் செம்பானது நன்ருய் தூய்மையாகி இருக்கும்.

இத்தாமிரமானது வைத்தியம், வாதமென்ற இருமுறைகளுக்குமாகும். இனமறிந்து முறையே சமயோசிதமாய்ச் செய்தனுபவிக்க வேண்டும்.

## 344. தாமிரத் தூய்மை (வேறு)

சிறுபாலாடைச் சமூலத்தை அரைத்த விழுதை, அரை அங்குலம் கனம் ஒரு அகலிற் பூசி, அதன்மேல் காலணு கனமுள்ள தாமிரத்தகட்டை வைத்து அதன் மேலும் அரை அங்குலம் கனமுள்ள விழுதை பூசி, மேலகல் மூடி 3 சீலைமண் செய்துலர்த்தி கவசத்தினெடைக்கு 4 பங்கு எடை விராட்டியிற் புடமிட்டாற விட்டெடுக்க வேண்டும். பின்பு, அந்தத் தகட்டையெடுத்து நன்ருய்த் தேய்த்துப் போட்டு முன்போலவே மேற்படி இலைக்குள் வைத்துப் புடமிடவேண்டும். இவ்விதம், கைபாகமாய் மடக்கி மடக்கி 5 தடவைகள் புடமிட்டெடுத்து நன்ருய் தேய்த்துக் கழுவித் தூய்மை செய்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

புளியம்புறணியை எரித்தெடுத்தச் சாம்பல் ஒரு பங்கு கறியுப்புப்பொடி ஒரு பங்கு, செங்கற்பொடி 2 பங்கு. இவற்றைக் கலந்து ஒரு ஓட்டில் அரைவாசிப் பொடியை வைத்தழுத்தி அதன்மேல் மிகுதியாயுள்ள அரைப்பாகப் பொடியையும்போட்டு அழுத்தி மேலோடு மூடி, சீலைமண் செய்யாமல் கவசத்தின் எடைக்கு 3 பங்கு விராட்டியில் புடமிட்டு, ஆறினபின் எடுத்து, அதைப் பிரித்து அப்படியே அந்தக் கவசத்தின் எடைக்கு 2 பங்கு விராட்டியிற் புடமிட்டெடுத்துக் கொள்ள வேண்டும். பின்போட்ட இந்தப் புடத்திற்கு ஒட்டுப் புடம் எனப் பெயர். இவ்விதமே மடக்கி மடக்கி 3 புடமும், 3 ஒட்டுப் புடமும் போட்டெடுத்து, தாமிரத்தை வேறு மூசையில் வைத்துருக்கி எடுத்துக் கொள்ளவேண்டும்.

இந்தத் தாமிரமானது தூய்மையாகிக் கெட்டிப்பட்டுப் போகும். இது வைத்தியம், வாதம் என்ற இரு வகைகளுக்குமாகும். ஆனால், இதன் முறைகளை அநுபவத்தால் நிச்சயித்தறிந்து சமயோசிதமாய் அந்தந்த முறைப்படி செய்தனுபவிக்க வேண்டியது.

## 345. தாமிரத் தூய்மை (வேறு)

தேற்றான்கொட்டை $1\frac{1}{4}$ வராகனெடை, இதனைப் பாக்கு வெட்டியால் அல்லது கனையுள்ள கத்தியால் சீவி கொஞ்சம் தண்ணீரில் போட்டு 30 நாழிகை நேரம் ஊறவைத்துக் கொள்ள வேண்டும். இதில் விடும் தண்ணீரானது அந்த விதைச் சீவல்கள் ஊறிப்போகும்படி திட்டமாயிருக்க வேண்டும். தண்ணீரானது ஏற்றக் குறைச்சலானால் அவ்வளவாய்ப் பயன்படாது. பின்பு, ஊறியிருக்கின்றவைகளை எல்லாம் கல்வத்திற் போட்டு, எலுமிச்சம் பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து வெண்ணெய்போல அரைத்துக்கொள்க. கல்லுருவிப் பூண்டின் சமூலத்தை அரைத்த விழுது 2 பலம் (70 கிராம்), இதனைக் கல்வத்திலுள்ள மருந்துடன் சேர்த்து மறுபடியும் 2 மணிநேரம் (அவசியமானால்) முன் எலுமிச்சம்பழச் சாற்றையே விட்டு, எல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து மிகவும் நுண்மையாகி விட்டால் பதமென்றறிந்து மூன்று பங்காக்கி உடுத்து வைத்துக் கொள்க.

ஒருபலம் (35 கிராம்) செம்புத் தகட்டை அழுக்கறத் தேய்த்துக் கழுவித் துடைத்து, மேற்கண்ட ஒரு பாகத்திலுள்ள மருந்தைத் தகட்டின் இருபுறங்களிலும் சமமாய்ப் பூசி, உலர்த்தி ஒரு அகலில் சோடா உப்பைப் பரப்பி அதன்மேல் முன் தாமிரத் தகட்டை வைத்து மேலுங் கொஞ்சம் சோடாவைத் தெளித்து மேலகல் மூடி 3 சீலைமண் செய்துலர்த்தி, கவசத்தினெடைக்கு 10 பங்கு விராட்டியிற் புடமிட்டாறின பின்னெடுத்து, மிகுதியாயிருக்கிற இரண்டு பாகங்களில் ஒன்றை பூசி உலர்த்தி முன்போலவே புடமிடவேண்டும். மூன்றாந் தடவையும் முன்போலவே புடத்தைப் போட்டு எடுத்து உருக்கி எடுத்துக் கொள்ளவேண்டும்.

இத்தாமிரமானது வைத்தியத்திற்கு மிகவும் மேலானது ஆகும். ஆகையால், இதனை அந்தந்த பாகப்படி செய்து கொண்டால் அற்புத அதிசயத்தைக் கொடுக்கும்.

## 346. தாமிரத் தூய்மை (வேறு)

கரண்டிக்காம்பு இலை என்னும் மூலிகையைச் சமூலமும் அரைத்த விழுதை ஒரு அகலில் அரையங்குலம் கனம்பூசி, அதன் மேல் காலணா கனமுள்ள தாமிரத் தகட்டை வைத்து அதன்

மேலும் முன்பு அரைத்த விழுதையே அரையங்குலம் கனம்பூசி, மேலகல் மூடி 3 சீலைமண் செய்து கவசத்தினெடைக்குப் பதினறு பங்கெடை விராட்டியிற் புடமிட்டாறின பின்னெடுத்துத் தகட்டைத் தேய்த்துக் கழுவி தூய்மை செய்து முன் செய்தது போலவே செய்து புடம் போடவேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி 15 புடம் போட்டால் தாமிரம் தூய்மையாகும்.

இவ்விதம், தூய்மைச் செய்யப்பட்ட தாமிரமானது வைத்தியம், வாதமென்ற இருமுறைகளுக்குமாகும்.

## 347. தாமிரத் தூய்மை (வேறு)

சித்திரப் பாலாடை யென்னும் மூலிகைச் சமூலமும் அரைத்த விழுதைக் காலணு கனமுள்ள தாமிரத் தகட்டின் மீது எங்கும் சமமாய் அரை அங்குலம் கனம் கவசித்து ஓட்டில் வைத்து மேலோடு மூடி 3 சீலைமண் செய்து கவசத்தினெடைக்கு 16 பங்கெடை விராட்டியிற் புடமிட்டாற விட்டெடுத்து, தகட்டைத் தேய்த்து நன்ருய்க் கழுவியெடுத்து மறுபடியும் முன்போலவே மேற்படி இலையைக் கவசித்து, முன்போலவே ஓட்டில் வைத்து, சீலைமண் செய்து புடம் போட வேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி 15 புடங்கள் போட்டெடுக்கத் தாமிரமானது தூய்மையாகும்.

இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட தாமிரத்தை உருக்கி முன் சொல்லப்பட்டிருக்கிற மூங்கிலுப்பு மாத்திரைகளை சுருக்கிட வெகு மேலான செம்பாகும்.

இவ்விரு வகையாகவும் செய்யப்பட்ட செம்பானது வைத்தியம், வாதம் என்ற இரு முறைகளுக்கும் இன்னும், வேறு பற்பல முறைகளுக்கும் உபயோகமாகும்.

## 348. தாமிரத் தூய்மை (வேறு)

பூவரசன் காயையும், அம்மரத்தின் பட்டையையும் ஒன்ருய்க் கலந்திடித்துக் கிட்டிகட்டிப் பிழிந்தச் சாற்றை ஒரு பாண்டத்தில் வைத்துக் கொள்க. இந்தச் சாற்றில் தாமிரமானது முழுகும் படியான திட்டமாய் வேறொரு பாண்டத்தில் விட்டுக்கொண்டு செம்பை உருக்கிச் சாய்க்க வேண்டும். நன்ருய்க் குளிர ஆறினபின் பெடுத்துக் கொள்க. இந்தச் சாற்றை நீக்கித் தூய்மைசெய்து விட்டு, புதிதாய் முன் சாற்றில் முன்னளவு வார்த்து வைத்துக் கொள்க. முன்னுருக்கியெடுத்த தாமிரத்தை மறுபடியும் உருக்கிச் சாய்க்க வேண்டும். இவ்விதம், மேற்படி சாற்றை ஏழு பங்காக்கி

ஏழு தடவைகள் வெவ்வேருக ஊற்றி, தாமிரத்தையும் மடக்கி மடக்கி ஏழு தடவைகள் உருக்கிச் சாய்த்தெடுத்துத் தகடடித்து முன்னர் காயையும், பட்டையையும் சாறு பிழிந்த திப்பியை ஒரு ஓட்டில் ஒரு அங்குல கனம் வைத்தழுத்தி, அதன்மேல் தகட்டை வைத்து, அதன்மேலும் அந்தத் திப்பியை வைத்தழுத்தி மேலோடு மூடி 3 சீலைமண் செய்து புடம் போட வேண்டும். தகட்டைத் தேய்த்துக் கழுவி, முன்போலவே திப்பியில் வைத்து முன்போலவே புடமிட வேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி 5 புடமிட்டெடுக்கத் தாமிரமானது தூய்மையாகும்.

இவ்விதம், செய்யப்பட்ட செம்பையுருக்கி முன் சொல்லப் பட்டிருக்கிற மூங்கிலுப்பு மாத்திரையைச் சுருக்கிட்டால் வெகு நேர்த்தியாய் இருக்கும். இவ்விதம், செய்தெடுக்கப்பட்ட தாமிர மானது வைத்தியம், வாதம் என்ற இரு வகைகளுக்குமாகும்.

## 349: தாமிரத் தூய்மை (வேறு)

கீழ்காய்நெல்லிச் சமூலத்தையரைத்த விழுதை ஒரு அகலில் 1½ அங்குலகனம் வைத்தழுத்தி அதன்மேல், நாகசூர் சல்லிகளை வைத்து, அதன் மேலும் முன் இலையின் விழுதை முன்னளவே வைத்து அழுத்தி மேலகல் மூடி 3 சீலைமண் செய்து கவசத்தி னெடைக்கு 8 பங்கு விராட்டியில் புடமிட்டாறின பின்னெடுத்து சல்லிகளை நன்ருய்த் தேய்த்துக் கழுவியெடுத்துக் கொள்க.

மறுபடியும் முன்போலவே முன் இலையை அரைத்த விழுதை அகலில் வைத்து அதன்மேல் முன் சல்லிகைகளை வைத்து, மேலும் விழுதை வைத்து மேலகல் மூடி சீலை செய்து முன் போலவே புடமிடவும். இவ்விதம், 7 புடமிட்டெடுத்துக் கொள்க.

இதன் பின்பு, கீழ்க்காய் நெல்லிச் சமூலம், கோவையிலை என்ற இரண்டையும் சமபாகமாய்ச் சேர்த்திடித்துச் சாறு பிழிந்து ஒரு பாண்டத்தில் வைத்துக்கொள்க. இந்தச் சாற்றில் கொஞ்சம் வேருெரு பாண்டத்தில் வார்த்துக்கொண்டு, முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தாமிரத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். தாமிரமானது குளிர ஆறினபின்பு, அதையெடுத்து உருக்கி, அந்தப் பாண்டத்திலுள்ளதை நீக்கி முன் சாற்றில் கொஞ்சம்விட்டு வைத்துக்கொண்டு, அதில் சாய்க்க வேண்டும்.

இவ்விதமே முன் சாற்றை தடவைக்குத்தடவை வேறு பாண்டத்தில்விட்டுத் தாமிரத்தை உருக்கிச் சாய்த்து முடிவில் உருக்கி எடுக்க நல்ல தூய்மையாகும்.

இப்படிச் செய்தும் மூன்று மாதங்களுக்குப்பின் ஊறல் வந்துவிடுகின்றபடியால் இந்தச் செம்பையுருக்கி மூங்கிலுப்பு மாத்திரையைச் சுருக்கிட்டுக்கொண்டால் உத்தமமாய் இருக்கும்.

## 350. தாமிரத் தூய்மை (வேறு)

மிருதார்சிங்சி 1 பலம், இதனைக் கல்வத்திற் பொடித்து, கழுதை மூத்திரத்தைச் சிறுகச் சிறுக வார்த்து, 2 சாமமரைத்து மூன்று வில்லைகளாகச் செய்துலர்த்தி ஈரமில்லாமல் நன்றாயுலர்ந்த பின்பு, அகலில் வைத்து மேலகல் மூடி, 5-சீலைமண் செய்து, உலர்த்தி, கவசத்தினெடைக்கு, 5-பங்கெடை விராட்டியில் புடமிட்டாறின பின்னெடுத்துக் கல்வத்திலிட்டுக் கழுதைச் சிறுநீரைவிட்டு, 2 சாமம்ரைத்து முன்போலவே புடம்போட வேண்டும். இவ்விதமே மடக்கி மடக்கி மூன்று அல்லது நான்கு புடங்கள்போட ஒருவித செந்தூரமாகும். இதற்குச் சிங்கிபற்பம் எனப்பெயர்.

எட்டு வராகனெடை தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில், ஒரு வராகனெடை மேற்படி சிங்கிப் பற்பத்தைச் சுருக்கிட்டுக் கோல் ஆடி உருக்கியெடுத்து, குளிர ஆறினபின் அதிலுள்ள செம்பை எடுத்துச் சிறு துண்டுகளாய்ச் செய்து மறுமூசையில் வைத்துருக்கி எடுத்து, இரண்டோடு ஊறியெடுக்க நல்ல தூய்மை யாகும். ஏதாகிலும் சொற்பமாய்ச் செய்து கொள்ளலாம்.

## 351. தாமிரத் தூய்மை (வேறு)

கறியுப்பு, வெடியுப்பு, படிக்காரம், வீரம் இவை வகைக்கு ஒரு பலம், இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர் தனித்தனியேப் பொடித்துப் பின்பெல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்தரைத்து இஞ்சிச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து, 2 சாமமரைத்து, 4 பங்காகச் செய்து வைத்துக் கொள்ளவேண்டும்.

காலணு கனமுள்ள 1½ பலம் செம்புத் தகட்டின்மீது எங்கும் சமமாயிருக்கும் படி மேற்படி ஒரு பங்கைப் பூசி நிழலிற்காய வைத்து ஒரு அகலில் கொஞ்சம் சோடா உப்புத்தூவி மேலகல் மூடி, 5 சீலைமண் செய்து, உலர்த்திக் கவசத்தினெடைக்கு, 8 பங்கு எடை விராட்டியில் புடமிட்டாற வைத்து எடுத்துத் தகட்டைத் தேய்த்துக் கழுவி, மற்றொரு பங்கு மருந்தை முன்போலவே எங்கும் சமமாய்த் தடவி உலர்த்தி முன்போலவே புடமிடவேண்டும். இவ்விதமே மற்ற இரண்டு பங்குகளையும் தடவி இரண்டு புடம்

போட்டுக்கொள்ள வேண்டும். ஆகக்கூடிய 4 புடமும் தீர்ந்த பின்பு தகட்டை வேறொரு மூசையிற் போட்டு, வெண்காரமிட்டு உருக்கித் தாமிரத்தை எடுத்துக் கொள்ளவும்.

இந்தச் செம்பானது வைத்தியம், வாதமென்ற இருவகைக்கு மாகும்.

குறிப்பு: மேற்கண்ட நான்கு வகைச் சரக்குகளையும் வகைக்கு 10 பலமாக எடுத்து தூள்செய்து, மூன்று பங்காக்கி மீண்டும் மீண்டும் 3 தடவை திராவகமாக இறக்கி, அந்த திராவகத்தில் செம்பை உருக்கி 3 தடவைகள் சாய்த்தெடுக்க முன் சொல்லிய பாகப்படி செய்தெடுத்த தாமிரத்தைப் பார்க்கிலும் மேலானதாயிருக்கும்.

## 352. தாமிரத் தூய்மை (வேறு)

கொம்புக்கள்ளிப்பாலைக் கறந்து ஒரு மண் பாண்டத்தில் விட்டு, அதில் தாமிரத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். அது நன்றாய் ஆறின பின்பு தாமிரத்தை எடுத்துக் கொண்டு முன் பாலை நீக்கிவிட்டு வேறு வேறு புதிய பாலை அதில் விட்டு முன் தாமிரத்தை உருக்கி அதில் சாய்க்க வேண்டும். இவ்விதம் தடவைக்குத் தடவை புதிய பாலை விட்டு, தாமிரத்தை 5 தடவை மீண்டும் மீண்டும் உருக்கிச் சாய்த்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

பின்பு இந்தத் தாமிரம் ஒரு பங்கு, நல்ல வெள்ளி ஒரு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து உருக்கி முன் பாலை புதிதாய் ஊற்றிக் கொண்டு அதில் சாய்க்க வேண்டும். ஆறினபின் தாமிரத்தை எடுத்துக் கொள்ளவேண்டும். அந்தப் பாலை நீக்கிவிட்டு வேறு பாலையூற்றி, முன் தாமிரத்தை உருக்கிச் சாய்க்க வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும், 3 தடவைகள் செய்து, ஒரு பங்கு தங்கத்தைச் சேர்த்துருக்கி எடுத்துக் கொள்ள ஒரு வகை வாதப் பொன்னாகும்.

இதை உராவிப் பாகப்படி செந்தூரித்து அனேக வித நோய் களுக்கு உபயோகிக்கலாம்.

## 353. தாமிரத் தூய்மை (வேறு)

கறியுப்பு, வெடியுப்பு, படிக்காரம், வெண்காரம், துருசு, நவச்சாரம் இவ்வாறும் வகைக்கு ஒரு பலம் இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர்த் தனித்தனியேப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்தரைத்து, எலுமிச்சம்பழச்

சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்தரைத்து இலேசான வில்லைகளாகப் பல வில்லைகள் செய்து அவைகளை வெய்யிலிலுலர்த்தி, ஒரு சாணக்கியில் தாளிக்காத கிளிஞ்சிற் சுண்ணும்புப் பொடியைப் பரப்பி, அதன்மேல் மேற்படிவில்லைகளை ஒன்றின்மீதொன்று படாமல் வைத்தடுக்கி, அதன்மேலும் வில்லைகள் மறையும்படி யாக மேற்படி சுண்ணும்புப் பொடியைப் போட்டு விரலால் அழுத்தி விட்டு, மேல் சாணக்கிக்குப் பொருந்த மூடி 5 சீலைமண் செய்து உலர்த்தி கவசத்தினெடைக்குச் சமபங்கெடை விராட்டி யில் புடமிட்டாறின பின்னெடுக்க, வில்லைகள் சுண்ணமாகி இருக்கும். இதனைப் பத்திரப்படுத்தவும்.

காலனு கனமுள்ள தாமிரத்தகடு ஒரு பலம். மேற்படி சுண்ணம் ஒரு பலம், இந்தச் சுண்ணத்தை உமிழ் நீரால் அல்லது எலுமிச்சம்பழச் சாற்றால் குழைத்து மேற்படி தகட்டில் எங்கும் சமமாய்ப் பூசி, உலர்த்தி, ஓட்டில் வைத்து மேலோடு மூடி 5 சீலை மண் செய்து கவசத்தின் எடைக்கு 6 பங்கெடை விராட்டியில் புடமிட்டாற விட்டெடுத்துத் தகட்டைக் கழுவித் தூய்மை செய்துகொள்க.

முன் சுண்ணத்தில் மற்றொரு பலத்தை எடுத்து முன்போல உமிழ் நீரால் அல்லது, எலுமிச்சம்பழச் சாற்றால் குழைத்து முன் தகட்டிற்குச் சமமாய்ப் பூசி முன்போலவே புடம் போட வேண்டும். இவ்விதம், மூன்று தடவைக்கும் மூன்று பலம் சுண்ணத்தைப் பாகப்படி கவசித்துப் புடமிட்டெடுத்து உருக்கி யெடுக்க நேர்த்தியான செம்பாகும்.

இதனை வைத்தியம், வாதம் என்ற இரு வகைகளிலும் பலவித மாய் உபயோகித்துக் கொள்ளலாம்.

## 354. தாமிரத் தூய்மை (வேறு)

இலிங்கம், இரசம், வெள்ளைப் பாடாணம் இவை மூன்றும் வகைக்கு 1 வராகனெடை, இவற்றைப் பொடித்து வெள்ளெருக்கம் பாலைச் சிறுகச் சிறுக வார்த்து 1 சாமமரைத்து கால் பலமுள்ள செம்புத் தகட்டிற்கு எங்கும் சமமாய்ப்பூசி, உலர்த்தி ஒரு அகலில் கொஞ்சம் பூநீரைப் பரப்பி அதன்மேல் முன் தகட்டைவைத்து, அதன்மேலும் கொஞ்சம் பூநீரைப் பரப்பி மேலகல்மூடி 3 சீலைமண் செய்து, கவசத்திற்கு எட்டு பங்கெடை விராட்டியில் புடமிட்டாற வைத்தெடுத்துத் தகட்டைத் தேய்த்துக் கழுவித் தூய்மை செய்யவேண்டும். இரண்டாம் தடவையும் முன் மருந்துகளை முன்கூறிய கணக்கின்படி நிறுத்தெடுத்து அரைத்துக் கவசித்து முன்போலவே புடம் போடவேண்டியது. மூன்றும்

தடவையும் முன் மாதிரியே புடம் போட்டெடுத்தத் தாமிரத்தை வேறு மூசையிலிட்டு உருக்கிக் கொள்ள நல்ல தூய்மையான தாமிரமாகும்.

இதனைச் செந்தூரமாகவும், பற்பமாகவும் செய்து உபயோகிக் கலாம். இதனை வாதசம்பந்த முறைகளிலும் உபயோகிக்கலாம். இம்முறையானது வாதசம்பந்த முறைகளைப் பார்க்கிலும் வைத்திய முறைகளில் சிறப்பாக உபயோகமாகிறது.

## 355. தாமிரத் தூய்மை (வேறு)

வெண்காரம், பால்துத்தம், வீரம் இம்மூன்றும் வகைக்கு ஒரு பலம், இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர் தனித்தனியேப் பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்றுய்ச் சேர்த்து கலந்து மணத்தக்காளிச் சமூலச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமமரைத்து மெழுகுபோலான பின்பு மூன்று பங்கு செய்து கொள்ளவேண்டும். காலணு கனமுள்ள ஒரு பலமுள்ள செம்புத் தகட்டின்மீது எங்கும் சமமாயிருக்கும்படி, முன் மூன்று பங்கில் ஒரு பங்கைப் பூசி உலரவைத்து ஒரு ஓட்டில் கொஞ்சம் பூநீரைப் பரப்பி அதன்மேல் வைத்துத் தகட்டின்மீதும் கொஞ்சம் பூநீரைத் தெளித்து மேலோடுமுடி 5 சீலைமண் செய்து, கவசத்தி னெடைக்கு 6 பங்கெடை விராட்டியில் புடமிட்டாறினபின் தகட்டை எடுத்து, அதன்மேலுள்ள மருந்தைத்தேய்த்துக் கழுவித் தூய்மை செய்யவேண்டும். இரண்டாந்தடவையும் மற்றிரண்டு பங்கு மருந்தில் ஒரு பங்கை அந்தத் தகட்டின்மீது முன்போலவே எங்கும் சமமாய்ப்பூசி உலர்த்தி ஓட்டிலிட்டு முன்போலவே புடமிட்டெடுத்து மீண்டும் மூன்றுவது பங்கை அந்தத் தகட்டின் மீது பூசி முன்போலவே புடமிட்டு எடுத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட பாகப்படி மூன்று தடவையும் புடமிட்டு எடுத்தால் தாமிரமானது தூய்மையாகிவிடும். இதனைத் தனியாயாவது அல்லது வெள்ளி, தங்கம் முதலியவைகளோடு சேர்த்தாவது செந்தூரம், பற்பம் முதலிய பாகங்களாகச் செய்யின் நல்ல குணமுண்டாகும்.

## 356. தாமிரத் தூய்மை (வேறு)

செங்கற் கிட்டத்தை உரலிலிட்டு, இடித்துத்தூள் செய்து துணியில் சலித்தத்தூளைக் கல்வத்திலிட்டு, புளியிலைச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு 2 சாமமரைத்து மெழுகுப் பதமாய் எடுத்துக் கொள்ளவேண்டும்.

காலணு கனமுள்ள ஒரு பலமுள்ள தாமிரத் தகட்டின்மீது எங்கும் சமமாயிருக்கும்படி மேற்படி கிட்டக் கலவையை ஒரு நூற்கனம் தடவி உலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடுமூடி மூன்று சீலைமண் செய்து, கவசத்தின் எடைக்கு 12 பங்கெடை விராட்டி யில் புடமிட்டாற வைத்து எடுத்துத் தகட்டைத் தூய்மை செய்து கொள்ளவும். இரண்டாந் தடவையும் முன் மெழுகை முன் போலவே அந்தத் தகட்டின்மீது பூசி உலர்த்தி முன்போலவே புடமிட்டெடுத்துக் கொள்ளவேண்டும். மூன்றாந் தடவையும் முன்போலச் செய்க. அவசியமானால், மேலும் இரண்டொரு தடவை அதிகமாய்ப் புடமிட்டுக் கொள்ளலாம்.

இவ்விதம், பக்குவமாய்ச் செய்யப்பட்ட தாமிரமானது வைத்தியத்திற்குச் சிறப்பானதாயிருக்கும்.

## 357. தாமிரத் தூய்மை (வேறு)

பூவரசங்காயை இடித்துக் கிட்டிசுட்டிப் பிழிந்த சாறு ½ படி, பூநீர் 5 பலம், இதனைப் பொடித்து மேற்படி சாற்றில்போட்டு நன்றாய்க் கலக்கி ஒரு சாம நேரம் வைத்துப் பிறகு உபயோகிக்க வேண்டும்.

இந்த நீரில் கொஞ்சம் தனியாய் வேறொரு பாண்டத்தில் விட்டுக்கொண்டு, அதில் தாமிரத்தை உருக்கிச் சாய்க்கவேண்டும். இந்த நீரானது உருக்கிச் சாய்க்கும் தாமிரம் முழுகத்தக்கதாய் இருக்கவேண்டும். ஒரு தடவை உருக்கிச் சாய்த்த நீரானது மறுதடவைக்கு உபயோகமாகாது. இரண்டாம் தடவையும் முன் சித்தப்படுத்தின நீரில் செல்லத்தக்க அளவு வேறொரு பாண்டத்திலிட்டுக் கொண்டு, முன் தாமிரத்தை உருக்கிச் சாய்க்கவேண்டும். அவ்விதம், 7 தடவைகள் மீண்டும் மீண்டும் மேற்படி சாற்றில் உருக்கிச் சாய்க்கின் தாமிரமானது தூய்மை யாகும்.

இத்தாமிரம் 3 பங்கு, நல்லவெள்ளி 7 பங்கு, தங்கம் 2 பங்கு, இம்மூன்றையும் ஒன்றாய்ச் சேர்த்துருக்கியெடுத்து, நான்கு துண்டு களாய் வெட்டி மறுபடியும் உருக்கவேண்டும். இவ்விதமே மூன்றும் தடவையும் உருக்கியெடுத்து, உராவின தூளில் கெந்தகத் திராவகத்தை விட்டரைத்துப் பாகப்படி புடம்போட்டு வரவேண்டும். அதை மீண்டும் மீண்டும் 5 அல்லது 7 புடமிட நேர்த்தியான செந்தூரமாகும். இது வைத்தியம், வாதம் என்ற இரு முறைகளுக்குமாகும். இம்முறைகள் பின்னெழுதப்படும்.

## 358. தாமிரத் தூய்மை (வேறு)

கால்படி பசுவின் கோமியத்தில். ஐந்து பலம் உவர் மண்ணையும், ஐந்து பலம் கற்சுண்ணும்பையும் சேர்த்து நன்றாய்க் கலக்கி, ஒரு நாள் வைத்திருந்து மறுநாள் அதன் தெளிவையிறுத்து, தாமிரச் சல்லிகளைத் துலக்கி அதிற்போட்டு வைத்து 10 நாள்கள் சென்றபின் எடுத்துக் கொள்ளவும்.

இரண்டாந்தடவையும் பசுவின் கோமியத்தில் ஐந்து பலம் உவர் மண்ணையும், 5 பலம் கற்சுண்ணும்பையும் போட்டு முன்போல் தெளியவைத்து முன்கூறிய சல்லிகளை போட்டுவைத்து 10 நாட்களுக்கு பின் எடுத்துக்கொள்ளவேண்டும். முன் தடவை போட்ட சல்லிகளை எடுக்கிற நாளுக்கு முன்னொரு நாளே இந்த தெளிவை தூய்மைப்படுத்த ஆரம்பித்து, அன்றைக்குத் தெளிவிறுத்து உடனே அந்த சல்லிகளை எடுத்து இப்புதுத் தெளிவில் போட்டுவிடவேண்டும்.

மூன்றும் தடவை முன் சொன்னது போலவே தெளிவிறுத்து ஒரு பாண்டத்தில் வைத்துக்கொண்டு முன் தூய்மைப்படுத்தின சல்லிகளை உருக்கி, அதில் சாய்க்கவேண்டும். மறுபடியும் அந்த சல்லிகளை உருக்கிச் சாய்க்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் இறுத்துத் தெளிவிலேயே 3 தடவைகள் உருக்கிச் சாய்க்கவேண்டும்.

நாலாம் தடவையும் முன்போலவே பசுவின் கோமியத்தைப் பாகப்படுத்தித் தெளிவை இறுத்து முன் செய்தது போலவே அந்தத் தாமிரத்தை உருக்கி உருக்கி மூன்று தடவைகள் சாய்த்துக் கொள்ள வேண்டும்.

இவ்விதம், பாகப்படி செய்யப்பட்ட தாமிரமானது களிம்பு அற்றுத் தூய்மையாகும். சில சமயம் இது வெட்டையாய்ப் போவதும் உண்டு. இது எப்படியாயினும் எப்போதும் உபயோகம் ஆகும்.

இதனை வெள்ளி, தங்கம் என்ற இவற்றுள் சேர்த்து உராவிச் செந்தூரித்தால் மிகவும் குணமாயிருக்கும்.

## 359. தாமிரத் தூய்மை (வேறு)

படிக்காரம், பாடாணம், வெடியுப்பு, நாய்வெண்மலம், தாளிக்காத கற்சுண்ணும்பு, இவை ஐந்தும் வகைக்குச்சமனெடை, இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியேப் பொடித்துப் பின்பு

எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து அரைத்துப் பின்பு குப்பை மேனி இலையை இடித்துப் பிழிந்த சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமமரைத்து மெழுகுபதமாக எடுத்து மூன்று பங்கு ஆக்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

காலணு கனமுள்ள நல்ல செம்புத்தகடு 3 பலம் இதனைச் சிறு துண்டுகளாக வெட்டிக் கொள்ள வேண்டும். முன் சித்தபபடுத்தி வைத்திருக்கிற மருந்தில் ஒரு பங்கைத் தாமிரத் துண்டுகள் ஒவ்வொன்றின் மீதும் எங்கும் சமமாயிருக்கும்படி பூசிக் கவசித்து வெய்யிலில் உலர்த்தி ஓட்டில் ஒன்றின்மீதொன்று படாமல் அடுக்கி, மேலோடு மூடி, 5 சீலைமண் செய்து கவசத்தினெடைக்கு 20 பங்கு எடை விராட்டியில் புடமிட்டாற விட்டு, தாமிரத் துண்டுகளை எடுத்துக் கொள்க.

மறுபடியும் முன் மருந்தில் இன்னொரு பங்கை எடுத்து முன் தாமிரத் துண்டுகளுக்கு முன்போலவே பூசிப் புடமிட்டெடுத்துக் கொள்க. மூன்ரும் தடவையும் மிகுதியாயிருக்கிற பங்கைப் பூசி முன்போலப் புடமிட்டெடுத்துக் கொள்க.

புளித்த எருமைத்தயிர் ஒரு படி, கள்ளிப்பட்டைச்சாறு, முருங்கைம்பட்டைச்சாறு இவ்விரண்டும் வகைக்கு 10 பலம் இம் மூன்றையும் ஒன்ருய்க் கலந்து வைத்துக் கொள்ள வேண்டும். இதனை மூன்று நாளைக்குப் பின் உபயோகிக்க வேண்டும். இதற்கு இங்குத் தயிர்க் கூட்டு எனப் பெயர்.

ஒரு பலம் வெடியுப்பைக் கல்வத்திலிட்டு, வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டு 2 மணி நேரம் அரைத்துக் கடலை அளவு மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ள வேண்டும். இதனைச் சித்தப்படுத்தும் போது அதிக கவனத்துடன் செய்ய வேண்டும். இதற்கு இங்கு வெடியுப்பு மாத்திரை எனப் பெயர்.

மேற்படி தயிர்க்கூட்டை நன்ருய்க் கலக்கி, அதில் மூன்றில் ஒரு பங்கை வேருெரு பாண்டத்தில்விட்டு வைத்துக்கொண்டு, மேற்படி தாமிரத் துண்டுகளை எல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து, உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி வெடியுப்பு மாத்திரைகளை ஒன்றன்பின் ஒன்ருய் மூன்று மாத்திரைகளைச் சுருக்கிட்டு எடுத்து மேற்படி தயிர்க்கூட்டில் சாய்க்கவேண்டும். குளிர ஆறின பின்பு, தாமிரத்தை எடுத்து மறுபடியும் உருக்கி, முன்போலவே மூன்று மாத்திரைகளைச் சுருக்குக்கொடுத்து முன் கூட்டிலேயே சாய்க்க வேண்டும். மூன்ரும் தடவையும் முன்போலவே சாய்க்க

வேண்டும். பின்பு, இந்தத் தயிர்க்கூட்டை நீக்கிவிட்டு, முன் வைத்திருக்கிற இன்னொரு பங்கை ஊற்றிக்கொண்டு முன் போலவே தாமிரத்தை உருக்கி சுருக்குக் கொடுத்து வந்து இதிலும் மூன்று தடவைகள் சாய்த்துக் கொள்ள வேண்டும்.

இவ்விதம், பாகப்படி செய்தெடுத்தால் தாமிரமானது வெளுத்துப்போகும். இது வைத்தியம், வாதம் என்ற இரு வகைகளுக்கும் ஆகும். இதனை உராவிப் பற்பமாகச் செய்து கொள்ளலாம். இந்தத் தாமிரம் 4 பங்கு, நல்லவெள்ளி ஒரு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி உராவிப் பற்பம், செந்தூரமாகவும் செய்து கொள்ளலாம். இதனை இன்னும் அனேக விதமாகவும் செய்து உபயோகிக்கலாம். இம் முறைகளில் அனேகம் அனுபவசாலிகளுக்குத் தெரியுமாயினும், அவற்றுள் பற்பலவற்றை ஆங்காங்கு எழுதுவோம்.

## 360. தாமிரத் தூய்மை (வேறு)

*(1)* கழுதைச் சிறுநீர் 4 படி, தூய்மையான பூநீர் 5 பலம் (175 கிராம்) இவ்விரண்டையும் சேர்த்துக் கலக்கி மூன்று நாள் வைத்திருக்கவேண்டும். நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் கலக்கி வரவும் வேண்டும். நான்காம் நாள் அதன்மீது தெளிவிறுத்து அதில் கற்சுண்ணம், நவச்சாரம் என்ற இரண்டையும் வகைக்கு 2 பலமாகப் (70 கிராம்) பொடித்துப் போட்டுக் கலக்கிக் கொள்ளவேண்டும். இதுவே தேசி நீர்த் தெளிவு எனப்படும்.

(2) குஞ்சு பொரிக்கப்பட்டதும், உள்சவ்வு முதலியவை தூய்மை செய்யப்பட்டதுமான முட்டையோடு 1 பலம் (35 கிராம்), நவசாரம் ஒரு பலம், வெண்காரம் $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்), வீரம் $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்) இந்நான்கையும் முன்னர் தனித் தனியேப் பொடித்துப் பின்னர் எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து நுண்மையான தூளாய்ச் செய்து மூன்று பங்காகச் செய்து, பொட்டலம் கட்டி வைத்துக் கொள்ளவேண்டும்.

செய்முறை :—நல்ல செம்பு 4 பலம் (140 கிராம்), இதனை உருக்கி, உருக்குமுகத்தில் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தேசி நீர்த் தெளிவில் கொஞ்சம் வேறொரு பாத்திரத்தில் ஊற்றிக் கொண்டு முன் தாமிரத்தை உருக்கிச் சாய்க்கவேண்டும். இவ்விதம் அந்தத் தாமிரத்தை மீண்டும் மீண்டும் உருக்கி முன் மாதிரியே தடவைக்குத் தடவை புதிதாய்த் தெளிவு யோகத்தை வார்த்துக்கொண்டு சாய்த்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

இதன் பின்பு அந்தத் தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில் ஒரு பொட்டலத்திலுள்ள மருதைக் கொஞ்சங் கொஞ்சமாய்ச் சுருக்குக் கொடுக்கவேண்டும். ஒரு தடவை மருந்து கொடுத்தவுடன் கரிக் குச்சியாற்கோலாட வேண்டும். இவ்விதம், ஒரு பொட்டலத்திலுள்ள மருந்தையெல்லாம் சுருக்குக் கொடுத்து நன்ருயுருக்கி எடுத்து ஆறவைத்து எடுத்து, இரண்டாந் தடவையும் உருக்கி உருக்கு முகத்தில் மறு பொட்டத்திலிள்ள மருந்தை முன்போலசுருக்குக் கொடுத்து, எடுத்து ஆறவைத்து, மூன்ருந் தடவையும் உருக்கி உருக்குமுகத்தில் மூன்ரும் பொட்டலத்திலுள்ள மருந்தை எல்லாம் முன்போலவே சுருக்குக் கொடுத்து நன்ருய் உருக்கி எடுத்து ஆறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

மேற்கண்ட பாகப்படி கைமுறையாய்ச் செய்யின் தாமிரமானது தூய்மையாகிவிடும்.

சில தாமிரத் தூய்மைகளின் செய்முறைகள் பிரத்தியேகமாய்ச் சொல்லப்பட்டிருப்பதுே ால் இதற்காகவும் இலிங்கக்கட்டு முதலிய சில முறைகள் தனியாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால். அந்தப் பாகத்தை இங்கெழுதுவது உசிதமாகும்

## 361. இலிங்கக் கட்டு

1. உலாந்தா இலிங்கம் ஒரே கட்டியானது ஒரு பலம் (35 கிராம்) உலாந்தா இலிங்கம் கிடைக்காவிட்டால் பம்பாய் இலிங்கத்தை உபயோகித்துக் கொள்ளவும். இதைத் தனியாய் வைத்துக் கொள்ளவும்.

2. கல்லுப்பு, வெடியுப்பு, படிக்காரம், வெண்காரம், நவச்சாரம், இலிங்கம், துருசு, இவ்வேழும் வகைக்கு ஒரு பலம் (35 கிராம்) இவற்றுள் ஒவ்வொன்றையும் முன்னர் தனித்தனியே பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்தரைத்து நுண்மையான தூளான பின்பு மூன்று பங்காக்கி வைத்துக் கொள்ளவேண்டும்.

1ல் உள்ள இலிங்கக்கட்டியின்மீது ஒரு வராகனெடை துருசுச் சுண்ணத்தை உமிழ் நீரால் குழைத்து, எங்கும் சமமாயிருக்கும்படி கவசித்து கரி நெருப்பில் வாட்டிக்கொள்ள வேண்டும். இதன் பிறகு 2 லுள்ள ஒரு பங்குத் தூளை ஒரு இரும்புக் கரண்டியில் போட்டு கரண்டியை கரிநெருப்பின்மீது வைத்து தூளானது உருகினவுடனே முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற இலிங்கக் கட்டியைப் போட்டு, நன்ருய் கீழும், மேலும் புரட்டிக் கொடுத்து

வர மருந்தின் சத்தை இலிங்கக்கட்டி உண்ணும். கரண்டியிலுள்ள நீர் சுண்டினவுடன் இலிங்கக்கட்டியை எடுத்து வைத்துக்கொண்டு, இன்னொரு பங்குத் தூளை அந்தக் கரண்டியிலேயே போட்டுருகினவுடனே மறுபடியும் அந்த இலிங்கக் கட்டியைப் போட்டு முன்போல புரட்டவேண்டும். மூன்றும் தடவையும் முன்போலவே செய்து பக்குவமாய் எடுத்துக்கொள்ளவேண்டும்.

காட்டாமணக்குப்பால் 1½ படி, இதில் அரைப்பலம் வெண்காரப் பொரியைப் பொடித்துப்போட்டு அதில் முந்நூறு செம்பரத்தம் பூக்களையும் போட்டு ஒருநாள் வைத்து மறுநாள் பிழிந்தெடுத்துக் கொள்ளவும்.

முன் சித்தப்படுத்தி வைத்தருக்கிற இலிங்கக்கட்டியின்மீது அரைப்பலம் வெண்காரப் பொரியைப் பொடித்து, உமிழ் நீரில் குழைத்துக் கவசித்து கரி நெருப்பில் வாட்டி, உலர்த்தி, அப்பிரகத் தகட்டின்மீது வைத்து முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பாலைச் சிறுகச் சிறுக விட்டு முறைப்படி சுருக்கிட வேண்டும். மேற்படி பாலெல்லாம் சென்றபின்பு, இலிங்கத்தை எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

இந்த இலிங்கத்திற்கு சமனெடை தங்கத்தைச் சேர்த்து உருக்கினல் இரண்டும் சேர்ந்து களங்காகும். இதற்கு இலிங்கக் களங்கு எனப் பெயர்.

முன்சொன்ன தாமிரம் 4 பங்கு, நல்ல வெள்ளி 8 பங்கு, தூய்மையான நாகம் 3 பங்கு, இவையெல்லாவற்றையும் சேர்த்து ஒன்றுய் உருக்கி எடைக்கெடை தங்கம் சேர்த்துப் புடம் போட நேர்த்தியான வாதப் பொன்னகும். இதனை உராவிச் செந்தூரித்தால் அனேக வகை நோய்களுக்குமாகும்.

மேற்படி பாகத்தில் சேர்க்க வேண்டிய துருசுச் சுண்ணம் முதலிய முறைகள் பின்னெழுதுவோம்.

## 362. தாமிரத் தூய்மை (வேறு)

கறியுப்பு, வெண்காரம், நவச்சாரம், வெடியுப்பு, படிக்காரம், துருசு, இவ்வாறும் வகைக்கு ஒரு பலம், இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியே பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் ஒன்றுய்ச் சேர்த்தரைத்து, மாங்கொழுந்தையும், மாம்பட்டையையும் இடித்துப் பிழிந்த சாற்றால் ஒரு சாமமரைத்து மூன்று பாகமாய்ச் செய்து வைத்துக்கொள்ளவேண்டும்,

ஒரு பலம் தாமிரத் தகட்டின்மீது மேற்படி ஒரு பங்கை எங்கும் சமமாய்ப்பூசி, ஒரு ஓட்டில் கொஞ்சம் பூநீரைப் பரப்பி அதன்மேல் வைத்து, மேலும் பூநீரைவிட்டு மேலோடுமூடி 3 சீலை மண்செய்து கவசத்தின் எடைக்கு 8 பங்கெடை விராட்டியில் புடமிட்டாறினபின் எடுத்துக் கொள்ளவும்.

பின்பு, அந்தத் தகட்டையெடுத்து நன்றாய் தேய்த்துக் கழுவி தூய்மை செய்து, இன்னொரு பங்கு மருந்தைத்தடவி முன் போலவே புடமிடவேண்டும். மூன்றும் தடவையும் மிகுதியா யிருக்கிற பங்கைப் பூசி முன்போலவே புடமிடவேண்டும். மூன்றும் தடவையும் மிகுதியாயிருக்கிற பங்கைப்பூசி முன் போலவே புடமிட்டெடுத்துக் கொள்ளவும்

மேற்கண்ட முறைப்படி படிப்படியாகச் செய்தெடுத்த தாமிரத்தை செந்தூரித்தால் அனேக நோய்களுக்குமாகும். மேலும் *தம்பாக்கு செய்யவும், இந்தத் தாமிரம் அதிக உபயோகமாகும்.

## 363. தாமிரத் தூய்மை (வேறு)

கறியுப்பு, வெண்காரம், நவச்சாரம், படிக்காரம், வெடியுப்பு இவ்வைந்தும் வகைக்கு ஒரு பலம், இவற்றைப் பொடித்து ¼ படி மாவிலிங்கைப் பட்டைச் சாற்றில் போட்டு 5 பங்காக்கி தனித்தனியாய் ஒவ்வொரு பங்கையும் வைத்துக்கொண்டு ஒரு பங்கில் ஒரு பலம் தாமிரத்தை உருக்கிச் சாய்க்கவேண்டும். நன்றாயாறினபின் எடுத்து, உருக்கி மறுபங்குச் சாற்றில் சாய்க்க வேண்டும். இவ்விதம், 5 பங்கிலும் 5 தடவைகள் உருக்கிச் சாய்த்தால் தாமிரமானது தூய்மையாகும். ஆனால், இந்தத் தாமிரமானது கெட்டியாகி நொருங்கிப்போவதுமின்றி அதிகக் காரமானதாக இருக்கும். இதைப் பற்பமாகச் செய்து உபயோகிப்பதே உசிதம். மேலும், இதனை செந்தூரமாகவும் செய்து உபயோகிக்கலாம்

## 364. தாமிரத் தூய்மை (வேறு)

ஒரு பீங்கான் கோப்பையில் கால் பலம் பூநீரைப் பொடித்துப்போட்டு, அதில் ஒரு பலம் திறமான கடலைப் புளிப்பை அல்லது எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு அதில் கால் பலம் தஞ்சாவூர் ரேக்கு என்னும் தாமிரத் தகட்டைப்போட்டு, ஒரு நாள் வைத்து, மறுநாளெடுத்து நீர்விட்டுக் கழுவி தூய்மை செய்து, முன்போலவே அதில் ஒரு பலம் கடலைப் புளிப்பை அல்லது எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு ஒரு நாள் வைத்து முன்

* தம்பாக்கு என்பது 'சொகுசா' என்று கூறப்படும் உயர்ந்த தாமிரமாம்.

போலவே மறுநாள் கழுவிவிட வேண்டும். இவ்விதமே மூன்றுந் தடவையும் செய்து கொள்ளவேண்டும். இதனைக் கழுவும்போது ரேக்குகள் சேதமாகாமல் அதிக விழிப்புடன் செய்யவேண்டும். அப்படி இல்லாவிட்டால் எல்லாம் சேதமாகிப்போகும். பின்பு இதை உருக்கி எடுத்தால் வெகு நேர்த்தியான செம்பாகும்.

குறிப்பு:—இந்த ரேக்குத் தாமிரமானது எல்லா வகைகளைப் பார்க்கிலும் மேலானதெனச் சொல்ல வேண்டும். இதிலுள்ள நயம், குணம் முதலிய சிறப்பான குணங்கள் வேறெந்தத் தாமிரத்திலும் கிடையாது. ஆகையால், இதனைச் சுயமாகவே நயமான தாமிரமெனப்படுகிறது.

மேற்கண்ட பாகப்படி தூய்மை செய்து தாமிரத்தை வாதம், வைத்தியம் என்ற இருவகைக்கும் உபயோகிக்கலாம். வெள்ளி 2 பங்கு மேற்படி தாமிரம் ஒரு பங்கு, இரண்டையும் சேர்த்து உருக்கி ஊதி தாமிரத்தைப் போக்கி எடைக்கெடை தங்கம் சேர்க்கலாம். வெள்ளியுடன் எடைக்கெடை இச் செம்பைச் சேர்த்து ஊதிச் செம்பை நீக்கி, இரண்டிற்கொன்று தங்கம்சேர்க்கலாம். இவ்விதம், சேர்த்தால் இனத்திற்கு தகுந்ததுபோலே வாதப் பொன்னாகும். இதனை உராவிச் செந்தூரித்தால் சிறப்பான குணத்தைக் கொடுக்கும். மேற்கண்ட ரேக்குகளைச் காரசாரமென வாதக்குழூஉக்குறி (பரிபாஷை)யாகவும் வழங்கப்படுகிறது.

## 365. தாமிரத் தூய்மை (வேறு)

ஒரு சிறு மண்கலயத்தில் முக்கால்பாகம் தஞ்சாவூர் ரேக்கு என்னும் காரசாரத் தகடுகளை நிறைத்து அதன்மேல் வெட்பாலை மரத்தின் வாய்க்குக் காலணவை வைத்து மூடி மூன்று சீலைமண் செய்து கவசத்தின் எடைக்குப் பத்துப் பங்கெடை விராட்டியில் புடமிட்டாறினபின் எடுத்துகொள்ளவும்.

இவ்விதம், செய்யப்பட்ட தாமிரமானது அதிக மேலானது. இது வாதம், வைத்தியம் என்ற இருவகைக்கும் மேலானதாய் இருக்கும். இவ்விதம், செய்யப்பட்ட செம்பை முன் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி தங்கம், வெள்ளியுடன் சேர்த்து உராவிச் செந்தூரம் முதலியவைகளைச் செய்தால் சிறப்பான குணமுள்ளவைகளாகக் காணப்படும்.

## 366. தாமிரத் தூய்மை (வேறு)

தந்தி பேசும் தொட்டியுலுண்டாகும் துருசுச் செம்பு 3 பலம் (105 கிராம்) (இது டெலிகிராப் செம்பென வழங்கப்படுகிறது).

கைப்பாகிய அயம் ஒரு பலம், இவ் விரண்டையும் சேர்த்து மூசை யிலிட்டுருக்கி, நன்ருய் உருக்கினவுடன் வீரம், 1 பலம் (35 கிராம்) இதனை, வெண்ணெய்ப்போலப் பொடித்து ஆறு பங்காக்கிக் காகிதத் தாளில் பொட்டலமாகச் செய்துக்கொண்டு மேற்படி செப்பில் ஒரு பொட்டலத்தைக் கொடுத்து கரியால் கோலாடி நன்ருயுருக்கவேண்டும். சற்றுத் தாமதித்து மறு பொட்டலத்தைக் கொடுத்து முன்போலவே கோலாடி நன்ருய் ஊதவேண்டும். இவ்விதம், மேற்கண்ட பொட்டலங்களையும் ஒன்றன்பின் ஒன்ருய்க் கொடுத்து முடிவில் நன்ருயுருக்கி எடுத்து சரவுலையில் வைத்து 2 அல்லது 3 தடவைகள் ஊதியெடுக்க நல்ல தூய்மை யான செம்பாகும். இதைச் செய்யும்போது கண், மூக்கு, வாய் முதலியவைகளைத் காப்பாற்றவேண்டும். கவனக்குறைவாகச் செய்யின் தீமைக்கேதுவாகும் எனத் தெரிந்திருக்க வேண்டும்.

இந்தச் செம்பானது வாதம், வைத்தியம் என்ற இரு வகைக் கும் உபயோகமாகும். இந்தச் செம்பு ஒரு பங்கு, நல்ல வெள்ளி இரண்டு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஒரு பங்கு தங்கத்தைச் சேர்த்து உருக்கவேண்டும். அதை எடுத்து நான்காய் நறுக்கி மறுபடியும் உருக்கவேண்டும். அவ்விதமே மூன்ரும் தடவையும் உருக்கி எடுக்க ஒருவித வாதப்பொன்னுகும். இதனை உராவிச் செந்தூரமாகச் செய்து கொண்டால் அனேக நோய் களைத் தீர்க்க ஏதுவாகும்.

## 367. தாமிரத் தூய்மை (வேறு)

டெலிகிராப் செம்பென்னும் தந்தித் தொட்டியிலிருந்து எடுக்கப்பட்ட துருசுச் செம்பைச் சிறிய துண்டுகளாகச் செய்து கொள்ளவேண்டும். கூடுமானல் அந்தச் செம்பை உருக்கி வட்டாக்கி உராவிப் பொடியாக்கிக் கொண்டால் மிக மேலான தாகும். இந்தப் பொடியை ஒரு பீங்கான் பாண்டத்தில் போட்டு அது முழுகும்படியாக, அதன்மேல் வெடியுப்புத் திராவகத்தைக் கவனத்துடன் விட்டு ஒரு நாள் வைத்து மறு நாளெடுத்து, கோப்பையிலுள்ள திராவகத்தை ஊற்றி நீக்கி விட்டுக் கொஞ்சம் தண்ணீரும் விட்டுக்கழுவி தூய்மை செய்து அந்தப் பொடியில் முன்னளவே முன் திராவகத்தை விட்டு மறுபடியும் ஒரு நாள் வைத்திருந்து அடுத்த நாள் முன்போலவே கழுவித் தூய்மை செய்து, மூன்ருந்தடவையும் முன்னளவே முன் திராவகத்தை விட்டு ஒரு நாள் வைத்து அடுத்த நாள் கழுவி சிறு அகலில் வைத்து மேலகல் மூடி சீலமண் செய்யாமல் கவசத்தினெடைக்கு 6 பங்கெடை விராட்டியில் புடமிட்டாறின பின் எடுத்துக்கொள்க.

இவ்விதமே இன்னொரு தடவையும் மேற்சொன்னபடி மூன்று தடவைகள் மேற்படி திராவகத்தைவிட்டு ஊறவைத்துக் கழுவி எடுத்து ஒரு புடம் போட்டெடுத்துக்கொண்டால் தாமிரமானது தூய்மையாகியிருக்கும். இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட தாமிரமானது வைத்தியம், வாதம் என்ற இருவகைகளுக்கும் சிறந்ததாய் இருக்கும்.

## வெள்ளைத் தாமிரம்

இதற்கு ஜெர்மன் வெள்ளியென்றும், சீமை செம்பென்றும் பலவகை பெயர்களுண்டு. இதன் தூய்மையைத் தெரிந்துக் கொள்ளுமுன் இதன் உற்பத்தி முறையை முக்கியமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம். தாமிரத்தின் மூலமாய் வேறு அனேக உலோகங்கள் செய்யப்படுகிறதென நாம் முன் சொல்லியிருக்கிறதுபோல், மேற்கண்ட வெள்ளைச் செம்பும் தாமிர சம்பந்தமாகவே செய்யப்படுகிறது. இது மலிவான தாகையாலும், வெள்ளியைப் போன்றிருப்பதாலும் இது அதிகமாய் உபயோகப்படுத்தப்படுகிறது. ஆயினும், இதனை மருந்தாகச் செய்து உபயோகிப்பது அரிது. ஆனால், இரசவாத முறைக்காக உபயோகிக்கலாமாகையால், அதன் முறையை இங்குச் சுருக்கமாய்ச் சொல்வோம்.

இது ஒரு வகைப் பித்தளையே. இதனை ஞாயமாய் வெள்ளைப் பித்தளை எனலாம். இது இரண்டு வகை பாகமாய்ச் செய்யப் படும் ஒன்று உயர்ந்தது, மற்றொன்று தாழ்ந்தது.

## 368. வெள்ளைத் தாமிரம் (உயர்ந்தது)

தாமிரம் 25 பங்கு, நிக்கெல் 12 பங்கு, நாகம் 12 பங்கு; இம் மூன்றையும் சேர்த்து மூசையிலிட்டுப் பாகப்படி உருக்கிக் கொள்வதே வெள்ளைச் செம்பு அல்லது வெள்ளைப் பித்தளை யாகும். இதுதான் முதல்தரமானது.

## 369. வெள்ளைத் தாமிரம் (தாழ்ந்தது)

தாமிரம் 25 பங்கு, நிக்கெல், 5 பங்கு நாகம் 10 பங்கு, இம் மூன்றையும் ஒன்றாய்ச் சேர்த்து உருக்கி எடுத்துக்கொள்ள வேண்டும்.

குறிப்பு :—வெள்ளைப் பித்தளையானது பார்வைக்கு வெள்ளியைப் போலிருக்கினும், வெள்ளியின் குணம் இதற்குக் கிடையாது. வெள்ளி சீக்கிரம் உருகும். இது சீக்கிரம் உருகாது. வெள்ளியை

உருக்கினுல் திரையுண்டாகும். வெள்ளியின் இயல்பு மிருது: வெள்ளைத் தாமிரத்தின் இயல்பு கடினம். ஆனுல், இதனை ஒருவித தூய்மை செய்து வெள்ளியுடன் கலந்து வித்தைக் காண்பிக்கலாமாகையால், அவ்வகை முறைகளையும் தெரிந்திருக்க வேண்டும். ஆகையால், இரண்டொரு முறைகளை எழுதுவோம்.

## 370. வெள்ளைத் தாமிரத் தூய்மை (வேறு)

ஐந்து பலம் உயர்ந்த வெள்ளைத் தாமிரத்தை சிறு துண்டுகளாக வெட்டி வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு வீசை பிரமதண்டு சமூலத்தைச் சிறுதுண்டுகளாக நறுக்கி ஒரு சட்டியில் போட்டு, அடுப்பேற்றி எரித்து, போட்ட மூலிகையானது எரிந்து சாம்பலாய் போகிறவரையில் வறுத்தெடுத்துக் கொள்ள நைப்பாகிவிடும். இவ்விதம் செய்யப்பட்ட வெள்ளைத் தாமிரம் ஒரு பங்கு, நல்ல வெள்ளி 3 பங்கு, இரண்டையும் சேர்த்து உருக்கி எடுத்து ஆறினபின் அதைத் துண்டுகளாய் வெட்டி மறுபடியும் உருக்க வேண்டும். இவ்விதம், 3 அல்லது 4 தடவைகள் மடக்கி மடக்கி வெட்டி எடுத்து உருக்கிக்கொள்ள வேண்டும். இப்படி இதனைப் பக்குவமாய்ச் செய்தால் வாத வெள்ளையாகும். நகைகள் செய்து கொள்ளலாம்.

## 371. வெள்ளைத் தாமிரத் தூய்மை (வேறு)

வெள்ளைத் தாமிரத் தகட்டைக் காய்ச்சிக் கழுதை மூத்திரத்தில் நூறு தடவைகள் துவைக்கின் தூய்மையாகி நைப்பாகும். இது இருக்கிற குணத்திற்குத் தகுந்தபடியே 3 அல்லது 4 பங்கு வெள்ளியுடன் சேர்த்துக் கொண்டால் வாத வெள்ளியாகும்.

## 372. வெள்ளைத் தாமிரத் தூய்மை (வேறு)

வெள்ளைத் தாமிரம் 3 பங்கு, நல்லவெள்ளி, 1 பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து இலேசாய் உருக்க வேண்டும். நல்ல வேளைச் சமூலத்தையும் இடித்து ஒரு பாண்டத்தில் ஊற்றி வைத்துக்கொண்டு, வேருெரு பாண்டத்தில் தடவைக்குத் தடவைக் கொஞ்சம் ஊற்றி வைத்துக்கொண்டு மேற்சொன்ன பாகப்படி வெள்ளைத் தாமிரத்தையும், நல்ல வெள்ளியும் சேர்த்துருக்கி அதில் சாய்க்க வேண்டும். ஒரு தடவை சாய்க்கப் பெற்றச் சாறு மறுதடவைக்கு உபயோகப்படாது. ஆறினபின்னெடுத்து மறுபடியும் உருக்கி, தனியாய் வேறெடுத்த சாற்றில் சாய்க்க வேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி 7 தடவைகள் செய்தெடுத்து, மறுபடி உருக்கிக் கொஞ்சம வெடியுப்பு தூளைச்

சுருக்கிட்டுப் புகையிலைக் குச்சியால் நன்றாய்க் கிளறிவிட்டு, சாணிப்பாலில் சாய்க்கவேண்டும். நன்றாய் ஆறினபின்பு மறுபடியும் அதையுருக்கி முன்போலவே வெடியுப்புத்தூளைச் சுருக்கிட்டுப் புகையிலைக் காம்பால் துழாவிவிட்டு எருமைச் சாணியில் சாய்க்க வேண்டும். மூன்றுந்தடவையும் முன் மாதிரியே செய்து கொள்ளவும். இதற்குச் சமனெடை நல்ல வெள்ளி சேர்த்து உருக்கிக்கொண்டால் வாத வெள்ளியாகும்.

இதெல்லாம் கடினமான வேலைகளாயினும், சாத்திர பரிசீலனைச் செய்யும் ஊக்கமுடையவர்களுக்கு இது ஒரு பெரிய காரியமாகவும், ஒரு பொருட்டாகவும் தோன்றமாட்டாது. இவர்கள் கருத்தெல்லாம் வஸ்துக்களின் தத்துவங்களை நிச்சயித்தறிய வேண்டியதே அவர்களது முழு முயற்சியாம். ஆகையால், அதிக கடினமான வேலைகளையும் இலேசான வேலைகளையும் இந்நூலில் எழுத கடமைப்பட்டிருக்கின்றோம். மேலும், முதல் நூலின் வழியையும் நாம் அனுசரித்து அதிலுள்ள பாகங்களையும் முறையாகவே எழுதி வருகின்றோம்.

## 373. வெள்ளைத்தாமிரத் தூய்மை (வேறு)

பெருச்சாளி எலும்பை இடித்துத் துணியில் சல்லிக்கச் செய்த தூள் 1 பங்கு. வெடியுப்பு 1 பங்கு இவையிரண்டையும் கல்வத்திலரைத்துப் பொடித்துக்கொள்ளவும். இவ்விதம் அரைக்கப்பட்ட தூள் $2\frac{1}{2}$ பலம். இதனைப் பத்து பங்குச் செய்துகொள்ளவும். உயர்ந்தவெள்ளைச் செம்பு 4 பலம், நல்லவெள்ளி $\frac{1}{2}$ பலம். இவ்விரண்டையும் உருக்கி, மேற்படி தூளில் ஒரு பங்கைச் சுருக்கிட வேண்டியது. சுருக்கிட்டவுடன் கரியால் கோலாடி, நன்றாய் உருக்கினபின் மறுபங்கை மறுபடியும் சுருக்கிட வேண்டும். இவ்விதம், ஒன்றின் பின்னொன்றாய் பத்துப் பங்கையும் சுருக்கிட்டு முடிவில் நன்றாய் உருக்கி எடுக்க, செம்பானது நைப்பாய் இருக்கும். இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட செம்பு 3 பங்கு, நல்லவெள்ளி ஒரு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து உருக்கிப் பக்குவப்படுத்தினால் வாத வெள்ளியாகும்.

## 374. வெள்ளைச்செமபுத் தூய்மை (வேறு)

வெடிப்பு (கம்பிகளாய்) 2 பலம், நெல்லிக்காய்க் கந்தகம் 2 பலம், இக்கந்தகத்தை பொடி செய்து அரை பங்கை ஒரு மண் சட்டியின் மத்தியில் வைத்துப் பரப்பி, அதன்மீது வெடியுப்புக் கம்பிகளை வைத்துப் பரப்பி, அதன்மேல் மிகுதியான அரைப்பாகம் நெல்லிக்காய்க் கந்தகத்தூளைப் பரப்பி, அடுப்பேற்றி மெதுவாய் எரிக்கவேண்டும். அப்படி எரிக்கையில் முதலில் கந்தகம்பற்றி எரிந்து வெடியுப்பும் சேர்ந்து உருகி நீர்போல் ஆனபின்பு இறக்கி

ஆறவைத்தால் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டிருக்கும். அதை உளியால் வெட்டித்தான் எடுக்க வேண்டியதாயிருக்கும். பின்பு இதனைக் கல்லுரலிலிட்டு மர உலக்கையால் இடித்துத் தூள் செய்து ஒவ்வொரு வராகனெடையுள்ள பத்துப் பொட்டலங்களாய்க் கட்டி வைத்துக் கொள்ளவேண்டும்.

முதல்தரமான வெள்ளைச்செம்பு 4 பலம், நல்ல வெள்ளி ½ பலம், இவ்விரண்டையும் உருக்கி உருக்கு முகத்தில் மேற்படி வெடிகந்திப் பொடியில் ஒரு பாகத்தைச் சுருக்கிட்டுக் கோலாடி, அது நன்றாக உருகினபின் மறு பாகத்தைச் சுருக்கிட்டு முன் போலவே கோலாட வேண்டும். இவ்விதம், பத்துப்பங்கையும் சுருக்கிட்டு முடிவில் நன்றாக உருக்கி எடுத்து இரண்டு பங்கு மேற்படி செம்பு நல்ல வெள்ளி ஒரு பங்கு இரண்டையும் சேர்த்து பாகப்படி உருக்கி எடுத்துக்கொள்ள ஒருவித வாத வெள்ளி ஆகும்.

## பித்தளை

பித்தளை என்னும் உலேகமானது தாமிர சம்பந்தமாய்ச் செய்யப்படுகிற ஒருவகை உலோகமென முன் சொல்லப்பட்டு இருக்கிறது. இதுவும் பலரால் பலவகையாய்ச் செய்யப்படுகிறது. தாமிரமும், நாகமும் சேர்ந்ததே பித்தளையாம். ஆனால், இதில் சேர்க்கப்படும் தாமிரம், நாகம் என்ற இருவகைகளின் இயல்பிற்குத் தகுந்ததுபோல உயர்ந்தது, மட்டமானது என இரு வகை ஆகும். இதில் பிரதானமானது தாமிரமே ஆகையால், இந்தத் தாமிரத்தைப் பிரித்தெடுத்து விடலாம். பித்தளையானது வைத்தியத்தைப் பார்க்கிலும், வாத வித்தையில் அதிகமாய் பயன்படுத்தப்படுகிறது. ஏனெனில், பித்தளையே இயல்பாய் வாத முறையால் சேர்க்கப்பட்டிருக்கிறது என்பது மேற்கண்ட செய்முறையில் நன்கு விளங்கும்.

## 375. பித்தளைத் தாமிரத் தூய்மை

பித்தளையை உராவின தூள் 2 பலம், வெடியுப்புத் திராவகம் ⅞ பலம், நவச்சாரம் 2½ வராகனெடை, வீரம், இரசக்கற்பூரம், வெடியுப்பு, படிகாரம், வெண்காரம், வளையலுப்பு, இவ்வாறும் வகைக்கு ஒரு வராகனெடை.

**செய்முறை** :—கல்வத்தில் முன்னர் பித்தளைப் பொடியைப் போட்டு, வெடியுப்புத் திராவகத்தை விழிப்புடன் விட்டு விலகி இருக்க வேண்டும். திராவகத்தை விட்டவுடனே பொங்கிப் புகை உண்டாகும். வெந்து புகை அடங்கினபின் மற்ற மருந்துகளையும் சேர்த்து, 2 சாமமரைத்து வில்லைத்தட்டி உலர்த்தி, ஓட்டிலிட்டு

மேலோடு மூடி 3 சீலைமண் செய்து உலர்த்தி கவசத்தினெடைக்கு 9 பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துத் தூள் செய்துகொள்க.

அதனுடன் கால் பலம் பொரித்த வெண்காரத் தூளைச் சேர்த்துக் கலந்து மூசையிலிட்டு மூசை வாய்க்குச் சில்லிட்டு 2 சீலைமண் செய்து உலையில் வைத்து மூசையமுக ஊதி எடுத்து ஆற வைத்து எடுத்து மறுமூசையிலிட்டு உருக்கி எடுக்க நேர்த்தியான செம்பாய் இருக்கும். ஆனல், இந்தச் செம்பை முன் சொல்லப் பட்டிருக்கும் வகைகளில் ஒரு வகையாய்த் தூய்மை செய்து கொண்டால் அதிக மேலானதாய் இருக்கும்.

குறிப்பு: – இந்த முறையானது ஒழுங்குப்படி செம்பெடுத்தல் என்னும் வகுப்பிற் சொல்லப்படவேண்டும். இவ்வகைப் பாகங்கள் அனேகம் அங்கு சொல்லப்படும். ஆயினும், மேற்கண்ட முறை யானது பித்தளை செம்பாவதுடன் அது தூய்மையும் ஆகிறபடி யால் தாமிரத் தூய்மை வகுப்பிற் சேர்த்துச் சொல்லப்பட்டது.

## 376. பித்தளைத் தூய்மை

கம்பி வெடியுப்பு 8 பலம் (280 கிராம்), கோது கொட்டை முதலியவை நீக்கப்பெற்ற புளி 9 பலம், படிக்காரம், நவச்சாரம், இவ்விரண்டும் வகைக்கு ஒரு பலம் உப்புகளைப் பொடித்துப் பின்பு புளியையும் சேர்த்து இடித்துச் சிறு வில்லைகளாய்ச் செய்து, ஒட்டை அடுப்பில் வைத்து இரண்டு மூன்று வில்லைகளாய் வைத்த உடன் சுர்சுர் என ஒருவித ஒலியுடன் எரிந்து சாம்பலாகிப் போகும். இவ்விதமே எல்லா வில்லைகளையும் சாப்பலாக்கி எடுத்துப் பீங்கானில் ஒரு பக்கமாய் அணைத்து அந்தப் பக்கத்தைச் சற்று உயர்த்திப் பனியில் வைத்து வர நீர்க் கசியும், காலை யில் அதை ஒரு புட்டியில் சேகரித்துக் கொள்ள வேண்டும். இவ்விதம், அந்த மருந்தில் கசியும் நீரை எல்லாம் சேகரித்துக் கொள்ள வேண்டும். இது ஒருவகை வெடியுப்புச் செயநீராகும்.

நவச்சாரம் 2 பலம் (70 கிராம்). வெண்காரம் ஒரு பலம் (35 கிராம்), வீரம் $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்) இரசக்கற்பூரம் $\frac{1}{4}$ பலம் இந்நான்கையும் முன்னர் தனித்தனியே பொடித்துப் பின்பு எல்லாவற்றையும் சேர்த்து அரைத்து முன்செயநீரில் போட்டுக் கலக்கி வைத்துக் கொள்ளவேண்டும்.

இந்த யோகத்தை ஒரு பாண்டத்தில் வார்த்துக் கொண்டு கனமான சீமைப் பித்தளைத் தகட்டைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சித் தோய்க்க வேண்டும். நன்ருகக் குளிர ஆறினபின்பு

மறுபடியும் முன்போலவே கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சித் தோய்க்க வேண்டும். இவ்விதம், 15 தடவைகள் தோய்த்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

துருசு, வீரம், இரசம், இரசக்கற்பூரம், வெண்காரம் இவ்வைந்தும் வகைக்கு மேற்கண்டபடி தோய்த்து எடுத்தத் தகடு பலம் ஒன்றிற்கு ஒவ்வொரு வராகனெடையாக எடுத்து, நெய்யையும் சிற்றாமணக்கெண்ணெயையும் சமனுய்ச் சேர்த்து விட்டரைத்து தகட்டிற்கு ஒரு நெற்கனம் எங்கும் சமமாய்ப் பூசி உலர்த்தி, ஒரு அகலில் வடிகட்டின சாம்பல் தூளும், சோடாவும் சமனுய்ச் சேர்த்தத் தூளைப் பரப்பி அதன்மேல் வைத்து, அதன் மேலும் முன் தூளைக் கொஞ்சம் போட்டு, மேலோடுமூடி, 3 சீலைமண் செய்து கவசத்தின் எடைக்கு 3 பங்கெடை விராட்டி யில் புடமிட்டாறினபின் தகட்டை எடுத்து அதன் மேலுள்ள செதில்களைத் தட்டி நீக்கிவிட வேண்டும். இரண்டாம் தடவை யும் முன் மருந்தை அந்தத் தகட்டின்மீது முன்போலவே பூசி உலர்த்தி முன்போலவே புடமிட்டுச் செதில்களை நீக்கி மூன்றும் தடவையும் முன்போலவே புடமிட்டு எடுத்து வெண்காரங் கொடுத்து உருக்கி எடுக்கத் தூய்மையான பித்தளையாகும்.

இதனை அவரவர்கள் விருப்பம்போல வாதம், வைத்தியம் என்ற இரு வகைகளிலும் சேர்த்துக் கொள்ளலாம். ஆனுல், இதற்குக் கைபாகமும் பிரதானம். கைபாகம், செய்பாகம் என்ற முறைதரப்பில் ஒன்று மற்றொன்றாய் முடியும்.

## 377. பித்தளைத் தூய்மை (வேறு)

அன்னபேதி, வெண்காரம், இலிங்கம், நவச்சாரம் இவை நான்கும் வகைக்கு $3\frac{3}{4}$ வராகனெடை இவற்றைப் பொடித்து விளக்கெண்ணெய், நெய், எலுமிச்சம்பழச் சாறு என்ற மூன்றும் சமபாகமாய்ச் சேர்த்து விட்டு 2 சாமமரைத்து மெழுகு பதமாய் எடுத்து, இரண்டு பலம் சீமைப் பித்தளைத் தகட்டின்மீது நெற் கனம் சமமாய்ப் பூசி உலர்த்தி ஒரு ஓட்டில்போட்டு தூளைப் பரப்பி, அதன்மேல் முன் சித்தப்படுத்தின தகட்டை வைத்து, மேலும் கொஞ்சம் சோடாவைத் தெளித்து, மேலோடுமூடி, மூன்று சீலைமண் செய்து கவசத்தினெடைக்கு 210 பங்கெடை விராட்டியில் புடமிட்டாறின பின் தகட்டை எடுத்து அதன் மீதுள்ள செதில்களை நீக்கி, மறுபடியும் முன்போலவே பூசி உலர்த்தி முன்போலவே புடமிட வேண்டும். மூன்றும் தடவையும் புடம் இட்டு எடுத்துக் கொள்ளவும். அவசியமானுல், இன்னம் 2 3 புடங்கள் அதிகமாகவும் போட்டுக் கொள்ளலாம். தகடானது

வைத்த எடைக்கு அரை பங்காகி விட்டால் புடத்தை நிறுத்தி விட வேண்டியது. அப்படிக் குறையாமலிருந்தால் புடத்தைப் போட வேண்டியது.

பின்பு, வெடியுப்பு, படிக்காரம், கல்லுப்பு, நவச்சாரம், துருசு இவ்வைந்தும் சமன் இவற்றைப் பொடித்தால் நைப்பாகி விடும். முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பித்தளையை உருக்கி, முன் மருந்தைச் சுருக்கிட்டுக் கரியால் நன்றாய்க் கோலாட வேண்டியது. மறுபடியும் முன் மருந்தைச் சுருக்கிட்டுக் கோலாட வேண்டியது. இவ்விதம், 3, 4 தடவைகள் செய்து தூய்மையான பதத்தில் எடுத்துக் கொள்ளவேண்டும்.

குறிப்பு: — மேற்கண்ட பித்தளைத் தூய்மை முறைகளிலும், பின்காணும் பித்தளைத் தூய்மை முறைகளிலும் கைபாகம், செய்பாகம், அனுபவம் என்பவை மற்ற விவகாரங்களைப் பார்க்கிலும், இதில் சுருக்கிடுதல் என்னும் பாகத்தை மிதத்திற்கு அதிகம் செய்தால் பித்தளையானது சுத்தத் தாமிரமாகி விடுகிறது. மேற்கண்ட பாகங்கள் மிதத்திற்குக் குறைந்து விட்டால் பித்தளையின் தன்மை ஒழிந்து போகிறதும் இல்லை. இதில் சொற்ப விகற்பதினாலும் இவ்விதக் கெடுதி நேரிடுவதால் பல தடவைகள் செய்து பல தடவை சோதித்துத் தூய்மை பெற வேண்டும் என தெரிந்து இருக்க வேண்டும். அப்படிச் செய்யா விட்டால் இந்த முறைகளில் தூய்மை பெறுவது மிகவும் அருமை யாகும். ஆகையால், இந்தப் பாகங்களைப் பரிசோதிக்க விருப்ப முள்ள வாதவல்லுநர்கள் இப் பாகங்களைப் பாகப்படி செய்து பரிசோதித்து அனுபவசித்தி பெறவேண்டியதெனத் தெரிந் திருக்க வேண்டியது.

## 378. பித்தளைத் தூய்மை (வேறு)

நவச்சாரம் ஒரு பலம் (35 கிராம்), வெடியுப்பு ஒரு பலம் இவ்விரண்டையும் கல்வத்தில் இட்டுப் பொடித்து, சிறுபிள்ளை களின் சிறுநீரைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமமரைத்துச் சிறுவில்லைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி, ஒரு ஓட்டில் வைத்து மேல் ஓடுமூடி 3 சீலைமண் செய்து கவசத்தினெடைக்கு 4 பங்கெடை விராட்டியில் புடமிட்டாறின ; பின்பு எடுத்துக் கொள்க.

இதனைப் பொடித்துப் பக்குவமாய்ப் பனியில் வைத்து வர செயநீர் ஆகும். அன்றாடம் சேர்த்து வைத்துக் கொள்ளவும்.

2 பலம் (70 கிராம்) கறியுப்பைக் கல்வத்திலிட்டு, மேற்படி செயநீரைச் சிறுகச் சிறுக வார்த்து, ஒரு சாமமரைத்து, சிறு வில்லைகளாகச் செய்து வெய்யிலில் வைத்து உலர வைத்து, ஓட்டில் வைத்து மேல் ஓடு மூடி மூன்று சீலைமண் செய்து காய வைத்துக் கவசத்தினெடைக்கு 2 பங்கெடை விராட்டியில் புடமிட்டாற வைத்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

முன் சொல்லப்பட்டிருக்கிற எந்த வகை ஆயினும், தூய்மை செய்யப்பட்ட எட்டு வராகனெடை பித்தளையை, உருக்கி ஒரு வராகனெடை மேற்படி உப்பை 2 அல்லது 3 தடவை சுருக்கிட வேண்டும். பின்பு நன்ருக உருக்கி எடுத்து ஆறினபின் மறுபடியும் உருக்கி முன் மருந்தை முன்னளவே எடுத்து சுருக்கிட வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 3 தடவைகள் செய்யின் பித்தளை யானது தூய்மையாகும்.

## 379. பித்தளைத் தூய்மை (வேறு)

முதற்பாகத்திற் சொல்லி இருக்கும்படி செய்த தாளகப் பதங்கம் ஒரு பங்கு, மேற்படி நவச்சாரப் பதங்கம் ஒரு பங்கு இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமநேரம் அரைத்துக் காய வைத்து, பதங்கச் சட்டியிலிட்டு மேல்சட்டி மூடி சீலைமண் செய்து அடுப்பில் ஏற்றிப் பாகப்படி இரண்டு சாமநேரம் எரித்து, ஒரு நாளாற வைத்து மறுநாளெடுத்துக் கவசத்தை நீக்கிப் பார்க்க மேல் சட்டியில் பதங்கம் பிடித்திருக்கும். அதனை ரோமத் துடைப்பதால் அல்லது, புருசால் துடைத்துப் பத்திரப்படுத்த வும். மேற்கண்ட வகைகளில் ஒருவகையாய்த் தூய்மைசெய்து எடுத்தப் பித்தளை 10 பங்கு இதனை உருக்கி, உருக்குமுகத்தில் ஒரு பங்கு முன் பதங்கத்தைக் கொஞ்சங் கொஞ்சமாய்ச் சுருக்கிட்டு நன்ருய் உருக்கிக் கோலாடி எடுத்துக் கொள்ள, பித்தளையானது தூய்மையாகும்.

## 380. பித்தளைத் தூய்மை (வேறு)

பாகப்படுத்தின நவச்சாரம் 5 பலம் (175 கிராம்), படிக் காரம் $2\frac{1}{2}$ பலம் ($87\frac{1}{2}$ கிராம்), அன்னபேதி செந்தூரம், தூய்மை யான வாலை இரசம், பாகப்படுத்தின வெடியுப்பு இம்மூன்றும் வகைக்கு ஒரு பலம் (35 கிராம்), தூய்மை செய்த கந்தகம், கட்டின இரசக்கருப்பூரம், கட்டினலிங்கம், கட்டின சிறு கண் நாகம் பாகப்படுத்தின கறியுப்பு, தூய்மை செய்த வெண்காரம், இவ்வாறும் வகைக்கு $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), பாகப்படுத்தின

துருசு, பாகப்படுத்தின வளையலுப்பு, பாகப்படுத்தின இந்துப்பு, பாகப்படுத்தின தீபகருப்பூரம், இந்நான்கும் வகைக்கு $\frac{1}{4}$ பலம், ($8\frac{3}{4}$ கிராம்), அப்பட்டமானதும் திறமானதுமான கெட்டித்தேன் 2பலம் (70 கிராம்) பசுவின் நெய் ஒரு பலம், நல்லெண்ணெய் ஒரு பலம் (35 கிராம்).

செய்முறை:—வாலைரசத்தை ஒரு மண்கிண்ணத்தில் வார்த்து, அதன்மேல் கொஞ்சம் நல்லெண்ணெய்யை விட்டு, நாகத்தை இரும்புக் கரண்டியில் விட்டுக் கரிநெருப்பின் மீது வைத்து, நாகம் சூடுகண்டவுடனே அதன்மேல் கொஞ்சம் நல்லெண்ணெயைவிட, சற்று நேரத்தில் உருகும். நன்ருய் உருகினபின் எடுத்துக் கல்வத்தில் வைத்து அரைக்கத் தூளாகிப் போகும் அத்தூளைத் தனியாய் வைத்துக் கொள்க. நவச்சாரத்தைக் கல்லுரலில் போட்டு இடித்துத் தூள் செய்து துணியில் சலித்துக் கொள்ள வேண்டும். மற்ற சரக்குகள் எல்லாவற்றையும் ஒவ்வொன்ருய்த் தனித்தனி அரைத்துத் தனித்தனியே எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். முன்னர் நாகரசத்தூளைக் கல்வத்தில் போட்டு, அதனுடன் இரசக்கற்பூரத் தூளைச் சேர்த்துக் கொஞ்சமரைத்துப் பிறகு கந்தகத் தூளைச் சேர்த்து அரைத்து, அதன் பின்பு படிக்காரம், கறியுப்பு, வெண்காரம் என்ற மூன்றின் தூளையும் முறையே ஒன்றன்பின் ஒன்ருய்ச் சேர்த்தரைத்து, இதற்குப் பிறகு இந்துப்பு, கற்பூரம் என்ற இவற்றின் தூளை முறையே ஒன்றன் பின் ஒன்ருய்ச் சேர்த்து அரைத்தும், இவ்விதம், செய்தபின்பு துருசுத்தூளைச் சேர்த்து அரைத்து முடிவில் இலிங்கத்தூளையும் அன்னபேதி செந்தூரத்தையும் ஒன்ருய்க் கலந்து சேர்த்து, எல்லாம் ஒன்ருய்க் கலக்கும்படி நன்ருய் அரைத்து கலந்து தேன், நெய், எண்ணெய் என்ற மூன்றையும் ஒன்ருய்ச் சேர்த்துச் சிறுகச்சிறுக முன் கலவையில் இட்டு அரைக்க வேண்டும். ஒரு சாமம் கைவிடாமல் அரைத்து மெழுகுப் பதமான பின்பு எடுத்துப் பீங்கான் தாழியில் பத்திரப் படுத்த வேண்டும்.

இந்த மெழுகை யானைக்கால் வீக்கம், கால் அதைப்பு முதலியவைகளுக்கு உடற் கூறறிந்து மேலுக்குப் பற்றிட்டுவர, அந்த வீக்கம் முதலியவைகள் தீரும்.

ஒரு நூற்கனமுள்ள சீமைப்பித்தளைத் தகடு 5 பலம், இது நாலங்குல அகலமுள்ளதாய் இருக்க வேண்டும். இதனை நான்கு துண்டுகளாய் வெட்டிக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு துண்டின் ஒரு பக்கத்தில் மேற்படி மெழுகை நெற்கனம் பூசி

ஆற வைத்து நன்றாய் நிழலில் காய்ந்தபின் மறுபக்கத்திற் பூசி முன்போலவே நிழலில் காய வைத்து ஈரமில்லாமல் உலர வைத்துக் கொள்ளவேண்டும்.

விராட்டியின் சாம்பலைப் பொடித்துத் துணியில் சல்லித்துச் செய்த தூள் 4 பங்கு, சோடா உப்பு ஒரு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். இதற்குச் **சாம்பற் கலவை** எனப் பெயர்.

ஒரு அகலில் மேற்படி சாம்பல் கலவையை ஒரு நெற்கனம் எங்கும் சமமாய்ப்பரப்பி, அதன் மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தகடுகளை ஒன்றன்மீது ஒன்றுபடாமலும், தகடானது ஓட்டிற் படியும்படியாகவும் அடுக்கி, மேலும் முன் போலவே சாம்பல் கலவையைத் தூவி, மேல் ஒடு மூடி, 3 சீலை மண் செய்து உலர்த்திக் கவசத்தின் எடைக்கு, 19 பங்கெடை விராட்டியில் புடமிட்டு நன்றாய்க் குளிர ஆறினபின் தகடுகளை எடுத்து நன்றாய்த் தட்டி, அதிலுள்ள செதிள்களை நீக்க வேண்டியது. ஆனால், முதல் புடத்தில் அதிகம் செதிள்கள் விழாது.

பின்பு, இரண்டாம் தடவையும் இந்தத் தகட்டின்மீது முன் போலவே முன் மெழுகைப் பூசி உலர்த்தி முன்போலவே ஓட்டில் சாம்பல் பொடியைப் போட்டு, தகட்டின் மீதும் பொடியைப் போட்டு மேலோடு மூடி 3 சீலைமண் செய்து முன்போலவே புடம் போட்டு ஆறினபின்பு கவசத்தைப் பிரித்துத் தகடுகளை எடுத்துத் தட்ட செதிள்கள் சிறப்பாக விழும். அதை எல்லாம் பற்றற நீக்கிவிட்டு, மூன்றாம் தடவையும் இத்தகடுகளின் மீது முன் மெழுகைப் பூசி முன்போலவே கைபாகந் தவறாமல் புடமிட்டு ஆறின பின்பு எடுத்துத் தகடுகளைத் தட்டிச் செதள்களை நீக்கவும் இத்தடவையும் செதிள்கள் அதிகமாய் உதிரும்.

இந்த தகடுகளை நிறுத்துப் பார்த்தால் வைத்த எடையில் அரைவாசி அல்லது, அதற்குக் குறைந்திருந்தால் பதமெனப் புடத்தை நிறுத்திக்கொள்ள வேண்டும். அப்படி இல்லா விட்டால் மறுபடியும் இரண்டொரு புடம் போட்டுக் கணக்கு அளவுப்படி எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

பாகப்படுத்தின வெடியுப்பு, படிக்காரம், கல்லுப்பு பாகப் படுத்தின நவச்சாரம், பாகப்படுத்தின துருசு, இவ்வைந்தும் வகைக்குச் சமபாகம். இவற்றைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்து வைத்துக் கொள்க. இது நைப்பாக இருக்கும். இதற்குப் **பஞ்சலவண மெழுகு** எனப் பெயர்.

புடம் போட்டெடுக்கப்பட்ட தகடு $2\frac{1}{2}$ பலத்திற்கு ($87\frac{1}{2}$ கிராம்), மேற்படி பஞ்சலவண மெழுகு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்), மேற்கண்ட தகடுகளை மூசையிலிட்டு உருக்கிக் கண்விட்டாடும் போது மேற்படி மெழுகைச் சிறுகச் சிறுக சுருக்கிடவேண்டும். அந்த மருந்தெல்லாவற்றையும் சுருக்கிட்ட பின்னர் நன்ருய் உருக்கி எடுத்து ஆறவைத்து, நான்காய் வெட்டி மறு மூசையிலிட்டு வெண்காரங் கொடுத்து உருக்கவேண்டும். மூன்ரும் தடவையும் முன்போலவே நான்காய் வெட்டி மறு மூசையிலிட்டு உருக்கி எடுத்துக் கம்பியாய் வார்த்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

இதனுண்மை தெரிந்த அனுபவசாலிகள், தங்கள் விருப்பம் போல் செய்து கொள்வார்கள். ஆகையால், அவர்களை அடுத்துத் தெரிந்து கொள்ள வேண்டும் ஆகையாலும் இதன் இரகசியமும் இதில் பண்பட்டவர்களுக்கே தெரியும். ஆகையாலும், இதன் உபயோகத்தை எழுதாமல் இம்மட்டில் நிறுத்தினேம். எந்தத் தொழிலாயினும் சரியே ஒவ்வொன்றிலும் அனேக இரகசியங் களிருக்கின்றன. அவை எல்லாவற்றையும் இங்கு எழுதி முடியாது. ஒரு வேளை அப்படி எழுதினபோதிலும், இங்கு எழுதப் பட்டிருப்பதற்கும், அங்கு நடப்பதற்கும் அனேக வேறுபாடுகள் இருக்கும். அவை புது மாணுக்கர்களுக்கு ஒருவித மயக்கத்தையும், ஐயத்தையும் உண்டாக்கி, அதைரியத்தை உண்டாக்கி, ஊக்கக் குறைவு நேரிடும். ஆகையால், எந்த விவகாரத்தையும் நிதானத்துடன், புத்திக் கூர்மையையும் பயன்படுத்தி இடைவிடாது முயற்சியுடன் செய்துவரின் கடவுளின் அருளால் எல்லாம் கைகூடி வரும் என்பதில் சந்தேகமில்லை.

## குடவன் வேதைக்குரு

கீழ்க்காணும் முறையானது மிகவும் இரகசியமாக வெகு காலமாய் வைக்கப்பட்டு வருகின்றவைகளில் ஒன்று, இதனைப் பலவித மொழியாகவும், தொடர்ச்சியகவும் எழுதாமல் இந்த ஒரு முறையையே பல இடங்களில் துண்டு துண்டாய் எழுதப்பட்டு இருந்தது. இந்த முறையை ஆதியோடந்தமாகவும், வரிசை முறையாகவும் கண்டுபிடித்து எழுத அதிக உடலுழைப்பும், உடல் உழைப்பும் நேரிட்டதும் அன்றி இதனையும், இதைப் போன்ற வேறு பற்பல பாகங்களையும் வெளிப்படுத்தி இருப்பதெல்லாம் உயிர்களிடம் அன்பும் பொதுநலப்பிரிய விருப்ப மிகுதி என்ற இவைகளே முக்கிய காரணமாகும். இதன் உண்மையானது இப் பாகங்களையும், இந்நூல்களையும் ஆதியோடந்தமாகவும், முறைப் படியும், கவனமாகவும் படிக்கும் அறிவாளிகளுக்கும், மருத்துவப்

பண்டிதர்களுக்கும் தெரியாமற் போகாது. இதனை இங்கு எடுத்துக் காண்பிக்க வேண்டிய அவசியமில்லையே ஆயினும், பாகங்களின் அருமை முதலிய நுட்பங்கள் தெரியாத நண்பர்களும், இந்நூலையும் மற்ற நூற்களோடு சேர்த்து எல்லாவற்றையும் ஒன்றுய்ப் பாவிக்காமல் இருக்கும் பொருட்டேயாகும். வேறு சிலர் நூற்களை ஆதியோடந்தமாய்ப் பார்க்கிறதுமில்லை. அப்பாகங்களுள் ஒரு பாகத்தையேனும் செய்து பரிசோதிப்பதும் இல்லை. ஆனுல், எவ்வித நூலிலும் அதிருப்தி உடையவர்களாய் தங்கள் தங்கள் கருத்திற்கு இசைந்து ஒரு மருத்துவ நூலும் உலகில் கிடையாது. எனவே, சோதித்து நின்ருர்கள். இப்படிச் செய்வதால் அவர்களுக்கு உண்டாகும் பயன் இன்னதென்பதும், அவர்கள் கருத்து இன்னது என்பதும், அவர்கள் முடிவு இன்னது என்பதும் விளங்கவில்லை. இவ்வித தீயகுணங்கள் ஒரு வேளை அவர்கள் பிறப்பிலேயே உண்டாகி இருந்தால், அவற்றிற்கு மருந்துமில்லை, மந்திரமும் இல்லை, தந்திரமும் இல்லை. ஆனுல், இடையில் உண்டாகியிருந்தால் நல்ல மருத்துவ தத்துவங்களைத் தெளியக் கற்றறிந்து, அனுபவசாலிகளை அடுத்துத் தெரிந்து கொண்டால் அவர்களுடைய சந்தேக நோய் தீர்ந்துபோகும். என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. எத்தகையினர்கள் எவ்விதமாய்க் கொண்டாலும் கடவுளின் அருளினுலும், பெரியோர்களின் வாழ்த்துதலினுலும் நாம் எழுதும் முறைகளுள் அனேகம் நூதனமானவைகளும், இதுவரையில் வெளிப்படாதவைகளும் அதிகம் இரகசியமாய் வைக்கப்பட்டவைகளும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. நமது கருத்தெல்லாம் உலகோர்க்கு உதவுதலின் மீது; ஆகையால், இவர்களுக்கு உண்டாகும் ஐயப்பாட்டிற்கு உட்படாமல் நமது வழியே நாம் சொல்வோம். கீழ்ச்சொல்லப் போகும் முறையைப்பற்றி வெகுவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், அது மருத்துவநூல் அனுபவம், உத்தி முதலியவைகளுக்கு ஒத்தே இருக்கின்றது.

(1) உலாந்தா லிங்கம் ஒருபலம் (35 கிராம்), இதனை ஒரு மெல்லிய துணியில் முடிந்து, பலமான நூலினுல் கட்டி, மறுநுனியை ஒரு மூங்கில் குச்சியில் கட்டித் தொங்கவிட வேண்டும். முருங்கைப் பூவை மரஉரலில் இடித்துப் பிழிந்தச் சாறு ஒருபடி, இதனை $1\frac{1}{2}$-படி கொள்ளத்தக்கதும் வாய் குறுகினதும் ஆன ஒரு பானையில்விட்டு, இலிங்கத்தை முடிந்து வைத்திருக்கிற மூங்கில் குச்சியைப் பானை வாயின்மேல் குறுக்காய்ப்போட்டு இலிங்க முடிச்சானது பானைக்குள்ளிருக்கிற நீரில் தொங்கிக்கொண்டிருக்க வேண்டும். ஆனுல், அந்த முடிச்சானது பானையின் அடி மட்டத்திற்கு நான்கு அங்குலம் மேலாக இருக்கவேண்டும். ஏனெனில்,

அந்தச் சாறுனது சுண்டிப்போகும் பக்குவத்தில் முடிச்சானது பானையின் அடியில்பட்டு தீப்பற்றிக் கருகிப்போகாமல் இருப் பதற்காகவேயாகும். தீயை மெதுவாக எரித்துப் பானையில் உள்ளச் சாறெல்லாம் சுண்டினபின் நன்ருய் ஆறவிட்டு, இலிங் கத்தை எடுத்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

(2) வெள்ளைப் பாடாணம் ஒரு பலம் (35 கிராம்), நாயுருவி உப்பு 2 பலம் (70 கிராம்), இந்த உப்பில் அரைவாசியை ஒரு சிறு சட்டியில் பரப்பி அதன் நடுவில் பாடாணக்கட்டியை வைத்து, அது மறையும்படியாக மேற்படி பாதி உப்பையும் போட்டு, மேல் சட்டியால் மூடி, 5 சீலைமண் செய்து உலர்த்தி, சிறு அடுப்பின்மீது ஏற்றி, தென்னை ஓலையால் சிறு தீயாக, 5 சாமம் எரித்து எடுத்துக் குளிர ஆறவிட்டு, கவசத்தை நீக்கிப் பாடாணக் கட்டியை எடுத்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

(3) மடலரிதாரம் ஒரு பலம் (35 கிராம்), தேவையான அளவு நாயுருவி உப்பை ஒரு பீங்கான் பாண்டத்தில் போட்டுப் பனியில் வைத்து வர உப்பெல்லாம் நீராகிவிடும். அல்லது, மேற்படி உப்பை ஒரு குப்பியில் போட்டு வாய்மூடுதல் செய்து மிகவும் குளிர்ச்சியான இடத்தில் வைத்துவர அந்த உப்பெல்லாம் நீராகிவிடும். இந்த நீர் செல்லத்தக்க அளவு முன்னரே சித்தப் படுத்திக்கொள்ளவேண்டும். முன் சொல்லப்பட்ட அரிதாரத்தை அப்பிரேகத் தகட்டின்மீது வைத்து அடுப்பின்மீது ஏற்றிச் சிறு தீயாக எரித்து, மேற்படி செயநீரைச் சிறுகச் சிறுகச் சொட்டிவர வேண்டும். இதற்காக ஒரு சிறு குச்சியில் மெல்லிய துணியைச் சுற்றி நூலால் கட்டி சித்தப்படுத்தின துடுப்பை மேற்படி செய நீரில் தோய்த்து மேற்படி தாளகக் கட்டியைப் புரட்டிப்புரட்டி சுருக்கிடுதல் பக்குவமான வழியாகும். இவ்விதம், கைபாகமாய் மூன்று சாம நேரம் (9-மணி) சுருக்கிட்டுப் பக்குவமாய் எடுத்துப் பத்திரப்படுத்திக்கொள்ள வேண்டும்.

(4) நெல்லிக்காய்க் கந்தகம் ஒரு பலம் (35 கிராம்) இதனை மேற்கண்டபடியே அப்பிரகத் தகட்டின்மீது வைத்து நாயுருவி உப்புச் செயநீரில் ஒரு சாமம் (3 மணி) சுருக்கிட வேண்டும். ஆனல், இதில் மேற்கண்டபடி துணித் துடுப்பால் சுருக்குக் கொடுக்காமல், சிறிய கரண்டியால் மொண்டு, துளித் துளியாய் விட்டு வரவேண்டும். இவ்விதம், ஒரு சாமம் கைபாகமாய்ச் சுருக்கிட்டு எடுத்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

(5) துருசு ஒரு பலம் (35 கிராம்), இதனை நவச்சார செய நீரில் நன்ருய்க் குளிர நனைத்து ஒரு பீங்கானில் வைத்து கடும்

வெய்யிலில் வைக்க வேண்டும். மறுநாள் காலையிலும் மேற்கண்ட படியே, அந்தச் செயநீரில் நனைத்துப் புரட்டி பீங்கானில் வைத்து கடும் வெய்யிலில் வைக்கவும். மூன்றும் நாளும் அவ்விதமே செய்து எடுத்துக் கட்டியாகவே வைத்துக் கொள்க.

(6) கருவங்கம் $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்), இதனை மெல்லிய தகடாய்ச் செய்து மிகவும் சிறிய துண்டுகளாய்ச் செய்து, கல்வத்தி லிட்டு, 24 பலம் (840 கிராம்), மழைநீரைத் தனியே ஒரு பாண்டத்தில் வைத்துக் கொண்டு சிறுகச் சிறுக விட்டு கை விடாமல் 2 அல்லது 4, சாமம் அரைத்து வரச் சுண்ணமாகும். அரைக்கும்போது காரம் நெடியேறும் சமயத்தில் இது பக்குவ மென நிதானித்து 4 சாமம் அரைத்துச் சுண்ணும்பு போலான பின்பு, அதைச் சிறு வில்லைகளாய்ச் செய்து நிழலில் உலர்த்தி பத்திரமாய்ப் பளிங்குக் குப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும்.

(7) ஆற்றுக் கிளிஞ்சில் (அதாவது நல்ல தண்ணீரிலுள்ள கிளிஞ்சில்) தேவையானவைகள். நாயுருவிச் சமூலத்தை இடித்துப் பிழிந்த சாற்றை ஒரு மண்பாண்டத்தில் விட்டு அதில் மேற்படி கிளிஞ்சில்களைப் போட்டு வைக்கவேண்டும். இந்தக் கிளிஞ்சில்களின் மட்டத்திற்கு மேல் நான்கு அங்குலம் சாறு இருக்க வேண்டியது. இவ்விதம், 3 நாள்கள் சென்றபின்பு எடுத்து உலர்த்தி நாயுருவிச் சமூலத்தையும் அரைத்த விழுதில் கவசித்து அதன்மேல் 5 சீலைமண் செய்து, கவசத்தின் எடைக்கு 20 பங்கெடை விராட்டியில் புடமிட்டு ஆறின பின்பு எடுக்கக் கிளிஞ்சில்கள் சுண்ணமாகி இருக்கும். இதனை ஒரு குப்பியில் இட்டுப் பத்திரப்படுத்த வேண்டும்.

(8) ஆறுவது எண்ணில் சொல்லப்பட்ட கருவங்க வில்லைகளைக் கொஞ்சமும் ஈரமில்லாமல் உலர்ந்து இருக்கிறதா எனக் கை விரலால் நன்றாய்த் தட்டி கணீல் கணீலென ஒலி வருகிறதா என சோதித்துக் கொள்ளவேண்டும். அவ்வித ஒலி இல்லாவிட்டால் வில்லையை மறுபடியும் நன்றாய் உலர்த்திக் கொள்ளவேண்டும். இதன் பின்பு. ஒரு சிறிய அகலில், ஏழாம் எண்ணிலுள்ள கிளிஞ் சிற் சுண்ணத்தை, அரை விரற்கனம் மட்டமாய்ப் பரப்பி அதன் மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற கருவங்கச் சுண்ண வில்லைகளை ஒன்றன்மேல் ஒன்று படாமல் அடுக்கி, அதன் மேலும் மேற்படி கிளிஞ்சிற் சுண்ணத்தைப் போட்டு மெதுவாய் விரலால் அழுத்தி, மேல் அகல்மூடி 5 சீலைமண் செய்து உலர்த்தி, ஒரு சாண் சதுரக்குழித் தோண்டி, குழியின் அடியில் ஒரு விரற்கனம் மணலைப் பரப்பி, அதன்மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற கவசத்தை

வைத்து, குழி நிறைய மணலைக் கொட்டி பூமி மட்டத்திற்கு ஒத்திருக்கும்படியாகச் செய்து கொள்ளவேண்டும். எண்பது பலம் (2800) விராட்டியைத் துண்டுகளாகச் செய்து தனியே அடுக்கிக் கொளுத்தி விட்டு, அங்கு தீப்பற்றிப் புகை அடங்கின வுடன், குறட்டால் அந்த நெருப்பை முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற மணற் குழியின் மீது, குழியின் வாய் மட்டத் திற்குத் தகுந்த விதமாய் அடுக்கி விடவேண்டும். இவ்விதம், அடுக்கி 3 மணி நேரம் சென்றவுடன் அந்த நெருப்பை நீக்கி விட்டுக் குளிர ஆறினவரையில் தாமதித்து இருக்கவேண்டும். நன்றாய்க் குளிர்ந்தவுடன் மணலை நீக்கி, அகல் கவசத்தை மேல் பக்கத்தைக் கீழ்பக்கமாகவும், கீழ்ப்பக்கத்தை மேல்பக்கமாகவும் திருப்பி வைத்து, பழையபடி மணலை நிறைத்து முன்போலவே சுட்டுப் புடமிட வேண்டும். இவ்விதம், இரண்டு புடமானபின் குளிர விட்டெடுத்துக் கவசத்தைப் பிரிக்க ஆண்டவன் உதவியால் கருவங்கமானது சுண்ணமாகி இருக்கும்.

(9) எட்டாம் எண்ணில் சொல்லப்பட்ட கருவங்கச் சுண்ணத் தில் பாதிப்பங்கை, ஒரு அகலில் பரப்பி அதன்மேல் அஞ்சாம் நம்பரில் சொன்னபடி சித்தம் செய்து வைத்திருக்கும் துருசுக் கட்டியை வைத்து, அதன்மேல் மறுபங்கு கருவங்கச் சுண்ணத் தைப் போட்டு மேல் அகல்மூடி 5 சீலைமண் செய்து நன்றாய் உலர வைத்துக் கருவங்கத்தை மணல் மறைவில் போட்டது போலவே இருபக்கமும் திருப்பி திருப்பிப் புடம் போட்டுத் தீயையும் அங்குச் செய்தது போலவே ஒவ்வொரு சாமம் போட்டுப் பாகப்படிகை முறையாய் எடுக்கின் கடவுளின் அருளால் துருசானது சுண்ண மாகி இருக்கும் இதனை உடனே எடுத்து, கற்காரக்குள்ள ஒரு குப்பியில் போட்டு மூடியிட்டு பத்திரப்படுத்த வேண்டியது இவ்விதம் செய்யாவிடின் காரம் போக ஏதுவாகும்.

செய்முறை :—முதல் எண்படி சித்தப்படுத்தின இலிங்கம் வராகன் எடை ஒன்று, இரண்டாம் எண்ணின்படி சித்தப் படுத்தின வெள்ளைப் பாடாணம் ஒரு வராகன் எடை மூன்றும் எண்ணின்படி சித்தப்படுத்தின அரிதாரம் $\frac{1}{2}$ வராகன் எடை, நாலாம் எண்ணின்படி சித்தப்படுத்தின கந்தகம் $\frac{1}{8}$ வராகன் எடை, ஒன்பதாம் எண்ணின்படி சித்தப்படுத்தின துருசுச் சுண்ணம் $\frac{1}{4}$ வராகன் எடை, வாலைரசம் $\frac{1}{4}$ வராகன் எடை, முதல் பாகத்தில் சொல்லி இருக்கிற வகைகளில் ஒரு வகையாய்ச் செய்து எடுத்த நவச்சாரப் பதங்கம் $\frac{1}{4}$ வராகன் எடை.

(அ) இந்த ஏழு சரக்குகளையும் நன்னிக் கல்வத்திலிட்டு மெது வாய்ப் பொடித்து ஒரு பலம் நாயுருவி உப்புச் செயநீரைத் தனியே

ஒரு பாண்டத்தில் வைத்துக் கொண்டு சிறுகச் சிறுக வார்த்து அரைத்து அந்தச் செயநீரெல்லாம் சென்ற பின்பு சிறு வில்லையாய் செய்து வெய்யிலில் உலர்த்தி சிறு அகல் வைத்து மேல் அகல் மூடி மூன்று சீலைமண் செய்து உலர்த்தி ஒரு பலம் விராட்டியைத் தூள் செய்து அதன் மத்தியில் வைத்துப் புடமிட வேண்டும். குளிர ஆறினவுடன், இன்னொரு பலம் விராட்டித் தூளில் முன் போலவே புடமிட வேண்டும். மூன்றும் தடவையும் இவ்விதமே புடமிட்டு எடுத்துக் கொள்ளவேண்டும்.

(ஆ) முன்கவசத்தைப் பிரித்து வில்லையைக் கல்வத்தில் பொடித்து, திறமானதும், அப்பட்டமானதுமான ஒரு பலம் கடலைப்புளிப்பைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்து, அந்த நீரெல்லாம் சென்றபின் சிறுவில்லையாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி முன்போலவே சிறு அகலில் வைத்து மேல் அகல் மூடி மூன்று சீலைமண் செய்து ஒரு பலம் விராட்டித்தூளில் புடமிட வேண்டும். இக்கவசத்தைப் பிரிக்காமலே இரண்டாம் தடவை யும் ஒரு பலம் விராட்டியிலேயே புடமிட வேண்டும். அவ்விதமே மூன்றும் தடவையும் புடமிட்டு எடுத்துக் கொள்ளவேண்டும்.

(இ) வெள்ளெருக்கம்பால் $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்), ஒன்பதாம் எண்படி செய்யப்பட்ட துருசுச் சுண்ணம் $\frac{1}{2}$ வராகன் எடை மேற்படி பாலில் இந்தச் சுண்ணத்தைப் போட்டுக் கலக்கி வைத்தால் அந்தப் பாலானது தெளிந்து நீராகி இருக்கும். இதற்கு **எருக்கம்பால் தெளிநீர்** எனப் பெயர்.

முன் கவசத்தைப் பிரித்து வில்லையைக் கல்வத்தில் பொடித்து முன் எருக்கம்பால் தெளிநீரைச் சிறுகச் சிறுக விட்ட ரைத்து அந்த நீர் எல்லாம் சென்ற பின் சிறு வில்லையாய்ச் செய்து வெய்யிலில் உலர்த்தி எடுத்து அகலில் வைத்து மேல் அகல் மூடி 3 சீலைமண் செய்து உலர்த்தி $19\frac{1}{4}$ வராகன் எடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின்பு எடுத்து, கவசத்தைப் பிரிக்காமல் அப்படியே இரண்டாம் தடவையும் $19\frac{1}{4}$ வராகன் எடைவிராட்டியில் புடமிட்டுக் குளிர ஆறினபின் எடுத்துக் கவசத்தைப் பிரிக்காமல் அப்படியே மூன்றும் தடவை $22\frac{3}{4}$ வராகன் எடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின்பு எடுத்துக் கொள்ளவேண்டும்.

(ஈ) கொம்புக்கள்ளிப்பால் $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்), இதில் ஒன்பதாம் எண்ணில் சொன்னபடி சித்தப்படுத்தின $\frac{1}{2}$ வராகன் எடை துருசுச் சுண்ணத்தைப் போட்டு, கலக்கிச் சற்றுநேரம் வைக்க, அந்தப் பாலானது தெளிந்து நீராகிவிடும். இதற்குக் **கள்ளிப்பால் தெளிநீர்** எனப் பெயர்.

மேற்படி கவசத்தைப் பிரித்து வில்லையைக் கல்வத்தில் இட்டு பொடித்து மேற்படி கள்ளிப்பால் தெளிநீரைச் சிறுகச்சிறுக வார்த்து அரைக்கவேண்டும். இந்த நீர் எல்லாம் சென்றபின்பு சிறு வில்லையாய்ச் செய்து வெய்யிலில்உலர்த்தி சிறு அகலில் வைத்து மேல் அகல்மூடி, மூன்று சீலமண் செய்து உலர்த்தி 3 பலமுள்ள விராட்டியில் புடமிட்டு ஆறவிட்டெடுத்து, கவசத்தைப் பிரிக்காமல் அப்படியே இரண்டாம் தடவை 3 பலம் முள்ள (105 கிராம்) விராட்டியில் புடமிட்டு எடுத்து மூன்றும் தடவையும் கவசத்தை பிரிக்காமல் அப்படியே வைத்து 9 பலம் (315 கிராம்) விராட்டியில் புடமிட்டு ஆறின பின்பு எடுத்துக் கவசத்தைப் பிரித்து மருந்தை எடுத்துப் பொடித்துப் பளிங்குக் குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும்.

இவ்வருமையான மருந்தானது பித்தளையைத் தூய்மை செய்வது மட்டுமன்றி வேறு அனேக முறைகளுக்கும் உபயோகமாகிறது. இதன் முறைகளைத் திறவுகோலில் எழுதலாம்.

**தெளிவுறுத்தல் :—** மேற்கண்ட புடங்களெல்லாம் மருந்தை வெதுப்பத் தக்கதாய் இருக்க வேண்டும். ஆகையால், மருந்து வில்லை காய்ந்தவுடன் அதை நிறுத்த அந்த எடையைக் குறித்துக்கொண்டு அந்தப்புடம் தீர்ந்த பின்பும் அந்த மருந்தை நிறுத்துக்கொள்ள வேண்டும். மருந்தானது முன் வைத்த எடைக்குக் குறையலாகாது. இரண்டு அல்லது மூன்று குன்றி மணி எடை குறையின் பாதகமில்லை, அதிகம் குறைந்ததானுல் தீயதிகரித்து மருந்து தீய்ந்துவிட்டது என நிதானித்துக் கொள்ள வேண்டும். ஆகையால், இந்தப் புடம் போடும்போதெல்லாம் தீயைப்பற்றி அதிகம் கவனிக்க வேண்டியது. தீயானது கொஞ்சம் குறைந்தாலும் பாதகம் இல்லை. மறுபடியும் ஒருதடவை போட்டுக்கொள்ளலாம். இந்த விவகாரத்தை மிகுந்த கூர்மையாய் அனுபவ சித்தத்துடன் தெளிந்து தெரிந்து கொள்ள வேண்டும். காற்றுள்ள இடத்தில் புடமிடல் ஆகாது. இதற்கு மனத்தூய்மையும் தெய்வ பக்தியும் அவசியமாகும்.

அண்டக் குரு இந்த அரிய சுண்ணமானது குருமுறைகள் என்னும் தலைப்பில் நியாயமாய் எழுதப்பட வேண்டியது; ஆனுல், குடவன் சம்பந்தமாகவும் இது வேறு பலவிதமாகவும், உபயோகப்படுத்தப்படுகின்றபடியால் இதனை இங்கு எழுதுவது ஏற்புடையதாய்க் காணப்பட்டது.

## அண்டக் குரு

(1) அரைப்படி கறியுப்பென்னும் சோற்று உப்பில் மூன்று படி ஆற்று நீரைவிட்டுக் கரைத்து, இரண்டுமணி நேரம் வைத்திருந்து, அதன் தெளிவைக் கைபாகமாய் இறுத்துக்கொள்ள வேண்டும்.

இந்தத் தெளிவில் இரண்டு வீசை குஞ்சு பொறிக்கப்பெற்ற கோழி முட்டை ஓடுகளைப்போட்டு ஒரு பகல், ஓர் இரவு என்னும் (ஒரு நாள் = அறுபது நாழிகை) முழுவதும் ஊறவைத்து மறுநாள் காலையில் அடுப்பிலேற்றி நன்றாய்க் கொதிக்க வைத்து, இறக்கி ஆற வைத்துக் குளிர ஆறினபின்பு, ஓடுகளிலுள்ள உள் சவ்வை நீக்கி, நீரைவிட்டு நன்றாய்க் கழுவி தூய்மை செய்து வெய்யிலில் உலர்த்தி ஒரு குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும். இவ்விதம், தூய்மை செய்து எடுக்கப்பட்ட அண்ட ஓட்டிற்கு, தூய்மை அண்டமென பெயர்.

அ (2) எண் (1) இல் சொன்ன தூய்மை அண்டம் 40 பலம் (1400 கிராம்), இதனைக் கையால் கவனத்துடன் நொறுக்கி கல்வத்திலிட்டுப் பொடித்து, இரண்டு கோழி முட்டைகளின் வெள்ளை அம்பிலியை மாத்திரம் சிறுகச்சிறுக விட்டு மைபோல அரைத்து மெல்லிய வில்லைகளாகச் செய்து பீங்கான் பாண்டத்தில் வைத்து வெய்யிலில் உலர்த்த வேண்டும். ஈரமில்லாமல் நன்றாய் உலர்ந்த பின்பு, கல்வத்தில் பொடித்து, ஒரு பெரிய மூசையில் போட்டு, மூசை வாய்க்குச் சில்லிட்டு, வாய்சந்திற்கு மட்டும் ஏழு சீலைமண்செய்து வெய்யிலில் சுத்தமாய் உலர வைத்து, கொல்லன் உலையில் வைத்து இரண்டு துருத்திகளால் கைவிடாமல் ஊத வேண்டும். இவ்விதம், ஊதும்போது மூசையை அடிக்கொரு தடவை திருப்பித் திருப்பிக் கொடுத்து வருவதுமன்றி, தகுந்தது போல மிதமாய் நாட்டுக்கரியையும் போட்டு வரவேண்டும். ஊத்தும் அதிக மெதுவாயில்லாமலும், அதிக வேகம் இல்லாமலும் மிதமாயிருக்க வேண்டும். இவ்விதம், $1\frac{1}{4}$ சாமம் அதாவது $3\frac{3}{4}$ மணிநேரம் சென்று மூசையை எடுத்துக் குளிர ஆறவைத்து மூசையின் வில்லையை நீக்கி அதில் உள்ளதைத் தனியாய் எடுத்து குப்பியில் வைத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம், செய்து எடுக்கப்பட்ட அண்டச் சுண்ணத்திற்குத் **தனி அண்டச் சுண்ணம்** எனப் பெயர்.

(3) (அ) குறிப்புள்ள தனி அண்டச் சுண்ணம் 3 பங்கு, பாகப்படுத்தின பூநீர் 5 பங்கு, பாகப்படுத்தின பனிநீர் 19 பலம் (665 கிராம்) இம்மூன்றையும் ஒன்றாய்க் கலந்து ஒரு மண்

பாண்டத்தில் போட்டு 3 நாள்கள் ஊற வைக்க வேண்டும். இம் மூன்று நாளும் நாள்தோறும் 4 அல்லது 5 தடவைகள் ஒரு மூங்கில் கம்பால் கலக்கியும் வரவேண்டும். நாலாம் நாள் கலக்காமல் விட்டு, ஐந்தாம் நாள் அதிலுள்ள தெளிவைப் பக்குவமாய் இறுத்துக் கொள்ள வேண்டும்.

எண் (1)இல் உள்ள தூய்மை அண்டத்தோல் 210 இதனை மேற்படி தெளிவில் போட்டு அடுப்பில் ஏற்றி மிதமாய்க் காய்ச்சிக் குழம்பு பதமாய் (அதாவது, இதனை ஒரு துளி எடுத்து நகத்தின் மீது வைத்துச் சற்று நேரம் தாமதித்தால், அது உறைந்துப் போகும் அதுவே குழம்பு பதமாகும்) வந்தவுடன் இறக்கிப் பீங்கான் பாண்டத்தில் போட்டு வெய்யிலில் உலர்த்த வேண்டும். இது காயும்போது அடிக்கடி கிண்டியும் கொடுக்க வேண்டும். ஈரமில்லாமல் நன்ருய் உலர்ந்த பின்பு அண்ட ஓட்டையெல்லாம் தனியே எடுத்துப் பீங்கான் பாண்டத்தில் போட்டு வாய்மூடி சந்தில்லாமல் செய்து வைக்க வேண்டும். இவ் விதம், செய்தெடுத்த அண்ட ஓட்டிற்குப் **பூநீர் அண்டம்** எனப் பெயர்.

(ஆ) எண் (3)இல் சொன்னபடி செய்து எடுத்த பூநீர் அண்டம் 5 பலம் (175 கிராம்), இதனைக் கல்வத்தில் நன்ருய்ப் பொடித்துப் பின்னர், இரண்டு கோழி முட்டைகளின் வெள்ளை அம்பிலியைச் சிறுகச் சிறுக விட்டு, மைபோல் ஆன பின்பு மெல்லிய வில்லை களாகச் செய்து பீங்கான் பாண்டத்தில் வைத்து வெய்யிலில் உலர்த்த வேண்டும். ஈரமில்லாமல் உலர்ந்த பின்பு கல்வத்தில் பொடித்து ஒரு பெரிய மூசையில் போட்டு, மூசை வாய்க்குச் சில்லிட்டு, சந்திற்கு 7 சீலைமண் செய்து வெய்யிலில் வைத்து உலர்த்தி முன்போலவே கொல்லன் உலையில் வைத்து இரண்டு துருத்திகளா முன் சொல்லி இருப்பது போலவே ஊதி எடுக்க, நேர்த்தியான சுண்ணமாகும். இதற்குப் **பூநீர் அண்டச் சுண்ணம்** எனப் பெயர்.

(4) பத்து முட்டைகளின் வெள்ளை அம்பிலியை மாத்திரம் ஒன்ருய்க் கலந்து அதில் ஒரு பலம் (35 கிராம்) எருக்கம்பாலையும் விட்டு நன்ருய்க் கலந்து கொள்ளவேண்டும். பின்பு இக் கூட்டுடன் (ஆ) குறிப்புள்ள பூநீர் அண்டச்சுண்ணத்தில் ஒரு வராகன் எடை நிறுத்து, எடுத்து, கலந்து ஒரு வெள்ளைப் புட்டியில் விட்டு அதன் வாய்க்குக் கற்காரக்கிட்டு, கடும் வெய்யிலில் 10 நாள்கள் வைக்கவேண்டும். இப் பத்து நாளும் நாள்தோறும் 3 அல்லது 4 தடவைகள் புட்டியைக் குலுக்கியும் வரவேண்டும். இவ்விதம், செய்து வருவதால், புட்டியில் உள்ள நீரானது ரோஜாப்

25

பூவைப்போலச் சிவந்த நிறமாய் ஆகிவிடும். இவ்விதம் ஆகா விட்டால் மறுபடியும் முன்போலவே 5 அல்லது 9 நாள்கள் அதிகமாய் வைக்க, அந் நிறம் உண்டாகிவிடும். இவ்விதம் செய்தெடுத்ததற்கு **அண்டநீர்** எனப் பெயர்.

(இ) படிகாரம் 1 பங்கு, வெண்காரம் 1 பங்கு, இரசகருப்பூரம் ஒரு பங்கு, எண் (3)-ல் சொன்னபடி சித்தப்படுத்தின பூநீர் அண்ட ஓடு 5 பங்கு, இந் நான்கையும் கல்வத்திலிட்டு ஒன்ருய்ச் சேர்த்து, எண் (4)ல் உள்ள அண்டநீரில் அரைபாகத்தைத் தனியே எடுத்துச் சிறுகச் சிறுக விட்டு அரைக்க வேண்டும். இது அதிக நுண்மையாகாமல் சற்று பெரும் பொடியாகவே இருக்க வேண்டும். இந்த அரைவாசி அண்டநீரும் சென்றவுடன் கொட்டைப் பாக்கு அளவுள்ள உருண்டைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்த வேண்டும். (இதற்குச் சென்ற அரைவாசி அண்டநீர் போக **மீதியாய்** உள்ள அரைவாசி நீரைப் புட்டியில் பத்திரப்படுத்தி வைக்கவேண்டும்). உருண்டைகள் ஈரமில்லாமல் உலர்ந்த பின்பு தகுந்த மூசையிலிட்டு, வாய்க்குச் சில்லிட்டு, ஏழு சீலைமண் செய்து சந்தில்லாமல் பார்த்து முன்போலவே கொல்லன் உலையில் வைத்து, $1\frac{1}{4}$ சாமம் ஊதி எடுத்து, 1 நாள் ஆறவிட்டு எடுக்கச் சுண்ணமாகி இருக்கும். இதனைப் புட்டியில் பத்திரப் படுத்தவேண்டும். இவ்விதம், சித்தம் செய்யப்பட்ட சுண்ணத் திற்குக் **காரச் சுண்ணம்** என்பது பெயர்.

(5) (இ) குறிப்புள்ள காரச்சுண்ணம் 1 பங்கு, நவச்சாரப் பதங்கம் அல்லது கட்டின நவச்சாரம் ஒரு பங்கு, இவ்விரண் டையும் கல்வத்திலிட்டு, ஒரு மணிநேரம் அரைக்க நைப்புண் டாகும். இதனைப் பீங்கான் பாண்டத்தில் வைத்துப் பாகப்படி பனியில் வைக்க செயநீராகும். இந்தச் செயநீரைக் கவனத்துடன் சேர்த்துப் பீங்கான் பாண்டத்தில் வார்த்து வெய்யிலில் வைத்து உலர்த்த உப்பாகும். இந்த உப்பைக் குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும். இவ்விதம், செய்து எடுப்பதற்குச் **செயநீருப்பு** என்பது பெயர்.

(ஈ) மேற்படி செயநீருப்பு $\frac{1}{4}$ பங்கு, வெடியுப்பு ஒரு பங்கு, பூநீர் அண்டம் $5\frac{1}{4}$ பங்கு, வீரம் $\frac{1}{4}$ பங்கு இவற்றை எல்லாம் கல்வத்தி லிட்டுப் பொடித்து எடுத்து முன்னே எடுத்திருக்கும் அண்டநீரைச் சிறுகச் சிறுக வார்த்து அரைத்து அந்த நீர் எல்லாம் சென்ற பின்பு சிறு வில்லைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி, ஈரம் இல்லாமல் நன்ருய் உலர்ந்த பின்பு மூசையில் இட்டு வாய்க்குச் சில்லிட்டு, 7 சீலைமண் செய்து சந்தில்லாமல் பார்த்துச் செய்து

வெய்யிலில் உலர்த்தி முன்போலவே உலையில் வைத்து, $1\frac{1}{4}$ சாமம் ஊதி ஒரு நாள் ஆற விட்டு எடுக்கச் சுண்ணமாகும். இந்தச் சுண்ணத்திற்கு **வெடியுப்புச் சுண்ணம்** என்பது பெயர்.

(6) ஐந்து கோழி முட்டையின் வெள்ளை அம்பிலியை ஒன்றாய்ச் சேர்த்துக் கலந்து அதில் அரைப்பலம் எருக்கம்பாலையும் சேர்த்து மறுபடியும் கலந்து பின்பு, 1 வராகன் எடை (ஈ) குறிப்புள்ள வெடி சுண்ணத்தைப்போட்டுக் கலக்கி, ஒரு புட்டியில் விட்டு எண் (4)ல் சொன்னதுபோல் வெய்யிலில் உலர்த்திப் பாகப்படுத்த ஒருவித செய நீராகும். இதற்குப் பராஸியில் (மாயியே ஷஹ்வார்) – **இராச கெம்பீர செயநீர்** என்பது பெயர்.

(உ) இரசகருப்பூரம் ஒரு பங்கு, எண் (3)இல் உள்ள பூநீர் அண்டம் 4 பங்கு இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்து, எண் (6)ல் உள்ள இராச கம்பீர செயநீரைவிட்டு, ஒரு சாமம் அரைத்து சிறு வில்லைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி, ஈரமில்லாமல் உலர்ந்த பின்பு தகுந்த மூசையில் இட்டு வாய்க்குச் சில்லிட்டு, ஏழு சீலைமண் செய்து சந்தில்லாமல் பார்த்து வெய்யிலில் உலர்த்திக் கொல்லன் உலையில் வைத்து முன்போலவே ஊதி எடுத்து ஆறவைத்து எடுக்கச் சுண்ணமாகி இருக்கும். இதற்கு **இரசகருப்பூரச் சுண்ணம்** என்பது பெயர்.

(7) ஐந்து கோழி முட்டைகளின் வெள்ளை அம்பிலியை ஒன்றாய்க் கலந்து, அதில் அரைப் பலம் எருக்கம்பாலையும் கூடக் கலந்து அதில், ஒரு வராகன் எடை (உ) குறிப்புள்ள இரசகருப்பூரச் சுண்ணத்தைப் போட்டுக் கலக்கி முன்போலவே புட்டியில் இட்டு மூடியிட்டு 15 நாள் வெய்யிலில் வைத்துப் பாகப்படுத்த ஒருவிதம் ஆகும். இந்த நீரிற்கு **இரசகருப்பூர நீர்** என்பது பெயர்.

(ஊ) எண் (3)இல் உள்ள பூநீர் அண்டம் 10 பலம் (350 கிராம்). இதனைக் கல்வத்தில் இட்டுப் பொடித்து எண் (7)இல் உள்ள இரசகருப்பூர நீரை விட்டு வெண்ணெய் போல அரைத்து, சிறு வில்லைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி ஈரமில்லாமல் உலர்ந்த பின்னர் மூசையிலிட்டு வாய்க்குச் சில்லிட்டு, ஏழு சீலைமண் செய்து சந்தில்லாமல் பார்த்து வெய்யிலில் உலர்த்தி முன்போலவே உலையில் வைத்து $1\frac{1}{4}$ சாமம் ஊதி எடுத்து ஒரு நாள் ஆற வைத்து மறு நாள் எடுத்தால் சுண்ணமாய் இருக்கும். இதனைக் குப்பியில் பத்திரப்படுத்தவும். இதற்குக் **கருப்பூர அண்டச் சுண்ணம்** என்பது பெயர்.

(8) (ஊ) குறிப்புள்ள கருப்பூர அண்டச் சுண்ணம் 9 பலம் (315 கிராம்) பாகப்படுத்தின நவச்சாரம் 9, பலம் (315 கிராம்) இவ்விரண்டையும் கல்வத்தில் பொடித்து, ஒரு வகை திரவத்தையும் விடாமலே, இரண்டையும் மாத்திரம் சேர்த்து 2 சாமநேரம் கை விடாமல் அரைத்து வர, அவை இரண்டும் நைப்பாகி சேறு போலாகும். ஒரு மூசையை நெருப்பில் காய்ச்சிச் சிவக்கச் சுட்டு நன்றாய்க் குளிர ஆறின பின்பு, அதில் முன் மருந்தை வழித்துப் போட்டு வாய்க்குச் சில்லிட்டு ஏழு சீலமண் செய்து சந்தில்லாமல் பார்த்து உலர்த்தி, அரைகெசம் புடம் போட்டு ஒரு நாள் ஆறவிட்டு எடுக்க எல்லாம் சுண்ணமாகி இருக்கும் இதனைப் பாகப்படி பீங்கானில் வைத்துப் பனியில் வைக்கச் செய நீராகும். செயநீர் எல்லாம் வைத்தவுடனே நீராகி விடாது. ஆனால், படிப்படியாகக் கொஞ்சம் கொஞ்சமாய்க் கசிந்து கொண்டிருக்கையில், நாமும் படிப்படியாக அன்றாடம் கசிந்ததை எல்லாம் சேர்த்து முடிவில் எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கொள்ள வேண்டியது. இவ்விதமே, மேற்கண்ட செயநீரையும் அன்றாடம் சேர்வதை எல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துக் கொள்ள வேண்டியது. இதனால், அனேக தொந்தங்கள் ஏற்றக் கூடுமாகையால், இதனை இலேசாய் எண்ணாமல், இதனைச் சித்தப்படுத்தும் போதும் அதிக கவனத்தோடு செய்தும், இதனைத் தயாரித்த பின்பும் அதிக விழிப்புடன் காப்பாற்றவும் வேண்டியது. இவ்விதம், சித்தப்படுத்தப்பட்ட செயநீரைச் **சாரநீர்** எனச் சொல்வர்.

(9) கோது, கொட்டை முதலியவை நீக்கப்பட்ட பழம்புளி 8பலம் (580 கிராம்), கம்பி வெடிஉப்பு 10 பலம் (350 கிராம்), நவச்சாரம் 1 பலம் (35 கிராம்), எண் (3)ல் சொன்ன பூநீர் அண்டம் 1 பலம் (35 கிராம்), படிகாரம் ஒரு பலம் இந் நான்கையும் கல்வத்தில் இட்டு மைபோலப் பொடித்து, கல்லு உரலில் இட்டு இடிக்க மெழுகாகும். இதனைச் சிறு கழற்காய் அளவு உருண்டைகள் செய்து, அயச் சட்டியை அடுப்பில் வைத்துச் சிவக்கக் காய்ச்சி ஒரு உருண்டையைப் போடவேண்டும். இவ்விதம், எல்லா உருண்டைகளையும் ஒவ்வொன்றாய்ப் போட்டு எல்லாம் சுண்ணமான பின்பு எடுத்துப் பீங்கான் பாத்திரத்தில் பாகப்படி வைத்துப் பனியில் வைத்துப் பக்குவமாய்ச் செய நீராக்கிக் கொள்ளவேண்டும். இந்தச் செயநீருக்கு **அந்தரங்கச் செயநீர்** என்றுபெயர்.

(10) எண் 8-ல் சொல்லி இருக்கிறபடி சித்தப்படுத்தின சாரநீர் 28 வராகன் எடை, எண் 9-ல் சொல்லப்பட்டு இருக்கிற

அந்தரங்க நீர் வராகன் எடை 28, இவ்விரண்டையும் ஒரு குப்பியில் விட்டு குலுக்கத் தயிர் போலாகும். இவ்விதம், குலுக்கித் தயிரானதைச் சரியான இரண்டு பங்காய் பாகப்படுத்தி, இரண்டு தட்டைப் பீங்கான்களில் விட்டு ஒரு பீங்கானில் 29 வராகன் எடை வீரத்தைத் தூள் செய்து போடவேண்டும். மற்றொரு பீங்கானில் 29 வராகன் எடை இரசகருப்பூரத்தைத் தூள் செய்து போடவேண்டும். பின்பு, இவ்விரண்டு பீங்கான்களையும் தனித்தனியே வெய்யிலில் வைத்து உலர்த்த உப்பாம். ஒவ்வொன்றையும் தனித்தனி குப்பியில் வைத்துக் கொள்ள வேண்டும். இதற்கு முறையே வீரம் சேர்ந்ததற்கு வீர உப்பென்றும், இரச கருப்பூரம் சேர்ந்ததற்குப் பூர உப்பென்றும் பெயர்.

(எ) மேற்படி வீரஉப்பு $1\frac{1}{4}$ வராகன் எடை மேற்படி பூரவுப்பு $1\frac{1}{4}$ வராகன் எடை எண் 3ல் சொல்லப்பட்டு இருக்கிற பூநீர் அண்டம் 3 வராகன் எடை, இம்மூன்று வகைகளையும் கல்வத்தி லிட்டு, உமிழ்நீரை விட்டு, 2 சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி; முன் சொல்லி இருக்கிறபடி மூசையில் வைத்து மூசை வாய்க்குச் சில்விட்டுச் சந்து பந்தனம் செய்து உலர்த்தி, முன் மாதிரியே உலையில் வைத்து, ஊதி ஆற வைத்து எடுக்கக் கடவுளின் அருளால் கடுங்காரச் சுண்ணமாய் இருக்கும். இதுவே அண்டகுருச் சுண்ணம் ஆகும்.

இதனால், அனேக தொந்தங்கள் ஏற்றக்கூடும்; குடவன் வேலையில் இது பிரதானமாய் உபயோகப்படுத்தப்படுகிறபடியால் இவ் வகுப்பில் சேர்க்கப்பட்டது. இது ஞாயமாய்க் குருமுறை வகைகளில் சேர்க்கப்பட வேண்டியது. இந்த முறையானது வெகு இரகசியமாகவும், பத்திரமாகவும் வைக்கப்பட்டிருந்தது. மேலும், இது பல வகையாய் மாறு மொழியாகவும் எழுதப்பட்டிருந்தது. ஆயினும், கடவுளின் அருளால் பெரியோர்களின் வாழ்த்தினாலும் அம்மாற்றுமொழிகளையும், அம்மறைப்புகளையும் கண்டு தெளிந்து உலகோர்க்கு உதவும் நோக்குடனும், உயிர்களிடம் உள்ள அருள் தன்மை காரணமாகவும் வெளிப்படுத்தப்பட்டது. இதனை அனுபவமாய்ச் செய்தவர்களையும் இன்றும் காணலாம். இந்தப் பாகத்தை எழுத அவர்களுடைய சகாயமும் தேவையாய் இருந்தது. அவர்களும் நல்ல நோக்கத்துடனும், நல்ல எண்ணத் துடனும் உதவி செய்ததற்காக, அடியேனும் நன்றி உள்ளவனாய் இருப்பதுடனும், உலகத்தாரும் நன்றி உள்ளவர்களாக இருப்பார் களாகவும் சிந்திக்கிறேன். ஆமீன்.

குறிப்பு:— இதுவரையில் நாம் தாமிர தூய்மைகளுள் பலவற்றைச் சொன்னோம். இவற்றுள் அனேகம் புது மாணுக்கர்களுக்கும், அனேகம் முது மாணுக்கர்களுக்கும் உபயோகமாகும். இன்னம், இவை வாதம், வைத்தியம் என்ற இருவகைகளுக்கும் போதுமானவைகள் ஆகையால், இதனை அதிகம் எழுதுவதானல் இச் சிறு நூல் அதிக விரிவெய்துவிடும். ஆகையாலும், இதுவரையில் நிறுத்தப்பட்டது. இனி வெள்ளி முதலியவைகளின் தூய்மை முறைகள் முதலிய வெள்ளி சம்பந்தமான பலவற்றை எழுதுவோம்.

## வெள்ளி

அந்தமான விலை உயர்ந்த இந்த உலோகமானது பூர்வீகம் தொடுத்தே வழங்கப்பட்டு வருகிறது. இது பிறவிச் சரக்கு; ஆனல், சிலசமயம் கந்தகம், ஈயம், பொன், செம்பு முதலியவைகளோடும் கலந்திருக்கும். இந்தக் கலப்பான உலோகங்களிலிருந்து இது பெரும்பாலும் இரசத்தின் மூலமாய்ப் பிரித்தெடுக்கப்படுகிறது.

வெள்ளியின் நிறம் வெண்மை. ஆனல், அதில் கொஞ்சம் சிவப்பு நிறம் உண்டு. அது இலகுவாய்க் கண்ணிற்குப் புலப்படாது. இது அதிக மிருதுத்துவமும், நைப்பும் உடையதாகையால், மிகவும் அச்சமான கம்பியாகவும், ரேக்காகவும் தட்டலாம். மெல்லிய கம்பியாகவும் நீட்டலாம். வெள்ளியானது தாமிரத்தைப் பார்க்கிலும் அதிக மிருதுவானதும் சீக்கிரம், உருகத் தக்கதுமாகும். இதற்கு 251—1023 டிகிரி சூடு வேண்டும். மின் வாங்குவதிலும், சூடு வாங்குவதிலும் இது ஒப்பற்றது. இதற்கு மாற்றைச் சேர்க்காமல் தனியாய் எவ்வளவு தீயிட்டு எரித்தாலும் செந்தூரிப்பது இல்லை. இது உருகும்போது பிராணவாயுவை இழுத்துக் கொள்வதும், ஆறினவுடனே அந்த வாயுவை விட்டுவிடுவதும் இதன் முக்கிய இயல்பாகும். இது கந்தகத்தை அதிகமாய் இழுத்துக் கொள்ளும். ஆகையால் தான், இது காற்றில் கெடா விட்டாலும் கொஞ்சம் கறுத்துவிடுகிறது. ஏனெனில், காற்றிலுள்ள கந்தகச்சத்தை இழுத்துக் கொள்வதே காரணமாகும். வெள்ளியைக் கரைப்பதற்கு வெடி உப்புத் திராவகமே மிகவும் உபயோகமானது. கந்தகத் திராவகத்தில் வெள்ளியைப் போட்டுக் காய்ச்சுவதாலும் அது கரைந்து போகும்.

வெள்ளியானது அரிதாய்த் தனியாய்ப் பயன்படுத்தப்படுகிறது. இது அதிக மிருதுவாய் இருப்பதால் சீக்கிரம் தேய்ந்து போகிறது. ஆகையால், இதனுடன் நூற்றிற்கு 7½ அல்லது 10

பங்கு தாமிரத்தைச் சேர்த்து நாணயமாகவும், தட்டுமுட்டுச் சாமான்களாகவும் செய்யப்படுகிறது. தாமிரத்தை வெள்ளை யாக்கி, மேற்கண்ட அளவைப் பார்க்கிலும் அதிகமாய்த் தாமிரத்தைச் சேர்க்கப்படுகிறது. சுத்த வெள்ளியில் தாமிரத் தைச் சேர்த்து மாற்றுக் குறைக்கப்பட்டதற்கு எல்லாம் மட்ட வெள்ளி அல்லது வாத வெள்ளி என்றுபெயர். வாத வெள்ளி முறைகள் பல பின்னெழுதுவோம். ஆகையால், இதனை மருந் தாகப் பயன்படுத்தும்போது இதனைத் தூய்மை செய்ய வேண்டியது அவசியம் என்பது விளங்கும்.

வெள்ளியின் இயல்பு (தமிழ் மொழி). இதன் பண்பு முதல் தர குளிர்ச்சியும் வறட்சியுமாம். குதூகலப்பத்துவதில் இரத்தினத் திற்குச் சார்வானது என்று சொல்லலாம். பைத்தியம், உன்மத்தம், மனக்கலக்கம் முதலியவைகளை நீக்கும், இதனை கண் பொடியாகச் செய்து வெள்ளிச் சலாகையால் கண்ணிலிட்டுவர இலேசான கண் பூக்கள் தீரும். கண்பார்வையைப் பலப்படுத்தும், வாய் நாற்றம், வாயிலிருந்து அசுத்தநீர் வடிதல் முதலிய நீர்களைத் தடுக்கும். இருமல் கடின சுவாசம், மார்புதுடித்தல், மனக்கலக்கம் முதலிய இருதய நோய்களைத் தீர்க்கும். இன்னும், இரைப்பை, ஈரல் என்ற இவற்றைப் பலப்படுத்தும், உடலிலுள்ள தீய நீர்களை வறட்டும். ஆகையால், பாண்டு, சுரக்கட்டி, நீர்க்குண்டிக்காய்களில் கல்லுண்டாதல், நீர்ப்பையில் கல்லுண்டாதல், நீர்க்கட்டு முதலிய வைகளைக் குணப்படுத்தும். இரச பற்பத்துடனே வெள்ளிப் பொடி யைச் சேர்த்துப் பக்குவப்படுத்தி மூல முளையின்மீது பூசி வருவ தால் அது கரைந்துபோகும். சொறி, சிரங்கு, புண் முதலியவை களும் இதனை மேற்பூசுவதால் குணமாகும். மேலும், இதனை மேற் பூசுவதால் உடம்பின் மீதுள்ள வீக்கம் முதலியவை குணமாகும். (தீய குணம்) இது சிறுகுடலுக்கு ஆகாது, (பரிகாரம்) வாதுமைப் பிசின் (அளவு) $3\frac{1}{3}$ குன்றிமணி எடை முதல், $\frac{1}{2}$ வராகன் எடை வரையில் பயன்படுத்தலாம்.

வெள்ளியை உண்கலமாய் உபயோகித்து வருவதால் மனக் களிப்பு முதலியவை உண்டாகும். வெள்ளி பாண்டத்தில் மது பானத்தை வைத்து பானம் செய்வதால் அதி விரைவில் மயக்கம் உண்டாகும்.

(வட மொழி) புராணசுரம், சொறி, சிரங்கு, பெருநஞ்சு, மேக வாயுவு, பைத்திய நோய், விழிநோய்கள், கோழைவிழுதல். இருமல், மார்புச்சளி, சயநோய், எண்வகை வயிற்றுப்புண் (அட்ட குன்மம்), வாதகோபம், கிரந்தி, நீர்க்கோவை, ஒழுக்கு, வெள்ளை, குருதிக்கழிச்சல், முதலிய நோய்கள் தீரும்.

வெள்ளி உண்கலத்தில் அன்னபானுதிகளை உபயோகித்து வருவதால் சிலேத்தும கோபம், பித்தகோபம் என்னும் இவை நீங்குவதும் இன்றி அழகு, மனமகிழ்ச்சி முதலியவை உண்டாகும்.

(ஆங்கிலம்) செரியாமை நோய், குன்மம், குலையெரிவு, பெரும்பாடு, இரத்தம் கக்கல், குழந்தைகளுக்கு ஏற்படுகிற நாட்பட்ட கழிச்சல், வெள்ளை, தந்திமேகம், முதலியவைகளை நீக்கும்.

குறிப்பு:—வெள்ளியானது வைத்திய சம்பந்தமாக எவ்வளவு உபயோகமானது என்பது மேற்சொல்லப்பட்டவைகளால் நன்கு விளங்கும்.

## வெள்ளித் தூய்மை

இது பலவகைகளாயினும், இவ்வகைகளில் முக்கியமானதும், நிச்சயமானதும், உயர்வானதும்தாம் பின்வருகிறவைகளாகும்.

வெள்ளியின் தரத்திற்குத் தகுந்தபடி, எடைக்கு எடை அல்லது ஒன்றிற்கரை கருவங்கத்தை, வெள்ளியை உருக்கி அதில் கொடுத்து, சரவுலையால் ஊதி, சேர்த்த வங்கத்தைப் போக்கிப் பின்பு ஆறவைத்து, செங்கல் பொடியும், உப்பும் சேர்த்து அகலில் வைத்து, அதற்குள் முன்னூதின வெள்ளியை வைத்துத் தகுந்த விதமாகப் புடமிட்டு எடுத்து, உருக்கிக் கொள்வதே ஆகும். இவ்விதம், செய்வதால் வெள்ளியில் கலக்கப்பட்டிருக்கும் தாமிரம், வங்கம் முதலியவைகளெல்லாம் நீங்கித் தூய்மையாகி விடும்.

இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட வெள்ளியைப் பற்பம், செந்தூரம் முதலியவைகளாகச் செய்யின் சிறப்பான குணத்தைக் கொடுக்கும். அனேக நோய்களும் தீரும். மேலும், இவ்வகை வெள்ளியை மட்டப் பொன், அல்லது வாதப்பொன் செய்வதற்காகத் தங்கத்துடன் சேர்க்கப்படுகிறது. இன்னும், இயற்கை வெள்ளியைப்போல், செயற்கை வெள்ளியும் செய்யலாம். இவ்வகை முறைகளுள் பல பின்னர் எழுதப்படும். வெள்ளியைத் தூய்மை செய்யும் வேறு சில முறைகளையும் இங்கே எழுதுவோம்.

## வெள்ளித் தூய்மை (வேறு)

வெள்ளியைப் புளியிலைக் கன்முள்ள தகடாய்த் தட்டிக் கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சிப் பழுபாகற் கிழங்குச் சாற்றில் தோய்க்க வேண்டும். இவ்விதம், அத்தகட்டை 7 தடவைகள் மடக்கி மடக்கி மேற்கண்ட சாற்றில் தோய்க்க வெள்ளி தூய்மையாகும்.

## வெள்ளித் தூய்மை (வேறு)

வெள்ளியை உராவிப் பொடி செய்து, ஒரு இரும்பு சட்டியில் போட்டு, அதற்குச் சம எடை உப்புத் தூளையும் சேர்த்து வெள்ளிப் பொடிக்குத் தகுந்தவிதமாய்த் தண்ணீரையும் சேர்த்து, அடுப்பில் ஏற்றிக் காடாக்கினியாய் 1 அல்லது 2 சாமம் எரித்துத் தண்ணீர் சுண்டினவுடன் கொஞ்சம் நெல்லிக்காய்க் கந்தகத் தூளைச் சுருக்கிட்டுவர வெள்ளிப்பொடி எல்லாம் பற்பம்போல் ஆகிவிடும். பின்பு இதனைக் கல்வத்திலிட்டு தண்ணீர்விட்டு அரைத்துப் பக்குவமாய்க் கழுவி; அதிலுள்ள உப்பு முதலியவை களைப் போக்கி, வெய்யிலில் வைத்து உலர்த்தி எடுத்துக்கொள்ள வேண்டும். இதனைக் கவனத்தோடு கழுவாவிட்டால், வெள்ளிப் பொடியும் சேதமாகிவிடும். மேற்கண்ட விதமாய்த் தூய்மைச் செய்யப்பட்ட வெள்ளியைப் பற்பமாக, அல்லது செந்தூரமாகச் செய்து உபயோகித்தால் மிகவும் மேலானதாய் இருக்கும்.

## வெள்ளித் தூய்மை (வேறு)

பச்சை மிளகாய், முள்ளங்கிக் கிழங்கு, தோலுரித்த பூண்டு, பிரண்டை, சதகுப்பைக்கீரை இவ்வைந்தையும், அல்லது இவற்றுள் கிடைத்தவைகளைச் சமமாய் எடுத்து அரைத்துப் பசுமாட்டின் மூத்திரத்தில் அல்லது கழுதை மூத்திரத்தில் கரைத்து, புளியிலைக் கனமான வெள்ளித் தகட்டைக் கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சித் தோய்க்கவேண்டும். நன்ருய்க் குளிர ஆறினபின்பு, முன் போலவே மறுபடியும் காய்ச்சித் தோய்க்கவேண்டும். இவ்விதம், அந்தத் தகட்டையே மடக்கி மடக்கி 7 தடவைகள் காய்ச்சித் தோய்த்துக்கொள்ளவும். இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட வெள்ளியைப் பாகப்படி பற்பம், செந்தூரம் செய்துகொண்டால் மேலானதாய் இருக்கும்.

**குறிப்பு** :—வெள்ளியில் தாமிரக் கலப்பிருந்தால், அதை வங்கம் கொடுத்து ஊதியே தூய்மை செய்யவேண்டும். வெள்ளி யானது தாமிரக் கலப்பின்றி இருந்தால், அதனை மேற்கண்ட பாகங்களில் ஒரு வகையாய்ச் செய்து, மருந்துகளில் உபயோகிக்க வேண்டும். ஆனல், வாதமுறைக்காகப் பின்காணும் விதமாய், வெள்ளியினைப் பாகப்படுத்தி உபயோகித்துக் கொண்டால் உயர்வாய் இருக்கும்.

## இரசித வண்ணத் தைலம்

இலிங்கம், இரசகர்ப்பூரம், சவ்வீரம், நெல்லிக்காய்க் கந்தகம், இரசம், கௌரி, மனேசிலை, தானகம், மிர்தார்சிங்கி, வெள்ளைப்

பாடாணம், துருசு இப்பதினொன்றும் வகைக்கு ஒரு வராகன் எடை தூய்மை செய்யப்பட்ட நேர்வாளப் பருப்பு 11 வராகன் எடை, பசுவின் நெய் 8 கிராம் முதற்பாகத்தில் சொல்லப் பட்டிருப்பதுபோலச் சித்தப்படுத்தப்பட்ட சீமைத் திராட்சைக் காடி செல்லத்தக்க அளவு.

செய்முறை :—(அ) மேற்கண்டவைகளுள் முன் பதினொன்றை யும் கல்வத்தில் இட்டு மைப்போலப் பொடித்துத் தனியே எடுத்து வைத்துக் கொள்ளவேண்டும். பின்பு நேர்வாளத்தைக் கல் வத்தில் வைத்து, அதிக கவனத்துடன் அரைத்து வெண்ணெய் போல் ஆனபின்பு முன் பொடித்து வைத்திருக்கிற மருந்துத் தூளையும் சேர்த்துக் காடிநீரைச் சிறுகச்சிறுக விட்டு, கைவிடாமல் நான்கு சாமம் ஒன்று, அல்லது இரண்டு சாமக் கணக்காகவும் அரைக்கலாம். எவ்விதமும் அரைப்பானது நான்கு சாமத்திற்குக் குறையலாகாது. எவ்வளவு அதிகம் ஆனபோதிலும் அவ்வளவும் மேலானதே. பின்பு, இந்த மருந்தை மூன்று பங்காக்கி, அதில் ஒரு பாகத்தை ஒரு சாண் அகலம், ஒரு சாண் நீளமுள்ள துணியில் தடவி உலர்த்தித் திரியாகத் திரித்துக் கொள்ளவேண்டும். இவ் விதமே மற்றிரண்டு பாகங்களையும் மற்றிரண்டு துணிகளில் தடவி உலர்த்தித் திரியாகச் செய்துகொள்ள வேண்டும். மூன்று சிறிய சட்டிகளின் அடியில் 4 அல்லது 5 சிறிய துவாரங்கள் இட்டு முக்காலி ஒன்று சித்தப்படுத்தி அதில் மூன்று தட்டுகள் அமைத்து இம்மூன்று சட்டிகளையும், ஒவ்வொரு சட்டிகளுக்கு இடையில் நான்கு நான்கு அங்குலம் இருக்கும்படியாக ஒன்றின்மேல் ஒன்ருய் வைத்துவிடவேண்டும். இம்மூன்று சட்டிகளிலும் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற மூன்று திரிகளையும் முன் நெய்யில் நனைத்து ஒவ்வொரு சட்டியிலும் ஒவ்வொரு திரியை வைத்துக் கீழ்ச் சட்டிக்கு அடியில் ஒரு பீங்கான் பாத்திரத்தை வைத்து மேல் சட்டியிலுள்ள திரியைக் கொளுத்தி, நெய்யைச் சிறுகச் சிறுக மேல் சட்டியில் வார்த்துக் கொண்டிருக்க வேண்டும். மேல் சட்டியிலிருந்து அதற்கு அடுத்த இரண்டாம் சட்டியில் நெய்வடிய ஆரம்பித்தவுடன் அந்தச் சட்டியிலுள்ள திரியையும் கொளுத்தி விடவேண்டும். இந்தச் சட்டியிலிருந்து மூன்ரும் சட்டியாகிய கீழ்ச் சட்டியில் நெய்வடிய ஆரம்பித்தவுடன் அந்தச் சட்டியினுள் உள்ள திரியையும் கொளுத்திவிட வேண்டும். அதிலிருந்து அதன்கீழ் வைத்திருக்கிற பீங்கானில் நெய்வடியும். கையிலிருக்கிற நெய் யெல்லாம் வார்த்தவுடன் கீழ்ப் பீங்கானில் இருக்கும் நெய்யை எடுத்து மேல் சட்டியில் வார்க்க வேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி 4 அல்லது 5 தடவைகள் கீழ்ப் பீங்கானிலிருக்கிற நெய்யை மேல் சட்டியில் வார்க்கவேண்டும். இவ்விதம் செய்வதால்

நெய்யானது கொஞ்சம் சிவந்த நிறமாய்ப் பச்சைச் சரக்கு இன்றித் தூய்மையாய் இருக்கும். இதுதான் பக்குவம் எனப் பீங்கான் பாண்டத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

(ஆ) இவ்விதம், கைபாகமாய்ச் செய்துகொள்ளத் தெரியாத வர்கள், முன் திரிகளை நெய்யில் நனைத்து இரும்பு சலாகையில் கோத்துக்கொண்டு கொளுத்திவிட்டுச் சுடர்த் தைலமாய் இறக்கிக்கொள்ள வேண்டும். சுடராக வடிந்த நெய்யை மறு படியும் அந்தத் திரியில் விடவேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் செய்து, சரக்கில்லாமல் நெய்யாக வடித்துக்கொள்ள வேண்டும். இதைச் சுடர்த் தைலமாக இறக்குவதில் சேதம், உழைப்பு முதலியவைகள் உண்டாவதுடன் சரியாய்ப் பக்குவமாக இறக்கக்கூட வில்லை. ஆகையால், முன் (அ)யில் சொன்னபடி பக்குவம் செய்து கொள்வதால் சுத்தமாகவும், சேதம் இல்லாம லும் இறங்குகிறது. இன்னம் இதனைச் சித்தம் செய்யும்போது அதிகப்புகை உண்டாவதாலும் இந்தப் புகையானது கண் முதலியவைகளுக்கு ஆகாது. ஆகையாலும், அதிக கவனமாக இறக்கிக் கொள்ளவேண்டும்.

இவ்விதம், சித்தம் செய்யப்பட்ட தைலத்தை ஒரு கனமான மண்பீங்கானில் வைத்துக் கொண்டு, நல்ல சொக்க வெள்ளியை உருக்கி அதில் சாய்க்கவேண்டும். ஆறின பின்பு எடுத்து முன் போல உருக்கி அதில் சாய்க்கவேண்டும். இவ்விதம், 2 அல்லது 5 தடவைகள் செய்யின் வெள்ளியின் நிறம் உண்டாகிவிடும், சில தடவைகளில் மூன்றே தடவைகள் உருக்கிச் சாய்த்துக் கொள்ளின் பதமாய் இருக்கிறது. அதிகமாயின் வெள்ளியானது வெட்டையாய் இருக்கிறது. இப்படி உருக்கிச் சாய்த்துக் கொள்ளக் கூடாக் காலத்தில், வெள்ளியைப் புளி இலைக்கனம் தகடாய்த் தட்டி, கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சி மேற்படி தைலத்தில் தோய்க்க வேண்டும். ஆறினபின்பு எடுத்து மறுபடி யும் பழுக்கக் காய்ச்சித் தோய்க்கவேண்டும். இவ்விதம், 5 அல்லது 7 தடவைகள் மடக்கி மடக்கிச் செய்து உருக்கி எடுக்க வெள்ளி யானது மஞ்சள் நிறமுடையதாய் இருக்கும். இவ்விதம், செய்து நிறமேற்றப்பட்ட வெள்ளியுடன் தங்கத்தைச் சேர்க்க மட்டப் பொன் அல்லது வாத பொன்னகும். நிறம் ஏற்றப்பட்ட வெள்ளி யைப் பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து உபயோகிப்பின் சிறந்த குணமுடையதாகும்.

**குறிப்பு** :—மேற்கண்ட தைலமானது புலிப்பாணி 500இல் **நமநாச மெழுகு** என்னும் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது

மேற்கண்டபடி அனுபவத்தில் வந்திருப்பதால் அவ்விதமே இங்கே எழுதப்பட்டது. மேற்படி தைலத்தை உள்ளிற்கு உபயோகிக்கப் பிரியமுள்ளவர்கள் மேற்படி நூலில் சொல்லி இருக்கிறபடி மற்றப் பாகங்களையும் செய்து உபயோகித்துக்கொள்ளலாம்.

## 381. வண்ண வெள்ளி

தூய்மையான வெள்ளி ஒரு பங்கு, தூய்மை செய்யப்பட்ட செம்பு ஒரு பங்கு, குழாய் கந்தகம் இரண்டு பங்கு, முன்னிரண்டையும் மூசையில் இட்டு உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி கந்தகத்தைப் பொடித்து வைத்துக் கொண்டு சிறுகச் சிறுகச் சுருக்குக் கொடுத்து அந்தப் பொடி எல்லாம் சென்றபின் செம்மையாய் உருக்கி எடுத்தால், கறுத்துக் கட்டியாய் இருக்கும். ஆறினபின் அதை அடைத்தால் உள்ளே வெள்ளியானது வண்ணம் பெற்று இருக்கும். தங்கத்தோடு சாதா வெள்ளியைச் சேர்ப்பதற்குப் பதிலாக இந்த வண்ண வெள்ளியைச் சேர்த்தால் கொஞ்சம் கூடுதலாய் இருக்கும்.

## 382. நொறுக்கு வெள்ளி

நெல்லிக்காய்க் கந்தகம் 4 பலம் (140 கிராம்), வெடியுப்பு ஒரு பலம் (35 கிராம்), இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்து, ஐவிரலி அல்லது பாம்புக்கோவை என்னும் இலையின் சாற்றைவிட்டு 4 சாமம் அரைத்து உலர்த்திப் பொடித்துப் பீங்கான் குப்பியில் எடுத்து வைத்துக் கொள்ளவேண்டும். பின்பு, நல்ல வெள்ளி ஒரு பங்கு, தூய்மையான தாமிரம் ஒரு பங்கு, மேற்படி பொடி 2 பங்கு முன்னிரண்டு உலோகங்களையும் சேர்த்து உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி பொடியைச் சிறுகச் சிறுகச் சுருக்கிட்டு, பொடி எல்லாம் சென்றபின்பு நன்முய் உருக்கி கோலாடி எடுத்து ஆறவைக்கவும். குளிர ஆறினபின்பு எடுத்தால் கருமையான கட்டியாய் இருக்கும். இதனை உடைத்தால் வெள்ளியானது நிறமேறித் தனியாய் இருக்கும். இதற்குத்தான் நொறுக்கு வெள்ளி என்பது பெயர் இந்த நொறுக்கு வெள்ளியை சமயோசிதமாய்த் தங்கத்தோடு சேர்த்து உருக்கினுல், அந்த சாதா எடை வெள்ளியைக் சேர்த்த மட்டப் பொன்னைப் பார்க்கிலும் அதிகம் குணமாகவே இருக்கும். இதனைக் கைபாகமாய்ச் செய்து அனுபவ சித்தமாய் உபயோகித்து மட்டப்பொன், அல்லது வாதப்பொன் செய்யலாம். இந்த நொறுக்கு வெள்ளியை உராவிப் பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து உபயோகிக்கின் பலவித நன்மைகள் உண்டாகும்.

## 383. துருசு தாமிர வண்ண வெள்ளி

துருசு 19 பலம் (665 கிராம்), நெல்லிக்காய் கந்தகம் 10 பலம் (350கிராம்) இவ்விரண்டையும் முன்னர்த் தனித்தனியே பொடித்துப் பின்பு இரண்டையும் ஒன்ருய்ச் சேர்த்து ஒன்ருய்ப் பொடித்துப் புதிய மண்ணோட்டில் வைத்து, அடுப்பில் ஏற்றி, தீயைச் சிறுக எரித்துக் கொண்டே துழாவி வரவேண்டும். அப்படிச் செய்கையில் புகையுண்டாகும். அந்தப் புகை ஆனது கண்ணில் படாமல் சற்றுத் தூரமாய் இருக்கவேண்டும். ஆனல் கைவிடாமல் துழாவியும் வரவேண்டும். அடுப்பும் எரிந்து கொண்டே இருக்க வேண்டும். புகை அடங்கினவுடன் எரிப்பை நிறுத்தி குளிர ஆறினபின் எடுத்துக் கொள்ளவேண்டும். இது சுமார் ஒரு பலம் இருக்கும். இதில் 6½ வராகனெடை, நைப்பான நாட்டு அய அரப் பொடி 6½ வராகன் எடை பொரித்த வெண்காரத்தூள்ஒரு பலம், இம்மூன்றையும் ஒன்ருய்ச் சேர்த்துக் கல்வத்திலிட்டுக் கை விடாமல் ஒரு சாமம் அரைக்க சிவந்த நிறமுள்ள பொடியாகும். இதைப் பலமான மூசையில் இட்டு மூசை வாய்க்குச் சில்லிட்டுக் கொல்லன் உலையில் இட்டு மூசை அழுக ஊதி எடுத்து ஆற வைத்துத் துடைத்து எடுக்க செம்பாகும். இந்தச் செம்பு ஒரு பங்கு நல்ல வெள்ளி ஒரு பங்கு இரண்டையும் சேர்த்து உருக்கி எடுத்துச் சரவு உலையில் ஊதி சேர்த்த செம்பைப் போக்கிவிட வேண்டும். மறுபடியும் ஊதி எடுத்த வெள்ளிக்குச் சமபாகம் மேற்படி செம்பைச் சேர்த்து உருக்கி முன்போலவே சரவு உலையில் ஊதி இந்தச் செம்பையும் போக்கிவிட வேண்டும். மூன்ரும் தடவையும் இந்த வெள்ளிக்குச் சமபாகம் மேற்படி செம்பைச் சேர்த்து உருக்கி முன்போலவே சரவு உலையில் ஊதிச் சேர்த்துச் செம்பைப் போக்கிவிட வேண்டும். மேற்படி செம்பை ஊதிப் போக்கக் கூடாத பட்சத்தில் புடமிட்டும் போக்கி விடலாம். இவ்விதம், செய்யப்பட்ட வெள்ளியானது நல்ல நிற முள்ளதாய் இருக்கும். இந்த வெள்ளிக்குச் சமபாகம் தங்கத்தைச் சேர்த்து உருக்கினுல் ஏழு மாற்று உள்ள மட்டப் பொன், அல்லது வாதப் பொன்னுகும். இந்தத் தாமிர நிற வெள்ளியை உராவிப் பற்பமாக, அல்லது செந்தூரமாகச் செய்யின் சிறப்பாய் இருக்கும்.

## 384. தொட்டிவண்ண வெள்ளி

தொட்டி, அல்லது தொட்டி பாடாணம் என்பது பெரும் பான்மை இரண்டு வகைப்படும். ஒன்று செம்புத் தொட்டி; மற் ருென்று இரும்புத் தொட்டி; இவற்றுள் இங்கு உபயோகப்படத் தக்கது செப்புத் தொட்டியாம். ஆகையால், இத்துண்டுகளைக்

கல் பலகையில் அல்லது கல்லில் அல்லது உரை கல்லில் உரைத்தால் சிவப்பு நிறமாய் இருப்பது இருப்புத் தொட்டியாகும். ஆகையால், முன் சொல்லப்பட்ட இயல்புகள் உள்ளதை இங்கு உபயோகித்துக் கொள்ளவேண்டும். அப்படி இல்லாவிட்டால் பயன்படாது.

குப்பைமேனி இலையை அரைத்து விழுது 10 பலம், அரைப் பலம் செப்புத் தொட்டித் துண்டுகளை மேற்படி விழுதுக்குள் சொருகி செம்மையாய்க் கவசித்து, அதன்மேல் மூன்று சீலைமண் செய்து, சற்று ஈரம் உலரச் செய்து, கவசத்தின் எடைக்கு 7 பங்கு எடை, விராட்டியில் புடமிட்டு ஆறின பின்னர் எடுத்துக் கொள்ளவேண்டும். மறுபடி முன்போலவே மேற்படி குப்பை மேனி இலை அரைத்த விழுதைக் கவசித்து முன்போலவே புடமிட வேண்டும். மூன்றும் தடவையும் இவ்விதமே புடமிட்டு எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம், பக்குவப்படுத்தப்பட்ட தொட்டி 1 வராகன் எடை, இரசம் 1 வராகன் எடை இவ்விரண்டையும் கல்வத்தில் சேர்த்து அரைக்க வேண்டும். இரண்டும் தொந்தமாகி விடும். இதனை நான்கு மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு வராகன் எடை வெள்ளியை உருக்கி உருக்குமுகத்தில் ஒரு மாத்திரையைப் பொடித்துக் கொடுக்க வேண்டும் நன்றாய் ஊதி இரண்டும் சேர்ந்து உருகின பின் மறு மாத்திரையைப் பொடித்துக் கொடுக்கவேண்டும். மாத்திரைக் கொடுத்து சற்று நிதானிக்கவும் வேண்டும். இவ்விதம், மற்ற இரண்டு மாத்திரைகளைப் பொடித்துக் கொடுத்து முடிவில் ஒரு வராகன் எடை கருவங்கத்தைக் கொடுத்து உருக்கி எடுத்துச் சரவு உலையில் வைத்து வெள்ளி தவிர மற்றெல்லாவற்றையும் ஊதி அறவே நீக்கவேண்டும்.

பாகப்படுத்தின செம்புத்தொட்டி, வெள்ளி, கருவங்கம் என்ற மூன்றையும் ஒன்றாய்ச் சேர்த்து ஒரே தடவையாக வைத்து உருக்கிக் கொள்வாரும் உண்டு. எவ்விதம், ஆயினும் கைபாகமாகவும், முறையாகவும் செய்து கொள்ளவேண்டியதே மேலானதாகும்.

மேற்கண்ட விதமாய் ஊதி எடுத்த வெள்ளியானது வண்ண முடையதாய் இருக்கும். இருக்கும் இயல்புக்குத் தகுந்ததுபோலத் தங்கத்தைச் சேர்த்துக் கொண்டால் மட்டப் பொன் அல்லது, வாதப் பொன்னாகும். இச் செம்புத் தொட்டியைச் சேர்க்கப்பட்ட வெள்ளியை அல்லது, இந்த வெள்ளியைச் சேர்க்கப்பட்ட தங்கத்தை உராவி செந்தூரித்தாலும் பற்பமாகச் செயினும் சிறந்த குணமுடையதாய் இருக்கும்.

**குறிப்பு** :—செம்புத் தொட்டியைச் சேர்க்கும் முறைகளில் எல்லாம் செம்புத் தொட்டியில் செம்பெடுத்துச் சமயோசிதமாய் உராவி அல்லது தகுந்தவிதமாய்ச் சேர்த்துக் கொள்வதே நன்மையாகும். செம்புத் தொட்டியில் செம்பெடுக்கும் வகையைப் பின்னே எழுதுவோம்.

## 385. தொட்டி வண்ண வெள்ளி (வேறு)

திறமான செம்புத் தொட்டி தேவையான அளவு இதனைத் திறமான காடியில் மூன்றுநாள் ஊற வைக்கவேண்டும். காடியானது துண்டுகளின்மீது இரண்டங்குலம் மிகுதியாய் இருக்க வேண்டும். கூடுமானால் நாள்தோறும் முன் ஊற்றி வைத்த காடியை நீக்கிவிட்டுப் புதியகாடியை ஊற்றி வைத்தால் மிகவும் நன்மையே. மேற்கண்ட மூன்று நாளும் சென்ற பின்பு, அதிலுள்ள காடியை நீக்கிவிட்டு, கொஞ்சம் நீர் விட்டுக் கழுவி விடவேண்டும். இரண்டாம் முறை எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு முன்போலவே மூன்று நாள் ஊறவைக்கவேண்டும். பின்பு, ஊறவைத்த பழச்சாற்றை நீக்கிவிட்டு, நீரைவிட்டு நன்ருய்க் கழுவி எடுத்துக் கொள்ளவேண்டும். மூன்ரும் முறை, புளியாரைச் சாற்றில் முன்போலவே ஊறவைக்கவேண்டும். இதனையும் நாள்தோறும், பழையச் சாற்றை நீக்கிவிட்டுப் புதிய சாற்றை விட்டுக் கொண்டு வரவேண்டும். மூன்று நாளும் சென்ற பின்பு அதிலுள்ள சாற்றை நீக்கிவிட்டு, தண்ணீர் விட்டுத் தேய்த்துக் கழுவி தூய்மை செய்து கொள்ளவேண்டும். இவ்விதம், பாகப் படுத்தின செம்புத் தொட்டி ஒரு பங்கு இதனைப் பொடித்து மூன்று பாகமாகச் செய்து கொள்ளவேண்டும். தூய்மையான வெள்ளி ஒரு பங்கு வெள்ளியை மூசையில் இட்டு உருக்கி, உருக்கு முகத்தில், செம்புத் தொட்டி ஒரு பங்கைப் போட்டுப் புகையிலைக் காம்பால் கிளரவேண்டும். இரண்டும் சேர்ந்து உருகினபின்பு மறுபங்குத் தூளைப் போட்டு முன்போலவே புகையிலைக் காம்பால் கிளரவேண்டும். இத் தடவையும் நன்ருய் உருகின பின்பு மற்ருெரு பங்கையும் போட்டு, புகையிலைக் காம்பால் துழாவி செம்மையாய் உருக்கி எடுத்து ஆற வைத்துக் கொள்ளவேண்டும். வெள்ளியும் செம்புத் தொட்டித் தாமிரமும் சேர்ந்து உருகி ஒரே கட்டியாய் இருக்கும். அதனை நான்கு துண்டுகளாக வெட்டி மறுமூசையில் இட்டு இரண்டாம் தடவையும் உருக்கி எடுத்துத் தகடு அடித்துக் கொள்ளவேண்டும்.

$1\frac{1}{4}$ பங்கு செங்கல் பொடி, ஒருபங்கு உப்பு இவ்விரண்டையும் சேர்த்து அரைத்துத் தகட்டிற்குத் தகுந்ததுபோல் ஒரு ஓட்டில் பரப்பி அதன்மேல் மேற்படி தகட்டை வைத்து, புளியைக்

குழம்பாய்க் கரைத்துத் தகட்டின்மீது தெளித்து மேல்ஓடு மூடி இக் கவசத்தின் எடைக்குப் பத்துப் பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறின பின்பு எடுத்துத் தகட்டைத் தட்டி, அதன் மேலுள்ள செதள்களை நீக்கிவிட்டு, முன்போலவே உப்பு செங்கல் பொடியில் புடமிடவேண்டும். இவ்விதம், 5 புடம் போட செம்பெல்லாம் அறுந்துபோகும். பின்பு பூங்காவியை உமிழ்நீரால் குழைத்துத் தகட்டின்மீது பூசி நெருப்பில் பழுக்கக் காய்ச்சி, விளக்கெண் ணெயில் தோய்க்கவேண்டும். குளிர ஆறின பின்பு எடுத்துத் தகட்டிலுள்ள எண்ணெயைத் துடைத்து விட்டு முன்போலவே பூங்காவியைக் குழைத்துப் பூசிக் காய்ச்சி விளக்கெண்ணெயில் தோய்க்க வேண்டும். மூன்றும் தடவையும் முன்போலவே தோய்த்து எடுத்து உருக்கித் தூய்மை ஆக்கிக் கொள்ள, வெள்ளி யானது நிறம் ஏறி இருக்கும்.

இவ்விதம், பாகப்படுத்தப்பட்ட வெள்ளி ஒரு பங்கு நூறு எண் (டச்) (touch) உள்ள தங்கம் அல்லது உயர்ந்த தங்கம் ஒரு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து உருக்கி எடுக்க மட்டப் பொன் வாதப் பொன்குனும். இந்தப் பொன்னை உராவிச் செந்தூரித்து அல்லது பற்பித்து உபயோகிக்கப் பலவித நன்மைகளும் உண்டாகும்.

## 386. தொட்டி வண்ண வெள்ளை (வேறு)

சிவப்பு நிறமுள்ள தொட்டிப் பாடாணத்துண்டுகள் தேவை யான அளவு; இவற்றை, பிரமியிலைச் சாற்றில் போடவேண்டும். மேற்படி சாருனது மேற்படி துண்டுகள் செம்மையாய் முழுகி இருக்கத் தக்க அளவாய் இருக்கவேண்டும். மூன்று நாள்கள் சென்றபின், அந்தச் சாற்றை ஊற்றிவிட்டுத் தண்ணீர் விட்டுக் கழுவி, முன்போவே புதிதாய் முன்சாற்றை விட்டு மூன்று நாள் ஊறவைக்கவேண்டும். பின்பு, எடுத்துக் கழுவி தூய்மை செய்து கொள்ளவேண்டும். இவற்றைக் கல்வத்திலிட்டு, புதிதாய்ப் பிரமி இலைச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து இரண்டு சாமம் அரைத்து வில்லை செய்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவேண்டும். பின்பு, முந்திரிமரப்பட்டையை இடித்த தூளை ஒரு அகலில் ஒரு விரல் கனம் பரப்பி, அதன்மேல் வில்லைகளை வைத்து, அதன் மேலும் மேற்படி முந்திரிமரப்பட்டைத் தூளை வைத்து நன்றுய் மூடி, மேல் அகல்மூடி, 9 சீலைமண்செய்து, கவசத்தின் எடைக்கு 5 பங்கு எடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின்பு எடுக்க வில்லைகள் ஒரு வகை செந்தூரமாய் இருக்கும். இதனைப் பொடித்து வைத்துக் கொள்க.

நல்ல வெள்ளி 4 பங்கு, மேற்படி செந்தூரம் ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்து மூசையில் இட்டு உருக்கி இரண்டும் ஒன்ருய்ச் சேர்த்து உருகினபின் எடுத்து, ஆறினபின் இக்கட்டியை எடுத்து, நான்காய் வெட்டித் துண்டித்து மறுபடியும் மூசையில் இட்டு உருக்கி எடுத்து, ஒட்டில் வைத்து ஊதி மேல் வழுக்கை நீக்கி எடுத்துக் கொள்ள வெள்ளியானது வண்ணமுடைதாய் இருக்கும். இதற்குத் தகுந்தது போல தங்கத்தைச் சேர்த்து உருக்க, மட்டப்பொன் அல்லது வாதப்பொன்ஞகும். சமயோசிதமாய் இதனைச் செந்தூரித்து அல்லது பற்பமாகச் செய்து தக்க துணைமருந்துகளில் இட பலவித கடின நோய்கள் தீரும்,

## 387. தொட்டி வண்ண வெள்ளி

சிவந்த வண்ணமுள்ள செம்புத்தொட்டிப் பாடாணத் துண்டுகள் தேவையான அளவு இவைகளைத் தனித்தனியே ஒவ்வொரு துண்டுகளையும் பிரம்மதண்டு சமூலத்தை அரைத்த விழுதால் ஒவ்வொரு விரற்கனம் பொதிந்து பின்னர், எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்துப் பொதிந்து, அதன்மேல், மூன்று சீலைமண் செய்து, கவசத்தின் எடைக்கு 7 பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்து முன்போல முன் இலையை அரைத்த விழுதிற் பொதிந்து முன்போலவே புடமிட வேண்டும். இவ்விதம், 21 தடவைகள் செய்தால் தொட்டியானது நேர்த்தியான தூய்மையாகும்.

தூய்மையான இத் தொட்டி ஒரு பங்கு, நல்லவெள்ளி ஒரு பங்கு வெள்ளியை உருக்கி உருக்குமுகத்தில் மேற்படி தொட்டியை மூன்று பங்காக்கி ஒரு பங்கைக் கொடுக்க வேண்டும். இரண்டும் சேர்ந்து உருகின பின்னர் ஒரு பங்கைக் கொடுக்க வேண்டும். நன்ருய் உருகின பின்னர் மற்ரெரு பங்கையும் கொடுத்து நன்ருய்க் கலந்து உருகினபின் எடுத்து, அதை 4 துண்டுகளாய்ச் செய்து மறுபடியும் உருக்கி ஒட்டில் வைத்துக் கசடற ஊதி எடுக்க வெள்ளி வண்ணமேறி இருக்கும். அது இருக்கிற தரத்திற்குத் தக்கபடி தங்கம் சேர்த்து உருக்க மட்டப் பொன் அல்லது வாதப் பொன்ஞகும். இந்தப் பொன்னை உராவிச் செந்தூரித்துத் தக்கப்படி உபயோகிக்கத் தகுந்த குணமுண்டாகும்.

## 388. தொட்டி வண்ண வெள்ளி (வேறு)

சிவந்த நிறமான செம்புத்தொட்டித் துண்டுகள் ஒரு பலம். (35 கிராம்) வெள்ளை நீர்முள்ளி இலையை அரைத்த விழுது 10 பலம்,

இதனைக் கொள்ளும்படியான ஒரு மண் கலயத்தில் அரை வாசி மேற்படி விழுதை வைத்து நிறைத்து, அதன்மேல் மேற்படி செப்புத் தொட்டித் துண்டுகளை வைத்து, அதன்மேல் மிகுதியான மேற்படி விழுதையும் வைத்து அழுத்திக் கலயத்தின் வாய்க்குச் சில்லிட்டு 3 சீலைமண் செய்து கவசத்தின் எடைக்கு 7 பங்கு எடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுக்க, சில சமயங்களில் மஞ்சள் சாயலான சிவப்பு நிறமாய் இருக்கும். சில சமயங்களில் வெள்ளையாய் இருக்கும். எவ்விதமான போதிலும் பாதகம் இல்லை. அத் துண்டுகளைப் பொடித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

இவ்விதம், பாகப்படுத்தப்பட்ட தொட்டிப் பொடி 2 பங்கு, நல்ல வெள்ளி ஒரு பங்கு, வெள்ளியை உருக்கி, உருக்குமுகத்தில், மேற்படி தூளை மூன்று பங்காகச் செய்து ஒரு பங்கைக் கொடுத்து உலர்ந்த வரள் முள்ளிக்குச்சியால் கிளறிவிட வேண்டும். இரண்டும் சேர்ந்து உருகின பின்னர், மறு பங்கைக் கொடுத்து மேற்கண்ட குச்சியால் துழாவிக் கொடுத்து நன்ருய் உருகின பின் எடுத்து ஆற வைத்துக் கொள்ள வேண்டும். இக்கூட்டை, நான்காய்த் துண்டித்து மறு மூசையில்வைத்து நன்ருய் உருக்கி எடுத்து ஓட்டில் வைத்து, அதிலுள்ள செம்பற ஊதி எடுத்துக் கொள்ள வெள்ளியானது வண்ணமேறி இருக்கும். இதன் தரத்திற்குத் தகுந்தபடி நல்ல தங்கத்தைச் சேர்த்து உருக்க மட்டப் பொன்னுகும். இதனை உராவிப் பற்பமாக, அல்லது செந்தூர மாகச் செய்து உபயோகித்துக் கொண்டால் நல்ல குணம் கொடுக்கும்.

## 389. தொட்டி வண்ண வெள்ளி (வேறு)

சிவந்த நிறமுள்ள செம்புத்தொட்டி 1 வராகன் எடை, சுத்தமான இரசம் 1 வராகன்எடை, முன்னர் தொட்டியைக் கல்வத்தில் இட்டு நன்ருய்ப் பொடித்து பின்னர், இரசத்தையும் சேர்த்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுக விட்டு அரைத்து மெழுகுப் போல் ஆன பின்னர் குன்றிமணி அளவு மாத்திரை களாய்ச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ள வேண்டும்.

$1\frac{1}{2}$ வராகன் எடை வெள்ளியை உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி மாத்திரைகளை ஒவ்வொன்ருய்ச் சுருக்கிட்டு மாத்திரைகளெல்லாம் சென்றபின்பு, எல்லாம் ஒன்ருய்க் கலக்கும்படி உருக்கி எடுத்து, ஆறின பின் எடுத்து நான்காய்த் துண்டித்து மறுபடியும் உருக்கி எடுத்து ஓட்டில் வைத்து, அதில்

இருக்கிற செம்பை ஊதிஎடுக்க வெள்ளியானது வண்ணமேறி இருக்கும். இதற்குத் தகுந்ததுபோலத் தங்கத்தைச் சேர்க்க, அதற்குத் தகுந்தது போன்ற மட்டப்பொன், அல்லது வாதப் பொன்னுகும். இந்தப் பொன்னைச் செந்தூரித்து, அல்லது பற்ப மாகச் செய்து உபயோகித்தால் அதன் தரத்திற்குத் தகுந்த குணத்தைக் கொடுக்கும்.

## 390. தொட்டி வண்ண வெள்ளி (வேறு)

சிவந்த நிறமுள்ள தொட்டி இரசம், வீரம், மிர்தார்சிங்கி, இரசக்கருப்பூரம் இவ்வைந்தும் வகைக்கு ½ வராகன் எடை, முன்னர் தொட்டியைக் கல்வத்தில் இட்டுப் பொடித்துப் பின்னர் இரசத்தைச் சேர்த்து அரைத்துத் தொந்தமான பின்னர் மற்றச் சரக்குகளையும் சேர்த்து அரைத்துத் தூளான பின்பு எலுமிச்சச் பழச்சாற்றைச் சிறகச்சிறுகவார்த்து ஒரு சாமம் அரைத்துச் சிறு மாத்திரைகளாய்ச் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டு வராகன் எடை நல்ல வெள்ளியை உருக்கி, உருக்கு முகத்தில் மேற்படி மாத்திரைகளை எல்லாம் ஒவ்வொன்றுய்ச் சுருக்கிட்டு, எல்லா மாத்திரைகளும் சென்ற பின்னர், நன்றாய் உருக்கி எடுத்துக் குளிர ஆறின பின்னர், எடுத்து மறுபடியும் நான்கு துண்டுகளாய்ச் செய்து மறுமூசையில் இட்டு உருக்கி எடுத்து ஒட்டில் வைத்து கசடற ஊதி எடுத்து, மட்டம் இருக்கும் தரத்திற்குத் தகுந்தது போலத் தங்கத்தைச் சேர்க்க, மட்டப் பொன் அல்லது வாதப் பொன்னுகும். இதனை உராவிச் செந்தூரிக்கத் தரத்திற்குத் தகுந்ததுபோல நோய்களும் தீரும்.

## 391. தொட்டி வண்ண வெள்ளி (வேறு)

சிவந்த நிறமுள்ள செப்புத்தொட்டி 2 வராகன் எடை இலாடத்தை உராவின அயப்பொடி 1 வராகன் எடை இவ் விரண்டையும் கல்வத்தில் இட்டு, 2 மணிநேரம் கை விடாமல் அரைத்துத் தனியே வைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு வராகன் எடை வெள்ளியை உருக்கி உருக்குமுகத்தில் எவ்விதமாயினும் கட்டினலிங்கம் ¼ வராகன் எடை இதனைச் சிறு துண்டுகளாகச் செய்து சுருக்கிட்டு, எல்லா இலிங்கமும் சென்றபின் எடுத்து ஆற வைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு கெட்டியான மூசையில் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தொட்டி அயப் பொடியில் சரிபாதி பங்கைப் போட்டு, அதன்மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற வெள்ளியை வைத்து, அதன்மேலும் மிகுதியாய் இருக்கிற முன் பொடியைப் போட்டு, மூசைவாய்க்குச் சில்லிட்டு, மூன்று சீலை மண் செய்து வெய்யிலில் உலர்த்திக் கொல்லன் உலையில் மூசை அழுகுகிறவரையில் ஊதி எடுத்து ஆற வைக்கவேண்டும். பின்பு, எடுத்து மறுமூசையில் வைத்து உருக்கி, நன்ருய் உருகினபின் ஆற வைக்கவேண்டும். இவ்விதம், நான்கு மூசைகள் மாற்றி, மாற்றி உருக்கி எடுத்து, எந்தவிதமாயினும் இயன்றவகையாய்த் தகடு அடித்து, செங்கல் பொடி 2 பங்கு, உப்பு ஒரு பங்கு, இவ் விரண்டையும் சேர்த்து அரைத்து ஓட்டில் வைத்து, அதன்மேல் மட்டத்தை வைத்துப் புளியைக் கரைத்த நீரை விட்டு மேல் ஓடு மூடி, தகட்டிற்குத் தகுந்ததுபோல் புடம் போடவேண்டும். 4 அல்லது 5 புடத்தில் கசடற்று விட்டால், காவியை உமிழ்நீரில் குழைத்துத் தகட்டிற்குப் பூசி, கரிநெருப்பில் காய்ச்சி விளக்கெண்ணெயில் தோய்க்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் மூன்று தடவைகள் செய்து, உருக்கித் தூய்மை செய்து எடுக்க, வெள்ளியானது வண்ணமேறி இருக்கும்.

இந்த வெள்ளியுடன் எடைக்கு எடை தங்கம் சேர்த்து உருக்க வேண்டும். அதை எடுத்து வைத்து ஆறின பின்பு அதனை நாலாய் வெட்டி மறுபடியும் உருக்கவேண்டும். இவ்விதம், அதனை நான்கு தடவைகள் மீண்டும் மீண்டும் உருக்கி எடுக்க வாதப் பொன் அல்லது மட்டப் பொன்னுகும். இதனுடன் ஏதேனும் ஒருவகை அப்ஜாவைக் கொடுத்தால் மேலும் கொஞ்சம் வண்ணம் அதிகமாகும். இதனை உராவிச் செந்தூரம் முதலியவை களாகச் செய்யின் தரத்திற்குத் தகுந்தபடி குணமும் இருக்கும்.

## 392. தொட்டி வண்ண வெள்ளி (வேறு)

சிவந்த நிறமுள்ள செப்புத்தொட்டித் துண்டுகளை எலுமிச்சம் பழச்சாறு, புளியன் இலைச்சாறு, புளியாரைக் கீரைச்சாறு புளித்தமோர் என்ற இந்நான்கில் ஒவ்வொன்றிலும் தனித் தனியே மும்மூன்று நாள் ஊற வைத்துக் கூடிய 12 நாட்களும் சென்றபின் எடுத்துக் கழுவி ஈரமில்லாமல் வெய்யிலில் உலர்த்திப் பொடித்துக் கொள்ள வேண்டும்.

இந்தப் பொடி ஒரு பங்கு, நல்ல வெள்ளி ஒரு பங்கு, மேற்படி பொடியில் அரையளவை ஒரு மூசையில் போட்டு அதன்மேல் மேற்படி வெள்ளியை வைத்து, அதன்மேல் மறு

பாதிப்பொடியைப் போட்டு, மூசைவாய்க்குச் சில்லிட்டு, மூன்று சீலைமண் செய்து வெய்யிலில் உலர்த்திக் கொல்லன் உலையில் வைத்து மூசை அழுக ஊதி எடுத்து, ஆறினபின் உடைத்து, மறு மூசையில் இட்டு மறுபடியும் உருக்கி எடுத்து, ஓட்டில் வைத்து இரண்டோடு ஊதி, தகடு அடித்துச் செங்கல் பொடி, உப்பு இவை இரண்டும் சமமாய்ச் சேர்த்து ஓட்டில் வைத்து, அதன் மேல் முன் தகட்டை வைத்து, புளித்தண்ணீரை விட்டு மேல் ஓடு மூடி, தகுந்தவிதமாய்ப் புடமிடவும். மறுபடியும் இவ்விதமே 3 அல்லது 4 புடம்போட்டு, கசடறப் பார்த்து உருக்கி எடுக்கவும், மட்டமான வெண்ணிறமாகவே இருக்கும். ஆயினும், பாதகம் இல்லை. இந்த மட்டம் இரண்டு பங்கு, தங்கம் ஒரு பங்கு இரண்டையும் சேர்த்து உருக்கி எடுத்து நான்காய்த் துண்டித்து மறுபடியும் உருக்கவேண்டும். இவ்விதம், மூன்று மூசைகள் மாற்றின் மட்டப் பொன் அல்லது வாதப்பொன்னாகும். இதனையும் செந்தூரம், பற்பம் முதலியவைகளாகச் செய்து உபயோகித்துக் கொள்ளலாம்.

குறிப்பு :—மேற்கண்ட முறையாகவே, வெள்ளியுடன் தகுந்த செம்பைச் சேர்த்துப் பக்குவப்படுத்தி வெள்ளியில் வண்ணமேற்றித் தங்கத்துடன் சேர்ப்பதால், சாதாரண வெள்ளியைத் தங்கத்துடன் சேர்த்து எவ்வளவு மாற்றுள்ள மட்டப் பொன் ஆகுமோ அதைப் பார்க்கிலும், கொஞ்சம்கூடவே உண்டாகும்.

இயற்கை வெள்ளியைப்போலவே செயற்கையாகவும் மட்ட வெள்ளி செய்யப்படும். அம்முறைகளுள் சிலவற்றையும் இங்கு எழுதுவோம்.

## 393. செயற்கை வெள்ளி

வெள்வங்கம் ஒரு பலம் (35 கிராம்), திறமான உளித்தகடு 2 பங்கு, தண்ணீர் கலக்கப்படாத கள்ளின் வண்டல் செல்லத் தக்க அளவு, முல்தானி அன்னபேதி 13 வராகன் எடை.

செய்முறை:—மேற்படி அன்னபேதியைத் தூள் செய்து கள்ளின் வண்டலில் கரைத்து உளித்தகடுகளைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சித் தோய்க்க வேண்டும். குளிர ஆறினபின்பு மறுபடியும் முன்போலவே பழுக்கக் காய்ச்சித் தோய்க்க வேண்டும். இவ்விதம், காய்ச்சிக் காய்ச்சித் தோய்க்க, தகடானது நொறுங்கித் தூளாகிவிடும். இந்தத் தூளை எடுத்துக் கல்வத்தில் இட்டு மைபோலப் பொடித்த இந்த உளித்தூள் 2 பலம் (70 கிராம்), முன் வெள்வங்கத்துடன் சேர்த்து மூசையில் இட்டு

உருக்கி எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். இந்த மட்டம் இருக்கிறதற்குத் தகுந்தபடி, 2, 3, 4 பங்கு வெள்ளியைச் சேர்த்து உருக்கிக்கொண்டால் வாத வெள்ளி அல்லது மட்ட வெள்ளி ஆகும்.

இந்த வெள்ளியை உராவிப் பற்பமாக அல்லது செந்தூர மாகச் செய்து உபயோகித்தால் சிறப்பான குணங்கள் உண்டா கும். அவற்றின் விவரங்கள் எல்லாவற்றையும் ஆங்காங்கே எழுதுவோம்.

## 394. செயற்கை வெள்ளி (வேறு)

தூய்மை செய்யப்பட்ட நாகம் முப்பது பங்கு வெள்ளை ஆக்கப்பட்ட தாமிரம் இரண்டு பங்கு, இரண்டையும் சேர்த்து உருக்க ஒருவித கூட்டாகும். இந்தக் கூட்டு ஒரு பங்கு, நல்ல வெள்ளி 2 பங்கு. இரண்டையும் சேர்த்து உருக்க மட்ட வெள்ளி அல்லது வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து உபயோகிக்கின் சிறந்த குணங்கள் உண்டாகும்.

## 395. செயற்கை வெள்ளி (வேறு)

மஞ்சள்பூப் பூக்கிற வேளைச்சமுலத்தை இடித்துச் சாறு பிழிந்து வைத்துக் கொண்டு, வெள்வங்கத்தை ஒரு இரும்புச் சட்டியில் உருக்கி, மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு கொண்டு வரவேண்டும். இவ்விதம், நான்கு சாமம் செய்தால் வங்கமானது கெட்டிப்பட்டு நீர் சுண்டிப்போகும். இவ்விதம், செய்யப்பட்ட வங்கம் ஒரு பங்கு, நல்ல வெள்ளி 2 பங்கு, இரண்டையும் சேர்த்து உருக்கி எடுக்க வங்க வெள்ளி அல்லது வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரம் முதலியவை களாய்ச் செய்து கடின நோய்களுக்கு உபயோகிக்க, உடனே குணமுண்டாகும். மேலும், இதனுல் குட்டம், குன்மம் முதலிய மகா நோய்கள் எல்லாம் தீரும்.

## 396. செயற்கை வெள்ளி (வேறு)

பாகப்படுத்தின அரிதாரம், பார்சிகந்தகம், வெள்ளைப் படிகாரம், இம் மூன்றும் வகைக்குச் சமபாகம், இம் மூன்றையும் முன்னர் தனித்தனியே தூள் செய்து பின்பு எல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து அரைத்து மைபோல் ஆன பின்னர் எடுத்துக் கொள்ளவும்.

பத்துப் பங்குத் தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில், ஒரு பங்கு மேற்படி தூளை எடுத்துச் சிறுகச் சிறுக சுருக்குக் கொடுத்துத் தூள் எல்லாம் சென்ற பின்பு நன்ருய் உருக்கி எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம், செய்யப்பெற்ற தாமிரமானது சுத்த வெண்மையாய் இருக்கும். இது ஒரு பங்கு, நல்லவெள்ளி ஒரு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து உருக்கி எடுக்க மட்ட வெள்ளி அல்லது வாத வெள்ளியாகும். இதனைத் தகடு அடித்துப் புடமிட்டுப் பற்பமாகச் செய்து வைத்திய முறைகளில் உபயோகித்தால் மேலான குணம் உண்டாகும்.

## 397. செயற்கை வெள்ளி (வேறு)

திறமான வெள்ளி நிமிளை 5 வராகன் எடை, நல்ல தாமிரம் 10 வராகன் எடை, முன்னர் நிமிளையைப் பொடித்து வைத்துக் கொள்க. தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி நிமிளைப் பொடியைச் சுருக்கிட்டு வெண்காரம் சேர்த்து நன்ருய் உருக்கி எடுத்து வைத்துக்கொள்க.

வெள்வங்கத்தை உருக்கி ஆகாசத்தாமரை இலைச்சாற்றில் மூன்று தடவைகள் சாய்த்துக் கொள்ளவேண்டும். பின்பு, 15 வராகன் எடை மேற்படி வங்கத்தை உருக்கி ஒரு வராகன் எடை மேற்படி பொடியைக் கொடுத்துக் கொள்க. இது நீர் வாங்கப் பட்டு வெள்ளியைப் போல இருக்கும். ஆயினும், தரத்திற்குத் தகுந்ததுபோல நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்கிக் கொள்ள மட்ட வெள்ளியாகும். இதனை வைத்திய பாகமாகச் செய்தால் குட்டம், குன்மம் முதலிய நோய்களைப் போக்க ஏதுவாகும். இதில் வங்கம், தாமிரம், வெள்ளி என்னும் 3 உலோகங்களும் வாதக்கிரம முறையாய்ச் சேர்க்கப்பட்டு இருப்பதால், இதனைச் செந்தூரித்தாலும், அல்லது பற்பமாகச் செய்தாலும் அற்புத குணத்தை உண்டாக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

**கவனிப்பு** :– செயற்கை வெள்ளி செய்ய விரும்பினுல் முக்கியமாக இரண்டு பொருள்களின் சம்பந்தத்தால் செய்ய முயற்சி செய்ய வேண்டும். இவ்விரண்டில் ஒன்று இல்லாவிடின் அந்தக் கோரிக்கை நிறைவேறுவது இயலாது; அவ்விரண்டாவன ஒன்று தாமிரம், மற்ருென்று வெள்வங்கம்; ஏனெனில் இவ்விரண்டுதாம் இயற்கை வெள்ளியின் குணங்களுக்கு ஒத்ததாய் இருக்கின்றன. மேலும், தாமிரத்தை வெள்ளியைப்போலச் செய்ய வேண்டுமானுல், அதிலுள்ள களிம்பு சிவக்க வேண்டும். களிம்புள்ளதைக் களிம்பற்றதாகவும், சிவந்ததை வெள்ளையாகவும், களிம்பு

வாசனையுள்ளதை இல்லாததாகவும், மாற்றவேண்டும். தாமிரமானது மேற்கண்டவிதமாய் மாற்றப்பட்டால் பெரும்பாலும் இது வெள்ளிக்கு ஒத்ததாகி விட்டது என்று சொல்லலாம்.

வெள்வங்கத்தில், நீர் மிருதுத்துவம், களிம்பு, சீக்கிரம் உருகுதல் முதலிய தீய இயல்புகள் இருக்கின்றன. வெள்வங்கத்திலுள்ள இத் தீய குணங்களையும் நீக்கிவிட்டால், இதுவும் வெள்ளியின் பண்புக்கு ஒத்ததாக ஆகிவிடும்.

ஆகையால், செயற்கை வெள்ளியைச் செய்ய விருப்பமுள்ளவர்கள், மேற்கண்ட தாமிரம், வங்கம் என்ற இவை இரண்டில் ஒன்றைக் கவனித்து அதிலுள்ள மாசுகள் ஒவ்வொன்றையும் மாற்றி, அவற்றின் தீய குணங்களுக்குப் பதிலாக நற்குணத்தை உண்டாக்க முயலவேண்டும். மேற்கண்ட இரு வகைகளில் ஒன்றை அல்லது இரண்டையும் கவனிக்க வேண்டும். அப்படிக் கருத்தாய்க் கற்காமல் இருப்பவர்கள் இந்த வித்தையில் சித்தி பெறமாட்டார்கள் எனத் தெரிந்திருக்க வேண்டும்.

## 398. செயற்கை வெள்ளி (வேறு)

முதற்பாகத்தில் சொல்லி இருக்கிறபடி ஐய்த்தூன் எண்ணெய் முறைப்படி கட்டின நவச்சாரம் 13 வராகன் எடை. இரசப்பதங்கம் $3\frac{1}{4}$ வராகன் எடை இவ்விரண்டையும் கல்வத்தில் இட்டு, இலவங்க இலைச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு மணி நேரம் அரைத்து ஒரே வில்லையாய்ச் செய்து வெய்யிலில் வைத்து உலர்த்தி, ஒரு சிறு அகலில் வைத்து மேல் அகல்மூடி 3 சீலை மண் செய்து உலர்த்தி, கவசத்தின் எடைக்கு 4 பங்கு எடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் கொள்ளவும்.

பின்னர், அந்த வில்லையைப் பொடித்து, முன் இலைச் சாற்றையே சிறுகச் சிறுக விட்டு அரைத்து முன்போலவே வில்லை செய்து முன்போலவே புடமிட்டு வில்லையை உடைக்காமல் அவ்விதமே வைத்துக் கொள்க.

இதன் பின்பு, வில்வ இலையை அரைத்த விழுதை மேற்படி வில்லையின்மீது ஒரு அங்குல கனம் கவசித்துக் கொள்க. இன்னும், வில்வ இலையை அரைத்த விழுதை இரண்டு விளாங்காய் அளவு உருண்டை செய்து, இரண்டு உருண்டைகளையும் ஒன்றோடொன்று பொருந்தும்படியான இரண்டு மூடிகளாகச் செய்து கொள்ள வேண்டும். நாயின் வெள்ளை மலத்தைத் தூள் செய்து ஒரு

மூடியில் ஒரு அங்குல கனம் பரப்பி அதன் மேல் வில்லையை வைத்து' அதன் மேலும் மேற்படி பொடியை ஒரு அங்குல கனம் பரப்பி மறு மூடியைச் சரியாய்ப் பொருந்தும்படியாய்மூடி, சந்து இல்லாமல் செய்து அதன்மேல் மூன்று சீலைமண் செய்து கவசத்தின் எடைக்கு 5 பங்கு விராட்டியில் புடமிட்டு ஆறவிட்டு, வில்லையை மாத்திரம் எடுத்துக் கொண்டு, முன்போலவே வில்வ இலை மூடிகள் செய்து நாயின் வெள்ளை மலப்பொடியை வில்லைக்குக் கீழ்மேலிட்டு சீலைமண் செய்து முன்போலவே புடமிட வேண்டும். இவ்விதம், அந்த வில்லையை மீண்டும் மீண்டும் 7 தடவைகள் புடமிட்டு எடுத்துப் பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

ஆகாயத் தாமரை இலைச்சாறு 15 பலம் (525கிராம்), இதனை நான்கு பாகமாகச் செய்து தனித்தனியே நான்கு பாண்டங்களில் வைத்துக் கொள்ளவேண்டும். மேற்படி மருந்தில் $2\frac{1}{4}$ வராகன் எடை எடுத்து, அதையும் நான்கு பாகங்களாகச் செய்து நான்கு பொட்டலமாகக் கட்டி வைத்துக் கொள்ளவேண்டும்.

7 பலம் (245 கிராம்) வெள்வங்கத்தை, சுத்தமாய் வெண்மை யாகும்படி தேய்த்துக் கழுவப்பட்ட இரும்புச் சட்டியில் போட்டு, அடுப்பில் ஏற்றி, தீ மூட்டி, வங்கம் நன்றாய் உருகினபின், அதன் நடுவில் மேற்படி ஒரு பொட்டலத்தில் உள்ள மருந்தைப் போட்டு, மூன்று நிமிட நேரம் தாமதித்து. முன் எடுத்து வைத்து இருக்கிற ஒரு பாண்டத்தில் உள்ள சாற்றைக் கரண்டியால் மொண்டு சிறுகச் சிறுக இரும்புப் பாண்டத்தின் ஓரத்தில் விடவேண்டும். அச்சாறு வங்கத்தில் சேர்ந்துபோகும். (வங்கத்தில் நேரே விட்டால் தெரித்துப் போக ஏதுவாகும்) சாற்றை விட்டவுடன் வேப்பமரக் கட்டை மத்தால் கடையவேண்டும். கடைந்து கொண்டே இருந்து சாறெல்லாம் வற்றின பின்னர் இரண்டாம் பொட்டலத்தில் உள்ள மருந்தை முன்போலவே வங்கத்தின் மத்தியில் போட்டு, மூன்று நிமிடம் சென்ற பின் இரண்டாம் பாண்டத்தில் உள்ள சாற்றை முன்போலவே கரண்டியால் மொண்டு சிறுகச் சிறுக, வங்கத்தின் மீது விடாமல் அந்தப் பாண்டத்தின் ஓரத்தில் விட, அது வங்கத்தில் போய்ச் சேர்ந்து விடும். உடனே முன் மத்தால் கடைய வேண்டும். விட்ட சாறானது வற்றினபின் முன்போலவே மூன்றும் பொட்டலத்தில் உள்ள மருந்தையும், மூன்றும் பாண்டத்தில் உள்ள சாற்றையும் முறையே பக்குவமாய்க் கடைந்து, பின்பு நான்காம் பொட்ட லத்தில் உள்ள மருந்தையும், நான்காம் பாண்டத்தில் உள்ள சாற்றையும் முன்போலவே விட்டுக் கடைந்து சாறு சுண்டினபின்

எடுத்துக் கொள்ளவேண்டும். வங்கத்தில் உள்ள நீரற்று இறுகிப் போகும். இவ்விறுகின வங்கத்துடன், நாலிற்கொன்று, இரண்டிற் கொன்று தரத்திற்குத் தகுந்தபடி நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்க, வெள்ளியைப்போல இருக்கும். இந்த வாத வெள்ளியை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து உபயோகித்தால் குட்ட நோய்கள், பற்பலவகை மேக நோய்கள் முதலிய பற்பல நோய்கள் தீரும்.

## 399. வங்க வெள்ளி (வேறு)

கறி உப்புச் சுண்ணம், முன் சொல்லப்பட்டிருக்கிற இரச கருப்பூர உப்பு அல்லது, இரச கருப்பூரச் சுண்ணம், வெடி உப்புச் சுண்ணம், அல்லது கட்டின வெடியுப்பு, படிகாரம், இவ்வைந்து வகைகளும் வகைக்கு $3\frac{1}{4}$ வராகன் எடை.

இவைகள் எல்லாவற்றையும் கல்வத்தில் இட்டு நன்றாய்ப் பொடித்து, வேப்பம் பிஞ்சை இடித்துப் பிழிந்தச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து இரு சாம நேரம் அரைத்து வில்லை செய்து வெய்யிலில் உலர்த்த வேண்டும். வில்லையை உலர்த்தும்போது திருப்பித் திருப்பியும் வைத்து வரவேண்டும். கொஞ்சமும் ஈரம் இல்லாமல், தட்டினால் கணீல் கணீலென ஒலி கேட்கும்படி உலர்த்தின பின்பு, சிறு அகலில் வைத்து, மேல் அகல் மூடி, மூன்று சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் எடைக்கு மூன்று பங்கு எடை விராட்டியில் புடமிட்டு ஆறின பின் எடுக்க, கடவுளின் அருளால் சுண்ணமாகி இருக்கும்.

ஒரு பலம் (35 கிராம்) வெள்வங்கத்தை உருக்கி, மேற்கண்ட சுண்ணத்தில் ஒரு குன்றிமணி எடை கொடுக்க, வங்கமானது நீர் சுண்டி இறுகிக் கெட்டியாகும். இதில் பத்தில் ஒன்று நல்ல வெள்ளியினைச் சேர்த்து உருக்கினால், நல்ல வெள்ளியைப்போல் இருக்கும். இதனைச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தகுந்த துணைமருந்தில் உபயோகிக்கின் அனேக பெரு நோய்கள் எல்லாம் தீரும். குட்டம், குன்மம் முதலிய கடின நோய்களும் தீரும்.

## 400. வங்க வெள்ளீ (வேறு)

கட்டின வெள்ளைப்பாடாணம் ஒரு பலம் (35 கிராம்), இரசம் ஒரு பலம் (35 கிராம்), தூய்மையான வெள்ளீயம் ஒரு பலம் (35 கிராம்) திறமான புனுகு 1 வராகன் எடை.

**செய்முறை :**—பாடாணத்தையும், இரசத்தையும் கல்வத்தில் இட்டு மெதுவாய் அரைக்க வேண்டும். இவ்விரண்டும் கலக்கும் படி தூளாகிறவரையில் கைவிடாமல் அரைக்க வேண்டும். பின்பு, இத்தூளை ஐந்து பங்காக்கி 5 பொட்டலமாகச் செய்துக் கொள்ளவேண்டும். ஈயத்தை மட்டமாகவும் மூசைக்குள் அடங்கும்படியாகவும் உருக்கி வார்த்துக்கொள்ள வேண்டும். அல்லது தட்டிப் பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும். இந்த ஈயமும் மருந்தும் மட்டமாய்க் கொள்ளத்தக்க ஒரு மூசையில் மேற்படி பொட்டலங்களில் ஒன்றிலுள்ள மருந்தில் பாதியைப்போட்டு, அதன்மேல் வங்கத்தை வைத்து, அதன்மேல் மறுபாதி மருந்தையும்போட்டு, மூசைவாய்க்குச் சில்லிட்டு, ஏழு சீலைமண் வலுவாய்ச் செய்து உலர்த்தி 500 பலம் விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துக்கொள்ள வேண்டும். இரண்டாம் தடவையும் முன்போலவே இன்னொரு மூசையில் மறு பொட்டலத்தில் உள்ள மருந்தில் பாதியைப்போட்டு, அதன் மேல் வங்கத்தை வைத்து, அதன்மேல் மறுபாதியைப்போட்டு மூசைவாய்க்குச் சில்லிட்டு, ஏழு சீலைமண் செய்து உலர்த்தி 50 பலம் விராட்டியில் புடம் இட்டு ஆறினபின் எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதமே மற்ற மூன்று பொட்டலங்களில் உள்ள மருந்தையும் ஒவ்வொரு மூசையிலும் வங்கத்திற்குக் கீழ்மேல் இட்டு மூசைவாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்து முன்போலவே மூன்றுபுடம் ஒன்றின் பின் ஒன்ருய்ப் போட்டுக்கொள்ள வேண்டும். மேற்கண்ட முறைப்படி ஐந்து புடமும் போட்டுத் தீர்த்தால் வங்கமானது நொறுங்குந் தன்மை உடையதாகிவிடும். பின்பு, அதனைக் கல்வத்தில் இட்டுத் தூள் ஆக்கி, புனுகையும் கலந்து ஒரு பீங்கான் கோப்பையில் வைத்துக் கொள்ளவேண்டும். இதற்குக் காரம் உண்டாக 5 நாள்கள் வரையில் ஒவ்வொரு நாளும் நாளொன்றிற்கு 5 அல்லது 6 தடவைகள் புரட்டிக் கொடுத்துக் கொண்டு வரவேண்டும். மேற்கண்ட 5 நாட்களும் மேற்கண்டபடி புரட்டிக் கொடுத்து வருவதால் இந்த வங்கப் பொடியானது கடுமையான காரம் உடையதாகிவிடும். அவ்விதம், காரம் உண்டானதற்கு அறிகுறியாவது இப்பொடியில் கொஞ்சத்தை ஒரு தாமிரத் தகட்டை நெருப்பில் காய்ச்சி அதன் நடுவில் வைக்க, அந்தத் தகட்டில் வைத்த இடத்தில் துவாரம் விழுந்துபோகும்; அல்லது, தாமிரத் தகட்டின் மத்தியில் குழைத்துத் தடவிப் புடத்தில் வைக்க மருந்துபட்ட இடத்தில் துவாரம் விழுந்து போகும் என்பதே; அப்படி விழாவிட்டால், அந்தத் தூளுடன் இன்னொரு வராகன் எடை புனுகைச் சேர்த்து இன்னும் ஒருமுறை முன்போலவே 5 நாள் செய்து வரவேண்டும். அவசியம் காரம் உண்டாகிவிடும்.

நல்ல வெள்ளி 3 அல்லது 2 பங்கு, தூய்மையான தாமிரம் 2 பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து முன்னர் உருக்கி எடுத்துக் கொள்ள வேண்டும் இத்தாமிர வெள்ளிக்கூட்டு 10 பங்கு இதனை உருக்கி, உருக்குமுகத்தில்; மேற்படி மருந்தில் ஒரு பங்கைக் கொடுக்க நேர்த்தியான வெள்ளியைப் போலாகும்.

இவ்விதம், செய்யப்பட்ட வாத வெள்ளியை பற்பமாக்கி அல்லது செந்தூரித்து, தக்க துணைமருந்தில் உடல் வலிமை, நோய் வலிமை தெரிந்து பயன்படுத்தினால், நாட்பட்ட மேகநோய்கள், குன்ம நோய்கள், குட்டநோய்கள் முதலிய பல கடின நோய்கள் தீரும். இந்தப் பிரயோகத்தைக் கைபாக முறைப்படி பற்ப மாகவும், செந்தூரமாகவும் செய்து **இராச வைத்திய மகுடத்தில்** சொல்லி இருக்கிற துணைமருந்துகளிலும், இன்னும் சமயோசித மான வேறு துணைமருந்துகளிலும் சேர்த்துஉபயோகித்து, உடல் வலிமை, நோய் வலிமை முதலியவைகளுக்கு ஏற்றவிதமாகவும் பத்தியமும் காத்து வந்தால் அங்கு சொல்லப்பட்டு இருக்கும் பல நோய்கள் குணமாவதும் இன்றி உடல் வலிமை உள்ளத்தினது வலிமை, தாது விருத்தி முதலியவைகளும் உண்டாகி, வச்சிர தேகமாகும்.

## 401. வங்க வெள்ளி (வேறு)

மிருதார்சிங்கி ஒரு பலம் (35 கிராம்), இதனை ஒரு ஓட்டில் வைத்து அடுப்பின்மீது ஏற்றி செவ்வகத்திப் பூவை இடித்துப் பிழிந்த சாறு ½ படி, இதனைச் சிறுகச் சிறுக அல்லது துளித் துளியாய்விட்டுச் சுருக்கிட வேண்டும். இதனைப் பக்குவமாய்ச் சுருக்கிட்டால் 4 சாமத்திற்குள் மேற்படி சிங்கியானது பற்பமாகி விடும். கைபாகம் தவறினாலும், வேறுவகை சம்பவங்களாலும் சில வேளை இது பற்பம் ஆகாமல் போவதும் உண்டு. அப்படி நேரிட்டால். அந்தக் கட்டியை மேற்படி சாற்றில் 3 நாட்கள் ஊற வைத்துப் பிறகு முன் கண்டபடி, சுருக்கிட பற்பமாகி விடும் அதனைப் பளிங்குக்குப்பியில் பத்திரப் படுத்த வேண்டும்.

வெள்வங்கம் 10 பலம், (350 கிராம்) இதனை ஒரு இரும்புச் சட்டியில் இட்டு உருக்கி, நஞ்சுமுறிச்சான் சமூலத்தை இடித்துப் பிழிந்த சாற்றில் சாய்க்க வேண்டும். சாற்றில் வங்கத்தைச் சாய்த்தால் சீறிச் சிதறும் ஆகையால், மேற்படி சாற்றை ஒரு மண் சட்டியில் வார்த்து அதை வாய்மட்டம் பூமியில் புதைத்து, சட்டியின், வாயின்மேல், நடுவில் துவாரம் இடப்பட்ட கல் பாண்டத்தை அல்லது மண்பாண்டத்தை வைத்துமூடி, அந்தத்

துவாரத்தின் வழியாய் உருகின வங்கத்தைச் சாய்க்க வேண்டும். இவ்விதம், சாய்ப்பதால் வங்கமானது சிதறல் ஏதும் இராது. வங்கமானது ஆறினபின்பு முன்போலவே அயச்சட்டியில் இட்டு உருக்கி முன் சாற்றில் சாய்க்க வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 10 தடவைகள் சாய்த்து எடுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதமே 10 தடவைகள் மேற்படி வங்கத்தைப் பிரண்டைச் சாற்றில் மீண்டும் மீண்டும் உருக்கி உருக்கிச் சாய்த்துக் கொண்டால் வங்கமானது சற்று இறுகிக் கெட்டிப்பட்டு இருக்கும்.

இந்த வங்கம் 8 பலம் உருக்கி, உருக்குமுகத்தில் கால் பலம் மேற்படி செந்தூரத்தைத் தூவி எடுத்து மறுபடியும் உருக்க வேண்டும். இவ்விதம், 2, 3 தடவைகள் மாற்றி மாற்றி உருக்கி எடுக்க வெள்ளியைப்போல இருக்கும். இது இருக்கும் தரத்திற்குத் தகுந்தபடி நான்குக்கு ஒன்று அல்லது மூன்றுக்கு ஒன்று நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்கி, உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தகுந்தவிதமாய் நோய்களின்மீது உபயோகித்தால், உண்மையாகவே வெள்ளியைச் செய்துவிற்று உண்டாகும் இலாபத்தைப் பார்க்கிலும் 100 பங்கு அதிக இலாபமும், அதிக புண்ணியமும், அதிக கீர்த்தியும் உண்டாகும் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

## 402. வங்க வெள்ளி (வேறு)

இரசப்பதங்கம், நெட்டிலிங்க மரப்பிசின் இவை வகைக்கு ஒரு பலம் (35 கிராம்), வெள்ளிக் காடிக்காரம்; கட்டின வீரம் இவ்விரண்டும் வகைக்கு ஒரு வராகன் எடை, இந்நான்கையும் கல்வத்தில் இட்டு, சிவப்பு மணத்தக்காளி சமூலச்சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து, 3 நாள்கள் அதாவது 12 சாமம் அரைக்க வேண்டும். (சிவப்பு மணத்தக்காளிச் சாறு கிடைக்காவிட்டால் சாதாரண மணத்தக்காளிச் சாற்றை உபயோகித்துக் கொள்ளலாம்). பின்பு வில்லை செய்து வெய்யிலில் உலர்த்தி நன்றாய் உலர்ந்த பின்பு ஒரு ஓட்டில் ஒரு அங்குல கனம் கிளிஞ்சல் சுண்ணத்தைப் பரப்பி அதன்மேல் மேற்படி வில்லையை வைத்து அதன்மேலும் ஒரு அங்குல கனம் கிளிஞ்சல் சுண்ணத்தைப் போட்டு மேல் ஒடு மூடி 5 சீலைமண் செய்து உலர்த்தி, 20 பலம் (700 கிராம்) விராட்டியில் புடம் இட்டு ஆறினபின் எடுக்கச் சுண்ணமாகி இருக்கும். ஒருசேர வெள்வங்கத்தை முன் சொல்லி இருக்கிறபடி நஞ்சுமுறிச்சான் சாற்றிலும், பிரண்டைச் சாற்றிலும் முறையே பத்துப் பத்துத் தடவைகள் சாய்த்து எடுத்துப் பின்பு உருக்கி, 8 பலத்திற்கு ஒரு வராகன் எடை வீதமாக மேற்படி சுண்ணத்தைக் கொடுக்க. வங்கமானது நீர்வற்றிக் கெட்டிப்

பட்டு வெள்ளியைப் போல இருக்கும். இதன் தன்மைக்குத் தகுந்தபடி நாலில் ஒன்று அல்லது மூன்றில் ஒன்று வீதம் நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்கி உராவிச் செந்தூரித்து அல்லது பற்பமாகச் செய்து உபயோகிக்க அனேக குணங்கள் உண்டாகும்.

## 403. வங்க வெள்ளி (வேறு)

வாலைரசம் 5 பலம்; இதனைக் கல்வத்தில் இட்டு, 10 பலம் செங்கல் பொடியைச் சேர்த்து, 2 சாமம் அரைத்துப் பின்பு அந்த செங்கல் பொடியை ஊதுகுழாய் முதலிய கருவிகளால் ஊதிப் போக்கிவிடவேண்டும். இந்த இரசத்துடன் 10 பலம் மஞ்சள் பொடியைச் சேர்த்து 2 சாமம் அரைத்து முன்போலவே ஊதி மஞ்சள் பொடியை நீக்கிவிட வேண்டும். இவ்விதமே 10 கிராம் ஒட்டடரையைச் சேர்த்து 2 சாமம் அரைத்து அதையும் ஊதி நீக்கிவிட வேண்டும். பின்னர் இந்த இரசத்தில் புளியம் பிஞ்சை இடித்துப் பிழிந்த சாற்றைவிட்டு 2 சாமம் அரைத்து வெய்யிலில் வைத்து உலர்ந்த பின்பு அதையும் ஊதி நீக்கிவிட வேண்டும். இதன் பின்னர் இந்த இரசத்துடன் பப்பாளிப் பாலை விட்டு ஒரு சாமம் அரைத்துக் காயவைத்து அதையும் ஊதி நீக்க வேண்டியது. அல்லது, கழுவி நீக்கிவிட வேண்டியது. இவ்விதம், செய்த பின்னர் உரத்த துணியில் இந்த இரசத்தை வைத்துப் பிழிய வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 21 தடவைகள் பிழிந்து கொள்ளவேண்டும். இவ்விதமாய்ச் செய்யப்பட்டதைத் தான் தூய்மையான இரசம் எனப்படுகிறது. தூய்மையான இரசத்தைக் கல்வத்தில் போட்டு, அதனுடன் 4 வராகன் எடை வெள்ளிக் காடிகாரத்தைச் சேர்த்து, ஆடுதீண்டாப்பாளை இலையை இடித்துப் பிழிந்த சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு, 2 சாமம் அரைத்து வில்லை செய்து வெய்யிலில் உலர்த்தி, நன்றாய் உலர்ந்த பின்பு; ஒரு ஓட்டில் ஒரு அங்குல கனம் கிளிஞ்சில் சுண்ணும்பைப் பரப்பி, அதன்மேல் வில்லையை வைத்து அதன் மேலும் ஒரு விரல்கனம் சுண்ணும்புத் தூளைப் பரப்பி, மேல் ஓடு மூடி ஏழு சீலைமண் செய்து, நன்றாய் உலர வைத்துக்கொள்ள வேண்டும்.

தூய்மையான திடல், தூய்மையான தோட்டம், தூய்மையான வீடு, தூயதான கோயில், தூய்மையான பூங்காக்கள் என்ற இடங்களில் ஒன்றில் முக்கால் அல்லது அரை முழச் சதுரமும் உள்ள குழிதோண்டி, அந்தக் குழியில் அரை வாசியைக் காட்டு எருமுட்டைகளைப்போட்டு நிறைத்து, தூய்மை பக்தியாயிருந்து, சுழியைக் கும்பகத்திலிருத்தி அம்பலத்தில் நிராமயமாய் நடனமிடும் சுய சொரூபச் சுடரை மேல்கண்ணால்

தரிசித்து, மேற்படி கவசத்தை வைத்து, அதன் மேலும் குழி நிறைய காட்டெருமுட்டைகளைப் போட்டு நிறைத்துத் தீ இட வேண்டும். இப்புடமுள்ள இடமானது ஈரக் கசிவில்லாததாகவும், இதற்கு 4 பக்கங்களிலும் காற்று மறைப்புள்ளதாகவும் ஒருவனுக்கு அதிகமான மக்கள் சேராத தனித்த இடமாகவும் இருக்க வேண்டும். தான் வாசம் செய்யும் வீட்டில் புடமிடல் ஆகாது, புடம் எரியும்போது கூடி, அசுத்தமான ஆண், பெண் முதலானவர்கள் போகக் கூடாது, புடமானது எரிந்து குளிர ஆறின பின்னர் மேற்கண்ட விதமாகவே தூய்மை பக்தியுடன் களங்கமற்ற மனத்துடன், கவசத்தை எடுத்து, பக்தியாய்ப் பூசை முதலியவைகளைச் செய்து கவசத்தைப் பிரித்து அந்த வில்லையை எடுத்துக் கல்வத்தில் பொடித்து குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும். இது கடுங்காரமானச் சுண்ணமாகி இருக்கும்.

முன் சொல்லப்பட்ட வகைகளில் ஒரு வகையாய்த் தூய்மை செய்யப்பட்ட 20 பங்கு வெள்வங்கத்தை உருக்கி அதில் ஒரு பங்கு மேற்படி சுண்ணத்தைக் கொடுக்க; நீர்வற்றி கெட்டிப் பட்டுப்போகும். இதன் தரத்திற்குத் தகுந்ததுபோல நல்ல வெள்ளியையும் சேர்த்து உருக்க வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரம் அல்லது பற்பமாகச் செய்து நோய்களின்மீது உபயோகிக்க குட்டம், கருமேகம், வெட்டை, குன்மம் முதலிய அனேக கடின நோய்கள் எல்லாம் தீரும்.

## 404. வெள்வங்க வெள்ளி (வேறு)

5 பலம் (175 கிராம்), தாளகத்தை ஒரு மெல்லிய சல்லாத் துண்டில் தளர்ச்சியாய் முடிந்துகொள்க. ஒரு சட்டியில் ஒரு படி தாளிக்காத கற்சுண்ணும்பைக் கொட்டி, அந்த முடிச்சை வைத்து அதன் மேலும் ஒரு படி கல்சுண்ணும்பைக் கொட்டி ஒரு படி பனங்கள்ளை, ஒரு பாண்டத்தில் வைத்துக்கொண்டு, ஆரம்பத்தில் ½ படி பனங்கள்ளை அந்தச் சுண்ணும்பில் பக்குவமாய் நாலா பக்கமும் பரவலாய்விட, உடனே கொதிப்பு உண்டாகி புகை உண்டாகும். அந்தப் புகையானது கண், முகம் முதலிய இடங்களில் படாமல் பத்திரமாய் இருக்க வேண்டும். 5 நிமிட நேரம் தாமதித்து மிகுதியாய் இருக்கிற பனங்கள்ளையும் ஊற்றி மூடி வைத்து, நன்றாய் குளிர ஆறினபின் எடுத்துச் சுண்ணும்பு முதலியவைகளை நீக்கி, முன் முடிந்திருந்த துணியையும் நீக்கிவிட வேண்டும். தாளகத்தை நீரை விட்டுக் கழுவி சுத்தம் செய்து கொள்ளவும் வேண்டும். இவ்விதம், செய்யப்பட்டதற்கு ஒரு தடவை பாகம் செய்யப்பட்ட தாளகம் எனப் பெயர்.

மறுபடி அந்தத் தாளகத்தை வேறு துணியில் முடிந்து முன் போலவே சுண்ணும்பிற்குள் வைத்து முன்போலவே பனங்கள்ளை விட்டு முன்போலவே பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 10 தடவைகள் பக்குவமாகவும், கை பாகமாகவும் செய்து கொண்டால் தாளகமானது தூய்மையாகி விடும்.

பனங்கள் அகப்படாத காலங்களில், ஆகாயத்தாமரை இலைச் சாறு முன்னளவே எடுத்து முன் மாதிரியே பக்குவப்படுத்தித் தூய்மை செய்து கொள்ளவேண்டும்.

கொட்டைக்கரந்தை சமூலத்தை நன்கு இடித்துப் பிழிந்த சாறு செல்லத் தக்க அளவு, முன் தூய்மை செய்யப்பட்ட தாளகத்தை ஒரு குண்டுச் சட்டியில் வைத்துத் தீயை மெதுவாய் எரித்து, முன் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டுச் சுருக்கிட வேண்டும். இவ்விதம், கைபாகமாகவும், செம்மையாகவும், படிப்படியாகவும் 4 சாமம் சுருக்கிட வேண்டும்.

மறுநாள் வேப்பன் பிஞ்சை இடித்துப் பிழிந்த சாறு செல்லத் தக்க அளவு, முன் சுருக்குக் கொடுத்தத் தாளகத்தை முன் போலவே சட்டியில் வைத்து, இந்தச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து முன்போலவே 4 சாமம் சுருக்கிட, தாளகமானது கட்டிப் போகும்.

சிறு குரிஞ்சான் இலையை அரைத்த விழுதை, கட்டின தாளகத்தின் ஒவ்வொரு கட்டியின்மீதும், அரை அங்குல கனம் கவசித்துத் தாழங்காயைக் குடைந்து அதற்குள் செலுத்தி அந்த வாய்க்கு முன் குடைந்தெடுத்த தூளையே வைத்து அழுத்தி, 10 சீலைமண் செய்து கொள்க. ½ கெசம் சதுரமான குழியில் ½ பாகம் காட்டு எருவைப் போட்டு நிறைத்து, அதன் மேல் கவசத்தை வைத்து, அதன் மேலும் குழி நிறைய காட்டு எருவைப் போட்டுத் தீயைப் போடவேண்டும். புடம் எரிந்து ஆறினபின் எடுக்க கடவுளின் அருளால் தாளகமானது சுண்ணமாகி இருக்கும்.

2 பலம் (70 கிராம்) வங்கத்தை உருக்கி ஒரு வராகன் எடை மேற்படி சுண்ணத்தைக் கொடுக்க வங்கமானது நீர் அற்று கெட்டிப் போகும். அதன் தரத்திற்குத் தகுந்தபடி அதனுடன் நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்கிக் கொள்ள வாத வெள்ளி ஆகும். இதனை உராவிப் பற்பமாக அல்லது செந்தூரமாகச்

செய்துத் துணைமருந்துடன் உபயோகித்தால் அனேக மகா நோய்கள் எல்லாம் தீரும். முக்கியமாய் சயம், சுவாசகாசம், மந்தாரகாசம், கக்கிருமல் முதலிய கபநோய்கள் எல்லாம் தீரும். குட்டப் புண் முதலிய கடின நோய்களும் தீரும்.

## 405. வெள்வங்க வெள்ளி (வேறு)

நாட்டு நவச்சாரம் ஒரே கட்டியாய் 2 பலம் (70 கிராம்), மிளகு $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்), அபின் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) பின்னிரண்டில் மிளகை முன்னர்க் கல்வத்தில் இட்டுத் தூள், செய்து பின்னர் அபினியைச் சேர்த்து அரைத்துக் கொஞ்சம் எலுமிச்சம்பழச் சாற்றை வார்த்து ஒரு சாமம் மைபோல ஆகிற வரையில் அரைத்து, மேற்படி நவச்சாரக் கட்டிக்குச் சிறுகச்சிறுகப் பூசிப்பூசி உலர்த்திக்கொள்ளவும். இவ்விதம், கல்வத்தில் உள்ள மருந்தை எல்லாம் பக்குவமாய்ப் பூசிப்பூசிக் கவசித்துச் சித்தம் செய்து கொள்ள வேண்டும். நன்ருய் உலர்ந்த பின்பு அதன்மேல் மூன்று சீலமண் செய்து வெய்யிலில் வைத்து நன்ருய் உலர்த்திக் கொள்ளவேண்டும். இதன் பின்பு, 10 பலம் (350 கிராம்) காரீயத்தைப் பள்ளமான ஒரு குண்டு சட்டியில் உருக்கிக் குழம்பானபோது, முன் சித்தப்படுத்தி வைத்து இருக்கிற கவசத்தைக் குரட்டால் பிடித்துக்கொண்டு, உருகி நிற்கிற வங்கத்தில் வைத்து நன்ருய் அமிழ்த்தி 10 நிமிட நேரம் அவ் விதமே திருப்பித் திருப்பி அமிழ்த்திப் பிடித்துக் கொண்டிருந்து எடுத்து 10 நிமிட நேரம் ஆற வைக்கவேண்டும். நன்ருய்க் குளிர ஆறின பின்பு முன்போல இந்தக் கவசத்தைக் குரட்டில் பிடித்துக் கொண்டு முன் உருகி நிற்கும் வங்கத்தில் அமிழ்த்த வேண்டும். முன்போலவே திருப்பித் திருப்பியும் கொடுக்க வேண்டும். இவ் விதம், மீண்டும் மீண்டும் 10 தடவைகள் செய்யின் நவச்சாரத்தில் உள்ள எண்ணெய்க் கசிவு, உப்புக் கசிவு முதலிய மாசுகள் எல்லாம் நீங்கி நல்ல தூய்மையாகும். இது ஒரு வகை நவச்சாரத் தூய்மை யாகும். மேற்கண்ட விதமாய்த் தூய்மை செய்யப்பட்ட நவச்சாரத்தை. அப்பிரகத் தகட்டின்மீது வைத்து, சிறு தீயாய் எரித்து, செவ்வகத்திப் பூவை இடித்துப் பிழிந்த சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்துச் சுருக்கிட வேண்டும். தீயானது அதிகப் படாமலும், அதிகம் குறைந்து போகாமலும் மிதமாய் இருக்க வேண்டும். மேற்கண்டபடி, பக்குவமாய்ச் செய்துவரின் மேற்படி நவச்சாரமானது சிவந்து போகும். இதனைக் கல்வத்தில் பொடித்துக் குப்பியில் பத்திரப்படுத்தவேண்டும். இதுவும் ஒரு வகை நவச்சாரச் செந்தூரமாகும்.

தூய்மையான 10 பலம் (350 கிராம்) வெள்வங்கத்தை உருக்கி, $1\frac{1}{4}$ வராகன் எடை மேற்படி நவச்சார செந்தூரத்தைக் கொடுத்து உருக்க, வங்கத்தில் உள்ள நீரானது சுண்டிக் கெட்டிப் பட்டுப்போகும். இதன் தரத்திற்குத் தகுந்தபடி நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்க வாத வெள்ளியாகும். இந்த வாத வெள்ளியை உராவிச் செந்தூரித்து அல்லது பற்பமாகச் செய்து தக்க துணைமருந்துகளில் இட, நீர் அடைப்பு, கல்லடைப்பு, சதை அடைப்பு, நீர்த்தாரையில் தீய மாமிச வளர்ச்சி, இலிங்கப் புற்று, அல்குல் புற்று, இலிங்க அரிகிரந்தி, யோனி அரிகிரந்தி முதலிய பிறப்பு உறுப்புச் சம்பந்தமான நோய்கள் எல்லாம் தீரும். இன்னும் சூதகச் சூலை, சூதகபந்தம், கருப்பைப்புண், கருக்குழி இரணம், கருக்குழியில் மாசுபற்றி நிற்றல் முதலிய பல நோய்களும் மேற்கண்ட கருப்பை நோயால் கருத்தரிக்காமல் இருப்பதும் தீர்ந்து கருப்பம் உண்டாகும். மேற்கண்ட நோய்களுள்ள அனேக பெண்களுக்கு மேற்கண்ட வங்கச் செந்தூரத்தைக் கொடுத்து அந்த நோய்கள் தீர்ந்து கருப்பம் தரித்து இருக்கிறதாகக் கண்டு இருக்கிறது.

## 406. வங்க வெள்ளி (வேறு)

நாட்டு நவச்சாரம் ஒரே கட்டியாய் ஒரு பலம். இதனை மேற்கண்ட பாகப்படி தூய்மை செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

தாளகம், நெல்லிக்காய்க் கந்தகம், இரசம் இவை மூன்றும் வகைக்கு ஒரு பலம். இம்மூன்றையும் கல்வத்தில் இட்டு, முன்னர்த் தனித்தனியே பொடித்துத் தூள் செய்து பின்னர் மூன்றையும் ஒன்றாய்ச் சேர்த்து அரைத்து நுண்மையான தூளான பின்பு, வெள்ளை எருக்கன்பாலைச் சிறுகச்சிறுக விட்டு 2 சாமம் அரைத்து மைபோல ஆனபின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கப்பட்ட நவச்சாரக் கட்டிக்கு ஒருதடவை ஒரு பூச்சுப்பூசி வெய்யிலில் உலரவைக்க வேண்டும். அந்தப் பூச்சு நன்றாய் உலர்ந்தபின்பு, மறுபூச்சுப்பூசி உலரவைக்க வேண்டும். அதுவும் உலர்ந்தபின்பு மூன்றாம் பூச்சும் பூசவேண்டும். இவ்விதம், ஒவ்வொரு பூச்சாய்ப் பூசி, ஒவ்வொரு தடவையும் நன்றாய் உலர்த்திக் கல்வத்தில் உள்ள மருந்தை எல்லாம் பூசிச் சித்தப்படுத்திக் கொள்ளவேண்டும்.

ஒருபடி கொள்ளும்படியான ஒரு சட்டியில் அடியில் நான்கு அங்குல உயரம் சிறுமணலைப் பரப்பி, அதன்மேல் இரண்டு அங்குல உயரம் கிளிஞ்சில் சுண்ணாம்பைப் பரப்பி, அதன்மேல் ஓர் அங்குல உயரம் திருகுகள்ளிச் சாம்பலைப் பரப்பி, அதன்

மேல் முன்சித்தப்படுத்தி வைத்திருக்கிற கவசத்தை வைத்து, அதன்மேல் ஓர் அங்குல உயரம் திருகுகள்ளிச் சாம்பலைப் போட்டுக் கைவிரலால் சமமாய் அழுத்திப் பக்குவமாய்க் கவசமானது தெரியாமல் செய்யவேண்டியது. மேற்கண்ட சாம்பலானது, மேலும் தேவையான அளவும் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால், கவசமானது தெரியாமல் எங்கும் சமபாகமாகத் திட்டமாய் இருக்கவேண்டும். நன்ருய்ப் பக்குவமாய் அழுத்திச் சித்தம் செய்யாவிட்டால் அடுப்பு எரியும்போது குழிவிழ ஏதுவாகும். அப்படி நேரிட்டுவிட்டால் செந்தூரமாகாமல் நொறுங்கிப் போகும். அல்லது வைத்தபடி கட்டியாகவே இருக்கும். ஆகையால், கள்ளிச் சாம்பலைச் செல்லத்தக்க அளவு பக்குவமாய்ப் போட்டுச் சித்தமானபின்பு, இரண்டு அங்குல உயரம் கிளிஞ்சில் சுண்ணும்பைப்போட்டுப் பரப்பி, அதன்மேல் சிறுமணலைப் போட்டுப் பரப்பவேண்டும். இந்த மணலானது பானையின் வாய்மட்டம் இருக்க வேண்டும். அடுப்பின்மீது ஏற்றி ஒரு சாமம் கமலாக்கினியாய்த் தீ எரித்துப் பின்னர், இரண்டு சாமம் தீபாக்கினியாய் எரித்து ஒருநாள் ஆறவிட்டுப் பிரித்து எடுக்கக் கடவுளின் அருளால் நவச்சாரமானது சிவந்து செந்தூரமாகி இருக்கும்.

இந்தச் செந்தூரத்தைச் செய்து முடிப்பதில் கைபாகம், செய்பாகம் முதலியவைகளில் அதிக விழிப்பு வேண்டும். இவ்வகைகளைக் கவனியாமலும், அவசரப்படுவதாலும் அனேகர் ஏமாந்து போய்த் தங்கள் குற்றத்தைக் கவனியாமல் மருத்துவ நூல்களையும் பாகங்களையும் குறை சொல்லித் திரிகின்ருர்கள். முதுமாணுக்கர் ஆயினும் சரியே, புது மாணுக்கர் ஆயினும் சரியே, இலகுவான பாகத்தை அல்லது கடின பாகத்தைக் கைமுறையாயும், புத்திக் கூர்மையுடனும் நிதானமாயும் செய்தால் எல்லாம் சித்தியாகும் என்பதில் சந்தேகம் இல்லை.

**பயன்படுத்தல் :—** தூய்மையான 10 பலம் (350 கிராம்) வெள்வங்கத்தை உருக்கி, 1¼ வராகன் எடை மேற்படி செந்தூரத்தைக் கொடுத்து எடுத்து ஆற வைத்து, அதை நான்காய்த் துண்டித்து மூசையில் இட்டு உருக்கவும்; மறுபடியும் அதை எடுத்து நான்காய்த் துண்டித்து உருக்கவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் 3 அல்லது 4 தடவைகள் உருக்கி எடுக்க வங்கத்தில் உள்ள நீர் வறண்டு கெட்டிப்பட்டுப் போகும். இதன் பின்னர், இதன் தரத்திற்குத் தகுந்தபடி நல்ல வெள்ளியையும் சேர்த்து உருக்கிக் கொள்ள வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரித்து, அல்லது பற்பமாகச் செய்து உடல்வலிமை,

நோய் வலிமை, கால வேறுபாடு, இடமாற்றம் முதலியவைகளைக் கவனித்து, அந்தந்த நோய்களுக்குத் தகுந்த துணை மருந்துகளில் இட முன் பாகத்தில் சொல்லப்பட்ட நோய்கள் எல்லாம் தீர்ந்து உடல் அழகு, உடல் வலிமை, பொலிவு முதலியவைகளும் உண்டாகும்.

## 407. வங்க வெள்ளி (வேறு)

வெள்ளைப் பாடாணம் 5 பலம் (175 கிராம்). இது சீமைச் சுண்ணும்பைப் போலவும் பளபளப்பு இல்லாததாகவும் இருக்க வேண்டும். இதனை உழமண்ணில் பிசறி, ஒரு சேலைத் துண்டில் முடிந்து, வெள்ளாவி சுத்துகிற நடுச்சந்தில் துலாந்திரமாகக் கட்டித் தொங்க வைத்து, வெள்ளாவியில் வெந்து ஆறின பின்னர் எடுத்துக் கொள்ளவேண்டும். பின்னர், அதனை முன் போலவே உழமண்ணில் பிசறி ஒரு சேலைத் துண்டில் முடிந்து வெள்ளாவியில் முன்போலவே துலாந்திரமாகக் கட்டித் தொங்க வைத்து வெள்ளாவியில் வெந்த பின்னர் எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதமே மேலும் மூன்று தடவைகள் செய்து கொள்ளவேண்டும். ஆகக்கூடி 5 தடவைகளும் மேற் கண்ட படி செய்து எடுத்தால் பாடாணமானது தூய்மையாகும்.

இவ்விதம் தூய்மை செய்யப்பட்ட பாடாணத்தை ஓர் ஒட்டில் இட்டு அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாய் எரித்து, ஆடு தீண்டாப்பாளை இலையை இடித்துப் பிழிந்த சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமம் பக்குவமாய்ச் சுருக்கிட வேண்டும். இவ்விதம், கைப்பாகமாய்ச் சுருக்கிட்ட பின்னர் எடுத்துக் கட்டியின்மீது உள்ள அழுக்கு முதலியவைகளை நீக்கித் தூய்மை செய்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

பின்னர், இந்தக் கட்டியை வேறொரு சட்டியில் வைத்து அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாய் எரித்துக் கருவூமத்தன் சமூலத்தை இடித்த சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து 4 சாமம் சுருக்கிட வேண்டும். சுருக்கிடும்போது கட்டியை நாலாபக்கமும் திருப்பித் திருப்பிக் கொடுத்துக்கொண்டு வரவேண்டும். மேலும், நெருப்பானது அதிகப் படாமலும், அதிகம் குறைந்து போகா மலும் மிதமாய் இருக்க வேண்டும். ஏனெனில், தீ அதிகப்படினும் அல்லது தீஅதிகம் குறைந்துவிடினும் மருந்து கெட்டுப் போகும். ஆகையால், அதிகக் கவனத்துடன் தீ எரித்துச் சுருக்கிட்டு எடுத்துக் கட்டியின் மீதுள்ள அழுக்கு முதலியவைகளை நீக்கித் தூய்மை செய்து வைத்துக்கொள்ளவேண்டும். இவ் விருவகைச் சுருக்கி னும் பாடாணமானது ஒருவிதக் கட்டாகும்.

இதன்பின்னர், வெள்ளைக்காயும், ஊதாப்பூவும் உள்ள கண்டங்கத்ரிதச் சமூலத்தை இடித்துப் பிழிந்த சாறு $\frac{3}{4}$ படி, வெள்ளாட்டுச் சிறுநீர் $\frac{3}{4}$ படி, ஆகிய இரண்டையும் கலந்து ஒரு பாண்டத்தில்விட்டு, முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பாடாணக் கட்டியை அதில் போட்டு, பாண்டத்தின் வாய்க்குச் சீல்விட்டு, 7 சீலைமண் செய்து தண்ணீர்க் கசிவு இல்லாததும், உயரம் உள்ளதுமான குப்பைமேட்டில், ஒரு கெச அகலமும், ஒரு கெச நீளமும் உள்ள குழி ஒன்று தோண்டி, அதில் ஆட்டுப் புழுக்கை, மாட்டுச்சாணி, குதிரை லத்தி, கழுதை லத்தி என்ற நான்கையும் சமபாகமாய்ச் சேர்த்து, அக் குழியில் அரை வாசி மட்டும் நிறைத்து, அதன்மேல் மேற்படி பாண்டத்தை வைத்து, அதன்மேல் குழி நிறைய முன்கண்ட நான்கு வகைகளையும் போட்டு நிறைத்துக் காலால் மெதுவாகப் பக்கங்களில் மிதித்து அழுத்திவிட்டு, அதன்மேல் மண்ணைப் போட்டு அழுத்தி மேடாகக் குவித்து, 9 அல்லது 10 நாள்கள் சென்று எடுத்துக் கழுவித் தூய்மைசெய்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

இவ்விதம் பாகப்படுத்தப்பட்ட பாடாணம் 2 பலம் (70 கிராம்), பதங்கித்த ரசம் ஒரு பலம் (35 கிராம்), வீரம் ஒரு பலம் (35 கிராம்). இம் மூன்றையும் சேர்த்து அரைத்துத் தூள் செய்து கொள்ளவேண்டும்.

வெள்ளெருக்கன்பால், கோழி முட்டை வெள்ளை அம்பிலி இரண்டையும் சமனாய்ச் சேர்த்து, அதில் நவச்சாரப் பதங்கம் கொஞ்சத்தையும் போட்டுக் கலக்கி ஒரு நாள் வைத்து எடுக்க எல்லாம் நீர் ஆகிவிடும். ஒரு நாளையில் நீர் ஆகாவிட்டால் மேலும் இரண்டொரு நாள் அதிகமாய் வைப்பின் அவசியம் அவை எல்லாம் தெளிவான நீர் ஆகிப்போகும். இதற்கு எருக்கம் பால் செய்நீர் என்பது பெயர்.

முன் தூள் செய்து வைத்திருக்கிற தூளைக் கல்வத்தில் இட்டு மேற்படி எருக்கம்பால் செய்நீரைச் சிறுகச் சிறுகவிட்டு, நான்கு சாமம் அரைத்து மைபோல் ஆனபின்னர்ச் சிறு வில்லைகளாகத் தட்டிப் பீங்கானில் வைத்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவேண்டும்.

ஒரு சிறு பாண்டத்தில் இரண்டு அங்குலக் கனம் தாளிக்காத கிளிஞ்சில் சுண்ணத்தைப் பரப்பி அதன்மேல் திருகுகள்ளிச் சாம்பலை இரண்டு அங்குலம் பரப்பி, அதன்மேல் திறமான அப்பளாகாரத்தை அல்லது சீமை அப்பளாகாரத்தை இரண்டு அங்குலக் கனம் பரப்பி அதன்மேல் பாகப்படுத்தின அல்லது

தூய்மையான பூநீரை ஓர் அங்குலக் கனம் பரப்பி, அதன்மேல் மேற்படி வில்லைகளை வைத்து, அதன்மேல் திறமான பூநீரை ஒரு அங்குலக் கனம் பரப்பி அழுத்தி அதன்மேல் திறமான அப்பளாகாரத்தை அல்லது சீமை அப்பளாகாரத்தை இரண்டு அங்குலக் கனம் பரப்பி அழுத்தி அதன்மேல் தாளிக்காத கிளிஞ்சில் சுண்ணும்பை இரண்டு அங்குலம் பரப்பி அழுத்தி, பாண்டத்தின் வாய்க்கு மேல் சாணக்கிமூடி 5 சீலைமண் செய்து காய வைத்து அடுப்பில் ஏற்றி, புளியன் விறகு, பூவரசன் விறகு, வேப்பன் விறகு என்ற இவ் வகைகளில் ஒரு வகை விறகால் ஆரம்பத்தில் கமலாக்கினியாக ஒரு சாமமும் மறுபடி தீபாக்கினியாக ஒரு சாமமும் எரித்து ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள், தாம் தாம் வழிபடும் கடவுளை வணங்கி எடுக்க, எல்லாம் கடும்காரச் சுண்ணமாய் இருக்கும். இதனைக் குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும்.

பயன்படுத்தல் :—இதனைப்பற்றி வெகுவாய்ச் சொல்லப் பட்டு இருக்கிறது. இதனைத் தனியாய் உபயோகப்படுத்துவதும் இன்றிப் பற்பலவிதத் தொந்தங்கள் ஏற்றலாம். ஆனுல், அம் முறைகளை எல்லாம் அநுபவசாலிகளான மகான்களை அடுத்துத் தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், இதனை இளகம், நெய், கலப்புத்தூள் முதலியவைகளுடன் மிகவும் குறைந்த அளவாய்க் கலந்து நோய்களுக்குக் பயன்படுத்தினுல் குட்டம், குன்மம், கபநோய்கள் முதலிய கடின நோய்கள் எல்லாம் தீரும்.

8 பலம் (240 கிராம்) வெள்வங்கத்தை உருக்கி ஒரு வராகன் எடை மேற்படி சுண்ணத்தைக் கொடுக்க வங்கநீர் வறண்டு கெட்டிப்பட்டுப் போகும். இதனுடன் நல்ல வெள்ளியைச் சமயோசிதமாய்ச் சேர்த்து, உராவிச் செந்தூரமாகச் செய்து, அல்லது பற்பமாகச் செய்து உபயோகிக்கின் பற்பலவித குணங்களும் பயனும் உண்டாகும். இவை எல்லாம் பாடுபடுபவர் களுக்கே கிடைக்கும். பாடுபட்டால் பலன் உண்டாகும்.

## 408. வங்க வெள்ளி (வேறு)

இனிச் சொல்லப்படும் முறைப்படி அல்லது முன் சொல்லப் பட்டு இருக்கும் முறைப்படி கட்டின பாடாணம் 5 பலம். (175 கிராம்) (இந்தப் பாடாணமானது எந்தவிதமாய்க் கட்டப் பட்டதாயினும் நெருப்பிற்கு ஓடாததாய் இருக்கவேண்டும்). ஊதாப்பூவும், வெண்மையான காயுமுடைய கண்டங்கத்தரிச் சமூலச்சாறு ஒரு படி, வெள்ளாட்டுச் சிறுநீர் ஒருபடி, ஆகிய

இரண்டையும் கலந்து ஒரு சிறு தோண்டியின் வாய்க்கு அகல்மூடி 7 சீலைமண் செய்து வெய்யிலில் உலர வைத்துக் கொள்ள வேண்டும்.

உயரமான குப்பைமேட்டில் ஒரு கெச சதுரமான குழி ஒன்று தோண்டி வெள்ளாட்டுப் புழுக்கை, குதிரைலத்தி, கழுதைலத்தி என்ற மூன்று வகைகளையும் சமபாகமாய்ச் சேர்த்து மேற்படி குழியில் அரைபாகம் நிறைத்து, அதன்மேல் முன் தயாரித்து வைத்திருக்கிற தோண்டியை வைத்து, அதன்மேலும் குழி நிறைய முன் புழுக்கை முதலியவைகளைச் சமமாய்ச் சேர்த்துப் போட்டு, தோண்டி உடைந்து போகாமல் அதைச் சுற்றிலும் மிதியலிட்டு (அதாவது குழியில் இறங்கிக் காலால் நன்ருய் மிதித்து தரை மட்டம் வரைக்கும் போட்டு அழுத்தி), குழியின்மீது மண்ணை வெட்டிக் கொட்டி, மழை முதலிய நீரானது விழுந்தால் வழிந்து ஓடும்படியாகக் குவியலாகச் செய்து வைக்கவேண்டும். 4 மாதங்கள் சென்ற பின் எடுத்துக் கவசத்தைப் பிரிக்காமலே அடுப்பில் வைத்துத் தினம் சிறிது நேரம் எரித்துத் தோண்டியில் உள்ள நீர் எல்லாம் சுண்டின பின், நன்ருய்க் குளிர ஆறவைத்துக் கவசத்தைப் பிரித்துப் பாடாணக் கட்டியை எடுத்து ஒரு பீங்கான் பாண்டத்தில் வைத்துக் காற்று இல்லாத இடத்தில் கடும் வெய்யிலில் வைக்கத் தானே மலர்ந்து சுண்ணமாகி இருக்கும்.

இந்தச் சுண்ணத்தை விபூதியுடன் கலந்து நெற்றி முதலிய இடங்களில் தரித்துக்கொள்வதால், மலைசுரம், யானைக்கால் சுரம், மேகசுரம் முதலிய பலவகை சுரங்கள் தீரும்.

இவ்விதம், சிலர் செய்து வைத்துக்கொண்டு மேற்கண்டபடி விபூதியில் சேர்த்து உபயோகித்து சுரம் முதலிய நோய்களைக் குணப்படுத்துபவர்களைக் கண்டு நம்முள் பலர் அந்தச் சாமியார் அல்லது இந்தப் பெரியவர் விபூதி கொடுத்தார், எல்லா நோய்களும் நீங்கி விடுகின்றன என மேற்கண்டவர்களைப் பூசித்து வருகிருர்கள். உண்மையில் அவர்கள் பூசிக்கத் தக்கவர்களே. ஏனெனில், எவ்விதம் ஆயினும் அரிய பாகங்களைக் கடினப்பட்டுச் செய்வதே காரணமாகும் (செயற்கரிய செய்வார் பெரியர்).

இரண்டு பலம் தூய்மையான வெள்வங்கத்தை உருக்கி, ஒரு வராகன் எடை மேற்படி சுண்ணத்தைக் கொடுக்க வங்கத்தின் நீர் அற்றுக் கெட்டிப்பட்டுப்போகும். இதன் தரத்திற்குத் தகுந்தபடி நல்ல வெள்ளியைச் சேர்த்து, உராவிச் செந்தூரமாகச் செய்து அல்லது பற்பமாகச் செய்து உபயோகிக்கின் அனேக குணங்கள் உண்டாகும்.

## 409. வங்க வெள்ளி (வேறு)

வெள்ளைப்பூ, வெள்ளைக்காய் என்னும் இவை உள்ள கண்டங் கத்தரிச் சமூலத்தை இடித்துப் பிழிந்த சாறு ½ படி. இவ்வகை அகப்படாத சமயங்களில், ஊதாப்பூ, வெள்ளைக்காய் என்ற இவை உள்ளதும், முட்கள் மிகவும் சொற்பமாக உள்ளதும் ஆன ஒருவகை கண்டங்கத்தரியும் உண்டு. அதன் சமூலத்தையும் இடித்துப் பிழிந்த சாற்றை முன் சொன்ன வெள்ளைக் கண்டங் கத்தரிக்குப் பதிலாகச் சேர்த்துக்கொள்ளலாம். பின் சொல்லப் பட்ட வகையை வெள்ளைக் கண்டங்கத்தரிச் சக்களத்தி என்று சிலர் சில நாடுகளில் சொல்கின்றார்கள். இந்த வகையானது சாதாரணமாய்ப் பற்பல இடங்களில் கிடைக்கிறது. ஆயினும், முன் சொல்லப்பட்ட வெள்ளைக் கண்டங்கத்தரியே குணத்தில் சிறந்தது எனத் தெரிந்து இருக்கவேண்டும். அந்த வெள்ளைக் கண்டங்கத்திரியானது மத்ரா, லாகூர்ப் பிரதேசம் முதலிய அனேக இடங்களில் செழிப்பாக இருக்கிறது. இவ் விந்தியாவிலும் பல இடங்களில் கிடைக்கின்றன.

தூய்மை செய்யப்பட்ட வெள்ளைப் பாடாணம் ஒரே கட்டியாய் உள்ளது 1½ பலம் (52½ கிராம்). இதனை ஒரு சட்டியில் வைத்து அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாய் எரித்து முன் சொல்லப் பட்ட வெள்ளைக் கண்டங்கத்தரிச் சாற்றைச் சிறுகச்சிறுக விட்டுச் சுருக்குக் கொடுக்க வேண்டும். கட்டியை நான்கு பக்கமும் திருப்பித் திருப்பிக் கொடுத்து வரவும் வேண்டும். 3 சாமம் வரையில் மேற்கண்ட சாறானது திட்டமாய் வரும்படி சுருக்கிட வேண்டும். எந்தச் சரக்கைச் சுருக்கிட்ட போதிலும் கைபாகம், செய்பாகம் தெரியாவிட்டால் அந்தச் சரக்கானது முற்றும் கட்டுப்படாது. ஆயினும், பாடாணக் கட்டுச் சுருக்கில் அதிகக் கவனத்தோடு இருக்க வேண்டியது. 3 சாமம் வரையில் சாறு வராவிட்டால் இன்னும் கொஞ்சம் சாற்றையும் சேர்த்துச் சுருக்கிடலாம். அவசியமானால் இன்னொரு சாமமும் அதிகமாய்ச் சுருக்கிடலாம். எவ்விதம் ஆயினும் மேற்படி பாடாணமானது கட்டுப்பட்டு நெருப்பில் போட்ட போதிலும் புகையாமலும் நெருப்பிற்கோடாமலும் இருக்கவேண்டும். அவ்விதம் சோத னைக்கு ஒத்துவராவிட்டால் இன்னொரு முறையும் 3 சாமம் சுருக்கிட்டுக் கொள்ளக் கட்டுப்பட்டுப்போகும்; பரீசிலனைக்கு ஒத்திருக்கும். மேற்கண்டபடி சுருக்கிட்டு ஆறினபின் தண்ணீர் விட்டுக் கழுவித் தூய்மையாக்கி வைத்துக் கொள்ளவேண்டும்.

கருவங்கம், இரசம், தாளிக்காத கற்சுண்ணம்பு, நவச்சாரம் ஆகிய நான்கும் வகைக்கு 2 வராகன் எடை கருவங்கத்தை

உருக்கி இரசத்தோடு கலந்த பின்பு, கல்வத்தில் பொடித்து மற்றச் சரக்குகளையும் ஒன்றாய்ச் சேர்த்து 4 அல்லது 5 மணிநேரம் அரைக்க மெழுகாகும். இந்த மெழுகை முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பாடாணக் கட்டிக்கு எங்கும் சமமாய் இருக்கும்படி கவசித்துக் காயவைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு சிறு சட்டியில் நான்கு அங்குல உயரம் சிறு மணலைக் கொட்டி, அதன்மேல் முன் கட்டியை வைத்து, அதன்மேலும் நான்கு அங்குல உயரம் மணலைக் கொட்டி, அடுப்பின் மீது ஏற்றித் தீபாக்கினியாய் ஒரு சாமமும், கமலாக்கினியாய் ஒரு சாமமும் ஆக எரிக்க வேண்டும். இவ்விதம் 2 சாமம் எரித்து ஒரு நாள் குளிர வைத்து மறுநாள் கவனத்தோடு எடுத்துக் கவசித்துப் பிரித்து எடுக்கக் கடவுளின் அருளால் பாடாணமானது சுண்ண மாகி இருக்கும்.

வெள்வங்கம் 2 பலம் (70 கிராம்). இதனை உருக்கி, ஒரு வராகன் எடை மேற்படி சுண்ணத்தைக் கொடுக்க வங்கத்தில் உள்ள நீர் வற்றி இறுகிப்போகும். இதன் தரத்திற்குத் தகுந்த படி நல்ல வெள்ளியைச் சேர்த்துக்கொள்ள வாத வெள்ளி யாகும். இதனை உராவிப் பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து தக்க துணை மருந்துகளுடன் தக்கவிதமாய் உபயோகிக்கின் குணம் உண்டாகும்.

## 410. வங்க வெள்ளி (வேறு)

கட்டின பாடாணம் 2 பலம் (70 கிராம்), கரிசலாங்கண்ணியை இடித்துப் பிழிந்த சாறு $\frac{1}{2}$ படி. முன் கட்டியை ஒரு சட்டியில் இட்டு அடுப்பில் ஏற்றி மேற்படி சாற்றைச் சிறுகச்சிறுக விட்டுச் சுருக்கிட வேண்டும். இரண்டு சாமம் சென்ற பின்னர் மிகுதியாய் இருக்கிற சாற்றைச் சட்டியில் விட்டுச் சிறு தீயாய் எரித்துப் பாடாணக் கட்டியைப் புரட்டிக் கொடுத்துக்கொண்டு வர வேண்டும். மேற்படி சாறு எல்லாம் சுண்டின பின் கட்டியை எடுத்துக் கழுவித் தூய்மை செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

கல்யாணப் பூசணிக்காய்ச் சாறு $\frac{1}{2}$ படி, வாழை மட்டையை இடித்துப் பிழிந்த சாறு $\frac{1}{2}$ படி. இரண்டையும் கலந்து ஒரு பாண்டத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். முன் சித்தப் படுத்திய பாடாணத்தை ஒரு சாணக்கியின் மத்தியில் வைத்து, அதன்மேல் ஒரு மண் கோப்பையைக் கவிழ்த்து, வெல்லத்தையும் சுண்ணாம்பையும் சமனாய்ச் சேர்த்து அரைத்து, கோப்பையின் சந்தில் பூசிச் சந்தில்லாமல் செய்து அடுப்பின்மீது ஏற்றிச் சிறு தீயாய் எரித்துச் சூடு கண்டவுடன், ஒரு குச்சியில் மெல்லிய

சல்லாவைப் பந்தைப்போல் சுற்றிக்கொண்டு, அதை முன் கலியாணப் பூசணி நீர்க் கலவையில் துவைத்துக் கிண்ணத்தின் மேல் முற்றிலும் பூசவேண்டும்; அடுப்பும் ஓயாமல் எரிந்து கொண்டு இருக்கவேண்டும். முன் பூசின நீரானது உலர்ந்து போனவுடன் முன் பந்தை முன்போலவே நனைத்துக் கிண்ணத்தின் மேல் முற்றும் பூசவேண்டும். இவ்விதம் கிண்ணத்தின் மேல் பூசப் படும் நீரானது சுவறச் சுவற, பந்தை நனைத்து நனைத்துப் பூசி நீரை எல்லாம் பக்குவமாய்ச் செலுத்தி விட வேண்டும். ஏமாற்றம் அடையாமல் அடுப்பையும் மிதமாக எரித்து வர வேண்டும். இவ்விதம், செய்த பிறகு குளிர ஆறவிட்டுக் கோப்பையின் உதட்டைக் கத்தியால் கீறிவிட்டுக் கோப்பையை மெதுவாக எடுத்து கோப்பைக்குள் படிந்திருக்கும் பதங்கத்தை நன்றாய்ச் சுரண்டி பத்திரப்படுத்த வேண்டும்.

ஒரு பலம் (35 கிராம்) வங்கத்தை உருக்கி; ஒரு வராகன் எடை மேற்படி பதங்கத்தைக் கொடுக்க, வங்கத்திலுள்ள நீர் வற்றி இறுகிப் போகும். தரத்திற்குத் தகுந்ததுபோல நல்ல வெள்ளியைச் சேர்க்க வாத வெள்ளியாகும். இந்த வெள்ளியை உராவிப் பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து நோயின் வலிமை, உடல் வலிமை ஆகியவைகளுக்கு ஏற்றாற்போல் தக்க துணைமருந்துகளில் கொடுக்க அனேக நோய்கள் குணமாகும்.

## 411. செயற்கை வெள்ளி (வேறு)

உலர்த்தப்பட்ட கொல்லைப் பல்லிப் பூண்டுச் சமூலமும், உலர்த்தப்பட்ட மிளகரணை வேர், தோலுரிக்கப்பட்ட வெள்ளைப் பூண்டு ஆகிய மூன்றையும் வகைக்கு 1 வீசை. இம் மூன்றையும் துவாரமிடப்பட்ட ஒரு தோண்டியில் போட்டு வாய்க்கு மூடி செய்து பாகப்படி குழித்தைலம் இறக்கிக் கொள்ளவேண்டும்.

தூய்மை செய்யப்பட்ட வெள்ளைப் பாடாணம் ஒரே கட்டி யானது 5 பலம் (175 கிராம்). இதனை ஒரு சட்டியில் வைத்து அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து மேற்படி குழித்தைலத்தைச் சிறுகச் சிறுகப் பூசிச் சுருக்கிடவேண்டும். இவ்விதம் நான்கு சாமங்கள் சுருக்கிட்ட பின் ஆறவிட்டு எடுத்துக்கொள்ள வேண்டும்.

2. ஒரு சட்டியில் பொடித்த அரைப்படி சோற்றுப்பைப் பரப்பி, அதன்மேல் அரை வீசை அப்பளக்காரத்தைப் பரப்பி, அதன்மேல் முன் சித்தப்படுத்தின பாடாணக் கட்டியை வைத்து அதன்மேல் அரைப்படி அப்பளக்காரத்தைப் போட்டமுத்தி,

அதன்மேல் அரைப்படி சோற்றுப்பைப் போட்டமுத்திச் சட்டி வாய்க்குச் சாணக்கியால் மூடிக் கம்பியால் பலமாகக் கட்டி 7 சீலேமண் செய்துலர்த்தி அடுப்பிலேற்றித் தீபாக்கினியாக ஒரு சாமம் கமலாக்கினியாக மூன்று சாமம் ஆகக்கூடி நான்கு சாமம்எரித்து ஒருநாள் ஆற வைத்தெடுக்கக் கடுங்காரச் சுண்ண மாகி இருக்கும். இதனை எடுத்துப் புட்டியில் பத்திரப்படுத்தவும்.

பயன்படுத்தல் :— தூய்மை செய்த வெள்வங்கம், தூய்மை செய்த நாகம், தூய்மை செய்த தாமிரம் என்னும் மூன்றும் வகைக்கு $3\frac{1}{4}$ வராகனெடை. இம்மூன்றையும் உருக்கி ஒரு வராகன் சுண்ணத்தைக் கொடுக்க வெள்ளியைப் போலிருக்கும். இதன் தரத்திற்குத் தகுந்தபடி நல்ல வெள்ளியையும் சேர்த்து உருக்க வாத வெள்ளியாகும்.

இந்த வெள்ளியை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து உபயோகப்படுத்தினுல் பல நோய்களைக் குணப்படுத்தும்.

## 412. செயற்கை வெள்ளி (வேறு)

கட்டின வெள்ளைப் பாடாணம் 1 பலம் (35 கிராம்), இரசப் பதங்கம் 1 பலம் (35 கிராம்) ஆகிய இரண்டையும் வெள்ளருக்கன் பாலைச் சிறுகச் சிறுகவிட்டு மூன்று நாளரைத்து வில்லைத்தட்டி வெய்யிலிலுலர்த்திக் கொள்ளவேண்டும். பலாசு உப்பு 8 பலம் (280 கிராம்). இதனைப் பொடித்து இரண்டு பாகமாகச் செய்து ஒரு பங்கை ஒரு சிறு சட்டியில் வைத்துப் பரப்பி அதன்மேல் மறு பங்கைக் கொட்டிப் பரப்பி, மேல் சட்டிமூடி இரண்டு சீலைமண் செய்துலர்த்தி அடுப்பேற்றிக் கமலாக்கினியாக ஒரு சாமம் எரித்துக் குளிர ஆறினபின் எடுத்து அந்த வில்லையைக் கல்வத்தி லிட்டுப் பொடித்து முன்போலவே வெள்ளருக்கன் பாலைச் சிறுகச் சிறுக வார்த்து 3 நாள் அரைத்து வில்லை செய்துலர்த்திக் கொள்ள வேண்டும். 8 பலம் (280 கிராம்) பலாசு உப்பைப் பொடித்து இரண்டு பங்காக்கி ஒரு பங்கை ஒரு சட்டியில் பரப்பி அதன்மேல் வில்லையை வைத்து, அதன் மேலும் மறு பங்கு உப்பைப் பரப்பி மேற்சட்டிமூடி 2 சீலைமண் செய்து உலர்த்தி, அடுப்பேற்றி முன் போலவே கமலாக்கினியாய் ஒரு சாமம் எரித்து ஆறவிட்டு எடுத்துக்கொள்ளவேண்டும் இவ்விதம் 3 தடவைகள் மீண்டும் மீண்டும் வெள்ளெருக்கம் பாலைச் சிறுகச் சிறுக வார்த்து மும் மூன்று நாள்கள் அரைத்தும், உலர்த்தியும், பலாசு உப்பின் மத்தியில் வைத்து ஒவ்வொரு சாமம் கமலாக்கினியாக எரித்தும் எடுத்துக் கொள்ளவேண்டும். மேற்சொன்னபடி 5 தடவைகள் பாகப்படி செய்ய ஒரு வகை குருவாகும். இதனைப் பாடாண **இரசக்குரு** என்று சொல்வதும் உண்டு.

தூய்மை செய்த வெள்வங்கம், தூய்மை செய்த நாகம், தூய்மை செய்த தாமிரம். ஆகிய மூன்றும் வகைக்கு $3\frac{1}{4}$ வராகனெடை. இம் மூன்றையும் ஒன்றாகச் சேர்த்து மூசையிலிட்டுருக்கி, உருக்குமுகத்தில் ஒரு வராகனெடை மேற்படி பாடாண இரசக் குருவைக் கொடுக்க வெள்ளியைப் போலிருக்கும். இதன் தரத்திற்குத் தகுந்ததுபோல் நல்ல வெள்ளியைச் சேர்த்துருக்க வாத வெள்ளியாகும். இந்த வாத வெள்ளியை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தகுந்த விதமாக உபயோகிக்கின் அனேகவித நோய்கள் தீரும்.

**குறிப்பு:**—வெள்ளெருக்கம்பால் அகப்படாவிட்டால், நாட்டெருக்கம்பாலைச் சேர்த்துக் கொள்ளலாம். வங்கம், நாகம், தாமிரம் என்னும் மூன்றையும் சேர்த்துருக்கி முன் குருவைக் கொடுத்து எடுத்து நல்ல வெள்ளியைச் சேர்க்காமலே, உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்தும் உபயோகிக்கலாம். இந்தப் பிரயோகத்தாலும் அனேக வகை நோய்கள் தீரும். எல்லா வகைப் பற்பங்களும், செந்தூரங்களும் அந்தந்த அத்தியாயத்தில் முறையே விவரமாய் எழுதப்படும்.

## 413. தாமிர வெள்ளி (வேறு)

தூய்மை செய்து கட்டின வெள்ளைப் பாடாணம் $3\frac{1}{4}$ வராகனெடை. இது ஒரே கட்டியாக இருக்கவேண்டும். ஓர் ஆட்டுத் தும்பட்டிக்காயைத் துளைத்து மேற்படி பாடாணக் கட்டியை உள்ளே செலுத்தி, அந்தக் காயிலுள்ள துவாரத்தை அடைத்து, தனியான ஓர் இடத்தில் பத்திரமாய் வைக்க வேண்டும். ஐந்து நாள்கள் சென்றபின் எடுத்துச் சற்று காற்றில் ஆறவைத்து, மற்றோர் ஆட்டுத்தும்பட்டிக் காயைக் குடைந்து முன் பாடாணக் கட்டியை உட் செலுத்தி முன்போலவே ஐந்து நாள் வைத்து எடுத்து சற்று ஆறவைத்தெடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் நான்கு காய்களுக்குள், ஐந்தைந்து நாள்கள் கணக்காகக் கூடிய இருபது நாளும் வைத்தெடுத்துக் கொள்ள வேண்டும். பின்பிதனைக் கல்வத்திலிட்டுப் பொடித்து, இதனுடன் ஒரு வராகனெடை இரசப்பதங்கத்தைச் சேர்த்துக் கருவூமத்தன் இலைச்சாற்றை விட்டு, நான்கு சாமம் அரைத்து வில்லை செய்துலர்த்திச் சிறு அகலிலிட்டு மேலகல்மூடி, மூன்று சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் எடைக்கு மூன்று பங்கெடைக்கு விராட்டியில் புடமிட்டாறினபின் எடுத்துக் கொள்ள வேண்டும். இதுவும் பாடாண இரசக்குருவாகும்.

தூய்மை செய்யப்பட்ட 8 வராகன் எடை (58 கிராம்) தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில் ஒரு வராகன் எடை மேற்படி பாடாண இரசக் குருவைக் கொடுக்கத் தாமிரமானது வெள்ளியைப் போலாகிவிடும். இதன் தரத்திற்குத் தகுந்தது போல நல்ல வெள்ளியைச் சேர்த்துருக்கிக்கொள்ள வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து உடல் வலிமை, நோய் வலிமை, காலம், இடம் இவைகளுக்கு ஏற்ற விதமாகத் தக்க துணைமருந்துகளுடன் கொடுக்கக் குன்மவலி, குன்ம நோய்கள் (கர்ம நோய்கள்) முதலிய அனேக நோய்கள் குணமாகும்.

## 414. தாமிர வெள்ளி (வேறு)

தூய்மை செய்து கட்டின வெள்ளைப் பாடாணம் 1 பலம் (35 கிராம்), இரசப்பதங்கம் 1 பலம் (35 கிராம்), கனிந்த இரஸ்தாளி வாழைப்பழச்சதை 3 பலம் (105 கிராம்). முன்னிரண்டு பொருள்களையும் குழியம்மியிலிட்டு 2 மணி நேரம் நன்கு நெகிழ அரைத்து மெழுகு போலான பிறகு உருண்டையாக உருட்டி, ஒரு சிறு மண்குடுவையில் போட்டு குடுவை வாய்க்குச் சில்லிட்டு 7 சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் எடைக்கு 5 பங்கெடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் கொள்ளவேண்டும். இதுவும் ஒருவகைப் பாடாண இரசக் குருவாகும். ஆனால் வைத்த எடை சரியாய் இராமல் எடை குறையும்.

பத்துப் பங்கு தூய்மையான தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில் ஒரு பங்கு மேற்படி பாடாண இரசக் குருவைக் கொடுக்க, தாமிரமானது வெள்ளையாகி வெள்ளியைப்போல இருக்கும். இதன் தரத்திற்குத் தகுந்ததுபோல நல்ல வெள்ளியைச் சேர்த்துருக்கிக்கொள்ள வாத வெள்ளியாகும். இந்த வாத வெள்ளியை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து, தக்கவிதமாக உபயோகம் செய்தால் அனேக நோய்கள் குணமாகும்.

**குறிப்பு:**—அனேகர் மேற்கண்ட பாகத்தில் கட்டுப்படுத்தாத பாடாணத்தையும், கடை இரசத்தையும் சேர்த்துச் செய்து தூய்மையில்லாத் தாமிரத்தின்மீது கொடுத்துச் சற்று வெள்ளையானவுடன் அதனுடன் வெள்ளியைக் கலந்து சீவத்திற்கு முயற்சித்துத் திரிகின்றனர். அத்தகையினர், தங்கள் கவனத்தை அந்தப் பக்கம் செலுத்துவதற்குப் பதிலாய், மேற்கண்டபடி செய்து, அதனை மருந்தாக முடிக்கும்படியான முறைகளைக் கையாள்

வர்களாயின், தாம் முன்னடைந்த இலாபத்தைப் பார்க்கிலும் ஆயிரம் பங்கு அதிகமான இலாபத்தையும், புகழையும், புண்ணியத்தையும் அடையக்கூடும். மேலும், மேற்சொன்ன முறைக்கும், மற்ற முறைக்கும் இடையிலுள்ள பேதமானது உள்ளங்கை நெல்லிக்கனிபோலக் காணப்படும்,

## 415. தாமிர வெள்ளி

தூய்மை செய்து கட்டின வெள்ளைப் பாடாணம், தூய்மை செய்த வெள்வங்கம், வெண்காரம், தூய்மை செய்த இரசம். இந் நான்கும் வகைக்கு 1 பலம் (35 கிராம்). இவற்றுள் முன்னதாக வங்கத்தையும், இரசத்தையும் பாகப்படி தொந்தித்துக் கல்வத்தி லிட்டுப் பொடித்துக்கொள்ள வேண்டும். பின்னர்ப் பாடாணத் தைப் பொடித்து முடிவாய் வெண்காரத்தையும் சேர்த்து நன்ருய்ப் பொடித்துப் பின்பு, எருக்கம்பாலைச் சிறுகச்சிறுகச் சேர்த்துக் கைவிடாமல் நான்கு சாமம் அரைத்து இரண்டு மூன்றுநாள் காற்ருற வைத்து, ஓட்டில் வைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து வறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். முறுகாமல் பக்குவமாக இருக்கவேண்டும். இதனைக் கல்வத்திலிட்டு நன்ருய்ப் பொடித்து முன்போலவே எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்துக் கைவிடாமல் இரண்டு சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். இதில் ஈரப்பசை கொஞ்சமும் இல்லாமல் சுத்தமாக உலர்த்திக் கொள்ள வேண்டும். மேலும், எருக்கம்பால் நைப்பிருக்குமாகையால் தக்க விதமான வெய்யிலில் உலர்த்த வேண்டும். ஆகையால், இந்த மருந்தைச் செய்து முடிக்கக் கோடை காலமே அநுகூலமானது. மழைக் காலத்தில் செய்து முடிப்பது கடினம். ஒரு வேளை பிரயத்தனப்பட்டபோதிலும் சீக்கிரம் முடியாமல் அதிகத் தாமதமாகிறது; மருந்தும் கெட்டுப்போகிறது. மழைக்காலத்தில் இரண்டொரு தடவை இந்தப் பாகத்தைச் செய்ய முயற்சி செய்தும் முறைப்படி செய்ய முடியவில்லை. ஆகையால் இதனைச் செய்ய மழைக்காலம் தகுந்ததன்று எனத் தீர்மானிக்கப் பட்டது. கோடைக் காலத்திலோ அவ்விதக் கடினம் முதலிய இடையூறுகள் ஒன்றும் இல்லை. ஆனல், செய்பாகம், கைபாகம் முதலியவைகளைக் கவனித்துப் பார்க்க வேண்டியதுதான். இந்த விஷயங்கள் அவசியமென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே.

பின்பு, கிருஷ்ண அப்பிரகம், படிக்காரம், மிருதார்சிங்கி இம் மூன்றும் வகைக்கு ஒரு பலம் (35 கிராம்). இவைகளைக் கல்வத்தில் இட்டுப் பொடித்துத் தண்ணீரைச் சிறுகச் சிறுக விட்டரைத்து

மைபோலான பின்பு, முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற வில்லைக்கு, நாலாபக்கமும் சமமாயிருக்கும்படியாகக் கொஞ்ச மாகக் கவசித்து வெய்யிலில் வைத்து நன்ருயுலர்த்திக் கொள்ள வேண்டும். இது நன்ருயுலர்ந்ததன் அறிகுறியாவது இது உலர்ந்த பின் இரும்பைப்போல இறுகிப் போவதேயாகும்.

ஒருசட்டியிற் கல் சுண்ணம் அல்லது கிளிஞ்சிற் சுண்ணம் இரண்டங்குலக் கனம் பரப்பி, அதன் மேல் பொடித்த கறியுப்பை ஓர் அங்குலக் கனம் பரப்பி, நன்ருய் மட்டமாய் அழுத்தி அதன் மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற வில்லையை வைத்து, அதன் மேல் பொடித்த உப்பைச் செல்லத்தக்க அளவு எடுத்துக் கொள்ளவேண்டும். இந்த உப்பைத் திட்டமாகவும், செம்மை யாகவும் போடாவிட்டால் எரிக்கும்போது நல்ல சமயத்தில் கவசத்தில் வெடிப்புண்டாகிறது. அதனுல் மருந்தின் கவசத்திலும் வெடிப்புண்டாகி அதனுள்ளிருக்கிற மருந்தின் ஆவி வெளிப்பட்டு, அதன் சத்து வெளியாகிப் பிரயோசனமில்லாமல் போய்விடு கிறது. ஆகையால், இந்த விஷயங்களெல்லாம் சொற்பமானது என அலட்சியமாயிருந்து விடாமல் கவனித்து ஒவ்வொன்றையும் கிரமமாகவும், சாக்கிரதையாகவும் செய்ய வேண்டுமென வற்புறுத்துதலே அடிக்கடி ஒன்றையே மீண்டும் மீண்டும் சொல்லுவதன் கருத்தாகும்.

ஒரு சட்டியிற் கிளிஞ்சிற் சுண்ணும்பை அல்லது கற் சுண்ணும்பை இரண்டங்குலம் பரப்பி அழுத்தி, அதன்மேல் பொடித்த சோற்றுப்பை இரண்டங்குலம் பரப்பி அழுத்தி, அதன் மேல் முன் கவசத்தை வைத்து, பொடித்த சோற்றுப்பைக் கவசம் மறைந்து போகும்படியாகப் போட்டு, அதைச் சுற்றிலும் நன்ருய் அழுத்தி விட்டு, உப்பானது கவசத்தின்மேல் ஓர் அங்குலக் கனம் இருக்கும்படியாகப் பார்த்து, அதன்மேல் முன்போலக் கிளிஞ்சிற் சுண்ணும்பை அல்லது கற்சுண்ணும்பை இரண்டங்குலக் கனம் பரப்பி அழுத்தி மேல்சட்டி மூடி மூன்று சீலைமண் செய்து அடுப்பில் ஏற்றி, தீபாக்கினியாக ஒரு சாமம் எரித்துப் பிறகு கமலாக்கினி யாக இரண்டு சாமம் எரித்து, ஒரு நாளாற விட்டு மறு நாளாற விட்டெடுத்து, மேற்கவசமாகிய படிகாரம், மிருதார்சிங்கி, அப்பிரேகம் முதலியவைகளை நீக்கி, உள்ளேயிருக்கும் வில்லையை எடுத்துப் பொடித்துச் சீசாவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

மேற்கண்ட பக்குவங்களைச் செம்மையாகச் செய்தால் கவசம் ஆனது வெடித்துப் போகாமல் வைத்தது போலவே இருக்கும். ஏதேனும் விகற்பங்களுண்டாகி விட்டால் கவசமானது வெடித்து

இருக்கும். அப்படி நேரிட்டால் மேற்கவசமாகிய படிகாரம், மிருதார்சிங்கி, அப்பிரேகம் என்னும் இவற்றின் யோகத்தை நீக்கித் தனியே வைத்துக் கொள்ளவேண்டும். உள்ளேயிருக்கிற மருந்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து எருக்கம்பாலைவிட்டு ஒரு சாமமரைத்து வில்லை செய்து வெய்யிலிலுலர்த்தி முன்னெடுத்து வைத்திருக்கிற படிகாரம் முதலிய மேற்கவசத்தை மறுபடியும் முன்போலவே தண்ணீர் வார்த்தரைத்து முன் வில்லைக்கு முன் போலவே கவசித்து வெய்யிலில் வைத்துலர்த்தி முன்செய்த படியே சட்டியில் வைத்து எரித்துக் கொள்ளவேண்டும்.

தூய்மையான செம்பு 10 பங்கு. இதனை உருக்கி, உருக்கு முகத்தில் 1 பங்கு மேற்படி மருந்தைக் கொடுத்து நன்றாக ஊதி எடுக்க வெளுத்து வெள்ளியைப் போலிருக்கும். அதன் தரத்திற்குத் தகுந்தது போல வெள்ளியைச் சேர்த்து உருக்கிக் கொள்ள வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்க துணைமருந்துடன் சமயோசிதம் போல உபயோகித்தால் அநேக சுகங்களுண்டாகும்.

## 416. தாமிர வெள்ளி (வேறு)

தூய்மை செய்து கட்டப்பட்ட வெள்ளைப் பாடாணம் ஒரு பலம் (35 கிராம்), இரசப்பதங்கம் ஒரு பலம், இரண்டையும் கல்வத்தில் இட்டுப் பழச்சாற்றைச் சிறுக வார்த்து இரண்டு சாமம் அரைத்து வெண்ணெய்போலான பின்பு, உருண்டையாக உருட்டி ஒரு சிறு கலயத்தில் போட்டு அந்தக் கலயத்தில் முக்கால் பங்கு கரு ஊமத்தனிலைச் சாற்றை, அல்லது ஊதா நிறமான ஊமத்தன் சாற்றை விட்டுச் சில்லிட்டு, சிட்டகற்பொடியையும் வெல்லத்தையும் சமனாய்ச் சேர்த்து. மைபோலரைத்துக் கலயத்தின் வாய்ச் சந்தில் ஏழு சீலைமண் செய்துலர்த்தி, ஈரமுலர்ந்த பின்பு கவசத்தின் எடைக்கு 5 பங்கு எருவிற் புடமிட்டாறின பின் எடுத்தால், பாடாணமும், ரசமுஞ் சேர்ந்து உருகிக் களங்காக இருக்கும். ஒரு வேளை களங்காகாமல் இருந்தால் முன்போலவே அரைத்து முன்போலவே இன்னொரு புடமிட வேண்டும். இதற்குத் தியானது சரியாயமைந்துவிட்டால் ஒரு தடவையிலேயே களங்காகி விடும். அப்படி இல்லாவிட்டால், இரண்டொரு தடவை மீண்டும் மீண்டும் செய்ய வேண்டும். எத்தனை தடவைகளான போதிலும் பாடாணமும் இரசமும் சேர்ந்து களங்காகி விட வேண்டியது பிரதானம்.

வெண்மையாய்த் தூய்மை செய்த தாமிரம் 10 பங்கு. இதனை உருக்கி, உருக்கு முகத்தில் 1 பங்கு மேற்படி களங்கத்தைக்

கொடுத்து நன்றாய் உருக்கி எடுக்கத் தாமிரமானது வெள்ளியைப் போல இருக்கும். இதன் தரத்திற்குத் தகுந்தபடி நல்ல வெள்ளியைச் சேர்த்துருக்க வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்க துணைமருந்துகளுடன் உடல் வலிமை, நோயின் வலிமை முதலியவைகளுக்கு ஏற்றபடி உபயோகஞ் செய்தால் அநேக சுக குணங்களுண்டாகும்.

## 417. தாமிர வெள்ளி (வேறு)

தூய்மை செய்து கட்டின வெள்ளைப் பாடாணம் 1 பலம் (35 கிராம்), இதனை ஓட்டில் வைத்து, அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து, முருங்கையிலைக் கொழுந்தை இடித்துப் பிழிந்த சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து நான்கு சாமங்கள் சுருக்கிட்டு, நன்றாயாறின பின் எடுத்து அதன் மேலுள்ள தூசு முதலியவைகளைத் துடைக்காமல் இருந்த விதமாகவே வைத்துக்கொள்ள வேண்டும்.

நாட்டு வெண்காரம் 2 பலம் (70 கிராம்), இதனைக் கல்வத்தில் இட்டு மேற்படி முருங்கையிலைச் சாற்றை விட்டு மைபோல் அரைத்து, முன் தூய்மைப்படுத்தின கட்டிக்குப் பக்குவமாய்க் கவசித்து வெய்யிலில் வைத்து நன்றாய் உலர்த்திக் கொள்ள வேண்டும்.

5 பலம் (175 கிராம்) படிகாரத்தைப் பொடித்து, 2 பங்கு ஆக்கி ஒரு பங்கை ஒரு கலயத்தில் போட்டு அழுத்தி அதன்மேல் முன் தூய்மைபடுத்தி வைத்திருக்கிற பாடாணக் கட்டியை வைத்து அதன் மேல் மறு பங்கைப் போட்டு அழுத்தி, கலயத்தின் வாய்க்குச் சில்லிட்டு உளுந்து மாவால் ஏழு சீலைமண் செய்து வெய்யிலில் நன்றாயுலர்த்திக் கொள்ளவேண்டும்.

செங்கற்பொடி 2 படி, உப்புத்தூள் 1 படி இவ்விரண்டையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஒரு சட்டியில் மேற்படி தூளிற் பாதியைப் போட்டு, அதன்மேல் முன்பு தயார் செய்து வைத்திருக்கிற கலயத்தை வைத்து, அதன்மேல் மறுபாதித் தூளைப் போட்டழுத்தி மறுசட்டியால் மூடி ஏழு சீலைமண் செய்து உலர்த்தி அடுப்பேற்றி தீபாக்கினியாக நான்கு சாமம் எரித்து ஒரு நாளாற விட்டு எடுக்க, கலயத்திலுள்ள பாடாணமானது சுண்ணமாகியிருக்கும்.

வெண்மையாகத் தூய்மை செய்யப்பட்ட தாமிரம் 10 பங்கு, இதனை உருக்கி, உருக்கு முகத்தில் ஒரு பங்கு இந்தச் சுண்ணத்தைக் கொடுத்து நன்றாய் உருக்கி எடுக்கத் தாமிரம்

வெள்ளியைப் போலிருக்கும். இதன் தரத்திற்குத் தகுந்தது போல் நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்கிக் கொள்ள வாத வெள்ளியாகும். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்ப மாகச்செய்து உபயோகித்தால், அநேக நோய்கள் தீரும்.

இம் முறைகளெல்லாம் மிகவும் அருமையானவைகளாகை யால் அனுபவசாலிகளை யடுத்து அவர்கள் மூலம் இதன் உபயோகங்களான வாதமுறை, வைத்திய முறைகளில் பற்பல வகைத் தொந்த முறைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த பாகங்களின் இரகசியங்களும், தொந்த முறைகளும் அனுபவசாலிகளுக்குத் தெரிந்தே இருக்கும். மேலும், இச்சிறு நூலில் ஒவ்வொரு பாகத்தின் இரகசியங்களையும், மர்மங்களையும் எழுதுவதானால், இது வெகுவாய் விரிந்து படிப்பவர்களுக்குப் பெருமலைப்பை உண்டாக்கி விடும். மேலும், அவைகளெல்லா வற்றையும் எழுதி முடியாதாகையால், முக்கியமானவைகளையும், அவசியமானவைகளையும் மாத்திரம் இங்கு எழுதுவோம். அறிவாளிகளுக்கு இவ்வளவு போதுமானவைகளென்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

## 418. தாமிர வெள்ளி (வேறு)

தூய்மை செய்து கட்டப்பட்ட பாடாணம் 5 பலம் (175 கிராம்), இது ஒரே கட்டியாயிருக்க வேண்டும். 10 பலம் (350 கிராம்) சுக்கான் கற்களைப் பொடித்துத் திருகுக் கள்ளிப் பாலைச் சிறுகச் சிறுக வார்த்துக் கை விடாமல் நான்கு சாமங்கள் அரைத்து, மேற்படி பாடாணக் கட்டிக்குச் சிறுகச் சிறுகப் பூசி உலர்த்திக் கவசித்து முடிவாய் கடும் வெய்யிலில் வைத்து நன்றாய் உலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு சட்டியில் நாலங்குலம் கனம் சிறுமணலைப் பரப்பி அதன்மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பாடாணக் கட்டியை வைத்து, அதன்மேலும் சிறுமணலைக் கொட்டிப் பரப்பி விடவேண்டும். ஆனால், இந்த மணலானது பாடாண கட்டிக்கு மேல்நாலங்குல கனம் இருக்க வேண்டும். பாடாணக் கட்டியைச் சுற்றிலுமுள்ள அளவைக் கணக்கிடலாகாது. பின்பு மேற்சட்டி மூடி7 சீலமண் செய்துலர்த்தி அடுப்பேற்றித் தீபாக்கினியாக 4 சாமம் எரித்து ஒரு நாளாறவிட்டு மறு நாளெடுக்கப் பாடாணமானது சுண்ணமாகி இருக்கும்.

எரிப்பு போதாமல் அல்லது வேறுவித அசந்தர்ப்பங்களால் சுண்ணமாகாமல் வைத்தபடி கட்டியாய்ப் போவதுமுண்டு.

அந்தச் சமயங்களில், மறுபடியும் முன்னெடையில் அரைவாசி சுக்கான் கற்களை முன் போலவே திருகு கள்ளிப்பாலே விட்டு அரைத்துக் கவசித்து முன் போலவே வைத்தெரித்து எடுக்கச் சுண்ணமாகி விடும்.

இந்தச் சுண்ணத்தைத் தக்க துணைமருந்து அல்லது தக்க இளகம் முதலியவைகளில் மிகவும் குறைந்த அளவாய்ச் சேர்த்து உபயோகிக்க, குட்டநோய், பெருநோய் ஆகிய அநேக நோய்கள் தீரும்.

வெள்ளையாகத் தூய்மை செய்யப்பட்ட 10 பங்கு தாமிரத்தை உருக்கி ஒரு பங்கு மேற்படி சுண்ணத்தைக் கொடுத்து நன்ருயுருக்கி எடுக்க வெள்ளியைப் போல இருக்கும். இதன் தரத்திற்குத் தகுந்தது போல நல்ல வெள்ளியைச் சேர்த்துருக்க வாத வெள்ளியாகும். இதனைச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து உபயோகித்தால் மேற்கண்ட பலவகை நோய்கள் தீரும்.

## 419. தாமிர வெள்ளி (வேறு)

வெள்ளைப் பாடாணம் 6 பலம் (210 கிராம்) ஒரு பானையில் $\frac{3}{4}$ படி தாளிக்காதக் கற்சுண்ணும்பைப் போட்டுப் பரப்பி அதன்மேல் முன் பாடாணக் கட்டியை வைத்து அதன்மேலும் $\frac{3}{4}$ படி கற் சுண்ணும்பைப் போட்டு பரப்பி திறமான ஒரு படி காடியை விட்டு அடுப்பேற்றித் தீயிட்டு எரித்து வருகையில், அரைப்படி நீர் சுண்டினவுடன் மறு அரைப்படி காடி நீரை விட்டும் வர வேண்டும் அந்த அரைப்படி காடி நீரும் சுண்டினவுடன் மறுபடியும் அரைப்படி காடி நீரும் விட வேண்டும். இவ்விதம், அந்தக் காடிநீர் சுண்டச் சுண்ட விட்டு வந்து நான்கு சாமம் சரிவர எரித்து முடிவாய் நீரெல்லாம் சுண்டின பின்னெடுத்துக் கொள்ள வேண்டும்.

மேற்கண்ட விதமாகவே மீண்டும் மீண்டும் இரண்டு தடவைகள் செய்து கொள்ள வேண்டும். இவ்விதம் கூடிய மூன்று தடவைகளும் பக்குவமாகவும் கைபாகமாகவும் செய்தெடுத்தால் பாடாணத்தில் எண்ணெய்ப் பசை முதலியவைகளற்று சுத்தமாகிவிடும்.

கொம்புக் கள்ளிப் பழுப்பையிடித்துப் பிழிந்த சாறு $1\frac{1}{4}$ படி. முன் தூய்மைபடுத்தின பாடாணக் கட்டியை ஒரு இரும்புச் சட்டியில் வைத்து அடுப்பேற்றி மெதுவாய் எரித்து, மேற்படி

சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நாலாபக்கங்களும் படும்படியாகப் புரட்டிப் புரட்டிச் சுருக்கிட வேண்டும். இவ்விதம் 4 சாமங்கள் சுருக்கிட வேண்டும். நன்ருயாறின பின்பு எடுத்துத் தண்ணீர் விட்டுக் கழுவி தூய்மை செய்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

மறுநாளும் மேற்படி கொம்புக் கள்ளிப் பழுப்பையிடித்துப் பிழிந்த சாறு $1\frac{1}{4}$ படி. இந்தச் சாற்றையும் முன் சுருக்கிட்டபடியே அந்தக் கட்டிக்குச் சுருக்கிட வேண்டும். நன்ருய்க் குளிர ஆறின பின்பு முன்போலவே தண்ணீர் விட்டுக் கழுவி எடுத்துக் கொள்ள வேண்டும்.

மூன்ரும் தடவையும் முன்போலவே $1\frac{1}{4}$ படி மேற்படி கொம்புக் கள்ளிச் சாற்றை மேற்படி கட்டிக்கு 4 சாமம் சுருக்கிட வேண்டும். இவ்விதம் மூன்று தடவைகள் மேற்கண்டபடி முறையாகவும், பாகப்படியும் செய்து தீ முதலியவைகளைக் கிரமமாகப் போட்டும் சாற்றைக் கிரமமாகச் செலுத்தியும் அனுபவசித்தமாகவும் செய்து கொண்டால் பாடாணமானது ஒருவகையாகக் கட்டுப்பட்டுப்போகும். சுருக்கிடும்போது புகையானது கண் முதலிய இடங்களில் படாமலும் மூக்கு முதலிய இடங்களில் செல்லாமலும் சாக்கிரதையாக இருக்க வேண்டும்.

செம்மையாகப் பழுத்த கத்தரிப்பழங்களை அம்மியில் வைத்து அரைத்து முன் பாடாணக் கட்டிக்கு ஒரு விரல் கனம் நாலாப் பக்கமும் கவசித்து அதன்மேல் மூன்று சீலைமண் செய்து, ஒரு சாண் சதுரக்குழி தோண்டி அக் குழியில் நாலங்குலம் மணல் கொட்டி, அதன்மேல் முன்கவசத்தை வைத்துப் பின்பு குழி நிறைய மணலைக் கொட்டி அதன்மேல் 200 பலம் (7000 கிராம்) விராட்டியை அடுக்கி புடமிட்டு ஆறின பின் கவசத்தின் மேலே உள்ள மணலை நீக்கி கவசத்தை எடுத்து அந்தக் கவசத்தை அக் குழியிலேயே முன்பு மேலிருந்த பக்கத்தைக் கீழாகவும், கீழிருந்த பக்கத்தை மேலாகவும் திருப்பி வைத்து முன்போலவே 200 பலம் (7000 கிராம்) விராட்டியை வைத்துப் புடமிட்டு ஆறினபின் கவசத்தை எடுத்து மேலுள்ளதையெல்லாம் எடுத்து சுத்தமாக்கிப் பாடாணக் கட்டியை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேண்டும். மேற்கண்டபடி கவசத்தைக் கீழ் மேலாக்கி இரண்டு புடமிட வேண்டும். அப்படி செய்யாவிட்டால் கட்டியின் இரண்டு பக்கங்களும் சமமாய்ப் பாகப்படாது.

இரண்டாம் தடவையும் செம்மையாய்ப் பழுத்த கத்தரிப் பழத்தை அரைத்து முன்கட்டிக்கு நாலாப்பக்கத்திலும் ஒருவிரல்

கனம் கவசித்து அதன்மேல் இரண்டு, மூன்று சீலைகள் செய்து முன்போலவே குழியில் புடமிட வேண்டும். பிறகு முன்போலவே மறுபக்கம் திருப்பியும் புடமிட வேண்டும்.

இவ்விதம் கத்தரிப்பழத்தை அரைத்த விழுதால் கவசித்துக் கவசித்து, ஒரு கவசத்தையே திருப்பித் திருப்பி இருபுறமும் மாற்றி, மாற்றியும் ஆறு தடவைகள் செய்து கட்டியின் மீதுள்ள அழுக்கு முதலியவைகளைப் போக்கித் தூய்மை செய்து வைத்துக் கொள்ளவேண்டும்.

பேரண்டத்தைக் கல்லுரலிலிட்டு இருப்புக் கடப்பாறையால் இடித்து வடிகட்டினத் தூளைக் கல்வத்திலிட்டு குப்பைமேனி இலைச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டிக் காய வைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி 5 சீலை மண் செய்து கவசத்தின் எடைக்கு 100 பங்கெடை விராட்டியில் புடமிட்டெடுக்கச் சுண்ணமாகி இருக்கும். வெண்மையாகவும், சுத்தமானதாகவும் சுண்ணமாகா விட்டால் முன்போலவே குப்பை மேனிச் சாற்றை விட்டரைத்து முன் போலவே புடமிடச் சுண்ணமாகி விடும். இதுவே இங்கு **பேரண்டச் சுண்ணமாகும்.**

இந்தச் சுண்ணம் சுமார் 3 பலம் (105 கிராம்), சித்தஞ் செய்து கொள்ள வேண்டும். நாயுருவியுப்பு 3 பலம் (105 கிராம்) சுவரில் பூசப்பட்ட சுண்ணும்பின் பழங்காரையை எடுத்து இடித்து வடிகட்டியத் தூள் 3 பலம் (105 கிராம்) தாளிக்காத கற் சுண்ணும்பு ஒரு பலம் (35 கிராம்) (இதனையும் வடிகட்டிக் கொள்ள வேண்டும்).

முன் சித்தப்படுத்தின பாடாணம் 1 பலம் (35 கிராம்), வாலை ரசம் அல்லது பதங்கித்த ரசம் (இதைப் பார்க்கிலும் இரசப் பதங்கத்தைச் சேர்த்தால் மேலான குணத்தைக் கொடுக்கிறது). மூலாம் வெள்ளிப் பொடி 1 பலம் (35 கிராம்) வெள்ளிக் காடிக் காரம் $\frac{1}{4}$ வராகன் எடை, கட்டின வீரம் $\frac{1}{4}$ வராகன் எடை.

**செய்முறை:**—பாடாணத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து, அதனுடன் இரசத்தை அல்லது ரசப் பதங்கத்தைச் சேர்த்து இரசம் மடிகிற வரையில் அரைத்துப் பின்பு வீரத்தையும் காடிக்காரத் தையும் சேர்த்தரைத்து முடிவில் வெள்ளிப் பொடியையும் சேர்த் தரைத்து எல்லாம் ஒன்ருய்க் கலந்த பின்பு உமிழ் நீரை விட்டு மூன்று நாள் அரைத்து வில்லை செய்து கடும் வெய்யிலில் 2 நாள் உலர்த்த வேண்டும். பின்பு, $3\frac{1}{4}$ வராகன் எடை பேரண்டச் சுண்ணத்தை உமிழ் நீர் விட்டுக் குழைத்து மேற்படி வில்லை

முழுவதும் சம பாகமாய்க் கவசித்து வெய்யிலிலுலர்த்த வேண்டும். இக்கவசம் நன்ருய் உலர்ந்த பின்பு, அதன்மேல் $3\frac{1}{4}$ வராகன் எடை நாயுருவி உப்பை உமிழ்நீர் விட்டரைத்து வில்லை முழுவதும் சமமாய்க் கவசம் செய்து வெய்யிலிலுலர்த்த வேண்டும். இக் கவசமும் ஈரப்பசையின்றி உலர்ந்த பின்பு, $3\frac{1}{4}$ வராகனெடை சுண்ணும்புக் காரையை உமிழ்நீர் விட்டரைத்து மூன்ரும் கவசமாய்ச் செய்து வெய்யிலில் உலர்த்த வேண்டும். இந்தக் கவசமும் நன்ருய் உலர்ந்த பின்னர், $3\frac{1}{4}$ வராகன் எடை கற் சுண்ணும்பை உமிழ்நீரால் அரைத்து நாலாங் கவசமாகச் செய்து வெய்யிலிலுலர்த்த வேண்டும். இதுவும் நன்ருய் உலர்ந்த பின்பு, கற்சுண்ணும்பைக் குழைத்து மெல்லிய சல்லாத் துண்டில் தடவி அவ்வில்லையின் மேல் கவசம் செய்ய வேண்டும். இவ்விதம், 5 துண்டுகளைக் கவசம் செய்து வெய்யிலில் 3 அல்லது 4 நாள்கள் காய வைக்க வேண்டும். கொஞ்சமும் ஈரவாடையின்றி உலர்த்திக் கொள்ள வேண்டும்.

ஒரு சிறிய சட்டியில் மூன்று விரற் கனம் மெல்லிய சிறு மணலைக் கொட்டி சரியாய் மட்டமாய்ப் பரப்பி, அதன்மேல் சித்தப்படுத்தி வைத்திருக்கிற வில்லையை வைத்து, அதன் மேலும் 4 விரற்கனம் மணலைக் கொட்ட வேண்டும். அதன் மத்தியில் இருந்து அளவெடுத்தால் 4 விரல் கனம் மணல் இருக்க வேண்டிய தென ஞாபகத்தில் வைக்க வேண்டும். மேலும், இந்த மணலானது சட்டிவாய் மட்டமாகவும் இருக்க வேண்டும். பின்பு, மேற்சட்டி மூடி 10 சீலைமண் செய்து அடுப்பேற்றிக் காலை 6 மணி முதல் 12 மணி வரையில் கமலாக்கினி யாகவும் 12 மணி முதல் மாலை 6 மணி வரையில் காடாக்கினியாகவும் எரித்து, அடுப்பின்மேலேயே ஆறவிட்டு, மறுநாள் பகல் 12 மணிக்குச் சட்டியின் கவசத்தை நீக்கி, மேற்சட்டியை எடுத்து மணலை நீக்கி மருந்தை எடுத்து, முன்னர் துணிக் கவசத்தையும், மறுபடி சுண்ணும்புக் கவசத்தை யும், அதன் பின்பு சுண்ணும்புக் காரைக் கவசத்தையும், அதன் பின்பு நாயுருவி உப்புக் கவசத்தையும், அதன் பின்பு பேரண்டச் சுண்ணக் கவசத்தையும் நீக்கினல் மருந்தானது சுண்ணும்பு போல இருக்கும். இதுவே பாடாணக் குருவாகும். மேற்கண்ட கவசங்களுள் பேரண்டச் சுண்ணக் கவசத்தையும், நாயுருவியுப்புக் கவசத்தையும் தனித்தனியாக கவனத்துடன் எடுத்துவைத்துக் கொள்ளவும். ஏனெனில், இவை மறுபடியும் உபயோகப்படும் என்பதே.

முருங்கைப் பட்டையையிடித்துப் பிழிந்த சாறு 2 ஆழாக்கு, வாத நாரயண இலையையிடித்துப் பிழிந்த சாறு2 ஆழாக்கு,

வெண்காரத்தூள் 1 பலம் (35 கிராம்), நவச்சாரத்தூள் 1 பலம் (35 கிராம்), புளித்தமோர் 2 ஆழாக்கு, எல்லாவற்றையுங் கலந்து 10 நாள் வைத்து தாமிரத் தகட்டைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சி மேற்படி யோகத்தில் தோய்க்க வேண்டும். நன்ருயாறின பின்பு மறுபடியும் பழுக்கக் காய்ச்சி மறுபடியும் தோய்க்க வேண்டும். இவ்விதம், அந்தச் சாறெல்லாம் தீர்ந்து போகிற வரை தோய்க்க வேண்டும். தாமிரமானது வெளுத்துப்போம். அப்படி சுத்தமாய் வெளுக்காவிட்டால் முன்போலவே சாறு முதலிய வைகளைச் சேர்த்துக் காய்ச்சித் தோய்த்து வெள்ளையாக்கிக் கொள்ள வேண்டும்,

மேற்கண்ட விதமாய் வெள்ளையாக்கப்பட்ட தாமிரம் 10 பங்கு. இதனைத் துண்டுகளாக வெட்டி மூசையிலிட்டு வெண்காரம் கொடுத்துருக்கி நன்ருய்க் கண்விட்டாடும் போது ஒரு பங்கு மேற்படி பாடாணக் குருவைக் கொடுத்து, கரியால் நன்ருய்த் துழாவிக் கொடுத்து எல்லாம் ஒன்ருய்க் கலக்கும்படியாக உருக்கி சாணிப்பாலிற் சாய்க்க வேண்டும். ஆறின பின், அதை நாலாய்த் துண்டித்து மறுபடியும் மூசையிலிட்டு வெண்காரங் கொடுத்துருக்கி சாணிப்பாலிற் சாய்க்க வேண்டும். இவ்விதமே மறுமடியும் இரண்டு தடவைகள் சாய்த்தெடுத்துக் கொள்ளவும். இது வெள்ளியைப் போலவேயிருக்கும். இதனை உராவிச் செந் தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தகுந்த துணைமருந்துகளில் உபயோகித்தால் குட்டம், பெருவியாதி, குன்மநோய் முதலிய பல நோய்கள் தீரும். இந்த வாதவெள்ளி 4 பங்கு, நல்ல வெள்ளி 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி எடுத்து உராவி செந்தூரமாக அல்லது, பற்பமாகச் செய்து தக்க இளகங்களுடன் அல்லது மணப்பாகுகளுடன் உபயோகிக்க தாது நட்டம், இந்திரிய நட்டம், விந்து ஒழுக்கு, கனவு ஒழுக்கு, முதலிய பிறப்பு உறுப்பு சம்பந்தமான பல நோய்கள் தீரும். இந்த வகை சம்பந்தமான ஒருவகை பற்பத்தால் யானைக்கால், அண்டவீக்கம், மேகசுரம், மூர்ச்சை, சுரம், கால்வீக்க சுரம், முதலியவைகளும் தீருகின்றன. மேற்கண்ட முறையானது மிகவும் அருமையானது. அதை செய்து கொடுத்து அனுபவிப்பவர்களுக்கே இதன் அருமை யும், பெருமையும் தெரியும்; இதன் மேன்போக்கு முதலியவைகள் அனுபவசாலிகளான அநேகருக்குத் தெரிந்தே இருக்குமாகையால் அம்முறைகளை அவர்களை அடுத்துக் கேட்டுக் கொள்ளவேண்டும்.

## 420. தாமிர வெள்ளி (வேறு)

சீமைச் சுண்ணும்பைப் போலிருக்கும் வெள்ளைப் பாடாணம் 3 பலம் (105 கிராம்), இதனை மீண்டும் மீண்டும் வண்ணுன்

வெள்ளாவியில் 7 தடவைகள் வைத்துத் தூய்மை செய்து கொள்ளவேண்டும். அப்படி கூடாத பட்சத்தில் முன் சொல்லப் பட்டிருக்கும்வகைகளில் ஏதேனும் ஒரு வகையாகவும் தூய்மை செய்து கொள்ளலாம்.

ஒருபடி சோறு சமைக்கும்படியான ஒரு சட்டியில் அரைவாசி திறமான பூநீரைப் பொடித்துப் போட்டழுத்தி முன் பாகப்படி தூய்மை செய்த பாடாணக் கட்டியை வைத்து அதன்மேல் சட்டி நிறைய திறமான பூநீரைப் பொடித்துப் போட்டழுத்தி மேற் சட்டி மூடி ஏழு சீலைமண் செய்து அடுப்பேற்றி ஆவாரை அல்லது கள்ளிவிறகால் காடாக்கினியாய் 4 சாமம் எரித்துக் குளிர ஆறின பின் பாடாணத்தை எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

கொல்லன் கிட்டம், குசவன் மண், கந்தைத்துணி இம் மூன்றையும் சமபாகமாய் சேர்த்திடித்துக் தூளாக்கிக் கல்வத்தி லிட்டு, முட்டை வெள்ளையம்பிலியை விட்டு மைபோலரைத்துக் குகை செய்து வெய்யிலில் நன்றாய் உலர்த்திக் கொள்ளவேண்டும். இதற்கு வட்டமான சில்லு ஒன்றும் சித்தப்படுத்திக் கொள்ள வேண்டும்.

முன் சித்தப்படுத்தின பாடாணம் 1பலம் (35 கிராம்), சரிகை வெள்ளிப்பொடி 1 பலம் இவ் விரண்டையும் கல்வத்திலிட்டு அரைத்து மேற்படி குகையில் போட்டு மேற்சில்லால் மூடி 5 சீலை மண் செய்து ஈரமில்லாமல் நன்றாய் உலர்த்தி 5 பலமுள்ள 20 விராட்டியில் புடமிட்டாறினபின் எடுத்துக் கொள்ள வேண்டியது. இதற்கு வெள்ளி களங்குவெனப் பெயர்.

வெண்காரம், ரஸ்தாளி வாழைப்பழச்சதை, கடைப் பாடாணம் இம் மூன்றும் வகைக்குச் சமனெடை; இவற்றைக் கல்வத்திலிட்டு மைபோலரைத்து ஒரு தாமிர டப்பியில் அதன் வாய்மட்டம் நிறைத்து மேல் மூடியால் மூடி 7 சீலைமண் செய்து உலர்த்தி $1\frac{1}{2}$ முழ உயரமும் $1\frac{1}{2}$ சாண் அகலமுள்ள புடமொன்று போட்டெடுத்துக் கொள்ள வேண்டும். இதற்கு நொறுக்குத் தாமிரமென்றுப் பெயர்.

மேற்படி நொறுக்குத் தாமிரம் 10 வராகனெடை, இதனைக் குகையிலிட்டுருக்கி, உருக்குமுகத்தில் ஒரு வராகன் எடை மேற்படி வெள்ளிக் களங்கைக் கொடுத்து நன்றாய் உருக்கி எடுத்துச் சாணிப் பாலில் சாய்க்க வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் மூன்று தடவைகள் செய்து கொள்ள வெள்ளியைப் போல இருக்கும். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்க துணைமருந்துகளுடன் பயன்படுத்தினால் குட்டம் முதலிய அநேக நோய்கள் தீரும்.

## 421. தாமிரவெள்ளி (வேறு)

தூய்மை செய்யப்பட்ட வெள்ளைப் பாடாணம் 2 பலம். இது ஒரே கட்டியாயிருக்க வேண்டும். வேப்பங்காய், வேப்பம்பிஞ்சு என்ற இவற்றை இடித்துப் பிழிந்த சாறு $1\frac{1}{4}$ படி. பாடாணக் கட்டியை ஒரு ஓட்டில் வைத்து அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து மேற்படிச் சாற்றை சிறுக சிறுக வார்த்துச் சுருக்கிட வேண்டும். இது சற்றேரக்குறைய 4 அல்லது 5 சாமங்கள் செல்லும். நன்ருய் ஆறினபின்பு கட்டியின் மீதுள்ள அழுக்கு முதலியவைகளை நீக்கிச் தூய்மை செய்து கொள்ள வேண்டும். இதன் பின்பு, கொம்புக் கள்ளிப் பழுப்பையிடித்துப் பிழிந்த சாறு $1\frac{1}{4}$ படி. முன் கட்டியைச் சட்டியில் வைத்து அடுப்பேற்றி இந்தக் சாற்றைச் சிறுக சிறுக வார்த்துச் சுருக்கிட வேண்டும். இதற்கும் சற்றேரக்குறைய 4 அல்லது 5 சாமங்கள் செல்லும். நன்ருயாறின பின்பு கட்டியின் மீதுள்ள அழுக்கு முதலியவைகளை நீக்கித் தூய்மை செய்து கொள்ளவேண்டும்.

நாட்டுக் காட்டாமணக்குப்பால் $\frac{1}{2}$ படி, முன் கட்டியைச் சட்டியில் வைத்து மேற்படி பாலை சிறுகச் சிறுகப் பூசிப் பூசிச் சுருக்கிடவேண்டும். இவ்விதம், செய்ய ஒருவகைக் கட்டாகும்.

வெள்ளையாக்கப்பட்ட தாமிரம் 8 பங்கு, வெள்ளி 2 பங்கு இவ்விரண்டையும் சேர்த்து உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி மருந்து ஒரு பங்கைக் கொடுத்துக் கரியால்மூடி நன்ருக ஊதி எடுத்து ஆறினபின் அதை நாலாய் வெட்டி மறுபடியும் உருக்க வேண்டும். இவ்விதம், இரண்டு மூன்று தடவைகள் மீண்டும் மீண்டும் உருக்கிக் கொள்ள ஒருவகை வாத வெள்ளியாம்.

இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்க துணை மருந்துகளுடன் உபயோகிக்க, அநேக குணங்களுண்டாம். இன்னும், இதன் தரத்திற்குத் தகுந்தபடி நல்ல வெள்ளியையும் சேர்த்து பற்பமாகவும் செந்தூரமாகவும் செய்து உபயோகிப்பதால் இயற்கை வெள்ளியைப் பற்மாக அல்லது செந்தூரமாகச் செய்து உபயோகிக்கும் குணங்களைப் பார்க்கிலும் மேலான குணங்களுண்டாம்.

## 422. நாக வெள்ளி

கட்டின சிறு கண்ணுகத்தை உருக்கிப் பொடுதலைச் சாற்றில் சாய்க்க வேண்டும். நன்ருய்க் குளிர ஆறினவுடன் மறுபடியும் உருக்கி மேற்படி சாற்றில் சாய்க்கவேண்டும். இவ்விதம், 5 அல்லது

6 தடவைகள் செய்து எடுத்து, அதற்குச் சமனெடை பாகப் படுத்தின இரசத்தை தொந்தித்து, ஒரு சட்டியிலிட்டு நாய் நாக்குக் கள்ளிப்பாலால் ஒரு சாமம் சுருக்கிட்டெடுத்துக் கொள்ள வேண்டும்' பின்பு, நல்ல வெள்ளி 1 பங்கு, மேற்சொல்லப்பட்ட நாகரசக் கூட்டு 1 பங்கு, இம்மூன்றையும் சேர்த்துருக்க வெள்ளி யைப் போலிருக்கும். இதனை மீண்டும் மீண்டும் இரண்டு மூன்று தடவைகள் உருக்கி எடுத்து உராவிச் செந்தூரமாகச் அல்லது பற்பமாகச் செய்து தகுந்த துணைமருந்துகளுடன் உபயோகித் தால் எருவாயில் இரத்தம் விழுதல், அதிசாரம்' கிராணி, இரணப்பிர மேகம், மேகவெட்டை, வெள்ளை ஒழுக்கு, உட்சூடு, சீதரத்தக் கழிச்சல், பித்தநோய் எருவாய் முளைப்புண் முதலிய பல நோய் தீரும்.

## 423. நாக வெள்ளி (வேறு)

கட்டின நாகம் ¼ பலம், பாகப்படுத்தின இரசம் 3 பலம், இவ் விரண்டையும் பக்குவமாய்த் தொந்தித்து எடுத்துக் கொள்ள வேண்டும். தூய்மை செய்த வெள்வங்கம் 1 பலம் (35 கிராம்), இதனை உருக்கி, உருக்குமுகத்தில் முன் சித்தப்படுத்தி வைத்து இருக்கிற நாகரசக் கூட்டைக் கொடுத்து எடுத்துக் கொள்ள வேண்டும். பின்பு உருக்கி, நஞ்சுமுறிச்சான் சாற்றில் சாய்க்க வேண்டும். ஆறின பின் எடுத்து முன் போலவே உருக்கிச் சாய்க்க வேண்டும். இவ்விதம், ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் உருக்கிச் சாய்த்தால் வங்கமானது கெட்டிப்பட்டு வெள்ளியைப் போல் இருக்கும். இதனை உராவிச் செந்தூரமாகச் செய்து தக்க துணை மருந்துகளுடன் சேர்த்து உபயோகித்துவந்தால் குட்டநோய், மேக நோய், இரண நோய் முதலியவைகள் தீரும்.

இன்னம், இதன் தரத்திற்குத் தகுந்தபடியும் நல்ல வெள்ளி யைச் சேர்த்துருக்கிச் செந்தூரித்துத் தக்க துணைமருந்தில் உப யோகித்து வர அநேக குணங்களுண்டாகும்.

**குறிப்பு** :— மேற் சொல்லப்படட நாக சம்பந்த முறை களிலும் இனி சொல்லப்படும் நாக சம்பந்த முறைகளிலும் மற்றப் பாகங்களைப் பார்க்கிலும் அதிக கவனத்தோடு இருக்க வேண்டும். மேலும், ஒவ்வொரு விவரத்தையும் அனுபவ சித்தமாய்க் கை யாண்டு வருபவர்களை அடுத்துத் தெரிந்துகொண்டால் மிகவும் நன்மையாயிருக்கும்.

## 424. வாத வெள்ளி (வேறு)

கட்டின வெள்ளைப் பாடாணம் 2 பலம் (70 கிராம்). இது ஒரே கட்டியாயிருக்க வேண்டும். பால்நண்டை இடித்துப் பிழிந்த திரவம் 1 படி. மேற்படி கட்டியை ஓட்டிலிட்டு, மேற்படி திரவத்தைச் சிறுகச் சிறுக வார்த்து, மிதமான தீயாகவும் எரித்து 4 சாமம் சுருக்கிட வேண்டும். கொடிவேலிவேர்ப்பட்டை 10 பலம் (350 கிராம்), இது ஈரமானதானால் உத்தமம்; அப்படி அகப்படா விட்டால் உலர்ந்த வேர்ப்பட்டையை அம்மியில் வைத்துத் தண்ணீர் தெளித்து அரைத்து, முன்கட்டிக்கு நாலாப் பக்கமும் சமமாயிருக்கும்படி கவசித்து, அதன் மேல் முன்னிடித்த துண்டு, திப்பி எல்லாவற்றையும் கவசம் செய்து கொள்ள வேண்டும். ஆற்றலரியிலையை அரைத்த விழுதை ஒரு சிறுசட்டியில் அரைவாசி நிறைத்து அதன் மேல் முன் சித்தப்படுத்தி வைத்து இருக்கிற கவசத்தை வைத்து அதன் மேலும் ஆற்றலரியிலையை அரைத்த விழுது சட்டி நிறைய வைத்து மேற்சட்டியானது பொருந்த மூடி ஏழு சீலைமண் செய்து 5 பலம் (175 கிராம்) உள்ள 15 விராட்டியிற் புடமிட வேண்டும். இந்தச் சட்டியானது கவசத்தை மட்டமாய்க் கொள்ளத் தக்கதாயிருக்க வேண்டும். ஒரு வேளை பெரிதாயிருந்தால் முன் விழுதை அதிகமாய்ப் பூச நேரிடும். இந்தப் புடமிடக் கொஞ்சம் அனுபவமும் புத்தி கூர்மையும் அவசியம். புடமானது குளிர ஆறின பின்பு எடுத்துப் பாடாணத்திற் கொஞ்சத்தை நெருப்பிலிட, மயிரிழை போன்ற புகை உண்டானால் உத்தமம். அதிகப் புகை உண்டானால், சுருக்கிடாமல் முன் போலவே புடமிட வேண்டும். இந்தப் பாடாணமானது புகையாவிட்டால் சண்டிக் கட்டியாகி விடும். அப்பொழுதும் அதிகமாய் உபயோகப் படாது. ஆகையால், இதனை அதிக கவனத்துடன் செய்து கொள்ள வேண்டும்

வெள்ளையாக்கப்பட்ட தாமிரம் 10 வராகன் எடை, நல்ல வெள்ளி $3\frac{1}{4}$ வராகன் எடை இவ்விரண்டையும் சேர்த்துருக்கி உருக்குமுகத்தில் 1 வராகன் எடை மேற்படி பாடாணத்தையும், $\frac{1}{2}$ வராகன் எடை நாகத்தையும் கொடுத்துக் கரியால் மூடி நன்றாய் ஊதி எடுத்து ஆறின பின் துண்டித்து மறுபடியும் உருக்கிக் கொள்ள வேண்டும். மறுபடியும் இதனுடன் $3\frac{1}{4}$ வராகன் எடை நல்ல வெள்ளியைச் சேர்த்துருக்கிக் கொள்ள வாத வெள்ளியாகும். வங்கத்தைக் கொடுத்தூத இந்த வெள்ளி ஓடிப் போகும். ஆனால், மேற்படி வாத வெள்ளியை உராவிப் பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து தக்க துணைமருந்துடன் உபயோகித்தால் அநேக நோய்கள் தீரும். மேற்கண்ட விதமாய்

வாதமுறையாக உலோகங்களைச் சேர்த்துப் பக்குவப்படுத்துவதால், சேர்க்கப்பட்ட உலோகங்களின் இயல்புகளைத் தவிர நூதன சுபாவமுண்டாகி விடுகிறது. ஆகையால் வாதமுறைகளைச் சொல்லும் நூல்களில் அதிகம் சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், நம்மவர்கள் பெரும்பாலோர் தக்க பயிற்சி இல்லாமலும், தகுந்த ஆசான்களைப் பின்பற்றாமலும், தான்தோன்றித் தம்பிரான்களாய்த் தாம் கெடுவதுடன் மருத்துவ நூல்களையும் பொய்யாக்கி விடுகின்றார்கள்.

## 425. வெள்வங்க வெள்ளி (வேறு)

தூய்மை செய்யப்பட்ட வெள்வங்கம் 1 பலம் (35 கிராம்). இதனை மெல்லிய தகடாய்ச் செய்து கொள்ள வேண்டும். தொட்டாற்சிணுங்கியை அரைத்த விழுதைத் தகட்டின் மீது ஒரு அங்குல கனம் இருபுறமும் கவசித்து ஒரு ஓட்டில் வைத்து மேலோடு மூடி 5 சீலமண் செய்து, கவசத்தின் எடைக்கு 20 பங்கு எடை விராட்டியிற் புடமிட்டாறினபின் எடுக்க வங்கமானது வெட்டையாகி இருக்கும். இந்தப் புடத்தைக் காற்றில்லாத இடத்தில் அல்லது, காற்றடக்கமான இடத்திற் பக்குவமாகவும் கைபாகமாகவும் புடம் போட்டால் ஒரே புடத்தில் வெட்டையாகி விடும்.

முறைபிசகானல் ஒரு புடத்தில் வெட்டையாகமல் அரை குறையாய்ப் போகும். ஆகையால், மேற்படி வங்கத்தில் வெட்டையாகாத பாகத்தை மாத்திரம் எடுத்துத் தகடு தட்டி அல்லது எல்லா வங்கத்தையும் ஒன்றாய்ச் சேர்த்து உருக்கிக் கூடிய வரையில் தகடு அடித்து, முன் இலையை அரைத்து முன் மாதிரியே புடமிட்டு, ஆறினபின் எடுக்க வங்கமானது வெட்டையாகிப் போகும். இம்முறையிலும் வெட்டை ஆகாவிட்டால் மூன்றாம் முறையும் முன்போலவே அந்த இலையைக் கவசித்து புடமிட்டு எடுக்க, அவசியம் வெட்டையாகிப் போகும். புடம் போடுவதில் அதிகக் கைப்பழக்கம் வேண்டியது. விராட்டியின் தடிப்பு முதலியவைகளாலும், விராட்டியுடன் சேர்க்கப்பட்டிருக்கும் உமி, மரத்தூள் முதலியவைகளாலும், விராட்டியானது ஈரமற்று உலர்ந்திருத்தல், ஈரமாயிருத்தல் முதலியவைகளாலும் புடத்தை அடக்கி அடுக்கல், பரவலாய் அடுக்கல் முதலியவைகளாலும், புடம் போடப்படும் இடமானது அதிக காற்றுள்ள இடமாக இருத்தல், காற்று அடக்கமாயிருத்தல் முதலியவைகளாலும், மேலும் பல வேறுபாடுகளாலும் நேரிடுகின்றன. இவ்வகைகள் எல்லாம் அனுபவசாலிகள் மூலமாக அல்லது, அறிவின் சாமர்த்தியத்தால் அல்லது அனுபவத்தால் தெரிந்து தேர்ந்திடவேண்டும்.

தீயினுல் சமையல் முதலிய நமது சாப்பாட்டுப் பாகங்களில் எத்தனை விதக் கெடுதிகள் நேரிடுகிறதென நமது அனுபவத்தில் பார்த்து விடுகிறோம். இதற்கே இவ்வாறு ஏற்பட்டால் மற்ற தற்குக் கேட்க வேண்டுமோ? ஆகையால், புடமிடுவதிலும் பல நுட்பங்களைக் கவனிக்க வேண்டியது மிகவும் அவசியம் என்பது நன்கு விளங்கும். இந்நுணுக்கங்கள் அற்ப, சொற்பமென எண்ணி, அவற்றைக் கவனிக்காமல் போவதே, அப்பாகங்கள் முற்றும் நிறைவேறுவதற்குத் தடையாய், அரைகுறையாய் முடிகிறது. சில சமயம் அடியோடே கெட்டும் போகிறது. ஆகையால்தான் "தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது" என்னும் பழமொழி வழங்கி வருகிறது. இதனுடன் குறிப்பினு லேயே அறியக்கூடிய கல்வி அறிவின் தேர்ச்சி முதலியவைகளும் இருக்கவேண்டியது. இத்தன்மைகள் அமையப்பெற்றவர்களுக்கே வைத்தியம், வாதம், சோதிடம் முதலியவைகள் சித்தியாகும். அத்தன்மைகளமையப் பெற்ருர்க்கு ஒருபோதும் மேற்படி பாகங்கள் கைவல்லியம் ஆகாதெனத் தெரிந்திருக்க வேண்டும்.

**குறிப்பு**:—தொட்டாற் சிணுங்கி, தொட்டாற் வணங்கியென இருவகைகளுண்டு; மேற்கண்ட இருவகைகளும் உருவத்தில் ஒன்ருய் இருப்பினும் அதன் குணத்தின் வேறுபாட்டால் தெரிந்துக் கொள்ளலாம், தொட்டாற் சிணுங்கி என்பது அதைக் தொட்டவுடன் அது சிணுங்கிக் கொள்ளும். தொட்டால் வணங்கி என்பது அதைத் தொட்டவுடன் சுருங்கிக் கொள்ளும். ஆகையால்தான் இதற்கு தொட்டாற் சுருங்கியென மறுபெயரும் உண்டு. மூலிகைகளைக் கண்டு அறிவதிலும் பற்பலவகை அனுபவங்கள் வேண்டும். மூலிகைகளின் வேறுபட்டாலும், மருந்தின் குணம் மாறுபட்டுப் போவதும் உண்டு. ஆகையால், ஒவ்வொன்றையும் நிச்சயித்து அறிந்த பின்னரே உபயோகிக்க வேண்டும்.

முன்பு தூய்மைபடுத்தின வெள்வங்கமானது வெட்டையாகி விட்டதாவென நிச்சயித்தறிந்து, சுத்தமாய் வெட்டையாகி விட்டால், பக்குவமென எடுத்துக் கொள்ளவேண்டும். வெள்ளை முருக்கன் பூவை நிழலிலுலர்த்திப் பொடித்து வைத்துக் கொள்ள வேண்டும். முன் வங்க வெட்டையை உருக்கி மேற்படி வெள்ளை முருக்கன் பூத்தூளைச் சிறுகச் சிறுகச் சுருக்குக் கொடுத்து வர வங்கத்திலுள்ள நீரெல்லாம் சுத்தமாய் வறண்டு போகும். மேற்படி வங்கம் 2 பங்கு, நல்ல வெள்ளி 1 பங்கு. இவ்விரண் டையும் சேர்த்து உருக்கிக் கொள்ள வாத வெள்ளியாகும். இதனை

உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்கத் துணை மருந்துகளுடன் உபயோகித்தால் பற்பல வகைக்கொடிய நோய்களும் தீரும். புகழும் உண்டாகும்.

## 426. தாமிர வெள்ளி (வேறு)

தூய்மை செய்து கட்டின பாடாணம் 1 பலம் (35 கிராம்), வெள்ளெருக்கம்பால் 5 பலம் (175 கிராம்) ஒரு சிறு புதுக் கலயத்தில் மேற்படி வெள்ளெருக்கம் பாலை விட்டு அதில் மேற்படி கட்டியைப் போட்டுக் கலயத்தின் வாய்க்குச் சில்லிட்டு 3 சீலைமண் செய்து வைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு புதுப்பானையில் நான்கு விரற்கனம் மணலைக் கொட்டி, அதன்மேல் முன் சித்தப்படுத்தின கலயத்தை வைத்துப் பானை நிறைய மணலைக் கொட்டி, பானையின் வாயைச் சாணக்கியால் மூடி இரண்டு சீலைமண் செய்து அடுப்பேற்றி, அதிகமாக அல்லது குறைவாகத் தீயிடாமல் மிதமான தீயாக இடவேண்டும். 2 மணி நேரம் எரித்து அடுப்பிலுள்ள நெருப்பை எல்லாம் எடுத்து விட்டு பானையை அடுப்பில் இருந்தபடியே ஆற வைக்க வேண்டும். நன்றாய்க் குளிர ஆறினபின் கலயத்தை மெதுவாக அசைத்துப் பார்க்க, கலயத்தில் ஏதேனும் பால் எஞ்சி நின்றால் முன் போலவே மறுபடியும் வைத்தெரித்துப் பாலைச் சுண்ட வைத்துக் கொள்ள வேண்டும்.

மறுபடி அந்தக் கட்டியை எடுத்துக்கொண்டு, அந்தக் கலயத்திலேயே முன்போலவே 5 பலம் (175 கிராம்) எருக்கம் பாலை விட்டு, முன் கட்டியையும் போட்டு, கலயத்தின் வாய்க்குச் சில்லிட்டு, முன்போலவே மணலில் வைத்து 2 மணி நேரம் எரித்து எடுக்க வேண்டும். இவ்விதம், இந்தக் கட்டியானது, சுண்ணமாகிற வரையில் செய்து கொள்ள வேண்டும். இது சுமார் 7 அல்லது 8 தடவைகள் மீண்டும் மீண்டும் செய்து கொண்டால் சுண்ணம் ஆகிவிடும். சிலசமயங்களில் மேலும் இரண்டு மூன்று தடவைகள் அதிகமாய்ச் செய்து கொண்டால், அவசியம் சுண்ணமாகி விடும்.

வெள்ளையாக்கின தாமிரம் $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்). இதனை உருக்கி உருக்குமுகத்தில் 1 குன்றி எடை மேற்படி சுண்ணத்தைச் சேர்த்து நன்றாக உருக்கி எடுத்து அதனுடன் $\frac{3}{8}$ வராகனெடை வெள்ளியைச் சேர்த்துக் கொள்ளலாம். அல்லது, அதன் தரத்திற்குத் தகுந்தபடி அதிகமாகவும் வெள்ளியைச் சேர்த்துக்கொள்ளலாம். இதனை உராவிச் செந்தூரமாகச் செய்து தக்க துணைமருந்துகளுடன் உபயோகிக்க அனேகவித நோய்கள் தீரும்.

**குறிப்பு:**—மேற்கண்ட பாகத்தில் சொல்லப்பட்டிருக்கும் கைபாகங்களைக் கவனித்து முறைப்படி செய்து கொள்ள வேண்டும். முறை பிசகினல் பாகமும் பிசகும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆகையால், எல்லா பாகங்களையும் கண்ணும், கருத்து மாய்ச் செய்து முடிக்க வேண்டுமென அடிக்கடி வற்புறுத்தப்படு கிறது. மேற்கண்டபடி வெள்ளெருக்கம்பால் அகப்படாவிட்டால் காட்டெருமைப் பாலை சேர்த்துக் கொள்ளலாம். ஆனல், முன்னதற்கு காரம் அதிகமாயிருக்கும். மேற்கண்ட பாடாணச் சுண்ணத்தைத் தனியாக தக்க இளகங்களில் அல்லது மணப்பாகு களில் சேர்த்தும் பிணிதீர்க்க உபயோகிக்கலாம்.

## 427. சீமைப் பித்தளை (வெள்ளி)

வெடியுப்பு, நவச்சாரம் இவ்விரண்டும் சமபாகம் எடுத்து ஒவ்வொன்றையும் தனித்தனியே நன்ருய்த் தூள் செய்து வைத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு பானையில் இரண்டு விரற்கனம் மணலைப் பரப்பி, அதன் மேல் நவச்சாரத்தூளை நெற்கனம் பரப்பி, அதன்மேல் வெடியுப்புத் தூளை நெற்கனம் பரப்ப வேண்டும். மறுபடியும் அதன்மேல் நவச்சாரத் தூளை ஓர் நெற்கனம் பரப்ப வேண்டும். இவ்விதம், நவச்சாரம் ஓர் அடுக்கும், வெடியுப்பு ஓர் அடுக்குமாக முறையே ஒன்றன்மேல் ஒன்ருய் அடுக்காய்ப் பரப்பி, முடிவில் நவச்சாரத் தூளிருக்கும்படியாகப் பார்த்து, அதன்மேல் இரண்டு விரற்கனம் மணலைப் பரப்பி பானை வாய்மூடி 5 சீலைமண் செய்து அடுப்பேற்றி இலந்தை விறகால் எரித்து வரவேண்டும். மேற்சட்டியில் நன்ருய் சூடு காண்கிற வரையில் எரித்து, அப்படியே ஆறவிட்டெடுக்க, சாரமும், வெடியுப்பும் உருகி ஒன்ருய் இருக்கும். அதன்கீழ் மேல் உள்ள மணலைத் துடைத்துத் தூய்மையாக்கிப் பொடித்து வைத் துக்கொள்ளவும்.

சீமைச் சுண்ணும்பு போலிருக்கிற வெள்ளைப் பாடாணம் தேவையான அளவு இதனை ஒரு மண் கோப்பையிலிட்டு அக்கட்டி முழுகும்படியாக திருகுக்கள்ளிப்பால் விட்டு மூன்று நாள் வைத்துக் கோப்பையின் வாய்க்கு அகலிட்டு மூடி மூன்று சீலைமண் செய்து கட்டியின் மீதுள்ள பால் கரிந்து போகும்படியாக மாத்திரம் இலகு புடமாய்ப் போட்டெடுத்துக் கொள்ள வேண்டும்.

மறுபடியும் அந்தக் கட்டியை முன்போலவே ஒரு மண் கோப்பையில் வைத்து, முன்போலவே அந்தக் கட்டி முழுகும்படி யாக மேற்படி திருகுக்கள்ளிப்பாலைக் கறந்து மூன்று நாள் வைத்து

நான்காம் நாள் கோப்பைக்கு அகல்மூடி சீலமண் செய்து பால் மாத்திரம் கரிந்து போகும்படியாக இலகு புடமிட வேண்டும். மூன்றுந் தடவையும் மேற்கண்ட விதமாகவே புடமிட்டெடுத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட விதமாக மூன்று புடமிட்டெடுத்தால், பாடாண மானது ஒருவித கட்டாகும். வெள்ளையாகத் தூய்மை செய்யப் பட்ட தாமிரம் 6 பங்கு. இதனை மூசையிலிட்டு உருக்கி உருக்கு முகத்தில் மேற்படி பாடாணம் 1 பங்கு இதனைக் கட்டியாகவே கொடுத்து நன்ருக உருக்கி எடுத்துக் கொள்க, தாமிரமானது சுத்த வெள்ளையாக இருக்கும,

நைப்பான் அல்லது முதல் தரமான ஜெர்மன் சில்வர் என்னும் சீமைப்பித்தளை 5 பங்கு முன் சித்தப்படுத்தின தாமிரம் 2 பங்கு ஊத்துக்கட்டி வெள்ளி 8 பங்கு, இம்மூன்றையும் ஒன்ருய்ச் சேர்த்து மூசையிலிட்டு முன்சித்தப்படுத்தி வைத்திருக்கிற சார வெடி யோகத்தில் 3 பங்கு எடுத்து அவற்றுள் ஒரு பங்கையும் சேர்த்து உருக்க வேண்டும். உருகும்போது மற்ருெரு பங்கையும் நன்ருக உருக்கி மூசையை எடுக்கப் போகும்போது மற்ருெரு பங்கையும் கொடுத்து. நன்ருய்க் கரியால் துழாவி விட்டுச் சில்லிட்டு நன்ருக ஊதி எடுத்துக் கொள்ள வேண்டும்.

இதனை மேற்கண்ட விதமாய்ப் பக்குவமாய்ச் செய்து கொள் ளின் வெள்ளியைப்போல் இருக்கும். இதனை வாதவெள்ளி அல்லது மட்டவெள்ளி எனச் சொல்வார்கள்.

இந்த வாதவெள்ளியை உராவி வெள்ளிப் பற்பம், வெள்ளிச் செந்தூரம் என்ற மருந்துகளை முறைப்படி செய்து ஆங்காங்கு சொல்லப்படும் தக்க துணைமருந்துகளுடன் கொடுக்க அநேகவித நோய்களும் குணமாகும். அதன் முறைகளும் இதன் துணைமருந்து விதங்களும் பிறகு எழுதப்படும்.

## 428. சீமைப் பித்தளை வெள்ளி

முதல் தரமான ஜெர்மன் வெள்ளி 1 பலம் (35 .கிராம்), இதனைச் சிறு சிறு துண்டுகளாக உராவிக் கொள்ள வேண்டும். வெண்காரம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்). இதனை நன்ருகத் தூள் செய்துக் கொண்டு இவ்விரண்டு பொடிகளையும் ஒரு மூங்கில் குழாயில் அடைத்து வாயிற்கு அந்த மூங்கில் ஆப்பையே வைத்திடித்துக் குழாய் முழுவதும் மூன்று சீலமண் செய்துலர்த்தி 5 பலமுள்ள 6 விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்து உருக்கச் சீமை

பித்தளையானது வெகு நேர்த்தியாக உருகும். அப்படி உருகா விட்டால் முன்போலவே மற்ெருரு தடவை செய்து கொள்ள சீமைப் பித்தளையானது நைப்பாகி சீக்கிரம் உருகிப் போகும்.

இதன் தரத்திற்குத் தகுந்தபடி எட்டிற்கொன்று, அல்லது நாலிற்கொன்று நல்ல வெள்ளியைச் சேர்த்து உருக்கிக் கொள்ள வாத வெள்ளியாகும். இதனை உராவிப் பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து உபயோகித்தால் அநேக நற் குணங் களுண்டாகும். இந்தப் பாகமானது கடினமானதாகையால் பாடுபடுவர்களுக்கே கைவல்லியமாகும்.

ஆட்டுமூளை எலும்பைச் சுட்டகரி 1 பங்கு, செம்மண் 1 பங்கு இரண்டையும் கலந்து கல்வத்திலிட்டு பழச்சாறு விட்டு நன்கு நெகிழ 1 சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்திக் கொள்ள வேண்டும். நன்ருக உலர்ந்த பின்பு பொடித்துத் தட்டோட்டில் குழி செய்து முன் பொடியைப் போட்டு, சரவுலையில் வைத்து நன்ருய் ஊதி எடுத்து கசடற்றபின் தரத்திற்குத் தகுந்தபடி வெள்ளியை அல்லது பொன்னைச் சேர்த்து பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து உபயோகிக்கலாம். அதன் தரத்திற்கும் அந்தந்த முறைக்கும் தகுந்தபடி குணமுண்டாகும். இவையெல் லாம் அனுபவமுறையாகத் தெரிந்து கொள்ள வேண்டியதே ஒழிய இங்கெழுதுவதால் எல்லாவற்றையும் தெரிந்துக் கொள்ளக் கூடாது.

## 429. சீமைப் பித்தளை வெள்ளி (வேறு)

பிரமதண்டு விதையை அம்மியில் வைத்து தண்ணீர் வார்த்து மைபோல அரைத்துத் திறமான சீமைப் பித்தளைத் தகட்டிற்கு நாலாப்பக்கமும் கவசித்து, முள்ளில்லாத சப்பாத்திக் கள்ளியை கீறி அதற்குள் வைத்து, நூலாற்கட்டி, மூன்று சீலைமண் செய்து கவசத்தின் எடைக்குப் பத்து பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுத்துக் கொள்ள வேண்டும். மறுபடியும் முன் போலவே முன் விதையை அரைத்து முன் தகட்டிற்குக் கவசித்து முன்போலவே முள்ளில்லாத சப்பாத்திக் கள்ளி மடலைக் கீறி அதற்குள் வைத்து மூடி நூலாற் கட்டிச் சீலைமண் செய்து முன் போலவே புடமிட்டெடுத்துக் கொள்ள வேண்டும்.

இவ்விதமே மீண்டும் மீண்டும் 4 அல்லது 5 புடமிட மேற்படி தகடானது சுத்தமாகியிருக்கும். இவ்விதமே சுத்தியானது 3 பங்கு, நல்லவெள்ளி 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கிக்

கொள்ளவாத வெள்ளியாம். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து உபயோகிக்க, சிறந்த குணங்கள் உண்டாகும்.

## 430. சீமைப் பித்தளை வெள்ளி

*கடல் நுரை 10 பலம் (350 கிராம்), இதனைக் கல்லுரலில் இடித்துத் தூள் செய்து துணியில் வடிகட்டி இரண்டு பாகமாகச் செய்து கொள்ளவேண்டும். இக்கடல்நுரைப் பொடி கொள்ளும் படியான சிறு கலயம், நாட்டு நவச்சாரம் 1 பலம் 35 கிராம்), இது ஒரே கட்டியாயிருக்க வேண்டும். மேற்படி கலயத்தில் மேற் படி கடல் நுரையின் ஒரு பாகத்தைப் போட்டு விரலால் நன்ருய் அழுத்தி விட்டு அதன் மேல் மேற்படி நவச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேல் கடல்நுரைத் தூளின் மறுபங்கையும் போட்டு அழுத்தி கலயத்தின் வாய்க்குச் சில்லிட்டு 3 சீலைமண் செய்துலர்த்தி, கவசத்தின் 3 பங்கெடை வராட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுக்க, நவச்சாரமானது தேங்காய்ச் சதையைப் போல் வெளுத்து இறுகியிருக்கும். தீ அதிகமாகிவிட்டால் அதன் தரத்திற்குத் தகுந்ததுபோல வைத்த எடையில் $\frac{1}{2}$, $\frac{1}{4}$, $\frac{1}{8}$, பாக மிருக்கும். தீயானது மிதமாயிருந்தால் வைத்த எடையில் மூக்கால் பாகமிருக்கும். இதன் திட்டம் அனுபவத்தில் தெரிந்து போகும்.

திறமான முதல்தர சீமைப் பித்தளை 3 வராகனெடை, வெள்ளையாகத் தூய்மை செய்யப்பட்ட தாமிரம் 1 வராகன் எடை, நல்ல வெள்ளி 4 வராகனெடை, இவை எல்லாவற்றையும் ஒன்ருய் ஒரு மூசையிற் போட்டுருக்கி, நன்ருய் கண்விட்டாடும் போது, ஒரு வராகனெடை முன் சித்தப்படுத்தின நவச்சாரத் தைத் தூள் செய்து, அதில் கொஞ்சமெடுத்துக் கிராசித்துக் கரியால் கோலாடி, நன்ருயூதி, மறுபடியும் கொஞ்சமெடுத்துக் கிராசித்துக் கோலாட வேண்டும், இவ்விதம் அந்த ஒரு வராக னெடை நவச்சாரத்தூளைச் சிறுக சிறுகப் பல தடவைகளாகக் கிராசித்துக் கோலாடி,.எல்லாத் தூளும் சென்றபின் எடுத்து ஆற வைத்து எடுத்து, அதை நாலாய் துண்டித்து மறு மூசையில் இட்டு உருக்கிக் கொள்ளவும். இவ்விதம் 2 அல்லது 3 மூசைகள் மாற்றி உருக்கி 'எடுக்க வாத வெள்ளியாம். இதனை உராவித்

---

• கடல்நுரை இருவகையாகும். ஒன்று புற்றைப் போலிருக்கும். அதுதான் பெரும்பான்மை மருந்துகளில் உபயோகிக்கப்படுகிறது. மற்ருென்று, தகடு தகடாயிருக்கும். அது பெரும்பாலும் வண்டி முதலியவைகளின் வருணத்தைத் தேய்த்துக் கழுவ உபயோகமாகிறது. இங்கு வேண்டியதும் பின் சொல்லப் பட்டதே.

தூள் செய்து இனி பற்பவகைகளில் அல்லது செந்தூர வகைகளில் சொல்லப்படும் முறைப்படி பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து தக்க துணை மருந்துகளுடன் உடல் வலிமை நோய் வலிமை முதலியவைகளைத தெரிந்து உபயோகித்தால், இயற்கை வெள்ளிப் பற்பத்தால் அல்லது இயற்கை வெள்ளிச் செந்தூரத்தால் குணமாகும் நோய்களைப் பார்க்கிலும் அநேகவிதமான நோய்கள் தீரும்.

**குறிப்பு** ;—இதற்கு முன்னும் சீமைப் பித்தளைத் தூய்மை, அது சம்பந்தமான சில முறைகள் முதலியவைகளும் சொல்லப் பட்டிருப்பதால், அவ்வகைகளை நிறுத்தி வேறு சில முறைகளைச் சொல்வோம்.

## 431. இரச வெள்ளி

ஒரு வராகனெடை தாளகத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து, ஊதா மணத்தக்காளி இலையை இடித்துப் பிழிந்த சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து, 2 சாமநேரம் அரைத்துப் பயறளவு மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி எடுத்துக் கொள்ள வேண்டும்.

பதினாறு வராகனெடை நல்ல வெள்ளியை உருக்கி, உருக்கு முகத்தில் மேற்படி தாளக மாத்திரைகளில் ஒன்றைக் கிராசித்து சற்று தாமதித்து அது எரிந்து போனவுடன் மறு மாத்திரையைக் கிராசிக்க வேண்டும். இவ்விதம், ஒன்றன் பின் ஒன்றாய் மாத்திரை களை எல்லாம் கிராசித்த பின்னர் வெள்ளியை நன்றாயுருக்கி, தண்ணீரில் நனைக்காமல், மூசையுடன் எடுத்து ஆறவைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

பருமனான முட்டை ஓட்டில் 2 முதல் $2\frac{1}{2}$ பலம் ($87\frac{1}{2}$ கிராம்) இரசத்தை விட்டு அதனுடன் மேற்படி வெள்ளிக் கட்டியையும் போட்டு, ஓர் சட்டியில் நாலங்குலக் கனம் மணலைக் கொட்டி, அதன்மேல் வைத்து 1 சாமம் எரித்து, இரசமானது நன்றாய், சூடுகண்டவுடன் எடுத்து, சற்று உரத்த துணியில் வைத்துக் கொண்டு, மற்றொரு பீங்கான் கிண்ணத்திற் பிழிய, கெட்டிப் பட்ட இரசமெல்லாம் துணியில் நின்று போகும். கெட்டிப்படாத இரசமெல்லாம் பீங்கான் கோப்பையில் விழுந்து போகும். துணியிலுள்ள இரசவெண்ணெயை மாத்திரம் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். இரண்டாம் தடவையும் அந்த இரசத்தை முன் முட்டை ஓட்டில் விட்டு, முன் வெள்ளிக் கட்டியையும் போட்டு மணற் சட்டியின் மீது வைத்து முன்போலவே எரித்து முன்போலவே பிழிந்து வெண்ணெயை எடுத்துக் கொள்ள வேண்டும்.

இவ்விதம், சேர்க்கப்பட்ட வெண்ணெயை எல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து ஓர் உருண்டையாகச் செய்து புளிநரளேச் சமூலத்தை அரைத்த விழுதை மேற்படி உருண்டையின்மீது இரண்டங்குலக் கனமிருக்கும் படியாகக் கவசித்து அக்கவசித்தின் எடைக்கு 4 அல்லது 5 பங்கெடை விராட்டியிற் புடமிட்டாறின பின் எடுத்து. முன்போலவே புளி நரளேச் சமூலத்தை அரைத்த விழுதை முன் இரச வெண்ணெய் உருண்டையின் மீது ஓர் விரற்கனம் கவசித்து முன்போலவே செய்து புடமிட வேண்டும். இவ்விதம் 7 தடவைகள் செய்து உருக்கி எடுக்க, இரச வெண்ணெய் எடைக்கு அரை, காலேயரைக்கால், கால், என்னும் பாக விகிதம் வெண்ணெயின் தரத்திற்குத் தக்கபடி வெள்ளி காணும். இதனே அனுபவமாகவும், பக்குவமாகவும் செய்தால் ஒன்றுக்கு முக்கால் காணும்.

**குறிப்பு** :—புளிநரளேச் சமூலத்தை அரைத்த விழுதைக் கவசித்து புடமிடுவது போலவே கருவூமத்தன் காய்க்குள் வைத்துப்புடமிடுவது உத்தமம். இல்லாவிடில் நாட்டு ஊமத்தன் காய்க்குள் வைத்து முன்போலவே புடமிட்டுக் கொள்ளலாம். காய்க்குள் வைத்துப் புடமிடுவதைப் பார்க்கிலும் 15 அல்லது 20 சாரணே செய்து கொள்வது அதனினும் உத்தமம். ஓர் பானேயில் முக்கால் பாகம் மணலேக் கொட்டி அடுப்பேற்றித் தீயை அதிகரித்துக் கொண்டே இருக்க வேண்டும். மணலானது நன்ருய்ச் சூடு கண்டவுடன், இரச வெண்ணெயை மேற்படி ஓர் வகை ஊமத்தன் காய்க்குள் வைத்து 3 சீலேமண் செய்து, அடுப்பின் மீதுள்ள மணலுக்குள் புதைத்தக் காயானது வெந்த பதத்தில் எடுத்துக் குளிர ஆறின பின் எடுத்து முன்போலவே காய்க்குள் வைத்து சீலேமண் செய்து மேற்படி மணலுக்குள் புதைத்து எடுப்பதே சாரணேயாகும். இவ்விதம், நமக்கு போதுமான வரையில் எத்தனே தடவையாயினும் மீண்டும் மீண்டும் செய்து கொள்ளலாம். ஆனுல் புடமிடுவதைப் பார்க்கிலும் மேற்கண்டபடி சாரணே செய்வது மிகவும் சுலபமாகவும், தூய்மையாகவும் செய்யக்கூடும். புடமிட்டால் பல காரணங்களால் அக்கினி குறைந்து போக அல்லது அதிகமாக ஏதுவாகும். மேற்கண்ட சாரணேயில் தீ குறைந்து போகாமல் அல்லது அதிகப்படாமல் மிதமாய்ச் செய்து கொள்ளக் கூடுமென்பதே.

மேற்கண்ட வெள்ளியானது கலப்பற்ற தூய்மையான வெள்ளியாகும். இது பெரும்பாலும் மருந்திற்கு உபயோகிக்கத் தக்கதே ஒழிய மற்றவைகளுக்காகாது. இதை மருந்தாகச் செய்து உபயோகித்தால் மாத்திரம் சிரமத்திற்குத் தகுந்த லாபமும், புண்ணியமும், புகழுங் கிடைக்கும். மற்ற வழியாய்

உபயோகிக்க முயற்சித்தால் ,அவ்வளவாய்ப் பயன்படாது என்பதே தீர்மானம்.

இந்த வெள்ளிக் கட்டிக்கு இரசத்தை வெண்ணெயாக்கும் சக்தி குறைந்து விட்டாலும், அல்லது முற்றும் அற்று விட்டாலும், முன் சொல்லியிருக்கிறபடியே தாளகத்தைத் தூய்மை செய்து கொண்டு பதினறு வராகனெடைக்கு எவ்வளவு குறைந்திருக்கிறதோ அவ்வளவு வெள்ளியையும் சேர்த்துருக்கி முன் மாத்திரைகளைக் கிராசங் கொடுத்து எடுத்துக் கொள்ளவும். இரசத்தை வெண்ணெயாக்குகிற சக்தி முன் போலுண்டாகி விடும்.

## 432. இரச வெள்ளி (வேறு)

குழாய் கெந்தகம் 2 பலம் (70 கிராம்), வெண்காரம் $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்), இவ்விரண்டையும் கல்வத்தில் பொடித்து நாட்டுக் காட்டாமணக்குப் பாலைச் சிறுகச் சிறுக விட்டரைக்க வேண்டும். இதற்காக மேற்படி பாலானது சுமார் அரைப்படி வேண்டியது. இன்னம் இதனைச் சுமார் 4 அல்லது 5 சாமங்களரைத்து கடலை அளவு சிறு மாத்திரைகளாய்ச் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு பலம் (35 கிராம்) நல்ல வெள்ளியை உருக்கி, உருக்கு முகத்தில் மேற்படி மாத்திரைகளை ஒன்றன் பின் ஒன்ருய் பக்குவமாய்க் கிராசித்து மாத்திரை எல்லாம் சென்ற பின்பு அப்படியே மூசையை வெளியிலெடுத்துத் தண்ணீரில் நனைக்காமல் ஆற வைத்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு சிறு மண் கலயத்திற் சுத்தமான இரண்டு பலம் (70 கிராம்) இரசத்தை விட்டு, அதனுடன் முன் தூய்மை படுத்தின வெள்ளியையும் போட்டுக் கலயத்தின் வாயை ஈரத் துணியைச் சுருட்டி வைத்தடைத்து கரிநெருப்பில் வைத்தூத, கலயத்தினுள்ளிருந்து ஆவி வெளிப்பட்டு போனபின் நிதானித்து எடுத்து, சற்று உரத்தத் துணியில் வைத்துப் பிழிந்து உண்டான இரசத்தைத் தனியே வைத்துக்கொண்டு, இரச வெண்ணெயையும் தனியே வைத்துக்கொள்ள வேண்டும். வெண்ணெயுடனிருக்கிற வெள்ளிக் கட்டியையும் எடுத்துக்கொள்ள வேண்டும்.

பின்பு மறுபடியும் முன் பிழிந்த இரசத்தையும், வெள்ளிக் கட்டியையும் முன் கலயத்திற் போட்டு, அதன் வாயில் ஈரத் துணியைச் சுருட்டி வைத்து முன்போலவே கரிநெருப்பில்

வைத்தூதி, கலயத்தின் வாயில் ஆவி கண்டவுடன் எடுத்து முன் போலவே பிழிந்து வெண்ணெயை வேருகவும், இரசத்தை வேருகவும், பிழிந்து கொள்ள வேண்டும். இந்த வெண்ணெயை முன் வெண்ணெயுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் தேவையான அளவு வெண்ணெய்ச் சேர்த்து மேற்படி பாகத்திற் சொல்லியிருக்கிறபடி புளிநரளேச் சமூலத்தை அரைத்த விழுதைக் கவசித்துப் பத்துப் புடமிட்டுக் கொள்ளலாம். அவ்விதமே, கருவூமத்தன் காய்க்குள் அல்லது நாட்டுவூமத்தன் காய்க்குள் வைத்துப் புடம் போட்டு கொள்ளலாம். இவைகளுக்கெல்லாம் மேலாக, மேற்கண்ட புளிநரளேச் சமூலத்தை அரைத்த விழுதைக் கவசித்துச் சீலேமண் செய்து முன் சொல்லியிருக்கிறபடி மணலிற்குள் வைத்து சாரணே செய்து கொள்ளலாம். அல்லது ஊமத்தன் காய்க்குள் வைத்து சீலேமண் செய்து சாரணே செய்து கொள்ளலாம். ஒவ்வொன்றிலும் சற்றேறக் குறைய 10 அல்லது 15 சாரணேகள் செய்து கொள்ளலாம். எவ்வளவிற்கெவ்வளவு அதிகமாய்ப் போட்டு அல்லது சாரணேகள் செய்து கொள்கின்ருேமோ அவ்வளவுக்கவ்வளவு வெள்ளியானது அதிகத் தூய்மையாகவும் இருக்கும். ஆகையால், இந்த விசயங்களில் ஆலோசனே செய்யாமல் ஊக்கத்துடனும், கவலேயுடனும் செய்தால் அதனதன் தரத்திற்குத் தகுந்தபடியே பிரயோசனம் முதலிவவைகளுண்டாகும்.

பின்பு, இந்த வெண்ணெயை மூசையிலிட்டுருக்கி எடுக்க நல்ல வெள்ளியாகும். இது செய்யப்படும் பாகத்திற்குத் தகுந்த விதமாக ஒன்றிற்கு, முக்கால், அரை, காலேயரைக்கால் பங்கு வெள்ளி காணும். இதனே உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்க துணேமருந்துகளுடன் உபயோகிக்கச் சிறந்த குணமுண்டாகும்.

## 433. இரச வெள்ளி வேறு

சாதிலிங்கம் 5 வராகனெடை, ஆலம் விழுதுக் கொழுந்தை யிடித்துப் பிழிந்தசாறு செல்லத்தக்க அளவு, நல்ல வெள்ளி 5 வராகனெடை.

சாதிலிங்கத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து, ஆலம் விழுதுக் கொழுந்துச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு 3 மணி நேரம் அரைத்து பயறளவு சிறு மாத்திரைகளாய்ச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும். வெள்ளியை உருக்கி, நன்ருய்க் கண்விட்டாடும்போது, மேற்படி மாத்திரையில் ஒன்றைக் கொடுத்து, அது எரிந்து கரிந்துபோன பின்பு, மறு

மாத்திரையைக் கொடுக்க வேண்டும். இவ்விதம் ஒரு மாத்திரை எரிந்து போன பின்பு, மற்ெறாரு மாத்திரையைக் கொடுத்து எல்லா மாத்திரைகளுஞ் சென்ற பின்பு முடிவில் நன்ருயூதி, நன்கு உருக்கி எடுத்துத் தண்ணீரில் நனைக்காமல், அவ்விதமே ஆற வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு சிறு மண் கலயத்தில் ஒரு பலம் (35 கிராம்) தூய்மை யாக்கப்பட்ட இரசத்தைவிட்டு, அதில் மேற்படி வெள்ளிக் கட்டியையும் கூடப்போட்டு, கலயத்தின் வாய்க்கு ஈரத்துணியைச் சுற்றி வைத்து சந்தில்லாமல் செய்து அடுப்பின்மீது வைத்து சிறு தீயாக எரித்து, கலயத்தின் வாயில் ஆவியெழும்ப ஆரம்ப மானவுடன் இறக்கி, கலயத்திலுள்ள இரசத்தைத் துணியில் கொட்டிக் கொண்டு பிழிந்து, துணியில் நிற்கும் வெண்ணெயை எடுத்துக்கொள்ள வேண்டும். மறுபடியும் முன் கலயத்தில் பிழிந் தெடுத்த இரசத்தையும் வெள்ளிக் கட்டியையும் சேர்த்துப் போட்டு, முன்போலவே அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து ஆவி வெளியானவுடன் எடுத்துப் பிழிந்து கண்ட வெண்ணெயை முன் வெண்ணெயுடன் சேர்த்து வைத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் இயன்றவரை வெண்ணெயைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**குறிப்பு** :—இரும்புக் குழாயொன்று செய்து, அதன் ஒரு பக்கம் அடைப்புள்ளதாகவும், மறுபக்கத்தில் வாயுள்ளதாகவும் செய்ய வேண்டும். இன்னும் அந்த வாய்க்கு மரையுள்ள மூடி யாகவும் சித்தப்படுத்திக் கொள்ள வேண்டும். முன் சொல்லப் பட்ட மூவகைகளிலும், ஆங்காங்கு சொல்லப்பட்டிருக்கும் முட்டையோடு, மண் கலயம் முதலியவைகளுக்கு பதிலாக, மேற் சொன்ன இரும்புக் குழாயை உபயோகித்துக் கொண்டால் மிகவும் உத்தமமாயிருப்பதுடன் வெள்ளியும் அதிகமாய்க் காண ஏதுவுண்டு. இதில் சூடு அதி சீக்கிரம் தாவும் ஆகையால், இரச வெண்ணெயையும் அதி சீக்கிரமாகவும், அதிக அளவாகவும் சேர்க்கஏதுவுண்டு.

மேற்கண்ட இரசவெண்ணெயை ஊமத்தன் காய்க்குள் வைத்து இலகு புடம் போடவேண்டும். அல்லது ஊமத்தன் காய்க்குள் வைத்து சாரணை செய்து கொள்ளவேண்டும். மேற் கண்ட வகைகளில் ஒரு வகையாய் 15 தடவைகள் செய்து மூசையி லிட்டு உருக்க, வெண்ணெயின் தரத்திற்குத் தகுந்ததுபோல, ஒன்றிற்கு முக்கால், அரை, காலேயரைக்கால் பங்கு வெள்ளி காணும். இதனை உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகக்

செய்து உபயோகித்தால் அநேக நோய்கள் தீர்ந்து அநேக நன்மைகளுமுண்டாகும்.

மேற்கண்ட வகைகளில் எந்தவிதமாயினும் எடுத்த இரச வெண்ணெயை 10 தடவைகள் ஊமத்தன் காய்களில் வைத்து புடமிட்டெடுத்து, அல்லது சாரணை செய்து எடுத்துக்கொள்ள வேண்டும். இலவங்கப்பட்டையை இடித்துத் தூளாக்கி வடி கட்டினத் தூளை ஒரு மெல்லிய சல்லாத் துண்டில் பரப்பி, முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற இரச வெண்ணெயை வைத்துச் சுருட்டிக் கொளுத்திவிட வேண்டும். நன்முக எரிந்தடங்கின பின் வெண்ணெயை எடுத்து முன்போலவே தூளைப் பரப்பின சல்லாத் துண்டில் வைத்து சுருட்டிக் கொளுத்திவிட வேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் 5 அல்லது 6 தடவைகள் செய்துகொண்டால் சிறப்புடையதாகும்.

இம்முறைகளெல்லாம் கைபாகமாகவும், அனுபவ சித்தமாக வும், தெரிந்தவர்கள் மூலமாகக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். இதிலுள்ள இரகசியங்களை எல்லாம் ஒன்முய்ச் சேர்த்து எழுதுவது சாத்தியமாகாது. ஏனெனில் இங்கெழுதுவதுபோலவே அங்கு நேரிடாது. பல வேறுபாடுகள் நேரிட பலவித காரணங்கள் உண்டு. அப்போதைக்கப்போது உண்டாகும் தன்மை, விகற்பம் முதலியவைகளுக்கு ஏற்றபடி செய்து கொள்ளநேரிடும். தெரிந்த வர்களை அனுசரித்து அவர்கள் முன்னிலையில் இரண்டு மூன்று தடவைகள் ஒரு பாகத்தையே மடக்கி மடக்கிச் செய்து விட்டால் எல்லாவித சந்தேகங்களும் நீங்கிப்போகும்.

## 434. இரசவெள்ளி

வெள்ளிக் காடிக்காரம் 2 வராகனெடை, இரண்டு சிறு அகல்களை, ஒன்றோடொன்று சந்தில்லாமல் பொருந்தும்படி யாய்த் தூய்மை செய்து வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு பீங்கானில் மேற்படி காடிக்காரத்தை வைத்து அந்தக் கட்டி முழுகும்படியாக உத்தாமணிப் பாலைக்'கறந்து,வெய்யிலில் வைத்து மாலையில், சுண்டினவுடன் எடுத்துக் கொள்ளவேண்டும். மறுநாள் காலையிலும் முன்போலவே அந்தக் கட்டி முழுகும்படியாக விட்டு மாலை வரையில் வெய்யிலில் வைத்துப் பாலை சுண்ட வைத்துக் கொள்ளவேண்டும். அப்படிவிட்ட பால் உலராதிருந்தால் மறு நாள் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்தப் பாலானது சூரிய உதயத்திற்கு முன்பே கிடைக்கும். சூரியோதயமாகிவிட்டால் அந்தப் பாலானது அரிதாய்க் கிடைக்கும். சிலசமயம் கொஞ்சமும் கிடைக்காமலே போய்விடும். ஆகையால், இந்தப் பால் வேண்டிய

போது அதிகாலையில் போய் பாலெடுக்க வேண்டும். ஒரு தடவை விட்ட பாலானது முற்றும் சுவறின பின்பே மறுதடவை அதில் பாலைக் கறக்கவேண்டும். இவ்விதம் ஏழு தடவைகள் பாலைக் கறந்துவிட்டு ஏழு தடவைகள் உலர்த்திச் சுவற வைத்து தூய்மைப் படுத்திக் கொள்ளவேண்டும். பின்பு, அவ்வகலை மற்றொரு அகலினால் மூடி, உளுந்து மாவைக் குழைத்து மெல்லிய சல்லாத் துண்டில் தடவி சந்தில்லாமல் செய்யவேண்டும். இவ்விதம் மூன்று சீலைத் துண்டுகளைச் சுற்றி வலுவாய் சந்தில்லாமல் செய்து உலர்த்தி, பின்பு அந்த மாச்சீலையாலேயே இரண்டு அகல்கள் முற்றிலும் சுற்றி சந்தில்லாமல் செய்யவேண்டும். இவ்விதம் மூன்று சீலைத் துண்டுகளைச் சுற்றி வெய்யிலில் வைத்து நன்றாய் உலர்த்திக் கொள்ளவேண்டும்.

மண்ணினால் ஒரு படியைப்போலச் செய்துலர்த்திச் சுட்டுத் தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். நாயுருவிச் சாம்பல் ஒரு படி; இதனை இரண்டு பாகமாகச் செய்துகொள்ள வேண்டும். அதில் ஒரு பங்கை மேற்படி படியில் போட்டமுத்தி, அதன்மேல் முன் கவசத்தை வைத்து, அதன்மேல் மற்றொரு பங்குச் சாம்பலை யும் போட்டு மெதுவாக அழுத்தி, அதன்மேல் ஒரு ஓட்டை வைத்து மூடி அடுப்பிலேற்றித் தீபாக்கினியாக $1\frac{1}{2}$ சாமம் எரித்து, அடுப்புடனேயே ஆறவிட்டுக் குளிர்ந்த பின்பு கவசத்தை பிரித்து எடுக்க, காடிக்காரமானது சுண்ணமாகி இருக்கும்.

பதங்கித்துத் தூய்மை செய்த இரசம் 10 பங்கு, மேற்படி காடிக்காரச் சுண்ணம் 1 பங்கு, இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு 2 சாமமரைக்க வெண்ணெயாகும். இதனை உருண்டையாக உருட்டி புளிநரளை இலையை அரைத்த விழுதை இரண்டங்குல கனம் கவசித்து, அதன்மேல் இரண்டு சீலைமண் செய்து, கவசத்தின் எடைக்கு ஆறு பங்கெடை விராட்டியில் புட மிட்டாறின பின் எடுத்து, முன்னிலையையே அரைத்த விழுதை முன்போலவே கவசித்து, சீலை மண்ணுஞ் செய்து முன்போலவே புடமிட வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி 5 அல்லது 6 தடவைகள் செய்து மூசையிலிட்டு உருக்கி எடுக்க, இரசத்தின் தன்மைக்கேற்ற விதமாக ஒன்றிற்கு முக்கால், அரை, கால் முதலிய பாகங்களாக வெள்ளி நிற்கும். இந்த வெள்ளியை எடுத்து உராவிச் செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்க துணைமருந்துடன் சமயோசிதமாய் உபயோகிக்கின், அநேகவித கடின நோய்கள் தீரும். மேலும், ஆயுள்விருத்தி, உடல்பொலிவு, உடல் வலிமை முதலிய பல சிறப்பு குணங்களுமுண்டாகும். இந்த அருமையான பாகத்தை செய்ய பலவகைச் சிரமங்களுண்

டென்பது உண்மையேயாயினும், அதனுலுண்டாகும் பயனும் பல என்பதில் சந்தேகமில்லை. ஆகையால், அரிய குணத்தை விரும்பும் ஒவ்வொருவரும் இவ்வித துன்பங்களுக்குப் பின்னடையார்கள் என்பது உலகறிந்த செய்தி.

## 435. இரச வெள்ளி

சீமைச் சுண்ணும்பைப் போலிருக்கும் வெள்ளைப் பாடாணத்தில் சுமார் $\frac{1}{2}$ வீசையுள்ள ஒரு கட்டியை எடுத்து, வாளால் ஆறு அங்குலம் நாற் சதுரமாக அறுத்தும், அவசியமானுல் கல்லில் தேய்த்தும், அரத்தால் உராவியும் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். பின்பு இதன் மத்தியில் மட்டமாய் ஒரு பலம் இரசம் கொள்ளும்படியான குழி ஒன்றும் செய்துகொள்ளவேண்டும்.

**குறிப்பு** :– மேற்கண்ட பாடாணம் சென்னையில் கிடைப்பது அரிது. இவ்வகையானது 10 வருடங்களுக்கு முன் சாதாரணமாய்க் கிடைத்துக் கொண்டிருந்தது. பிற்காலத்தில் விற்கப்படும் பளிங்கு போன்ற வெள்ளைப் பாடாணமானது மேற்கண்ட முறைக்கு உபயோகமாகாது. ஏனெனில், பற்பல புரைகளிருக்கின்றபடியால் மூச்சுவிட்டுப் போகிறது. மேலும், நாற்சதுரமாய் அறுத்துக் கொள்ளவும், அதில் குழித்துக்கொள்ளவும் ஏதுவில்லாமல் போகின்றது. மேலும், எவ்விதமேனும் கஷ்டப்பட்டு மேற்கண்ட விதமாய் நாற் சதுரமாய்ச் செய்து குழித்துக் கொள்ளினும், ஏதேனும் புரையானது குறுக்கிட்டு, எடுத்துக் கொண்ட எல்லாவித துன்பங்களும் வீணுய்ப் போகிறது. ஆகையால், மேற்கண்ட வகைப் பாடாணத்தைப் பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களிலிருந்து வரவழைத்துக் கொள்ளவேண்டும். வரவழைத்தும் மேற்கண்டவிதமாய்த் தூய்மைப்படுத்திக் கொண்டாலும், ஏதேனும் புரை முதலியவைகள் இருக்கிறதாவென பரிசோதித்து, நிதானித்து அறிந்த பின்பே மற்ற நிலைமைகளில் முயற்சித்தல் வேண்டும்.

மேற்கண்ட விதமாய் நாற்சதுரமாக சதுரித்தும், நடுவில் குழித்தும் சித்தஞ் செய்யப்பட்ட பாடாணத்தை முன் சொல்லப் பட்டிருக்கிற வகைகளில் தகுந்தவிதமாய்த் தூய்மை செய்து கட்டிக்கொள்ள வேண்டியது அல்லது இனி மூன்ரும் பாகத்தில் சொல்லப்படும் வகைகளில் தகுந்தவிதமாய்த் தூய்மைசெய்து கட்டிக்கொள்ளவேண்டும். இவை கட்டுப்பட்டதற்கு அறிகுறி யாவது, இதனை நெருப்பின்மேல் வைத்தால் புகையாமல் இருப்பதே.

**விண்ணப்பம் :**—மேற்கண்ட பாடாணக் கட்டு முறையையும் இதனுடன் ஏன் இங்கெழுதவில்லையென வினவ ஏதுவுண்டு. அந்த முறையானது முன்னர் சொல்லப்பட்டுமிருக்கிறது. இனி பின்னும் சொல்லப்படும். புத்திமான்கள் அல்லது இந்த வித்தையைக் கற்க உண்மையாக விருப்பமுள்ளவர்கள் சிறிது நேரம் இப் புத்தகத்தைக் கவனித்துத் தங்கள் புத்தியைச் செலுத்திக் கஷ்டப்பட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதே. அப்படிப் பட்டவர்கள் தாமே கஷ்டப்பட்டு புத்தகங்களிலுள்ள பல பாகங்களையும் கவனித்து தத்தம் புத்திக் கூர்மையால் அறிந்து, தெரிந்து தேறித் தெளியவேண்டுமென்பதே உண்மைக் கருத்து. அப்படிச் செய்யாவிட்டால், இப்பாகத்தின் அருமையும் அறியக் கூடாமையாயிருப்பது மன்றி, இப்பாகத்தைக் கவனித்துச் செய்ய ஏதுவில்லாமற் போகும். மேலும், பொது குணத்தின் இரகசியத்தை மறைக்கவுமில்லை; அல்லது அப்படியே இரகசியத்தை வெளியாக்கிவிடவும் இல்லை. அப்படியே பெரியோர்களின் கட்டளையைக் கடக்கவுமில்லை. நமது கருத்தை நிறைவேற்ருமல் விடவுமில்லை. ஆனல், அறிவாளிகளுக்கு இந்தக் குறிப்பு ஒன்றே போதுமானதாகையால், இதை இம்மட்டும் நிறுத்தி மற்ற மீதி பாகத்தை எழுதுவோம்.

மேற்படி பாடாணத்தைத் தூய்மை செய்துக் கட்டி, அதன் மேல் இலுப்பை மரப்பாலையடிக்க வேண்டும். நாள்தோறும் காலையில், அந்தக் கட்டியைச் சுற்றிலும் அடித்துவர வேண்டும்.

இதற்காக, அக்கரையும், உண்மையுமுள்ள இரண்டாட்களை திட்டப்படுத்திக்கொள்ள வேண்டும். அனேகர் சோம்பலினல், சோம்பேறிகளான தம் ஆட்களை நம்பிப் பலவிதமாய் மோசம் போயிருக்கின்ருர்கள். ஏனெனில், அந்த ஆட்கள் கூலிக்கு மாரடிக்கின்றவர்களாகையால், இன்று சென்றது சம்பளம் வந்தது என்னும் எண்ணத்தினல் இலுப்பை பாலிற்குப் பதிலாக வேறெந்த பாலையாவது அடித்துவிடலாம். அல்லது வேறு விதமான நஷ்டத்திற்குள்ளாக்கலாம். மேலும், இந்த பாகமானது ஏறக்குறைய இரண்டாயிரம் இலுப்பை மரங்கள் தனக்கு சொந்தமாயிருப்பவர்களுக்கு வெகு சுலபம். தினம் சுமார் இருபது மரத்தின்பாலைக் கட்டிக்குப் பூசி வரலாம். இவ்விதம் ஏறக்குறைய மூன்று மாதங்கள் செல்லும் பிறர் மரமாயின் அவர்களின் உத்திரவை எதிர்பார்க்க வேண்டியது. மேலும், நமது விருப்பம்போல் செய்துகொள்ள முடியாமை. மேற்கண்ட பாகத்தை செய்ய ஆரம்பிக்குமுன் மேற்கண்ட விஷயங்களை, எல்லாம் ஆழ, அகல யோசித்து, இதனைத் தம்மால்

செய்து முடிப்பது சாத்தியம், அசாத்தியம் என தீர்மானித்து நிதானித்து, அதற்கான இடம், பொருள், ஏவல் முதலியவை களோடு ஆரம்பித்து, பின்னடையா முயற்சியுடன் செய்து முடிக்க வேண்டும். அவைகளுக்கு ஏதுவில்லாதவர்கள் இதில் பிரவேசிக்கலாகாது. ஏனெனில், இவ்விஷயங்களை முன்னமே தீர்க்க யோசித்துச் செய்யாவிடின் வீண்செலவு, வீண்துன்பம் முதலியவைகளே ஒழிய பிரயோசனமொன்றுமில்லை.

அந்தக் கட்டியின்மீது சுமார் 4 அல்லது 3 அங்குலப்பாலை யேற்ற வேண்டியது. இதற்காக சில சமயம் 4 அல்லது 5 மாதங்களும் செல்லும்.

இவையெல்லாம் அவரவர் எடுத்துக்கொள்ளும் பொறுப்பு, கவலை, கஷ்டம், முயற்சி முதலியவைகளுக்குத் தக்கவிதமாய் 3 முதல் 6 மாதங்கள் செல்லலாமெனத் திட்டமாய்ச் சொல்லலாம்.

பின்பு இலுப்பைபிஞ்சு, காய், பழம் முதலியவைகளை இடித்து அதன்மேல் 4 அல்லது 5 அங்குலம் கனமும் கவசம் செய்ய வேண்டும்.

பின்பு இதன்மேல் ஏழு சீலைமண் செய்து, ஒரு கெசம் அகலம், ஒரு கெசம் ஆழமுள்ள குழியொன்று தோண்டி, அதில் அரைவாசி காட்டெருவை நிரப்பி, அதன்மேல் முன் கவசத்தை வைத்து, அதன்மேலும் காட்டெருவைப்போட்டுக் குழியை நிறைத்துத் தீயிட்டு, எரித்து குளிர ஆறினபின் எடுத்துப் பார்த்தால் பாடாணமானது உருகிக் கட்டுப்பட்டிருக்கும்.

இதில் ஏதேனும் அறைகுறையாயிருந்தால் முன்போலவே இன்னொருதடவை பாலடித்து அதன் பிஞ்சு, காய், பழம் முதலிய வைகளை இடித்து கவசித்து முன்புடத்தில் அரைதிட்டம்போட்டுக் கொள்ள பாடாணமானது உருகிக் கட்டுப்பட்டுப்போகும்.

இதனை ஆதி முதலீறுவரையில் கைபாகம், செய்பாகம் என்னும் இவை தவறாமல் ஒவ்வொரு விஷயங்களையும் கவனித்துக் கண்ணுங் கருத்துமாய் செய்தால் கடவுளினது கிருபையால் இந்தப் பாகமானது கைகூடும் என்பதில் சந்தேகமில்லை. மேலும், தெய்வ வழிபாடு, பரோபகாரம், ஜீவகாருண்யம், நல்லெண்ணம் முதலியவை உடையோர்களாகி கடவுளினது கிருபை தங்கினவர் களுக்கே இப்பாகம் சித்தியாகும். அப்படி இல்லாதவர்களுக்கு,

செய்யும்போது அல்லது செய்தபின்னர் ஏதேனும் இடையூறுகள் நேரிட்டு பாகம் முடியாமற்போகும். அல்லது பாகந் தவறிப் போகும். ஆகையால், உண்மையான ஞானிகளுக்கு இப்பாகம் அவசியம் கிட்டும். அஞ்ஞானிகளுக்கு ஒருபோதும் கிட்டா தெனத் தெரிந்திருக்க வேண்டும்.

வாயகன்ற இரண்டு தோண்டிகளைத் தூய்மைப்படுத்தி, வாயைத் தேய்த்து இரண்டும் சரியாய்ப் பொருந்தும்படியாகச் செய்துகொள்ள வேண்டும். மேலும், இந்த இரண்டு தோண்டி களும் ஒவ்வொன்றும் சுமார் 4 படி நீர் கொள்ளும்படியானதாக இருக்க வேண்டும். மேற்தோண்டிக்கு ஊமத்தை இலையைத் தேய்த்துத் தேய்த்து ஈரப்பசை உண்டாக்கி உலர்த்த வேண்டும். நன்றுயுலர்ந்த பின்பு மறுபடியும் அந்த இலையையே தேய்த்துத் தேய்த்து ஈரப்பசை உண்டாக்கி உலர்த்த வேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் 4 அல்லது 5 தடவைகள் ஈரப்பசை உண்டாக்கி உலர்த்திக்கொள்ள வேண்டும். கீழ்த் தோண்டியில் 20 பலம் கடை இரசத்தைவிட்டு, அதன்மேல் 2 படி நாய்வேளைச் சாற்றை விட்டு, முன் சித்தப்படுத்தின தோண்டியை மேலே கவிழ்த்து ஏழு சீலைமண் செய்து நன்றுயுலர்ந்த பின்பு அடுப்பேற்றிச் சிறுதீயாக எரிக்க வேண்டியது. ஆனல், தினமும் 1 அல்லது $1\frac{1}{2}$ மணி நேரந்தான் அதிக ஜாக்கிரதையுடன் எரித்து தோண்டிக்குள் உள்ள சாறுனது பொங்காமல் அதிக சாக்கிரதையாக இருக்க வேண்டும். சாறுனது சுண்டிவிட்டால், பிறகு தீயை அதிகப் படுத்தி எட்டுச்சாமம் காடாக்கினியாய் எரிக்க வேண்டும். அப்படி எரியும்போது மேல் தோண்டியின்மீது ஈரத்துணியைப் போட்டு வைத்துக்கொண்டு வரவேண்டியது. இப்படி செய்வதால் பதங்கமானது ஏறிப்பற்றிப் பிடித்துக்கொள்ளும்.

இவ்விதம் கைபாகமாகச் செய்துகொண்டு எட்டுச் சாமம் எரித்து சற்று ஆறினவுடன் கீழிறக்கி, மேல் தோண்டியைக் கீழே கிடக்காட்டி வைத்துவிட வேண்டும். நன்றுய்க் குளிர ஆறினபின் சீலைமண்ணை நீக்கி, மயில் துடுப்பால் சுரண்டி, வேறொரு பீங்கான் பாத்திரத்தில்போட்டுக் கையால் மத்திக்க இரசம் சனிக்கும். அந்த இரசத்தை உரத்தத் துணியிலிட்டுப் பிழிந்துகொள்ள வேண்டும். இவ்விதமே மீண்டும் மீண்டும் ஏழுதடவைகள் பிழிந்துகொண்டால் இரசத்திலுள்ள தோடங்களெல்லாம் நீங்கி நட்சத்திரம்போல் பிரகாசமுள்ளதா யிருக்கும். இதைச் சுத்தமான ஊதா நிறமுள்ள பாட்டிலிலடைத்துக் காரக்கிட்டு வைத்துக் கொண்டு அவசியமானபோது எடுத்து உபயோகித்துக்கொள்ள வேண்டும்.

மேற்கண்ட பாகப்படியே நாய்வேளைச் சாற்றிற்குப் பதிலாக கருப்பு வெற்றிலைச் சாற்றைவிட்டுஞ் செய்துகொள்ளலாம். இன்னம் ஒருதடவையிலேயே மேற்கண்ட நாய்வேளைச் சாறு 1 படியும், மேற்கண்ட வெற்றிலைச்சாறு 1 படியும் கலந்துவிட்டு எரித்துப் பதங்கித்துக் கொள்ளலாம். விருப்பமானால் மேற்கண்ட விதமாகவே தனித்தனியே நாய்வேளைச் சாற்றில் ஒருதடவையும், கறுப்பு வெற்றிலைச் சாற்றில் ஒருதடவையும் பதங்கித்துக் கொள்ளலாம். இவ்விதம் தனித்தனியே ஒவ்வொன்றிலும் செய்து கொண்டால் (பொன் மலர் நாற்றமுடைத்து) என்பதுபோல அதிக விசேஷமாகவே இருக்குமென்பதில் சந்தேகமென்ன? விருப்பமுள்ளவர்கள் நஷ்டத்தை பார்க்காமல் செய்துகொண்டால் அதற்குத் தகுந்த பலனும் கிடைக்குமென்பதில் ஆட்சேபனையுமுண்டோ, ஒருபோதுமில்லை. இவ்விதம் இருமுறை பதங்கித்துத் தூய்மை செய்யப்பட்ட இரச சம்பந்தமானவைகள் வாதமுறைகளிலும், வைத்திய முறைகளிலும் விசேடமென்பதில் தடையாதுளது. இச்செய்தி அனுபவசாலிகளான ஒவ்வொருவருக்கும் நன்றாய்த் தெரிந்த காரியமே. ஆகையால், இதைப்பற்றி நாம் இங்கு அதிகமாய் எடுத்துரைப்பது அனுவசியமென இம்மட்டில் நிறுத்தப்பட்டது.

ஒரு பாத்திரத்தில் நல்ல கரியைப்போட்டு நெருப்புண்டாக்கி ஒரு பலம் முன் சித்தப்படுத்தின இரசத்தை, முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பாடாணக் கட்டியின் குழியில்விட்டுக் குரட்டால் பிடித்து மேற்படி நெருப்பின்மீது வைத்து விசிறியால் சற்று நேரம் வீச கிர் எனும் ஒருவித சப்தத்தோடு இரசமானது இறுகிப் போகும். இவ்விதம் செய்யும்போது தூய்மையான மனதுடன் தெய்வபக்தியுள்ளவர்களா யிருக்க வேண்டும். பின்பு, குரட்டால் அந்தப் பாடாணக்கட்டியை எடுத்து தனித்தவிடத்தில் வைத்து, நன்றாய்க் குளிர ஆறினபின் எடுத்து பத்திரப்படுத்த வேண்டும். மேற்படி கட்டியைச் சூட்டுடன் எடுத்து ஈரமானவிடத்தில் வைத்தாலும், ஈரக்காற்று படும்படி வைத்தாலும், சூட்டுடனிருக்கையில் நீர்பட்டாலும் அந்தக் கட்டியானது மலர்ந்துபோகும். இதனுண்மை தெரியாமல் மேற்கண்டவிதம் செய்து ஏமாந்து போனவர்கள் அநேகர். இதைச் செய்யும்போதும், பிறரிருக்கும்படி விடுவதும் நல்லதல்ல. இம்முறைகளெல்லாம் இரகசியமானதும், ஆபூர்வமானவைகளுமாகும்.

இந்தப் பாடாணக் கட்டியை கத்தியினால் சுரண்டி 2 குன்றிமணி எடை எடுத்து 10 பலம் (350 கிராம்) பசுவின் நெய்யிற் கலந்து அந்தநெய்யில் தேக சக்திக்குத் தகுந்தபடி கால் அல்லது அரை

பலம் காலை மாலை இரண்டு வேளையும் உட்கொண்டு வந்தால் கடின நோய்களான குட்டம், பெருவியாதி முதலியவைகள் தீரும்.

மேலும் இந்தப் பாடாணத்தைச் சுண்ணமாகச் செய்து வங்கத்திற்கு கொடுக்க, வங்கத்திலுள்ள நீர்வாங்க படுமெனவும் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் உபயோகம் விரிவாக எழுதப் பட்டிருக்கிறது. ஆயினும் அனுபவசாலிகளான மகான்களை அணுகித் தெரிந்துகொள்வதே சிறப்புடையதாகும்.

பின்பு இந்த வெள்ளியை மூசையிலிட்டுருக்கி, உராவி, மகா திராவகத்திற் சொல்லியிருக்கிறபடி அல்லது இனி சொல்லப் படும் முறைப்படி செந்தூரமாக அல்லது பற்பமாகச் செய்து தக்க துணைமருந்துகளுடன் உட்கொண்டால் சிறந்த கற்ப மாகும். ஆனல், கற்பத்திற்குரிய விதிகளை அனுசரித்து அதன் படியும் நடந்துவந்தால் ஆயுள் விருத்தி, உண்டாகி நரைதிரை மாறி வச்சிர தேகமாகும். இதனைக் கற்பமாகச் சாப்பிடுகிற வர்கள் ஒரு வருடம்வரையிற் பத்தியம் காக்க வேண்டும். அப் பத்தியவகை விபரங்களெல்லாம் சித்தர்கள் நூலில் விரிவாய்ச் சொல்லி யிருக்கின்றபடியால், அவசியமானவர்கள் அந்நூற்களைப் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம். அல்லது அந்த விபரங்கள் தெரிந்த அனேக மகான்களுமிருக்கின்றபடியால் அவர்களை யடுத்தும் தெரிந்துகொள்ளலாம்.

மேற்கண்ட மருந்தால் அநேக கடினமான நோய்கள் தீரும். ஆனல், நோய் வலிமை, உடல் வலிமை, காலபேதம், இட பேதம், துணைமருந்து பேதம் முதலியவைகளைத் தெரிந்து அதற்குத் தக்க விதமாய் உபயோகித்தால், சசல நோய்களும் தீர்ந்து, சுகவாழ்வு பரோபகாரம், புண்ணியம், புகழ், பெயர், கீர்த்தி முதலியவைகளையுமடைந்து இகபர சம்பத்தையும் அடைய ஏதுவாகும்.

## 436. இரச வெள்ளி (வேறு)

சீமை நவச்சாரத்தின் பெரிய கட்டியை எடுத்து, நாலங்குல உயரம், நாலங்குல அகலம், நாலங்குல கனம் உள்ள கட்டியாக, வாளால் அறுத்துக்கொள்ள வேண்டும். இக்கட்டியின் மத்தியில் ஒரு பலம் இரசம் கொள்ளத் தக்கதாய்ச் சிறு குழி ஒன்றும் செய்துகொள்ள வேண்டும்

இதன் பின்பு முன் சொல்லப்பட்டிருக்கிற நவச்சாரக் கட்டு களில் அல்லது இனி சொல்லப்படும் நவச்சாரக் கட்டுகளில் தகுந்த வகைகளில் ஒருவகையாய்க் கட்டிக்கொள்ள வேண்டும்.

அவ்விதம் அவை கட்டுப்பட்டதற்கு அறிகுறியாவது, அதை நெருப்பில் போட்டால் நெருப்பில் புகையாமலும், நெருப்பிற்கு ஓடாமலும் எதிர்த்து நிற்பதேயாகும். இதற்கினமான முறையை யும் இங்கு எழுதாதற்குக் காரணம், அவசியமானவர்கள் தங்கள் அறிவைச் செலவழித்துக் கொஞ்சம் கஷ்டமெடுத்துக்கொள்ள வேண்டுமென்பதே. மேலும், அவசியமில்லாதவர்களுக்கு இப் பாகமும் அவசியமேயில்லை யென்பதுமே ஆன்றோர் கருத்தாகும்.

பின்பு இக்கட்டியில் காற்பங்கெடை கட்டின வெடியுப்பைக் கல்வத்திற்பொடித்து உமிழ்நீரால் 1 சாமநேரமரைத்து மேற்படி கட்டி முழுவதும் சமமாக கவசிக்க வேண்டும். இதனை வெய்யிலில் உலரவைத்து நன்றாய் உலர்ந்த பின்பு முன் கட்டியில் அரைப் பங்கு அதிகக் காரமான பச்சைப் புகையிலையை, உமிநீரைவிட்டே மைபோலரைத்து முன் கட்டிக்கு கவசித்து வெய்யிலில் வைத்து உலர்த்த வேண்டும். பச்சைப் புகையிலை யில்லாத காலங்களில் அதிகக் காரமான உலர்ந்த புகையிலையில் காற்பங்கெடையை உபயோகித்துக் கொள்ளலாம். இதற்காக, வேதாரணியம் புகையிலை, மசூலிப்பட்டிணம் புகையிலை, திருவாரூர் புகையிலை முதலியவைகள் சிரேஷ்டமானவைகள் எவையாயினும் அதிகக் காரமாயிருக்க வேண்டுமென்பதே முக்கியம்.

புகையிலைக் கவசமும் நன்றாயுலர்ந்த பின்பு மூன்று சீலைமண் செய்து, வெய்யிலில் வைத்து நன்றாய் உலர்ந்தபின்பு கவசத்தி னெடைக்கு 3 பங்கெடை வராட்டியிற் புடமிட்டாறின பின் எடுத்து மேற் கவசங்களை நீக்கி நவச்சாரத்தை நிறுத்தால் வைத்த எடை குறையாமலிருக்க வேண்டும். கால் அல்லது அரை வராகனெடை குறைந்தால் பாதகமில்லை.

முன்போலவே முன்னளவு கட்டின் வெடியுப்பை உமிழ் நீராலரைத்துக் கட்டிக்குக் கவசித்து வெய்யிலில் வைத்து நன்றாய் உலர்ந்தபின்பு மேற்சொன்னபடி புகையிலையை அரைத்துக் கவசித்துக் காயவைத்து, மூன்று சீலைமண் செய்து முன்போலவே மூன்று பங்கெடை விராட்டியில் புடமிட வேண்டும்.

இவ்விதம் 5 புடங்களான பின்பு ஆரும் புடத்தில் முன் போலவே கவசங்களைச் செய்ய வேண்டும். இதனால் 3 எடைக்குப் பதிலாக 4 எடை விராட்டியிற் புடமிட வேண்டும். இவ்விதம் 5 புடங்களான பின்பு 11வது புடத்திற்கு முன்போலவே கவசங் களைச் செய்து 4 எடைக்குப் பதிலாய் 5 எடை விராட்டியில் புடமிட வேண்டும். இவ்விதமாகவே 21 புடங்கள் போட்டு எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஆனால், மேற்கண்டபடி புடம் போட்டெடுத்தவுடன் நிறுத்து முன்னெடையில் குறைந்தால் மறுபுடத்தில் விராட்டியைக் குறைத்துப்புடமிடவேண்டும். இந்த நிதானம் அனுபவத்தினலே தெரிந்துபோகும். ஆனால், சற்றுக் கவனமும் புத்தி நுட்பமும், வேண்டியது. ஆகக்கூடிய 21 புடமும் பக்குவமாய்ப் போட்டுத் தீர்ந்தால் கடவுளின் அருளால் நவச்சாரக் கட்டியானது பக்குவப்பட்டுப் போகும். கைபாகம், செய்பாகம் முதலியவை களில் தவறு நேரிட்டால் மேற்படி கட்டிப் பக்குவப்படுவதிலும் குறை நேரிடும். ஆகையால், இவ்விவகாரத்தில் அனுபவமுள்ள வர்கள் மூலமாய்ச் செய்து முடித்துக்கொண்டால் உத்தமமாய் இருக்கும். மேற்படி பாடாண பாகத்தில் சொன்ன வகைகளில் ஒருவகையால் இரசத்தைத் தூய்மை செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

மேற்படி பாகத்தில் சொல்லப்பட்டிருப்பது போலவே நவச்சாரக் கட்டியின் குழியில், ஒரு பலம் மேற்படி இரசத்தை விட்டுப் பக்குவப்படுத்திக்கொள்ள வாதவெள்ளியாகும். இதனைச் செந்தூரமாக அல்லது, பற்பமாகச் செய்து உபயோகித்தால் மேற்படி முறையில் சொன்ன குணங்களெல்லாம் உண்டாகும்.

இவ்விதம், சாரச் சம்பந்தமான பலவகைகளைத் தொந்த மேற்றிப் பல முறைகளையும் செய்யக்கூடும். ஆனால், அம்முறைக ளெல்லாம் அனுபவசாலிகளான பெரியோர்களையடுத்துக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

**விண்ணப்பம்:**—சரக்குகளின் தூய்மை முறைகளை ஆரம்பித்து வாத முறைகளில் முக்கியமான தாமிரத் தூய்மையைப்பற்றி அநேக முறைகள் சொல்லப்பட்டிருக்கிறது. அம்முறைகளுள் சில கடினமானவைகள், சில அபூர்வமானவைகள். ஆகையால், அவரவர்க்கு விருப்பமான வகைகளில் அவரவர் சக்திக்கேற்றவாறு சமயோசிதமாயும் செய்துகொள்ள ஏதுவாகும். பின்பு,வெள்ளியின் தூய்மை முதலியவைகளை எழுத ஆரம்பித்து செயற்கை வெள்ளி யின் பலமுறைகள் எழுதப்பட்டன. மேலும் சில முறைகள் எழுதவேண்டியதிருக்கிறது. ஆனால், நாமெடுத்த கருத்து முடிவு பெறுமல் அதிக விரிவெய்தி விட்டபடியால் இம்மட்டும் நிறுத்தி செயற்கை வெள்ளியின் மற்ற பாகங்களை மூன்றும் பாகத்தில் எழுத உத்தேசித்து முக்கியமான வேறு சில சரக்குகளின் தூய்மை முறைகளில் அவசியமான சில பாகங்களையும் இங்கெழுதி இவ் விரண்டாம் பாகத்தை முடிப்போம். ஏனெனில், நாம் இனி

சொல்லப்போகும் யோக முறைகளில் மேற்கண்ட சில சரக்கு களின் சம்பந்தமுண்டாகி இருப்பதால், அவைகளைத் தூய்மை செய்து அல்லது பக்குவப்படுத்திச் சேர்க்க வேண்டியது நூல் ஒழுங்கென்பதேயாகும்.

## 437. வெள்வங்கம்

வெள்வங்கமானது பாதரசமும், கந்தகத்தின் அசுத்தத்தின் சில பாகமும் சேர்ந்து உற்பத்தியாகிற ஒருவகை உலோகமென சித்தர் நூல்கள் கூறுகிறது. இது உலோகங்களிளெல்லாம் தாழ்ந்ததெனவும், சீக்கிரம் உருகும் இயல்புடையதெனவும் சொல்லப்படுகிறது.

**இதன் குணம் (சித்த மருத்துவம்)** குளிர்ச்சியான தாகும். இது நஞ்சின் இயல்புடையதாகையால், இது சம்பந்தமான முறைகளை அதிக கவனத்துடன் உபயோகிக்க வேண்டியது. இதை அஞ்சனமாகக் கண்ணில் தீட்டினல் கண் சிவப்பு, கண்ணில் நீர்வடிதல், அவைகளின் தடிப்பு ஆகியவைகள் திரும். இதனைக் காசினிக் கீரைச்சாறு, பச்சைக் கொத்துமல்லிக் கீரைச்சாறு, மணத்தக்காளிக் கீரைச்சாறு என்னும் இவற்றுள் ஒன்றில் அல்லது பலவற்றிலிழைத்து ரோஜாப்பூ எண்ணெயிற் கலந்துப் பற்றிட, நீர்ப்பீனிச நோய், அல்குல்புற்று, பவுத்திரப்புண், எருவாய் வீக்கம், மூலமுளைகள், சொறிகள், முலைரணங்கள், ஆண் இலிங்க புண்கள், பெண் அல்குல்புண்கள், உட்டிண சம்பந்தமான வீக்கங்கள், முதலிய வைகள் தீரும். இதனைச் சாராயத்திலிழைத்துப் பற்றிட நரம்பு வலிகள், தொந்த வீக்கங்கள், ஆகியவை தீரும், இதை இடுப்பில் வைத்துக்கட்ட காம இச்சை முதலியவைகளைக் கட்டுப்படுத்தும். இன்னம் இதனைப் பழுத்த மரங்களில் கட்டி வைக்க பழுத்தபழங்கள் அதிகம் முதிர்ந்து போகாமல் தங்குமாம். காதிற்குள் இரசம் விழுந்துவிட்டால் வெள்வங்கச் சலாகையை வைக்க அந்த இரசமானது வெளிப்பட்டுப் போகுமாம்.

**இதன் குணம் (ஆயுள்வேதம்)**, இதனைக் முறைப்படி தூய்மை செய்து முறைப்படி பற்பமாக அல்லது செந்தூரமாகச் செய்து உபயோகித்தால் நீர்ப்பிரமேகம், பித்தகப தொந்தம், மேக மூத்திரம்,பொலிவு குறைதல், சுரம், வலிமையின்மை, விரணம், மந்தார சுவாசம், கபஞ்சேர்ந்த மந்தாக்கினி, ரசட்சயதாக நோய் ஆகியவைகள் திரும்.

## 438. வெள்ளீயத் தூய்மை

வெள்ளீயம் 4 பலம் (140 கிராம்), எள்ளெண்ணெய் 6 பலம் (2100 கிராம்), (1) இந்த எண்ணெயை 3 பாகமாகச் செய்து தனித்தனியே வைத்துக்கொள்ள வேண்டும். மூக்குள்ள வாயகன்ற இரும்புக்கரண்டியில் அல்லது, மூக்குள்ள வாலையிலிட்டு அடுப்பின்மீது வைத்து அல்லது, கொல்லனுலையில் வைத்துருக்கி மேற்படி 1 பங்கு எண்ணெயில் சாய்க்க வேண்டும். நன்ருய்க் குளிர ஆறினபின்பு, மறுபடியும் முன் பாத்திரத்திலிட்டு முன் போலவே உருக்கி முன் எண்ணெயிலேயே சாய்க்க வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் உருக்கி 7 தடவைகள் அந்த ஒரு பங்கு எண்ணெயில் சாய்த்தான பின்பு, அந்தப் பங்கில் மிகுதியான எண்ணெயை நீக்கிவிட வேண்டும். மறுபங்கில் முன்போல் 7 தடவைகளும், மற்ருெரு பங்கில் 7 தடவைகளும் சாய்த்துக்கொள்ள வேண்டும். நல்லெண்ணெயில் ஆகக்கூடிய தொகை 21 ஆயிற்று.

2. இலுப்பெண்ணெய் 60 பலம் (2100 கிராம்), இதனையும் மூன்று பங்காக்கித் தனித்தனியே வைத்துக்கொண்டு முன் ஈயத்தை முன்மாதிரியே உருக்கி முன்போலவே ஒவ்வொரு பாகத்திலும் எவ்வேழு தடவைகள் சாய்த்தெடுத்துக்கொள்ள வேண்டும்.

3. அறுநூறு பருமனை எலுமிச்சம்பழங்களைச் சாறுபிழிந்து வடிகட்டி, மூன்று பங்கு செய்து, தனித்தனியே வைத்துக்கொள்ள வேண்டும். இன்னம் இந்தச் சாறுள்ள பாத்திரத்தைப் பூமியிற் கொஞ்சம் புதைத்து, அதன் வாயில், மண்ணுற் செய்யப்பட்டதும், கனமானதும், நடுவில் அரை அங்குலம் சுற்றளவுள்ள துவாரம் இருப்பதுமான ஒரு மண்தட்டை அல்லது வேருென்றை வைத்து மேற்படி ஈயத்தை முன் இரும்புப் பாத்திரத்தில் வைத்துக் கொஞ்சம் நல்லெண்ணெயையும் விட்டுருக்கி, முன் சித்தப் படுத்தி வைத்திருக்கிற சாற்றில் சாய்க்க வேண்டும். நன்ருய் ஆறினபின்பு, மறுபடியும் உருக்கி முன்போலவே உருக்கிச் சாய்க்க வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் ஏழுதடவைகள் அந்தப் பங்குச் சாற்றில் சாய்க்க வேண்டும். இவ்விதமே மற்றிரண்டு பாகங்களிலும் எவ்வேழுதடவைகள் சாய்த்துக்கொள்ள வேண்டும். இந்தச் சாற்றில் சூட்டுடன் வங்கத்தைச் சாய்த்தால் சிதறிச் சேதமாவதுமன்றி, கண் முதலிய உறுப்புகளில்பட ஏதுவாகும். ஆகையால்தான் மேற்கண்டவிதம் மேற்படி பாதுகாப்புள்ள பாத்திரத்தை மூடிச் சாய்க்கிறது. அப்படி செய்வதால் சேதமாக வாவது, அபாய முண்டாகவாவது ஏதுவில்லாமற்போகும்.

4. ஆறு மாதத்துக் காடி 3 படி, இதனையும் மூன்று பாகமாகச் செய்து, முன் சொல்லியபடியே ஒவ்வொன்றிலும் எவ்வேழுதரம், உருக்கி உருக்கிச் சாய்த்துக்கொள்ள வேண்டும்.

5. புளித்த மோர் 30 படி, இதனையும் மூன்று பாகமாய்ச் செய்து கொண்டு, முன் சொல்லியபடியே ஒவ்வொன்றிலும் எவ்வேழுதரம், உருக்கியுருக்கிச் சாய்த்துக்கொள்ள வேண்டும்.

6. கோமூத்திரம் 5 படி, இதனையும் மூன்று பாகமாய்ச் செய்து, முன் சொன்னபடியே ஒவ்வொன்றிலும் உருக்கியுருக்கிச் சாய்த்துக்கொள்ள வேண்டும்,

ஆகக்கூடிய (126) தடவையும் முறையே கைபாகமாக உருக்கிச் சாய்த்தெடுக்க வெள்வங்கமானது தூய்மையாகும். இது வாதம், வைத்தியம் என்ற இரு முறைகளுக்குமாகும்.

## 439. வெள்வங்கத் தூய்மை (வேறு)

தேவையான வெள்ளீயத்தை உருக்கி, சேராங்கொட்டைக் குழித் தைலமிறக்கி, அதில் சாய்க்க வேண்டும். இந்தத் தைலமானது, உருக்கிச் சாய்த்த வங்கமானது முழுகும்படியாக இருக்க வேண்டியது. மறுபடியும் அந்த வங்கத்தை எடுத்து உருக்கி முன் தைலத்தில் சாய்க்க வேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் செய்துகொள்ள வேண்டும்.

இவ்விதமே வெடியுப்புத் திராவகத்தில் ஏழுதடவையும், அப்பளாக்காரத் திராவகத்தில் ஏழுதடவையும் கல்லுப்புத் திராவகத்தில் ஏழுதடவையும் உருக்கியுருக்கிச் சாய்த்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்ட விதமாய்ச் செய்து தூய்மையான வெள்வங்கமானது வாதம், வைத்தியம் என்ற இரு வகைகளுக்குமாகும்.

## 440. வெள்வங்கத் தூய்மை (வேறு)

அண்டச் சுண்ணம் ஒரு பங்கு, இதனை எட்டு பங்கு சீமை திராட்சைக்காடி திராவகத்திற் சேர்த்துச் சுண்டவைத்துக் குழம்பு பதமானவுடன் இறக்கி வைத்துக்கொண்டு, வங்கத் தகட்டின்மீது இருபக்கமும் பூசி உலர்த்த வேண்டும். அது ஈரமின்றி உலர்ந்தவுடன், உருக்கித் தகடடித்து மறுபடியும் முன் குழம்பைப் பூசி

உலர்த்தி, முன்போல உலர்த்தி மறுபடியும் உருக்கிக்கொள்ளவும். இவ்விதம், மீண்டும் மீண்டும் மூன்று தடவைகள் செய்தால், வங்கத்தின் ஒலியடங்கி தூய்மையாகிவிடும்.

இவ்விதம், செய்வதற்குப் பதிலாக முன் குழம்பு பதமாய்க் காய்ச்சி, வெய்யிலில் வைத்துலர்த்தித் தூளாக்கி, வங்கத்தை உருக்கி, ஒரு நிதான அளவாய்ச் சுருக்கிட்டு, நன்ருய்க் கிளறிக் கொடுத்து அது எரிந்தானபின்பு, மறுபடியும் முன் தூளைச் சுருக்குக் கொடுக்க வேண்டும். இவ்விதம், மூன்று தடவைகள் மீண்டும் மீண்டும் செய்யின் வங்கத்தின் ஒலியடங்கித் தூய்மையாகி விடும்.

இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட வங்கமானது வைத்தியம், வாதம் என்ற இருவகைக்குமாகும்.

## 441. வெள்வங்கத் தூய்மை (வேறு)

வெள்வங்கம் ஒரு பங்கு, மடலரிதாரம் ஒரு பங்கு, இதனை நன்ருய்ப் பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும். வங்கத்தை உருக்கி, மேற்படி அரிதாரப் பொடியைச் சிறுகச் சிறுகச் சுருக்கிக் கொடுத்துவர, வங்கமெல்லாம் மடிந்து கறுத்தத் தூளாகிவிடும். ஏதேனும் வங்கம் மடியாமலிருந்தால், மேற்படி அரிதாரப் பொடியைக் கொடுத்து மடித்துக்கொள்ள வேண்டும்.

இந்த வங்கத்தூளைக் கல்வத்திலிட்டு, அத்தூளிற்குச் சமனெடை இந்துப்பைச் சேர்த்து அரைக்க வேண்டும். நன்ருய் அரைபட்டபின், முன்னெடைக் கறியுப்பைச் சேர்த்து, நன்ருய்த் திரள் பதமாய் அரைத்து, சிறு உருண்டைகளாகச் செய்து கொள்ளவேண்டும்.

இவ்வுருண்டைகளைச் சட்டியிலிட்டு, மேற்சட்டி மூடி ஏழு சீலைமண் செய்து, அடுப்பின் மீதேற்றி இரண்டு சாமத்திற்கு ஒரு தடவை, மேற்சட்டியைக் கீழ்ச்சட்டியாகவும் கீழ்ச்சட்டியை மேற் சட்டியாகவும் மாற்றி வைத்தெரிக்க வேண்டும். இவ்விதம், மாற்றும்போது அதிக கவனத்தோடு மெதுவாய்ச் செய்ய வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், அபாயத்திற்கு ஏது வாகும். மேற்கண்ட விதமாய் எட்டுச்சாமம் எரித்து ஆறவிட்டு எடுக்க, வங்கமானது வெள்ளியைப் போலாகி இருக்கும். இது வாதம், வைத்தியமென்ற இரு வகைக்கும் மேன்மையானது. இந்தத் தூய்மையானது முன் சொல்லப்பட்ட எல்லாவகைக்கும் மேலானது.

## 442. கருவங்கம்

கருவங்கமானது மிருதுவாகவும், நீலநிறச் சாயலான வெண்மையானதாகவும் பிரகாசமுள்ளதுமான சொற்ப உறுதியுள்ள ஒருவகை உலோகம். இது 325 டிகிரிச் சூட்டில் உருகும். இது உருகி ஆறினவுடன் சுருங்குந் தன்மை யுடையதாகையால், வார்ப்பு வேலைகளுக்கு இதை அதிகமாகப் பயன்படுத்துவதில்லை. இதை உருக்கி ஈரக்காற்றுப் படும்படி வைத்தால், அதன் மேலே நீலநிறமான (ஊதா நிறம்) ஒருவகைத் தூள் படியும். இதை உருக்கி காற்றில் சூடுபட வைத்தால், இது விரைவாக சிவந்த தூளாகிவிடும். இந்தச் சிவந்த தூளானது உரத்த தீயில் உருகிப் போகும். விளாவின வெடியுப்புத் திராவகமானது, இதனை எளிதில் கரைத்துவிடும். ஆனால் கந்தகத் திராவகம், அல்லது கறியுப்புத் திராவகம் ஆகியவை இதனை அதிகமாய்க் கரைக்காது. வெட்டினால், வெண்டுண்ட இடம் பளபளப்பாக இருக்கும். ஆனால், உடனே மங்கலாகிவிடும். இதனைத் தேய்த்தால் ஒருவித வாசனையைத் தரும். இதற்குக் கொஞ்சம் சுவையுமுண்டு. இதனை மெத்த சன்னக் கம்பிகளாகச் செய்ய இயலாது. ஆனால், அடித்தும் சன்னத் தகடாய்ச் செய்யலாம். இது பொன், வெள்ளி முதலியவைகளிலுள்ள குற்றத்தை நீக்க, மிகவும் பயன்படுகிறது.

**இதன் குணம் (சித்தா):** இது இரண்டாந்தரக் குளிர்ச்சியும் கொழுமையுமாம். சங்கோசனகாரி! தோடங்களை உடலுறுப்புகளில் சேரவொட்டாமல் தடுக்கும். இதனை நீர்வார்த்து இழைத்து, ரோஜாப்பூ எண்ணெயில் குழைத்து மேற் பூசினாலும் பச்சைக்கொத்துமல்லிக் கீரைச் சாற்றிலிழைத்துப் பூசினாலும் சீழ் அல்குல்புற்று, உட்டிணச் சார்பான வீக்கங்கள், சீழ்இரணங்கள், சீல் வாயுக்கள், ஆகியவை தீரும். உள்ளங்கையில் கறுப்புக்கறை உண்டாகிறவரையில் இதைத் தேய்த்து, தண்ணீரால் அல்லது தகுந்த ஒருவகைச் சாற்றால் கையைக் கழுவி, மைபோல எடுத்துக் கண்ணில்பற்றிட; கண் நோய், கண் நமைச்சல், கண்எரிவு, ஆகியவை உடனே தீரும். இன்னும் மேற்படி மையால் நாள் சென்ற கண் குழிப்புண் ஆறும். இதனைப் பொடிசெய்து தூவ வெட்டுக்காயம், இரத்த ஓட்டம் ஆகியவை நலமாகும். சொறிகள், சிரங்குகள் ஆகியவை நலமாகும். எட்டு வராகனெடை கருவங்கத்தைத் தட்டி இடுப்பில் கட்டிவைப்பதால் சொப்பன விந்தொழுக்கு நலம்படும். இதனை மெல்லிய தகடாகத் தட்டி கட்டிகள், புண்கள், விசைநரம்புத் தளர்ச்சி என்ற இவைகளின்மீது கட்டி வைத்தால் நச்சுநீரைத் தடுக்கவும், வீக்கங்களைக் கரைக்கவும் பயன்படுகிறது. முற்றும் நலமான நிலையி

லுள்ள இளைஞன், சமரசமான இயல்புள்ளவன், அடங்காத காமி என்ற இந்தக் குணநலங்களை உடைய ஒருவன் 9 அல்லது 18 கருவங்கத் தகட்டைப் பகலில் சனியுச்சத்தில், இடுப்பில் வைத்துக் கட்டி அது முதல் 45 நாள் அப்படியே கட்டப்பட்டிருந்தால் அவனுக்குப் புணர்ச்சி விழைவு (போக இச்சை) முற்றும் அற்று விடுமெனச் சொல்லப்பட்டிருக்கிறது. அஞ்சு வராகனெடை கருவங்கத்தைத் தூங்குகிறவன் தலையணையின்கீழ், அவனுக்குத் தெரியாமல் புதைத்து வைத்துவிட்டால், அவனுக்குப் பயங்கரமான கனவுகள் உண்டாகும். ஏழு வராகனெடை கருவங்கத்தைத் தகடடித்து, தண்ணீரானது ஒரு சிறிதும் படாத புது மண் தாழியில் (கூஜா) வைத்து சனியானது, உச்சத்திலிருக்கும் போது, மரங்களின் மத்தியில் புதைத்துவிட்டால் அம்மரங்களுக்கு உண்டாகும் தீங்குகளெல்லாம் நீங்கிப்போகுமாம்.

**இதன் குணம் (ஆயுள் வேதம்) :** இதனைப் பக்குவமாகத் தூய்மைசெய்து முறைப்படி செய்யப்பட்ட இதன் பற்பம் முதலிய மருந்துகளால் பலவகை தாவர நஞ்சுகள், கண்ணோய், வாத குன்மம், வலி, குத்தல், பவுத்திரப்புண், யானைத்தோல் குட்டம், உருட்சை முதலிய நோய்கள் தீரும்.

## 443. கருவங்கத் தூய்மை

கருவங்கம் $2\frac{1}{2}$ பலம் ($87\frac{1}{2}$ கிராம்), கழுதை மூத்திரம் $1\frac{1}{2}$ படி, தாளிக்காத கற்சுண்ணும்பு $\frac{1}{2}$ படி, இதனைத் துணியிற்சலலித்து வேகாத கற்கள் முதலியவைகளை நீக்கிவிட வேண்டும். பின்பு, இதனை மேற்படி மூத்திரத்தில் கரைத்து, மூன்று பங்காக்கித் தனித்தனி பாண்டத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கருவங்கத்தை உருக்கி, மேற்படி ஒரு பாண்டத்திலுள்ள தேசிநீர்க் கலவையிற் சாய்த்து நன்ருய் ஆறினபின், மறுபடியும் உருக்கி முன்போலச் செய்துகொள்ள வேண்டும். இவ்விதம், இதனை மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் உருக்கிச் சாய்த்துக்கொள்ள வேண்டும். தேசிநீர் குறைந்துவிட்டால், மேலும் அதில் புதிய தாய்க் கொஞ்சமும் சேர்த்துக் கொள்ளலாம். சாய்த்த வங்கமானது மூழ்கும்படியாக இருந்தால் போதுமானது. மேற்படி சுண்ணும்பைப்போட்டுக் கரைத்தால் அந்த நீரானது அதிகக் குழம்பாயாவது அல்லது திரவமாகவாவது இருக்கலாகாது. ஆனல், இவ்விரண்டு தன்மைக்கும் மிதமானதாக இருக்க வேண்டும். இதன்பாகம் பழகப்பழக அனுபவத்தில் தானே தெரிந்துபோகும்.

இம்மாதிரியே மற்றிரண்டு பாகங்களிலும் ஏழு தடவைகள் உருக்கிச் சாய்த்தெடுத்துத் தூய்மை செய்துகொள்ள வேண்டும். இவ்விதம், கூடிய 21 தடவைகள் சாய்த்துத் தூய்மை செய்யப் பட்ட கருவங்கமானது, வெள்ளையாகவும் தூய்மையாகவுமிருக் கும். இது வாதம், மருத்துவம் என்ற இருவகைக்குமாகும்.

## 444. கருவங்கத் தூய்மை (வேறு)

திறமான பூநீறு 24 பலம் (840 கிராம்), தாளிக்காத சுண்ணும்பு 24 பலம், இவ்விரண்டையும் ஒரு பீங்கான் தாழியில் இட்டு, 4 படி தண்ணீரைவிட்டு நன்ருய்க் கலக்கிவைத்து, காலையில் துணியில் வடிகட்டி, மணல் முதலியவைகளை நீக்கி வைத்துக்கொள்ள வேண்டும்.

இளமை வயதுடையோரின் கருநிறமான தலைமுடி 24 பலம், இதனைச் சிகைக்காய், பொன்னுங்கொட்டை முதலியவைகளின் நீரைவிட்டுக் கழுவி, வெந்நீரில் நன்ருய்க் கழுவி, எண்ணெய் கசடு முதலியவைகளை நீக்கித்தூய்மை செய்து, சன்னமாய்க் கத்தரித்து மேற்படி பூநீர் சுண்ணநீரில் இட்டு, ஒரு மூங்கிற்கழியினுல் நன்ருய்க் கலந்து கலக்கிவிட வேண்டும். இதிற் கையிடாமல் மிகவும் விழிப்போடு இருக்க வேண்டும்; பட்ட இடம் வெந்து போகும். அந்த முடிகளை நன்ருய்க் கலந்துவிட்டால் அவை எல்லாம் கரைந்துபோகும். உடனே கரைந்துபோகாமல் கொஞ்சம் ஏதேனும் மிச்சமிருந்தால் அதை ஒருநாள் அப்படியே வைக்கக் கரைந்துபோகும். பின்பு, ஒரு இரும்புச்சட்டியில் மேற்படி நீரைவிட்டு, சிறுதீயாக எரித்துக் காய்ச்சி, நன்ருய்த் துழாவிவர வேண்டும். இந்த முடியானவை ஒன்றும் மிச்சம் இல்லாமல், கரைந்துபோய் இளம்பதமாய் வந்தவுடன், இறக்கி உடனே வேருெரு பீங்கான் பாண்டத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

தேவையான கருவங்கத்தை உருக்கி மேற்படி நீரில் சாய்க்க வேண்டும். அந்த நீரானது சாய்த்த வங்கம் முழுகும்படியான அளவாக இருக்க வேண்டியது. ஆறினபின் மறுபடியும் உருக்கி முன்நீரில் சாய்க்க வேண்டும். இவ்விதம், சிலதடவைகள் உருக்கிச் சாய்த்தால், கருவங்கமானது பொன்னிறத்தை அடைந்து தூய்மையாகிவிடும். மேலும், இது மிகவும் மிருதுவாகவும் இருக்கும். இவ்விதம், தூய்மை செய்யப்பட்ட கருவங்கமானது வாதம், மருத்துவம் என்ற இரு வகைகளுக்கும் பயன்படுவது மட்டுமன்றி, துணிகளில் முத்திரை அடிக்கும் அச்சிற்கும் பயன் படுகிறது.

## 445. கருவங்கத் தூய்மை (வேறு)

சுத்தமான கருவங்கம் ஒரு பங்கு, இதனை உராவித் தூள் செய்து கொள்ளவேண்டும். உலாந்தா இலிங்கம் 2 பங்கு, இவ் விரண்டையும் கல்வத்திலிட்டுக் காடி திராவகத்தை அல்லது, எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச்சிறுகவிட்டு, நாள்தோறும் மும் மூன்று சாமங்களாகப் பத்துநாள் அரைக்க வேண்டும். சிவந்த நிறமுள்ள காரமான சுண்ணமாகும்; இதைச் சிறு மாத்திரை களாகச் செய்து நிழலிலுலர்த்திக் கொள்ளவேண்டும்.

ஒரு துருஞ்சி நாரத்தம் பழத்தின் அடிப் பக்கத்தில் வில்லை யாக அறுத்தெடுத்து, கொஞ்சம் சதையையும் நீக்கி, அதற்குள் மாத்திரைகளை எல்லாம் வைத்து, எடுத்த சதையையும் அதன் மேல் வைத்து, முன்னெடுத்த வில்லையையும் வைத்துமூடி, சிறிய குச்சியாப்புகளும் வைத்தடித்துக் கெட்டிப்படுத்தி, கோதுமை மாவைக் குழைத்துக் பழத்தின்மீது கவசித்து கவசத்தின் எடைக்கு 5 பங்கெடை காட்டெரு முட்டையில் புடமிடவேண்டி யது. இந்தப் புடமானது, மேலே கவசித்த மாவு கறுத்துப் போகும்படியாக இருக்க வேண்டியதாகையால், அனுபவத்தால் கண்டு நிச்சயித்து முன்னளவை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டியது; அல்லது குறைத்துக் கொள்ள வேண்டியது.

புடமானது குளிர ஆறினபின் கவசத்தைப் பிரித்து, அதற் குள்ளிருக்கிற மாத்திரைகளை மாத்திரம் எடுத்து, வேறொரு துருஞ்சி நாரத்தம் பழத்திற்குள் முன்போலவே பக்குவப்படுத்தி வைத்து முன்போலவே, புடமிட்டெடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் ஏழு புடங்கள் போட்டெடுத்துக் கொள்ளவும். இவ்விதம், ஏழு தடவைகள் கைபாகமாகவும், முறை யாகவும் செய்து கொண்டால் பக்குவமாகிவிடும்.

பின்பு, இம் மாத்திரைகளைக் கல்வத்திலிட்டு அரைத்து, தூய நீரைவிட்டுக் கழுவித் தூய்மை செய்யவும்.

பின்பு, இதனை வெய்யிலில் வைத்துலர்த்தி, மறுபடியும் அரைத்துத் தண்ணீர் விட்டுக் கழுவவேண்டும். இவ்விதம், இதனை ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் கழுவி, ஏழு தடவைகள் உலர்த்தி எடுக்க கருவங்கமானது தூய்மையாகி விடும். இந்தப் பாகமானது வாதிகளின் இரகசிய வகைகளிலுள்ளன. இதன் பயன் பற்பலவாகும். இதனைவெள்ளியின்மீது கொடுக்க நிறங் கொடுக்குமாம். இம் முறைகளின் கலப்பு முறைகளெல்லாம் அனுபவசாலிகளை அடுத்துக் கேட்டுக் கொள்ளவேண்டும்.

## 446. நாகம்

பலருமறிந்த இந்த உலோகமானது, கந்தகத்தோடு சம்பந்தப்பட்டதாய்க் காணப்படுகிறது. இந்த உலோகத்தை எடுக்க, இதன் கனிதாதுவானது வறுக்கப்பட்டு, மூசையிலிட்டுக் காற்றுப்பட மிதமாய் எரிக்கப்படுகிறது. இப்படிச் செய்வதால் அதிலுள்ள கந்தகமெல்லாம் எரிந்துபோய் ஒரு வகைத் தூளாகி விடுகிறது. இந்தத் தூளுடன் சுட்ட நிலக்கரியின் தூளையும் சேர்த்து எரித்தால், கரியானது அதிலுள்ள பிராணவாயுடன் சேர்ந்து, புகையாக வெளிப்பட்டுப் போகிறது. அப்பொழுது நாகச் சத்தானது, கடுந்தீயில் பதங்கித்துப் போகிற இயல் புடையது ஆகையால், மேலே படிந்து இறுகிப் போகிறது. இதனை எடுத்து உருக்கிக் கட்டியாகவும் தகடாகவும், வார்த்து அனுப்பப்படுகிறது.

நாகமானது, கடினமானதும், வெள்ளையும் நீலமும் கலந்த நிறமுள்ளதுமான உலோகம். இது கட்டியாக இருக்கும்போது, குறுக்காக இதனை வெட்டி ஒடித்தால், மிகவும் அழகான அனேக கண்கள் காணப்படும். பெருங் கண்களாய்க் காணப்படுவதற்குப் பெருங்கண் நாகமென்றும், சிறுகண்களாய்க் காணப்படுகிறதற் குச் சிறுகண் நாகமென்றும்பெயர். மிதமான வெப்பத்தினுல் இது ஒடியத் தக்கதாயிருக்கிறது. ஆனுல், 100 முதல் 150 டிகிரிக்குள் மறுபடியும் நொறுங்கத் தக்கதாகித் தூளாகக் கூடியதாய் ஆகி விடுகிறது. 412 டிகிரி தீயில் உருகி, 1040 டிகிரி தீயில் கொதிக்க ஆரம்பிக்கிறது. இது பித்தளை செய்ய அதிகமாகப் பயன்படுத்தப் படுகிறது. அப் பித்தளையுடன் நிக்கல் வெள்ளியைச் சேர்த்து ஜெர்மன் சில்வர் செய்யப்படுகிறது.

**இதன் விவரம் :—** இது பித்தளையின் தரத்திற்குத் தகுந்தபடி அதிகமாகவும், குறைவாகவும் சேர்க்கப்படுகிறது. விளாவின கந்தகத் திராவகம், கறியுப்புத் திராவகம் என்ற இரண்டையும் சேர்த்த கூட்டானது நாகத்தை விரைவில் கரைத்துவிடும். வெடியுப்புத் திராவகமும் இதனை எளிதில் கரைக்கும். ஆனுல், அந்தத் திராவகம் தானே அதினின்றும் கொஞ்சம் பிரிந்து விடுகிறது.

**இதன் குணம் (சித்தா):—** இது இரண்டாந்தரச் சூடும் வறட்சியு மாகும். இந்தப் பாண்டத்தில் உண்பதாலும் பருகுதல் செய்வ தாலும் இருதயம், இரைப்பை ஆகியவைகளுக்கு வலிமையை உண்டாக்கும். மணத்தக்காளி இலைச்சாற்றில் அல்லது சோம்புக்

குடிநீரில் இதனை இழைத்துப் பற்றிட வீக்கங்கள் கரையும். இதனை அஞ்சனமாகக் கண்ணில் இட்டுவர கண்பூ, கண்ணீர் வடிதல், கண்ணிமைத் தடிப்பு ஆகியவை நலமாகும். இதன் தீயகுணம் : மண்ணீரலுக்காகாது; வயிற்றுநோயை உண்டாக்கும் (பரிகாரம்) தேன்.

**இதன் குணம் (ஆயுள்வேதம்) :**— இதனை முறைப்படி தூய்மை செய்து பாகப்படி செய்த, இதன் பற்ப செந்தூரங்களால் மேகம், கழிச்சல், வெட்டை, அழலை, கிராணி, மூலமுளைப் புண், பித்தநோய் முதலியவை போகும்.

## 447. துத்தநாகத் தூய்மை

எருமைச் சாணியைக் குழம்பாய்க் கரைத்து வைத்துக் கொண்டு, அதில் நாகத்தை உருக்கிச் சாய்த்து ஆறினபின் எடுத்து, மறுபடியும் உருக்கிச் சாய்க்கவேண்டும். இவ்விதம், 7 தடவைகள் உருக்கிச் சாய்த்துக் கொள்ள அதிலுள்ள வங்கமெல்லாம் நீங்கிப் போகும். இதன் பின்பு, இவ்விதமே இலுப்பை நெய்யில் ஏழு தடவைகளும், ஆடாதோடை இலைச்சாற்றில் ஏழு தடவைகளும், மீண்டும் மீண்டும் உருக்கி உருக்கிச் சாய்த்துக் கொள்ளத் தூய்மையாகும்.

## 448. துத்தநாகத் தூய்மை (வேறு)

நாகத்தை உருக்கி, வாழைக் கிழங்குச் சாற்றில் சாய்க்க வேண்டும். ஆறினபின் எடுத்து முன்போலவே உருக்கிச் சாய்க்க வேண்டும். இவ்விதம், 21 தடவைகள் மீண்டும் மீண்டும் சாய்த்துக் கொள்ள வேண்டும். இவ்விதம், செய்யப்பட்டது வெள்ளி வேதைகளுக்காகும். எள்ளெண்ணெயில் 70 தடவைகள், மீண்டும் மீண்டும் உருக்கி உருக்கிச் சாய்த்துக் கொள்ள நல்ல தூய்மையாகும். இது எல்லாவிதங்களுக்கும் பயன்படும்.

## 449. துத்தநாகத் தூய்மை (வேறு)

துத்தநாகத்தை உருக்கிச் சிற்றாமணக்கெண்ணெயில் சாய்க்க வேண்டும். பின்பு எடுத்து முன்போலவே உருக்கிச் சாய்த்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் மீண்டும் மீண்டும் 21 தடவைகள் உருக்கிச் சாய்த்துக் கொள்ளவேண்டும். இதன் பின்பு சேராங்கொட்டைக் குழித்தைலத்தில் முன்போலவே 21 தடவைகள் மீண்டும் மீண்டும், உருக்கி உருக்கிச் சாய்த்தெடுக்க அழுக்கு

முதலிய மாசுகளெல்லாம் நீங்கித் தூய்மையாகி விடும். இவ்விதம் செய்யப்பட்டது இருவகை முறைகளில் எந்த வகைக்குமாகும்.

**குறிப்பு:—** உலோகங்களில் தங்கம், அயம், இரசம் என்ற இவற்றின் விவரம் முதலியவைகளை இனி எழுதப்படும் பாகங்களில் ஆங்காங்கே எழுதப்படும்.

## 450. பாடாணத் தூய்மை

வெள்ளைப் பாடாணம் ஒரு பலம் (35 கிராம்). இது ஒரே கட்டியாக இருக்க வேண்டும். தாளிக்காத கற்சுண்ணம் 2 படி; இதனை 5 பாகமாகச் செய்து வைத்துக் கொள்க. இவற்றுள் ஒரு பங்கை இரண்டாகச் செய்து, ஒன்றை ஒரு பாண்டத்தில் வைத்துப் பரப்பி அதன் மேல் முன் பாடாணகட்டியை வைத்து, அதன்மேல் மறுபங்கையும் வைத்து, தண்ணீரைக் குமிழி எழும்பும்படியாகச் சுடவைத்து, அதன்மேல் விடவேண்டும். குளிர ஆறினபின் எடுத்து, மற்றொரு பங்கை எடுத்து இரண்டு பங்காக்கி முன்போலவே ஒரு பாதியை அப் பாத்திரத்தில் வைத்து அதன்மேல் முன் கட்டியை வைத்து மறுபாதியை அதன்மேல் இட்டு முன்போல் கொதிவெந்நீரை விடவேண்டும். இவ்விதம் மற்ற மூன்று பாகங்களிலும் மூன்று தடவை செய்து எடுத்து நன்றாய்த் துடைத்து ஒரு துணித் துண்டில் முடிந்து கிழிகட்டி வைத்துக் கொள்க. அப்பளாக்காரம் 8 பலம், இதில் ஒரு படி சிறுநீரைவிட்டுக் கரைத்து அடுப்பேற்றி அதில் முன் கிழிகட்டி வைத்திருப்பதை துலாந்திரமாகத் தொங்கவிட்டு, நீர்சுண்டக் காய்ச்சி எடுக்கப் பாடாணமானது தூய்மையாகும்.

## 451. கந்தகத் தூய்மை

தேவையான அளவு நவச்சாரத்தைப் பொடித்து, அதை மூன்று பங்கெடை தண்ணீரில் கரைத்து மூன்று நாள் வெய்யிலில் வைத்து வடிகட்டிக் கொள்ளவும். முன் நவச்சார எடை கந்தகத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து மேற்படி நீரைச் சிறுகச் சிறுக விட்டு, ஏழுநாள் அரைக்க வேண்டும். இந்த ஏழு நாளைக்குள் அந்த நீர் முழுவதையும் செலுத்திவிட வேண்டும். பின்பு வெய்யிலில் வைத்து நன்றாய் உலர்ந்தபின்பு, இதனை ஒரு பாண்டத்தில் இட்டு நீரை விட்டு தெளிய வைத்து தெளிவை இறுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் ஏழு தடவைகள் மீண்டும் மீண்டும் செய்து கந்தகத்துடன் கலந்துள்ள நவச்சாரத்தைப் போக்கிவிட்டு, வெய்யிலில் உலர்த்தி கந்தகத்தை மாத்திரம்

எடுத்துக் கொள்க. இந்த கந்தகமானது, சுண்ணும்பைப்போல வெளுத்துத் தூய்மையாகி இருக்கும். இதைக் கைமுறையாய்ச் செய்யாவிடில் எல்லாம் சேதமாகி வீணேயாகும்.

## 452. கந்தகத் தூய்மை (வேறு)

ஒரு வாயகன்ற மண்பாண்டத்தில் அரைபாகம் வரையில் வெங்காயச் சாற்றைவிட்டு, அதன் வாய்க்குச் சீலைகட்டி, அதன் மேல் ஒரு சாணக்கியைக் கவிழ்த்து, அதைச் சுற்றிலும் அதன் உதட்டில் காலங்குலம் மண்ணைத்தள்ளி, அதன்மேல் விராட்டியை வைத்து நெருப்பிட வேண்டும். நன்றுய் ஆறினபின் எடுக்க, கந்தகமானது உருகி பாண்டத்திற்குள் இறங்கி இருக்கும். அதை எடுத்து ஈரத்தை உலர்த்திப் பொடித்து, முன்போலவே அந்தப் பாண்டத்தில், புதிதாக வெங்காயச் சாற்றைவிட்டு வேடுகட்டி, முன் தூளைப்பரப்பி, முன்போலவே புடமிடவேண்டும். இவ்விதம், மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் செய்யின், கந்தகம் தூய்மை யாகும்.

இவ்விதமே மீண்டும் மீண்டும் 100 தடவைகள் செய்து கொண்டால் கந்தகமானது தூய்மையாகும்; கட்டுமாகும். இதைப் பத்திற்கொன்று வெள்ளி மீதிற் கொடுத்தால் நிறமளிக்கும்; அப்படி நிறமளிக்காவிட்டால், மேலும் 10 அல்லது 15 தடவைகள் செய்து கொண்டால், தப்பாமல் நிறமளிக்கும்.

மீண்டும் மீண்டும் புடம் போடுவதால், அதிகம் சேதமாகின்ற படியால் ஆரம்பத்திலிருந்தே அதிக அளவாய்ச் செய்ய வேண்டும். மேலும், கைபாகம் முதலியவைகளையுங் கவனித்துச் செய்ய வேண்டும்.

## 453. கந்தகத் தூய்மை (வேறு)

கந்தகம் 5 பலம் (175 கிராம்), இதனைப் பொடித்துக் கொள்ளவும். ஒரு சிறுபானையில் அரைப்படி பசுவின் பாலைவிட்டு, வாய்க்கு வேடுகட்டி அதன்மேல் முன்தூளை வைத்து, இந்தப் பானையைக் கழுத்தளவு பூமிக்குள் புதைத்து, அதன்மேல் ஒரு சாணக்கியைக் கவிழ்த்து, சாணக்கியின் உதடுமறைய மண்ணைத் தள்ளி மேலே விராட்டியை அடுக்கிப் புடமிட்டு ஆறின பின் எடுத்துக் கொள்க. இவ்விதமே மீண்டும் மீண்டும் ஏழு தடவைகள் புடமிடவும்.

இவ்விதம், மீண்டும் மீண்டும் வாழைத்தண்டு சாற்றில் மூன்று புடமும், இவ்விதமே மீண்டும் மீண்டும் மருதோன்றி இலைச் சாற்றில் மூன்று புடமும், போட்டெடுக்க கந்தகமானது தூய்மை யாகும்.

## 454. கந்தகத் தூய்மை (வேறு)

நத்தாங்கூட்டுச் சுண்ணும்பு அல்லது கிளிஞ்சிற் சுண்ணும்பு *16* பலம் (*560* கிராம்), திறமான உழமண் *24* பலம் (*840* கிராம்), இவ்விரண்டையும் சேர்த்து, ஒருபடி நீர்விட்டுக் கரைத்து, மூன்றுநாள் வைக்கவேண்டும். நாள்தோறும் *2* அல்லது *3* தடவைகள் கலக்கியும் வரவேண்டும். நான்காம் நாள் தெளி விறுத்து, அயச்சட்டியில் வைத்துப் பக்குவமாய்க் காய்ச்சி உப்பெடுத்துக் கொள்ளவேண்டும்.

கந்தகம் 3 பங்கு, மேற்படி உப்பு 1 பங்கு, இவ்விரண்டையும் சேர்த்துப் பொடித்து அரைத்துக்கொள்ள வேண்டும். ஒரு சிறு பானையில் அரைபாகம் பசுவின் பாலைவிட்டு, வாய்க்கு வேடுகட்டி, முன் சித்தப்படுத்தினதை வைத்துப் பூமியில் அப்பாத்திரத்தைக் கழுத்தளவு புதைத்து, மேலே சாணக்கி மூடிப் பக்குவப்படுத்தி, புடமிட்டாறினபின் எடுத்துக்கொள்க.

மேற்கண்ட எடையில் மூன்றிலொரு பங்கு, மேற்படி உப்பைச் சேர்த்து அரைத்து, முன்போலவே புடம்போட வேண்டும்.

இவ்விதம், மீண்டும் மீண்டும் தடவைக்குத் தடவை காணும் கந்தகத்தின் எடையில், மூன்றிலோர் எடை மேற்படி உப்பைச் சேர்த்து, அரைத்துப் புடமிட வேண்டும். இவ்விதம், ஏழு தடவைகள் செய்துகொண்டால், கந்தகமானது தூய்மையாகிக் கட்டுப்பட்டுப்போகும்.

வெள்ளி 7 (தூய்மை), தாமிரம் 3, இரண்டையும் உருக்கி முன் கெந்தி ஒன்று கொடுத்து ஊதி எடுத்து விருப்பம்போல் செய்துகொள்ள வேண்டும். மேலும், இதனை எத்தனை தடவை மீண்டும் மீண்டும் முன்போல் புடம்போடுகின்றோமோ, அத்தனைக் கத்தனை குணமா யிருக்கும். இதன் சிறப்பான குணத்தை அனுப வத்தில் தெரிந்துகொள்ளலாம். இதிலும் கைபாகம், செய்பாகம் முதலியவைகளைக் கவனத்தில் வைத்துச் செய்ய வேண்டும்.

## 455. கறுத்த மட்டத்தின் தூய்மை

மஞ்சணிக்க வேண்டிய மட்டம் கறுத்துவிட்டால், அதைத் தகடுதட்டி, சுண்ணும்பையும் உப்பையும் சமனுய்ச் சேர்த்து அரைத்து, உமிழ் நீரில் குழைத்துத் தடவி உலர்த்தி, அதன்மேல் சுண்ணும்பையும் சாணியையும் குழைத்துக் கவசித்து, மட்டத்திற்குத் தகுந்தபடி புடமிட வேண்டும். இவ்விதம், இரண்டொரு தடவை செய்யின் தூய்மையாகி சுயநிறமாகிவிடும்.

**குறிப்பு :**—இன்னும், சில சரக்குகளின் தூய்மைக் முறைகளையும் எழுத வேண்டியது அவசியம். ஆனுல், அவற்றுள் சில முதற்பாகத்தில் சொல்லப்பட்டன. மீதியுள்ள சிலவற்றை இங்கெழுதலாமெனின், இவ்விரண்டாம் பாகமானது திட்டமிட்ட அளவினும் அதிகம் விரிவெய்தி விட்டபடியாலும், வேறு சில காரணங்களாலும் அவற்றை ஆங்காங்கு எழுதுவதே பொருத்தமாகக் காணுவாம்.

**இரசவாத சிந்தாமணி இரண்டாம் பாகம் முற்றிற்று.**



